# SOME OPINIONS

ON

# ATMA VIDYA

## THE SCIENCE OF THE SELF

BY

G. RAMACHANDRA AIYAR, B.A., B.L.

1. The "*Hindu*":—A book of the kind must be welcome to all genuine lovers of the Old Vedic Religion of India. The discourses on the much abused institutions of Image Worship and Caste contain arguments and explanations in their favour which merit attention . . . . The clearness and the brevity of expression and the aptness of the quotations, by way of footnotes, from Sanskrit Religious Texts, are commendable.

2. *The United India and Native States*:—No attempt has hitherto been made to make the subject intelligible to ordinary folk. We therefore welcome the laudable attempt of Mr. Ramachandra Aiyar to explain from first principles the processes that the mind of man should go through in order to be prepared for the study and knowledge of the great Self.

3. Sadacharapravartanapravina *N. Srikanta Sastri*, Agent, Sri Jagadguru Mutt, Sringeri:—I feel no doubt that the work will be an acquisition in the field.

4. *Prof. K. Sundararama Aiyar*, M.A., Kumbhakonam:—Found it interesting and suggestive.

5. *N. Subrahmania Aiyar*, M.A., Retired Dewan Peishkar, Travancore:—Grand book on Atma Vidya.

6. *G. Gangadhara Somayajulu*, M.A., B.L., District Judge:—A lucid, intelligible and at the same time a learned treatise on a very difficult subject.

7. Dr. *F. Otto Schrader*, Ph.D., Adyar Library, Madras:—Beautiful and most interesting book. I am inclined to believe that the book is the best of the many modern works written by Hindus on the subject.

8. *T. R. Ratnam Aiyar*, B.A., Retired Financial Secretary, Travancore:—The book contains a clear and faithful conception of the Real Self and also puts one in the correct path to seek and realise that Self.

9. *K. Srinivasa Row*, District Judge:—Excellent contribution to our philosophy.

(*To be continued at the end*)



ஸ்ரீராமாநந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள்.

# தர்ம விமர்சனம்

தேவகிரியில்

ஸ்ரீ ராமாநந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள்

இயற்றியது

சென்னை லா ஜர்னல் பிரஸ்ஸில்

அச்சிட்டு

திருநெல்வேலி அட்வோகேட்

R. கிருஷ்ணஸ்வாமி அய்யரால்

பிரசுரம் செய்யப்பட்டது

கலியுகம் 5032

1931



[விலை ரு. 1—8—0.

# தர்ம விமர்சனம்

இப்புஸ்தகம் வேண்டுவோர் அடியிற்கண்ட விலாஸங்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்:—

1. சென்னை லா ஜர்னல் ஆபிஸ்,
தபால் பெட்டி, நெ. 604,
மையிலாப்பூர் (சென்னை)

2. K. C. காசி அய்யரவர்கள்,
பாங்கர்,
கல்லிடைக்குரிச்சி (திருநெல்வேலி ஜில்லா).

3. R. கிருஷ்ணஸ்வாமி அய்யர், M.A., B.L.,
அட்வொகேட்,
திருநேல்வேலி (ஜங்க்ஷன்).

4. N. R. கோபாலய்யரவர்கள்,
நாகையநல்லூர்,
காட்டுப்புத்தூர் போஸ்ட்,
(திருச்சிறாப்பள்ளி ஜில்லா).

3-வது பாகம் 10-வது பாராவும், அந்த ஸம்மதியும் ஏற

# தர்ம விமர்சனம்

## முகவுரை

இந்நூலியற்றிய ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் ஸகல லௌகிக வியவஹாரங்களையும் விட்டொழித்து அகண்ட காவேரியின் வடகரையில் காட்டுப்புத்தூருக்கும் நாகையநல்லூருக்கும் ஸமீபத்தில் கலியுக வரதரான ஸ்ரீதண்டாயுதபாணி பிரஸன்னராக எழுந்தருளியிருக்கும் பிராசீனமான தேவகிரி க்ஷேத்திரத்தில் மௌனியாய் ஏகாந்தவாஸம் செய்கிறவர்களாயிருந்தும் அநேக பக்தர்கள் பற்பல ஸமயங்களில் தர்சனார்த்தமாக அங்கு சென்று தங்களுக்குள்ள ஸந்தேஹங்களை வெளியிட்டு வினவ, அப்பக்தர்களிடம் கிருபை கூர்ந்து ஸ்ரீஸ்வாமிகளவர்கள் மறுமொழிகளை எழுதிக்காட்டும்படி ஏற்படுவதுண்டு. அம்மறு மொழிகளை யெல்லாம் ஒருங்கே சேர்த்து புஸ்தக ரூபமாக வெளியிட்டால் அநேகர்களின் ஹிதத்தின் பொருட்டாகுமென்று அப்பக்தர்கள் கேட்டுக்கொண்டதற்கிசைந்து இப்புஸ்தகம் வெளியிட நேர்ந்திருக்கிறது. இப்புஸ்தகத்திலடங்கிய விஷயங்கள் பல காலங்களில் எழுதப்பட்டவையென்பதற்கு அறிகுறியாக இப்பொழுது விவாஹ வயது விஷயமாய் ஏற்பட்டிருக்கும் சட்டம் மசோதா ரூபமாக இந்திய சட்டஸபைக்கு வந்த ஸமயத்தில் 2-வது பாகம் 10-வது பாராவும், சட்ட ஸபையில் தீர்மானிக்கப்பட்டு ராஜப்பிரதிநிதியின் ஸம்மதியேற்படாமலிருந்த காலத்தில் 3-வது பாகம் 10-வது பாராவும், அந்த ஸம்மதியும் ஏற்

பட்டுச் சட்டத்தன்மை ஸ்திரப்பட்டபிறகு 4-வது பாகம் முழுவதும் எழுதப்பட்டிருப்பதாக இப்புஸ்தகத்திலிருந்தே தெரியவரும்.

அதர்மமே மிகுந்திருக்கிற இக்கலிகாலத்தில் "தர்ம விமர்சனம்" அதாவது தர்மாதர்மங்களின் பரிசோதனையைச் செய்து தர்மத்தைத் தெரிந்தெடுப்பது பிரயோஜனமற்ற காரியமென்றே பெரும்பாலும் ஜனங்களுக்குத்தோன்றலாம். மோக்ஷத்தில் உத்தேசமும் மோக்ஷ ஸாதனமான தர்மத்தில் பிரவிருத்தியும் அதிகரித்திருக்கக்கூடிய காலத்தில் தான் தர்மத்தை உள்ளபடி தெரிந்து கொள்வதில் ஆவலும் அதர்மாசரணையில் பயமும் விசேஷமாய் எங்கும் காணப்படும். காலரீதியினால் இவ்வித ஆவலும் பயமும் உலகத்தில் இப்பொழுது மிகவும் குறைந்திருப்பதால், தர்ம விமர்சன விஷயமான இப்புஸ்தகத்தை கவனிக்கவே அநேகர்களுக்குத் தோன்றாது. கவனிப்பவர்களிலும் இப்புஸ்தகம் இந்தக் காலத்திற்கேற்றதல்லவென்றும் சிலர்கள் அபிப்பிராயப்படுவார்கள். ஆகிலும், இவ்வதர்ம யுகத்திலுங் கூட கால்பங்கு தர்மமிருப்பதாகவும், உண்மையில் எல்லாவற்றையும் தரிப்பதே "தர்மம்" என்றிருப்பதால் தர்மம் உலகத்தை விட்டுப் பூராவும் மறைந்து விடாதென்றும்; அடுத்த கிருதயுகத்தில் தோன்றப்போகும் தார்மிகர்கள் உத்பத்தியாவதற்காகவாவது இக்கலியுகத்தின் கடைசியில் கூட களங்கமற்ற தர்மமூர்த்திகளாக சிலர்கள் இருப்பார்களென்றும் சொல்லும் சாஸ்திரங்களை நாம் திருடமாய் நம்புவதால் இப்பொழுதும் தர்மாதர்ம சோதனையிலும் தர்மாசரணையிலும் ஊக்கமுள்ள சில ஜனங்கள் ஸவல்பமாகவாவது இத்தேசத்தில் இருந்து கொண்டேயிருப்பார்களென்பதே உறுதி. இவர்களுக்கும் இவர்களின் கோஷ்டியில் சேரக்கூடியவர்களுக்கும் இப்

புஸ்தகம் கொஞ்சம் உபயோகப்படலாம். இவர்களுக்குள் லௌகிக ஆலோசனையில் பற்றுள்ள சிலர்களுடைய மனது களில் சிற்சில விஷயங்களில் தர்மாதர்ம ஸம்பந்தமான ஸம் சயங்கள் ஏற்படக்கூடும். இப்படிப்பட்டவர்களுடைய ஸம் சய நிவிருத்தியின் பொருட்டு லௌகிக நடையிலேயே இதில் கண்ட விஷயங்கள் எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. ஆனு லும், சாஸ்திர ஸம்மதமான விஷயங்களே விவரிக்கப்படு வதால் ஸங்கோசமன்னியில் நிர்தாக்ஷண்யமாக உள்ளது உள்ளபடியே சொல்லப்பட்டிருப்பதில் சிலர்களுக்கு சில விஷயங்களில் அதிருப்தி யேற்படக்கூடியதுமுண்டு. எப் படியும் சாஸ்திரங்களில் தீவிரமான விசுவாஸமுள்ளவர்கள் வாஸ்தவத்தைத் தெரிந்துகொள்ள விரும்புவார்களே தவிர தங்களுடைய திருப்தியை ஒரு பொருட்டாக நினைக்க மாட்டார்கள்.

ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் பூர்வாசிரமத்தில் திருநெல்வேலி ஹைக்கோர்ட் வக்கீல் G. ராமசந்திரய்யரவர்கள் என்று பிரஸித்தராயிருந்த காலத்தில் திருநெல்வேலியில் 1920-ல் நடந்த சென்னை மாகாண வர்ணாசிரம தர்ம மஹாநாட்டுக்கு வரவேற்புக்கமிட்டியின் தலைவர் ஸ்தானத்திலும், தஞ்சா வூரில் 1921-ல் நடந்த அம்மஹாநாட்டுக்கு அக்கிராஸனம் வஹித்த முறையிலும், தமிழில் செய்த இரண்டு உபன்யா ஸங்களின் முக்கியாம்சங்கள் தர்ம விமர்சன ரூபமாகவு மிருப்பதால் அவைகளும் இப்புஸ்தகத்தின் கடைசியில் அனுபந்தங்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இவ்வரிய நூலை தாமத மன்னியில் வெளியிடவேண்டு மென்ற ஊக்கத்துடன் பொருளுதவி செய்திருப்பவர்களும் ஸ்ரீ ஸ்வாமிகளவர்களிடம் மிகவும் ஈடுபட்டவர்களுமான திருநெல்வேலி ஜில்லா மன்னார்கோவில் ஸ்ரீமான் முத்து

கிருஷ்ணன் செட்டியாரவர்களுக்கும் திருச்சிறுப்பள்ளி இரும்புக்கடை ஸ்ரீமான் ஷண்முக சுந்தரம் செட்டியாரவர்களுக்கும், இந்நூலை எழுதுவதற்கு வேண்டிய ஸௌகரியங்களைச் செய்து கொடுத்ததுடன் அச்சாபிஸிலிருந்து புரூப் காகிதங்களை தன் பேருக்கே தரிவித்து ஸ்ரீஸ்வாமிகளவர்களிடம் உடனுக்குடன் கொடுத்து திருத்தி வாங்கியனுப்பியும் மற்றும் ஸகல விதமாயும் இப்புஸ்தகம் சீக்கிரம் வெளி வருவதற்காக கொஞ்சங்கூட சிரமத்தைப்பாராட்டாமல் உத்ஸாஹத்துடன் கவனித்தும் வந்த நாகையநல்லூர் பிரம்மஸ்ரீ N. R. கோபாலய்யரவர்களுக்கும், இப்புஸ்தகத்தை அழகாய் அச்சிட்டுக் கொடுப்பதில் மிகவும் சிரத்தையெடுத்துக் கொண்டிருக்கும் சென்னை லா ஜர்னல் அச்சாபிஸ் தலைவர் பிரம்மஸ்ரீ R. நாராயணஸ்வாமி அய்யரவர்களுக்கும் என் கிருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருநெல்வேலி. R. கிருஷ்ணஸ்வாமி அய்யர்.

# தர்ம விமர்சனம்

## அட்டவணை



## முதலாவது பாகம்

### ஸமதர்சனம்

# இரண்டாவது பாகம்

## பிராம்மண்யமும் பிரம்மஜ்ஞானமும்

---

## மூன்றாவது பாகம்
## கலியுகமும் தார்மிகர்களும்

## நான்காவது பாகம்
## தார்மிகப்பார்வையும் விபரீதச்சட்டங்களும்

## ஐந்தாவது பாகம்

### தர்மஜ்ஞானதத்வங்களும் முக்கியாவதாரங்களும்

## ஆறாவது பாகம்

## ஸகுணோபாஸனம்

## ஏழாவது பாகம்
## ஸ்திரீ-சூத்திரர்களும் வேதமந்திரஜபமும்

## எட்டாவது பாகம்

## பிரம்மானந்தம்

---

## ஒன்பதாவது பாகம்
## ஸன்யாஸிகளின் முக்கிய பேதங்கள்

---

## முதலாவது அனுபந்தம்



---

## இரண்டாவது அநுபந்தம்

# தர்ம விமர்சனம்

## பிழைகளும் திருத்தங்களும்

[இப்புஸ்தகத்தைப் படிப்போர்கள் ஆரம்பத்திலேயே இதனடியிற்கண்ட விபரப்படிக்குள்ள திருத்தல்களைச் செய்து கொண்டு அப்பால் படிப்பது அனுகூலமா யிருக்கும்.]

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 28 | சாதிரத்திஞல் | சாஸ்திரத்திஞல் |
| 5 | 10 | தன் | தங்கள் |
| 8 | 17 | வங்கும் | எங்கும் |
| 9 | 12 | ஸர்வப்பிராணியிடமும் | ஸர்வப்பிராணிகளிடமும் |
| 12 | 8 | சுமகாயிருப்பதை | சுகமாயிருப்பதை |
| 13 | 24 | பூரணமாக | பூர்ணமாக |
| 15 | 7 | அவரவர்களை | அவர் அவர்களை |
| 16 | 21 | அஞ்ஞானத்திஞல் | அஜ்ஞானத்திஞல் |
| 17 | 13 | அக்ஞான | அஜ்ஞானி |
| 20 | 15 | ப்ரம்மஞானிகளின் | ப்ரம்மஜ்ஞானிகளின் |
| ,, | 23 | உதாரணத்திற்காக | உதாஹரணத்திற்காக |
| 27 | 11 | கட்டுபடக்கூடிய | கட்டுப்படக்கூடிய |
| ,, | 21 | தலையை | தலைகளை |
| 29 | 6 | ஜாதியர்களில் | ஜாதியார்களில் |
| ,, | 25 | ஆர்யவர்த்த | ஆர்யாவர்த்த |
| 30 | 19 | ஜாதியர்களுக்கு | ஜாதியார்களுக்கு |
| ,, | 25 | மாற்ற | மாற்றப்பட |
| 31 | 28 | உதாரணத்திற்கு | உதாஹரணத்திற்கு |
| 34 | 2 | முதலியோர் | முதலியோர்களுக்குப் |
| 35 | 7 | ஆலய | ஆலயம் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 48 | 7 | அடையக்கூடியது | அடையப்படக்கூடியது |
| ,, | 10 | அடையக்கூடியவைகள் | அடையப்படக்கூடியவை |
| 49 | 19 | வர்களுடைய | அவரவர்களுடைய |
| 55 | 8 | முன்று | மூன்று |
| 63 | 16 | அசிகாரமில்லாததினாலும் | அதிகாரமில்லாததினாலும் |
| 64 | 24 | வத்தால் | வந்தால் |
| 69 | 2, 3 | எப்போதும் | எப்போது |
| 73 | 28 | மனிதனென்று | மனிதனென்றும் |
| 74 | 5 | மற்றவர்களெல்லோரும | மற்றவர்களெல்லோரும் |
| ,, | 22 | விரோதமேற்படும் | விரோதப்படும் |
| 78 | 14 | விதிக்கப்பட்டிருப்பதால் | விதிக்கப்பட்டிருப்பதில் |
| 79 | 16 | பால்யாவயவிலும் | பால்யாவஸ்தையிலும் |
| 83 | 6 | ருஜுபர்வம் | ருஜுபாவம், |
| 90 | 5, 6 | கவலைப்பட்டுவது | கவலைப்படுவது |
| 92 | 16,17 | மார்க்கத்திலிப்பவர்கள் | மார்க்கத்திலிருப்பவர்கள் |
| ,, | 21 | இப்படிகன்னியில் | இப்படிக்கன்னியில் |
| 93 | 26 | அதர்மும் | அதர்மமும் |
| 95 | 7 | பாங்காகவும் | டாங்காகவும் |
| 97 | 26 | மஹாயுகப்பிரளயத்தினாலும் | ஏகதேசமான மஹாயுகப்பிரளயத்தினாலும் |
| 99 | 18 | மொத்திரம் சய்துகொள்வதற்குச் | மாத்திரம் செய்து கொள்வதற்கு |
| 102 | 14,15 | யத்தினத்தாலும் | யத்தனித்தாலும் |
| 106 | 26 | சப்தம் | சபதம் |
| 108 | 14 | மரியாயைதத் | மரியாதையைத் |
| 109 | 1, 2 | குறிப்பிட்டப்படி | குறிப்பிட்டபடி |
| 110 | 26 | ஸொராஷ்டிரீய | ஸொராஸ்ட்ரிய |
| 115 | 3 | இங்கிலீஷ் | இங்க்லிஷ் |
| 116 | 10 | போலீஸ்காரர் | பொலீஸ்காரர் |

# பிழைதிருத்தல்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 121 | 3 | இங்கிலீஷ்காரர் | இங்க்லிஷ்காரர் |
| 136 | 15 | ஸ்தேச | தேச |
| 137 | 23 | நடப்பு கல்பாரம்பத்தில் | பிரம்மாவின் நடப்பு தைனந்தின அவாந்தர கல்பாரம்பத்தில். |
| 140 | 23 | ஸ்வரூமபாகிய | ஸ்வரூபமாகிய |
| 161 | 16 | பிறகுதான | பிறகுதான் |
| ,, | 17 | ஸந்நதி பீஜத்தை | ஸந்ததிபீஜத்தை |
| ,, | 18 | யுள்ளவளாகிருன் | யுள்ளவளாகிருள் |
| 162 | 15 | விதைப்பபற்கு | விதைப்பதற்கு |
| 165 | 12 | ஸம்ஸகாரம் | ஸம்ஸ்காரம் |
| 169 | 27,28 | அதர்மஷஹவாஸங்களை | அதர்மஸஹவாஸங்களை |
| 173 | 7 | தசால்லப்பட்டிருக்கிறது | சொல்லப்பட்டிருக்கிறது |
| 174 | 5 | பிராம்மணப்பெண், | பிராம்மணப்பெண் |
| 176 | 21,22 | போனுனும் | போனுலும் |
| 194 | 8 | காடும் | கொடும் |
| 197 | 24 | இங்கிலீஷ்காரர்களாலேயே | இங்க்லிஷ்காரர்களாலேயே |
| 198 | 21 | மாட்டார்கனென்றே | மாட்டார்களென்றே |
| 199 | 3 | தார்மிர்களின் | தார்மிகர்களின் |
| 201 | 15 | பிருவத்தி | பிரவிருத்தி |
| 216 | 2 | வியாபாக | வியாபக |
| ,, | 4 | வியாபாக | வியாபக |
| 218 | 16 | தார்ஷடாந்தத்தில் | தார்ஷ்டாந்தத்தில் |
| 221 | 12 | தரிதரதினல்ல | தரித்திரனல்ல |
| 233 | 4 | உ: ஞ | ஊஞ |
| 253 | 25 | சரியென்று | சரியன்று |
| 257 | 15, 16 | வேத விஹிதமான | நித்திய-நைமித்திக |
| 258 | 3, 4 | யோகாப்பியஸத்தை | யோகாப்பியாஸத்தை |
| 263 | 25, 26 | செய்து கொண்டும் இருக்க வேண்டும் | செய்யவேண்டும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 265 | 2 | ஸ்துலரூபத்தை | ஸ்தூலரூபத்தை |
| 268 | 4 | குறப்பிடப்பட்டிருக்கிறது | குறிப்பிடப்பட்டிருக்கிறது |
| 272 | 9 | ஆரூபியாக | அரூபியாக |
| ,, | 14 | ஸதூல | ஸ்தூல |
| ,, | 19 | பிராசிக்கிருரென்றும் | பிரகாசிக்கிருரென்றும் |
| 273 | 10 | தியனஞ்செய்ய | தியானஞ்செய்ய |
| 275 | 27 | இவ்வித, | இவ்வித |
| 276 | 21 | வியவஹாரிக | வியாவஹாரிக |
| ,, | 23, 24 | திருக்கைக்காட்காட்டிலும் | திருக்கைக்காட்டிலும் |
| 282 | 10 | உபஸகர் | உபாஸகர் |
| 284 | 7 | ஞானப்பியாஸத்தின் | ஞானுப்பியாஸத்தின் |
| 285 | 6 | ஸ்பரூபியாயிருக்கின்ற | ஸ்வரூபியாயிருக்கின்ற |
| 286 | 6 | ஆபேக்ஷித்து | அபேக்ஷித்து |
| ,, | 15 | ஞானப்பியாஸியான | ஞானுப்பியாஸியான |
| 287 | 3, 4 | உத்தேதித்து | உத்தேசித்து |
| 297 | 6, 7 | பிராளயாந்தத்திலும் | பிரளயாந்தத்திலும் |
| 299 | 28 | ஸ்ஹோதரிகளுக்குள் | ஸஹோதரிகளுக்குள் |
| 301 | 9 | குணத்வம் | குணவத்த்வம் |
| ,, | 27 | அங்காரமாயா | அஹங்காரமாயா |
| 305 | 7 | அனுத்மஸம்பந்தம், | அனுத்மஸம்பந்தம் |
| 308 | 14 | சொல் | சொல்ல |
| 315 | 20 | வஸது | வஸ்து |
| 321 | 7 | ஸ்ரீங்கரபகவத்பாதசரூபமாக | ஸ்ரீசங்கரபகவத்பாதரூபமாக |
| 343 | 27 | 𑌉𑌗𑌰𑌾𑌯 | 𑌉𑌗𑍍𑌰𑌾𑌯 |
| 349 | 9 | 𑌶𑌿𑌵𑌯𑌾 | 𑌶𑌿𑌵𑌾𑌯 |
| 352 | 26 | 𑌸𑌂𑌾𑌸𑌰𑍋𑌦𑍍𑌧𑌾𑌰𑌂 | 𑌸𑌂𑌸𑌾𑌰𑍋𑌦𑍍𑌧𑌾𑌰𑌂 |
| ,, | 27 | 𑌬𑍍𑌰𑌜𑍇𑌶 | 𑌵𑍍𑌰𑌜𑍇𑌶 |

# பிழைதிருத்தல்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 354 | 18 | சரீரத்தைத்தியாகத்தை | சரீரத்தியாகத்தை |
| 359 | 2 | வேதந்த | வேதாந்த |
| ,, | 9, 10 | ஜனங்ககளுக்கு | ஜனங்களுக்கு |
| 361 | 7 | கழிப்பற்காவது | கழிப்பதற்காவது |
| 363 | 2 | பிரம்மண குருவை | பிராம்மண குருவை |
| 369 | 24, 25 | வித்வான்களாலும், | வித்வான்களாலும், பெரும்பாலும் புரோஹிதர்களாலும், |
| 381 | 23 | [illegible] | [illegible] |
| 382 | 8 | வேறொன்று | வேறொன்றும் |
| 383 | 17 | (a) | (I) |
| 384 | 6 | [illegible] | [illegible] |
| ,, | 9 | நரகதரிசன ரூபமாகிய | நரகதரிசனரூபமாகிய |
| ,, | 20 | ஜவாப்தாரியாருந்தாரோ | ஜவாப்தாரியாயிருந்தாரோ |
| ,, | 23 | [illegible] | [illegible] |
| 385 | 4 | 3-வது | 5-வது |
| 387 | 9 | [illegible] | [illegible] |
| ,, | 10 | [illegible] | [illegible] |
| 390 | 28 | அதுவரைபில் | அதுவரையில் |
| 394 | 18 | கர்மமும்-கதியையும் | கர்ம-கதியையும் |
| 396 | 9 | ஒளி | ஒலி |
| 422 | | 242 | 422 |
| 432 | 28 | சேகரித்துக்கொள்ளப்பட | சேகரித்துக்கொள்ளப்படக் |
| 438 | 9 | அண்டமுமான ஆத்மாகவே | அகண்டமுமான ஆத்மாவாகவே |
| 464 | 13 | சரீர சக்தி | சக்தி |
| 465 | 5 | னும், சரீரசக்தியுடனும் கூடிய | னும் கூடிய |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 469 | 11 | செய்யவேண்டும் | செய்யவேண்டும்; மூன்று கால ஸ்நானமுஞ் செய்ய [லாம். |
| 470 | 4 | ஆஸனம் | பாத்திரம், ஆஸனம் |
| 471 | 23 | கொள்ளலாம். | கொள்ளலாம். இவருக்கு [உரியுமுண்டு. |
| 490 | 14 | ஸன்யாஸி | ஸன்யாஸீ |
| ,, | ,, | ஸன்யாஸி | ஸன்யாஸீ |
| 493 | 1 | போக்கடிது | போக்கடித்து |
| ,, | ,, | நான்கு | நன்கு |
| ,, | 12 | ஸன்யாஸி | ஸன்யாஸீ |
| 497 | 6 | (1) என்பதை அடித்து விடவும் | |
| 499 | 11, 12 | பிராமணபுரஸ்ஸரமாக | பிரமாணபுரஸ்ஸரமாக |
| 502 | 6 | வஸதுக்களை | வஸ்துக்களை |
| 504 | 22 | ஜ்ணேய | ஜ்ஞேய |
| 512 (10) | 2,3 | யாத்திரம் | பாத்திரம் |
| 519 | 15 | (4) | 4. |
| 520 | 3 | (5) | 5. |
| ,, | 21 | முயற்சிக்கவேண்டியதான் | முயற்சிக்கவேண்டிய [தான |
| 530 | 7 | தாமவிரோதமாய் | தர்மவிரோதமாய் |
| 534 | 13 | ஸாமான்யப் | ஸாமான்ய |
| 535 | 1 | இப்பாதக்ண்டத்தில் | இப்பாதகண்டத்தில் |
| 542 | 13, 14 | காப்பாற்றப்பட்டடால் [தான் | காப்பாற்றப்பட்டால் [தான் |

உ

# தர்ம விமர்சனம்

## முதலாவது பாகம்

### ஸமதர்சனம்

1. ஜீவனுக்கு உண்மையான நன்மையென்று எதெல்லாம் சொல்லப்படுமோ அதெல்லாவற்றிற்கும் பொதுவாயுள்ள ஸாதனங்களுக்குள் ஸமதர்சனம் முக்கிய ஸாதனம். இதுவே இவ்வுலகத்தில் நல்வாழ்க்கையையும், பரலோகத்தில் நற்கதியையும், முடிவில் அனந்தமான மோக்ஷானந்தத்தையும் கொடுக்கக்கூடியது. அதாவது, நான்குவித புருஷார்த்தங்களுக்குள் முக்கிய புருஷார்த்தமாகிய மோக்ஷத்திற்கே இந்த ஸமதர்சனம், இதன் முக்கியார்த்தத்தில், நேர் ஸாதனமாயிருப்பது மல்லாமல், மோக்ஷத்திற்குப் பிரதான ஸாதனரூப புருஷார்த்தமாகிய தர்மம் என்பதற்குள்ளாக எவை யெல்லாம் அடங்கியவைகளோ அவைகளையும் இதனாலேயே, இதன் கௌணார்த்தத்தில், பெரும்பாலும் ஸாதித்துக்கொள்ளலாம். ஆனால், இப்படி தர்ம மோக்ஷங்களை ஸாதித்துக்கொள்ளக் கூடுமென்று மனதில் உறுதி யுண்டாகவேண்டு மானால், கௌணமுக்கியார்த்தங்களில் ஸமதர்சனமென்பதின் லக்ஷணங்கள் பூராவையும் சரியானபடி தெரிந்துகொள்ள வேண்டிய தவசியம். முயற்சி செய்து தெரிந்துகொள்வதற்கே கொஞ்சம் நம்பிக்கையும் அதினால்

ஸ்வல்ப உறுதியும் மனதில் ஆரம்பத்திலேயே யிருக்கவேண்டியதாகையால், இவைகளை முன்னிட்டுத் தெரிந்துகொள்ள யத்தனஞ் செய்பவருக்குச் சீக்கிரத்தில் அஷ்டி உறுதியும் நம்பிக்கையும் பலப்பட்டுக் காலக்கிரமத்தில் நேர்ஞானத்திலேயே முடிவடையக்கூடும்.

2. ஸமதர்சனம் என்ற பதத்திற்கு "ஸமமாகப் பார்ப்பது" என்று அர்த்தம். இதில் "ஸமமாக" என்பதற்கும் "பார்ப்பது" என்பதற்கும் முக்கிய பக்ஷத்தில் என்ன விசேஷ அர்த்தங்களென்ற விபரம் பின்னால் சொல்லப்படும். ஸாமான்யமாய் 'ஸமமாகப்பார்ப்பது' என்றால் வித்தியாஸமன்னியில், அதாவது, பக்ஷபாதமின்றி ஒரேவிதமாய்ப் பார்வையைச் செலுத்துவது, எண்ணுவது என்று அர்த்தம். இப்படிப் பார்ப்பதே தர்மமாகும். இப்பார்வையினால் தூண்டப்பட்ட செய்கைகளே தர்மச் செய்கைகளாகும். இப்பார்வைக்கு எதிரிடையான செய்கைகள் அதர்மங்களே. ஒருவருக்குத் தன்னிடத்தில் எவ்வளவு அபிமானமும், தனக்கு ஹிதமான காரியங்களில் எவ்வளவு ஊக்கமும் இருக்கின்றனவோ அவ்வளவு அபிமானத்தையும் ஊக்கத்தையும் தன் சக்திக்குத் தக்கவாறு மற்றவர்கள் விஷயத்திலும் காட்டுவது மனிதனுடைய மேலான தர்மம். ஒரே மாதிரியாகத் தன்னைப் போலவே மற்ற எல்லோரையும் பாவிக்கவேண்டு மென்று சொல்வதினாலேயே மற்ற ஜீவர்களில் ஒருவருக்கொருவர் (பரஸ்பரம்) வித்தியாஸ மிருப்பதான பார்வையே கூடாதென்றும் சொன்னதாயிற்று. இவ்விஷயம் பின்னால் விவரிக்கப்படும். உலகத்தில் யாருக்கு சுகம் நேர்ந்தாலும் தனக்கு நேர்ந்ததாகவே ஸந்தோஷப்பட வேண்டும். இதுபோல், யாருக்கு துக்கம் நேர்ந்தாலும் தனக்கே நேர்ந்ததாக பாவித்துக்கொண்டு, அந்த துக்கத்தை

விலக்குவதற்குத் தன்னால் கூடுமானால் அதை உடனே விலக்கிவிட முயலவும் வேண்டும். இப்படியே தன்னு டைய முயற்சியினால் மற்றவர்களுக்குச் சுகத்தையுண்டாக்கி வைக்க முடியுமானால் அம்முயற்சியைச் செய்வதும் பெரும் தர்மமாகும். எப்படி தன்னிடத்தில் தனக்கு துவேஷபுத்தி யில்லையோ, தனக்குக் கெடுதலை தான் தேடுகிறதில்லையோ, அப்படியே மற்றயாவரிடத்திலும் தனக்கு துவேஷமிருக்கலா காது; யாருக்கும் கெடுதலைச் செய்யவாவது நினைக்கவாவது கூடாது. தனக்கும் மற்றவர்களுக்கும், மற்றவர்களுக்குள் ஒருவருக்கொருவர் விஷயத்திலும், வித்தியாஸம் பாராட் டாமல் எல்லோருக்கும் ஹிதமான மார்க்கத்திலேயே நடந்து வருவதே தார்மிகனுடைய ஓர் லக்ஷணம்.

3. உலகத்தில் மனிதர்களுக்குள் பரஸ்பரஸம்மந்தமா யுள்ள நற்குண நற்செய்கைகளடங்கிய ஸாமான்யதர்மங்கள் யாவும் ஸமதர்சனத்தைப் பொறுத்து நிற்கின்றன. தன் னுடைய எண்ணங்களினாலும் செய்கைகளினாலும் மற்றவர் களுக்கு உண்டாகக்கூடிய ஸாதக பாதகங்களைக் கவனித்தும், மற்றவர்களுக்கு ஹிதமான வழியிலேயே தான் நடக்க வேண்டுமென்ற நோக்கங்கொண்டு மிருப்பவரால் துர்ச் செய்கை செய்யப்படவே மாட்டாது. மற்றவர்களுக்குக் கெடுதல் நேரிடக் கூடாத விதமாய் துர்ச்செய்கைகளைச் செய்யலாமோ வென்று கேட்டால், அப்படிக் கெடுதல் நேரி டக் கூடாத துர்ச்செய்கைகளே கிடையாதென்றும், எவ்வித துர்ச்செய்கைகளையும் செய்யவே கூடாதென்றுமே உறுதி யாய்ச் சொல்லவேண்டும். இவ்வுலகத்தில் யார் எதைச் செய்தாலும் அது நல்லதாயிருந்தாலும் கெடுதலாயிருந்தா லும் மற்றவர்களுக்கு ஸம்மந்தப்படாமல் போகவே மாட் டாது. துர்ச்செய்கையைச் செய்கிறவரின் மனதில் மற்றவர்

களைப் பாதிக்கக்கூடாதென்ற எண்ணமிருந்தபோதிலும், அது பாதிக்காமலிருக்க முடியாது. பிரபஞ்சம் பூராவையும் ஒரு மானஸ தடாகம்போல் எண்ணவேண்டும். எப்படி தடாகத்தில் ஒருபக்கத்தில் ஜலத்தில் அடித்தால் அங்கு உண்டாகிற அலைகள் தடையில்லாத பக்கங்களில் தடாகம் பூராவும் பரவுமோ, அப்படியே பிரபஞ்சத்தில் மனுேவிருத்திகளும் அதததுகளுக்கு விரோதமில்லாத ஸ்வபாவமுள்ள மற்றவர்களின் மனதுகளிலும் பிரவேசித்துங் கலக்கக்கூடும். அசுத்த எண்ணங்களுடனும் செய்கைகளுடனுங் கூடிய மனிதனுல் மற்ற ஸாமான்ய ஜனங்களின் ஏற்கனவே சுத்தப் படாமலிருக்கிற மனதுகளை இன்னும் அதிகமாய்க் கெடுத்து விடக்கூடும். எப்படி ஜலத்தைவிட நுட்பமோ காற்று, காற்றைவிட நுட்பமோ மின்சாரம், அப்படியே ஸகல ஸ்தூல பூதங்களையும்விட அதிக நுட்பமாயுள்ளது மனுேதத்வம். தூரத்தில் சுருட்டுக் குடித்துக்கொண்டு போகிற மனிதனுடைய சுவாஸப்பையிலிருந்து வெளிக்கிளம்பிய அசுத்தமான புகையினுல் காற்று ஸம்மந்தத்தின் பேரில் மற்ெருருவன் பாதிக்கப்படுவான். இப்படி நாற்றத்தினுல் அறியக்கூடாதவிதமாக ஒவ்வொரு க்ஷணத்திலும் ஜனங்களின் மூச்சுக்காற்றினுலும் சரீர ஆவியினுலும் ஒவ்வொருவரும் மற்றவர்களைப் பாதித்துக்கொண்டேயிருக்கிறுர். வெகு தூரத்திலிருக்கிற குடிகாரனிடமிருந்துண்டாகிய கெட்ட மின்சார சக்தியினுல் மற்ெருரு குடிகாரன் இழுக்கப்பட்டு இவன் இன்னும் தாழ்ந்த ஸ்திதியை அடையக்கூடும். ஆயிரக்கணக்கான வெகு மைல் தூரத்திலும், தந்தி முதலான கண்ணுக்குத் தெரியக்கூடியவைகளின் ஸம்மந்தமில்லாமலே, நுட்பமான பூதத்தின் சக்தி அனுபவிக்கப்படக்கூடுமென்பது இக்காலத்திய பௌதிக சாஸ்திரத்தினுல் வெளியிடப்பட்டிருப்

பது வெகுபெயர்களுக்குத் தெரிந்த விஷயம். இவ்வித ஸகல பூதங்களைக் காட்டிலும் அதிக நுட்பமான மனோசக்தியை விபரீத மார்க்கத்தில் உபயோகப்படுத்தி ரகஸியமாய்க் கெட்ட செய்கையைச் செய்து வருகிற பாபியும் தன் துர் நடத்தையினால் கண்ணுக்கெட்டாத வெகுதூரத்திலிருப்பவர்களும் தன் துன்மார்க்கவழியில் பிரவிருத்திக்கக்கூடியவர்களுமான மற்றவர்களையும் அதிகமாகக் கெடுத்துவிடக் கூடும். இதுபோலவே, நல்வழிகளில் மனோசக்தியை உபயோகப்படுத்தக் கூடியவர்கள், தாங்களும் நற்கதியை அடைந்துவருவதுடன், தன் நல்ல எண்ணங்களினாலும் நடத்தைகளினாலும், நல்வழிகளிலுள்ள மற்றவர்களுக்கு உபகாரிகளாகவும் ஏற்படுவார்கள். ஜலம், காற்று, மின்சாரம் முதலான ஸ்தூல பூதங்களின் சக்தியும் வேகமும், அவைகளின் ஸ்தூலத்தன்மைக்குத் தக்கபடி, தூரப்போகப் போகக் குறைந்துவிடக்கூடியவை. ஸ்தூலத்தன்மையேயில்லாததும் அதிநுட்பமானதுமான மனோசக்தி அப்படியல்ல. இப்பிரபஞ்சத்தில் எங்கிருந்தபோதிலும் ஒருவரால் மற்றொருவர் நன்மார்க்கத்திலாவது துன்மார்க்கத்திலாவது மனோவிருத்திகளினால் பலமாக இழுக்கப்படக்கூடும். இது பெரும்பாலும் ஜனங்களுக்குத் தெரியாமலே இயற்கையாகப் பிரபஞ்சத்தில் எப்போதும் நடந்துகொண்டிருக்கிறது.

4. இங்கு ஓர் சங்கைக்கிடமுண்டு. இந்திரியங்களுடன் கூடிய மனதினால் கட்டுப்பட்டிருக்கிற மனிதனுக்குத் தன்னுடைய சுகமே பெரியதாகத் தோன்றுமே யொழிய தன்னுடைய சுகத்தினால் மற்றவர்களுக்குக் கெடுதல் நேர்ந்தாலும் நல்லதுண்டானாலும், தான் ஏன் கவனிக்க வேண்டுமென்று அநேகர்கள் சங்கிக்கக்கூடும். இவ்வுலகத்தில் எல்லோரும் தனக்கு ஸமானந்தான் என்பது வாஸ்தவமானாலும், தான்

வேறு மற்றவர்கள் வேறு என்பதும் வாஸ்தவமாயிருப்ப
தால், மற்றவர்களின் நன்மை கெடுதல்களை உத்தேசித்துத்
தன்னுடைய சுகங்களை ஏன் குறைத்துக் கொள்ளவேண்டு
மென்று கேட்கலாம். தான் சுகமென்று அனுபவிப்பதில்
தனக்குக் கெடுதல் இல்லையென்றும், தன்னால் மற்றவர்கள்
கெடுதலை அடைவதினால் தனக்கு பாதை கிடையாதென்றும்
எண்ணுவதே இந்த சங்கைக்கும் கேள்விக்கும் காரணம்.
உண்மையிலோ, விஷயசுகம் ஒவ்வொன்றும் தனக்கே துக்
கத்திலும், மற்றவர்களுக்கு தன்னால் ஏற்படுகிற கெடுதல்கள்
தனக்கே கேடுகளிலும், கடைசியில் முடிவாகின்றன. இவ்
விஷயம் பெரும்பாலும் மதநூல்களிலும் தத்வ சாஸ்திரத்தி
லும் விசேஷமாய் வெளியிடப்பட்டிருக்கிற படியாலும்,
இங்கு விஸ்தரித்துச் சொல்வதானால் அதிகமாய் விரியுமாத
லாலும், தெரிந்துகொள்ள வேண்டிய முடிவான விபரம்
மாத்திரம் இவ்விடத்தில் கூறப்பட்டது. தத்வங்களை நன்
றாய் விசாரித்துத் தெரிந்து கொண்டவருக்கு மதநிபந்தனை
களின் கருத்துகள் தெளிவாய் விளங்கும். ஆரம்பத்தில்
தத்வங்களைத் தெரிந்து கொள்ளக்கூடாதவர் சிரத்தையுட
னும், பக்தியுடனும் மதநிபந்தனைகளை அனுசரித்தே நடந்து
வந்தால் நாளடைவில் இந்த நிபந்தனைகளின் உத்தேசங்களும்
நியாயத்தன்மையும் தானாகவே வெளியாகும். மேற்கண்ட
படி எல்லோரையும் தனக்கு ஸமானமாக பாவித்தும், தன்
னுடைய துர்எண்ணங்களினாலும் துர்ச்செய்கைகளினாலும்
தானும் கெட்டு மற்றவர்களையும் கெடுக்காமலும், தன்னு
டைய நல்ல எண்ணங்களினாலும் நற்செய்கைகளினாலும்
தானும் நற்கதியடைந்தும் மற்றவர்களையும் நற்கதியில்
சேர்ப்பித்தும் வருவதே புத்தியுள்ள மனிதன் செய்ய
வேண்டிய காரியம்.

5. தனக்கு ஸமானமாகவே எல்லோரையும் பார்க்க வேண்டுமென்று சொன்னது மற்ற மனிதர்கள் விஷயத்தில் மாத்திரமல்ல; எல்லா ஜீவராசிகள் விஷயத்திலு மென்றே அதற்கு அர்த்தம். தன்னால் நேரிலாவது மற்றவர்கள் மூல மாயாவது வேறு எவ்வகைப் பிராணிகளுக்கும் ஹிம்ஸை நேரிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது முக்கிய தர்மம். ஸமதர்சனத்தினால் பிராணிகள் யாவற்றையும் தன்னைப் போல் எண்ணி அவைகளிடம் அன்பையும் கருணையையும் பாராட்டிவரவேண்டிய மனிதன் பிராணிகளைக் கொன்று மாம்ஸத்தைத் தின்று வந்தால், இந்தப் பாபத்திற்கு மேல் கடோரமான பாபம் வேறொன்றுமில்லை யென்பதே நிச்சயம். தன்னுடைய சுகத்தின்பொருட்டு மற்றவருக்குத் தீங்கு செய்தால், அது தனக்கே தீங்காக முடியுமென்று முன் சொன்னதற்கு மாம்ஸத்தைத் தின்போர்களே உதாகரண மாவார்கள். கர்ம விதிப்படி, மாம்ஸம் சாப்பிடுகிற மனி தன் எதன் மாம்ஸத்தைத் தின்கின்றானோ அந்தப்பிராணி யாகவே பின்ஜன்மத்தில் பிறந்து மற்றொருவனால் கொல்லப் பட்டு தின்னப்படுகிறான். உலகத்தில் தின்னப்படுகிற பிராணி கள் அதிகரித்து வருவதற்குக் காரணமே மாம்ஸத்தைத் தின்றுவருகிற மனிதர்கள் ஜாஸ்தியாவதைத்தவிர வேறல்ல. அன்றியும், மாம்ஸத்தைத் தின்பதற்காகவும் வேறுவிதங்க ளாகவும் கொடிய ஹிம்ஸைகளைச்செய்து வந்த மனிதர்க ளுடைய கொடும்பாபங்களின் பலனாகவே அவர்களுக்கு உல கத்தில் பலவித கீழ்ப்பிராணி ஜன்மங்களேற்பட்டு ஒன்றை மற்றொன்று அடித்துக்கொன்று வருகிற உக்கிரச்செய்கை கள் எங்கும் ஏராளமாய்க் காணப்படுகின்றன. கீழ்ப்பிரா ணிகளிடம் காண்கிற துக்கங்கள் யாவும் முன் மனித ஜன் மங்களில் செய்யப்பட்ட பாபங்களின் பலன்களே. இப்படி

ஜாஸ்தியாகப் பிராணிகள் கஷ்டங்களை அனுபவிப்பதையும் இவ்வுலகத்தில் பிரதிதினமும் நடப்பு ஜன்மத்திலும் மனிதனுடைய பாழும் வயிற்றை நிரப்புவதற்காக மிருகங்கள், பக்ஷிகள், மீன்கள் முதலான பிராணிகள் ஏராளமாய் அடிபட்டு வருகிறதையும் கணக்கிட்டுப்பார்த்தால் இப்பூலோகத்தையே பெரும் கசாப்புக்கடை யென்றும் நரகக்குழியென்றுமே நினைக்கவேண்டும். இதை ராக்ஷஸ லோகமென்றும் சொல்லலாம். மாம்ஸம் தின்பதை மனிதன் நிறுத்திப் பிராணிகளிடம் அன்பைச் செலுத்த ஆரம்பித்தால், தனக்காகவும் தெய்வத்தின் பெயரைச் சொல்லிக்கொண்டும் அவன் கொன்றுவரக்கூடிய பிராணிகளின் சகிக்கக்கூடாத கஷ்டங்கள் நிவிருத்தியாவதுந் தவிர வேறு விதமாய் மனிதனால் பிராணிகளுக்குப் பலவிதங்களில் ஏற்படுகிற கஷ்டங்களும் குறைவடைந்து வரும். தவிரவும், இப்போது மனிதன் ஸகல பிராணிகளுக்கும் சத்துருஸ்தானத்திலிருப்பதிலிருந்து விடுபட்டு ஸர்வமித்திரனாகவே ஆகிவிடுவான். ஆனால், உலகத்தில் ஏங்கும் மாம்ஸம் சாப்பிடுவதை நிறுத்தும்படி செய்வது மிகவும் அஸாத்தியமான காரியந்தான். ஆகிலும், இப்பரதகண்டத்தில் கர்மகதியில் நம்பிக்கையுள்ள ஹிந்துக்களுக்குள் நிறுத்தும்படி செய்வது முடியாத காரியமென்று நினைக்கவேண்டாம். சரியான பிரயத்தனந்தான் வேண்டியது. ஹிந்து மதத்திலிருந்தே வேறுபட்டுண்டாயிருக்கிற ஜைன மதத்திலிருப்பவர்கள் எல்லோரும், பௌத்த மதத்திலிருப்பவர்களில் அனேகரும், இவ்வித பிரயத்தனத்திற்கு அனுகூலமாகவேயிருந்து ஒத்து வேலையுஞ்செய்யக்கூடும். கர்மகதி விபரங்களையே அறியாமலும், உலகத்தில் மனிதனுடைய போகத்திற்காகவே மற்றப்பிராணிகள் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறதென்று தப்பாக எண்ணிக்கொண்டு

மிருக்கிற மகம்மதியர்கள் கிருஸ்துவர்கள் முதலானவர்களுக்குள்ளும் சிலராவது ஒத்துவரக்கூடும். சிரமத்தை ஒரு பொருட்டாக எண்ணமல் இத்தேசத்தில் ஹிந்துக்களுக்குள் எங்கும் மனிதன் மாம்ஸம் தின்பதை நிறுத்திவிடும்படியான மகா உத்தேசங்கொண்டு கூர்மையான புத்தியும், சரீர சக்தியும், மனுேதைரியமுமுள்ள பல ஸாதுக்கள் நாடு நாடாகப் போய்த் தகுந்த முயற்சிகளைச் செய்து வந்தால் இந்த சிரமமான காரியமும் காலக்கிரமத்தில் ஸாத்தியப்பட்டு விடும். இதுவே மகத்தான ஈசுவர கைங்கரியமாகும். மாம்ஸத்தைத்தின்று கொண்டு கடவுளிடம் பக்தியைச் செலுத்துவதாயும் மதானுஷ்டானங்களைச் செய்வதாயும் சொல்பவர்களையுத்தேசித்து ஸர்வப்பிராணிகளிடமும் அன்பு பாராட்டிக் கருணையுடனிருப்போர், ஈசுவரபக்தி யில்லாதவ ராலுலும், ஒருவிதத்தில் மேலோரென்றே தெரிந்து கொள்ளவேண்டும். குழந்தைகளை அடித்துக்கொன்று கொண்டே அக்குழந்தைகளின் பிதாவிடத்தில் பக்தியைச் செலுத்துகிறவன்பேரில் அப்பிதாவுக்கு எக்காலத்திலும் திருப்தியாவது பிரீதியாவது உண்டாகாது. ஜீவகாருண்ய மிருப்பவர்பேரில்தான் ஸகல ஜகத்பிதாவாகிய ஈசுவரருக்குப் பூர்ணமான நல்ல எண்ணமிருக்கும். அந்த ஈசுவரர் பேரிலேயே பொறுப்பை வைத்து மேற்கண்ட நன்முயற்சிகளைச் செய்துவந்தால் அவைகள் வீண்போகமாட்டா. சிரமமான காரியமேயென்று மலைக்கவேண்டாம். எல்லோரும் மாம்ஸம் தின்பதை நிறுத்திவிட்டால், எல்லோருக்கும் போதுமான தானியம் முதலியன கிடைக்கக் கூடுமாவென்று விசாரப்படவும் வேண்டாம். பிராணி ஹிம்ஸையை நிறுத்துகிற பெரும் தர்மச்செய்கையினலேயே தேசமெங்கும் செழித்து ஏராளமான தான்யம் முதலியன விளைந்து பரிமளிக்கும். இது ஈசுவரருடைய

பொறுப்பேயொழிய மனிதன் விசாரப்படவேண்டிய விஷய மல்லவென்று உறுதியாய் நினைத்துக்கொள்ளலாம். உபயோக மற்ற வியவகாரங்களில் புத்தியைச் செலுத்தி வீண்படுத்து வதைவிட ஜீவகாருண்ய விஷயமான முயற்சியில் உபயோகப் படுத்துவது பெரும் ஸர்வோத்தம தர்ம காரியமாகும். இம் முயற்சி ஸகல மதப்பிரவர்த்தகமான முயற்சிகளையும் விட மேலானது. இம்முயற்சிக்கு வேறெவ்வித தர்ம முயற்சி களும் பொது நன்மைக்காரியங்களும் ஈடாகக்கூடியனவல்ல. இம்முயற்சியை பலமாய் நெடுநாள் செய்துவந்தும் ஹிந்துக் களிலும் சிலர்மாத்திரம் பிராணிஹிம்சை செய்வதி லிருந்து திரும்பி ஜீவகாருண்யத்தைக் கைக்கொண்டும், மற் றும் அனேகர் அப்படி திரும்பாமலுமிருந்து வந்தாலும் எம்மட்டில் ஜீவஹிம்சை நாட்டில் குறைவடையுமோ அம் மட்டில் ஜனங்களுக்கு க்ஷேமந்தானென்பதில் தடையில்லை. ஆகையால் இம்முயற்சியின் பலனாக இருக்கக்கூடியது எது வானாலும் அதை ஈசுவரருக்கே ஒப்புவித்துவிட்டு விடா முயற்சியாகச் செய்து வருவதே உத்தமம். இம்முயற்சியில் நோக்கமுள்ள ஸாதுக்கள் அவசியமான முன் ஆராய்ச்சிகள் பூராவையும் நன்றாகச் செய்யவேண்டியதும், பின்னால் இம் முயற்சியில் ஏற்படக்கூடிய எதிர்வாதங்கள் பூராவையும் கண்டித்து நிராகரித்துவிடுவதற்குள்ள ஸாதனஹேது விஷ யங்கள் யாவற்றையும் சேகரித்து வைத்துக்கொள்ள வேண் டியதும் மிக்க அவசியம்.

6. தனக்கு ஸமமாகவே மற்ற யாவரையும் பாவித்து நடந்துவரவேண்டுமென்று சொல்வதினால் தன் சுகங்களில் தனக்குப் பிரியமும், துக்கங்களில் வெறுப்பும் இருப்பது போல் மற்றவர்களுக்கும் அவரவர்களின் சுக-துக்கங்களில் பிரிய-வெறுப்புகளிருக்குமென்பதையறிந்து அதற்கு அனு

குணமாக நடந்துவரவேண்டு மென்பது மல்லாமல், தன் பூர்வ வாஸனுகர்மங்களினுல் தனக்குச் சில விஷயங்களில் விசேஷப் பிரிய-வெறுப்புகளும், இப்படியே விசேஷ சுக-துக்கங்களும், இருப்பது போலவே மற்றவர்களுக்கும் தனித்தனியாகவே விசேஷப் பிரிய-வெறுப்புகளும் கஷ்ட-சுகங்களுமிருக்குமென்று எண்ணி, அதற்குத் தகுந்தபடி நடந்துவர வேண்டுமென்பதும் தாத்பரியமாகும். வெயில் காலத்தில் விசிரியினுல் தன்சுகத்தின்பொருட்டு ஏற்படக் கூடிய குளிர்ந்த காற்று அதே காலத்தில் ஜ்வரக்குளிர் நடுக்கத்தினுல் கஷ்டப் படுகிறவனுக்கும் சுகமா யிருக்கு மென்று நினைத்து அவன் விஷயத்தில் விசிரியை உபயோகப் படுத்தக் கூடாது. இதுபோல், தனக்குப் பசியில்லாதகாலத் தில் பசியுடன் கூடிய மற்றொருவன் வந்து அன்னத்தை யாசித்தால், அவனுக்கும் தன்னைப்போல் வாஸ்தவத்தில் பசியிராதென்று நினைத்துவிடக்கூடாது. தன்னைப்போலவே மற்றவர்களையும் பாவிக்கவேண்டு மென்று சொல்லியதை அவரவர்களின் தனித்தனியான வேறுபடக்கூடிய ஸ்திதிக ளுக்கு விரோதமன்னியில் தனக்கு ஸமமாக எண்ணவேண்டு மென்றுதான் அர்த்தப்படுத்தவேண்டும். தனக்குக் கமலா ரஞ்சுப் பழத்தில் பிரியமிருந்தால், தன் முன்பாகப் பசியுடன் வந்து நிற்கிற நாய்க்கும் அது பிரியமாயிருக்கு மென்று எண்ணி அப்பழத்தை அதற்குப்போட்டால் அது தின்ன மாட்டாது. அது தின்னக் கூடியதைக் கொடுத்தால்தான் அதன் பசி நீங்கும். தனக்குப் புல் உருசியுள்ளதில்லையாகு லும், அதில் பசுவுக்கு உருசியிருக்கிற விபரத்தைத்தெரிந்து கொண்டு அதை வாங்கிப் பசுவுக்குப் போடுவது உபகார காரியமாகும். இப்படிப்போலவே, மனிதர்களுக்குள்ளும் அவரவர்களின் ஸ்தானத்திற்குத் தக்கபடி அவரவர்களுக்குச்

செய்யவேண்டிய உபகாரகாரியங்களும் வேறுபடக் கூடியவை. பகவத்கீதையை வாசிப்பதில் தனக்கு சுகமேற்படுவதாகத் தெரிந்தால், அப்படியே சண்டாளாதி பஞ்சம ஜாதிக் குழந்தைகளுக்கும் சுகமேற்படுமென்று எண்ணி கீதா புஸ்தகங்களை வாங்கி அக்குழந்தைகளிடம் கொடுப்பவரை பிராந்தியுள்ளவரென்றே நினைக்கவேண்டும். இப்படிப்பட்டவர் தான் மேலான சட்டபுஸ்தகங்களைக் படித்துப் பெரும் உத்தியோகத்தை ஸம்பாதித்துச் சுமகாயிருப்பதையெண்ணி அந்தச் சட்டபுஸ்தகங்களையே வாங்கி அக்குழந்தைகளிடம் கொடுக்கிறதில்லை. அச்சட்ட புஸ்தகங்களின் அருமையையும் அப்புஸ்தகங்களை வாசிக்கக்கூடியவர்களுக்கு இருக்கவேண்டிய முன்யோக்கியதையையும் அவர் தெரிந்துகொண்டிருப்பதே அப்படிக்கொடுக்காவிருப்பதற்குக் காரணமாகும். கீதா புஸ்தகத்தின் அருமையையும் அதைப்படிக்கவேண்டியவருக்கு இருக்கவேண்டிய யோக்கியதையையும் அவர் அறிந்துகொள்ளாததே முன் சொல்லியபடி கொடுப்பதற்குக் காரணமென்றே சொல்லவேண்டும். ஆகையால், மற்றவர்களுக்கு நன்மை செய்வதிலும் அவர்களின் தனித்தனியான நிலைமைகளைக் கவனிக்கவேண்டியதும் முக்கியம். அதாவது, மற்றவர்களுடைய சுக-துக்கங்களையும் தன்னுடைய சுக-துக்கங்களைப்போலவே பாவிக்கவேண்டியதுடன், மற்றவர்களுக்கு அனுகூலமான விசேஷ ஸாதனங்கள் எவையென்று தெரிந்து கொள்ளவேண்டியதும் அவசியம்.

7. அன்றியும், எப்படிப் பின்னால் நமக்கு அதிகமான சுகம் அல்லது துக்க நிவிருத்தி யேற்படும்பொருட்டு இப்போது கொஞ்சம் கஷ்டம் நேர்ந்தாலும் பொறுத்துக் கொண்டு முயற்சி செய்து வருகிறோமோ, அப்படியே ஒருவருக்குக்கொஞ்சம் கஷ்டமேற்படுவதினால் மற்றவர்களுக்கு

ஏராளமான சுகமாவது துக்கநிவிருத்தியாவது ஏற்படக் கூடியதானால் அக்கஷ்டத்தைப் பொறுமையுடன் அனுப வித்துக்கொண்டு மற்றவர்களின் அனுகூலத்தின்பொருட்டு முயல வேண்டியதும் அவருடைய கடமையாகும். 'பொதுஜன நன்மையிலேயே உறுதியான ஊக்கமுள்ளவ ருக்குத் தனக்கு கஷ்டமாவது நஷ்டமாவது ஏற்படுகிற விஷயமே மனதில் படமாட்டாது. இவ்விதமாகவே முன் 5-வது பாராவில் சொல்லியபடி பிராணிகளுக்கு மனிதனால் ஹிம்ஸை ஏற்படாமலிருக்கும்பொருட்டு அதிகமாய் முயலு வதில் பல அஸௌகரியங்களும் கஷ்டங்களும் முயலு பவர்களுக்கு உண்டாகக் கூடியதானாலும் அவைகளை ஒரு பொருட்டாக எண்ணாமலே முயற்சியைக் கைவிடாமல் முடிவுவரையில் கொண்டு செலுத்துவதே மேலான பெரும் தர்மக் கொள்கையைக் குறிப்பிடும். மற்றவர்களுக்கும் மற் றப்பிராணிகளுக்கும் தன் முயற்சிகளாலுண்டாகக் கூடிய நன்மைகளிலேயே புத்திசென்றுகொண்டிருந்து அல்பமான தன் சொந்த விஷய ஞாபகமே தலையெடுக்கக் கூடாமலிருப் பதே பெருந்தன்மையின் லக்ஷணம். இப்படித் தன்னை மறந்து மற்றவர்களின் நன்மைக்காக உழைப்பவரே பிறரு டன் நன்றாக ஸமான பாவத்தை அடைந்தவராவார். இவர் பிறரைத் தானாகவே எண்ணி விடுகிறபடியால், தான் ஒருவர் தனியாக இருப்பதான எண்ணமே மறைந்து விடும். ஸாமான்ய அர்த்தத்தில் ஒருவிதத்தில் ஸமதர்சனம் இவர் விஷ யதில் பூரணமாக ஸித்தித்து விட்டதாகவே சொல்லலாம்.

8. இதுவரையில் 'மற்ற ஜீவர்களெல்லோரும் தனக்கு ஸமானம்' என்ற பார்வையுடனிருப்பவரைப் பற்றிக் கொஞ் சம் சொல்லப்பட்டது. இனி 'மற்ற ஜீவர்களுக்குள்ளாக பரஸ்பரம் வித்தியாஸமே இல்லை' யென்றபார்வையின் தன்மை

யைச்சற்று விசாரிப்போம். ஒன்றுக்கொன்று ஸமம் அல்லது துல்யம் என்று சொல்லப்பட்டவைகள் வெவ்வேறு என்பதே நிச்சயம். ஒன்றை மற்றொன்றிலிருந்து வேறுபடுத்திக் காட்டக்கூடிய அம்சங்கள் தனித்தனியே ஒவ்வொன்றிலும் இருக்கவேண்டிய தவசியம். இப்படி வேறுபட்டிருந்தபோதிலும், சில விஷயங்களில் ஒற்றுமையிருக்கக் கூடிய காரணத்தினால், ஒன்றுக்கொன்று அவ்விஷயங்களில் ஸமானமென்று வியவகரிக்கப்படுகிறது. ஆரம்பத்தில் உதாரணமாக சரீரத்தையே எடுத்துக்கொள்ளலாம். ஒருவருடைய சரீரத்தில் அவயவங்கள் பல இருக்கின்றன. ஒன்றுக்கும் கெடுதலுண்டாவதில் அவருக்கு இஷ்டமில்லாததினால், எல்லா அவயவங்களிலும் அவருக்கு ஸமதர்சனமிருப்பதாகச் சொல்லக்கூடும். அவருக்கு எல்லா அவயவங்களிலும் ஸமமான பார்வை யிருந்தபோதிலும், அந்தந்த அவயவங்களின் இயற்கையாயுள்ள தன்மைகளுக்குக்கட்டுப்பட்டுத்தான் அவர் நடந்து கொள்ளக்கூடும். அதாவது, பார்வை ஒன்றானாலும், அந்தந்த அவயவங்கள் ஸம்பந்தமாய் அவர் நடந்துவருகிற விதங்கள் பேதப்படலாம். தலை, கை, கால், உடல் எங்கும் அவருக்கு ஒரே விதமான அபிமான மிருந்தாலும், எல்லாவற்றிற்கும் ஒரே விதமான அலங்காரத்தைச் செய்வதாவது, அல்லது, அவைகளுக்குக் கெடுதல் நேரிட்டால் ஒரே விதமான வைத்தியம் முதலான சீர் திருத்தங்களைச் செய்வதாவது கிடையாது. //தலையில் ஜரிகைத்தலைப்பாகையைத் தூக்கிவைத்தால், காலில் தோல் செருப்பைத்தான் மாட்டவேண்டும்.// முகத்தில் புறப்பட்ட பருவுக்குப் புனுகைத் தடவினால், காலில் புறப்பட்ட சிரங்குக்கு மண்ணைக் குழைத்துப் பூசினால் போதும்.// அந்தந்த அவயவங்களுக்குத் தக்கபடி வெவ்வேறு விதமாக ஆசரித்து

வருவதினால் அவருடைய ஸமதர்சனத்திற்கு ஒருவித ஹானியுமில்லை. இதுபோல், யோக்கியராகவும் விவரந் தெரிந்த வித்வானாகவுமிருக்கிற வீட்டு யஜமானனுக்குக் குடும்பத்திலுள்ள எல்லோர்பேரிலும் ஸமமான பார்வையே யிருந்துவரும். பாரபக்ஷ்ய புத்தியே யிருக்கமாட்டாது. இப்படிப்பார்வை ஸமமாயிருந்தாலும், குடும்பத்தில் அவரவர்களின் ஸ்திதிக்குத் தக்கபடி அவரவர்களை நடத்துகிற விதம் வெவ்வேறாகத்தானிருக்கக் கூடியது. ஸமமான தர்சனத்தால் எல்லோரையும் ஒரே விதமாக நடத்துகிறதென்ற அர்த்தமேற்படாது. குடும்பத்தில் பெரியோர்கள் தம்பிகள், ஸகோதரிகள், பெண்சாதி, குமாரர்கள், நாட்டுப் பெண்கள், குமாரத்திகள் முதலான எல்லோரிடத்திலும் வித்தியாஸமில்லாமல் ஒரேவிதமான பார்வையைச் செலுத்தியபோதிலும், அவரவர்களை நடத்துகிற விதம் வெவ்வேறாகவேயிருக்கும். பெண்சாதியையும் ஸகோதரியையும் எல்லா விஷயத்திலும் ஒரே விதமாய் நடத்திவருவது நியாயமாகுமா? இப்படி வேறுபடுவதினால் பக்ஷபாதமிருப்பதாகச் சொல்லக் கூடாது. குடும்பத்தில் பிறவியினாலும் ஸம்பந்தத்தினாலும் வந்து சேருகிற ஜீவர்களெல்லோரும் தனித்தனியான பூர்வ ஜன்ம கர்மங்களுக்குத்தகுந்தபடி தனித்தனியான ஸ்தானங்களிலிருந்து அந்தந்த கர்ம பலன்களை அந்தந்த காலங்களில் அனுபவிக்க வந்திருப்பதால், அந்தந்த ஸ்தானத்திற்குரியதாகவே அப்போதைக்கப்போது குடும்பத்தில் நடத்தப்பட்டு வருவார்களென்பதே நியாயமாகும். ஆகையால், பார்வையில் வித்தியாஸமில்லை என்ற காரணத்தினால் வெளி நடவடிக்கைகளிலும் வித்தியாஸமிராதென்று சொல்வது தப்பு.

9. இத்தேசம் பூராவையும் எடுத்துக்கொள்வோம். இப்பரதகண்டத்தில் ஸ்வதேசிகளாக இருப்பவர்கள் பெரும்

யாலும் ஹிந்துக்களே. உண்மையான ஹிந்துக்களுக்கு கர்மகதியிலும், அநாதிகாலமாய் எல்லோருக்கும் முன்கர்மங்களினாலுண்டாயிருக்கக்கூடிய வேறுபாடுகளுடன் பல ஜன்மங்கள் ளேற்பட்டு வந்திருக்கின்றன வென்பதிலும், உறுதியான நம்பிக்கையுண்டு. ஸமதர்சனம் முக்கிய மென்பது இப்போது புதிதாயுண்டான கொள்கையல்ல. இது அநாதியான வேதத்திலேயே சொல்லப்பட்டு எக்காலத்திலும் ஹிந்துக்களால் ஆசரித்துவரப்பட்டிருக்கிற பெரும் ஆய ஸநாதன தர்மமே. பெரியோராகிலும், சிறுவராகிலும், மூடராலும், வித்வானாலும், பசு பக்ஷி மிருகங்களாலும், எல்லா ஜீவர்களிடத்திலும் பக்ஷபாதமில்லாமல் ஸமமான பார்வையைச் செலுத்தவேண்டுமென்பது ஹிந்துக்களின் பிரதானக்கொள்கை. இக்கொள்கைக்கும் மேற்கண்ட கர்மகதி முதலான விஷயங்களிலுள்ள நம்பிக்கைக்கும் பரஸ்பர விரோதம் கிடையாது. இரண்டுக்கும் ஒற்றுமையாகவே அநாதிகாலமாக ஹிந்துக்கள் நடந்து வந்திருக்கிறார்கள். புதிதான மிலேச்சக் கொள்கைகள் இத்தேசத்தில் அதிகமாய்ப் பிரவேசித்த பிறகுதான் பல இடங்களில் ஹிந்துப் பார்வையே நஷ்டமாகியும் மிலேச்சப்பார்வை அதிகரித்தும் போய் மேற்கண்ட இரண்டுக்கும் எதோ பரஸ்பர விரோதமிருப்பதுபோல் கொஞ்சகாலமாக அஞ்ஞானத்தினால் எண்ணப்பட்டும் பிதற்றப்பட்டும் வருகிறது. பொறுமையுடனும் சிரத்தையுடனும் நன்றாக ஆராய்ச்சி செய்யக்கூடியவர்களுக்கு அப்படி விரோதமில்லையென்றே புலப்படும். இப் பூலோகத்தில் வேறு எத்தேசத்திலு மில்லாத ஜாதிபேதங்களும் அவைகளைப்பொறுத்த ஆசார நடத்தை பேதங்களும் இத்தேசத்திலிருக்குங்கால், இங்கு ஸமதர்சனமிருக்கக் கூடுமென்று எப்படிச் சொல்லலாமென்று நூதனப் படிப்புள்

ளோர்கள் சிலர் ஆக்ஷேபிக்கிறார்கள். ஜாதிபேதங்களை யும் அடியோடு தொலைத்து, அவைகளைப் போதிப்பிக்கிற நூல்களையும் கொளுத்திவிட்டு, சண்டாளாதி பஞ்சமர்களை யும் கூட உட்காரச்செய்து பிராமணன் ஸமபங்க்தியில் நீனிதின்றால்தான், ஸமதர்சனம் ஸித்திக்குமென்ற துர்ப் புத்தி இக்காலத்தில் இந்நாட்டில் விருத்தியடைந்து வருகி றது. இவ்வித துர்ப்புத்தியைப் போதித்து அதிகப்படுத்தி வருகிற தர்ம விரோதிகளே கலிகால மகிமையினால் பெரும் லோகோபகாரிகளாக விளங்குகிறார்கள். இவர்கள் தங்களு டைய குதர்க்கத்தையே ஆதாரமாகக்கொண்டு பிதற்றிவந்தா லும் கெடுதல் அதிகமாயிருக்கக் கூடியதல்ல. கீதாசாஸ்தி ரம் முதலான பெரும் நூல்களையே தங்கள் விபரீதக்கொள் கைகளுக்கு ஆதாரமாகவும் அக்ஞான ஜனங்களின் முன் னிலையில் அடிக்கடி சொல்லி வருவதால் உலகத்தில் கெடு தல் சீக்கிரத்தில் அதிகப்பட்டு வருகிறது. சண்டாளனையும் பிராம்மணனையும் ஸமமாய்ப் பார்க்கவேண்டுமென்று ஸ்ரீ கிருஷ்ணனே கீதையில் சொல்லியிருப்பதால், 'ஏன் சண்டா ளனைக்கண்டால் விலகவேண்டும்? அவனுடன் சேர்ந்து ஏன் பிராம்மணன் முதலானவர்கள் சாப்பிடக்கூடாது? அவனு டன் விவாகம் முதலான ஸம்பந்தங்களையும் ஏன் செய்யக் கூடாது?' என்று கேட்கிறார்கள்.

10. இப்படிக் கேள்வி கேட்கக்கூடிய வாதிகளும் இதன் 8-வது பாராவில் கண்ட விபரங்களை ஆக்ஷேபிக்கக் கூடியவர்களல்லர். மனிதனுக்குத் தன் சரீரத்தில் எல்லா அவயவங்களிலும் ஒரே ஸமபார்வையிருந்தாலும், அல்லது குடும்பத்தலைவருக்குத் தன் குடும்பத்திலுள்ள எல்லோரிடத் திலும் ஸமபார்வை யிருந்தபோதிலும், ஆசரணைகள் பேதப் படுமென்பதை அவ்வாதிகளும் ஒப்புக்கொண்டே தீரவேண்

டும். இப்படியே, வெளியிலும் ஜனங்களின் விஷயத்தில் ஒருவருக்கு ஸமபுத்தியிருந்தாலும், ஆசாரணை விஷயத்தில் வித்தியாஸ மிருப்பதே நியாயமென்று சொன்னால் மாத்திரம் கூச்சலிட்டு ஆக்ஷேபிக்கிறார்கள். தத்வத்தைத்தெரிந்து கொள்ளாமையே இக்கூச்சலுக்குக்காரணம். ராஜா பிரஜைகளெல்லோரிடத்திலும் பக்ஷபாத மில்லாமல் ஸமபார்வையைச் செலுத்தவேண்டு மென்பது எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிற விஷயம். இப்படி ஸமபார்வையுள்ள ராஜா எக்காரணத்தினாலும், ஜனங்களுக்குள் வித்தியாஸ மிருப்பதைக்கவனித்து, பல ஜனங்களிடத்தில் பலவிதமாய் நடந்து கொள்ளக் கூடாதென்பதே அவ்வாதிகளின் கொள்கையாக இருக்கவேண்டும். வித்வானை மரியாதை செய்வதும், மூடனை அலக்ஷியஞ் செய்வதும், ஸாதுக்களை ஸம்மானிப்பதும், துஷ்டர்களைத் தண்டிப்பதும், பெரும் உத்தியோகஸ்தர்களுக்கு ஆயிரக்கணக்கான சம்பளம்கொடுப்பதும், தோட்டிகளுக்கு ஸ்வல்ப சம்பளம் கொடுப்பதும், இதெல்லாம் ராஜாவிடத்தில் பெரும் தோஷங்களென்பதே ஷை வாதிகளின் அபிப்பிராயமா? அப்படிச்செய்வதினால் ராஜாவுக்கு ஜனங்களிடத்தில் ஸமதர்சனங்கிடையா தென்றும் அவர் வக்கிர அல்லது வஞ்சகப்பார்வையுள்ளவ ரென்றும் சொல்லுகிறார்களா? அன்றியும், ராஜா எல்லோரையும் ஒரே விதமாகவே எப்போதும் நடத்தவேண்டுமானால், சட்டங்களை யேற்படுத்துவதற்கு நியாயமே யிருக்கமாட்டாதே? தனித்தனியான விஷயங்களுக்குத் தனித்தனியான சட்டங்களும், இவ்விதச் சட்டங்களை ஊர்ஜிதத்திற்குக் கொண்டு வரக்கூடிய வெவ்வேறான பிரகாரங்களும் அந்த வாதிகளின் கொள்கைப்படி எப்படி யேற்படலாம்? ராஜா பல விதமான ஜனங்களிடத்தில் பலவிதமாய் தான் நடந்துவருவதுமன்னி

யில், ஜனங்களும் ஒருவருக்கொருவர் நடந்துவர வேண்டிய பிரகாரங்களேயும் தாரதம்மியத்துடன் திட்டப்படுத்தி வெவ்வேறு விதமாக ஜனங்கள் நடந்துவரும்படி செய்து வருவதும்அக்கிரமந்தானென்பதே அவ்வாதிகளின் கக்ஷியா? ராஜா எல்லோரையும் ஸமமாக பாவித்தாலும், அவரவர்களின் யோக்யதைக்குத் தக்கபடி பலவிதமாய் நடந்துவருவது விரோதமாகாதென்று அவ்வாதிகள் சொல்லும்பக்ஷத்தில், தகுந்த காரணமிருந்தால் ஜனங்களிடம் பலவிதமாய் நடந்துவருவது ஸமதர்சனத்திற்கு விரோதமில்லை யென்று அவர்கள் ஒப்புக்கொண்டதாகத்தான் ஆகும். யோக்யதையின் தாரதம்யத்திஞல் வெவ்வேறு பிரகாரமாக நடந்து வரலாமென்று அவர்கள் ஒப்புக்கொண்டபோதிலும், அவ்வித யோக்யதையைத் தீர்மானிப்பதில் எதையெல்லாம் கவனிக்கவேண்டு மென்பதில் அபிப்பிராய பேத மேற்படும். உண்மையில் மனிதர்களுக்குள் ஏற்பட்டிருக்கிற யோக்யதை விஷயமான வித்தியாஸங்களுக்குத் தக்கபடி அவர்கள் வெவ்வேறு விதமாக நடத்தப்பட்டுவருவது ஸமதர்சனத்திற்குக் குறைவாகாதென்பதை மாத்திரம் அவ்வாதிகள் ஒப்புக்கொள்வதே இப்போது போதுமானது.

11. தவிரவும், மனிதர்கள், மிருகங்கள், பக்ஷிகள் முதலிய பிராணிகளெல்லாவற்றிலும் ஸமபார்வையைச் செலுத்துவதென்ருல், இவ்வித ஸ்மபார்வைக்கு அந்தந்தப் பிராணிகளுக்குத் தகுந்த விதங்களில் அன்பையும் கருணையையும் பாராட்டுவதென்றுதான் அர்த்தமாகுமேயொழிய, அவைகளைத் தொட்டு உறவு கொண்டாடுகிற தென்ருவது, அவைகளுடன் கூடச்சேர்ந்து உண்பது என்ருவது, ஸம்பந்தஞ் செய்துகொள்வது என்ருவது, அர்த்தமாகக் கூடியதில்லை. ஸ்ரீ கிருஷ்ணபகவான் கீதையில் “பிராம்மணனேயும்

சண்டாளனையும் பண்டிதர்கள் ஸமமாகப் பார்ப்பார்கள்" என்று சொல்லுமிடத்தில் அவ்விருவர்களுக்கும் மத்தியில் பசுவையும், யானையையும், நாயையும் சேர்த்துச் சொல்லி யிருக்கிறார். இவ்வைந்து ஜீவர்களிடத்திலும் பொதுவாகச் செலுத்தக்கூடியது எவ்வித ஸமபார்வையோ அதைத்தான் செலுத்துவதென்று அர்த்தஞ் செய்யக்கூடுமே தவிர, மத்தியில் சொல்லப்பட்ட அம்மூன்று மிருகங்களையும் தள்ளி ஒதுக்கிவிட்டு ஆரம்பத்திலும் கடைசியிலும் குறிப்பிடப்பட்ட பிராம்மணன் சண்டாளன் இவ்விருவர்களின்விஷயத்தில் மாத்திரம் தொட்டு உறவாடுவதற்கும், ஸகபோஜனஞ் செய்வதற்கும், பெண்கொள்வினை கொடுப்புவினை செய்வதற்கும் அர்த்தமாகலா மென்று சொல்வது எப்படி நியாயமாகுமோ தெரியவில்லை. மேலும், பின் சொல்லப்போகிற முக்கியார்த்தத்தில் ஸமதர்சனமென்றால் எதுவோ அதை ஸித்தித்துக் கொண்டிருக்கிற ப்ரம்மஞானிகளின் பார்வையைக் குறித்து பகவான் சொன்னாரேயல்லாது கௌணார்த்தத்தில் அங்கு ஸமதர்சனத்தைப்பற்றிச் சொல்லவில்லை. முக்குணங்களுடைய பந்தங்களையும் துவைதத்தையும் கடந்து நிர்குணத்வைதப்ரம்ம நிஷ்டையிலிருக்கிற ஞானிகளின் பார்வையில் எங்கும் ஒரேவிதமான ப்ரம்ம திருஷ்டியிருக்குமே தவிர குணங்களின் தோற்றமாவது துவைதத்தின் வேற்றுமையாவது இருக்கமாட்டாதென்று சொல்லுமிடத்தில் உதாரணத்திற்காக ஸத்வகுணமுள்ள பிராம்மணனையும், ரஜோகுணமுள்ள பசுவையும், தமோகுணமுள்ள யானையையும், இப்படியே துவைதப்பார்வையில் மனிதர்களுக்குள் உத்தமஸ்தானத்திலுள்ள வித்யாவினயஸம்பன்னனை பிராம்மணனையும், நிகிருஷ்டஸ்தானத்திலுள்ள சண்டாளனையும், மிருகங்களுக்குள் உத்தமஸ்தா

னத்திலுள்ள பசுவையும், மத்தியஸ்தானத்திலுள்ள யானையையும் நிக்ருஷ்ட ஸ்தானத்திலுள்ள நாயையும், எடுத்துக்கொண்டு எங்கும் குணங்களுக்கு அதீதமாகவும், மேல் கீழ் என்ற வியவகாரங்க ளற்றதாகவும், ஸகல பிராணிகளிடத்திலும் ஸமமாய் ஒன்றாகவுமிருந்து வருகிற ப்ரம்மத்தையே ஞானிகள் ஸாக்ஷாத்கரிக்கிறார்களென்றுதான் சொல்லியிருக்கிறார். இப்படிச் சொல்லியது மேற்கண்டவாதிகளின் கௌணார்த்த ஸம்பந்தமான விபரீதகக்ஷிக்கு எவ்விதத்திலும் அனுகூலமில்லை. ஸர்வோத்தமமான கீதா சாஸ்திரத்தை, நாவினால் அதின் பெயரைச் சொல்லக்கூட யோக்கியதை யில்லாத அனதிகாரிகள்,தாங்கள் தெரிந்துகொண்டுவிட்டதாகப் பாவித்து, பேசத்துணிந்தால் தப்புப்பிதற்றல்களும் தாறுமாறான கேள்விகளுந்தான் ஏற்படும்.

12. பிறவியினாலேயே வேறுபட்டுள்ள சரீரங்களையுடைய மிருகாதிகளிடத்தில் சரீர ஸம்பந்தமான ஸமத்வத்தை நாம் பாராட்ட முடியாதென்பது வாஸ்தவமானாலும், பிறவியினால் ஒரேவித சரீரங்களையுடைய மற்ற மனிதர்களுக்குள் முன் சொல்லியபடி யிருக்கக்கூடிய யோக்யதையின் தாரதம்மியத்தினால் ஷையார்களிடம் சில விஷயங்களில் ஒரே விதமாய் நடந்து கொள்ளக்கூடாமலிருந்தாலும், யோக்யதையினால் வேறுபட்டிருப்பதாகத் தெரியாத மற்றவர்களிடம் ஏன் ஸமத்வத்தை எல்லாவிதத்திலும் குறைவின்றிப் பாராட்டி நடந்து வரக்கூடாதென்று அவ்வாதிகள் கேட்கிறார்கள். பிறவியில் எல்லா மனிதர்களுக்கும் ஒருவிதத்திலும் வேறுபடாத ஒரேவித சரீரமும் யோக்யதையுமிருப்பது போல் எண்ணியதினால் ஷை கேள்விக்கிடமாயிற்று. வெளிப்பார்வையில் எங்கும் மனித சரீரங்கள் ஒன்றுபோ லிருப்பதால் அவைகளுக்குள் பிறவியில்

வேறுபாடுகிடையாதென்று எண்ணக்கூடாது. இவ்வுல கத்தில் ஹிந்துக்களைத்தவிர மற்றவர்கள் இப்படியெண்ணு வது ஒருவிதத்தில் நியாயமாகும். பிறவிக்குமுன்பாக ஜன் மங்களிருந்ததாகவே அவர்களுக்குத் தெரியக்கூடாததால், அக்ஞானத்தினால் அவர்கள் அப்படியெண்ணுவது ஆச்சரி யப்படத்தக்கதல்ல. கர்மகதியிலும் ஜன்மங்களின் தொடர்ச் சியிலும் நம்பிக்கை யிருக்கவேண்டிய ஒரு ஹிந்துவினால் மேற்கண்டபடி எண்ணப்பட்டால், அவரிடம் ஹிந்துத் தன்மை மிகவும் குறைந்துபோய் விட்டதாகவே தீர்மானிக்க வேண்டியதாயிருக்கும். 'சரீரத்தில் வேறுபாடு' என்றால் ரூபத்தில் வித்தியாஸமென்று அர்த்தமல்ல. ஒவ்வொருவ ராலும் முன் ஜன்மங்களில் எவ்வித கர்மங்கள் சரீரத்தினா லும், வாக்கினாலும், மனதினாலும் செய்யப்பட்டனவோ, அவைகளின் பலன்களை அனுபவிக்கும்படியான தன்மை யுள்ள சரீரத்துடனும், ஷை கர்மங்களுக்கு ஒத்ததான வாஸனைகளுடனும் பாவனைகளுடனுங்கூடிய மனது முத லான உள் ஸ்வாபவத்துடனும், அவர் மறுபடியும் ஜன் மத்தை அடைந்திருக்கிறாரென்று அறிந்து கொள்ளவேண் டும். அநாதிகாலமாக எண்ணத்தொலையாத முன் ஜன்மங்க ளில் செய்யப்பட்ட நானாவித கர்மங்களின் பலனாக ஏராள மான வேறுபாடுகள் ஒவ்வொரு மனிதனுடைய சரீரத்தன் மையிலும் உள் ஸ்வபாவத்திலும் தனித்தனியாகவே யிருந்து வரவேண்டிய தவசியம். பிறவியில் எல்லோரும் ஒன்றா கவே யிருந்து அப்பால் வேறுபாட்டை அடைவதாக எண் ணுவதெல்லாம் அறியாமை. மனிதப்பிறவிக்குக் காரணமே முன் ஜன்மங்களில் செய்யப்பட்ட புண்ணியபாபங்களே. இப்புண்ணிய பாபகர்மங்களும், இவைகளைத் தூண்டியவை களும் இவைகளால் மறுபடியும் விருத்தியடையப்பட்டவை

களுமான குணங்களும், எல்லோருக்கும் ஒரே விதமாய் எவ்வகையிலு மிருந்திருக்க முடியாது. ஷை குணகர்மங் களுக்குத் தக்கபடியே ஸர்வேசுவரர் அவரவருக்குத் தனித் தனியே தகுதியுள்ள ஜனவகுப்பிலும் குடும்பத்திலும் ஜன்மத்தைக் கொடுத்துவருகிறார்.

13. பலவிதமா யிருக்கக்கூடிய குணகர்மங்கள் பூரா வையும் விபாகப்படுத்தி, ஜாதிகளென்ற பெரும் வகுப்பு களுக்குள் அந்தந்த பூர்வகுணகர்மங்களையுடைய ஜீவர்கள் தனித்தனியே ஜன்மங்களின்பொருட்டு வந்துசேரும்படி யாக ஈசுவரர் ஸங்கல்பித்து, மனித ஸ்ருஷ்டிகாலத்திலேயே ஜாதிவியவஸ்தையை ஏற்படுத்தியிருக்கிறார். இவ்வித ஜாதியேற்பாடு புதிதாக வந்ததல்ல. முன் கல்பங்களிலிருந்த பிரகாரமே நடப்பு கல்பாரம்பத்திலும் இப்பூலோகமும் அதில் ஆர்யர் என்ற பெயருடன் மனிதர்களும் தோன்றிய போதே வேதமும் கொடுபட்டு அதிலடங்கிய ஜாதிவிதிகளும் மனிதனுக்கு ஏற்படுத்தப்பட்டன. இப்பூலோகத்தில் ஆதி யில் மனிதன் தோன்றிய ஸ்தலம் ஆர்யாவர்த்தம். அப்பால் சில காலத்திற்குள் இப்பரதகண்டம் பூராவும் சிறுகச் சிறுக ஆர்யர்களின் வாஸஸ்தலமாக ஏற்பட்டு ஆர்யதர்மங்கள் அனுஷ்டிக்கப்பட்டு வந்திருக்கின்றன. காலக்கிரமத்தில், பலதடவை அதர்மம் மிகுந்த யுகங்களும் மாறிமாறிவந்து கொண்டிருந்தமையால், ஆர்யதர்மாசரணையிலிருந்து நழு விப்போன ஜனங்கள் ஜாஸ்தியாய் அதிகரித்து, அவர்கள் இப்பரதகண்டத்தைவிட்டு வெளியிடங்களுக்கு லௌகிக ஸௌகரியங்களை யுத்தேசித்துப் பலகாலங்களில் குடியேறிப் போய் இப்பூலோகம் பூராவையும் பெரும்பாலும் வியாபித் துக்கொண்டார்கள். இப்பரதகண்டத்திலேயே தங்கியிருந்து ஆர்யதர்மாசரணையே பெரியதென்று எண்ணி வைதிகமதத்

திலேயே உறுதியுடனிருந்து வந்தவர்களும் இக் காலத்தில் ஹிந்துக்களென்று அழைக்கப்பட்டவர்களுமான ஆர்யர்களிடம் மாத்திரம் தொடர்ச்சியாக ஜாதிவியவஸ்தை காப்பாற்றப்பட்டு வந்திருக்கிறது. இதினால்தான் இப்பூலோகத்தில் ஜாதியென்பது இவ்விந்தியாவில் மாத்திரம் காணப்பட்டும் மற்ற தேசங்களில் காணப்படாமலு மிருக்கிறது. உண்மையில் ஸகல மனிதர்களுக்கும் இப்பரதகண்டந்தான் ஸ்வதேசம். இதுவே தர்மானுஷ்டானத்திற்கு யோக்கியமான வைதிக கர்மபூமியென்றும், மத்திய தேசமென்றும் சொல்லப்படுகிறது. மற்றதேசங்களெல்லாம் ஸமீபகாலங்களில் குடியேறப்பட்ட லௌகிக போகபூமிப் பிரதேசங்களே தவிர வேறல்ல. மனித ஸ்ருஷ்டியே ஆதியில் இப்பரதகண்டத்தில்தான் ஏற்பட்டதென்ற ஹிந்துக்கொள்கை ஆதாரமற்றதல்லவென்றும், இப்பூலோக ஸம்பந்தமானபல வித பௌதிகதத்வசாஸ்திர ஆராய்ச்சிகளைச் செய்யும்போது ஆர்யாவர்த்த மேட்டுப்பிரதேசந்தான் ஆதி மனிதர்களின் வாஸஸ்தலமா யிருந்திருக்கக்கூடியதென்று தெளிவாய்த் தெரியவருகிறதென்றும், சில நவீன ஐரோப்பிய தத்வசாஸ்திர வித்வான்கள் அபிப்பிராயப்படுவதாகவும் வெளியாகிறது. இது நிற்க. இவ்வுலகம் தோன்றிய காலம் முதல் ஈசுவரரால் ஏற்படுத்தப்பட்ட ஜாதி வியவஸ்தை கெட்டுப்போகக்கூடாத விதமாக வைதிககர்மானுஷ்டானங்களைச் செய்துகொண்டு இத்தேசத்தில் வெகுஜனங்களிருந்து வந்திருப்பதினால், மேற்கண்டபடி ஜாதிவிதிகள் இத்தேசத்தில் மாத்திரம் காணப்படுகின்றன வென்பது ஆச்சரியப்படக்கூடிய விஷயமல்ல. மற்ற தேசங்களில் எக்காலமும் ஜாதியேற்பாடு இருந்திருப்பதுமில்லை; இருக்கக்கூடியதுமல்ல. மற்ற தேசங்களில் மனிதர்களின் சரீரதர்மங்களிலும் ஆந்தர

ஸ்வபாவங்களிலும் வேறுபாடுகள் ஏராளமாயிருக்கக்கூடிய தானாலும், ஈசுவரரால் ஆதியில் மனிதனுக்கு ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டிருக்கிற வியவஸ்தையினால் அறியப்படக் கூடிய அடையாள வகுப்பு ஸ்தானங்களைவிட்டு வெளியேறி அவ்வேறுபாடுகள் இன்னவைதானென்று குறிப்பிட மார்க்கமில்லாமல் போய்விட்டபடியால், அவ்வேறுபாடுகளுக்கு அனுஸரணையாக மனிதர்களைத் தனித்தனியே நடத்திவர வேண்டிய விஷயத்திலும் வியவஸ்தையில்லாமல் அந்த ஜனங்கள் தடுமாறிக்கொண்டே யிருந்து கஷ்டப்படுகிறார்கள். இவ்விதக் கஷ்டம் ஹிந்துக்களுக்குள் ஏற்படவில்லை. எந்த ஜாதியில் ஒருவருக்குப் பிறவி ஏற்பட்டிருக்கிறதோ அந்த ஜாதியைக்கொண்டே அவருடைய வேறுபாடுகள் இன்னவைதானென்று தெரிந்துகொண்டு அவைகளுக்கு அனுகுணமாகவே அவர் உலகத்தில் மற்றவர்களால் நடத்தப்படுவதற்கு ஸௌகரியமுண்டு. ஒருவர் பள்ளிக்கூடத்தில் சேராமலே தனியாக வித்தியாப்பியாஸஞ் செய்துவந்தால், அவருடைய உண்மையான யோக்கியதையைக் கண்டுபிடித்து அந்த யோக்கியதைக்குத் தகுந்தபடி அவரை நடத்துவது சிரமப்படும். பல வகுப்புகளடங்கிய பள்ளிக்கூடத்தில் படித்து வருகிறவர் விஷயத்தில், அவர் எந்த வகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கிறாரென்று மாத்திரம் தெரிந்துகொண்டு விட்டால், அவருடைய யோக்கியதை இன்னதுதானென்று உடனே குறிப்பிட்டுத் தெரிந்துகொண்டுவிடலாம். இவ்வுலகத்தில் மற்ற தேசங்கள் யாவற்றையும் வகுப்பில்லாத திண்ணைப்பள்ளிக்கூடம் போலவும், இப்பரதகண்டத்தை மாத்திரம் வகுப்புகளடங்கிய உயர்ந்த வித்தியாசாலை போலவும் பாவித்துக்கொள்ளலாம். ஆகையால், இத்தேசத்தில் ஹிந்துக்கள் ஒருவருக்கொருவர் ஸமதர்சனத்தைச்

செலுத்தி அவரவர்களின் வேறுபட்டுள்ள யோக்கியதைக்குத் தகுந்தபடி தனித்தனிவிதமாக நடந்துவரவேண்டிய விஷயத்தில் ஜாதிவித்தியாஸமிருப்பது பெரும் அனுகூலமே யல்லாது விரோதமாக மாட்டாது.

14. அதாவது, ஸமமான பார்வையை எங்கும் செலுத்தும்போதும் அவரவர்களுக்குள்ள யோக்கியதையின் வேறுபாடுகளுக் கிணங்கி பரஸ்பரம் நடந்து வரவேண்டியிருப்பதில், இப்பூலோகத்தில் வேறெங்குமில்லாத இரண்டு ஸௌகரியங்கள் ஹிந்துக்களுக்கு ஏற்பட்டிருக்கின்றன. ஒவ்வொருவருடைய முக்கிய வேறுபாடுகள் எவையென்று தனித்தனியே பரீக்ஷை செய்து தெரிந்துகொள்ளும்படியான சிரமத்தை மனிதனுக்குக் கொடுக்காமல் ஈசுவரனே ஜாதி வியவஸ்தையை ஏற்படுத்தியதினால், அதாவது, இன்னவித பூர்வ குணகர்மங்களை யுடையோர் இன்ன ஜாதியில் பிறவியை அடைவாரென்று திட்டப் படுத்தியதினால், அவரவர்களின் வேறுபாடுகளும் ஸந்தேகமின்றி தெரியக்கூடியவை. மேலும், அவ்வேறுபாடுகள் நிச்சயப்படுவதுடன், அவ்வேறுபாடுகளுக்கிணங்கி ஒருவருக்கொருவர் எப்படி நடந்துகொள்ளவேண்டுமென்ற விபரங்களும் சாஸ்திரங்களிலேயே தீர்மானிக்கப் பட்டிருப்பதால், நடத்தை விஷயத்திலும் ஹிந்துக்களுக்குள் அபிப்பிராய பேதமாவது சச்சரவுகளாவது நேரிடுவதற்குக் காரணமேயில்லை. இவ்விருவகை ஸௌகரியங்களும் உலகத்தில் மற்ற ஜனங்களுக்குக் கிடையாதாகையால், அவர்களுக்குள் ஒருவருக்கொருவர் நடந்துகொள்ள வேண்டிய விஷயத்தில் ஏற்படுகிற வியவகாரங்களுக்கு முடிவே யில்லாமலிருக்கிறது. முதலாவது, அவர்களுக்குள் வேறுபாடுகளைக் கண்டுபிடிப்பதும் சிரமம். கண்டுபிடித்ததாகச்சொல்லி வருகிறவர்களுக்குள் அபிப்பிராய

ஒற்றுமை யிருப்பதும் சிரமப்படும். ஒருக்கால், வேறுபாடு களைச் சரியாய் கண்டுபிடிப்பது ஸாத்தியமென்று சொல்லப் பட்டாலும், அவ்வேறுபாடுகள் விஷயமான நடத்தை பேதங்களுக்கு மனிதனே தனித்தனி விதிகளை யேற்படுத்திக் கொள்ளவேண்டியதா யிருப்பதாலும், மனிதனுடைய புத்தி யைப்போல் அவ்விதிகளும் மாறிக்கொண்டே யிருக்கக்கூடி யதாலும், இவ்விதிகளை யேற்படுத்துகிறதற்கு யாவருக்கும் குறிப்பிட்ட அதிகாரமில்லாததினாலும், ஸ்வபுத்தியினால் விதிகளைச் சொல்லக்கூடியவர்களும் பலராகையால் அவர் களுக்குள் ஒற்றுமைக்குறைவு ஏற்படக் கூடியதாலும், சரி யானபடி எல்லோரும் ஒத்துக் கட்டுபடக்கூடிய விதிகளுண் டாவதற்கே இடமில்லாமலிருக்கிறது. அவர்களுக்குள் இவ்விதக் குழப்பம் எப்போதுமிருந்து கொண்டேயிருக் கும். இதற்கு முடிவே கிடையாது. இப்பூலோகத்தில் ஹிந்துக்களிடத்தில் மாத்திரம் இக்குழப்பத்திற்கு இட மில்லாமலிருந்திருக்கிறது. இவ்வித விசேஷ அனுகூலத்தை யும் கெடுத்துவிடுவதற்கே இக்காலத்திய ஆசாரச் சீர்திருத்தக் காரர்கள் பலமாய் முயலுகிறார்கள். கலிபுருஷனே அவர் கள் மூலமாய் இவ்விதப் பிரதிகூல முயற்சிகளைச் செய்து வருவதால், இம்முயற்சிகளே சரியென்று அறிந்துகொண்டு விட்டதுபோல் தலையை ஆட்டிக்கொண்டு ஆயிரக்கணக்கான மூட ஜனங்களும் ஆமோதித்து வருவதாகக் கூத்தாடி வரு கிறார்கள். உண்மையை எடுத்துச்சொல்ல ஆரம்பித்தால் காது கொடுத்துக் கேட்பவர்களே அபூர்வமாயிருப்பதுடன் சொன்னதைச் சரியானபடி கிரகித்துக்கொள்ளச் சக்தியுள் ளவர்களும் அதிக அபூர்வமாகவே காணப்படுகிறார்கள். இவையெல்லாவற்றிற்கும் காலவேற்றுமையைத் தவிர வேறொன்றையும் காரணமாகச் சொல்லக்கூடவில்லை.

15. ஹிந்துக்களுக்குள் பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்ற முக்கியமான ஜாதிகள் நான்கேயாகுலும், அவைகளிலிருந்தே காலக்கிரமத்தில் பல கலப்பு (ஸங்கர) ஜாதிகளும் உண்டாயிருக்கின்றன. இப்படி வேறு ஜாதிகளும்ஏற்படக்கூடுமென்று தெரிந்தே ஸர்வக்ஞனை ஈசுவரனல் இவ்விதக்கலப்பு ஜாதிகளுக்குள்ள விதிகளும் வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன. ஒரே ஜாதியிலுள்ள பிதாவினுலும் மாதாவினுலும் ஜனிப்பிக்கப்பட்டவன் அந்த ஜாதியைச் சேர்ந்தவனுவான். அந்தந்த ஜாதிகளுக்குள்ளாகவே விவாக ஸம்பந்த மேற்படுவதுதான் கிரமமான ஸம்பந்தம். கிரமந்தவறி ஜனங்கள் நடப்பதும் நேரிடுமாகையால், கலப்பு ஜாதிகள் உண்டாவதும் ஸாத்தியமாயிற்று. மேல் ஜாதி பிதாவுக்கும் கீழ் ஜாதி மாதாவுக்கும் பிறந்தவனுடைய ஜாதி அனுலோம ஜாதியென்றும், மேல்ஜாதி மாதாவுக்கும் கீழ் ஜாதி பிதாவுக்கும் பிறந்தவனுடைய ஜாதி பிரதிலோம ஜாதியென்றும், சொல்லப்படுகின்றன. இப்படிப்பட்ட பிதாவுடையவும் மாதாவுடையவும் வெவ்வேறு ஜாதிகளுக்குத்தக்கபடி அனுலோமப் பிரதிலோம ஜாதிகளும் பல வகையாகும். அனுலோமஜாதி பிரதிலோமஜாதியைவிட உயர்ந்தது. அனுலோமப் பிரதிலோம ஜாதிகளிலும் துவிஜர்களுக்குள்ளாகவே ஸம்பந்த மேற்பட்டுப் பிறந்தவன் சூத்திர ஸம்பந்த மேற்பட்டுப்பிறந்தவனைவிட மேலானவன். பிரதிலோம ஜாதிகளில் சூத்திரப் பிதாவுக்கும் துவிஜமாதாவுக்கும் பிறந்தவன் நிகிருஷ்ட ஜாதியைச் சேர்ந்தவன். தீண்டாமைமுதலான தோஷங்கள் இவனுக்குத்தான்உண்டு. முக்கியமாய் இவனைத்தான் பஞ்சமனென்று சொல்லுகிற வழக்கம். சூத்திர பிதாவுக்கும் பிராம்மண மாதாவுக்கும் பிறந்தவன் மற்ற பஞ்சமர்களைவிட அத்தியந்தம் கீழ்ப்பட்

டவன். இவன்தான் சண்டாளனென்று சொல்லப்படு கிறான். ஆதிகாலங்களில் இவ்விதமாக கலப்பு ஜாதிகளேற் பட்டபின்பு, பூர்வகர்மவசத்தினால் அவ்வித ஜாதிகளிலேயே பிறவியை அடைய வேண்டிய ஜீவர்கள் அங்கேயே பிறந்து கர்மபலன்களை யனுபவிக்கிறார்கள். வெவ்வேறு பிரதான நான்கு ஜாதியர்களில் ஒருவருக்கொருவர் வேறுபட்டுள்ள சரீர-மனோவித்தியாஸங்கள் எவ்வளவோ அதைக்காட்டி லும் மிகவும் அதிகமாய் வேறுபட்டிருக்கிற பாஹ்யாந்தர ஸ்வபாவங்களுடன் கூடிய சண்டாளர் முதலானவர்களின் விஷயத்தில் ஸமதர்சனத்தைச் செலுத்துவதென்றால் அவர் களிடம் அன்புடனும் கருணையுடனுமிருந்து அவர்களுக்கு வேண்டிய அனுகூலங்களைச் செய்து வைக்கலா மென்று தான் அர்த்தமாகுமே தவிர அவர்களுடன் நெருங்கி உற வாடுகிறதென்ற அர்த்த மேற்படக்கூடியதல்ல.

[குறிப்பு:—ஏதோ இத் தென்தேசத்திலுள்ள பிராம் மணரல்லாத ஜனங்கள்மாத்திரம் திராவிடர்களென்றும், அவர்களே இத்திராவிடதேச ஸ்வதேசியர்களென்றும், அதி லும், பஞ்சமர்களே ஆதித்திராவிடர்களென்றும், இப்பால் கொஞ்சகாலமாகச் செய்யப்பட்டுவருகிற கக்ஷிகளெல்லாம் வீண் பொய்யான கக்ஷிகளைத் தவிர வேறல்ல. முன் சொல் லிய விபரப்படி பஞ்சமர்கள் மற்ற ஜாதியார்களிடமிருந்தே உண்டானவர்களென்ற உண்மையையும், இத்தென்நாட்டி லுள்ள ஸகல மனிதர்களும், இதின் 13-வது பாராவில் கண்டபடி, உலகத்திலுள்ள மற்ற எல்லா மனிதர்களைப்போ லவே ஆர்யவர்த்தப் பிரதேசத்திலிருந்து வந்தவர்கள்தா னென்ற விஷயத்தையும், தெரிந்துகொள்ளாமலே அக்கக்ஷி கள் செய்யப்பட்டு வருகின்றன. இப்பரத கண்டத்தில் விந் தியபர்வதத்திற்குத் தென்புறமுள்ள தேசம் தக்ஷிணதேச

மென்றும் திராவிடதேச மென்றும் சொல்லப்படுகிறது. இந்தத்திராவிட தேசத்திலுள்ள முக்கியமான ஜனவகுப்பினர் களான மஹாராஷ்டிரர்கள், தெலுங்கர்கள், கர்ணடகர்கள், கூர்ஜர்கள், தமிழர்கள் இவ்வைந்து வகுப்பினர்களும் பஞ்ச திராவிடர்களென்று அநாதிகாலமாக அழைக்கப்பட்டு வந் திருக்கிறார்கள். பிராம்மணரைத் தவிர மற்றவர்கள்தான் திராவிடர்களென்று சொல்லிவருவதும் அறியாமையே. பிராசீன கிரந்தங்களிலும் நிகண்டுகளிலும் தென்தேச பிராம்மணர்களே முக்கியமாய்த் திராவிட பதத்தினால்குறிப் பிடப்பட்டிருக்கிறார்கள். இக்காலத்தில் ஹடத்தின்பேரில் துர்க்கக்ஷிகளைச் செய்துவருகிறவர்களுக்குக் கிரந்தங்களி லும் வேறு விபரப்புஸ்தகங்களிலும் கண்டிருப்பதை யெடுத் துச் சொல்வதில் பிரயோஜனமில்லை.]

16. பிறவிக்கு முன்பாக ஒவ்வொரு ஜீவனிடத்திலு மிருந்திருக்கிற குணகர்மபேதங்களை ஈசுவரன்தான் அறியக் கூடுமே யொழிய அவை மனிதனுக்கு ஸாதாரணமாய்த் தெரியக்கூடியவையல்ல. அவ்வித பேதங்களுக்குத்தக்கபடி அந்தந்த ஜாதிகளில் ஈசுவரனால் ஜன்மம் ஏற்படுத்தப்பட்ட பின்பு ஜன்மம் முடியும்வரையில் அந்தந்த ஜாதியர்களுக்கு என்ன ஸ்தானங்களும் தர்மங்களும் சாஸ்திரங்கள் மூல மாய் ஈசுவரனால் குறிப்பிடப்பட்டிருக்கின்றனவோ அந் தந்த ஸ்தானங்களுக்கும் தர்மங்களுக்கும் விரோதமன்னி யில் அவரவர்கள் நடத்தப்படவேண்டு மென்பதே நியாய மாகும். அந்த ஸ்தானங்களாவது தர்மங்களாவது மனி தனால் மாற்றத் தகுந்தவைகளல்ல. பிறவியினால் ஏற்பட்ட ஸ்தானம் மறு பிறவியினால்தான் மாறத்தகுந்தது. பள்ளிக் கூடத்தில் ஒருவகுப்பில் சேர்த்துக்கொள்ளப்பட்ட மாணாக் கன் வருஷமுடிவில் வேறு வகுப்புக்கு அனுப்பப்படும்வரை

யில் அவனுடைய வகுப்புஸ்தானம் மாறமாட்டாது. பரீக்ஷையின் பேரில் பிரதான உபாத்தியாயரால்தான் அப்படி வேறு வகுப்புக்கு அனுப்பப்படுவானே யொழிய, மாணாக்கர்களுக்குள்ளாகவே ஒருவன் மற்றொருவனை வேறு வகுப்புக்கு அனுப்பியதாகக் காட்டிக்கொண்டால் தண்டனைதான் பலனாகுமே யல்லாமல் அனுப்பப்பட்டவன் அவ்வேறு வகுப்பு மாணாக்கனாகிவிட மாட்டான். இதுபோல், பிறவியினால் ஏற்பட்டிருக்கிற ஜாதி வியவஸ்தைக்கும் அதற்கு அனுகுணமான தர்மங்களுக்கும் விரோதமாக இக்காலத்தில் பெரும் லௌகிகபதவிகளிலுள்ளவர்களும், ஆர்யதர்மக்ஞானமேயில்லாதவர்களும் அல்லது மழுங்கிப்போனவர்களுமான சிலர் கீழ்ஜாதி ஸ்தானங்களிலுள்ள ஜனங்களுக்கு ஏதோ சுத்தி காரியங்களைச் செய்வித்து மேல்ஜாதி ஸதானங்களுக்குத் தூக்கிவிட்டுவிடுவதாகச் செய்துவருகிற பாசாங்குகள் பெரும் மோசமும் பாபங்களுமேயாகும். ஈசுவரருடைய ஆக்ஞாரூபங்களாகிய சுருதிஸ்மிருதிகளுக்கு நேர் எதிரிடையாக யத்தனங்களைச் செய்பவர்கள் ஈசுவரத்துரோகிகளென்றே சாஸ்திரம் மூலமாக வெளியாவதால், அவர்கள் மற்ற எல்லோராலும் பரிதபிக்கப்படத் தகுந்தவர்களே யல்லாது கொண்டாடப்படத் தகுந்தவர்களல்ல. இப்படிப் பட்டவர்கள் அநியாயமாய் கலியின் ஏவுதலுக்குட்பட்டுத் தாங்களும் அதோகதியையடைந்து மற்றவர்களையும் கெடுத்து வருகிறார்கள்.

17. ஸாமான்ய புத்தியினால் ஊகித்துச் சரியாய் நடந்துவரக்கூடிய சங்கதிகளில்கூட காலவித்தியாஸத்தினால் விபரீதக்கொள்கைகளேற்பட்டு பல தர்க்கக்ஷிகள் செய்து வரப்படுகின்றன. விரிவை விலக்க உத்தேசித்து, அந்த தர்க்கக்ஷிகளில் இன்னம் ஒன்றை மாத்திரம் உதாரணத்திற்கு

எடுத்துக்கொள்வோம். எல்லோரையும் ஸமமாகவே எண்ணி வரவேண்டுமாகையாலும், கடவுள் எல்லோருக்கும் பொதுவானபடியாலும், ஏன் பஞ்சமர்கள் மிலேச்சர்களுள்பட எல்லோரும் எல்லா ஹிந்து ஆலயங்களிலும் பிரவேசித்து உள்ளெங்கும் போகக்கூடாதென்று கேட்கிறார்கள். ஹிந்துக்களா யிருப்பவர்களுக்கு ஆகமசாஸ்திரத்தில் நம்பிக்கை யிருக்கவேண்டியது நியாயம். அந்த சாஸ்திரத்தின் பிரகாரம் ஏற்படுத்தப்பட்டிருக்கிற ஆலயங்களில் யார் யார் எதுவரையில் பிரவேசிக்கலாமென்ற விபரம் பூராவையும் அந்த சாஸ்திரமே தனித்தனியாக விதித்திருப்பதால், இது விஷயத்தில் உண்மையான ஹிந்துக்களுக்குள் ஸந்தேகமாவது சச்சரவாவது உண்டாக இடமேயில்லை. அந்த சாஸ்திரத்தில் நம்பிக்கையில்லாதவர்களால் இக்காலத்தில் மேற்கண்ட கேள்வி கேட்கப்பட்டுவருகிறது. ஆகம சாஸ்திரத்திலேயே நம்பிக்கை யில்லாதவர்களுக்கும் ஹிந்துக்களல்லாதவர்களுக்கும் அந்த சாஸ்திரப்படி ஏற்படுத்தப்பட்டிருக்கிற ஆலயங்களில் கடவுளிருக்கிறாரென்ற நம்பிக்கைமாத்திரம் எப்படி வந்ததோ தெரியவில்லை. இவ்வித நம்பிக்கையும் இவர்களுக்கு இல்லை யென்றே சொல்லவேண்டும். ஆலயத்தில் கடவுளிருப்பதாகவே எண்ணாத ஜனங்கள் மேற்கண்டபடி பிரவேச விஷயமான கக்ஷியைச் செய்வதானால் ஹடமே காரணமாகும். நியாயத்தின் பொருட்டல்ல. ஸர்வ வியாபியான கடவுள் எல்லோருக்கும் பொதுவானதால் அக்கடவுளைத் தர்சனஞ்செய்ய எல்லோருக்கும் அதிகாரமுண்டென்று சொல்லுகிறார்கள். கடவுள் ஸர்வ வியாபியென்று தெரிந்துகொண்டவர்கள் ஆலயத்திற்கு வரவேண்டிய காரியம் என்னவோ தெரியவில்லை. அக்கடவுளை அவர்கள் எல்லா இடங்களிலும் பார்த்துக்கொண்டிருப்பதைவிட்டு

ஆலயத்திற்குள்ளிருப்பதாக எண்ணி ஏன் கக்ஷிசெய்யவேண்டும்? கடவுள் ஸர்வவியாபியாக இருந்தாலும் அவரை மற்ற விடங்களில் பார்க்க முடியாததினாலும், ஆலயங்களில் விக்கிரக ரூபமாய் பார்க்கக்கூடியதினாலும், தாங்கள் வருவதாக அவர்கள் சொல்லும் பக்ஷத்தில், ஸர்வவியாபியான கடவுளையே ரூபத்துடன் ஆலயங்களிலிருக்கும்படி எப்படி யாரால் செய்யப்பட்டதென்று அவ்வார்த்தைகளைக்கேட்பதுடன், அக்கடவுளே அப்படி ரூபத்துடனிருப்பதாக அவர்களுக்கு எப்படித்தெரியவந்ததென்றும் கேட்கிறோம். ஆகம சாஸ்திரப்படி அதிகாரமுள்ளவர்களால் அந்த சாஸ்திரவிதிகளின் பிரகாரம் ஆலயத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டதினால் கடவுளின் ஸான்னித்தியம் ஏற்பட்டதென்றும், இப்படி ஸான்னித்தியமிருக்கக்கூடுமென்று அந்த சாஸ்திரத்தினால்தான் தெரியவருகிறதென்றுமே அவர்கள் பதில் சொல்லக்கூடும். இப்படியானால், அந்த சாஸ்திரத்திற் கண்ட மற்ற நிபந்தனைகளுக்கும் கட்டுப்பட்டு நடக்க வேண்டுமென்றே முடிவாகும். தாங்கள் சாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டவர்களில்லையென்றும், மற்றவர்கள் ஆலயத்தில் கடவுளிருப்பதாகச்சொல்லும் வார்த்தையைக் கேட்டு மாத்திரம் தாங்கள் வருவதாகவும், தங்களுடைய கக்ஷி லௌகிக கக்ஷிதானென்றும் அவர்கள் ஒப்புக்கொள்ளும் பக்ஷத்திலும், அவர்களுக்கு லௌகிக நியாயமும் இல்லை யென்பதே வெளியாகும். கடவுள் பொதுவாயிருந்தாலும், சில நிபந்தனைகளுக்குட்பட்டு சில வகுப்பு ஜனங்கள் மாத்திரம் ஆலயத்திற்குள் பிரவேசித்துக் குறிப்பிட்ட பிரகாரம் தர்சனஞ் செய்ய வேண்டுமென்ற உத்தேசத்துடன் ஓர் விக்கிரகத்தில் கடவுளின் ஸான்னித்தியமிருக்கும்படியான காரியங்களையுஞ் செய்து கட்டிடம் முதலியவைகளையு மேற்படுத்தி நெடு நாளாக அவ்வகுப்பினர்களே ஆல

யத்திற்குள் வந்து தர்சனஞ்செய்துகொண்டு வந்திருப்ப திஞலேயே மற்ற வகுப்பினர்களான பஞ்சமர் முதலியோர் பிரவேசிக்க பாத்தியமில்லை யென்றே ஏற்படும். அதாவது, எந்த சாஸ்திரத்தை அனுஸரித்து ஒரு ஆலயம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதோ அந்த சாஸ்திரத்தின் நிபந்தனைகளின்படி யார் யார் எவ்வளவு ஸமீபம் வரையில்வந்து தர்சனஞ் செய்யலாமென்று விதிகள் காண்கின்றனவோ அவ்விதிகளுக்கு ஜனங்கள் யாவரும் கட்டுப்படுவதான தீர்மானத்துடனேயே அந்த ஆலயம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதென்பதே நிச்சயம். அன்றியும், அனுதிகாலமாக அவ்விதிகளை மீறிப்போகாமல் எல்லா ஜாதியார்களும் நாளது வரையில் நடந்து வந்திருப்பதும் அத்தீர்மானத்தையே தெளிவாய்க் குறிப்பிடக்கூடியது. காவேரி நதி ஜலம் எல்லோருக்கும் பொது வென்பதில் ஸந்தேகமில்லை. இவ்விதப் பொது ஜலத்தை ஒரு தனிக்கால் வழியாகக்கொண்டு போய் ஒருவர் தன் சொந்தக் கிணற்றில் சேர்ப்பிவித்துக்கொண்டு விட்டால் அக்கிணற்றின் ஜலத்தில் பொது ஜனங்களுக்கு யாதொரு பாத்தியதையுமிருக்கக் கூடியதல்ல. நதியிலிருந்தே ஒரு குடத்தில் ஜலத்தை யெடுத்து ஒருவர் தன் வீட்டிற்குக் கொண்டு போனல், யாரும் அவ்வீட்டிற்குள் புகுந்து குடத்து ஜலத்தை உபயோகப்படுத்தலாமென்று சொல்ல இடமில்லை. பொதுவான நதி ஜலமே அக்குடத்திலிருந்த போதிலும், பொது ஜனபாத்தியம் அக்குட ஜலம் ஸம்பந்தப்பட்ட மட்டில் நீங்கி விட்டதென்றே சொல்லவேண்டும். மின் சாரம் எங்கு முள்ளதுதான். எல்லோருக்கும் பொதுத்தான். ஒரு விதத்தில் ஸர்வவியாபி யென்றே அதைச்சொல்லலாம். ஆகிலும், யாராவது ஒரு மின்சார எஞ்சினியர் சிரமப்பட்டு ஒரு யந்திரம் மூலமாக மின்சாரசக்தி வெளி

யாகும்படிசெய்வித்துக்கொண்டால், மின்சார மென்பது எல்லோருக்கும் பொது வானதால் அந்த யந்திரத்தை உபயோகிக்கவும் எல்லோருக்கும் பாத்திய முண்டென்று சொல்லக் கூடுமோ? இதுபோல், ஸர்வ வியாபியான கடவுளின் சக்தி ஒரு விக்கிரகம் மூலமாய் வெளியாகும்படியாக சாஸ்திரத்திற் கண்டபடி விசேஷ மந்திர தந்திரப் பிரயோகங்களைச்செய்து ஆலய நிர்மாணமாகி யிருந்தால், அவ்வாலயத்தில் எல்லோரும் பிரவேசிக்கலாமென்று சொல்வதற் கிடமில்லை. ஸர்வவியாபியான கடவுள் பொதுவாயிருந்த போதிலும், ஆலயவிக்கிரகத்தில் ஏற்படுத்தப்பட்ட ஸான்னித்தியத்திலும் பொது பாத்தியமிருப்பது போல் சொல்வது பிசகு. இப்படி பாத்தியமில்லாமலிருந்த போதிலும் ஆலயத்திற்கு வெளியில் சாஸ்திரத்திற் குறிப்பிட்ட தூரத்திலிருந்து கொண்டு பஞ்சமர் முதலியோர் கடவுளை வணங்கித் தியானித்து வருவதில் யாருக்கும் ஆக்ஷேபணையிராது. நதியிலிருந்து வீட்டிற்குக் கொண்டுவரப்பட்ட ஜலத்தையும் தாக முள்ளோருக்குக் கொடுத்துவருவதே ஹிந்துக்களின் வழக்கம். ஆனால், தாகத்துடன் வந்தவர் தானிருக்க வேண்டிய இடத்திலிருந்து கொண்டு ஜலத்தை வாங்கிப்பானஞ் செய்யக்கூடுமே யொழிய, அவர் வீட்டிற்குள் ஜல பாத்திரமிருக்கிறவிடம்வரையில் பிரவேசித்துத் தானே ஜலத்தை யெடுத்து உபயோகிக்க பாத்தியஸ்தராக மாட்டார். ஆலயத்திலுள்ள விக்கிரகத்தின் தர்சனத்தில் பஞ்சமாதிகளுக்கும் பாத்திய முண்டென்று வைத்துக்கொண்டாலும், அவ்வித பாத்தியம் சாஸ்திரத்திற் குறிப்பிட்டவிடத்திலிருந்து தர்சனஞ் செய்ய பாத்தியமாகுமே யொழிய ஆலயத்திற்குள் பிரவேசிக்கக்கூடிய பாத்தியமாக மாட்டாது. ஒரு குடும்பத்தில் பொதுவாக பூஜை செய்து வரப்பட்ட விக்கிரகாதி

களின் தர்சனத்தில் அந்தக் குடும்பஸ்தர்கள் எல்லோருக்கும் ஸமமான பாத்தியமிருந்தாலும், எல்லோரும் ஒரே விதமாக தர்சனஞ்செய்யலாமென்பது தாத்பரியமல்ல. ஸ்நானஞ் செய்து நல்ல ஆசாரத்துடனிருக்கக்கூடியவர்கள் பூஜை நடக்கிற இடத்தில் ஸமீபத்திலிருந்து தர்சனஞ் செய்யலாம். ஸ்நானஞ் செய்யாமலிருப்பவர்கள் ஸமீபத்தில் வாராமல் தூரத்திலிருந்து தர்சனஞ் செய்யலாம். ஸ்நானஞ் செய்திருந்தபோதிலும், விசேஷ ஆசௌசாதி தீட்டுகளுடனிருப்பவருக்கு பூஜாகிருகத்திலேயே பிரவேசிக்க பாத்தியமில்லை. குடும்பத்திலுள்ள பஹிஷ்டா ஸ்திரீகள் வீட்டிற்குள் பிரவேசிக்கவே இடமில்லை. இவ்விதமாகவே ஹிந்துக்களென்ற காரணத்தினால் பஞ்சமாதிகளுக்கும் ஆலயதர்சனத்தில் பாத்திய முண்டென்று எண்ணினாலும், அவர்கள் பிறவியிலேயே அசுத்தர்களென்றும், அவர்கள் ஆலயத்திற்கு வெளியிலிருந்துகொண்டுதான் கடவுளை வணங்கலா மென்றும் சாஸ்திரமே குறிப்பிட்டுச் சொல்வதினால், அந்தப்படிதான் அவர்கள் தர்சனஞ்செய்யக்கூடுமென்றும் ஆலயத்திற்குள் பிரவேசிக்க பாத்தியமில்லை யென்றுமே தீர்மானிக்க வேண்டும். உண்மையில் கடவுளின் பிரீதியில் மாத்திரம் உத்தேசமிருப்பவர்களுக்கு எங்கிருந்து தர்சனஞ் செய்தாலும் பாதகமில்லை. ஆலயத்திற்கு வெளியிலிருந்து தர்சனஞ் செய்தாலும் பூர்ணமான நற்கதி கிடைக்குமென்பது நந்தன் சரித்திரத்தினால் தெளிவாய்த்துலக்கப்பட்டுமிருக்கிறது. சாஸ்திரநிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டுத் தன்னுடைய ஸ்தானத்தை விட்டுக் கொஞ்சமேனும் அதிக்கிரமித்துப்போகாமல் பக்தியைச் செலுத்தியதினால் தான் நந்தன் ஸர்வோத்தமபதவியை அடையவும் எல்லோராலும் கொண்டாடப்படவும் இடமாயிற்று. லிங்க ரூபி

யான ஈசுவரனை நந்தன் பார்க்க முடியாமல் நந்திகேசுவரர் மறைத்துக்கொண்டிருந்தபடியால், ஈசுவரனும் நந்திகேசுவரரைச் சற்று விலகச்சொன்னதாகத் தெரியவருகிறதேயல்லாமல், நந்தனை ஆலயத்திற்குள் வரும்படி ஈசுவரன் சொல்லவில்லை. நந்தன் சரித்திரம் வெளிப்பட்டிருந்தும், முன் சொல்லிய துர்க்கக்ஷிகள் ஏற்படுவதானால், காலத்தைத் தவிர வேறெங்கும் குற்றஞ்சாட்டுவதற்கில்லை.

18. இதுவரையில் கௌணார்த்தத்தில் ஸமதர்சன விசாரஞ் செய்ததில் மற்ற ஜீவர்களெல்லோரையும் தன்னைப்போலவே பாவித்து அவர்களுக்கு ஹிதமான வழியிலேயே தான் எப்போதும் நடந்து வரவேண்டுமென்றும், மற்றவர்களுக்கு ஹிதமான காரியங்களைச் செய்வதில் தனக்குக் கொஞ்சம் அஸௌகரியமேற்பட்டாலும் அதைப்பாராட்டக்கூடாதென்றும், எல்லோரையும் ஸமமாக பாவித்தாலும், அவரவர்களின் தனித்தனியான நிலைமைக்குத்தக்கபடி அவரவர்களிடம் அனுகூலமாக நடந்துவரவேண்டுமென்றும், இப்படி நடந்து வருவதில் காணப்படக்கூடிய பேதங்கள் ஸமதர்சனத்திற்கு விரோதமாகாதென்றும், ஆர்ய ஹிந்துக்களுக்குள் ஜாதி வியவஸ்தையிருப்பது தர்மத்திற்கு அனுகூலமான பெரும் ஸாதனமென்றும், மற்றும் சில விவரங்களும் வெளியிடப்பட்டன. இனி முக்கியார்த்தத்தில் ஸமதர்சன லக்ஷணத்தைத்தெரிந்துகொள்ளக்கூடிய முயற்சி ரூபமான ஆராய்ச்சியையும் சற்று செய்து பார்ப்போம். உண்மையான ஸமதர்சனத்தின் லக்ஷணம் பேச்சுக்கும் எழுத்துக்கும் விஷயமாகக்கூடியதல்ல. அது ஞானிகளிடத்தில் அனுபவ விஷயமாக மாத்திரமிருக்கக்கூடியது. ஸாமான்ய ஜனங்களுக்கு அது இன்னதென்று வியக்தமாய்த்தெரியக்கூடியதல்ல. ஆகிலும், முக்கிய லக்ஷத்தில் ஸமதர்சன லக்ஷணம்

ஒன்றிருக்கிறதென்றவிபரத்தை ஸாதாரண ஜனங்களும் அறிந்துகொள்ளவேண்டிய தவசியம். அந்த முக்கிய லக்ஷ ணத்தின் அம்சங்களாகவே ஸாமான்யார்த்தத்தில் ஸமதர் சனத்தின் லக்ஷணங்கள் ஏற்பட்டன வென்றும் அறிந்து கொள்ள வேண்டும். முக்கிய லக்ஷணத்தை ஸாக்ஷாத் கரித்துக்கொள்ள யோக்கியதை யில்லாதவர்கள் கௌண லக்ஷணங்களைக்கைக்கொண்டு ஸமதர்சனத்தை அப்பியவி த்து வந்தால் கடைசியில் முக்கிய ஸமதர்சனமே ஸாத்தியப் பட்டு விடக்கூடிய தென்ற காரணத்தினால் வேத சாஸ்திரங் களில் கௌணஸமதர்சனத்தின்பொருட்டு விதிகள் குறிப் பிடப்பட்டிருக்கின்றன. பூர்ண சிரத்தையுடன் அவ்விதிகளை அனுஸரித்து நடந்துவந்தால்தான் முக்கிய ஸமதர்சனத் தை ஸாதித்துக்கொள்ளக்கூடிய யோக்கியதை யுண்டாகும். அவ்விதிகளை பேதித்துக் கொண்டும், தனக்கு முக்கியார்த் தத்தில் ஸமதர்சன யோக்கியதை யேற்பட்டு விட்டதாக நினைத்துக்கொண்டும் இப்படியே வெளிவிட்டுப்புலம்பிக் கொண்டு மிருப்பவருக்குப் பின்னால் துர்கதிதான் பல னென்றே சாஸ்திரவாயிலாகத் தெரியவருவதினால் நற்கதியில் இச்சையுள்ளோர் தான் ஸாமான்யஸ்திதியிலிருப்பதாகவே எண்ணிக்கொண்டு கௌணவிதிகளையே ஆசரித்து வருவது தான் நியாயமாகும். எக்காலத்தில் நற்கதியிற்கூட இச்சை யில்லாமலும், தான் தனி ஜீவனென்ற புத்தியும் தன்னைச் சுற்றிலும் தனக்கு வேறாக பிரபஞ்சமிருக்கிறதென்ற எண்ண மும் பூராவும் அற்றுப்போயும், ஸமாதி நிலைத்து சுத் தானந்தானுபவமே விளங்குமோ அப்போதுதான் முக்கி யார்த்தத்தில் ஸமதர்சன யோக்கியதை யுண்டாயிற்றென்று சொல்லலாம். அதுவரையில் சொல்வதற்கிடமில்லை.

19. ஆகையால், அபரோக்ஷஜ்ஞானிகளுக்குத்தான் முக்கியார்த்தத்தில் ஸமதர்சனமுண்டென்று சொல்ல வேண்

டும். இங்கு ஸமம் என்பதற்கு ஏகம் என்றும், தர்சனம் என்பதற்கு ஸாக்ஷாத்காரம் என்றும் அர்த்தம். வாஸ்தவத்தில், ஏகமாய் அபின்னமாயிருப்பது எதுவோ அதுதான் ஸம்பூர்ணமாய் ஸமம் என்று ஏற்படும். இரண்டாக இருக்கிற பதார்த்தங்களுக்குள் பூர்ணஸமத்வம் இருக்க முடியாது. ஏதாவது ஒரு அம்சத்திலாவது வித்தியாஸமிருந்தால்தான் இரண்டு என்ற தன்மை யிருக்கக் கூடும். இரண்டு என்பதினாலேயே ஒன்றல்ல வென்பது ஸித்தம். தன்னைத்தவிர வேறொரு ஜீவனிருப்பதான எண்ணமிருக்கும் வரையில் ஸமத்வ பாவனையும் பூர்ணமாயிராது. எல்லா விதத்திலும் தனக்கு ஸமமாயிருக்கக்கூடியது தானே தவிர வேறொன்றாக இருக்க முடியாது. அன்றியும், பேதங்களுக்கு மத்தியில் அபேதங்களும் காணப்படுவதான துல்யத்வந்தான் மனோ பாவனைக்கு விஷயமாகக்கூடியது. ஸம்பூர்ணமான ஸமத்வம் நேர் அனுபவஜ்ஞானவிஷயமே யல்லாது மனோவிருத்திரூப பாவனாவிஷயமல்ல. ஆதலால், எங்கும் எல்லோரிடத்திலும் ஸம்பூர்ண ஸமபார்வை யிருக்க வேண்டுமானால், அப்பார்வை எங்கும் எல்லோரிடத்திலும் தானேயிருப்பதான பார்வை யென்றேயாகும். இப்படி ஒன்று என்ற பார்வையில் தன்னுடைய ஸ்தூல ஸூக்ஷ்மாதி சரீரங்களில் தான், தனது என்ற புத்தியாவது, மற்றவைகளில் பிறர், பிறரது என்ற புத்தியாவது இருக்கமாட்டாது. தன்னுடைய சரீராதிகளிலும் பிரபஞ்சத்திலு முள்ளதும், ஒன்றுக்கொன்று வேறுபடுத்திக்காட்டக்கூடியதுமான, திருச்யாம்சம் பூராவும் மறைவடைந்தபின்தான் உண்மையான ஸமதர்சனம் ஏற்படக்கூடும். திருக்-திருச்யம், போக்தா-போக்கியம், கர்த்தா-கர்மம், இவ்விதத்துவைதம் நிச்சேஷமாய் நிவிருத்தியாவதே ஸமதர்சனமாகுமென்று எண்ணவேண்டும். ஆகையால்

ஸாக்ஷாத் அத்வைதஜ்ஞானுனுபவமே ஸமதர்சனம், வேறல்ல வென்பதே நிச்சயம்.

20. தர்சனமென்று சொல்வதினுலேயே திருக்-திருச்ய பேதமுள்ள ஸ்தானத்தில்தான் ஸமதர்சன மிருக்கலாமென்று ஒருக்கால் ஸந்தேகிக்கக்கூடும். தர்சனம் என்பதற்கு ஸாக்ஷாத்காரஜ்ஞானமென்று முன் சொல்லப்பட்டது. ஞாதா, ஞேயம், ஞானம் என்ற திருபுடி இல்லாத ப்ரம்மானந்த ஸ்வரூபானுபவத்தைக்குறிப்பிடும்போது தர்சனம் என்ற பதத்தை உபயோகிப்பது நியாயமில்லையே யென்று கேட்கலாம். ஸாமான்யார்த்தத்தில் தர்சனம் என்ற பதம் ஒவ்வாதென்பது வாஸ்தவம். ஆகிலும், த்வைதத்திலேயே யிருந்துவருகிற ஜீவர்களுக்கு போதிப்பிக்கும்போது அவர்களின் புத்திகளுக்கு விஷயமாகக்கூடியவிதமாகத்தான் பதப்பிரயோகங்களைச் செய்ய வேண்டியதாயிருக்கிறது. இவ்விதமாகவே வேதத்திலும் ஸாதனங்களாகிய சிரவண-மனன-நிதித்தியாஸனங்களினுல் ஸாத்தியப்படக்கூடிய பயன் ரூபமான ஆத்மாவைக் குறிப்பிடும்போது த்ரஷ்டவ்ய: என்றே பதப்பிரயோகஞ்செய்யப்பட்டிருக்கிறது. தர்சன மென்பதினுல் அனுபவமில்லாத ஸ்திதியை உத்தேசித்துப்பின்னுல் ஏற்படுகிற அனுபவம் பார்க்கப்பட்டது போல் வர்ணிக்கப்படுகிறது. அனுபவமில்லாத ஸ்திதிக்கும் அனுபவம் ஏற்பட்டிருக்கிற ஸ்திதிக்கும் மத்தியில் அனுபவம் உண்டாகிறதை ஸாக்ஷாத்கரிப்பதையே தர்சனம் என்ற பதம் குறிப்பிடுகிறதென்று தெரிந்து கொள்ளவேண்டும்.

21. முக்கிய ஸமதர்சன லக்ஷணத்தின் அம்சங்களாகவே ஸாமான்யஸமதர்சன லக்ஷணங்கள் அமைக்கப்பட்டிருப்பதாகவும், அம்முக்கிய ஸமதர்சனவிதிகளாகவே அனேக ஸாமான்யதர்மவிதிகள் (Rules of morality) உண்

டானவையென்றும் முன் சொல்லப்பட்டது. பெரும்பாலும் ஜனங்களுக்கு முக்கியார்த்தத்தில் ஸமதர்சனம் மனதில் பிடிபடக்கூடியதில்லையாகையால், அமுக்கியார்த்தத்திலேயே ஸமதர்சனமென்பதைத்தெரிந்துகொண்டு அவரவர்களின் சக்திக்குத் தக்கபடி ஸாமான்யதர்மங்களை மாத்திரம் அனேகமாய் ஜனங்கள் அனுஸரித்து வந்திருக்கிற காரணத்தினுல், ஸாமான்ய தர்மவிதிகளின் ஞானந்தான் எங்கும் ஏறக்குறையப்பரவியிருக்கக்கூடியது. முன்னுல் குறிப்பிட்ட பிரகாரம் இந்த ஆர்யஸ்வதேசமாகிய பரதகண்டத்தைவிட்டுப் பலகாலங்களில் லௌகிக நன்மையிலேயே நோக்கமுள்ள ஜனங்கள் உலகத்தில் மற்ற தேசங்களுக்குக் குடியேறிப்போகும்போது அவர்களிடம் ஸாமான்யதர்மங்களின் ஞானந்தான் கொஞ்சங்கொஞ்சமிருந்துவந்தபடியால், அத்தேசங்கள் பூராவும் அந்த தர்மங்கள் அவசியமென்பதான கொள்கை மாத்திரம் பரவியிருக்கிறது. இப்பரதகண்டத்திலேயும் ஞானிகளிடத்தில் மாத்திரம் காணக்கூடிய முக்கியபக்ஷஸமதர்சனம் மற்ற தேசங்களுக்குப்போகக்கூடாததாலும், சுத்தவைதிகவிசேஷதர்மானுஷ்டானங்களும் இத்தேசத்திற்குள்ளாகவே யிருந்தபடியாலும், வேதத்தினுல் மாத்திரம் வெளியிடப்பட்டிருக்கிறதான முக்கிய ஸமதர்சனம் ஒன்று உண்டென்ற விஷயமே மற்ற தேசங்களில் தெரியக்கூடாததாலும், ஸாமான்ய தர்மங்களுக்கு மேலான தர்மங்களே கிடையாதென்ற கொள்கையுடன் மற்ற தேசத்தார்கள் திருப்தர்களாயிருந்து விட்டார்கள். நாளடைவில் அத்தேசங்களில் புத்திகூர்மையுள்ள தத்வவாதிகள் ஸாமான்ய தர்மங்களை மனிதன் கைக்கொள்ளக் காரணமென்னவென்று ஆலோசிக்கும் போது, அவரவர்களுக்குத் தோன்றியபடியெல்லாம் காரணங்களைக் கற்பித்து வந்திருக்-

கிறார்கள். முக்கியார்த்தத்திலுள்ள ஸமதர்சனத்தின் லக்ஷணத்திலிருந்தே அமுக்கியார்த்தத்தில் அதின் லக்ஷணங்களும் அவைகளுக்கு அனுஸரணையான தர்ம விதிகளும் ஆதியில் இப்பரதகண்டத்திலேயே உண்டாகி அப்பால் வெளிப்பிரதேசங்களிலும் பரவியிருக்கின்றனவென்ற விபரத்தைத் தெரிந்து கொள்ளாமல், மனுஷியஸ்வபாவத்திலேயே ஸாமான்யதர்மங்களின் காரணங்களைத்தேடிப்பார்த்துக் கொண்டு பலர் பலவிதமாகவும், ஒருவருக்கொருவர் விரோதமாகவும், காரணங்களைச்சொல்லுகிறார்கள். அனேக ஜனங்களுக்கு அதிக நன்மை எதினால் உண்டாகுமோ அது தான் தர்மம் என்று ஒருவர் சொல்லிவருகிறார். இது சரியல்லவென்றும், மனிதனிடத்தில் மற்ற விஷயங்களை அறிந்து கொள்வதற்கு இந்திரியங்களிருப்பதுபோல் தர்மம் இன்னதென்று அறிந்து கொள்ளவும் ஒரு தனி இந்திரியம் இருக்கிறதென்றும் மற்றொருவர் சொல்லுகிறார். மூன்றாவது தத்வவாதியாகிய வேறொருவர் முன்சொன்ன இரண்டு அபிப்பிராயங்களும் தப்பென்றும், இயற்கையாகவே மனிதனிடத்தில் தர்மத்தையும் அதர்மத்தையும் பிரித்து வெவ்வேறாகத் தெரிந்து கொள்வதற்கு உள் விவேக சக்தியிருக்கிறதென்றும் சொல்லுகிறார். இப்படிப் பலர் உண்மையைத் தெரிந்து கொள்ளாமலே, தாங்கள் சொல்வதே சரியென்று பாமர ஜனங்களுக்கு போதித்துக்கொண்டும், தத்வவாத கக்ஷிகளை நாளுக்கு நாள் அதிகப்படுத்திக்கொண்டும், உண்மையில்லாத விபரங்களை ஜோடித்து பிரமத்தையுண்டாக்கக்கூடிய பெரும் புஸ்தகங்களை யெழுதி அச்சுப் போட்டுப்பிரசாரஞ்செய்துகொண்டும், உலகத்தில் அஜ்ஞானத்தையே பெருகச்செய்துவருகிறார்கள்.

22. ப்ரம்மம் என்று சொல்லப்பட்ட ஆத்மா ஒன்று தான் ஸத்தியப்பொருள். அதின் ஸ்வரூபம் ஸத்-சித்-ஆனந்த

ஸ்வரூபம். அழியக்கூடியதும், காணப்படுகிறதும், துக்க ஹேதுவாயிருப்பதுமான திருச்யப் பிரபஞ்சம் பூராவும் மித்யையே. எவ்விடத்திலும், மனிதன், மிருகம், பக்ஷி, மீன், அற்பஜந்து, விருக்ஷம், புல், பூண்டு முதலான ஸகல ஜீவர்களிடத்திலும், முக்காலத்திலும் ஸ்திரமாய் மாறுமலுள்ளது அந்த ஸத்-சித்-ஆனந்த ப்ரம்மந்தான். அது ஒன்றே தவிர பலவல்ல. ஏகமாயிருக்கிற அதுவே ஸர்வஸமம். அதுவே தானென்ற அனுபவந்தான் ஸமதர்சனமாகும். இவ்வித அனுபவமில்லாதவர்களுக்கு பேதப்பிரபஞ்சமே ஸத்தியமாகத்தோன்றுமாகையால், அப்பிரபஞ்சமும் அதிலுள்ள பதார்த்தங்களும், நாநாவித ஜீவசரீரங்களும் கடவுளால் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன வென்றும், ஸகல ஜீவர்களும் கடவுளின் அம்சங்கள், அதாவது குழந்தைகள்தானென்றும், ஆகையால் எல்லா ஜீவர்களும் பரஸ்பரம் ஸகோதர பாவத்தை முன்னிட்டு ஒருவருக்கொருவர் எப்போதும் ஹிதத்தைச்செய்து கொண்டே யிருக்கவேண்டுமென்றும் ஒருவராலும் மற்றொருவருக்குக்கெடுதல் செய்யப்படக்கூடாதென்றும் தாத்பரியத்துடன், எல்லோரும் ஒருவருக்கொருவர் நடந்துவரவேண்டிய கிரமங்களை கிலுப்தப்படுத்தி சாஸ்திர விதிகள் விஸ்தாரமாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவ்விதிகளின்படி தவறுமல் நடந்துவருபவர்கள் எப்படி முடிவில் ஏகத்வஜ்ஞானத்தையே அடைந்து முக்கிய ஸமதர்சிகளாவாரர்களோ அப்படியே அவ்விதிகள் அற்புதமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. அவ்விதிகளிலிருந்துதான் உலகத்திலிருக்கிற ஸகல ஸாமான்ய தர்மவிதிகளும் பிறந்திருக்கின்றன. பிறந்து வெகுகாலமாகிவிட்டபடியால், பிறந்த இடத்தையும் தாயையும் மறந்து போயும் தெரிந்து கொள்ளாமலும் அவ்விதிகளின் மூலகாரணங்களை மேற்கண்ட

தத்வவாதிகள் கண்டவிடங்களில் தேடிப்பார்த்துக்கொண்டு காலத்தை வீண்படுத்திவந்திருக்கிறார்கள். இப்போதுதான் கொஞ்ச காலமாக ஐரோப்பியர்களிலும் அமெரிக்கா தேசஸ்தர்களிலும் சில தத்வபரிசோதகர்கள் ஹிந்துவைதிக அத்வைதக்கொள்கையை ஒருவிதமாகத்தெரிந்து கொண்டு, தங்களுடைய பூர்வாசாரியர்கள் சொல்லிவந்ததெல்லாம் சரியாயிருக்கக்கூடியவையல்லவென்று சொல்ல ஆரம்பித்திருக்கிறார்கள்.

23. எங்கும் ஆத்மாதான் உள்ளது, அது ஸமம், ஏகம் என்பதே எல்லாதர்மங்களுக்கும் மூல காரணம். ஏகத்வத்தை உறுதிப்படுத்தக்கூடிய எண்ணங்களும் செய்கைகளும் தர்மங்களாகும். ஏகதவத்திற்கு விரோதமான, அதாவது, அதைப்பேதப்படுத்தக்கூடிய எண்ணங்களும் செய்கைகளும் அதர்மங்களாகும். ஸமான்ய தர்மாதர்மங்களில் எதை விபாகப்படுத்திப் பரிசோதித்துப் பார்த்தாலும் இந்த லக்ஷணமே கடைசியில் வெளியாகும். இது ஒருகாலமும் மாறாத நித்தியமான லக்ஷணம். துல்யபாவம், ஸகோதரபாவம் முதலியதெல்லாம் ஏகத்வஜ்ஞானத்தின் லேசமான அம்சங்களே தவிர வேறல்ல. மேலும் தன்னைப்போல் மற்ற ஜீவர்களைப் பாவிக்கவேண்டுமென்று சொல்வதிலேயே 'தான்' என்பதற்கே பிரதானத்தன்மை ஸித்திக்கிறது. கங்கைக்கு ஸமானம் காவேரி, காசிக்கு ஸமானம் கும்பகோணம், என்றால் கங்கைக்கும் காசிக்கும் முக்கியத்தன்மையைக் கொடுத்து காவேரியையும் கும்பகோணத்தையும் ஸ்தோத்திரஞ்செய்வதாகவே அர்த்தமாகுமேயல்லாமல் எல்லாவிதத்திலும் கங்கையுடையவும் காசியுடையவும் மகிமைகள் மற்ற இரண்டுக்கும் ஸித்தித்து விட்டதாகச்சொல்ல முடியாது. இது போல், கௌண ஸம்தர்சனத்தில் தன்னைப்

போலவே மற்ற ஜீவர்கள் பாவிக்கப்பட்டபோதிலும், தான் என்பதற்குள்ள பூர்ணபாவமும் மற்றவர்களுக்கு ஸம்பந்தப் பட்டதாகச் சொல்லக்கூடாது. மற்றவர்கள் விஷயத்தில் எந்த அம்சத்திலாவது கொஞ்சம் குறைவு இருந்தே தீரும். ஆகையால், கௌணார்த்தத்தில் ஸமம் என்று சொல்வது முழுவதும் ஸமம் என்று அர்த்தங்கொடுக்காது; சில விஷ யங்களில், அல்லது, பெரும்பாலும் ஸமம் என்று தான் அர்த்தமாகும். முக்கியார்த்தத்திலோவெனில், தானே எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருப்பது பற்றி, பூர்ண ஸமத்வம் ஸித்திக்குமென்பதே உறுதி. பூர்ண ஸமத்வம் ஸித்தித்து ஏகமாய் நிற்கிற ஆத்மவஸ்துவுக்கு விஷயமாகக் கூடியது வேறொன்றுமில்லாததினால், தன்ஸ்வரூபபூதமா யிருக்கிற ஸத்-சித்-ஆனந்த ஸ்பூர்த்தியே தர்சனம் என்ற பதத்தினால் குறிப்பிடப்படுகிறது. இவ்வித தர்சனம் பார்க் கப்பட்டது, பார்க்கிறவர், பார்வை என்ற திருபுடியுள்ள பார்வையல்ல. இது திருபுடியற்ற கேவல ஸ்வரூபானு பூதியே. அதிஸாமான்யார்த்தத்தில் 'பார்ப்பது' என்று சொல்லுமிடத்தில்கூட நேத்திரேந்திரியத்தின் மூலமாக மனோவிருத்தி வெளிக்கிளம்பி பார்க்கப்பட்ட பதார்த்தத்தை வியாபித்து அத்துடன் ஒன்றாகவே ஆவது என்றுதான் அர்த்தம். ஆனால், இந்தப்பார்வை ஸம்பூர்ண பார்வையல்ல. இப்பார்வை நாசத்துடன் கூடியதும் தவிர பிசகான பார் வையாகவுமிருக்கலாம். அதாவது, இப்பார்வையில் பார்க் கிற சேதனனைவிட பார்க்கப்படுவது பின்னமாகயிருப்பதால் இவ்விரண்டுக்குமுள்ள ஸம்பந்தம் நீங்கிப்போய்விடும்; அல் லது, பார்க்கப்பட்டது, கானல் ஜலம் போல், பொய்யா யிருக்கக்கூடியதால் பார்வையே பிரமமாகவுமிருக்கலாம். இவ் விருவகைதோஷங்களும் ஏகத்வவிஜ்ஞான ரூபப்பார்வை

யில் இருக்கஇடமில்லை. தன்னிடத்திலிருந்து தனக்கு எக் காலத்திலும் வியோகம் (பிரிவு) ஏற்படாது; தனக்குத் தானே பொய்யாகவும் ஆக முடியாது. ஆகையால் ஏகத்வ விஜ்ஞானத்தைத்தான் ஸம்பூர்ண பார்வை 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 என்று சொல்லக்கூடும். இவ்விதமாக ஸம்பூர்ண ஸமத்வமும் ஸம்பூர்ண தர்சனமும் ஒன்று சேர்ந்திருக்கக்கூடிய முக்கிய பக்ஷ ஸமதர்சனமே உண்மையான ஸமதர்சனமாகும். ஸாமான்யார்த்தத்தில் ஸமதர்சனமென்று கூறப்படுவது ஏக தேசத்தில் ஸமதர்சனத்திற்கு ஸமானமாயிருப்பதாலும், பூர்ண ஸமதர்சனத்தில் கிரமங்கிரமமாக அப்பியாஸகர்களைக் கொண்டுபோய்ச் சேர்ப்பிவித்து விடக்கூடியதாலும், ஸம தர்சனம் என்ற பெயராலேயே மரியாதை செய்யப்படுவது போல் அழைக்கப்படுகிறதே யல்லாது அதுவே உண்மை யான ஸமதர்சனமாகிவிடமாட்டாது.

24. மேற்கண்ட உண்மையான ஸமதர்சனத்தின் பொருட்டுச்செய்யப்படுகிற அப்பியாஸந்தான் ராஜயோகாப் பியாஸமென்று சொல்லப்படுகிறது. ஆராய்ச்சி செய்து பார்த்து அடையத்தகுந்த தென்று தெரிந்து கொள்ளக் கூடியவைகளுக்குள்ளாக ஏகத்வவிஜ்ஞானத்தைக் காட்டிலும் உத்தமமானது வேறொன்று மில்லையாதலால், அதுவே ஸகல யோகஸித்திபலன்களுக்கும் மேலான ராஜயோக பலனென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இவ்வித ஏகத்வ விஜ்ஞானந்தான் ஸாக்ஷாத் கைவல்ய மோக்ஷத்திற்கு அந்த ரங்கஸாதனம். ஆதலால், முக்கியார்த்தத்தில் ஸமதர்சன முள்ளோருக்கு முக்கியமான புருஷார்த்தமாகிய மோக்ஷம் ஸ்வதஸ்ஸித்தமாகவே யிருக்கிறது. முன் விவரித்தபடி அமுக்கியார்த்தத்தில் ஸமதர்சனம் ஸித்தித்திருப்பவர்களுக் கும் மோக்ஷத்திற்கு ஸாதனரூப புருஷார்த்தமாயிருக்கிற

தர்ம புருஷார்த்தம் கைக்கெட்டி விடுகிறபடியால், அந்த தர்மம் மூலமாகப் படிப்படியாக மேல் ஸ்தானங்களுக்கு ஏறிப்போய், காலக்கிரமத்தில் ஏகத்வவிஜ்ஞான ரூபமான முக்கிய ஸமதர்சனத்தையே எட்டிப்பிடித்துக்கொண்டு அதின் மூலமாய் மோக்ஷானந்தத்தையும் ஸாதித்துக்கொள்ளக்கூடும். தர்மம் ஸித்திப்பதினால் இஹலோகத்திலும் சுகமுண்டு, பரலோகத்திலும் நற்கதி யுண்டு. தர்மமூலமாய் ஜ்ஞான ஸித்தியைப்பெற்றால் கைவல்ய முக்தியே யுண்டு. ஆகையால், மனிதனுக்கு வாஸ்தவமான நன்மையென்று எவையெல்லாம் எண்ணப்படக்கூடியவைகளோ அவை யெல்லாவற்றையும் ஸாதித்துக்கொடுக்கக்கூடியது ஸமதர்சனமென்பதே ஸித்தம்.

முதலாவதுபாகம் முற்றும்.

# தர்ம விமர்சனம்

---

## இரண்டாவது பாகம்

## பிராம்மண்யமும் பிரம்மஜ்ஞானமும்.

பிரம்மஜ்ஞானத்தை ஸம்பாதிப்பதே பிராம்மண ஜன்மத்தின் முக்கியமான காரியம். ௸ ஞானத்தினால்தான் மோக்ஷம் ஸித்திக்கும். மோக்ஷஸித்தியே ௸ ஜன்மத்தின் முடிவான பலன். வேதசாஸ்திரங்களினால் வெளிப்படுத்தப் பட்டிருக்கிற நான்கு புருஷார்த்தங்களில் முக்கிய புருஷார்த்தமாகிய மோக்ஷம் அவ்விஷயத்தில் முயற்சியுள்ள பிராம்மணனால் நிச்சயமாக அடையக்கூடியது. இப்படியே தர்ம புருஷார்த்தம் க்ஷத்திரியனாலும், அர்த்தபுருஷார்த்தம் வைசியனாலும், காமபுருஷார்த்தம் சூத்திரனாலும் முயற்சியின் பேரில் அடையக்கூடியவைகள். இப்படிச்சொல்வதினால் மோக்ஷம் க்ஷத்திரிய வைசிய சூத்திராதிகளுக்குக் கிடையாதென்றாவது, தர்மார்த்தகாமங்கள் பிராம்மணனுக்கும், அர்த்தகாமங்கள் க்ஷத்திரியனுக்கும், தர்மார்த்தங்கள் சூத்திரனுக்கும் கிடையாதென்றாவது தாத்பரிய மல்ல. நான்குவித புருஷார்த்தங்களிலும் எல்லோருக்கும் அதிகாரமிருப்பது வாஸ்தவமானாலும், அவரவர்களின் ஜாதிக்குள்ள நிலைமையை

உத்துதேசித்து ஸாதாரணமாய் பிரயத்தினத்தின்பேரில் ஸாத்தியப்படக்கூடிய புருஷார்த்தம் இன்னதுதான் என்று தனித்தனியாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. முன்சீப் கோர்ட்டிலேயே இருந்துகொண்டு தொழிலை நடத்திவருகிற வக்கீலுக்கு மாஸம் ஒன்றுக்கு ஆயிரரூபாய்க்குமேல் வரும்படி கிடைக்கக்கூடாதென்றாவது, ஹைகோர்ட்டில் தொழில் நடத்திவருகிறவருக்குத்தான் இருபத்தையாயிரம் ரூபாய் கிடைக்கலாமென்றாவது விதி கிடையாது. இப்படி விதி ஏற்படாமலிருந்தும், ஸாமர்த்தியமும் புத்தியும் எவ்வளவு அதிகமாகயிருந்தபோதிலும், முன்சீப்கோர்ட்டு வக்கீலுக்கு ஆயிரரூபாய்க்குமேலாகவும், ஜில்லாகோர்ட்டிலிருந்துவருகிற வக்கீலுக்கு ஐயாயிர ரூபாய்க்குமேலாகவும், எப்படி ஸாதாரணமாய் கிடைக்கிறதில்லையோ, கிடைப்பதற்கு அவகாசமும் குறைவோ, அப்படியே க்ஷத்திரியாதிகளுக்கு தர்மாதிபுருஷார்த்தங்கள்தான் ஸாதாரணமாய் ஸித்திக்கக் கூடியதென்பது கருத்து. இந்த ஸாமான்ய விதிக்கு விலக்காக பல உதாஹரணங்கள் புராணங்களிலும் பக்தர்களின் சரித்திரங்களிலும் துலங்குகின்றன. சாஸ்திரப்படிக்குள்ளவர்களுடைய வர்ணாசிரமவிதிகளுக்குக் கட்டுப்பட்டு நடந்துகொண்டே அவரவர்களுக்குத் தகுதியான மார்க்கத்தில் மேலான விசேஷ முயற்சிகளையும் செய்தால் மோக்ஷ புருஷார்த்தமே யாருக்கும் கைகூடலாம். இவ்விதம் முயன்று வந்ததின் பேரில்தான் நந்தன் முதலான உத்தம பக்தர்களுக்கு உயர்ந்த பதவி கிடைத்ததாகச் சரித்திரங்கள் மூலமாய் வெளியாகிறது. இப்படியே, பிராம்மண ஜன்மமேற்பட்டும் அதின் முக்கிய பலனை அடையாமலிருப்பதுடன் கீழான புருஷார்த்தங்கள்கூட கைக்கெட்டாமலிருந்து அனேகர் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஹை

கோர்ட்டிலேயே இருந்துவருகிற வக்கீல்களுக்குள்ளும் முன்சீப்கோர்ட்டு வக்கீலுக்குக்கிடைக்கிற வரும்படியில் ஸ்வல்பபாகங்கூட கிடைக்காமல் கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கிறவர்களுமுண்டு.

2. மோக்ஷத்திற்கு அந்தரங்கஸாதனமாகிய பிரம்மஜ் ஞானமென்பது "தானே பிரம்மம்" என்ற அபரோக்ஷ ஞான நேர் அநுபவஜ்ஞானம். இது கேள்வியினாலும் புஸ்த கத்தினாலும் ஏற்படக்கூடிய மனோவிருத்திரூபமான அறி வல்ல. காசியைப்பார்க்காதவன் மற்றவர்களிடத்திலிருந்தும் புஸ்தகத்தினாலும் காசியின் விபரங்களைத்தெரிந்துகொண் டால் அவனுடைய காசிஜ்ஞானம் ஸாக்ஷாத் ஞானமல்ல. காசிக்குப்போய் நேரில் பார்த்தவனுடைய ஞானந்தான் உண்மையான காசிஜ்ஞானம். இதுபோல், மற்றவர்களிடம் கேட்டும், வேதாந்த புஸ்தகங்களைப்படித்தும் ஏற்படக்கூடிய ஞானம் வாஸ்தவ பிரம்மஜ்ஞானமல்ல. இது நேரில் தெரிந்து கொள்ளாத, அதாவது, பரோக்ஷமான ஞானம். கால தோஷத்தினால் வெகுபெயர்கள் புதிதான சிற் சில ஸாமான்ய புஸ்தகங்களைப் படித்து விட்டுத் தங்களை ஞானிகளென்றே எண்ணிக்கொண்டு, பிரம்மானுபவம் இன்னதென்றே தெரி யக்கூடாத நிலைமையிலிருந்துகொண்டு தங்களுக்கே பிரம் மானுபவமிருப்பதாகப் பிரமங்கொண்டு மிருக்கிறார்கள். எந்த வேதசாஸ்திரங்களில் பிரம்மத்தின் ஸ்வரூபமும், உண் மையான அனுபவத்தின் லக்ஷணமும் வெளிப்படுத்தப்பட் டிருக்கின்றனவோ, அவைகளிலேயே ஷை அனுபவம் ஏற்படு வதற்கு மார்க்கம் என்ன சொல்லப்பட்டிருக்கிறதென்று விசாரிப்பதற்கும் ஷையார்களுக்கு புத்தியுண்டாவதில்லை. தங்களுக்கே பிரம்மானுபவமிருப்பதாகப் பிரமங்கொண்டவர் கள் அம்மார்க்கத்தைப்பற்றி ஏன் விசாரிக்கப்போகிறார்கள்?

இக்காலத்தில் உண்மையான ஞானிகள் எங்கிருக்கிறார்க ளென்று ஸாதாரணமாய்த் தெரியக்கூடியதில்லை; மேற்கண்ட போலி ஞானிகளை எங்கும் பார்க்கலாம்.

3. மோக்ஷமார்க்கம் இன்னதென்று துலக்கிக்கொடுக்கிற வேதசாஸ்திரங்களில் பிரவேசமாவது தேர்ச்சியாவது ஏற்படக்கூடாதவர்கள் அத்தேர்ச்சியுள்ளவர்களிடம் கேட்டு அம்மார்க்கத்தைத் தெரிந்துகொள்ளவேண்டியது மிக்க அவசியம். அவரவரின் வர்ணாசிரமநிலைமைக்குத்தக்கபடி அம் மார்க்கம் வேறுபடும். காசிக்குபோகவேண்டுமானால், கன்யாகுமாரியிலிருந்து போகிறவர்களுக்கும், கல்கத்தாவிலிருந்து போகிறவர்களுக்கும் ஆரம்பம்முதல் மார்க்கம் ஒன்றாகமாட்டாது. அவரவரின் ஸ்தானத்திலிருந்து போவதற்கு மார்க்கங்கள் வெவ்வேறாகவே ஏற்பட்டிருக்கின்றன. கன்யாகுமாரியிலிருந்து போகிறவருக்கு வடக்கேபோகவேண்டுமென்றும், கல்கத்தாவிலிருந்து போகிறவருக்கு மேற்கே போகவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருப்பதை அலக்ஷியஞ்செய்துவிட்டு, கன்யாகுமாரியிலிருப்பவர் தான் ஏன் கல்கத்தாக்காரரின் விதியைக் கைக்கொள்ளக்கூடாதென்று எண்ணி, தானும் மேற்குமுகமாகவே போக யத்தனித்தால் ஸமுத்திரத்தைத்தான் எதிரில் காணலாம், காசிதென்படாது. லௌகிக உத்தியோகஞ்செய்வது முக்கியமாய் பணம் ஸம்பாதிப்பதற்காகத்தான் ஏற்பட்டிருக்கிறது. வக்கீல் பரீக்ஷைக்குவாசிப்பவர் எஞ்சினியர் பரீக்ஷைக்குவாசிப்பவர் இவ்விருவர்களுடைய முடிவான உத்தேசம் பணஸம்பாத்யந்தான். இப்படிப்போல், ஜாதிகளுக்குள்ள வெவ்வேறு தர்மங்களின் முடிவான உத்தேசம் மோக்ஷம் ஒன்றுதான். எப்படி ஒரே திரவியத்தை ஸம்பாதிக்க அவரவர்களின் மனப் பிரவிருத்திக்கு அனுகூலமாக வெவ்வேறு படிப்புகளும்,

அப்யாஸங்களும், பரீக்ஷைகளும், ஏற்பட்டிருக்கின்றனவோ அப்படியே ஒரே மோக்ஷபுருஷார்த்தத்தை முடிவில் அடைவதற்காக அந்தந்த ஜாதியார்களின் பூர்வஜன்ம குணகர்மங்களுக்கு அனுகூலமாக ஈச்வரனால் வேதசாஸ்திரங்களின் மூலமாய் வெவ்வேறு அப்பியாஸங்களும் தர்மங்களும் விதிக்கப்பட்டிருக்கின்றன. எல்லோருக்கும் முக்கிய உத்தேசம் பணந்தானே யென்று சொல்லிக்கொண்டு, பி. ஸி. இ. பரீக்ஷைக்குப்படிப்பவர் பி. எல். மாணுக்கருக்கு ஏற்பட்டிருக்கிற சட்டபுஸ்தகத்தை யெடுத்துப் பார்த்துக் கொண்டிருந்து தனக்கேற்பட்டிருக்கிற புஸ்தகங்களேயும் அப்பியாஸங்களேயும் கவனிக்காமலிருந்தால் அவருக்கு பரீக்ஷையும் தேராது, பணமும் கிடைக்காது. எல்லோருடைய உத்தேசமாகிய பணம் ஒன்றுகவிருந்தாலும் அதை ஸம்பாதிக்கும் வழிகள் வெவ்வேறுதான். மோக்ஷமென்பது எல்லோருக்கும் பொதுவான முக்கிய உத்தேசமாஞலும், அதை அடையும் மார்க்கங்கள் வெவ்வேறுதான். அவரவருக்குக் குறிப்பிட்டிருக்கிற மார்க்கத்திலிருந்துகொண்டு யத்தனஞ்செய்தால் தான் அது கைகூடும். ஒருவருக்கு விதிக்கப்பட்டிருக்கிற மார்க்கத்தில் மற்றவர் பிரவேசித்தால் துர்க்கதிதான் பலஞகும். ஆகையால், மோக்ஷத்திலேயே உத்தேசமிருப்பது எல்லோருக்கும் பொதுவாஞலும், அவரவரின் வர்ணுசிரம நிலைமைக்குத் தகுந்த தனிமையான மார்க்கம் எதுவென்று முதலில் நன்றுக விசாரித்துத்தெரிந்து கொள்ளவேண்டியது நிரம்பவும் முக்கியம்.

4. மோக்ஷமடைகிற மார்க்கம் இன்னதென்று தெரிந்து கொண்டால் மட்டிலும் போதாது. அம்மார்க்கத்தில் செல்வதற்குள்ள பிரயத்தனத்தையுஞ் செய்யவேண்டும். ரயிலேறி காசிக்குப்போகவேண்டுமாஞல், ரயில்வே கைட் புஸ்த

கத்தைப்பார்த்தால் மார்க்கம் துலங்கும். அப்புஸ்தகத்தைத் திருப்பித் திருப்பிப் பார்த்து மைல்கணக்கு மணிக்கணக்கு களைமனப்பாடம் பண்ணினதினால் காசியை நோக்கிச் சென்ற தாக ஏற்படாது. வேதாந்தத்தையும் அதற்கு உதவியான மற்ற சாஸ்திரங்களையும் எவ்வளவு படித்தாலும், எவ்வளவு தடவை மற்றவர்களுக்குப் பாடஞ்சொல்லி வைத்தாலும், வாக்கியார்த்தவிஷயத்தில் விசேஷ ஸாமர்த்தியமுண்டாயிருந் தாலும், தனக்கு ஆத்மானுபவம் உண்டாகக் கூடியதான சாஸ்திரப்படிக்குள்ள அப்யாஸங்களைச் செய்தாலொழிய தன்னுடைய பரோக்ஷஜ்ஞானம் பயன்படாது. ரயில்வே கைட் புஸ்தகத்தை மனப்பாடஞ்செய்துவிட்டு கரூரில் தன் வீட்டைவிட்டு அசையாமலிருக்கிறவரைவிட ஷை புஸ் தகத்தையே பார்க்காமல் மற்றவர்களின் வார்த்தையை நம்பி காசியை உத்தேசித்து ஈரோடுவரையில் போயிருக்கிறவருக்கு காசி கொஞ்சம் ஸமீபந்தான். வாய்ப்பேச்சு வேதாந்த உப தேசகர்களைவிட ஸந்தியாவந்தனம் முதலான நித்ய நைமித் திக கர்மாக்களை ஒழுங்காய்ச் செய்து வருகிறவர் மேலானவ ரென்றே சொல்லவேண்டும். அநேகரின் மனவில் தாங் கள் உடனே ஞானத்தை ஸம்பாதித்துக்கொண்டு மோக்ஷத் தை அடையவேண்டுமென்று உத்தேசமிருக்கிறது. ஆனால் ஞானத்தை எந்த முன்ஸாதனங்களினால் ஸாத்தியப்படுத் திக்கொள்ளக்கூடுமோ, அந்த ஸாதனங்களை ஸம்பாதிப்ப தில் அவர்களுக்கு மனப்பிரவிருத்தி ஏற்படுகிறதில்லை. சித்தத் தின் சுத்தியும் ஐகாக்கிரியமுமில்லாமல் ஞானத்தைத் தேடுவது உபயோகமில்லையென்று சொல்லுகிற சாஸ்திர வாக்கியத்தில் அவர்களுக்கு நம்பிக்கையுண்டாவது சிரமப் படுகிறது. கர்மயோகத்தினால் சித்தத்தின் சுத்தியும், பக்தி யோகத்தினால் சித்தம் ஓர்மைப்படுவதுந்தான் பலனென்

றும், இவைகள் மோக்ஷத்தின்பொருட்டு நேர்க்காரணங்களாக மாட்டாவென்றும், ஞானந்தான் மோக்ஷத்திற்கு நேர் ஸாதனமென்றும் சொல்லுகிற வாக்கியத்தைப் பிடித்துக்கொண்டு, கர்மாவும் உபாஸனையும் பிரயோஜனமில்லையென்று எண்ணி அவைகளில் பிரவிருத்தியில்லாமலே யிருந்து கொண்டு, ஞானமும் மோக்ஷமும் வேண்டுமென்று மாத்திரம் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். ஒருவர் கரூர் ரயில்வே ஸ்டேஷனில் நின்றுகொண்டு நேராக காசிக்குப்போகிற வண்டியில்தான் ஏறிப் போவதென்ற தீர்மானத்துடன் அங்கு வந்து போய்க்கொண்டிருக்கிற வண்டிகளைப்பற்றி விசாரிக்கும்போதெல்லாம் ஜனங்கள் காசிக்குப்போகிற வண்டியென்று சொல்லாமல் திருச்சிறாப்பள்ளிக்கு அல்லது ஈரோடுக்குப்போகிற வண்டியென்று மாத்திரம் சொல்வதைக் கேட்டு, ஒன்றிலும் தான் ஏறிப்போகாமல் நின்றுகொண்டேயிருந்தால் இவர் காசிக்குப்போய்ச்சேர்வது எப்படியோ தெரியவில்லை. இவருடைய அறியாமையைப்பார்த்து பரிதாபப்பட்டு யாராகிலும் இவரிடம் ஈரோடுபோய்த்தான் காசிக்குப்போகவேண்டுமென்று சொன்னால், இவ்வார்த்தையில் இவருக்கு நம்பிக்கையும் கிடையாது. இதுபோல், கர்மாவினால் சித்தசுத்தி யேற்பட்டு, உபாஸனையினால் மனசும் ஓர்மைப்பட்டபின்தான் ஞானமார்க்கத்தில் பிரவேசிக்கலாமென்று சொல்லும் வார்த்தையை மேற்கண்டவர்கள் காது கொடுத்துக் கேட்பதுகூட கிடையாது. ஈரோடு முதலான பல ஜங்க்ஷன்களைக்கடந்து கடைசியாயிருக்கிற மொகல் ஸராய் என்கிற ஜங்க்ஷன்போய்ச் சேர்ந்தபிறகுதான் அங்கு நேராக காசிக்குப்போகிறவண்டி கிடைக்குமென்று சொல்லும் வார்த்தையைக் கவனிக்காவிட்டால் எப்படி காசி ஒருகாலமும் போய்ச் சேரப்போகிறதில்லையோ, அப்படியே

கர்மாவென்றும் உபாஸனேயென்றும் சொல்லும் வார்த்தைகள் நெடுநாளாகச் சொல்லப்படுகிற பழையவார்த்தைகள் தான், இவை பிரயோஜனமில்லையென்று எண்ணி அலக்ஷியஞ் செய்துவிட்டு, ஞானம்வேண்டுமென்றுமாத்திரம் பிதற்றிவருகிறவரும் ஒருகாலமும் ஞானத்தையடைந்து மோக்ஷானந்தத்தை அனுபவிக்கப்போகிறதே யில்லை.

5. ஒவ்வொருமனிதனுடைய ஸ்வபாவத்திலும் இயற்கையாகவே மூன்று தோஷங்கள் பிறவிக்குமுன்னே தொடர்ந்து வந்திருக்கின்றன. எண்ணத்தொலையாத முன்மனித ஜன்மங்களில் அவனால் செய்யப்பட்ட பலவித துர்ச்செய்கைகளினால் மலதோஷமென்ற கெடுதலும், பலவாறாக மனது அலைந்து ஓடிக்கொண்டே யிருந்திருக்கிற வழக்கத்தினால் சாஞ்சலியமென்ற விக்ஷேபதோஷமும், உண்மையான தத்வம் தெரியவொட்டாமல் மறைவைச் செய்துவருகிற ஆவரணதோஷமும் இவனைச் சார்ந்தே யிருக்கின்றன. இம்மூன்று தோஷங்களும் நிவிருத்தியானலொழிய இவனுக்கு மோக்ஷமேற்படாது. இம்மூன்று தோஷங்களும் பிறவிக்கு முன்னேயே வெகுகாலமாய் பலஜன்மங்களில் தொடர்ந்து வந்திருப்பதால் விசேஷப்பிரயத்தினஞ்செய்து இவைகளைப் போக்கடித்தால் மட்டில் போகும். ஸாமாந்யப்பிரயத்தினத்தால் போகக்கூடியவையல்ல. வர்ணாசிரமதர்மங்களை ஆசரிப்பது இவ்விசேஷப்பிரயத்தினத்தில் முக்கியமான பாகம். முன்ஜன்மங்களிருந்திருப்பதாகவே அறியாத மற்ற மதஸ்தர்களுக்கு விசேஷப்பிரயத்தினம் வேண்டுமென்ற விஷயமே தெரியமாட்டாது. பிறவிக்கு முன்னுள்ள காரணங்களினால் பிறவியிலேயே மனிதர்களுக்குள் பரஸ்பர வித்தியாஸங்கள் உண்டென்ற ஞானமே அவர்களுக்குக் கிடையாதாகையால், பிறவியினால் ஜாதிபேதமாவது பிறவியைப்பொறுத்த ஆசரணை

பேதங்களாவது அவர்களுக்குள் ஏற்படவில்லை. ஆகையால் ஸாமான்ய தர்மங்களாகிய மற்றவர்களுக்கு உதவிசெய்தல், பொய்சொல்லாமை, திருடாமை, வஞ்சகஞ்செய்யாமை முதலானவைகளைத்தவிர வேறு விசேஷ தர்மங்கள் அவர்களுக்குக் கிடையாது. ஆர்யர்களுக்கோவெனில் இஷ்ட ஸாமான்ய தர்மங்களை ஆசரிப்பதுடன் விசேஷ வர்ணாசிரம தர்மங்களையும் ஆசரிக்கவேண்டுமென்று கட்டாயமாக விதிக்கப்பட்டிருக்கிறது. சரீரத்தில் வியாதியே இல்லாமலிருந்தால் ஸ்நானம் சாப்பாடு முதலான ஸாமான்யசரீரகாரியங்களைச் செய்துகொண்டிருந்தால் போதும். முன் காரணங்களினால் பலமான வியாதியுடன் கூடியவருக்கு விசேஷ காரியங்களான மருந்துண்பது, பத்தியமிருப்பது முதலியன அவசியங்களே. வியாதியிருந்துங்கூட அதிருப்பது தெரியாமலும் விசேஷ வைத்தியஞ்செய்துகொள்ளாமலும் உலகத்தில் பலஜனங்களிருக்கிறார்களென்ற காரணத்தினால் வியாதி யிருப்பதைத் தெரிந்துகொண்டவரும் வைத்தியஞ்செய்துகொள்ளாமல் மற்றவர்களைப்போல் கஷ்டப்பட்டுக்கொண்டே யிருக்கவேண்டுமென்று சொல்லக்கூடாது. முன் ஜன்மங்களிருந்தன வென்றும் அவைகளிலுண்டான கெடுதல்களினால் ஸ்வபாவத்தில் சில தோஷங்களேற்பட்டிருக்கின்றனவென்றும் அறியாதவர்கள் அந்ததோஷங்களை நிவிர்த்திசெய்ய யத்தனிக்கக்காரணமில்லை. ஆர்ய வைதிகமதஸ்தர்கள் அப்படியல்ல. இவர்கள் விசேஷ விதிகளையும் ஆசரிப்பதற்குக் காரணம் வேதசாஸ்திரங்களினால் இவர்களிடம் உண்டாக்கப்பட்டிருக்கிற அதிக ஞானந்தான். ஞானத்திற்குத் தக்கபடி ஆசாரணைகளும் அவைகளுக்குரிய நிபந்தனைகளும் வித்தியாஸப்படுமென்பது நியாயமே. முன் ஜன்மங்களின் கெட்ட செய்கைகளினாலுண்டாகி விருத்தியடைந்து வந்திருக்கிற மலதோஷத்தை நிவிர்த்

திசெய்ய ஸத்கர்மாக்களென்ற நித்தியநைமித்திக கர்மாக்களும், மனஸின் சாஞ்சலியரூபமான விக்ஷேபதோஷத்தைப் போக்கடிக்க விசேஷ உபாஸனுமார்க்கங்களும், ஆவரண தோஷத்தை அப்புறப்படுத்துவதற்காக சிரவண மனன நிதித்தியாஸனரூபமான விசேஷ ஞானுப்பியாஸங்களும், வேத சாஸ்திரங்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இம்மூன்று தோஷங்களில் மலதோஷம் மிகவும் தடித்ததோஷம்; விக்ஷேபம் கொஞ்சம் நுட்பமாயுள்ளது; ஆவரணம் மிகவும் நுட்பம். ஸத்கர்மானுஷ்டானத்தால் வெகுதூரம் மலதோஷம் நிவிருத்தியானல்தான் உபாஸனை உறுதிப்பட்டு விக்ஷேபத்தைப் போக்கடிக்கக்கூடும். ஷை இரண்டு தோஷங்களும் பெரும்பாலும் தொலைந்தால்தான் ஞானுப்பியாஸத்தினுல் ஆவரணதோஷத்தைப்போக்கடிக்க ஸாத்தியப்படும். அறியாமையாலும் சோம்பேறித்தனத்தாலும் சாஸ்திரப்படிக்குள்ள அவரவர்களின் கர்மத்தைச்செய்யாமலும், உபாஸனுமார்க்கத்தைக்கைக்கொள்ளாமலும், ஞானத்தை ஸம்பாதிக்க யத்தனிப்பவர் மூடரே யல்லாமல் வேறல்ல. ஷை யத்தினம் வீண்காரியமேயாகும். உத்தேசித்த பலன் கிடைக்க மாட்டாது. அழுக்கடைந்ததும் ஆடிக்கொண்டிருக்கிற கண்ணுடியில் சந்திரப்பிரதிபிம்பம் எப்படி ஸ்பஷ்டமாய்த் தோன்றுதோ அப்படியே அசுத்தத்துடனும் விக்ஷேபத்துடனும் கூடிய அந்தக்கரணத்தில் ஆத்மாவின் தோற்றமேற்படக்கூடியதல்ல. வெகுகாலமாய்ச் சேர்ந்து தடித்துப்போயிருக்கிற மலமென்ற அழுக்கையும், ஊர்சுத்தி ஒடி ஆடச்செய்கிற சஞ்சலத்தன்மையையும் அந்தக்கரணத்தைவிட்டு வெளிப்படுத்துவதற்கு வழிதேடாமல் பிரஸ்தானத்ரயபாஷியங்களைப்பார்த்துக்கொண்டிருப்பவருக்கு இந்த லோகத்தில் மூடர்களின் ஸமூகத்தில் யோக்கியரென்றும் வித்வானென்

றும் பெயர்கிடைக்குமே யொழிய பரலோகத்தின்பொருட்டு நன்மையாவது மோக்ஷத்தின்பொருட்டு ஞானமாவது கிடைக்காதென்பது நிச்சயம். ஆகையால், மோக்ஷத்தில் உத்தேசமுள்ளவர்கள் எல்லோரும் கர்ம-பக்தி-ஜ்ஞானமார்க்கங்களில் கிரமமாய்ப் பிரவேசித்து மெல்ல மெல்ல மேற் செல்லவேண்டும்.

6. கர்மம், பக்தி, ஞானம் என்ற இம்மூன்றும் எல்லோருக்கும் பொதுவான ஸாதனங்களானாலும், அவைகளைக் கைகூடச்செய்கிற பிரகாரங்கள் வர்ணாசிரம வியவஸ்தையின்படி அவரவர்களுக்குத் தனித்தனியாக ஏற்பட்டிருக்கின்றன. துவிஜர்களுக்குள், அதாவது, பிராம்மண க்ஷத்திரிய வைசியர்களுக்குள்ள வேதாத்யயன யஜனாதி கர்மாக்கள் சூத்திரருக்குக்கிடையாது. பிராம்மணனுக்குள்ள அத்யாபக யாஜன பிரதிக்கிரஹகர்மாக்கள் க்ஷத்திரியாதிகளுக்குக் கிடையாது. வேதசாஸ்திரப்பிரகாரம் எந்த எந்த ஜாதியார்களுக்கு எந்த எந்த கர்மாக்கள் ஸர்வஜ்ஞனான ஈசுவரனால் விதிக்கப்பட்டிருக்கின்றனவோ அவைகளைச்செய்தால்தான் அவரவர்களுக்குள்ள மலதோஷம் நீங்கிப்போகும். தங்களுக்கு விதிக்கப்படாததும் மற்றவர்களுக்கு விதிக்கப்பட்டதுமான கர்மாக்களைச்செய்தால் பாபத்திற்குள்ளாவதுடன் ஏற்கனவே யிருக்கிற மலதோஷமும் அதிகமாகத் தடித்து உறுதிப்படும். பலவிதமான வியாதிகளால் பீடிக்கப்பட்டிருக்கிற மனிதர்கள் அவரவர்களுக்குத் தனித்தனியே வைத்தியரால் குறிப்பிடப்பட்டிருக்கிற மருந்துகளை உபயோகப்படுத்திக் கொள்ளவேண்டுமேயல்லாமல், ஒருவருக்குச் சொல்லப்பட்ட மருந்துகளையும் பத்தியங்களையும் மற்றவர் கைக்கொண்டால் அனர்த்தமே விளையும். இப்படியே பக்திவிஷயத்திலும் துவிஜபுருஷர்களுக்கு வேதமந்திரஜபங்கள் மூல

மாகவும் உபாஸனை செய்யலாமென்றும், சூத்திராதிகள் வேதமந்திரங்களில்லாமல் நாமோச்சாரண ஸ்தோத்திராதிகளாலும் பூஜையாலும் பக்தியைச்செலுத்தி நற்கதியடையுலாமென்றும் சொல்லுகிற சாஸ்திர நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டு நடந்துவரவேண்டியதும் அவசியம். இப்படிக்கில்லாமல், வேதமந்திரஜபாதிகளில் அதிகாரமில்லாதவர்கள் மந்திரங்களைக் கைக்கொண்டும் நூதனமாக சாஸ்திரவிரோதமான அனுஷ்டானங்களை யேற்படுத்திக்கொண்டும் பக்தியைச் செலுத்துவதாகச் சொல்லிவந்தால் ஈச்வரனுடைய கோபத்திற்குள்ளாவார்களேயொழிய உண்மையான பக்தியின் பலனை அடையமாட்டார்கள். வேதசாஸ்திரம் தன்னுடைய ஆஜ்ஞை யென்றும், அதற்கு விரோதமாய் நடப்பவர் தன்னுடைய துரோகியென்றும் ஈசுவரனே வெளிவிட்டுச் சொல்லியிருக்கிறார். ஈசுவரத்துரோகியாயிருப்பது ஈசுவர பக்தருக்கு லக்ஷணமாகாது. இது நிற்க. ஞானமேற்படக் கூடிய வழிகளும் சூத்திராதிகளுக்குத் தனியாகவே குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவர்களுக்கு வேதாத்யயனத்திலேயே அதிகாரமில்லாததினால், வேதத்தில் ஸர்வோத்தமபாகமாகிய உபநிஷத்துக்களைப் படித்துவர அவர்களுக்கு அதிகாரங்கிடையாது. உபநயனமுள்ளவர்களுக்குத்தான், சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட ஸாதனங்களை ஸம்பாதித்துக் கொண்டபின், குருமுகமாய் உபநிஷத்து மூலமாய் பிரம்ம விசாரஞ்செய்ய அதிகாரமுண்டு. சூத்திராதிகளுக்கும் ஞானமேற்படுவதற்காக இதிஹாஸ புராண பிரகரணாதி கிரந்தங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவைகளை பிராம்மண முகமாய்க் கேட்டு பூர்ணமான ஞானத்தை அடைய அவர்களுக்கு ஸாத்தியப்படும். வேதத்திலடங்கிய தத்வங்கள் முழுமையும் மேற்கூறிய கிரந்தங்களிலடங்கியிருக்கின்றன. ஞானப்பிராப்தி

யின் பொருட்டு அத்தத்வங்களைத் தெரிந்துகொள்வதுதான் முக்கியம். ஆகையால், வேதோச்சாரணத்தில் அதிகார மில்லாத சூத்திராதிகளிற் சிலர் வேதவாக்கியங்களையே உச்சரிப்போமென்று இக்காலத்தில் சொல்லிவருவது ஹடமே யொழிய ஞானத்தின் பொருட்டல்ல. வேதவாக்கிய மூல மாய் ஞானவிசாரஞ்செய்கிற சூத்திரர் சண்டாள ஜன்மத்தை யடைவாரென்று சாஸ்திரம் தெளிவாய்ச்சொல்லுகிறது. இப்படியே, சூத்திராதிகளுக்கு வேதவாக்கியத்தைச் சொல் லிக்கொடுக்கிற பிராம்மணனும் சண்டாளனுவானென்று சொல்லுகிற சாஸ்திரவிதிக்கு நந்தன் சரித்திரம் ஓர் உதா ஹரணமாகும். மேற்கண்ட காரணங்களினால் மற்றவர்க ளின் தர்மங்களைக்கைக்கொள்ளாமல் அவரவர்களுக்கு சாஸ் திரப்படி யேற்பட்டிருக்கிற கர்ம-பக்தி-ஜ்ஞானமார்க்கங் களின் வழியாகச்சென்று ஸத்கதியைத்தேடிக்கொள்ளவேண் டியது எல்லோருடையவும் கடமையாகும்.

7. இப்படி எல்லோருக்கும் கர்ம-பக்தி-ஜ்ஞான ஸித்திகள் கைகூடுவது ஸாத்தியமானாலும், பிராம்மணஜன் மத்திற்குரிய வேதசாஸ்திரவிதிகளின் பிரகாரம் பிராம்மணன் தவறாமல் நடந்துவருகிறதாயிருந்தால், அவருக்கு அந்த ஸித்திகள் மற்றஜாதியார்களைவிட வெகு சீக்கிரத்தில் கை கூடத்தக்கவை யென்றே வெளியாகிறது. பிராம்மணன் மற்ற துவிஜர்களைப்போல் அத்யயனஞ் செய்வது மன்னியில் மற்றவர்களுக்கும் அத்யயனத்தைச்செய்து வைக்கிறபடியால் வேதம் பிராம்மணனுக்கு ஸ்வாதீனப்பட்டிருப்பது போல் மற்ற துவிஜர்களுக்கு ஸ்வாதீனப்படமாட்டாது. ஸம்பூர்ண மாய் அத்யயனஞ்செய்திருந்தபோதிலும், அத்யாபகராகவு மிருந்து மற்றவர்களுக்கும் சொல்லிவைத்தால்தான் அத்ய யனஞ்செய்தது நிலைத்து ஸ்திரப்படுமென்பது அனுபவஸித்

தம். இதுபோலவே, கர்மாக்களையும் உபாஸனைகளையும் தான் செய்துவருவது மன்னியில் மற்றவர்களுக்கும் செய்து வைப்பதாலும், கர்மோபாஸனைகளின் ஸ்வரூபங்களை விவரிக்கிற சாஸ்திரங்களை தான் படிப்பதுமன்னியில் மற்றவர்களுக்கும் சொல்லிக்கொடுக்க அதிகாரத்தை வகிப்பதாலும், கர்மோபாஸனைகளின் ஸ்வரூப விஜ்ஞானத்திலும் நிஷ்டைகளிலும் பிராம்மணனுக்கு அதிகமான உறுதி யேற்படக்கூடியது. இவ்விதமாகவே, ஞானப்பிராப்திவிஷயத்திலும் வேதாந்த சாஸ்திராப்பியாஸத்தை தான் செய்வதுந்தவிர மற்றவர்களுக்கும் பிரவசனஞ்செய்து போதிப்பிவிக்கிற கடமையும் பிராம்மணனுக்கே யிருப்பதால், ஞானமும் பிராமணனுக்கு எவ்வளவு உறுதிப்படுமோ அவ்வளவு மற்றவர்களுக்கு உறுதிப்படக்காரணமில்லை. அன்றியும், தரித்திரனாக யிருப்பதே பிராம்மணனுடைய பெருமை. சொத்தைச் சேர்த்து வைத்துப் பரிபாலனஞ்செய்கிற தொந்தரவுகூட பிராம்மணனுக்கு இருக்கக்கூடாதென்பது சாஸ்திரத்தின் கருத்து. ஐசுவரியம் அதிகமாகவிருந்தால் பெரும்பாலும் புத்திக்கு மயக்கமேற்படும். ஐசுவரியமதமில்லாதவரின் புத்தி எப்போதும் கூர்மையாகவே யிருக்கும். சொத்தில்லாமையே பிராம்மணனுக்கு ஓர் உத்தமலக்ஷணமாகையாலும் மற்ற காரணங்களினாலும், கைநீட்டி பிரதிக்கிரகம் வாங்கும் அதிகாரமும் பிராம்மணனுக்கே கொடுக்கப்பட்டிருக்கிறது. அப்போதைக்கப்போது பிரதிக்கிரகத்தில்கிடைப்பதைக்கொண்டு காலக்ஷேபஞ்செய்து திருப்தராகவிருப்பது பிராம்மணனுக்கு அழகு. பிரதிக்கிரகம் விசேஷமாய்க் கிடைக்கும்படியான யோக்கியதையாவது இச்சையாவது இல்லாத பிராம்மணனும் ஆஹாரத்திற்குக் கஷ்டப்பட்டுக் கொண்டு தன்னுடைய மேலான கடமைகளிலிருந்து நழுவிப்போகக்

கூடாதென்ற தாத்பரியத்துடன் எங்கும் இந்நாட்டில் பிராம்மணனுக்கு அன்னம் கிடைக்கும்படியான ஸௌகரியத்தின்பொருட்டு ஸத்திரங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருப்பதுமன்னியில் பொதுவாகவே பிராம்மணனுக்கு அன்னம் போட்டு அதிதிஸத்காரஞ் செய்வது கிருகஸ்தர்களுக்கு அவசியமென்றும் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டுமிருக்கிறது. இஹலோகக்கவலை பிராம்மணனுக்குக் கூடாதென்பதே சாஸ்திரத்தின் கொள்கை. ராஜ்யத்தைபரிபாலிக்கவும் அவரவர்களின் தர்மங்களிலிருந்து ஜனங்கள் விலகிப் போகாமல் கண்டித்துப்பாதுகார்க்கவும் க்ஷத்திரியர்கள் ஏற்பட்டிருந்திருக்கிறார்கள். வியாபார வியவஸாயங்களினால் தனத்தை ஸம்பாதித்து ஜனங்களின் நன்மையைக் கருதி ஸத்விஷயங்களில் விநியோகப்படுத்துவதற்கு வைசியர்களிருக்கிறார்கள். எல்லோருக்கும் அவசியமான கைங்கரியங்களைச்செய்து உபகரிக்கவும் கைத்தொழில்களை நடத்தவும் சூத்திராதிகளிருக்கிறார்கள். பிராம்மணனுக்குத் தன்னுடையவும் மற்றவர்களுடையவும் பரலோக விஷயமான காரியங்களும் அக்காரியங்களுக்கு நேர் அநுகூலமான இஹலோககாரியங்களும் மாத்திரம் முக்கியமாயேற்பட்டிருக்கின்றன. இக்காரியங்களிலேயே எப்போதும் புத்தியைச்செலுத்தி முயற்சிசெய்து வருகிறவருக்கு பரலோகநன்மையின்பொருட்டு அப்பியாஸங்களும் ஞானமும் சீக்கிரத்தில் பலப்படுமென்பதில் ஸந்தேகமில்லை. அன்றியும், க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களுக்கு கர்மோபாஸனமார்க்கங்களை முழுமையும் விட்டுவிட்டு நிவிருத்தி மார்க்கத்திலிறங்குவதற்கு சாஸ்திரம் இடங்கொடுக்கவில்லை. கர்மஸன்யாஸத்தைச் செய்வதற்கு பிராம்மணன் ஒருவனுக்குத்தான் அதிகாரஞ் சொல்லப்பட்டிருக்கிறது. பிரவிருத்திமார்க்

கத்தை விட்டொழித்து ஸம்பூர்ணமாய் நிவிருத்திமார்க்கத்திலிறங்கி சிரவண-மனன-நிதித்தியாஸனங்களைச்செய்து அபரோக்ஷஜ்ஞானத்தை இலகுவாயடைவதற்குள்ள ஸௌகரியம் ஸந்யாஸியைத்தவிர மற்றவர்களுக்குக்கிடையாது. இக்காரணம் ஒன்றினாலேயே ஸந்யாஸாசிரமத்தில் அதிகாரம் பெற்றிருக்கிற பிராம்மணனுக்குத்தான் பிரம்மஜ்ஞானம் ஸுலபமாய் ஏற்படக்கூடுமென்று எண்ணலாம். எப்படி குடும்பக்கவலையும் ஆசௌசாதி தோஷங்களும் ஸம்பந்தப்படாமலிருக்கிற பிரம்மசாரிக்குத்தான் வேதாத்யயனமும் சாஸ்திராப்பியாஸமும் சீக்கிரத்தில் பூர்த்தியாகக்கூடுமோ, அப்படியே ஸகல பந்தங்களையும் ஸன்யாஸத்தினால் விலக்கிவிட்டு நிச்சிந்தையாய் சிரவணாதிகளைச் செய்தால்தான் சீக்கிரத்தில் ஞானஸித்தியுமேற்படக்கூடும். இப்படிச்செய்வது சாஸ்திரப்படி பிராம்மணனுக்குமாத்திரம் ஸாத்தியப்படக்கூடியதாகையாலும், மற்றவர்களுக்கு ஸந்யாஸாசிரமத்தில் அதிகாரமில்லாததினாலும், இதில் முன் குறிப்பிட்ட பல வேறு காரணங்களினாலும், பிராம்மணன் சாஸ்திர விதிப்படி முயற்சிகளைச்செய்துவந்தால் காலக்கிரமத்தில் பிரம்மஜ்ஞானியாவாரென்றே உறுதியாய்ச் சொல்லலாம்.

8. ஆகையால், பிராம்மண ஜன்மத்தின் முக்கியகாரியம் பிரம்மஜ்ஞானத்தை ஸம்பாதிப்பதுதானென்று ஆதியில் சொல்லப்பட்டது. அதை ஸம்பாதிப்பவர்தான் பிராம்மண ஜன்மத்தை சரியாய் உபயோகப்படுத்திக்கொண்டவராவார். மற்றவர்கள் அதை வீண்படுத்தியவர்களென்றே சொல்லவேண்டும். பிராம்மண ஜன்மத்திற்குரிய முக்கிய பலனை அடைந்தவர்தான் முக்கிய பிராம்மணனாவார். அப்பலனை அடைய யத்தினஞ்செய்யாதவர்களை சாஸ்திரம் பிராம்மணப் ப்ருவர்களென்று, அதாவது, பிறவியினால் மாத்திரம்

பிராம்மணர்களாகச் சொல்லவேண்டியதாயிருக்கிறதென்று சொல்லுகிறது. அவர்கள் யோக்கியதையினுல் பிராம்மணர்கள் அல்லவென்று தாத்பரியம். பிரம்மஜ்ஞானியாவதே பிராம்மணனுடைய முக்கிய காரியமாகையால், பிரமஜ்ஞானிதான் பிராம்மணனென்று வற்புறுத்தி வஜ்ரஸூசி கோபநிஷத் முதலான சுருதிபாகங்களிலும் குறிப்பிட்டுச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால், பிரம்மஜ்ஞானத்திற்கு வழிதேடாமல் வயிறு வளர்த்துக்கொண்டும், அனுவசியமாய் அதிகப்பணம் ஸம்பாதித்துக்கொண்டும், சொத்து சேர்த்துக்கொண்டும், தனது தனதென்று பெண்டிர் பிள்ளைகளிடம் அதிகமான அபிமானத்தை வைத்து அஜ்ஞானத்தில் உழன்று ஸம்ஸாரபாசத்தில் நன்கு கட்டுண்டும், லௌகிக விஷயங்களிலேயே எப்போதும் புத்தியைச் செலுத்தி வீண்படுத்திக்கொண்டும், அந்தர்முகப்பார்வையே யில்லாமல் வீண் மோகத்தை யுண்டாக்குகிற வெளிப்பார்வையிலும் அற்பமும் அதோகதியைக் கொடுக்கக்கூடியதுமான விஷயபோகங்களிலும் ஞானேந்திரிய கர்மேந்திரியங்களைத் தாறுமாருக உபயோகப்படுத்திக்கொண்டும், ஜாதிப் பெருமையையும் வெளி அந்தஸ்தையும் மாத்திரமுத்தேசித்து தான் பிராம்மணனென்று சொல்லிக்கொண்டும் இருப்பவரை பிராம்மணன் அல்லவென்றே சொல்லலாம். இவருடைய பிறவிப் பிராம்மண்யம் நல்லதின்பொருட்டு உபயோகப்படவில்லை. யாராவது காரியத்தை உத்தேசித்து புறப்பட்டுப் போகும்போது இவர் எதிரில் வந்தால் அபசகுனமும், இவரைக்கொன்றவனுக்கு பிரம்மஹத்தியும், ஏற்படமாத்திரம் இவருடைய பிராம்மண்யம் வீர்யமுள்ளதே யல்லாமல் வேறு எவ்வகையிலும் இவருடைய பிராம்மண்யம் சக்தியுள்ள பிராம்மண்யமாகாது.

9. பிரம்மஜ்ஞானத்தின் பிராப்தியின்பொருட்டே பிராம்மண ஜன்மம் ஏற்பட்டிருப்பதால், அந்த ஞானத்தை வெளிப்படுத்துவதும் அதின் மார்க்கத்தைத் துலக்கிக் காட்டுவதுமான வேதமே பிராம்மணனுடைய உண்மையான தனம். வேதத்தை அத்யயனஞ்செய்து அதிலடங்கிய தத்வங்களை நன்ருய் அறிந்துகொண்டு, அதின்படி தவராமல் தானும் நடந்துவருவதும் மற்றவர்களுக்கும் சரியாய் போதித்து அவர்களேயும் அப்படியே நடந்துவரும்படி செய்வதுமே பிராம்மணனுடைய கடமைகள். ஸம்பூர்ணமாக வேதத்தை அத்யயனஞ்செய்வதுமட்டும் போதாது. அத்யயனத்தினுல் தனக்கு ஸ்வாதீனப்பட்டிருக்கிற வேதத்தில் என்ன சொல்லப்பட்டிருக்கிறதென்று தெரிந்துகொண்டால்தான் ஞானேத்பத்தியேற்படும். அர்த்தவிஜ்ஞானமில்லாமல் வேதத்தை மனப்பாடமாக ஒப்பிக்கிறவரை ஸர்வோத்தமையான ஸ்திரீயை விவாகஞ்செய்துகொண்ட நபும்ஸகனுக்கு ஒப்பாகச் சொல்லக்கூடும். தர்மப் பிரஜை உண்டாவதற்காக என்ற ஸங்கல்பத்துடன் விவாகத்தைச் செய்துகொண்டாலும் நபும்ஸகனுக்கு ஆனந்த புரஸ்ஸரமாக புத்திரோத்பத்தி எப்படி உண்டாகமாட்டாதோ, அப்படியே அத்யயனத்தினுல் வேதம் ஸ்வாதீனப்பட்டிருந்தும் அதின் மூலமாய் கிடைக்கவேண்டிய ஞானுனந்தம் உண்டாக இடமின்றிப் போய்விடும். எப்படி நபும்ஸகனுடைய ஸ்திரீயின் சுசுருஷைகளினுல் ஸாமான்ய நன்மைகளேயும் ஸௌகரியங்களேயும் அவன் அடையக்கூடுமோ, அப்படியே வேதாத்யயனத்தால் உண்டாகக்கூடிய ஸாமான்ய புண்யமும், உலகத்தில் கொஞ்சம் மரியாதையும் திரவ்ய வரும்படியும் ஏற்படுமேயல்லாது, முக்கியபலனுகிய பிரம்மஜ்ஞானமும் மோக்ஷமும் எட்டாது. ஆகையால், வேதாத்யயனஞ் செய்

வதுமன்னியில் அவசியமான வரையில் வேதத்திற்கு அங்கபூதமான சாஸ்திரங்களையும் அப்யஸித்து கர்மோபாஸன தத்வவிஷயங்களை நன்றாயறிந்துகொண்டு அவைகளுக்கு அநுகுணமாக ஆசரித்துக் கொண்டுவரவேண்டியதே பிராம்மணச்செய்கையாகும்.

10. காலரீதியைக் கவனித்தால் வெகுசீக்கிரத்தில் உலகத்தைவிட்டு பிராம்மண்யம் அநேகமாய் மறைந்துபோய்விடுமென்றே தோன்றுகிறது. இக்காலத்தில் உத்தம பிராம்மண்யம் அபூர்வமாயிருந்தபோதிலும், பிறவிப்பிராம்மண்யமாவது இருந்துகொண்டிருக்கிறது. பிறவிப்பிராம்மண்யமிருந்தால்தான் அதின்பேரில் உத்தமபிராம்மண்யத்தைச் சம்பாதித்துக்கொள்ளக்கூடும். பிறவிப்பிராம்மண்யத்திற்கே குறைவு உண்டானால் உத்தம பிராம்மண்யம் உண்டாக இடமேயில்லை. கலிகாலக்கொடுமையினால், இப்போது பிறவிப்பிராம்மண்யத்திற்கே கெடுதலுண்டாகும்படியான காரியங்கள் இந்நாட்டில் நடந்தேறிவருகின்றன. சாஸ்திரப்படி, பிராம்மணமாதாவினிடத்தில் பிராம்மணபிதாவினால் ஜனிப்பிவிக்கப்பட்டவன் பிராம்மணனென்று சொல்லப்படுகிறான். ஆகையால் மாதாவின் பிராம்மண்யமும் சுத்தமாயிருக்கவேண்டியது முக்கியம். ருதுகாலத்திற்குமுன்பாக விவாஹமாயிருப்பவள் தான் சரியான பிராம்மணீயாவள். விவாஹமில்லாமல் ருதுவாகிவிட்ட பிராம்மணப்பெண்ணை விருஷளீ, அதாவது, சூத்திரஸ்திரீக்கு ஸமானமானவள் என்றும், அவளை விவாஹஞ்செய்துகொள்கிறவன் விருஷளீபதி என்றும் சாஸ்திரத்தில் வியக்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்போது 14 வயதுக்குள்ளாக பெண்களுக்கு விவாஹஞ்செய்யக்கூடாதென்று சட்டநிர்மாணத்தின்பொருட்டு சாஸ்திரஜ்ஞானசூன்யர்களான லௌகிகப்ரமுகர்களால் விசேஷப்பிரயத்தி

னங்கள் செய்யப்பட்டுவருவதாகத் தெரியவருகிறது. இப்படி சட்டம் ஏற்பட்டுவிட்டால், அனேகமாய் எல்லா பிராம் மணஸ்திரீகளும் விருஷளீகளாகவும், விவாகமான பிராம் மணபுருஷர்களும் விருஷளீபதிகளாகவுமிருக்கக் கூடிய தால், சுத்தமான பிராம்மண்யத்திற்கும் அதன் மூலமாய் உலகத்தில் எல்லோருக்கு மேற்படக்கூடிய பாரலௌகிக மான நன்மைகளுக்கும் மரணாந்தவியாதி வந்ததாகவே எண்ணவேண்டும். ருதுமதீவிவாகம் கூடாதென்று காட் டக்கூடிய சாஸ்திர விஷயங்களேயும் லௌகிக வியவகாரங் களேயும் முழுமையும் இங்கு விவரிப்பதற்கு இடமில்லாத தால், பிரகிருதத்திற்கு அவசியமானமட்டில் சில முக்கிய விவரங்கள் மாத்திரம் சுருக்கமாய்க் குறிப்பிட்டுக்காட்டப் படும். ருதுவாவதற்கு முன்பாகவே பெண்களுக்கு விவாக மாக வேண்டுமென்ற கட்டாயவிதி பிராம்மணஜாதிக்கு மாத்திரமுள்ளது. மற்ற தானங்களேப்போல் கன்னிகா தானத்தையும் பெற்றுக்கொள்வதற்கு முக்கிய அதிகாரி பிராம்மணன்தான். சாஸ்திரப்படி கன்னிகாதான ரூபமான விவாஹமே சிரேஷ்டமான விவாஹமாகையால், அதுவே சிரேஷ்டமான பிராம்மணஜாதியில் நடந்தேறிவரவேண்டு மென்பதே நியாயமாகும். அன்றியும், சாஸ்திரத்தின் கொள்கைப்படி புருஷர்களுடைய உபநயனஸ்தானத்தில் ஸ்திரீகளுக்கு விவாஹமேற்பட்டிருப்பதால், உபநயனகாலத் தை அனுஸரித்து விவாஹகாலமும் குறிப்பிடப்பட்டிருக் கிறது. 7 வயதுமுதல் புருஷனுக்கு நன்முக விவரந்தெரிகிற காலமாகிய 16 வயது வரையில் பிராம்மணப் பையனுக்கு உபநயனம் செய்விக்கவேண்டுமென்று விதியிருப்பதுபோல், 7 வயதுமுதல் ஸ்திரீக்கு நன்மும் விவரந்தெரிகிறகால மாகிய ருதுகாலத்திற்குள் பிராம்மணப்பெண்ணுக்கு விவா

ஹஞ்செய்விக்க வேண்டுமென்று கட்டாயவிதி ஏற்பட்டிருக்கிறது. அதிலும், உபநயனவிதியை அநுஸரித்து, ருதுகாலம் ஸமீபிக்கிறவரையில் தாமஸிக்காமல் 7 வயதுக்கப்பால் கூடிய சீக்கிரத்தில் விவாகத்தை நடத்துவதே முக்கியமென்றும் உறுதியாய்ச் சொல்லப்பட்டுமிருக்கிறது. உபநயனத்தில் குருசிஷ்யபாவம் உண்டாவதுபோல் விவாகத்திஞல் புருஷன் குருவாகவும் ஸ்திரீ சிஷ்யையாகவும் ஏற்படுகிறுர்கள். விவாககாலம் முதல் புருஷன் தன்னுடைய தர்ம மார்க்கத்தில் ஸ்திரீயை தயார்செய்துகொண்டுவரவேண்டுமென்பது சாஸ்திரத்தின் கருத்து. பின்ஞல் ருதுவானகாலத்தில் ஆசாரவிஷயத்தில் ஸ்திரீ எப்படி நடந்துகொள்ளவேண்டுமென்ற விவரத்தையும் புருஷனே ஸ்திரீக்கு முன்ஞலேயே போதிக்கவேண்டுமென்றும் சாஸ்திரத்தில் துலங்குகிறது. சாஸ்திரத்தின் நிபந்தனைகளை நன்முய் கவனித்துப் பரிசோதித்துப் பார்த்தால் ருதுவானபின் பிராம்மணப்பெண்ணுக்கு விவாஹஞ்செய்விக்கக்கூடுமென்பதற்கு யாதொரு ஆதாரமுங் காணப்படவில்லை. எங்கும் ருதுவாவதற்கு முன்பாகவே செய்யவேண்டுமென்றே வற்புறுத்திச் சொல்லப்பட்டிருக்கிறது. முன்சொல்லியபடி விவாகத்திற்குமுன் ருதுவான பிராம்மணப்பெண்ணை சூத்திரப்பெண்ணுக்கு ஸமானமென்றும் சாஸ்திரம் வெளியிடுகிறது. ருதுமதீ விவாஹத்தைப் போதிப்பிவிக்கிற நவீன சீர்திருத்தக்காரர்கள், தங்களுக்கு அநேகமாய் சாஸ்திர நிபந்தனைகள் விரோதமாயிருந்தபோதிலும், ஸமாவேசனக்கிரியை ஸம்பந்தமாய் தங்களுக்கு ஏதோ அநுகூலவிஷயமிருப்பதாகச் சொல்லிவருகிறுர்கள். உண்மையில், ஸமாவேசனமென்முல் என்ன, அதைப்பற்றி சாஸ்திரத்தில் என்ன விவரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன வென்று தெறிந்துகொண்டவர்

ருதுமதீ விவாகத்திற்கு அனுகூலமாக அதில் ஏதோ இருப்பதாகப் பிதற்றமாட்டார். பத்னீ ருதுவானபிறகு எப்போதும் நிஷேகம், அதாவது, கர்ப்பாதான காலம் குறிப்பிடப்படுகிறதோ அதற்கு முன்பாக ஸ்திரீயும் புருஷனும் ஏகாந்தமாக ஓரேயிடத்தில் சிலகாலம்வரையில் இரவில் படுத்துக் கொண்டிருந்து சரீரபுணர்ச்சியைப்பற்றி இருவரும் நினைக்காமலேயிருக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இதுதான் ஸமாவேசனம். இப்படி நினைக்காமலிருந்து அப்பால் நிஷேகஸம்பந்தமுண்டாகும் பக்ஷத்தில் அதினால் பிறக்கும் ஜீவன் மஹாத்மாவாக விருப்பானென்று சாஸ்திரமூலமாய் தெரியவருகிறது. இப்படி சரீரஸம்பந்தத்தில் நினைப்பேயில்லாமல் ஓரேயிடத்தில் படுத்துவருகிறகாலம் ஜாஸ்தியாகவிருந்தால் அப்பால் பிறப்பவரின் யோக்கியதையும் ஜாஸ்தியாகவிருக்குமென்றும் சாஸ்திரம் வெளியிடுகிறது. இப்படி மூன்று நாள் முதல் ஒரு வருஷம் வரையில் பலகாலங்கள் ஸமாவேசனத்திற்குக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இப்படி ஸமாவேசனம் நடந்தால் காலத்தின் அளவுக்குத் தக்கபடி சுரோத்திரியர், ரிஷி, தேவர் முதலானவர்கூட பிறக்கலாமென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஞானமில்லாமையும் காமவெறியும் அதிகரித்திருக்கிற இக்கலிகாலத்தில் மேற்கண்ட ஸமாவேசனக்கிரியையை விதிப்படி அனுஷ்டிப்பது ஸாத்தியமில்லை யென்பது நிச்சயமே. ஆகிலும், பிராம்மணனுக்கு ஸமாவேசனம் விதிக்கப்பட்டிருப்பதால், அதமபக்ஷமாகிய மூன்றுநாள் ஸமாவேசனத்தைச் செய்விப்பதாகச் சொல்லி எந்தக்காலத்தில் ஸ்திரீபுருஷர்கள் மேற்கண்டபடி தனிமையாக ஒன்றுசேர்ந்திருந்தாலும் சரீரப்புணர்ச்சி ஏற்படக்கூடியதில்லையோ அப்படிப்பட்ட காலமாகிய, அதாவது, ஸ்திரீ ருதுவாவதற்கு முன்கால

மாகிய விவாஹதினங்களிலேயே மந்திரவத்தாக ஸமாவேச
னத்தை பாவனையாய் நடத்திவருகிறார்கள். வாஸ்தவத்தில்
ஸமாவேசனம் விவாஹப்பிரகரணத்தைச் சேர்ந்ததில்லை.
அது கர்ப்பாதானப் பிரகரணத்தைச் சேர்ந்ததென்று கல்பத்
திலேயே நன்றாய் துலங்கும். இப்படி காலரீதியை அனு
ஸரித்து விவாஹதினங்களிலேயே நடத்திவருவதினால் விவா
ஹகாலத்திற்கு முன்பாகவே ஸ்திரீ ருதுவாயிருக்கவேண்டு
மென்று கண்மூடித்தனமாய் மேற்கண்ட சீர்திருத்தக்காரர்
கள் கக்ஷி சொல்லுகிறார்கள். விவாஹ தினங்களுக்கும்
ஸமாவேசனதினங்களுக்கும் சாஸ்திரப்படி யாதொரு ஸம்
பந்தமுமில்லையென்ற சங்கதி அவர்களுக்குத் தெரியவில்லை.
மூன்று நாள் ஸமாவேசனவிஷயமாய் ஷை மூன்று நாட்
களும் விவாஹதினங்கள்தானென்று அவர்கள் சொல்லு
வது வாஸ்தவமாயிருக்கக்கூடுமானால், ஒரு மாஸம், மூன்று
மாஸங்கள், ஆறு மாஸங்கள், ஒரு வருஷம் வரையில் ஸமா
வேசனம் நடத்தப்படுமானால் அவ்வதிககாலங்களை விவாஹ
நான்குதினங்களுக்குள் எப்படி அச்சீர்திருத்தக்காரர்கள்
புகவிடச்செய்வார்களோ தெரியவில்லை. ஸமாவேசனக்
கிரியையினால் தங்களுக்கு அனுகூலமிருப்பதாக அவர்கள்
சொல்வது அறியாமையாலேற்பட்ட வீண் பிதற்றலே
தவிர வேறல்ல. எவ்வகையிலும் ருதுமதீ விவாஹத்திற்கு
சாஸ்திரம் இடங்கொடுக்காது என்பதே உண்மை. இது
போலவே லௌகிகயுக்திகளைக் கவனித்தாலும் ருதுமதீ
விவாஹம் நியாயமில்லை யென்றே ஏற்படும். லௌகிக விஷ
யங்களை இங்கெடுத்துச் சுருக்கமாய்ச் சொன்னாலும் விரியு
மாதலால் சொல்லக்கூடியதாயில்லை. பால்யத்திலேயே
பெண்கள் விதவைகளாவதற்கு சாஸ்திரீய விவாஹமே காரண
மென்று சொல்லுகிறதும் ஆலோசனையின்பேரில் ஏற்பட்ட

அபிப்பிராயமல்ல. பள்ளிக்கூடங்களில் படித்துவருகிற சிறு பையன்களுக்கு சாஸ்திரவிரோதமாய் விவாஹஞ் செய்து வைப்பதே முக்கியகாரணமென்று சொல்லவேண்டும். எந்த விஷயத்தில் சாஸ்திரநிபந்தனைகளுக்கு எதிரிடையாக நடந்து கொண்டு ஜனங்கள் அக்கிரமத்தைச் செய்து கஷ்டத்தைத் தருவித்துக்கொள்ளுகிறார்களோ அவ்விஷயத்தில் அவசியமான சீர் திருத்தத்தைச் செய்யாமல் துர்ப்புத்தியினால் பிராம்மண்யத்தைக் கெடுப்பதற்கே முயலுகிறார்கள். கலிமகிமையால் இவ்வித அக்கிரம முயற்சிகளும் பலித்து அதிகமாக பிராம்மண்யத்திற்கு ஹானி ஏற்படக்கூடுமென்றே எண்ண வேண்டியதாயிருக்கிறது. இப்படியெல்லாம் பிராம்மண்யம் முழுவதும் நஷ்டமாய்ப்போவதற்கு முன்பாகவே ஏற்கனவே யிருக்கிற பிறவிப்பிராம்மண்யத்தை, அதாவது, ஜாதி பிராம்மண்யத்தைக் கூடியவரையில் சரியாக உபயோகப்படுத்திக் கொண்டு பிரம்மஜ்ஞானத்தை ஸம்பாதிக்க வழிதேடி முக்கியப் பிராம்மணனாகிவிட பிரயத்தினஞ்செய்ய வேண்டுமென்பது இக்காலத்திய ஒவ்வொரு பிராம்மணனுடையவும் இன்றியமையாத கடமை. இப்போதுள்ள பிறவியில் சுத்தர்களான ஜாதிப்பிராம்மணர்களே அவ்விஷயத்தில் சரியான பிரயத்தினத்தைச் செய்யாவிட்டால், இனி பிற்காலங்களில் ஏற்படப்போகிற பிறவிலேயே அசுத்தர்களான ஜாதிப்பிராம்மணர்கள் அவ்வித பிரயத்தினத்தைச் செய்யப்போகிற தில்லை யென்பது நிச்சயம். இக்கலிகாலம் அதிகரித்து அதர்மம் அதிகமாக உறுதிப்பட்டிருக்கக்கூடிய வரப்போகிற காலங்களில் பிராம்மணஜன்மம் மறுபடியும் கிடைத்தாலும் அதுவும் வியர்த்தமாகவே போகுமென்பதும் நிச்சயமே. ஆகையால் இக்காலத்திலுள்ள பிராம்மணர்கள் நற்கதியை அடையவேண்டுமானால் இப்போதிய ஜன்மத்திலேயே சாஸ்

திரப்படிக்குள்ள சரியான யத்தினங்களைச் செய்தால்தான் அடையலாமென்பதையும், இல்லாவிடில் மாற்றக்கூடாத துர்க்கதியே ஏற்படுமென்பதையும் அவர்கள் மறக்கவே கூடாது.

11. காலவசத்தினால் தங்களுக்குள்ள மோக்ஷமார்க்கத்தில் இச்சையில்லாமலும், மோக்ஷத்திற்கு ஸாதனமாயுள்ள தர்மாசரணைகளில் பிரவிருத்தியில்லாமலும், மிகவும் நிகிருஷ்டமான காமபூர்த்தியிலும் அர்த்தஸம்பாதனத்திலும் பெரும்பாலும் புத்தியைச் செலுத்திவருகிற தற்கால ஜாதிப் பிராம்மணர்களைப்பார்த்துவிட்டு சூத்திராதிகளுக்குப் பொதுவாகவே பிராம்மணனைக்குறித்து மதிப்புக்குறைவும் மனவில். வெறுப்புமுண்டாகி அவை நாளடைவில் அதிகரித்து வந்து பலவிடங்களில் கடைசியில் பிரம்ம த்வேஷத்திலேயே பரிணமத்தை அடைந்திருக்கின்றன. இத்துவேஷத்தை முன்னிட்டுக்கொண்டே பிராம்மண ஜாதியே கிடையாதென்று ஸ்தாபித்துவிடவேண்டுமென்ற உத்தேசத்துடன் சிலர்கள் முன்குறிப்பிட்டபடி பிரம்மஜ்ஞானிதான் பிராம்மணனென்ற வசனத்தை கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, ஒருவரும் பிறவியினால் பிராம்மணனாகமாட்டாரென்றும் பிரம்மஜ்ஞானத்தையுடைய மனிதரே பிராம்மணனாவாரென்றும் சொல்லிக்கொண்டும், இப்படியே குணங்களையும் கர்மாக்களையும் முன்னிட்டு சாதுர்வர்ண்யம் ஏற்பட்டிருப்பதாகச் சொல்லுகிற கீதாவாக்கியத்தையும் அவர்கள் தங்களுடைய கக்ஷிக்கு அனுகூலமென்று சொல்லிக்கொண்டும், புஸ்தகங்களில் எழுதி அச்சிட்டு, பிரசாரப்படுத்தி மற்றுமுள்ள ஸாமான்ய ஜனங்களின் புத்திகளை மயங்கச்செய்தும் வருகிறார்கள். உபநிஷத்து கீதை முதலியவைகளை அதிகாரமில்லாதவர்கள் படித்

தால் என்ன அனர்த்தங்கள் உலகத்தில் விளையக்கூடு மென்பதை நிதர்சனமாக இக்காலத்தில் இந்நாட்டில் பார்க்கலாம். துவேஷபுத்தியினால் கெட்டமுயற்சிகளைச் செய்கிறவர்களுக்கு உண்மையை எடுத்துக்காட்டுவதினால் அவர்கள் நன்மார்க்கத்தில் திரும்பிவரப்போகிறதில்லை. அவர்களின் வார்த்தைகளினாலும் முயற்சிகளினாலும் ஏமாந்து போயிருக்கிறவர்களும், ஏமாந்து போகக்கூடியவர்களும், நல்ல சித்தத்துடன் கூடியவர்களும், உண்மையைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்ற ஆவலுடன் கூடியவர்களுமான மற்ற ஜனங்களின் சாசுவத நன்மையையும் க்ஷேமத்தையும் கருதி இங்கு பின்னால் வாஸ்தவம் இன்னதென்று கொஞ்சம் வெளிப்படுத்தப்படுகிறது. அநியாயமாய், கண்டவர் பேச்சை நம்பித் தங்களுக்கு அதோகதி ஏற்படக்கூடாதென்றும், தங்களுக்கு நற்கதியே வேண்டுமென்றும் விரும்புகிற நண்பர்களெல்லோரும் பின்சொல்லப்படுவதை நன்றாய்க் கவனித்து சாஸ்திரவிரோதமான அபிப்பிராயங்களிலிருந்தும் நடத்தையிலிருந்தும் தங்களை விடுவித்துக்கொள்வது மிகவும் அவசியமென்று அறிந்துகொள்ளவேண்டும்.

12. பிரம்மஜ்ஞானிதான் பிராம்மணன் என்ற வசனத்தினால் ஜாதியில் பிராம்மணர்களில்லையென்று அர்த்தமில்லை. ஜாதி மாத்திரமிருந்தால் போதாது, யோக்கியதையே முக்கியமென்பது அதன் தாத்பர்யம். நன்றாய் ஓடுகிற குதிரையைப் பார்த்துவிட்டு இதுதான் குதிரையென்று சொன்னால், ஓடாத குதிரைகள் வேறு மிருகங்களென்று சொன்னதாக அர்த்த மில்லை. புத்தியுள்ளமனிதனைப்பார்த்து இவன்தான் மனிதனென்றும் சொல்லி, புத்தியில்லாதவனைப்பார்த்து இவன் மனிதனாவென்று கேட்டால், பின்சொல்லப்பட்ட

வனை ஜாதியில் மாடு என்று சொல்லக்கூடாது. ஜாதியில் மனிதன்தான், யோக்கியதையில் மாடுபோலிருக்கிறான் என்பதுதான் அதற்கு அர்த்தம். இப்படியே பிரம்மஞ்ஞானி தான் பிராம்மணன் என்றால், பிரம்மஞ்ஞானிதான் உத்தம பிராம்மணன், மற்றவர்களெல்லோரும பிராம்மணயோக்கி யதையில்லாத மத்தியம அல்லது அதமபிராம்மணர்களென் பதே அதற்கு அர்த்தமாகும். வேதசாஸ்திரவசனங்களுக்கு அர்த்தஞ்செய்வது எப்படி யென்பதற்கும் சாஸ்திரமேற்பட் டிருக்கிறது. வேதசாஸ்திரங்களை கொஞ்சமேனும் அறியாத ஜனங்கள் அங்குமிங்கும் அரைகுறையாகப்பார்க்கப்பட்ட, அல்லது கேழ்க்கப்பட்ட, சில வசனங்களை மாத்திர மெடு த்துக்கொண்டு, முன்பின் ஸம்பந்தங்களைத்தெரிந்து கொள் ளாமலும், ஸம்ஸ்கிருதபாஷையின் ஞானமேயில்லாமலும், சாஸ்திரவிரோதமான கக்ஷியிலிறங்கி அர்த்தஞ்செய்யத்தலைப் பட்டால் அவர்களுடைய தெளிவுபடாதபுத்தியில் விபரீத மான அர்த்தந்தான் தோன்றும். வேதசாஸ்திரவசனங்களு க்கு அர்த்தஞ்செய்வதானால் அவ்வசனங்களுக்கு பரஸ்பரம் விரோதமில்லாமலிருக்கும்படி அர்த்தஞ்செய்யவேண்டு மென்று விதி சொல்லப்பட்டிருக்கிறது. மேற்குறிப்பிட்டவர் களின் அர்த்தத்தையே சரியென்று ஏற்றுக்கொள்ளும் பக்ஷத்தில், அது நூற்றுக்கணக்கான மற்ற வசனங்களுக்கு விரோதமேற்படும். சில உதாஹரணங்களைக்கவனிப்போம். முன்சொல்லியபடி பிராம்மண புருஷனுக்கு பிராம்மண ஸ்திரீ யிடத்தில் உண்டாகிறவன் பிராம்மணன் என்ற சாஸ்திர வசனத்தில் பிராம்மண பதத்திற்கு மேற்கண்டவாதிகளின் கொள்கைப்படி பிரம்மஞ்ஞானியென்று அர்த்தஞ்செய்தால் புருஷனும் ஸ்திரீயும் பிரம்மஞ்ஞானிகளான பிறபாடு இரு வருக்கும் கீழான விஷயத்தில் புத்திதோன்றி அப்பால் இரு

வரும் கூடி பிறந்தவன் என்று அர்த்தப்படுத்தவேண்டும். இப்படிச்செய்வது நியாயமாகுமா? அவ்விருவருக்கும் பிறந்தவர் பிராம்மணன் என்பதினால், அவ்வாதிகளின் கக்ஷிப்படி பிறந்தவரும் பிரம்மஜ்ஞானியாகவேயிருக்கவேண்டும். பிரம்மஜ்ஞானிக்கு மறுபடியும் சரீரகிரஹணமே யில்லையென்றும், விதேஹமுக்தியே யுண்டென்றும் சொல்லுகிற சாஸ்திர வசனங்களுக்கு எதிரிடையாக மாதாவினிடத்தில பிரம்மஜ்ஞானிக்கு கர்ப்பவாஸம் ஏற்படுவதாக அவ்வாதிகள் சொல்லுகிறார்களா? இது நிற்க. பிராம்மணசரீரத்திற்கு வேதத்தில் அனேக ஸம்ஸ்காரங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் யாதொன்றும் சூத்திரருக்குக்கிடையாது. பிராம்மணனைத்தவிர மற்ற துவிஜர்களுக்கும் ஸம்ஸ்காரங்கள் ஏற்பட்டிருந்த போதிலும், சிற்சில விஷயங்களில் ஒவ்வொரு துவிஜருக்கும் தனித்தனியாக விதியும், பிராம்மணனுக்கு சில விஷயங்களில் விசேஷ விதிகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த ஸம்ஸ்காரங்களில் இரண்டு ஸம்ஸ்காரங்கள் பிறவிக்கு முந்திய ஸம்ஸ்காரங்கள். அதாவது, கர்ப்பாதானமும் பும்ஸவனமும். பிறப்பதற்கு முன்பாகவே பிறக்கப்போகிறவன் பிரம்மஜ்ஞானியென்று தெரிந்துகொண்டு பிராம்மணசரீரத்திற்குள்ள அவ்விரண்டு ஸம்ஸ்காரங்களையும் செய்யக்கூடுமென்பது அவ்வாதிகளின் கக்ஷியா? பிறவிக்கு முன்பாகவே குறிப்பிட்ட காலங்களில் அவைகளைச்செய்யவேண்டுமே. சாஸ்திரப்படி பிராம்மணக்குழந்தை பிறந்தவுடன் ஜாதகர்ம என்ற ஸம்ஸ்காரஞ் செய்யவேண்டியிருக்கிறது. பிறந்த தினத்திலேயே பிறந்தவன் பிரம்மஜ்ஞானியென்று தெரிந்தாலொழிய அந்த ஸம்ஸ்காரத்தைச்செய்வது எப்படி ஸாத்தியப்படும்? இப்படியே, குழந்தை பிறந்து சில தினங்களுக்குள்ளாகவும் மாஸங்களுக்குள்ளாகவும் சில ஸம்ஸ்

காரங்களும், சில வருஷங்களுக்குள்ளாக சில ஸம்ஸ்காரங்களும் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றன. மேற்கண்ட வாதிகளின் கக்ஷிப்பிரகாரம் குழந்தை பிரம்மஜ்ஞானிதானென்று நிச்சயம் பண்ணிக்கொண்டுதான் அந்த ஸம்ஸ்காரங்களை அந்தந்த காலங்களில் நடத்தவேண்டியதாயிருக்கும். மேலும், பிராம்மண சிறுவனுக்கு 7 வயதுக்குமேல் 16 வயதுக்குள்ளாக உபநயனஞ் செய்விக்கவேண்டுமென்று சாஸ்திரவிதியிருப்பதில், பிரம்மஜ்ஞானியான சிறுவனுக்கு உபநயனஞ்செய்துவைக்கவேண்டுமென்பது அர்த்தமா? பிரம்மஜ்ஞானமே ஸித்தித்திருக்கிறவனுக்கு உபநயனம் எதற்காகவேண்டும்? உபநயனத்திற்குப் பிறகு குருகுலத்திலேயே வாஸஞ்செய்துகொண்டு வேதத்தையும் வேதாங்கங்களையும் அப்பியஸிக்க வேண்டுமென்று சாஸ்திரம் சொல்லுகிறதே. பிரம்மஜ்ஞானியே அத்தியயனஞ்செய்ய வேண்டுமென்பதும் சாஸ்திரங்களைப் படிக்கவேண்டுமென்பதும் அவ்வாதிகளின் அபிப்பிராயமா? வித்வானாகிறவரையில் பிராம்மண பிரம்மசாரியும் குருவின் பணிவிடை செய்துகொண்டிருக்கவேண்டுமென்றும் விதிக்கப்பட்டிருப்பதால், முன்னாலேயே பிரம்மஜ்ஞானியாயிருக்கிறவன் அவித்வானாகவுமிருந்து அப்பால் வித்வானாகப்போகிறதாக தாத்பரியமா? பிரம்மஜ்ஞானியாயிருப்பவனே அவ்வாதிகளின் கொள்கைப்படி பிரம்மசரியாசிரமத்தில் பிரவேசிப்பதுபோல் அப்பால் கிருஹஸ்தாசிரமத்திலும் வானப்பிரஸ்தாசிரமத்திலும் பிரவேசிக்கக்கூடுமென்று சொல்லுகிறார்களா? இப்படிப்பட்ட பிரவேசங்களின் உத்தேசம் என்ன? அன்றியும், சுருதியில் பிராம்மணனுக்கு விவிதிஷாஸன்யாஸம் விதிக்கப்பட்டிருக்கிறதே. விவிதிஷாஸன்யாஸமென்பதற்கு, ஞானமில்லாதகாரணத்தினால் ஞானத்தில் இச்சையேற்பட்டு அதை ஸம்பாதிப்பதற்காகச் செய்து

கொள்ளும் ஸன்யாஸம் என்பது அர்த்தம். இந்த ஸன் யாஸத்தைச்செய்துவிட்டு அப்பால் குருவிடமிருந்து கொண்டு வேதாந்த சிரவணம் செய்யவேண்டுமென்று வேதம் விதித்திருக்கிறது. பிரம்மஜ்ஞானிக்கே அஜ்ஞானமேற்பட்டு, ஞானம் வேண்டுமென்று அவர் இச்சித்து சிரவணத்தைச்செய்ய குருவிடம் வருகிறதாகச் சொல்லக்கூடுமா? தவிரவும், ஒவ்வொரு பிராம்மணனுக்கும் கோத்திரமுண்டு. கோத்திரமில்லாத பிராம்மணனே கிடையாது. ஆதியில் மஹான்களாயிருந்த பிரம்மரிஷிகளின் நேர் பரம்பரையில் ஜனித்தவர்கள் பிராம்மணர்களென்றும், அப்படிப்பட்ட ரிஷிகளில் யார் யார் எவரெவருக்கு கூடஸ்தரென்றும் கோத்திரத்தினால் வெளியாகிறது. விவாஹஸம்பந்தமேற்படும்போது ஒரே கோத்திரத்திலுள்ள புருஷனும் ஸ்திரீயும் விவாஹம்செய்துகொள்ளக் கூடாதென்று சாஸ்திரவிதி யிருப்பது எல்லோருக்கும் தெரிந்தவிஷயம். மேற்கண்ட வாதிகளின் கக்ஷிப்படி 'பிறவியினால் பிராம்மணனாகமாட்டான், பிரம்மஜ்ஞானிதான் பிராம்மணன்' என்றால் எல்லா பிராம்மணர்களுக்கும் கோத்திரமெப்படி யேற்படக்கூடும்? கோத்திரவிஷயமான சாஸ்திரவிதிகளுக்குப் போக்கு என்ன? மேலே குறிப்பிட்ட கேள்விகளுக்கெல்லாம் அவ்வாதிகள் பதில்சொல்லக்கூடுமானால் தான் மேல் கேள்விகளைக் கேட்பது அவசியமாகும். ஒன்றுக்கும் பதில் சொல்லக்கூடாதவர்களை மேலும் கேள்விகளைக் கேட்டு தொந்தரவுசெய்வதில் பிரயோஜனமில்லை. கொஞ்சங்கூட ஸாமான்யபுத்தியில் ஏற்படக்கூடிய ஆலோசனைகூட யில்லாமலும், சாஸ்திரத்தைத் தெரிந்துகொள்ளாமலும், வேறுவிதமாகவும் உண்மையைக் கிரமப்படி விசாரிக்காலும், 'பிரம்மஜ்ஞானிதான் பிராம்மணன், மற்றவர் பிராம்மண

னில்லை' என்று ஹடமாகச்சொல்லும் கக்ஷிக்கு மூலம் (ஆணிவேர்) அஜ்ஞான இருளும் துவேஷபுத்தியுமே வேறல்லவென்பது ஸித்தம்.

13. இதைப்போலவே, மனிதன் செய்துவருகிற கர்மாவையும் அவனுடைய குணத்தையும் பார்த்தே அவன் இன்ன ஜாதியைச்சேர்ந்தவனென்று சொல்லவேண்டுமே யல்லாமல் அவனுடைய பிறவியினால் ஜாதியைக்குறிப்பிடக்கூடாதென்றும், ஆகையால் ஒருவரும் பிறவியினால் பிராம்மணனாகமாட்டாரென்றும் கக்ஷி சொல்லுகிறார்கள். இக்கக்ஷியை சரியென்று அங்கீகரித்தால் சாஸ்திரநிபந்தனைகளுக்கு அர்த்தமே யில்லாமல் போய் விடுவதுந்தவிர தர்மங்களை ஆசரிப்பதும் ஸாத்தியப்படாமல் போகும். அந்தந்த ஜாதிகளுக்குத்தக்கபடி வெவ்வேறு ஆசாரணைகள் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருப்பதால், யார் எந்த தர்மத்தை ஆசரிக்கலாமென்பது தெரிய மார்க்கமன்னியில் அவ்வியவஸ்தை ஏற்பட்டு எல்லோரும் கெட்டுப்போகக்கூடியதாயுமிருக்கும். பிறவிமுதல் மரணம்வரையில் குணமும் செய்கையும் ஒரே மாதிரியாக ஒரு மனிதனுக்கு மிருக்கமாட்டாது. ஒரே தினத்தில் ஒரே மனிதனிக்குப் பலவித குணங்களும் செய்கைகளும் ஏற்படலாம். எந்த குணத்தை அல்லது செய்கையை உத்தேசித்து அவனுடைய ஜாதியைத்தீர்மானிப்பதென்பது கஷ்டப்படும். குணமும் செய்கையுமே ஜாதியைக் குறிப்பிடுமானால், ஒவ்வொரு தினத்திலும் ஒரே மனிதனுக்கு ஜாதி மாறிக்கொண்டிருக்கக்கூடியது. ஜாதியே மாறிக்கொண்டிருக்கும்போது, ஆசரிக்கவேண்டிய தர்மங்களும் மாறிக்கொண்டே யிருக்கவேண்டும். மேற்கண்டகொள்கைப்படி ஒரேமனிதன் ஒவ்வொரு தினத்திலும் நான்கு ஜாதிகளிலும் பலதடவை யிருக்கலாம். இப்படிப்

பட்டவனை ஸ்திரமாய் இன்னஜாதியைச் சேர்ந்தவனென்று வது, இன்னதர்மந்தான் இவனுக்கு ஸ்வதர்மம் இன்னது பரதர்மம் என்றுவது சொல்வது ஸாத்தியப்படாது. ஸ்வதர்மத்தையே ஆசரிக்கவேண்டும் பரதர்மத்தை ஆசரிக்கக் கூடாதென்று சொல்லுகிற சாஸ்திரநிபந்தனைகளெல்லாம் வியர்த்தமேயாகும். அன்றியும், மனிதனுடைய குணம் முதலானது கொஞ்சம் வயதுசென்றபிறகுதான் வெளியில் தெரியக்கூடியது. அதுவரையில் அவன் விஷயமாக நடத்தவேண்டிய தர்மகாரியங்கள் இன்னவையென்று குறிப்பிட இடமன்னியில் போய்விடும். முன் பாராவில் சொல்லியபடி தாயாரின் கர்ப்பத்தில் வருகிறகாலம்முதல் ஜாதிக்கிரமப்படி சிலர்களுக்கு வைதிகஸம்ஸ்காரங்களைச்செய்யவேண்டுமென்றும் சிலர்களுக்குக் கிடையாதென்றும் சாஸ்திரத்தில் துலங்குகிறது. பின்னால் வெளியாகக்கூடிய குணத்தையும் செய்கையையும் பார்த்து ஜாதியைத் தீர்மானிக்க வேண்டுமானால், கர்ப்பத்திலும் சிசுபர்வத்திலும் பால்யாவயவஸிலும் துவிஜர்களுக்கு, அதிலும் முக்கியமாய் பிராம்மணர்களுக்கு, நடத்திவைக்கவேண்டிய ஸம்ஸ்காரங்களை நடத்துவது எப்படியோ தெரியவில்லை. சாஸ்திரப்படி துவிஜர்களுக்கு அந்தந்தக்காலங்களில் நடத்தவேண்டிய ஸம்ஸ்காரங்களை நடத்தாமலிருந்தாலும் தோஷமுண்டு, ஸம்ஸ்காரத்திற்குத் தகுதியில்லாத சூத்திரருக்கு ஸம்ஸ்காரத்தைச்செய்துவைத்தாலும் தோஷமுண்டு. வாதிகளின் கக்ஷியை ஏற்றுக்கொண்டால், ஆர்யவைதிகமதமே துலைந்துபோகக்கூடியதாயிருக்கும், சாஸ்திரங்களும் பிரயோஜனமில்லாமல்போகும், கர்மம், பக்தி, ஞானம் என்பதெல்லாம் வெறும் வார்த்தைகளேயல்லாமல் ஸத்கதிக்கு ஸாதனங்களாகமாட்டா. யார் எந்த கர்மத்தைச் செய்யவேண்டும், எவ்

விதமாக பக்தியைச் செலுத்தவேண்டும், எந்த மார்க்கமாய் ஞானத்தை ஸம்பாதிக்க வேண்டும், என்பதெல்லாம் குறிப்பிட முடியாமலே போய்விடும்.

14. குணகர்மவிபாகத்தை முன்னிட்டே சாதுர்வர்ண்யம் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருப்பதாகச் சொல்லுகிற கீதாவாக்கியத்தின் தாத்பரியமென்னவென்று உண்மையைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்ற நல்ல எண்ணத்துடன் கேழ்க்கக்கூடியவர்களுக்கு இனி சொல்லப்போகிற விஷயம் வெளியிடப்படுகிறது. ஜாதிவிஷயமான தத்வங்கள் பூராவையும் விஸ்தாரமாய்ச் சர்ச்சைசெய்து ஸ்தாபிப்பதற்கு பிரகிருத விஷயம் இடங்கொடுக்காதாகையால் இங்கு அவசியமாகச் சொல்லவேண்டியதை மாத்திரம் சொல்லி நிறுத்திக்கொள்ளப்படும். குணகர்மவிபாகத்தை முன்னிட்டே சாதுர்வர்ண்யம் ஏற்பட்டிருப்பது வாஸ்தவம். பள்ளிக்கூடங்களில் இன்ன இன்ன யோக்கியதையுள்ள மாணுக்கன்தான் இன்ன இன்ன வகுப்பில் சேர்த்துக்கொள்ளப்படுவான் என்று விதியிருப்பது போல், முன் ஜன்மங்களின் பயனுக எந்த குணம் தலையெடுத்திருக்கிறதென்பதையும் ஷை ஜன்மங்களில் எந்த செய்கைகள் செய்யப்பட்டிருக்கின்றனவென்பதையும்நன்கு அறிந்துள்ள ஸர்வஜ்ஞனை ஈச்வரன் அவனவனுடைய ஷை குணகர்மத்திற்குத் தகுந்தபடி அந்தந்த ஜாதிவகுப்பில் ஜன்மத்தை யேற்படுத்திவைக்கிறுர். மேலும், எப்படி பள்ளிக்கூடத்தில் பிரதான உபாத்தியாயரால் பரீக்ஷிக்கப்பட்டு ஒரு பையன் ஒரு வகுப்பில் சேர்த்துக்கொள்ளப்பட்டபின்பு அவ்வகுப்பிலிருந்துகொண்டே தன்னுடைய யோக்கியதையை அதிகப்படுத்திக்கொள்ளவோ குறைத்துக்கொள்ளவோ அவனுக்கு கொஞ்சம் ஸ்வாதந்திரியமிருக்கிறதோ, அப்படியே ஒரு ஜாதியில் பிறவி ஏற்பட்டிருக்கிற மனிதனும் தன்

னுடைய குணத்தையும் நடத்தையையும் அதிகமாய் சுத்தப் படுத்திக்கொள்ளவும் அல்லது கெடுத்துக்கொள்ளவும் கூடும். பகவான் கீதையில் குணகர்மமென்று சொன்னது நடப்பு ஜன்மத்தில் ஏறிக்கொண்டும் இறங்கிக்கொண்டு மிருக்க கூடிய குணகர்மமல்ல. மேற்கண்ட கீதாவாக்கியத்திற்குப் பொதுவாய் குணகர்மங்களின் தாரதம்மியத்தைக் கவனித்து அவைகளை நான்கு விதமாக விபாகப்படுத்தி ஒவ்வொரு விதத்தையுடையவர் ஒவ்வொரு ஜாதியில் ஜன்மத்தை அடையவேண்டுமென்று ஈசுவரன் வியவஸ்தை செய்திருக் கிருரென்று அர்த்தம். எப்படி ஒரு வகுப்பில் சேர்த்துக் கொள்ளப்பட்ட மாணுக்கன் தன்னுடைய யோக்கியதையை எவ்வளவு விருத்திசெய்து கொண்டாலும், அல்லது, கெடு த்துக்கொண்டாலும், வருஷமுடிவில் பரீக்ஷையின் பேரில் மேல்வகுப்புக்காவது கீழ்வகுப்புக்காவது அனுப்பப்படும் வரையில் அவனிருந்துகொண்டிருக்கிற வகுப்பைச்சேர்ந்த மாணுக்கனுகவே யிருக்கிருனே, அவ்விதமே ஒரு ஜாதியில் பிறந்தவன் தன் ஜாதிக்குள்ள தர்மங்களை நன்ருக அனுஷ் டித்துவந்தாலும், அல்லது, அனுஷ்டிக்காமலே கெட்டுப் போனுலும் அவனுடைய நடப்புஜன்மத்திற்குரிய பிராரப்த காலத்தின் முடிவுவரையில் அவன் அந்தஜாதியைச் சேர்ந்த வன்தான். இப்படி பிறவியினுல் ஒவ்வொருவருக்கும் ஜாதி இன்னதென்று நிச்சயப் பட்டிருப்பதினுல்தான் எது ஸ்வதர்மம் எது அன்யதர்மமென்று எல்லோரும் தெரிந்து கொண்டு சாஸ்திரத்தை அனுஸரித்து நடந்துவருவது ஸாத் தியப்படக்கூடியதாயிருக்கிறது. நான்காவது வகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கிற மாணுக்கன் நன்ருகப் படித்தாலும் படிக்காவிட்டாலும் அவனுக்கு தான் படிக்கவேண்டிய பாடம் இன்னதென்று குறிப்பிட்டுத்தெரியும். தன்னுடைய

நான்காவது வகுப்புப் பாடத்தைப் படிக்காமல் ஆறுவது வகுப்புப் பாடத்தைப்படிப்பதாகச் சொல்லிக்கொண்டிருந் தால் அவனுக்குக் கெடுதலே பயனாகும். தன் வகுப்புப் பாடத்தை நன்றாய்ப் படிக்கிறவன்தான் சிலாகிக்கப்படுவான். நான்காவது வகுப்பிலிருந்துகொண்டு சரியாய்ப் படிக்காமல் திரிந்துவருகிற மாணுக்கனை அபேக்ஷித்துத் தன்பாடத்தை நன்கு படித்துவருகிற இரண்டாவது வகுப்பு மாணுக்கன் உயர்ந்தவ னென்றே சொல்லவேண்டும். அந்நான்காவது வகுப்புப் பையன் எல்லோராலும் தூஷிக்கப்படுவான்; இரண்டாவது வகுப்புப்பையன் மெச்சப்படுவான். மரியா தையும் மரியாதைக் குறைவும் வகுப்புகளின் உயர்வு தாழ் வை பொருத்த தல்ல. இப்படியே ஜாதி எதுவாயிருந்தா லும் ஸ்வதர்மத்தைச் சரியாய் அனுஷ்டிப்பவரே மெச்சப்படு வார். தர்மங்களுக்குள் உயர்வுதாழ்வுகளைப் பாராட்டக் கூடாது. எதுவாயிருந்தாலும் ஸ்வதர்மந்தான் சிலாக்கியம். பார்வைக்கு உயர்ந்ததாயிருந்தாலும் நன்றாக ஆசரிக்கக்கூடி யதாயிருந்தாலும் அன்யதர்மம் நிகிருஷ்டந்தான். ஸன் யாஸஞ்செய்துகொண்டு பிக்ஷை யெடுத்துண்பது பிராம் மணனுக்குத்தான் சிலாக்கியமேயொழிய மற்ற ஜாதியார் களுக்குக் கூடாததான். க்ஷத்திரியனாகிய அர்ச்சுனனுக்கு பிக்ஷை வாங்குவது ஸ்வதர்மமில்லாததினால் கூடாதென்று ஸ்ரீ கிருஷ்ணன் உபதேசித்தார். இதில் முன் குறிப்பிட்ட வாதிகளின் கொள்கைப்படி நடப்புஜன்மத்தில் வெளியாகிற குணத்தினாலும் செய்கையினாலும் ஜாதியைக் குறிப்பிட வேண்டுமானால் அர்ச்சுனனை பிராம்மணனென்றே சொல்ல வேண்டியது. கீதையின் ஆரம்பத்தில் அர்ச்சுனன் சொல்லு வதையெல்லாம் கவனித்தால் பிராம்மணனுக்கு இருக்க வேண்டிய குணங்களில் அனேகம் அவருக்குப்பொருந்தி

யிருந்த தென்பதில் ஸந்தேகமில்லை. பிராணிகளை ஹிம்ஸிக்க கூடாதென்ற கருணை, பாபத்தில் பயம், ஐசுவர்யத்திலும் விஷயசுகங்களிலும் வெறுப்பு, ஸர்வத்தியாகத்தில் புத்தி, பெரியோர்களிடத்திலும் குருக்களிடத்திலும் பக்தியும் விசுவாஸமும், சிறுவர்களிடத்தில் தயை, தர்மரக்ஷணையில் ஆவல், பொறுமை, ருஜுபர்வம் ஆஸ்திக்யம், உலகத்தில் எல்லோரும் சுகிகளாகவே யிருக்கவேண்டுமென்ற எண்ணம், இவை முதலான பிராம்மண குணங்கள் அர்ச்சுனனுடைய ஸ்வபாவத்திலிருந்ததாக ஸ்பஷ்டமாய்த் துலங்கியதையும், க்ஷத்திரியன் செய்யக்கூடாத காரியமாகிய வில்லையும் அம்பையும் விட்டெறிந்ததையும் பார்த்துங்கூட ஸ்ரீ கிருஷ்ணன் அர்ச்சுனனை பிராம்மணனாக எண்ணாமல் பிறவியின் காரணத்தினால் க்ஷத்திரியனாகவே பாவித்துத்தான் உபதேசித்தார். மேற்கண்ட வாதிகளில் அனேகர் கீதையைப் படிப்பதாகச் சொல்லிக்கொண்டு அதை சிலாகித்தும் வருகிறார்கள். ஆனால் அதில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது, அதின் மூலமாய் என்ன தர்மங்கள் வெளியாகின்றனவென்ற விவரங்கள் யாதொன்றையும் தெரிந்துகொள்ளாமலே மனம்போன போக்கெல்லாம் சாஸ்திரவிரோதமாய் பேசிக்கொண்டும் தர்மவிரோதமாய் நடந்துகொண்டும் வருகிறார்கள். இதெல்லாம் கலியின் காரியமே.

15. ஆனால், கலியின் காரியமே, நாம் என்னசெய்யக் கூடுமென்று எண்ணி அதைரியப்படக்கூடாது. யுகம் கலியுகந்தான். நான்கு யுகங்களடங்கிய சதுர்யுகமென்ற மகாயுகத்தை ஒரு தினத்திற்கு ஒப்பிட்டு, அதில் கலியுகத்தை இரவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இரவில் எங்கும் இருட்டு இருந்துகொண்டுதானிருக்கும். கலியில் அனேகமாய் எங்கும் அஜ்ஞான இருளாகிய மௌட்டியமும் அதினாலுண்

டாகும் அக்கிரமச் செய்கைகளும் பிதற்றல்களும் உலகத்தி லிருந்து கொண்டுதானிருக்கும். புத்தியுள்ள மனிதன் எப் படி இரவில் எங்கும் இருட்டு இருந்தபோதிலும் விளக் கை முன்னால் வைத்துக்கொண்டு தனக்கு இருட்டில்லாமல் செய்து கொண்டு தான் செய்யவேண்டிய வேலையைச் செய் வானோ, அப்படியே உலகம் முழுமையும் அஜ்ஞான இருள டைந்து பெரும்பாலும் கண்மூடித்தனமாகவே ஜனங்கள் தர்மவிரோதமாக நடந்துவந்தாலும், தனக்கு அந்த இருள் இல்லாமலிருக்கும்படியாக வேதசாஸ்திர பிரகாசத்தை முன் னிட்டுத் தனக்கு மோக்ஷமேற்படும்படியான மார்க்கத்தைத் தேடிக் கொள்ளக்கூடும். இருட்டாகிய இரவு தோஷம் எப் படி விளக்குள்ளவருக்குக் கிடையாதோ, அப்படியே வேத சாஸ்திர மார்க்கத்தில் பிடிமானமுள்ளவருக்குக் கலி தோஷ மும் கிடையாது. அன்றியும், மற்ற யுகங்களை உத்தேசித்து ஒரு வகையில் கலியுகம் சிலாக்கியமென்றே எண்ணவேண் டும். இப்படியே சில ரிஷிகளும் அபிப்பிராயப்பட்டிருக்கி றார்கள். வேறு யுகங்களில் அதிக பிரயாஸையெடுத்து கால தாமஸத்தின்பேரில் ஸாதிக்கக்கூடியதைக் கொஞ்சப் பிரயா ஸையினால் இக்கலியில் லகுவாய் சீக்கிரத்தில் ஸாதிக்கலாம். ஆகையால் காலம் கலிகாலமேயென்று அதைரியப்படவேண் டாம். தவிரவும், உலகத்தில் வேறு யார் அதைரியப்பட் டாலும், நல்வழியில் செல்லக்கூடாமலிருந்தாலும், பிராம் மணன் ஒருக்காலும் அதைரியப்படக்கூடாது, நல்வழி யைவிட்டு விலகவுங்கூடாது. பிராம்மணஜன்மத்தின் முக் கிய உத்தேசமாகிய மோக்ஷநிலையானது காலதேசாதிக ளுக்கு அதீதமாயிருப்பதால், உண்மையான பிராம்மணன் கலிகாலமேயென்று அஞ்சக்கூடாது. எது நேர்ந்தாலும் நேரட்டுமென்று மனோதைரியத்துடன் தனக்குரிய தர்ம

மார்க்கத்திலேயே உறுதியாயிருந்து முயன்று வந்தால் நற்கதி ஏற்படாமல் போகமாட்டாது. இப்போதுள்ள பிராம்மணர்களின் முன்னோர்களெல்லோரும் அநுதிகால மாக மஹான்களாகவே யிருந்திருக்கிறார்கள். அநுதிபரம் பரையாக ஓட்டி வந்திருக்கிற பிராம்மண்யம் இப்போது இரண்டொரு பரம்பரையில் க்ஷீணதசையை அடைந்திருந்த போதிலும் அதைச் சீர் திருத்திக்கொண்டுவிடலாம். முயற்சி ஒன்றுதான் வேண்டியது. சரியானபடி முயன்றால் ஏன் இக் கால பிராம்மணர்களுக்கும் மோக்ஷம் கிடைக்காது? அவசி யம் கிடைக்கும். ஸந்தேகப்படவேண்டாம். இப்படியே மற்ற ஜாதியார்களும் சாஸ்திரத்தை அனுஸரித்து விசேஷ முயற்சிகளைச் செய்துவந்தால் நற்கதி அடைவார்களென் பதில் ஸந்தேகமில்லை. நாயனுர்களிலும் ஆழ்வார்களிலும் அனேகர்கள் இக்கலியுக ஜன்மத்திலேயே முயன்று மேல்சென்றவர்களாகக் காணப்படுகிறார்கள். ஆனால் இக் கலியில் தாமஸிக்காமல் சீக்கிரத்தில் முயற்சிசெய்கிறவர் களுக்கு நிச்சயமாய் உத்தேசம் நிறைவேறக்கூடியது. கலி அதிகரித்துவிட்டால் முயற்சி செய்யக்கூடிய சக்தியும் குறை ந்து போய்விடும். அதிலும் பிராம்மணன் வெகு ஜாக்கிரதை யுடனிருந்து கூடியசீக்கிரத்தில் முயற்சிசெய்து ஸம்ஸாரதுக் கத்திலிருந்து தன்னைத் தப்பிவித்துக்கொள்ளவேண்டியது மிகவும் அவசியம். எப்படி இராக்காலத்தில் நாழிகை ஜாஸ் தியாகி பனியும் அதிகமாகச் சொரிந்து நெருப்புப்பெட்டியி லுள்ள நெருப்புக்குச்சியைக் கிழித்தாலும் அது பத்தாமல் போய்விடுகிறதோ, அப்படியே கலி அதிகரித்துவிட்டால் ஜாதிப்பிராம்மண்யம் கொஞ்சங்கூட உபயோகப்படாமலும் அதிக முயற்சியின் பேரில்கூட பிரம்மஜ்ஞானம் உதிக்க ஸாத் தியப்படாமலும் போய்விடும். பிரம்மஜ்ஞானத்திற்காகவே

பிராம்மணஜன்மம் ஏற்பட்டிருக்கிறபடியால் அந்தஜ்ஞான முண்டாகக்கூடாமலே போய்விட்டால் பிராம்மணஜன்மம் கிடைத்தும் பிரயோஜனமில்லையென்றே முடிவாகும். ஆகையால் எல்லோருக்கும் காலதாமஸமன்னியில் தர்மமுயற்சியில் தைரியத்தையும் ஞானமார்க்கத்தில் புத்தியையும் கொடுத்து கூடிய சீக்கிரத்தில் ஸம்ஸாரதுக்கக்கடலைவிட்டுக் கரையேறும்படியான அனுக்கிரகத்தை ஸர்வேசுவரன் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்கப்படுகிறது.

இரண்டாவது பாகம் முற்றும்.

---

# தர்ம விமர்சனம்

---

மூன்றுவது பாகம்

## கலியுகமும் தார்மிகர்களும்

1. இக்கலியுகம் இரவுயுகமென்றும், இதில் தர்ம ஜ்ஞான விஷயமான இருளே எங்குமிருக்குமென்றும், வேத சாஸ்திர பிரகாசத்தை முன்னிட்டு தனக்கு இருளில்லாமல் செய்துகொண்டு, நற்கதி ஏற்படும்படியான முயற்சிகளைச் செய்ய வேண்டியதே புத்தியுள்ள மனிதனுடைய காரிய மென்றும் முன் இரண்டாவது பாகத்தின் கடைசியில் காண்பிக்கப்பட்டது. வேத சாஸ்திரத்தினுல் வெளிப் படுத்தப்பட்டிருக்கிற தத்வவிபரங்களைத் தெரிந்து கொள் வதும், அவைகளுக்கு அனுகுணமாகவே நடந்துவந்து குறிப்பிட்ட அப்பியாஸங்களைச்செய்து தனக்கு ஆத்மானு பூதியை ஏற்படுத்திக்கொள்வதும் உண்மையான ஹிந்துவின் கடமையாகும். மோக்ஷமே ஹிந்துவுக்கு முக்கிய புரு ஷார்த்தமாகவும், தர்மம் அதற்கு நெருங்கிய ஸாதனமான புருஷார்த்தமாகவுமிருப்பதில், தர்ம-மோக்ஷங்கள் ஸித்திக் கும் பொருட்டுள்ள யத்தினத்திலேயே ஒவ்வொரு ஹிந்து வும் இருந்து வரவேண்டியதவசியம். ஹிந்துக்கொள்கை யின் பிரகாரம் மற்ற இரண்டு புருஷார்த்தங்களாகிய அர்த்த மும் காமமும் எது வரையில் தர்மத்திற்கு அனுகூலமா யிருக்கக்கூடியவைகளோ அம்மட்டில்தான் அவைகளின்

புருஷார்த்தத்தன்மை ஒப்புக்கொள்ளப்படுகிறது. தர்மத்திற்கு ஸாதனமாயிருக்கக்கூடாத அர்த்தமாவது காமமாவது புருஷார்த்தமே ஆகமாட்டாது. ஹிந்துக்களல்லாதவர்களுக்கு மோக்ஷஸ்வரூபம் இன்னதென்றே தெரியாது. மோக்ஷத்திற்கு ஸாதனமாகிய தர்மபுருஷார்த்தம் அடையத் தகுந்ததென்ற விபரமும் அவர்களுக்குத் தெரியமாட்டாது. தர்மமோக்ஷங்களுக்கு ஸம்பந்தமன்னியிலிருந்து வருகிற ஸாமான்ய அர்த்தகாமங்களையே அவர்கள் புருஷார்த்தங்களென்று எண்ணிக்கொண்டு இவைகளை ஸம்பாதிப்பதிலேயே பெரும்பாலும் முயற்சியுள்ளவர்களாயிருக்கிறார்கள். இவ்வித மற்ற மதஸ்தர்களும் கடவுள் உண்டென்றும் கடவுளிருக்கிற உயர்ந்த உலகத்திற்குப் போய் அங்கு சுகித்திருக்கலாமென்றும் சொன்ன போதிலும், அப்படி உயர்ந்த உலகசுகங்களில் விருப்பமும் காமமேயாகுமாதலாலும், கடவுளுடன் ஐக்கியரூபமோக்ஷமும் அதற்கு ஸாதன ரூபமான தர்மமும் அவர்களுடைய உத்தேசத்தில் இல்லையாதலாலும், அர்த்த காமங்களுக்கு மேலான புருஷார்த்தமே அவர்களுக்குக் கிடையாதென்பதே ஸித்தம். இப்படி ஹிந்துவுடையவும் ஹிந்துவல்லாதவருடையவும் முடிவான உத்தேசங்கள் வெவ்வேறு என்பதை எல்லோரும் தெரிந்து கொள்ளவேண்டும். முடிவான உத்தேசங்கள் வேறுபட்டிருக்குங்கால், அவைகளைத்தேடும் மார்க்கங்களும், அவைகளுக்கு ஸம்பந்தமான ஸாதனங்களும் வேறுபட்டேயிருக்குமென்பது நிச்சயம். ஆகையால், ஹிந்துக்களின் வேத சாஸ்திரவிதிகள் மற்ற தேசங்களெங்குமில்லாதவிதமாய்த் தனியாயிருக்கின்றனவென்பதும் நியாயந்தான்.

2. தூங்குகிற காலந்தவிர மற்ற எல்லாக்காலங்களிலும் இடைவிடாமல் ஸாதாரண மனிதனால் மனஸினாலும்,

வாக்கினாலும், சரீரத்தினாலும் செய்யப்படுகிற ஒவ்வொரு கர்மாவும், அது நல்லதானாலும் கெடுதலானாலும், அதின் பயனை தகுந்த காலத்தில் பின்னால் கொடுக்குமென்ற தத்வத்தையும், இக்கர்மாக்கள் விருத்தியாகிச் சேர்ந்து கொண்டேயிருந்து ஸஞ்சிதம் என்று சொல்லப்பட்டுவருவதில் இவைகளில் குறிப்பிட்ட பிராரப்தமென்ற சிலவற்றின் பலன்களை அனுபவிப்பதற்காக ஜன்மம் அப்போதைக்கப்போது ஏற்படுகிறதென்ற விபரத்தையும், அறிந்துகொள்ளாமலே ஹிந்துக்களல்லாத ஜனங்கள் உலகத்திலிருந்து வருகிறார்கள். ஹிந்துப்பார்வையில் ஒவ்வொரு மனிதனுடைய ஜன்மத்திலும் முக்கியமாய் அடியிற்கண்ட நான்குவித காரியங்கள் செய்யப்படவேண்டியவை :—

(1) பிராரப்தகர்மபலத்தை அனுபவிப்பது.

(2) கர்ம பந்தத்திலிருந்து விடுதலை அதாவது மோக்ஷம் அடைவதற்குள்ள பிரயத்தினங்களைச்செய்வது.

(3) அப் பிரயத்தினங்களைச் செய்யக்கூடாவிடில், கெட்ட ஸஞ்சித கர்மாக்கள் தொலைவதற்கும் நல்ல ஸஞ்சித கர்மாக்கள் விருத்தியாவதற்கும் வழி தேடுவது.

(4) இனி புதிதான (ஆகாமி) கெட்ட கர்மாவாவது ஏற்படாமலிருக்கும் விதமாக நடந்து வருவது.

இவைகளில் முதலாவதான பிராரப்தகர்ம பலத்தின் அனுபவம் கட்டாயமாய் நடந்தே தீரும். இதற்காக மனிதன் விசேஷ முயற்சியைச் செய்யவேண்டியதில்லை. மேற்கண்ட 2, 3, 4, லக்க காரியங்கள்தான் மனிதனால் முயற்சியின் பேரில் செய்யப்படவேண்டியவைகள். கர்மகதிவிபரத்தையே அறியாத ஹிந்துக்களல்லாதவர்களுக்கு இம்மூன்று லக்க காரியங்களிலும் மனப்பூர்வமாய் பிரவிருத்தியே கிடையாது. எப்படியும் மேலே குறிப்பிட்டபடி கட்டாய

மாயுண்டாகக்கூடிய பிராரப்தானுபவ விஷயமாகவே அவர்கள் பெரும்பாலும் முயற்சியுள்ளவர்களாகக்காணப்படுகிறார்கள். ஹிந்துக்களின் கொள்கையில் எந்த விஷயத்தில் கொஞ்சமேனும் கவலைப்படவேண்டிய காரணமே கிடையாதோ, அந்த விஷயத்தில் மற்றவர்கள் அதிகமாய் கவலைப்பட்டுவது மன்னியில், மனித ஜன்மத்தில் முக்கியமாய்ச் செய்யப்படவேண்டிய மேற்கண்ட 2, 3, 4 லக்க காரியங்களே ஹிந்துக்களின் காரியங்களாயிருக்குங்கால், அவைகள் உண்டென்ற விபரமே தெரியக்கூடாத அஜ்ஞான ஸ்திதியில் ஹிந்துக்களல்லாத ஷை மற்ற இவ்வுலக ஜனங்கள் பூராவுமிருந்து வருகிறார்கள். மேற் சொல்லிய 1 முதல் 4 வரையுள்ள லக்கங்களில் முதலாவது லக்கம்மாத்திரம் விசேஷமாக மதஸம்பந்தமில்லாதது. மற்ற மூன்றும் மதஸம்பந்தமான காரியங்களே. இம்மூன்றுமே மேற்கண்டபடி ஹிந்துப் பார்வையில் பிரதான காரியங்களாயிருப்பதுபற்றி, ஹிந்துக்களின் உலக நடவடிக்கை பூராவும் மதஸம்பந்தமானதாகவே ஏற்பட்டிருக்கிறது. தாய் வயிற்றில் வருகிற கர்ப்பாதான காலம் முதல் ச்மசானம் போய்ச் சேருகிற மரண காலம் வரையில் ஹிந்துவுடைய ஒவ்வொரு காரியத்திலும் மதஸம்பந்த மிருந்தே தீரும். ஹிந்துவின் அபிப்பிராயத்தில் மதம் ஸம்பந்தப்படாத காரியம் மனுஷ்ய காரியமேயில்லை. கேவல லௌகிக காரியம் பசு பக்ஷி மிருகாதிகளின் காரியத்திற்கு ஒப்பாகும். இவ்விதமாக, ஹிந்துக்களுக்கும் மற்றவர்களுக்கும் முக்கிய கொள்கைகளிலும், முடிவான உத்தேசங்களிலும், கைக்கொள்ளவேண்டிய அப்பியாஸங்களிலும், ஏராளமான வேறுபாடுகளிருந்து வருவதினால், ஹிந்து சாஸ்திர விதிகளின் அருமையையாவது அவைகளை அனுஸரித்து நடந்துவரக்கூடியவர்களின் யோக்கியதையை

யாவது நன்முக அறிந்துகொள்ள மற்ற மதஸ்தர்களுக்கு சக்தியிருக்கமாட்டாது. தங்களுடைய கொள்கைகளும் செய்கைகளுமே சரியென்றும், ஹிந்துசாஸ்திரமெல்லாம் தப்பென்றுமே அவர்களுடைய இருளடைந்த அறியா புத்திகளில் எப்போதும் தோன்றிக்கொண்டேயிருக்கும். அவர்கள் பேரில் குற்றஞ்சொல்வதற்கில்லை.

3. ஹிந்துக்களல்லாதவர்கள் மிலேச்சர்களென்று பொதுவாய் சொல்லப்படுகிருர்கள். இக்கலியுகம் பிறந்த பிறகு தான் நாளடைவில் மிலேச்சக்கொள்கைகள் கொஞ்சங் கொஞ்சமாக இத்தேசத்தில் பிரவேசித்து இங்கெங்கும் கலி யிருள் பரவும்படி செய்தன. இத்தேசத்தை முன் எப்போ தும் பாதுகாத்துவந்தவர்களும் விசேஷதர்மரக்ஷணையில் ஊக்கமுள்ளவர்களுமான க்ஷத்திரிய வீரர்கள் அப்பாலுமிருந் திருப்பார்களேயாளுல், மிலேச்சர்களின் அதிகாரத்திற்கா வது மிலேச்சக்கொள்கைகளுக்காவது இத்தேசத்தில் பிர வேசிக்க முடிந்திருக்கமாட்டாது. கலியின் பிரவேசத்திற்கு இடங்கொடுக்க உத்தேசங்கொண்டே பகவான் ஸ்ரீ கிருஷ்ணு வதார ரூபமாகவும் மற்றும் பல விதங்களிலும் ஒற்றுமையா யிருந்து துவாபரயுகக்கடைசியில் மஹாபாரத யுத்தத்தில் க்ஷத்திரியர்களான ஸகல யுத்த வீரர்களும் மடிந்து போகும் படிக்கும், பாக்கியிருந்த யாதவர்களும் வேறு விதமாக மடி யும் படிக்கும், பாண்டவாதிகளும் பின்ளுல் மஹாப்பிரஸ் தானஞ்செய்துவிடும்படிக்கும், இவ்விதமாக இத்தேசம் பூராவும் அனுதையாய்த் துறந்து கிடக்கும்படிக்கும், செய்து விட்டதின் பேரில், அப்பால் மிலேச்சர்கள் காலக்கிரமத்தில் மெள்ளமெள்ளப் பிரவேசித்து இப்பரதகண்டத்தைவியாபித் துக்கொண்டார்கள். அஸ்திரசஸ்திரங்களில் தேர்ச்சியுள்ள ஒரு தகுந்த க்ஷத்திரியவீரன் இந்நாட்டில் பாக்கியிருந்தாலும்

மிலேச்சர்களால் இப்படி வியாபித்துக்கொள்ளமுடியாது. அதாவது, ஈசுவரரே காலரூபியாக யிருந்திருக்கவில்லை யானால், கலியிருள் அதிகமாகத்தடிக்க இடமில்லாமல் போயி ருக்கும். இப்படி ஈசுவரர் காலரூபியாயிருந்தாலும், ஜீவர்கள் இவ்விருளை விலக்கிக்கொண்டு நன்மார்க்கத்தில் வேலைசெய்யும் படியாக ஏற்கனவே வேதசாஸ்திரங்களைக்கொடுத்திருப்பது மல்லாமல் எப்பொழுதுமே ஸஜ்ஜனங்களை பாதுகாப் பவரும் அவரேயாதலால், இவ்விருளைப்பற்றி கவனிக்காமலே நல்வழியிற்சென்று நடப்பு ஜன்மத்தைக் கிருதார்த்தப்படுத் திக்கொள்வதற்கும் இடமேற்பட்டிருக்கிறது. இவ்வித விபரீத காலத்திலும் தர்மமார்க்கத்தில் முயலுவோர் எவரோ அவரை சீக்கிரத்தில் கைதூக்கிவிட்டு நற்கதியில் சேர்ப்பிக்கவும் அவ்வீசுவரரே தயாராகவு மிருக்கிறார். ஆகையால், கலி காலமே யென்று கொஞ்சங்கூட அஞ்சாமல் சாஸ்திரவழியில் பிரயத்தினங்களைச்செய்து வருவதே உண்மையான ஜீவர்க ளின் முக்கியகாரியம். இக்காலத்தில் விபரீத மார்க்கத்தி லிப்பவர்கள் வெகு பெயர்களேயென்று யோசிக்கவும் வேண் டாம். அனேகமாய் ஜனங்கள் கூட்டங்கூட்டமாக கால வேகத்தை அனுஸரித்தே விபரீத மார்க்கங்களில் சென்று பெரும் ஸம்ஸாரக்கடலில் விழுந்து ஆழ்ந்து கிடப்பார்கள். இப்படிகன்னியில் தனக்குள்ள ஸ்வல்ப பலத்தையும் ஸ்வா தந்திரியத்தையும் நல்வழியில் உபயோகப்படுத்தி ஈசுவரர் பேரிலேயே பாரத்தை வைத்துக் காலத்திற்கு எதிரிடையாக நீந்திப்போக யத்தனிப்பவரை ஈசுவரர் கைவிடமாட்டார். அவரே நன்முயற்சியுள்ளோரைக் கரை கொண்டுபோய்ச்சேர் த்து விடுவார். பெருவெள்ளத்தில் எதிர்த்து நீந்திக் கரை சேர்பவர்கள் ஸ்வல்பமாகத்தானிருக்கக்கூடும். இப்படி சாஸ் திரமார்க்கத்தில் யத்தனிப்பவருக்கு தாமும் ஈசுவரானுக் கிரகமுந்தான் பலமே யொழிய ஆள்கூட்டம் பலமாகாது.

4. கலிக்கு விரோதமாக தர்ம வழியில் முயலு வோர்களுக்கு ஈசுவரர் அனுகூலராகவே கருணை யுடனிருக்கக் கூடுமானல், அவரே கலியின் பிரவேசத்திற்கும் எப்படி ஒத்தாசையாயிருந்திருக்கலாமென்று நினைக்கலாம். இப்படி ஒத்தாசையாயிருந்ததற்கும் அவருடைய கருணைதான் காரணம். இந்த உண்மையையும் அறிந்துகொள்ளவேண் டியதவசியம். புண்ணிய பாபரூபமான கர்மாக்கள் பூராவும் மனித ஜன்மத்தில்தான் நடத்தப்படுகின்றன. மனிதனுக்கு கர்மாவினல் ஏற்படக்கூடிய கீழான மிருகாதி ஸ்தானங் களும் மேலான தேவாதிஸ்தானங்களும் கர்ம பலன்களை மாத்திரம் அனுபவிக்கவேண்டிய போகஸ்தானங்களேயன்றி புதிதாகக் கர்மாக்கள் செய்யப்படக்கூடிய ஸ்தானங்களல்ல. ஆகையால், ஒவ்வொரு ஜீவனும் நல்ல கர்மாக்களைச் செய்து சித்த சுத்தியைப் பெற்று நற்கதியை அடையவேண்டு மானல் மனித ஜன்மத்தில்தான் கர்மாக்களைச் செய்யக் கூடியதாயிருக்கிறது. மற்ற மேல் கீழ் போகஸ்தானங்களுக் குப்போயிருக்கிற ஜீவர்களெல்லோரும் அந்தந்த ஸ்தானங் களில் அவரவர்களுக்குள்ள சுக-துக்கபோகங்களை அனுப வித்து முடிந்தவுடன் மறுபடியும் மனித ஜன்மத்திற்கே திரும்பிவந்து தங்கள் தங்களுடைய பூர்வ வாஸனகர்மாக் களுக்குத் தக்கபடி மறுபடியும் கர்மாக்களைச்செய்து வரு கிறார்கள். இப்படி திரும்பவும் மனித ஜன்மத்தை அடை பவர்கள் அப்பூர்வவாஸனகர்மாக்களுக்கு ஒத்ததான அதா வது அனுகூலமான தேசத்திலும் காலத்திலும் ஜனவகுப்பு களிலும் தனித்தனியே பிறவியை அடைவார்கள். அஜ்ஞான மும் அதர்மும் மிகுதியாய் ஸ்வபாவத்தில் குடிகொண்டிருக் கிற ஜீவன் அவ்விரண்டும் அதிகரித்திருக்கக்கூடிய காலத் தில் ஜன்மத்தை அடைந்தால்தான் தன்னுடைய ஸ்வபாவத்

திற்கு அனுஸரணையாக நடந்து வர முடியும். ஸ்வபாவ குணங்களை வெளிக்காட்டக்கூடாத காலத்தில் தன்னுடைய செய்கையே ஸாத்தியப்படக்கூடியதில்லை. இருளடர்ந்த இரவில் ஓடி ஆடித்திரிந்து அட்டஹாஸஞ் செய்யக்கூடிய பிசாச ராக்ஷஸர்களும், துஷ்ட மிருகாதிகளும், பாம்பு, எலி, கோட்டான் முதலான பிராணிகளும் வெளிச்சமுள்ள பகலில் அனேகமாய் வெளிக்கிளம்புகிறதில்லை. பகலில் இவைகள் அடங்கி ஒடுங்கித் தென்படாமலே யிருக்கின்றன. இவைகளின் ஸ்வபாவச் செய்கைகளுக்கு இருள் அவசியம். வெளிச்சத்தில் வேலை செய்யக்கூடிய ஜீவர்களுக்கு பகலும் இருட்டில் வேலை செய்யக்கூடிய ஜீவர்களுக்கு இரவும் இயற்கையாகவே ஏற்பட்டிருப்பது போல், அஜ்ஞான இருளும் அதர்மச் செய்கைகளும் அதிகரித்திருக்கக்கூடிய ஜீவர்களின் ஸ்வபாவ நடத்தைகளுக்கு இடங்கொடுத்துப்போக்குவிட உத்தேசங்கொண்டே ஈசுவரரால் அந்த ஜீவர்கள்பேரிலுள்ள கருணையினால் மஹாயுகத்தில் ஒரு சிறு பாகமாகக் கலியுகமும் அமைக்கப்பட்டிருக்கிறது. இக்கலியுகத்தில்தான் மிகுதியான துஷ்டஸ்வபாவமும் மூடத்தனமு முள்ள ஜீவர்கள் மனித ஜன்மங்களை யெடுத்துத் தங்களுடைய ஸ்திதிக்குத் தகுதியான கர்மாக்களையுஞ் செய்து கர்மபல போகங்களையும் மனிதரூபத்தில் அனுபவிப்பார்கள். இவர்களில் அனேகர் கொஞ்சம் குறைவுள்ள அதர்மங்கலந்த மற்றயுகங்களில் மனிதர்களாயிருப்பது சிரமப்படும். அவரவர்களின் முன்னுள்ள பாபகர்மங்களுக்குத் தக்கபடி மற்ற யுகங்களில் மிருகம், பக்ஷி முதலான பிராணிகளாக அல்லது மரம், புல், பூண்டு ரூபமாக இருந்து வருவார்கள். கலியுகத்தில்தான் அவர்களுடைய மூடத்தனத்துடன் சேர்ந்த கெட்ட ஸ்வபாவங்களுக்குத் தக்கவிதங்களில் மனிதரூபத்தில் அவர்கள்

பூராவும் நடந்து வரக்கூடியது. இவ்விதம் நடந்துவரும் போதும் கொடிய கெட்ட செய்கைகளை மறுபடியும் ஜாஸ்தியாய் செய்யக்கூடியதால், இவர்கள் இக்கலியுகமத்தியிலும் மேற்கண்ட கீழான ஜன்மங்களை அடிக்கடி அடையவுங்கூடும். இவ்வித ஜீவர்களும் விசேஷப்பிரயாசையின்பேரில் நல்வழியில் திரும்புவதற்கும் இந்த யுகத்தில் இடமுண்டு. இக்கலியில் அதர்மம் முக்கால் பாங்காகவும் தர்மம் கால் பங்காகவுமிருப்பதால், பலஜனங்கள் போய்க்கொண்டிருக்கிற கெட்ட மார்க்கங்களில் போகாமல் சிலர் மாத்திரம் சென்று கொண்டிருக்கிற தர்ம மார்க்கத்தில் செல்வதற்குள்ள விசேஷப்பிரயத்தினங்களைச் செய்பவர்களுக்கு நற்கதியும் ஏற்படும். இப்படி நல்வழியில் திரும்பி நற்கதியடைய வேண்டிய பிரயத்தினங்களை மனிதஜன்மத்திலேயே செய்யவேண்டியதாயிருப்பதினால்தான் கொடிய துஷ்ட ஸ்வபாவமுள்ள ஜீவர்களும் அவர்களுக்கு உசிதமான காலத்தில் மனித ஜன்மத்தை அடைந்து அவ்வித யத்தினங்களைச் செய்து கரையேறும் பொருட்டு அவர்களுடைய ஸ்வபாவத்திற்குத் தகுந்த விதமாய் கருணாமூர்த்தியான ஈசுவரரால் கலிப்பிரவேசத்திற்குள்ள அனுகூலகாரியங்களும் முன் குறிப்பிட்டபடி செய்யப்பட்டன.

5. அஜ்ஞானமும் கெட்ட ஸ்வபாவமும் மிக அதிகமாயிருந்தாலும் அதிக நற்குணக் கலப்புமுள்ளவர்களான ஜீவர்கள் அவரவர்களின் நற்குண தாரதம்மியத்திற்குத் தக்கபடி திரேதாயுகத்திலும் துவாபரயுகத்திலும் மனித ஜன்மங்களை அடையக்கூடும். அதர்மத்துடன் கூடியிருக்கிற ஜீவர்கள் கிருதயுகத்தில் மாத்திரம் மனித ஜன்மத்தை அடையவே முடியாது. அந்த யுகத்தில் தர்மமே பூராவும், அதாவது, நான்கு பாதங்களுடனும் இவ்வுலகத்தில்

விளங்கக்கூடியதால், அதர்மஸ்வபாவமுள்ள ஜீவர்கள் அந்த யுகத்தில் அவரவர்களின் பூர்வ கர்மாக்களுக்கு ஒத்தபடி மனித ஜன்மமில்லாமல் வேறு ஜன்மங்களிலாவது வேறு உலகங்களிலாவது இருந்து வருவார்கள். ஸாமான்ய விசேஷ தர்மங்கள் பூராவுமடங்கியதும் ஈசுவரரின் ஆஜ்ஞாரூபங்களு மாகிய சுருதிஸ்மிருதிவிதிகள் கொஞ்சங்கூட தவராமல் இப் பூலோகத்தில் இப்பரதகண்டத்தில் மனிதர்களால் கிருத யுகத்தில்தான் அனுஷ்டிக்கப்பட்டுவரும். இப்பரதகண்டந் தவிர மற்ற தேசங்கள் யாவும் அந்த யுகத்தில் சில பாகங் கள் ஸமுத்திரத்தினுல் மூடப்பட்டும், மற்ற பாகங்கள் மனி தனைத்தவிர மற்ற பிராணிகளாலேயே வியாபிக்கப்பட்டு அவைகளின் போக பூமியாகவுமிருந்து வரும். இப்படி யாவதற்குள்ள காரியங்களுக்கு ஈசுவரரே ஸ்ரீ கலிகாவதார ரூபமாக ஒத்தாசையாக இருந்து இவ்வுலகமெங்கும் இக் கலியுகமுடிவு காலத்தில் அதர்மம் கலந்த ஸ்வபாவத்துடன் கூடிய மனிதர்களேயில்லாமல் செய்தும், உத்தம தார்மிகர் களான சில மனிதர்கள் மாத்திரம் இப்பரதகண்டத்தில் குறிப்பிட்ட புண்ணிய தீரத்தில் வஸித்து வந்து பின் வரப் போகிற தர்மயுகத்திற்குள்ள மனிதஸந்ததிகளுக்கு மூல காரணர்களாயிருக்கும்படி ஏற்படுத்தியும், ஈசுவரர் காலரூபி யாகவே அப்பொழுதும் விளங்குவார். யுகங்களுக்கு மத்தி யிலுள்ள ஸந்தியா காலங்களுள்பட 43,80,000 வருஷங் கள் அடங்கிய மஹாயுகத்தில் 10-ல் 4 பங்கு காலம் கிருத யுக காலம், 3 பங்கு காலம் திரேதாயுக காலம், 2 பங்கு காலம் துவாபரயுக காலம், 1 பங்கு காலம் கலியுககாலம். தர்மமே பூர்ணமாயிருக்கிற கிருதயுகம் முடிவானதற்கப் பால் திரேதா யுகத்தில் கால் பங்கு அதர்மமும் முக்கால் பங்கு தர்மமுமாக விருப்பதில், அவ்வதர்மத்தின் தூண்டுத

வினால் விசேஷதர்மங்களிலிருந்து சிலர்கள் நழுவிப்போய் இப்பாரதகண்டத்தைவிட்டு வெளியேறி மற்ற பிரதேசங்களை கொஞ்சங் கொஞ்சமாக வியாபித்து வருவார்கள். இக் காலங்களில் இவர்களிடம் ஸாமான்ய தர்மங்கள் தானிருந்து வரும். பரதகண்டத்தில் ஸாமான்ய விசேஷ தர்மங்கள் திரேதாயுகத்தில் முக்கால் பங்கும், துவாபரயுகத்தில் அரைப் பங்கும், இருப்பதுபோல் வெளிப்பிரதேசங்களிலும் ஜனங் களிடத்தில் இப்பங்கு வீதப்படியே ஸாமான்யதர்மம் காணப் படும். இவ்விதமாகவே கலியுகத்தில் கால்பங்கு தர்மமும் முக்கால் பங்கு அதர்மமும் எங்கும் காணப்படும். இந்தப் படி அதர்மம் அதிகமாவதோடு, அதர்மம் மிகுந்த மதனிதர் களும் நாளடைவில் அதிகரித்து வருவார்கள். கிருத யுகத்தில் தர்மமே குடிகொண்ட தர்ம மூர்த்திகளான ஸ்வல்ப ஜனங்கள் இப்பூலோகத்திலிருப்பார்கள். அவர்கள் தங்கியிருப்பதற்கு இப்பரத கண்டமே போதுமானது. வெளிப்பிரதேசங்களில் மனிதன் குடியேறிப்போவதற்கு அவசியமேயில்லை. அதர்மமும் காலக்கிரமத்தில் அதிகரிப்ப தினால்தான் பலவிதஸ்வபாவமுள்ள ஜீவர்களும் மனித ஜன் மத்தை அடைந்து ஜனங்களின் கூட்டம் ஜாஸ்தியாகி வெளியிடங்களுக்குக் குடியேறிப் போகும்படி புத்தியுண்டா கிறது. இப்படி வெளியிடங்களுக்குப்போய் ஸாமான்ய தர் மங்களை மாத்திரம் கைக்கொண்டும், அர்த்தகாமங்களையே புருஷார்த்தங்களாக எண்ணிக் கொண்டும், மதஸம்மந்தமில் லாமலே லௌகிக நாகரீகங்களை மாத்திரம் விருத்திசெய்து கொண்டுமிருக்கிற மனித வாழ்க்கைக்கெல்லாம் முன் குறிப் பிட்டபடி கலியுகக்கடைசியில், மஹாயுகப்பிரளயத்தினாலும் வேறு விதங்களினாலும், முடிவு ஏற்பட்டுவிடும். இவ்வித மாகவே, இவ்வுலகத்தில் மற்றதேசங்கள் யாவற்றிலும் ஒவ்

வொரு மஹாயுகத்திலும் கிருதயுகத்தில் சில பாகங்கள் முன்னாலேயே ஸமுத்திரத்தினால் வியாபிக்கப்பட்டும், மற்றவைகளில் மனிதர்களே யில்லாமலும், திரேதா துவாபர கலியுகங்களில் கொஞ்சங் கொஞ்சமாக ஸமுத்திரம் பின் வாங்கி தேசங்கள் விஸ்தாரப்பட்டும், மனிதர்கள் நாளுக்கு நாள் அதிகப்பட்டுவந்தும், கலியின் முடிவில் மறுபடியும் மனிதப்பூண்டே யில்லாமல் காலி செய்யப்பட்டும் வரும். மத ஸம்பந்தத்துடன் கூடிய நாகரீகத்தையுடைய இப்பரதகண்ட மனித வாழ்க்கை ஒன்றுதான் எந்நாளும் அழிவின்றி இப் பூலோகமுள்ளவரையில் நிலைநின்று வரக்கூடியது. காலங்களுக்குத் தக்கபடி பலதேசங்களும், தேசஸ்தர்களும், நாகரீகங்களும், மதங்களும், புதிது புதிதாக உண்டாகியும் அழிந்து கொண்டுமிருக்கிற உலக விசித்திரங்களை ஸாக்ஷியாக நின்றுபார்த்துக்கொண்டு ஒன்றிலும் பற்றுதலில்லாமலும், ஒன்றினாலும் பயமாவது மோஹமாவது ஏற்படாமலும், எக்காலமும் ஸ்திரமாயிருந்து வருகிறதுமல்லாமல், தர்ம மோக்ஷஸாதனமானதும், ஸநாதனமானதும், அருமையானதுமான நாகரீகத்துடன் கூடியுமிருக்கிற இப்பரத கண்ட நாடே உலகத்தில் எல்லோருக்கும் தாய் தேச மென்பதையும் யாரும், அதிலும் ஹிந்துக்கள் எக்காரணத்தினாலும், மறக்கக்கூடாது.

6. பொதுவாக, இப்பரதகண்டத்தை கர்மபூமியென்றும் மற்ற தேசங்களை போக பூமி யென்றும் சொல்வதுண்டு. இங்கு கர்மமென்றால் வர்ணாசிரம தர்மங்களடங்கிய விசேஷ தர்மமென்று அர்த்தம். ஸாமான்ய தர்மங்கள் மற்ற தேசங்களிலுமுள்ளவைதான். ஸாமான்ய தர்மத்தினால் மனிதனுக்கு மனிதத்தன்மை மாத்திரம் ஸித்திக்கிறது. ஸாமான்ய தர்மத்தைக் கூட கைக்

கொள்ளாதவன் இரண்டுகாலுடன் கூடிய மிருகமேயாவான். மனிதன் ஸம்ஸார துக்கங்களைக் கடந்து மேலான தன்னு டைய வாஸ்தவஸ்தானத்திற்குப் போகவேண்டுமானால் ஸாமான்ய தர்மத்துடன் விசேஷ தர்மத்தையும் ஆசரித்து வரவேண்டியதவசியமா யிருப்பதாலும், ஷை மேலான ஆத்ம ஸ்தானத்திற்குப் போவதே மனித ஜன்மத்தின் உத்தேச மானதாலும், ஸாமான்ய தர்மத்தைமாத்திரம் ஆசரித்துக் கொண்டு விசேஷ தர்மத்தை ஆசரிக்காமலிருப்பவனை கர்மா னுஷ்டாதா என்றாவது தார்மிகனென்றாவது சொல்லுகிற தில்லை. இந்தியா என்ற இப்பரதகண்டத்திற்கு வெளிப் பட்ட தேசங்களில் விசேஷ தர்மங்களுக்கே மார்க்கமில்லாத காரணத்தினாலும், ஹிந்துக்கள் ஸாமான்ய தர்மத்தை மாத் திரம் போதுமான கர்மமென்று எண்ணுமலிருப்பதினாலும், மற்ற தேசங்கள் கர்மபூமி யில்லையென்றும் போகபூமியே யென்றும் சொல்லப்பட்டு வருகின்றனவென்று அறிந்து கொள்ளவேண்டும். ஸம்ஸாரமாகிய அகழமுள்ள ஜலத்தில் கீழே ஆழ்ந்துபோய் மூச்சுமுட்டி கஷ்டப்படாமல் மேலே மிதந்திருக்கும்படியாக மொத்திரம் சய்துகொள்வதற்குச் ஸாமான்ய தர்மம் உபயோகப்படக்கூடியது. கரைபோய்ச் சேருவதற்கு ஸாமான்ய தர்மம்மாத்திரம் போதாது. கரையை அடையவேண்டுமானால் நீஞ்சிப்போக வேண்டிய தவசியம். காலதோஷத்தினால் ஜலத்திற்கு விபரீதவேகம் ஏற்பட்டுவிட்டால், எதிர்த்து நீஞ்சிப்போவதும் அவசிய மாகும். இக்கலிகாலத்தில் இவ்வித விபரீதவேகம் வெகு ஜாஸ்தியாயிருப்பதால், விசேஷப்பிரயாசை யெடுத்து அதிக மான அதர்மவேகத்திற்கு எதிரிடையாக நீஞ்சினாலொழிய நற்கதி ஏற்படமாட்டாது. பொய் சொல்லாமலும், திரு டாமலும், வேறு கெட்ட செய்கைகளைச் செய்யாமலுமிருந்

தால், அதாவது, ஸாமான்யதர்மங்களை ஆசரித்து வந்தால், நற்கதி கிடைத்து விடுமென்று புதுப்படிப்புள்ள ஹிந்துக்களில் அனேகர்கள் புலம்பிக்கொண்டு விசேஷ வர்ணாசிரம தர்மாசரணையில் பிரவிருத்தியேயில்லாமல் பாஷண்டர்களாயிருந்துவருகிறார்கள். விசேஷ யத்தினங்களைச் செய்யாமல் பெரும் காவேரிப் பிரவாஹத்தில் மத்தியில் மிதந்திருக்க மாத்திரம் தெரிந்துகொண்டால் ஸமுத்திரந்தான் போய் சேரலாமென்பதையும் கரைபோய்ச் சேருவது ஸாத்தியப் படாதென்பதையும் அவர்கள் தெரிந்துகொள்ளவில்லை. ஷையார்களின் தப்புக்கொள்கையே நாளுக்குநாள் விருத்தியடைந்து இந்நாடெங்கும் விசேஷ தர்மாசரணை மிகவும் குறைந்துகொண்டே வருகிறது.

7. இதற்கெல்லாம் ஒரு முக்கிய காரணம் ஸநாதனமான ஆர்ய வித்தியாப்பியாஸக் கிரமமே மறைவடைந்தும், மிலேச்சப்படிப்பு வழிகளிலேயே எல்லோருக்கும் குழந்தைப் பர்வம்முதல் அப்பியாஸம் உறுதிப்பட்டு மிருந்திருப்பதேயாகும். இவ்வித அப்பியாஸமுள்ளவர்களே காலக்கிரமத்தில் பெரியோர்களாகி இவர்களாலேயே பின்னுள்ள சிறுவர்கள் எல்லோரும் மிலேச்சக்கல்வி வழியிலேயே தயார் செய்யப்பட்டும் வருகிறார்கள். உண்மையான சாஸ்திரீய மார்க்கஸ்தர்களுக்கும், அவர்களின் கொள்கைகளுக்கும் வார்த்தைகளுக்கும் மதிப்புக்குறைவே அதிகரித்தும் வருகிறது. பெரும்பாலும் ஜனங்கள் தாங்கள் கரையேறாமலே பெரும் ஸம்ஸாரக்கடலிலேயே விழுந்து கிடக்கும்படியான ஸ்திதியையே தங்களுக்கு ஸ்திரப்படுத்திக்கொண்டுவருகிறார்கள். பிராசீனமான ஆர்ய வித்தியாப்பியாஸ மார்க்கத்தில் சிறுவர்களை திருப்பிவிட்டாலொழிய எல்லோருக்கும் துர்கதிதானென்பதே நிச்சயம். ஆனால் காலவசத்தினால் இந்த

அபிப்பிராயத்தை வெகு பெயர்கள் சரியென்று ஒப்புக்கொள்ளாமல் கண்மூடித்தனமாகவே ஒருவர் சென்ற வழியில் மற்றவர் சென்றுகொண்டே அனர்த்தக்குழியில் விழுந்து கெட்டுப்போவார்கள். சரியென்று ஒப்புக்கொள்கிறவர்களுக்குள்ளும் அனேகமாய் மற்றவர்கள் எல்லோருக்கும் போதித்து அவர்களும் நல்வழியில் திரும்பிய பின்புதான் தாங்கள் அந்த வழியில் போவதென்ற எண்ணம் சிலர்களிடமிருந்து வருகிறது. இதுவும் சரியன்று. நல்லதென்று தனக்குத் தென்படுகிறமார்க்கத்தில் தான் உடனே திரும்பிப் போய்க்கொண்டே கூடியவரையில் மற்றவர்களையும் அந்த வழியில் திருப்புவதற்கு யத்தினஞ்செய்வதுதான் புத்திசாலியின் லக்ஷணம். பெரும்வெள்ளத்தில் வேகத்துடன் தள்ளி அடித்துக்கொண்டு போகப்படுகின்ற ஸகல ஜனங்களும் திரும்பிய பிறகுதான் தான் ஜலத்தை எதிர்த்து நீஞ்சிக் கரையைப்பார்த்துப் போகவேண்டுமென்று காலதாமஸஞ் செய்தால் தன்னுடைய உத்தேசம் நிறைவேறாமலே போய்விடும். மற்ற எல்லா விஷயங்களிலும் போலவே, முக்கியமாய் வித்தியாப்பியாஸ விஷயத்திலும் இத்தேசத்தில் முதலில் நல்வழியில் திரும்பிச்செல்லவேண்டியவர் பிராம்மணர்தான். காலதோஷத்தினால் இவர் தானாக திரும்ப மாட்டாரென்று உத்தேசித்தே ஈசுவரர் இவர் கட்டாயத்தின் பேரிலாவது திரும்பட்டுமென்று பலவிதமாய் இக்காலத்தில் அனுக்கிரஹஞ் செய்திருக்கிறாரென்று சொல்லவேண்டியதாயிருக்கிறது. எங்கும் பிராம்மணனுக்கு லௌகிக உத்தியோகங் கொடுப்பதைக் குறைத்துவருவதே பிராம்மணனுக்கு ஒரு அனுகூலவிஷயமென்றே தெரிந்துகொள்ளவேண்டும். இக்காலத்திய ஆங்கிலேய பள்ளிக்கூடங்கள் மூலமாய் ஏற்படுகிற விபரீதக்கல்வியே பிராம்மணனைக்

கெடுத்துவருகிறது. ஷை பள்ளிக்கூடங்களில் படித்து வருகிற பையன்களை தூண்டிக்கேட்டு பரீக்ஷித்தால், விபரந் தெரியாமல் பிதற்றிவருகிற உபாத்தியாயர்கள் மூலமாகவும், தாறுமாறான தப்புவிபரங்களைக் கண்டெழுதப்பட்டிருக்கிற புஸ்தகங்கள் மூலமாகவும், அந்தப் பையன்களின் தெளிவு படாத மனதுகளில் ஏறிப் பற்றியிருக்கிற விபரீதக் கொள் கைகள் ஏராளமாய் வெளியாகும். ஸ்வல்பகாலம் முன் வரையில் ஆங்கிலேய பள்ளிக்கூடங்களில் கெடுதல்கள் இவ் வளவு அதிகமாக யிருந்திருப்பதில்லை. இப்போது சில வருஷங்களாகத்தான் ஷை பள்ளிக்கூடங்களில் வெகு ஜாஸ்தியாக விபரீதக்கொள்கைகள் காணப்படுகின்றன. அனேகமாய் உபாத்தியாயர்களிடம் பையன்களுக்கு அதிக மதிப்பு இருக்கக்கூடியதால், மற்றவர்கள் அப்பையன்களின் தப்பான எண்ணங்களை இக்காலத்தில் சீர்திருத்த யத்தினத் தாலும் அனேகமாய் பிரயோஜனப்படுகிறதில்லை. பொறு மையுடன் நிதானித்துக் கேட்டு குணகுணங்களை ஆராய்ச்சி செய்து தெரிந்து கொள்வதற்கே இக்காலத்திய பையன் களில் அனேகர்களுக்கு யோக்கியதையில்லாமல் போய்விடு கிறது. அவர்களுடைய புத்திகளில் ஒருவித அஸௌரமும், பதட்டமும், பிடிவாதமும் அதிகமாய்க் காணப்படுவதால் மற்றவர் என்ன விபரங்களை யெடுத்துச்சொல்லுகிறாரென்று மனவில் வாங்கிக் கொள்ளக்கூடிய சக்தியும் அவர்களிடம் குறைந்து விடுகிறது. இப்படியே நாளுக்கு நாள் மிகுதி யாக ஹிந்துக்கள் விபரீதக்கல்வியினால் கெட்டுப்போய்க் கொண்டு வருகிறார்கள். கால வேற்றுமையினால் இது நடக் கக்கூடியதானாலும், சிலர்களாவது ஆர்யதர்மமார்க்கத்தி லிருந்து வரும்படி செய்வது ஆஸ்திகர்களின் கடமையாகும். இக்காலத்திலும் ஆஸ்திகமதத்தில் சிரத்தையுள்ளோர்கள்

சிலர்களிருப்பதால் இவர்கள் தங்களைச் சேர்ந்த பையன்களை யாவது ஸநாதன வித்தியாப்பியாஸக்கிரமத்தில் சேர்த்து வைத்து அவர்கள் நற்கதிக்கு வரும்படி செய்துவரவேண்டியதவசியம். பெரு வெள்ளத்தில் தன் ஸமீபத்தில் போய்க் கொண்டிருக்கிறவர்களையாவது கைகொடுத்து இழுத்துத்தன் வழியில் திரும்பும்படிசெய்வது பெரும் தர்மமாகும். தன் வறுதிக்குட்பட்டிருந்தும் திரும்பிவர மறுதளிக்கிற பாலகரை பலாத்காரமாய் அடித்தும் திருப்பலாம், தோஷமில்லை. தன்னால் இழுக்கக்கூடாமல் வெகு தூரத்தில் வெகு பெயர்கள் பிரவாஹத்தில் அகப்பட்டு விபரீத மார்க்கங்களில் போய்க்கொண்டிருக்கிறார்களே யென்று துக்கப்படுவதில் பயனில்லை. தன்னால் முடிந்த மட்டில் மற்றவர்களையும் நன் மார்க்கத்தில் திருப்புவதாக உத்தேசங்கொண்டு இந்நாட்டிலுள்ள ஒவ்வொரு விசேஷ தர்ம சிந்தனையுள்ளவரும் பிரயாசை யெடுத்துக் கொண்டால் வெகு பெயர்கள் கடைத்தேறக் கூடும். ஆகிலும், கரைசேற மார்க்கமில்லாமலே அதிகப் பெயர்கள் கால வசத்தினால் ஸம்ஸாரச்சுழல்களில் அகப்பட்டு கஷ்டப்பட்டுக்கொண்டுதானிருப்பார்கள். இது தடுக்கப்படக்கூடாத விஷயம்.

8. ஞானமுண்டானாலொழிய ஸம்ஸார துக்கத்திலிருந்து விடுதலை ஏற்படமாட்டாது. இருளடைந்த இரவு யுகமாகிய இக்கலியில் அபூர்வமாக எங்கேயாவது சில இடங்களில்தான் வேதசாஸ்திரத்தின் மூலமாய் பிரகாசிக்கிற ஞானதீபம் விளங்குமே யல்லாமல் எங்கு முள்ள இருட்டு பூராவும் போகக்கூடியதாக ஸகல இடங்களிலும் தீபங்களைக் காணமுடியாது. ஒருவர் தானிருக்கிற இடத்தில் தீபத்தை வைத்துக்கொண்டு தனக்கு இருட்டில்லாமல் செய்து கொள்ளலாம்; அல்லது, தன் வீடு பூராவையும் பிரகாசப்படுத்திக்

கொள்ளலாம். பெரிய பிரபுவாயிருந்தால் தன்னுடைய பட்டணத்தையே, எங்கும் மின்சாரதீபப்பிரகாசத்தினால், ஜோதிர்மயமாகச் செய்துகொள்ளலாம். இவ்வளவுதான் ஸாத்தியப்படுமேயன்றி அமாவாஸை இரவில் தேசம் பூராவையும் பிரகாசிப்பிக்கக்கூடிய யத்தினம் நடக்கமாட்டாது. யத்தனித்தாலும், இருட்டுள்ள இடங்கள்தான் வெகு அதிகமாயிருக்கும். இது போல், இக்கலியுகத்தில் முன் யுகங்களைப்போல் இத்தேசமெங்கும் அதிகமாக ஆர்யதர்மம் விளங்கும்படி செய்யவேண்டுமென்று எண்ணுவதிலும் பிரயத்தினஞ் செய்வதிலும் பிரயோஜனமில்லை. இக்காலத்தில் ஷை தர்ம விஷயமாக அவரவர்களின் தனித்தனியான யத்தினங்கள்தான் பலிக்கக்கூடியவை, ஸமுதாய யத்தினங்கள் பலிக்கக்கூடியவையல்ல. அதர்மக்கொள்கைகளைப்பிரசாரப் படுத்துவதற்கு ஸமுதாய யத்தினங்களுக்கு இது மிகவும் அநுகூலமான காலம். தர்ம விரோதமாக கொஞ்சம் சொல்வதற்குள்ளாக ஷை சொல் எங்கும் பரவி ஜனங்கள் அங்கீகரித்துப்பிடித்துக்கொண்டு உடனே ஆசரணைக்குக்கொண்டு வந்து விடுவார்கள். சாஸ்திரப்படிக்குள்ள தர்மத்தை அநுஸரித்து இரவும் பகலும் கத்தினாலும் அனேகமாய் காது கொடுத்துக் கேட்பவர்களே தென்படமாட்டார்கள். இதெல்லாம் காலத்தின் காரியம். ஆகையால், ஆர்யதர்மப் பிரசாரத்தில் உத்தேசமுள்ளவர்கள் தங்களுடைய வரைதிக்குட்பட்டவர்களிடமும் தங்களுடைய வாக்கை ஆதரிக்கக் கூடியவர்களிடத்திலும் சொல்லி கொஞ்சங் கொஞ்சமாக ஜனங்களை நல்வழியில் திரும்பச்செய்யலாமே தவிர, பெருங் கூட்டங்களைச்சேர்த்துவைத்தாவது ஸபைகளை ஏற்படுத்தியாவது பிரசாரஞ் செய்யத்தலைப்பட்டால் வீண் காரியமேயாகும்.

9. எக்காலத்திலும் ஸாமான்யமான லௌகிகப்பிர விருத்திகளுக்கு ஸபைகளும் ஜனக்கூட்டங்களும் பிரயோ ஜனப்படக்கூடியவைகள். எந்த விஷயத்தில் வெகு ஜனங் களுடைய அபிப்பிராயத்தை ஏற்றுக்கொண்டு ஆசரணைக் குக்கொண்டுவரலாமோ அந்த விஷயத்தில்தான் பொது ஜனக் கூட்டங்கள் உபயோகமுள்ளவையாகும். எந்த விஷயத்தில் பெரும்பாலும் ஜனங்களுக்கு அறிவு இல்லாமலிருந்து வருகிறதோ அவ்விஷய ஸம்பந்தமாக ஜனக்கூட்டத்தைச் சேர்த்து நடத்தக்கூடிய காரியம் யாதொன்றுமேயில்லை. ரத்தினத்தின் மதிப்பும் தோஷமில்லாமையும் தெரியவேண்டு மானால், ரத்தின பரீக்ஷையில் தேர்ந்தவரிடம் போய் அவர் ஒருவர் சொல்வதைச் சரியென்று அங்கீகரிக்கவேண்டுமே யல்லாமல் ஊர்க்கூட்டங்கூட்டிவைத்து ஊரார்களில் மெஜாரிடியார்களின் அபிப்பிராயப்படி ரத்தினத்திற்கு மதிப்புப் போடுவதுண்டா, அல்லது, அது தோஷமுள்ளது இல்லையென்று தீர்மானிப்பதுண்டா? ஒருக்கால் ஒரு ரத் தின பரீக்ஷைக்காரரிடம் நம்பிக்கையில்லையானால் மற்றொரு ரத்தின பரீக்ஷகரிடமே போய்க் கேட்கவேண்டுமே யொழிய ரத்தினம் இன்னதென்றே தெரியாதவரிடம் போய் ரத்தினத்தைக் காட்டிக் கேட்பது வழக்கமில்லை. வியாதி இன்னதென்று தெரியவேண்டுமானாலும் வியாதியைப்போக் கடிக்கவேண்டுமானாலும் வைத்தியரிடம் கேட்கவேண்டும். சட்டம் தெரியவேண்டுமானால் லாயரைத் தேடிப்போக வேண்டும். இது போல், தர்மம் இன்னதென்று தெரிய வேண்டுமானால் தர்ம சாஸ்திரத்தைத் தெரிந்து கொண் டிருக்கிற பெரியோரைக் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண் டும். இந்தப்பெரியோரின் அபிப்பிராயத்திற்கு விரோத மாகப் பதினாயிரம் பெயர்கள் அபிப்பிராயப்பட்டாலும் இவ்

வெகு ஜன அபிப்பிராயம் தள்ளத்தகுந்ததே யொழிய ஏற்றுக்கொள்ளப்படத்தக்கதல்ல.

ஏகோऽபி வேதவித்₃த₄ர்மம் யம் வ்யவஸ்யேத்₃ த்₃விஜோத்தம꞉ ।
ஸ விஜ்ஞேய꞉ பரோ த₄ர்மோ நாஜ்ஞாநாமுதி₃தோऽ
[யுதை꞉ ॥

இக்கலிகால மஹிமையால், இந்த ஸாமான்ய கிரமங்கூட மாறிப்போய் தர்மாதர்மவிஷயங்களையும் தீர்மானிக்கவும், தர்மங்களை மாற்றவும், பொதுஜனங்களுக்கு அதிகாரமிருப்பதுபோல் வெகு பெரும் லௌகிக ஸ்தானங்களிலிருப்போரும் மற்றவர்களும் அடிகக்டி பிதற்றிக் கொண்டு வருகிறார்கள். அதர்மம் மிகுந்த கலிகால ஜனக்கூட்டத்தின் தீர்மானத்திற்கு தர்மவிதிகளை இழுத்துக்கொண்டு வந்து நிறுத்திவிட்டால், அவைகளின் கதி என்ன ஆகுமென்பது ஒருவருக்கும் சொல்லித்தெரிய வேண்டியதில்லை. சாஸ்திரஜ்ஞானக்கண்ணில்லாமல் குருட்டுத்தனமே பிரதானமாயிருந்து தர்மவிரோதிகளே பெரும்பாலும் அதிகரித்திருக்கக் கூடிய ஸபையிலும், திரௌபதியைப்போல், தர்ம தேவதைக்கு யாதொரு ஹானியும் கெடுதலும்முடிவில் ஏற்படக் கூடியதில்லையாயினும், தர்மதேவதையைக்காப்பாற்றுகிற பரமாத்மா எப்பொழுதும் விழிப்புடனேயிருக்கிறாரென்பதும் ஸத்தியமாயினும், தற்காலத்தில் வெளிப்பார்வையில் சிற்சில தொந்தரவுகளும் துக்கங்களும், அதினால் தர்மதேவதையின் உக்கிரமான சபதமும் (ஶபதம்) ஏற்படக்கூடியவைகளே. இவ்விதத் தொந்தரவுகளுக்கும் துக்கங்களுக்கும் காரணபூதர்களாயிருப்பவர்களின் துர்கதிகளும் காலாந்தரத்தில் தெரியக்கூடியவைதான். தர்மதேவதையின் சபதம் வீண் போகமாட்டாது.

10. அன்றியும், அறிவில்லாத ஜனங்கள் நாளுக்குநாள் அதிகமாக அதர்மத்தைக் கைக்கொள்வதுடன் சர்க்காரின் சட்டதிட்டம் மூலமாகவும் அதர்மத்தை உறுதிப்படுத்திக் கொள்ளவும் யத்தனித்து வருகிறார்கள். ஜனங்கள் அவரவர்களின் தனித்தனி மதஸம்பந்தமான தர்மங்களை அவரவர்கள் அநுஷ்டித்து வருவதில் விபரீதக்கொள்கைகளையுடைய மற்றவர்களால் அவர்களுக்கு இடைஞ்சலாவது கெடுதலாவது ஏற்படாமல் பாதுகாக்கவேண்டிய பொறுப்பு ராஜாவைச்சேர்ந்தது. இது ராஜாவின் முக்கிய கடமைகளில் ஒன்று. ஷை தர்மங்களை மாற்றுவதற்காவது, ஒருவருடைய தர்மத்தை மற்றவருக்கு ஏற்படுத்துவதற்காவது, தர்மாதர்மங்களை தீர்மானிப்பதற்காவது ராஜாவுக்கு அதிகாரமில்லை. இப்படியிருக்க இத்தேசத்தில் 1857-ம் வருஷம் வரையில்நேரான பிரிடிஷ் ராஜாங்க ஆளுகையில்லாமல் கம்பெனியார்களின் ஆளுகை நெடுநாள் நடந்து வந்ததில், ஆர்யதர்மத்தில் சிரத்தையில்லாத பல நாஸ்திககல்பர்களின் தூண்டுதலின்பேரில் 1830-ம் வருஷத்தில் ஸதீ விஷயமாகவும் 1856-ம் வருஷத்தில் விதவைகளின் புனர்விவாக விஷயமாகவும் சில சட்டங்களேற்பட்டன. அப்பால் விக்டோரியா மஹாராணியின் நேர் ஆளுகை ஏற்பட்டவுடனே ஷை விபரங்களை அறிந்துகொண்டு இனி மத விஷயத்தில் ராஜாங்கத்தார்கள் பிரவேசிக்கமாட்டார்களென்று பிரஸித்தி பத்திரிகை மூலமாக அம்மஹாராணியின் உறுதியான வாக்கு 1858-ம் வருஷத்தில் அளிக்கப்பட்டது. இந்த அருமையான வாக்கு நெடுநாளாக பெரும்பாலும் காப்பாற்றப்பட்டு வந்திருக்கிறது. இப்பால் சில காலங்களாக மறுபடியும் கலியின் ஜாஸ்தி ஏவுதலுக்குட்பட்டு பல தர்ம விரோதிகள் அஜ்ஞானி ஜனகூட்டங்களிலும் லௌகிக சட்ட ஸபைகளிலும் ஆர்ய

விவாக ஸம்பந்தமான பெரும் வைதிக தர்மங்களைக்கெடுத்து விட அடிக்கடி பலமாய் முயல்கிறார்கள். ஹிந்துக் கொள்கையில் விவாகம் வைதிக ஸம்ஸ்காரமென்றும், லௌகிக ஒப்பந்தமில்லையென்றும், நன்றாகத்தெரிந்து கொண்டே இவ்வித விபரீத முயற்சிகளைச் செய்து வருகிறார்கள். விவாகத்தை லௌகிக ஒப்பந்தமாகவே ஏற்படுத்திக் கொண்டிருக்கிற மகம்மதியர்கள் பார்ஸீகர்கள் கூட இவ்வித சட்டங்கள் தங்களுடைய மதங்களுக்கும் ஆசாரணைகளுக்கும் கொஞ்சம் விரோதப்படக்கூடியதால் அவைகள் தங்களுக்கு வேண்டியடியதில்லையென்று ஆக்ஷேபிக்கும் போது ஹிந்துவாயிருப்போர்களே இவ்வித விபரீத சட்டங்கள் வேண்டுமென்று போராடினால், இவர்களுக்கு மதவிசுவாஸமேயில்லை யென்றும், இவர்கள் மானாவமானத்திற்கு அஞ்சவேயில்லையென்றும், தங்களுடைய மரியாதையைதத் தாங்கள் காப்பாற்றிக் கொள்ளக்கூடியவர்களில்லை யென்றும், கலியால் தூண்டப்பட்ட அதர்ம நோக்கங்களே இவர்களிடம் குடிகொண்டு இவர்களைக்கெடுத்து வருகிறதென்றுமே சொல்ல வேண்டியதாயிருக்கிறது. பிரிடிஷ் ராஜாங்கம் இவ்விஷயத்தில் ஒழுங்காகவேயிருந்து தர்ம விரோதமான சட்டங்களை ஏற்படுத்தாமலிருந்தபோதிலும், ஜனங்களே தங்களுடைய தலைகளில் தாங்களே மண்ணை வாரிப்போட்டுக்கொண்டு தாங்கள் கெட்டுப் போகும்படியான வழியில் ராஜாங்கத்தைக் கட்டாயப்படுத்தி சட்டங்கள் ஏற்படும்படி செய்துவிட முயற்சிக்கிறார்கள். ஆகிலும், பெரும் சக்கிரவர்த்தி ஸ்தானத்திலிருக்கிற ராஜா கவனிக்கவேண்டியது ஒன்றுண்டு. ஹிந்துக்கள் எல்லோரும் ஏகோபித்து ஒற்றுமையாகயிருந்து ஷெ விபரீத சட்டங்களை ஏற்படுத்தச் சொன்னால் ஒருக்கால் ஏற்படுத்தலாமென்று எண்ணக்கூடும். நியாயமாய்ப் பார்த்தால்,

மதவிதிகள் விஷயத்தில் இப்படிச்செய்வதற்கும் முன் குறிப் பிட்டப்படி ராஜாவுக்கு அதிகாரங்கிடையாது. மேலும், மேற்கண்ட விபரீத சட்டங்களுக்கு ஒருகாலத்திலும் ஹிந் துக்கள் ஏகோபித்து எல்லோரும் ஒற்றுமையாயிருக்கக்கூடி யதுமில்லை. சில ஆஸ்திகர்களாவது ஆக்ஷேபித்துக்கொண்டே யிருப்பார்கள். இவ்வித ஆக்ஷேபணைக்கு எதிரிடையாகவும், ஆஸ்திகர்களையும் தர்மவிரோதிகளின் வழியில் நடந்துவரும் படியாகக்கட்டாயப்படுத்துகிற விதமாகவும், ஷை சட்ட நிர் மாணத்தின்பொருட்டு ராஜப்பிரதிநிதியின் முடிவான ஸம் மதிகொடுபட கொஞ்சமும் நியாயமேயில்லை யென்பதையும், தர்மாதர்ம விஷயமான பைசல் முன்சொல்லியபடி ஜனங்களு டைய மெஜாரிடியார்களின் அபிப்பிராயத்தைப் பொறுத்த தில்லை யென்பதையும், கவர்ன்மெண்டார் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருந்தால் போதும். ஆனால், சர்க்கார் மூலமாக விபரீத சட்டங்கள் ஏற்படக்கூடாமலிருந்து விட் டால், ஜனங்கள் ஒழுங்காக இருந்து விடுவார்களென்று சொல்லுவதற்கேயில்லை. பெரும்பாலும் ஜனங்கள் கால தோஷத்தினால் தங்களுடைய அதர்மக்கொள்கைகளையே அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்துவிடுவார்களென்றே தோன்றுகிறது. இவர்களுடைய தர்மவிரோதமான ஆசாரணை களுக்கு ஒரு பக்க பலமாக சட்டங்களு மிருந்தால் நல்ல தென்று எண்ணுகிறார்களே யொழிய ஷை சட்டங்களேற் பட்டால்தான் தங்களுடைய கொள்கைகளை ஆசாரணைக் குக் கொண்டுவருகிறதென்ற எண்ணத்துடன் கக்ஷி செய்ய வில்லை. தர்ம ரூபமான ஈசுவரருடைய அழியக்கூடாத சட்டத்தையே ஒதுக்கிவைத்து விடுகிற ஜனங்கள் மனித ராஜாங்க சட்டத்தைப் பெரியதாக பாவித்துக் கட்டுப்படக் கூடியவர்களில்லை. காலவேகத்தினால் ஸமுத்திரத்தை நோக்கி

இழுக்கப்பட்டு பிரவாகத்தில் போய் கொண்டிருப்பவர்களுக்கு ஜலப்போக்கை அநுஸரித்து கொஞ்சம் காற்றும் வீசியடித்தால் எப்படியோ அப்படி சட்டமும் அவர்களுடைய போக்குக்குக் கொஞ்சம் உபயோகப்படக் கூடியதேயல்லாமல் அதுவே முக்கியமல்ல. காற்று இல்லாவிட்டாலும், ஜலவேகம் அவர்களை இழுத்துப் போய்கொண்டுதானிருக்கும்.

11. நெடு நாளாக மதஸம்மந்தமாகவே ஹிந்துக்கள் என்ற பெயர் இத்தேசவாஸிகளுக் கிருப்பதாக எண்ணப்பட்டு வந்திருக்கிறது. ஆனால், இப்போது மேற்கண்ட பல விதங்களில் ஹிந்துக்களுக்குள்ளாகவே பெரும்பாலும் ஜனங்கள் தர்மமார்க்கத்திலிருந்து விலகிப்போய் பேருக்கு மாத்திரம் தங்களை ஹிந்துக்களென்று சொல்லிவரும்படியான காலம் வந்துவிட்டதென்றே சொல்லலாம். சில நூற்றாண்டுகளுக்கு முன்பாக கிரீஸ் முதலான மேற்கு தேசத்து யவனுதிகள் ஸிந்து தீரத்திலும் அதற்கப்பாலுள்ள தேசத்திலு மிருந்திருக்கிற ஜனங்களை ஸிந்துக்கள்-ஹிந்துக்கள் என்று அழைத்தார்கள். இதை அநுஸரித்து ஹிந்துக்கள் என்ற பெயர் ஸ்திரமாக ஏற்பட்டது. ஆகையால், உண்மையில் இது தீரத்தை ஒட்டிவந்த பெயரேயல்லாமல் மதத்தை அநுஸரித்துவந்த பெயரல்ல. இந்தப்படியே இக்காலத்திலும் மதஸம்மந்த மில்லாமலே ஹிந்துக்கள் என்ற பெயர் ஜனங்களுக்கு ஏற்பட்டிருக்கிற தாகவே எண்ண வேண்டியதாயிருக்கிறது. புதிதாய் ஸமீபகாலங்களில் உண்டாகி யிருக்கிற பௌளத்த மதம், ஜைனமதம், மகம்மதீய மதம், கிருஸ்துவ மதம், ஸொராஷ்டிரீய மதம் முதலானதுகளில் பிரவேசிக்காதவர்களும் இந்த இந்தியா தேசவாஸிகளுமாயிருப்பவர்களை பொதுவாக ஹிந்துக்கள்

என்று சொல்வதாகவே உறுதிப்பட்டுவருகிறது. வேத சாஸ்திரதர்மங்களுக்கு நேர் எதிரிடையாகவே நடந்து கொண்டும் தங்களுடைய மார்க்கங்களிலேயே மற்றவர்களை யும் சேரும்படி செய்துகொண்டுமிருப்பவர்கள் தங்களை ஹிந்துக்களென்றே சொல்லிக் கொள்கிறார்கள். காலரீதியில் வெகு ஜனகூட்டம் அ்டி யார்களின் மார்க்கங்களிலேயே யிருக்கக்கூடியதால், தேசத்தை ஒட்டிய பொதுப்பெயராக வே ஹிந்துக்கள் என்ற பெயர் அவர்களுக்கும் இருக்கட்டு மென்றும், தர்ம புருஷார்த்தத்தை கைக்கொண்டு மோக்ஷத் தின் பொருட்டு ஆஸ்திகராகயிருந்து வேதசாஸ்திர மார்க் கத்தில் முயற்சிப்போருக்கு தர்மீ, அல்லது தார்மிகர், என்ற தனிப்பெயர் இனி இருப்பதே சரியென்றும் தோன்றுகிறது. ஆஸ்திகர்களை இப்படிப் பிரித்துத் தனிப்படுத்தி விட்டால், இவர்களின் நபர் எண்ணிக்கை மிகவும் குறைந்து விடுமென் றும், எண்ணிக்கைக் குறைவினால் பலக்குறைவும் மதிப்புக் குறைவும் ஏற்படலாமென்றும் சிலர்கள் தப்பாக நினைக்கக் கூடும். இக்கலி காலத்தில் உத்தம புருஷார்த்தமாகிய மோக்ஷத்திலேயே உண்மையாக உத்தேசங்கொண்டு அதற் காக தர்மமார்க்கத்தில் பாடுபடுகிறவர்கள் ஸ்வல்பமாகத்தான் இருக்கக்கூடும். தர்ம மோக்ஷங்களில் உத்தேசமேயில்லாமல் விபரீதவழியிற்சென்று கொண்டிருப்பவர்களைச் சேர்த்து வைத்துக்கொண்டு தன்னுடைய மதத்தில் ஆள் கூட்டம் ஜாஸ்தியாக இருக்கிறதென்று மேலுக்குச் சொல்லிக்கொண் டிருப்பதில் பிரயோஜனமில்லை. நபர்கள் கொஞ்சமாயிருந்தா லும் சுத்தத்தன்மைதான் பெரியது. வீண் கூட்டம் பெரிய தாகமாட்டாது. இக்கலியுகாந்தத்திலும் சுத்தர்களாயிருக் கிற சில ஆஸ்திகர்கள்தான் மிஞ்சப்போகிறார்கள். அசுத்த மான பெருங்கூட்டமெல்லாம் அழிந்து போகப் போகிற

தென்பதாகவே வெளியாகிறது. மதிப்பும், பலமும், ஸ்திரத் தன்மையும் குணத்தினாலும் யோக்கியதையினாலும் ஏற்படக் கூடியவைகளே யொழிய ஜாஸ்தி நபர்கூட்டத்தினாலல்ல. ஆகையால், இனி உண்மையான தார்மிகர்கள் எல்லோரும் அஸத்ஸஹவாஸங்களிலிருந்து தங்களை பூராவும் விடுவித்துக் கொண்டு ஒதுங்கியிருந்து தங்களுடைய தர்மகாரியங்களை கவனித்து நடத்திவருவதே நல்லது. இப்படிச்செய்தாலன்றி இக்காலத்தில் சரியான தர்மகாரியங்கள் ஸாத்தியப்படக் கூடியவையல்ல. தாக்ஷிண்யத்தினாலாவது பந்து முறையில் அபிமானத்தினாலாவது அஸத்ஸஹவாஸம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறவரையில் தர்மம் கெட்டுப்போய்க்கொண்டே யிருக்கும். தர்மம் வஸித்திக்க வேண்டுமானால் அதார்மிக கோஷ்டியைவிட்டு விலகியே தீரவேண்டும். இப்படி விலக தைரியமில்லாதவர்கள் அதார்மிகபெருங்கூட்டத்திலேயே யிருந்து வரட்டும். தைரியத்துடன் விலகி தார்மிகராகவே யிருப்பவர் அதார்மிகர்களுடன் எவ்வித நெருங்கிய ஸம்பந்தத்தையும் வைத்துக்கொள்ளக்கூடாது. ஆஹாராதிகளையும் விவாஹம் முதலான ஸம்பந்தங்களையும் தார்மிகர்களுக்குள்ளாகவே நடத்திக் கொள்ள வேண்டியதும் அவசியமாகும்.

12. இக்காலத்தில் அனேகமாய் அதர்ம நடத்தையில் விசேஷ பயமாவது லஜ்ஜையாவது இல்லாமலே ஜனங்கள் நடந்து வருவதால், அதார்மிகர்களிடமிருந்து தார்மிகர்களை பிரித்தெடுப்பது மிகவும் லேசு. வெளிப்பார்வையிலிருந்தும், வார்த்தைகளிலிருந்தும், நடத்தையிலிருந்தும் இன்னார் தார்மிகர், இன்னார் அதார்மிகரென்று அனேகமாய் கண்டுபிடிக்கலாம். வெளிப்பார்வையும் வார்த்தைகளும் சிலர்களின் விஷயத்தில் அவர்களுடைய உண்மையான உள் ஸ்வபாவத்திற்கு எதிரிடையாகவுமிருக்கக்கூடும். இப்படி எதிரிடையாயிருக்

க்கூடியது நடத்தையினால்தான் வெளியாகலாம். வெளித்தோற்றம், வார்த்தை, நடத்தை இம்மூன்றிலும் ஒற்றுமையாக தார்மிகத்தன்மை யாரிடத்தில் வெளியாகின்றதோ அவர் தார்மிகர்தான் என்பதில் ஸந்தேகமில்லை. இப்படியே அம்மூன்றிலும் ஒரே விதமாக தர்மவிரோதத்தன்மை யாரிடம் வெளியாகின்றதோ அவர் தார்மிகரல்ல வென்பதும் நிச்சயமே. எவரிடத்தில் அடி மூன்றும் ஒற்றுமையாயில்லாமல் சிலதுகளில் தார்மிக லக்ஷணமும் சிலதுகளில் அதார்மிக லக்ஷணமும் வெளியாகின்றதோ அவரை இருகக்ஷியிலும் சேர்க்காமல், எந்த விஷயத்தில் அவரிடம் அதார்மிகத்தன்மை காணப்படுகிறதோ அந்த விஷயத்தில் அவரை சீர்திருத்தக்கூடுமானால் அப்படியே செய்து அவரை தார்மிககோஷ்டியில் சேர்த்துக்கொள்ள முயற்சிக்கவேண்டும். உண்மையில் சிலர்கள் அந்தரங்கத்தில் வேதசாஸ்திரங்களில் உறுதியான நம்பிக்கையுள்ள கிருஹஸ்தர்களாகவே யிருந்துகொண்டு அவைகளில் என்ன சொல்லப்பட்டிருக்கின்றன வென்பதைத் தெரிந்து கொள்ளாமலும் கெட்ட ஸஹவாஸத்தினாலும் விபரீத வேஷத்தை தரித்துவருவார்கள். சிலர்கள் தார்மிகர்களைப்போலவே மேல்வேஷத்தை ஒழுங்காக வைத்துக்கொண்டு ஆசரணை விஷயத்தில் சாஸ்திரவிதிகளை அறியாமல் தனக்குத்தோன்றியபடி பேசிக்கொண்டும் நடந்துகொண்டும் வருவார்கள். வேத சாஸ்திரங்களில் நம்பிக்கையில்லாமலே சிலர்கள் தங்களுக்கு சுற்றத்தார்களால் லௌகிக அஸௌகரியங்கள் உண்டாகக்கூடாதென்று எண்ணி மேல் வேஷத்தை மாத்திரம் சரியாக தரித்துக்கொண்டு அந்தரங்கத்தில் விராத்தியர்களாகவே யிருப்பார்கள். வேதசாஸ்திர வாக்கியங்களில் நம்பிக்கையில்லாதவர்களிடம் அந்த நம்பிக்கையை உண்டாக்கிவைப்பது மிகவும் சிரமமான காரியம். அவர்களு

டைய புத்திகளின் போக்கை அனுஸரித்து அவர்களின் மன சுகளில் படும்படியான யுக்திகளைச்சொல்லி அவர்களை திருப் பக்கூடுமானல்தான் அவர்கள் நல்வழிக்கு வரக்கூடும். ஷை நம்பிக்கை அந்தரங்கத்திலிருந்துங்கூட தப்பாகப் பிதற்றிக் கொண்டும் விபரீத வேஷத்தை தரித்துக்கொண்டு மிருப்ப வர்களை கொஞ்சம் லெகுவாய் திருப்பிவிடலாம். இரண் டொரு உதாஹரணங்களை யெடுத்துக்கொள்வோம்.

13. சிலர்களுக்கு ஸநாதன ஆர்யமதமே உத்தம மென்ற எண்ணமிருந்துகொண்டிருக்கிறது. அவர்களிடம் ஸ்வதேசாபிமானமும் விசேஷமாய் காணப்படுகிறது. மோக்ஷந்தான் பரம புருஷார்த்தமென்று சொல்லப்படுகிற வார்த்தையிலும் விசுவாஸமிருக்கிறது. ஈசுவர பக்தியும் அவர்களிடத்திலிருப்பதாக வெளியாகிறது. இவ்வளவும் சேர்ந்திருந்தும் மேல் பார்வை விபரீதமாக இருந்து வரக் கூடும். தர்மகர்மாங்கபூதமானதும் சௌளமென்ற வே தோக்த ஸம்ஸ்காரத்திஞல் வைக்கப்பட்டிருந்ததுமான குடு மியை இப்படிப்பட்டவர்கள் ஏன் கத்திரித்துக்கொள்ள வேண்டுமென்று அவர்களைக் கேட்டால் ஸௌகரியத்தின் பொருட்டென்று சொல்லுகிருர்கள். கேசத்தை கத்திரித்து விடுவதிஞல் ஏற்படக்கூடிய இவ்வித ஸௌகரியத்தை அவர் கள் அன்புடன் நடத்திவருகிற பெண்ஜாதிகளுக்குச்செய்து வைக்கிறதில்லை. உண்மையில் ஸௌகரியமாவது இருக்கிற தோ வென்று கவனித்தால், அதுவுமில்லையென்றே வெளி யாகும். தலை ரோமத்தை கத்திரித்துக் கொள்கிறவர் முக க்ஷௌரத்தை அடிக்கடி செய்துகொள்ளும்படியான தொந் தரவுக்கு உள்படவேண்டியதாயிருக்கிறது. அனேகர்கள் தலையில் முன்புரத்தில் மாத்திரம் கொஞ்சம் அதிகமாக ரோமத்தை வைத்துக்கொண்டு, அடிக்கடி விசேஷ எண்

ணைய் தடவி வகுடு எடுத்து வாரி விட்டுத் தடவிக்கொண்டே யிருக்கிற கிரமத்தைப்பார்த்தால் ஸௌகரியத்தின்பொருட்டு இப்படிச்செய்கிறார்களென்று சொல்வதற்கில்லை. இங்கிலீஷ் காரர் முதலான மிலேச்ச மதாந்தரஸ்தர்களை பார்த்துவிட்டு குடுமியில்லாமல் உருண்டைத்தலையுடனிருப்பதுதான் அழ கென்று பிரமை கொண்டு சிகையை அப்புறப்படுத்துகிறார் கள். இப்படிப்பட்டவரால் தன் முன்புறரோமம் ஒழுங்கா யிருப்பதிலும், தன் முகம் அழகாயிருக்கிற தென்ற பாவனையிலுமே பாமரஸ்திரீகளைப்போல் அதிககாலம் செல வழிக்கப்பட்டுவருகிறதென்றே சொல்வதற்கு காரணம் அடிக்கடி துலங்குகிறது. ஒரு சிறு காற்றடித்து முன் ரோமம் கொஞ்சம் கலைந்துவிட்டால் தூக்கப்பட்டு அதை உடனே சீர்திருத்திக்கொள்கிறார். இவ்வித பிரயாசையினால் இவருடைய முகம் அழகாயிருப்பதாவது வாஸ்தவமோ? அதுவுமில்லை. இவருடைய முகம் அழகாயிருக்கிறதென்ற பாவனை மற்றவர்களை உத்தேசித்தே யொழிய, தன்னை உத் தேசித்தல்ல. மற்றவர்கள் தன்னைப்பார்த்து அழகாயிருப்ப தாக எண்ணிக்கொள்ளவேண்டுமென்றே இவருடைய முக் கிய உத்தேசம். இவருடைய சுற்றத்தார்கள் இவரைப் பார்த்த மாத்திரத்தில் இவர் பேரில் வெறுப்புடன் ஜுகுப் ஸை அடைகிறார்களேயல்லாமல் ஸந்தோஷப்படுகிறவர்கள் கிடையாது. சிகையில்லாமல் தலையை கத்திரித்துக்கொண்டு முகக்ஷௌரத்தை மாத்திரம் செய்துகொண்டவரின் முகம் வஸ்திரத்தினால் மூடிக்கொள்ளப்படாத தலையுடன் கூடிய த்விஜ விதவையின் முகத்தைப்போலவே காண்கிறதே தவிர அது அழகுள்ளதாக அவரைச் சேர்ந்தவர்கள் எண்ணுவ தில்லை. அன்றியும், சிகையில்லாமல் செய்யப்பட்ட ஸந்தி யாவந்தனம் முதலான நித்தியகர்மங்களும் தேவ பிதுரு

காரியங்களும் வியர்த்தமே யாகும். கர்மங்களைச் செய்து அவைகளின் பிரயோஜனத்தை அடையவேண்டுமாஞல் அவைகளுக்கு சாஸ்திரத்தில் குறிப்பிடப்பட்ட வெளிப் படையான நிபந்தனைகளேயும் அனுஸரித்து நடந்தால் தான் அந்த பிரயோஜனம் கைகூடும். வெளி வேஷம் முக்கிய மில்லையென்று சொல்லப்படுவது தப்பு. ஒரு வித உத்தி யோகமுள்ளவருக்கு ராஜாங்க விதிப்படி ஒரு வித வேஷம் குறிப்பிடப்பட்டிருக்குமாஞல், அவ்வேஷத்தை தரித்துக் கொண்டு அந்த உத்தியோக காரியத்தைச் செய்தால்தான் சம்பளம் கிடைக்கும். போலீஸ்காரர் அவருடைய வேலைக் குள்ள உடுப்புகளைப் போட்டுக்கொள்ள மறுதளித்தால் வேலை தொலைந்து போகும். ஒரு அட்வொகேட் அவருக்கு ஏற்பட்டிருக்கிற சட்டையையாவது தலைபாகையையாவது கௌனையாவது தரித்துக் கொள்ளாமல் கோர்ட்டில் பேச ஆரம்பித்தால் இவருடைய பேச்சை ஜட்ஜ் கேழ்க்கப் போகிறதில்லை. பேச்சுத்தானே முக்கியமென்று சொல் வதில் உபயோகமில்லை. இவர் வாங்கிய பீஸ்துகையும் இவ ருக்குத் தக்கப்போகிறதில்லை. அதை வாபஸ் கொடுத்து விடவேண்டியதுதான். ஆகையால், மேல் வேஷம் அனுவ சியமென்று சொல்வது அறியாமையே யாகும். அவரவர் களுக்கு வர்ணுசிரம கிரமப்படி சாஸ்திரத்தில் விதிக்கப் பட்டிருக்கிற விதங்களில் சிகை, வஸ்திரம், புண்ட்ரம் முத லானதுகளை தரித்து வரவேண்டியது மிக்க அவசியம்.

14. உத்தர கர்ணுடக தேசத்திலும் மஹாராஷ்டிர தேசத்திலும், எந்த காலத்தில் பிரம்மசாரிக்கு ஸாதாரண மாய் விவாஹமாகக் கூடியதோ அந்தக்காலம் அதிக்கிர மித்துப் போய்விட்டால், அப்பால் விதிமுறையில் பிரம்மசாரி தரிக்கவேண்டியபடி வஸ்திரத்தை தரித்துவர லஜ்ஜைபட்டுக்

கொண்டு பஞ்சகச்சத்துடன் அனேகர்கள் வஸ்திரந்தரித்து வருகிறார்கள். அதாவது, விவாஹவயசு வந்தும் விவாஹ மில்லாமலிருப்பதில் லஜ்ஜையுடன் வெளிப்பார்வைக்காக வஸ்திர தாரணத்தை மாற்றிக்கொள்கிறார்கள். இதுவும் தப்பு தான். ஆகிலும், பிரகிருத விஷயத்தில் இத்தென் தேசத்தில் அனேகர்களுக்கு இயற்கையாயுண்டாகக்கூடிய லஜ்ஜை கூட உண்டாகாமலும் தர்மத்தை கெடுத்துக் கொண்டும் பல ஜனங்களிருக்கிறார்களென்று காட்டுவதற் காக ஷை விபரம் இவ்விடத்தில் சொல்லப்பட்டது. விவாஹ மாயிருந்தும், பெண்சாதி ஸந்ததிகளுடன் கூடவே யிருந்து கொண்டும், 40, 50 வயஸுள்ள ஜாதிப் பிராம்மணர்கள்கூட கொஞ்சங்கூட லஜ்ஜையில்லாமலும், சாஸ்திர விதிகளுக்கு நேர் விரோதமாகவும், தங்களைப்பற்றி மற்றவர்கள் என்ன எண்ணுவார்களென்ற ஞாபகமே யில்லாமலும் அல்லது மற்றவர்களின் அபிப்பிராயங்களை உதாஸீனஞ்செய்தும் பகிரங்கமாய் தட்டாடை கட்டிக் கொண்டு வீட்டிலிருப்பது மல்லாமல் வெளியிலும் ஜனங்களுக்கு மத்தியில் வந்து தங் களுடைய கோலத்தை வெளிப்படுத்துகிறார்கள். இவர்களைப் பார்த்தவர்கள் இவர்களைப்பற்றி லஜ்ஜையும் ஜுகுப்ஸையும் அடைகிறார்களேயன்றி இவர்களுடைய தடித்துப் போயிருக் கிற, அல்லது மரத்துப் போயிருக்கிற, புத்திகளில் கொஞ் சங்கூட லஜ்ஜை ஏற்படுவதில்லை. இக்கோலத்துடனேயே ஆலயங்களுக்கும் ஈசுவர தரிசனத்திற்காக வந்துவிடுகிறார்கள். ஈசுவரருடைய ஆஜ்ஞா ரூபங்களாகிய ஸ்மிருதி கட்டளைகளை பேதித்துக்கொண்டே ஈசுவரர் முன்னிலையில் வந்து நின்றால் ஆலயத்தில் ஈசுவரர் இருக்கிறாரென்ற புத்தியே இவர்களுக் கில்லை யென்பதே நிச்சயம். லௌகிக உத்தியோக முறையில் இவர்களுடைய மேல் அதிகாரி ஒருவித சட்டத்தை யேற்

படுத்தியிருந்தால், அதற்கு நேர் எதிரிடையாக நடந்து கொண்டே அந்த அதிகாரியின் முன்பாக இவர்கள் வருகிற தில்லை. ஈசுவரரின் கட்டளை விஷயத்தில் இவர்கள் வித்தியாஸமாய் நடந்து வருவதினுல் இவர்களுடைய உண்மையான ஈசுவரபக்தி எவ்வளவென்பதும், இவர்களுடைய விராத்தியத்தன்மை எம்மட்டில் விருத்தியடைந்திருக்கிறதென்பதுமே வெளியாகின்றன. சாஸ்திரத்தில் குறிப்பிட்டபடி கச்சத்தை தரித்துக்கொள்ளாத கிருஹஸ்தர்கள் நக்னர்களென்றே சொல்லப்படுகிருர்கள். நக்னத்வ தோஷத்திற்குள்ள பலனையே காலத்தில் அனுபவிப்பார்கள். இவர்கள் செய்து வருகிறதாகச் சொல்லுகிற ஸகல கர்மாக்களும் உபாஸனைகளும் வீண்காரியங்களேயாகும். இப்படியே விவாஹமாயிருக்கிற சிறுவர்களும் தட்டாடைகட்டிக்கொள்வது பிசகு. பள்ளிக்கூடத்தில் படித்து வருகிற பையனுக்கு கச்சத்தை தரிப்பதில் வெட்கமிருந்தால், விவாஹஞ்செய்துகொள்வதிலும் வெட்கமிருக்க வேண்டியதுண்டு. படித்துவரவேண்டிய காலத்தில் லஜ்ஜையில்லாமல் விவாஹத்தைச் செய்துகொண்டதுபோல் லஜ்ஜையை விட்டொழித்து கச்சத்தையும் தரித்துக் கொள்வதும் அவசியமாகும். தட்டாடை கட்டிக்கொண்டால் ஸௌகரியமாயிருப்பது போல் சிலர்கள் சொல்வதுண்டு. வாஸ்தவத்தில், கச்சத்தை தரித்துக்கொள்வதிலிருக்கிற ஸௌகரியம் தட்டாடையில் கிடையாது. தட்டாடையுடன் வேகமாய் நடப்பதே சிரமப்படும். அதிகமாக அடிபட்டு வேஷ்டியும் சீக்கிரத்தில் கிழிந்து போகும். ஸௌகரியத்துடன்கூடவே கச்சத்தை தரிக்கவேண்டிய கிருஹஸ்தர் தட்டாடை கட்டிக்கொள்வது யோக்கியமேயில்லை. பாபமேயாகும். எந்தெந்த ஆசிரமத்திற்கு எந்தெந்த விதமாக வஸ்திரதாரணம் சாஸ்திரத்தில்

விதிக்கப்பட்டிருக்கிறதோ, அது ஸௌகரியமானாலும் அஸௌகரியமானாலும், அவ்விதமாகவே தரித்து வரவேண்டும். அதில் சோம்பலாவது லஜ்ஜையாவது கூடாது. சாஸ்திரத்தை அனுஸரித்து நடப்பதில் லஜ்ஜையிருப்பது நியாயமேயில்லை. சாஸ்திரத்திற்கு விரோதமாக நடப்பதில்தான் லஜ்ஜைப்படுவது நியாயமும் அவசியமுமாகும்.

15. வாஸ்தவத்தில் வேத சாஸ்திரங்களில் கொஞ்சங் கூட விசுவாஸமேயில்லாமல் தார்மிகத் தன்மை முழுதும் நசித்துப் போயிருக்கிற ஸ்வபாவத்துடன் கூடியவர்கள் சிகா புண்ட்ரங்களில்லாமலும் வஸ்திரத்தைத் தாறுமாறாகத்தரித்துக் கொண்டு மிருந்தால் அவர்களிடம் தர்மத்தைச்சொல்லி அவர்களைச் சீர்திருத்த யத்தனிப்பது வீண் பிரயாஸையைத் தவிர வேறல்ல. அவர்களுடைய ஆந்தரமான விராத்தியத் தன்மை மாறக்கூடாமலிருக்கும் போது, அவர்களுடைய வெளி வேஷத்தை மாத்திரம் மாற்றச் சொல்வதும் தப்பு தான். அந்தரங்கத்தில் அதார்மிகர்களாயிருப்போர்கள் எல்லோரும் வெளிப்பார்வையிலும் அதார்மிகர்களாகவே யிருக்க வேண்டுமென்பதே கோரத்தகுந்தது. முன்காலங்களில் ஆர்யர்களுக்குள் தர்மவிருத்தமாக நடப்பவனுக்கு கடுந்தண்டனைவிதிப்பதானால், அவனுடைய சிகையை எடுத்து விடுகிறதுண்டு. இக்காலத்திலும் இது ஒரு விதமாய் நடத்தப்பட்டு வருகிறது. அதார்மிகர்கள், அவர்களுடைய உள் ஸ்வபாவத்திற்குத் தக்கபடி, இவ்வித தண்டனையை தாங்களே தங்களுக்கு விதித்துக்கொள்கிறார்களென்பதும் அனுமோதிக்கத் தகுந்ததே. உள்ளும்புறமும் ஒரே விதமாயிருப்பதே நல்லது. இதுவே இருகக்ஷிக்காரர்களுக்கும் அனுகூலம். அதிகமான மனஸ்தாபங்களுக்கும் இடமிராது. ஆனால், இவ்வித அதார்மிகர்கள் கிட்ட நெருங்காமலிருக்கும்படி தார்மிகர்கள் தங்

களை பாதுகாத்துக்கொள்ளவேண்டியது முக்கியம். எவ்வளவு ஸமீப பந்துவானாலும் ஞாதியானாலும் ஒருவருக்கொருவர் ஸஹவாஸம் ஏற்படாமலிருக்கக்கூடிய விதமாகவே நடந்து வரவேண்டும். இவ்விஷயத்தில் தாக்ஷிண்யம் பாராட்டி தார்மிகர்கள் கெட்டுப் போகலாகாது. வர்ணாசிரமதர்மங்களை அனுஷ்டிக்கும்படியான மஹாபாக்கியத்துடன் கிடைத்திருக்கிற நடப்பு ஜன்மத்தை வீண் படுத்திக்கொள்ளக்கூடாது. இவ்வித ஜன்மம் கிடைப்பது அரிது. மற்ற ஜன்மங்கள் ஸாதாரணமாய் எப்போதும் கிடைக்கலாம். அதாவது, வர்ணாசிரமதர்ம வியவஸ்தை யில்லாத ஜனக்கூட்டங்கள் உலகமெங்குமிருக்கின்றன; அவைகளின் மத்தியில் ஜன்மங்கள் சுலபமாய் கிடைக்கக் கூடியவை. வர்ணாசிரமவிபரங்களடங்கியதும், ஸாக்ஷாத் ஈசுவரரால் ஏற்படுத்தப்பட்டதும், மோக்ஷானந்தப்பிராப்திக்கே மனிதர்களை தயார் செய்து விடக்கூடியதும், இவ்வுலகத்தில் வேறெங்குமில்லாததுமான இந்த ஆர்ய விசேஷ தர்மாப்பியாஸ மஹா வித்தியாசாலையில் நடப்பு ஜன்மத்தில் சேர்க்கப்பட்டிருப்பதே பெரும் பூர்வ புண்ணியத்தின் பலன். இவ்வித உத்தம ஜன்மத்தை சரியாய் பிரயோஜனப்படுத்திக்கொண்டு நற்கதி அடைய வேண்டியது முக்கியமே யொழிய, சரீர ஸம்பந்தத்தினால் ஏற்படக் கூடிய அஸத்ஸஹவாஸத்தை முன்னிட்டு இவ்வுத்தம ஜன்மத்தை வியர்த்தப் படுத்திக்கொள்வது முட்டாள்தனமேயாகும்.

16. உண்மையில் மேற்கண்டபடி அதார்மிகர்களாயில்லாமல், முன் சொல்லியபடி ஸ்வதேசாபிமானமும், மதாபிமானமும், பெருந்தன்மையுங்கூடிய ஸ்வபாவமுள்ளவர்கள் தங்களுடைய மாமூலான சொந்த வெளிவேஷங்களை மாற்றிக்கொள்வது நிந்திக்கப்படத்தகுந்தது. கொஞ்சம் அஸௌ

கரியமாயிருந்தாலுங்கூட தன்சொந்த வேஷத்தை விட்டு விட்டு அன்யமதஸ்தர்களுடைய வேஷத்தை கைக்கொள்வது தனக்கே மரியாதையில்லை. இங்கிலீஷ்காரர்கள் இத்தேசத்திற்கு 150 வருஷத்திற்கு முன்பாகவே வந்திருந்தும், அவர்களுடைய உடை இந்த உஷ்ண தேசத்தில் அஸௌகரியமென்றே அவர்களுக்கு அனுபவத்துடன் தெரிந்தும், அவர்கள்கூட அதை மாற்றிக்கொள்ளவில்லை. மதாபிமானமுள்ள ஹிந்துக்களிலும் அனேகர்கள் தாங்கள் ஹிந்துத் தன்மையை கெட்டியாக பிடித்துக்கொண்டிருப்பதுபோல் அர்த்தமாகும்படியாக எதற்கும் நாஷுலிடியை காப்பாற்ற வேண்டுமென்று வாயினால் மாத்திரம் ஆங்கில வார்த்தையை திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டிருக்கிறார்களே தவிர, அவர்களுடைய வேஷமும் நடத்தையும் மதாபிமானத்துடன் கலந்த ஹிந்துத் தன்மைக்கு நேர் எதிரிடையாகவே காணப்படுகின்றன. மதஸம்பந்தமில்லாமலே முன் குறிப்பிட்டபடி தேச ஸம்பந்தத்தை மாத்திரம் பாராட்டித் தங்களை ஹிந்துக்களென்று சொல்லி வருவார்களே யானால் அவர்களுடைய நடத்தை எப்படியிருந்தாலும் அது வ்யவஹார விஷயமாகமாட்டாது. மதத்தினாலேயே தங்களை ஹிந்துக்களென்று அவர்கள் பெரும்பாலும் சொல்லிக் கொண்டிருப்பதால் அவர்களுடைய நடத்தையை ஆக்ஷேபிக்கவேண்டியதாயிருக்கிறது. [ஹிந்துக்கள் என்ற ஸ்தானத்திலேயே ஒழுங்காக நடத்தக்கூடிய காரியங்களில்கூட ஹிந்துத்தன்மையைக் காட்டாமல் ஜனங்கள் விபரீதமாய் ஆசரித்து வருகிறார்கள். ஒரு சிறு உதாஹரணத்தை யெடுத்துக்கொள்வோம். இப்பரதகண்டம் பூராவிலும் எங்கும் ஹிந்துக்களால் கலியுக வருஷக்கணக்கையே ஏன் ஆசரணைக்குக்கொண்டுவராமல் கிருஸ்து பிறந்து இவ்வளவு வருஷ

மாச்சுதென்பதையே ஸகலகாரியங்களிலும் குறிப்பிடவேண்டும்? ராஜா கிருஸ்துவராகயிருப்பதால், சர்க்கார் நடவடிக்கை ஸம்பந்தப்பட்டமட்டில் கிருஸ்து வருஷமே பழக்கத்திலிருந்து வருவதில் ஆக்ஷேபணையில்லை. சர்க்கார் ஸம்பந்தமில்லாமல், ஹிந்துக்களுக்குள்ளாகவேயுள்ள சொந்த வேறு ஸகல நடவடிக்கைகளிலும் A. D. 1929 என்று வருஷத்தைக்குறிப்பிடுவதை விட்டுவிட்டு, கலி 5030 என்று ஏன் குறிப்பிடக்கூடாதோ தெரியவில்லை. கலியுகவருஷக்கணக்கு இப்பரதகண்டம் பூராவிலும் எல்லா ஹிந்துக்களுக்கும் தெரியக்கூடியது. பசலி, கொல்லம் ஆண்டு, சாலீவாஹன சகாப்தம் முதலானவைகள்தான் சில இடங்களில் மாத்திரம் பிரசாரமுள்ளவை. கலியுகக்கணக்கு எங்கும் எல்லோருக்கும் பொதுவானதாலும், அதை உபயோகப்படுத்துவதிலேயே இத்தேசத்தின் மேன்மையும் இத்தேசஸ்தர்களின் நீடித்த வாழ்க்கையும் ஜனங்களின் ஞாபகத்திலிருந்துவரக் கூடியதாகையாலும், அதைத் தள்ளிவிட்டு கிருஸ்து வருஷத்தை சொந்தக்காரியங்களில் உபயோகப்படுத்துவது ஹிந்துக்களின் மரியாதைக்கு மிகவும் குறைவையே காட்டுமாதலாலும், இனியாவது ஹிந்துக்கள் இத்தேசமெங்கும் கலிவருஷத்தையே உபயோகப்படுத்திவருவதே அவசியமென்று தோன்றுகிறது. புதிதாய்க் கட்டப்பட்ட, அல்லது, புதுப்பிக்கப்பட்ட சில ஹிந்து தேவாலயங்களில்கூட ஷை கட்டிடத்தின், அல்லது, சீர்திருத்தலின் காலத்தைக் குறிப்பிடுவதற்காக கிருஸ்துவ வருஷத்தையே கல்லில் கீறி வைத்திருக்கிறார்கள். இது கொஞ்சங்கூட ஆலோசனையில்லாமலே செய்யப்பட்ட அக்கிரமகாரியம். இதுநிற்க.] வெளிப்பார்வையிலேயே ஹிந்துக்களை மற்றவர்களிடமிருந்து பிரித்துக் காட்டுவதற்காகவும் முன் குறிப்பிட்டபடி

சிகை, புண்ட்ரம், ஒருவித வஸ்திரதாரணம் முதலியன ஏற்பட்டிருக்கின்றன. உபயோகமற்ற லௌகிக ஸங்கங்களில் ஸம்பந்தமிருப்பதைக்காட்டக்கூடிய லாக்கெட்டுகளும் பாட்ஜுகளும், கொடிகளும் அவசியம் தரிக்கப்படவேண்டியவைதானென்று எண்ணிவருகிற ஜனங்களுக்கு வைதிகமத ஸம்பந்தமிருக்கக்கூடியதைக்காட்டக்கூடிய வெளிப்படையான அடையாளங்கள் மாத்திரம் அனுவசியமென்று தோன்றுவதே கலிபுருஷனுடைய காரியம். இவ்வடையாளங்களைத் தரித்து வருவதே அவர்களுக்குப் பெருமை யென்பதையும், இவ்வடையாளங்களில்லாமலிருப்பது குறைவைக் காட்டுமென்பதையும், அவர்கள் மறந்து விட்டார்கள். வாஸ்தவத்தில் தார்மிக ஹிந்துவாக இருந்து சாஸ்திரப்படிக்குள்ள வர்ணாசிரம தர்மங்களை அனுஷ்டிக்கவேண்டுமானால் ஷை அடையாளங்கள் அவசியங்களே. ஷை தர்மங்களை அனுஷ்டிக்காமலும் அடையாளங்களை தரிக்காமலுமிருப்பவர் உண்மையில், அதாவது மதஸம்பந்தத்தில், ஹிந்துவே ஆகமாட்டார். உண்மையில் ஹிந்துவாக இல்லாதவர் ஹிந்துத் தன்மையை ஒரு பொருட்டாக எண்ணியதுபோல் ஹிந்து நாஷனலிடி முக்கிய விஷயமென்று அடிக்கடி சொல்லிவருதற்கு அர்த்தமே இல்லை. அதாவது, வெளிப்படையான ஹிந்து அடையாளங்களில்லாமலும், ஆந்தரமான ஹிந்து தர்மங்களில்லாமலும், வாக்கினாலும் தர்ம விரோதமாகப் பேசிக்கொண்டும், தாங்கள் ஹிந்துக்கள்தானென்று சொல்லி வந்தால், இவர்கள் உண்மையான ஹிந்து கோஷ்டியை விட்டு வெளியேறினவர்களென்றுதான் ஏற்படும். கொஞ்சம் மதாபிமானமிருப்பவர்களும் இப்படி வெளியேறிப் போவதற்கு இக்காலத்தில் பலவிதகாரணங்கள் கலி புருஷனால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இக்கலியுகம் பிறக்கும் வரை

யில் ஹிந்துக்களுக்குள் விசேஷ வர்ணாசிரம தர்மாசரணை விஷயத்தில் பேதங்கள் ஏற்பட்டதேயில்லை. இக்கலி பிறந்த பிறகுதான் நாளடைவில் சைவ-வைஷ்ணவ-மாத்துவாதி பேதங்கள் உண்டாகி ஷை தர்மாசரணையிலேயே கொஞ்சங் கொஞ்சம் சுருதிஸ்மிருதிகளுக்கு விரோதமாக வேறுபாடுகள் ஏற்பட்டன. ஆகிலும், ஷை பேதங்களினால் வர்ணாசிரம தர்மங்களுக்குப் பூராவும் ஹானி யுண்டாகவில்லை. எல்லோரும் வர்ணாசிரம தர்மங்களை அனுஷ்டிப்பதாகச் சொல்லிக்கொண்டே சில வித்தியாஸங்களை கற்பித்து வந்தார்கள். இப்பால் கொஞ்சகாலமாக பலஜனங்கள் ஹிந்து மதத்திலேயே இருப்பதாக வெளிக்காட்டிக்கொண்டு, எப்படி ஷை மதத்திற்கு முக்கிய விசேஷ தர்மங்களாகிய வர்ணாசிரம தர்மங்கள் முழுமையும் ஆசரிக்கப்படாமலே விலக்கப்பட்டுப் போகக்கூடுமோ அப்படியே கலிபுருஷனுடைய ஏவுதலினால் ஆர்யஸமாஜமென்றும், பிரம்ம ஸமாஜமென்றும், ஆசாரச்சீர்திருத்தச் சங்கமென்றும், பிரம்மஜ்ஞானஸபையென்றும், ராமகிருஷ்ணமிஷன் என்றும், சுத்திஸபையென்றும், பஞ்சமர்களைத் தூக்கிவிடுகிற மிஷன் என்றும் நானாவித பெயர்களுடன் பிரமத்தை உண்டாக்கக்கூடிய பல கூட்டங்களை யேற்படுத்திக்கொண்டு அவைகள் மூலமாய் அனேக ஆஸ்திகர்களின் சாஸ்திர ஆராய்ச்சியுடன் கூடாத புத்திகளை மயங்கச்செய்து வந்திருக்கிறார்கள். இக்கூட்டங்கள் யாவும் சுருதிஸ்மிருதிகளை முக்கிய ஆதாரமாகக்கொள்ளாமல் எப்போதும் மாறிக் கொண்டிருக்கக்கூடிய மனிதனுடைய யுக்திகளையே முக்கிய ஆதாரமாக ஏற்படுத்திக்கொண்டு பெரும்பாலும் தர்ம விரோதமான கொள்கைகளிலும் நடைகளிலும் மனிதனை இறங்கச் செய்து கெடுத்துவந்திருக்கின்றன. சுருதிஸ்மிருதிகளை அனுஸரிக்

காத யத்தினங்கள் எக்காலத்திலும் தர்மங்களாகா; அவை களை அனுஸரிக்காத மனிதனும் தார்மிகனாகமாட்டான்.

> 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑍍𑌤𑍁 𑌵𑍇𑌦𑍋 𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑍋
> 　　𑌧𑌰𑍍𑌮𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌤𑍁 𑌵𑍈 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌃 ।
> 𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍍𑌵𑌮𑍀𑌮𑌾𑌂𑌸𑍍𑌯𑍇
> 　　𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌧𑌰𑍍𑌮𑍋 𑌹𑌿 𑌨𑌿𑌰𑍍𑌬𑌭𑍌 ॥
> 𑌯𑍋𑌽𑌵𑌮𑌨𑍍𑌯𑍇𑌤 𑌤𑍇 𑌮𑍂𑌲𑍇
> 　　𑌹𑍇𑌤𑍁𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌦𑍍𑌦𑍍𑌵𑌿𑌜𑌃 ।
> 𑌸 𑌸𑌾𑌧𑍁𑌭𑌿𑌰𑍍𑌬𑌹𑌿𑌷𑍍𑌕𑌾𑌰𑍍𑌯𑍋
> 　　𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑍋 𑌵𑍇𑌦𑌨𑌿𑌨𑍍𑌦𑌕𑌃 ॥

மேற்கண்ட கூட்டங்களில் அகப்பட்டுக்கொண்டு வெகு பெயர்கள், அதிலும் முக்கியமாய் பிராம்மணர்கள், மீட்கப் படாமலே தார்மிகமார்க்கத்தை விட்டு விலகிப்போய்விட் டார்கள். சிலர்கள் மாத்திரம் அவைகளின் உண்மையான நிலைகளை சீக்கிரத்தில் தெரிந்துகொண்டு காலத்தில் அவை களை விட்டு வெளியேறி தப்பித்துக்கொண்டிருக்கிறார்கள். இப்படி தப்பித்துக்கொண்டவர்களிலும் சிலர்களுடைய விஷயத்தில் முன் ஸம்பந்த வாஸனை கொஞ்சங் கொஞ்சம் அவர்களுடைய மனசுகளில் கெட்டியாகப்பற்றியிருப்ப தாகவும் வெளியாகிறது. பிராம்மணனல்லாத ஹிந்துக்கள் வேறு விதமாகவும் தர்ம மார்க்கத்திலிருந்து விலகிக்கெட்டுப் போகும்பொருட்டு பிரம்மத்வேஷத்தை முன்னிட்ட கூட் டங்களும் இப்பால் ஏற்பட்டு தர்ம விரோதமாய்ப் பலவிதங் களில் அனேகர்கள் நடந்து வருகிறார்கள்.

17. முன் இரண்டாவது பாகத்தில் சொல்லியபடி பிராம்மணர்களில் அனேகர்கள் தர்ம மார்க்கத்திலிருந்து

விலகிப்போயிருப்பதினாலேயே நாளடைவில் பிராம்மணனி டத்தில் த்வேஷ புத்தி மற்ற ஜாதியார்களில் பலர்களுக்கு உண்டாகி இத்தேசத்தில், முக்கியமாய் இத்தென்னாட்டில், அனர்த்தங்கள் விருத்தியடைந்து வருகின்றன. இவ்வித த்வேஷம் பிராம்மண விஷயத்தில் மாத்திரம் நிற்காமல் வேத சாஸ்திரங்களுக்கும் ஸமஸ்கிருத பாஷைக்குமே விரோதமாகவும் பெருகச் செய்யப்பட்டு வந்திருக்கிறது. மனிதனிடத்தில் ஞானோத்பத்திக்கு எவையெல்லாம் உப யோகப்படக்கூடியவைகளோ அவைகள் மூலமாய் நன்மை யை அடைந்து கரையேற வொட்டாமல் செய்யும்பொருட் டே கலிபுருஷன் விபரீத எண்ணங்களை மனிதர்களிடத்தில் உண்டாக்கி வருகிறான். ஞானம் உதிக்கவேண்டுமானால் ஜகத்பிதாஸ்தானத்திலிருக்கிற ஸர்வேசுவரராகிய வேத புரு ஷனுடைய ஆஜ்ஞாரூபங்களான சாஸ்திரங்களில் விசுவாஸ மும், வேதசாஸ்திரங்கள் எந்த ஆதி-தேவ-தாய்பாஷையின் கர்ப்பத்தில் ஷ்ரீ பிதாவினால் அமைக்கப்பட்டிருக்கின்றன வோ அவ்வித ஸம்ஸ்கிருத வாணியிடத்தில் மதிப்பும், எந்த குரு மூலமாக வேத சாஸ்திரங்களிலடங்கிய தத்வங்கள் பூராவையும் நன்றாகத் தெரிந்து கொண்டு நற்கதியை அடையக்கூடுமோ அப்படிப்பட்ட பிராம்மணனிடத்தில் அன்பும், முக்தியின் பொருட்டு அவசியமானவை. மாதா, பிதா, ஆசாரியர் இம்மூவர்களிடத்திலும் பக்தியுள்ளோருக் குத்தான் நற்கதியுண்டு. பிராம்மணத்தன்மையிலிருந்து நழுவிக் கெட்டுப் போயிருக்கிறவரைக்குறித்து திருப்திக் குறைவாவது மனவருத்தமாவது ஏற்படுவது நியாயந்தான். இந்த மனவருத்தத்தை கிரமமான மார்க்கத்தில் ஷ்ரீ யாரிடம் செலுத்தலாமே யொழிய ஷ்ரீ யாரின் ஜாதியின் பேரிலாவது, ஷ்ரீ யார் எந்த சாஸ்திரங்களை அனுஸரித்து நடந்துவரத்

தவறிவிட்டாரோ அவைகள்பேரிலாவது, அவைகள் அமைக்கப்பட்டிருக்கிற பாஷையின் பேரிலாவது, கோபத்தைச் செலுத்தி துவேஷிப்பது நியாயமல்ல. தமிழ்ப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப்பட்டிருக்கிற ஒரு மாணுக்கன் அப்பள்ளிக்கூடத்தின் விதிகளை பேதித்துக்கொண்டும், பாடங்களைப் படிக்காமலும், திரிந்து கொண்டிருந்தால், அவனை தூஷித்துக் கண்டிக்கச் செய்யலாமே யல்லாது பள்ளிக்கூட விதிகளையாவது, தமிழ்ப் பாஷையையாவது, உபாத்தியாயர்களையாவது தூஷிப்பது கிரமமாகமாட்டாது. அன்றியும், ஸம்ஸ்கிருதத்தையே அவமதித்துவிட்டால் தமிழ்ப் பாஷையே நற்கதிக்கு உபயோகப்படக்கூடாமல் கெட்டுப்போய் விடக்கூடியதாகும். ஸமஸ்கிருதத்தின் ஞானமேயில்லாமலிருப்பவருக்கு இவ்வுண்மை தெரியமாட்டாது. ஷை இரண்டு பாஷைகளையும் அறிந்து கொண்டவருக்கு ஷை உண்மை வியக்தமாய்த் தெரியவரும். மதம், தர்மம், தத்வம் இவைகள் விஷயமாக தமிழ்ப் புஸ்தகங்களில் சொல்லப்பட்டிருப்பதிலெல்லாம் ஸம்ஸ்கிருத வார்த்தைகளே உபயோகப்பட்டிருக்கின்றன. ஸம்ஸ்கிருத பதங்களை உபயோகப்படுத்தாமல் ஷை மூன்று விபரங்களையும் தமிழில் வெளிப்படுத்த முடியாது. ஸாதாரணமாய் மனிதன் இவ்வுலகத்தில் நடத்தக்கூடிய அல்லது தெரிந்து கொள்ளக்கூடிய லௌகிக காரியங்களுக்கும் விஷயங்களுக்குமுள்ள வார்த்தைகள்தான் தமிழிலிருக்கின்றன. ஸ்ரீ அகஸ்தியர் தமிழைப் பிரசாரப் படுத்தியதின் உத்தேசமே இத்தென்தேசத்திலுள்ள ஸாமான்ய ஜனங்களின் நன்மையைக்கருதியே தவிர வேறல்ல. இத்தென்தேசத்தில் எப்போதும் அனுதியாயுள்ள திராவிட எழுத்து (லிபி) கிரந்தந்தான். இப்பரத கண்டத்தில் மற்ற எல்லா தேசங்களிலுமுள்ள எழுத்துக்களைப் போல் கிரந்த

எழுத்துக்களும் ஸம்ஸ்கிருத, அதாவது, தேவநாகர எழுத்து வரிசைக்கிரமப்படியே பூர்ணமாய் ஏற்பட்டிருந்திருக்கின்றன. இத்தென் தேசத்திலும், மற்ற தேசங்களைப் போலவே, எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் ஸ்வல்ப பெயர்களாயிருந்தமையால், ஸ்ரீ அகஸ்தியர் ஸாமான்ய ஜனங்கள் பேரில் மிக்க கருணைகொண்டு, அவர்களுடைய யோக்கியதைக்குத் தக்கவிதமாகவும், லகுவாயும் கொஞ்சமாயுமுள்ள எழுத்து வரிசையை சிற்சிலமாறுதலுடன் கிரந்தத்திலிருந்தே தனியாக எடுத்துக்கொடுத்து எல்லோருக்கும் சுளுவாய் எழுதப்படிக்கக்கூடிய தன்மையை உண்டாக்கி வைத்தார். அப்பால் ஸாமான்ய லௌகிக விஷயங்களுக்கு நடப்பு யாவைக்காக தமிழ் எழுத்துக்களும், மேலான சாஸ்திர விஷயங்களுக்கு எப்போதும்போல் கிரந்த எழுத்துக்களும் உபயோகப்படுத்திவரப்பட்டன. இப்படிக்கிருக்கையில், லகுவான தமிழ் எழுத்துக்களில் ஜனங்களுக்கு விசேஷ பழக்கமும், கிரந்த எழுத்துக்களில் பழக்கக்குறைவும், அதிகப்பட்டு வந்து பிறகு கிரந்தத்திலேயே எழுதப்படவேண்டிய ஸம்ஸ்கிருத பதங்களைத் தமிழிலேயே எழுத ஆரம்பித்ததில் தமிழ் எழுத்துகள் ஸ்வல்பமாகையால் ஸமஸ்கிருத பதங்களின் ரூபங்கள் கெட்டுப்போகும்படி ஏற்பட்டது. ஸம்ஸ்கிருதத்தில் க, ச, ட, த, ப, எழுத்துக்களில் ஒவ்வொன்றுக்கும் நான்கு வித உள் வர்க்கங்களிருப்பதில் தமிழில் ஒரே விதமாயிருப்பதாலும், ஶ, ஷ, ஸ, ஹ, விஸர்க்கம், ஸம்யுக்தாக்ஷரங்கள் முதலியன தமிழில் கிடையாதாகையாலும், ஸம்ஸ்கிருத பதங்களின் ரூபங்கள் முறிவு பட்டும் விகாரப்பட்டும் போய் தமிழில் சேர்த்து எழுதப்பட்டு வந்தன. தமிழ் எழுத்து உண்டானதிஞல், மற்ற தேசங்களைவிட இத்தென் தேசத்தில் அதிகப்பெயர்களுக்கு எழுதப்படிக்கத்

தெரியுமென்ற அனுகூலமேற்பட்டது வாஸ்தவமானாலும், ஜனங்களின் புத்திஹீனத்தன்மையினாலும் சோம்பேரித் தனத்தினாலும் ஸம்ஸ்கிருதவார்த்தைகள் விஷயத்தில் கெடுதலே அதிகமாயுண்டாயிற்று. தமிழினால் ஸம்ஸ் கிருத வார்த்தைகளுக்கு எவ்வளவு குரூபங்கள் ஏற்பட் டிருக்கின்றனவோ அவ்வளவு இப்பாதகண்டத்திலுள்ள மற்ற எழுத்துக்களினால் உண்டாகவில்லை. இதனால்தான், அதாவது, முறிவுபட்ட அல்லது குரூபப்பட்ட ஸம்ஸ் கிருத பதங்கள் அபசப்தங்களா யிருப்பதில் அவைகளை உச்சரிப்பது சாஸ்திரப்படி தோஷமாகுமாகையால், தமிழில் எழுதப்பட்ட புஸ்தகங்களுக்கு பாராயணஞ் செய்யப் படக்கூடிய யோக்கியதை யில்லாமலிருந்து கொண்டிருக் கிறது. ஸம்ஸ்கிருத பதங்களை தாறுமாறாகக் கண்டெழு தப்பட்டிருக்கிற தமிழ்ப் புஸ்தகங்களைப் படிப்பதும் படிக்கக் கேட்பதும் ஸம்ஸ்கிருதம் தெரிந்தவருக்கு கர்ண கடோர மாகவே யிருக்கும். ஸம்ஸ்கிருதமே தெரியாதவர் உத்ஸாஹத் துடன் தமிழ்ப்பாடல்களை சொல்லிக்கொண்டிருக்கும் போது கேட்டுவருகிற மேற்கண்டவர் பரிதாபத்தை அடை கிறாரேயல்லாமல் ஸந்தோஷப்படுகிறதில்லை. ஸம்ஸ்கிருத பதங்களை கிரந்தத்திலேயே எழுதிச் சேர்த்து ஸம்ஸ்கிருத மும் தமிழும் தெரிந்தவர் தமிழ்ப்பாடல்களை படிக்கிறதா யிருந்தால் அது எல்லோருக்கும் உண்மையான ஆனந் தத்தை கொடுக்குமென்பதில் ஸந்தேஹமில்லை. இப்படிப் பட்ட மணிப்பிரவாளப் புஸ்தகங்கள் முன் காலங்களில் ரொம்ப எழுதப்பட்டுவந்தன. இது நிற்க. மேற்கண்டபடி அபசப்தங்களிருந்தபோதிலும், ஸம்ஸ்கிருதத்தை பூராவும் தெரிந்து கொள்ளக்கூடாதவருக்கு தமிழ் புஸ்தகங்கள் மூல மாய் கொஞ்சமாவது இப்போது தர்மம், மதம், தத்வம் இவ்

விஷயங்கள் தெரியக் கூடியவைகளாயிருக்கின்றன. இக்கால த்திய தூர்க்கசக்திக்கு மதிப்புக்கொடுத்து ஸம்ஸ்கிருதத்தையே உபயோகப்படுத்தவேண்டியதில்லையென்று எண்ணுபவர்கள் தமிழ் புஸ்தகங்களிலுள்ள ஸம்ஸ்கிருத பதங்களை யெல்லாம் நீக்கிவிடவேண்டியதே அவசியமாயேற்படும். இப்படி நீக் கப்பட்ட பதங்களுக்கு தமிழில் பிரதி பதங்களே கிடையா தாகையால், நற்கதியின்பொருட்டு தமிழ் புஸ்தகங்கள் பிரயோஜனப்பட மார்க்கமில்லாமலே போய்விடும். கர்மம், பக்தி, ஞானம் இவைகளை கைக்கொள்ளவும் முடியாது. தெய்வங்களுக்குப் பெயர்களே தமிழில் கிடையாது. தேவா ரம், திருவாசகம் முதலான பெயர்களே ஸம்ஸ்கிருத பதங்க ளடங்கிய பெயர்கள்தான். ஸம்ஸ்கிருத பதங்களை யெல்லாம் நீக்கியான பின்பு தமிழ் எந்த ஸ்திதியில் காணப்படுமோ அப்படியே இத்தமிழை மாத்திரம் உபயோகப்படுத்திவருகிற மனிதனும் மேற்செல்ல வழி தெரியாமல் தாழ்ந்த ஸ்திதியி லேயே யிருந்துவரும்படி யேற்படும். உண்மையில் நற் கதியில் உத்தேசமுள்ளோருக்கு ஸம்ஸ்கிருதத்தின்பேரில் வெறுப்பு இருக்கலாகாது. முன் காலத்திய உயர்ந்த தமிழ் புஸ்தகங்கள் யாவற்றிலும் அவைகளுக்கு வேத சாஸ்திரங் களே மூல ஆதாரங்களென்று தெளிவாய் சொல்லப்பட்டி ருப்பது மன்னியில், ஸம்ஸ்கிருதத்திற்கும் வர்ணாசிரம தர் மங்களுக்கும் பிராம்மணனுக்கும் விசேஷ மதிப்பே காண்பிக் கப்பட்டிருக்கிறது. ஆகையால், இக்காலத்திய மேற் கண்ட த்வேஷ புத்திக்கு இடங்கொடுக்காமல் நல்வழியிற் சென்று வருவதே எல்லோருக்கும் ஹிதமாகும்.

18. மேலும், ஸம்ஸ்கிருத பாஷையின் மேன்மையை உள்ளபடி தெரிந்துகொண்டவருக்கு மேற்படி த்வேஷ புத்தி ஒருக்காலமும் ஏற்படக்கூடியதல்ல. ஸம்ஸ்கிருதம் இப்

பூலோக பாஷையே யில்லை. இப்பூலோக பாஷைகளின் பெயர்கள் தேசங்களின் பெயர்களை ஒட்டியாவது ஜனங்களின் பெயர்களை அனுஸரித்தாவது உண்டாயிருக்கின்றன. மஹாராஷ்ட்ர தேசத்தில் வழங்குகின்ற பாஷையின் பெயர் மஹாராஷ்ட்ரம்; கர்னாடக தேசபாஷை கர்னாடகம்; பிரஞ்ச்காரர்களின் பாஷை பிரஞ்ச்; இங்கிலிஷ்காரர்களின் பாஷை இங்கிலிஷ்; இப்படியே, இத்தென் திராவிடதேச பாஷை தமிழ். ஸம்ஸ்கிருதத்தில் த்ராவிட என்பது பிராகிருதத்தில் த்ரமிட என்றிருப்பதில், தமிழில் ரகாரமில்லாததினால் அது தமிழ் என்ற ரூபத்தை அடைந்திருக்கின்றது. **ஸம்ஸ்கிருதம்** என்ற பெயர் மாத்திரம் இப்பூலோக தேசங்களுக்காவது ஜனங்களுக்காவது எவ்வகையிலும் ஸம்பந்தப்படாத பெயர். "ஸம்ஸ்கிருதம்" என்றால் "நன்றாக பரிஷ்காரஞ் செய்யப்பட்டது" என்று அர்த்தம். ரத்தினத்தை நுட்பமாகக் கடைசல் பிடித்து அதின் வக்கிராதி தோஷங்களை அப்புறப்படுத்துவதுபோல், வாக்கினால் உச்சரிக்கப்படக்கூடிய அக்ஷர சப்தங்களில் அசுத்தமானதும், மந்திரங்களுக்கு உபயோகப்படக்கூடாததும், வீர்யமில்லாததுமான சப்தங்களை விலக்கிவிட்டு மந்திர பீஜாக்ஷரங்களாகிய 51 சுத்தாக்ஷரங்களில் அடங்கச் செய்விக்கப்பட்ட சப்தங்களைக் கொண்டு ஸம்ஸ்கிருத பாஷை அமைக்கப்பட்டிருக்கிறது. இது தேவபாஷை; மனித பாஷையல்ல. இதுவே ஸ்வர்க்கம், ஸத்யலோகம், வைகுண்டம், கைலாஸம் இவ்வுத்தம லோகங்களில் தேவர்களால் பேசப்பட்டு வருகின்றது. ஆகையால், இதற்கு **கைர்வாணீ** என்றும் பெயருண்டு. கீர்வாணர் என்றால் தேவர். கீர்வாணரால் பேசப்படுவது கைர்வாணீ. இந்த பாஷையே தேவநகரங்களில் வழங்கிவருவதால் இதின் அக்ஷரம் "தேவநாகர அக்ஷரம்" என்று சொல்லப்

படுகின்றது. இந்த அக்ஷரத்திற்கு "பால பிந்து" (ஃபால விந்து) என்றும் பெயருண்டு. ஜீவனுடைய நெற்றியில் இந்த அக்ஷரத்தினாலேயே பிராரப்த கர்மபலானுபவ விபரம் எழுதப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. பால (ஃபால) என்றால் நெற்றி. பிந்து (விந்து) என்றால் அக்ஷரம். பால பிந்து வென்பதைத்தான் சில ஜனங்கள் கொச்சையாக பாளபந்துவென்று சொல்லிவருகிறார்கள். ஸம்ஸ்கிருதம் தேவர்களுக்குள் நடப்பு பாஷையென்று எல்லோரும் தெரிந்துகொள்ளவேண்டும். இவ்வித தேவபாஷை வேதத்தின் மூலமாக பூலோகத்திற்கு வரும்படி யேற்பட்டது. கல்பாரம்பத்தில் மனித ஸ்ருஷ்டியானவுடன், முன் வேறிடத்தில் குறிப்பிட்ட பிரகாரம், மனிதர்களுக்கு வேதப்படிக்குள்ள கல்வியை ஏற்படுத்தியும், எல்லோருக்கும் வேதக் கல்வியை போதிப்பிவிக்கும்படியான கடமையை பிராம்மணனுக்கு விதித்தும், பிராம்மணனை பூலோகத்தில் தேவப் பிரதிநிதியாக பாவித்தும், பிராம்மணன் "பூதேவர்" என்ற பெயருடன் ஸம்ஸ்கிருத பாஷையை தன்னுடைய நடப்பு பாஷையாகவே உபயோகப்படுத்திக் கொள்ளலாமென்று ஏற்படுத்தியும், ஸம்ஸ்கிருதம் மூலமாய் மனிதர்களுக்கு உயர்ந்த நற்கதியைக் கொடுக்கக்கூடிய மேலான மததர்மாசரணைகளும் தத்வ விசார காரியங்களும் ஸர்வேசுவரரால் விதிக்கப்பட்டன. நாளடைவில் அதர்ம மிகுதியினால் பிராம்மணர்களாலும் ஸம்ஸ்கிருதம் பேசப்படாமல் அனேகமாய் நின்றுபோய் விட்டது. இக்காரணம் பற்றி, அறியாமையால், இப்பாஷையையே இறந்துபோன பாஷை (Dead language) என்று வெகு பெயர்கள் நினைக்கின்றார்கள். பிராம்மணன் தன்னுடைய பூதேவத்தன்மையிலிருந்து விலகியிருக்கிறானென்று மாத்திரம் சொல்லலாமே யொழிய, ஸம்ஸ்கிரு

தத்தை இறந்துபோனதாக எண்ணுவது நியாயமல்ல. இப்போதும் எக்காலத்திலும் தேவர்களால் ஸம்ஸ்கிருதம் நடப்பு பாஷையாகவே பேசப்பட்டுவருகின்றது. இப்பூலோகத்தில் இக்காலத்திலும் ஸம்ஸ்கிருதத்தில் தங்கு தடையின்றி சுத்தமாய் பேசிவருகின்ற பெரியோர்கள் இன்னும் வெகு பெயர்களிருந்து வருகிறார்கள். ஸம்ஸ்கிருதம் இப்பூலோக பாஷையாக எக்காலத்திலு மிருந்திருப்பதில்லையாகையால் இதற்கு பூலோகத்தில் மரணம் ஏற்படக்கூடியதுமல்ல. அன்றியும், இது ஏதோ வடக்கேயிருந்து வந்திருப்பதுபோல் இத்தென் தேசத்தில் பல ஜனங்கள் நினைத்துக்கொண்டு, இதை நெடுநாளாக "வடமொழி" என்று சொல்லி வந்திருப்பதும் அறிவில்லாமையின் காரியமே. ஸம்ஸ்கிருதம் இப்பூலோக பாஷையே யில்லாத நிலைமையில் வடமொழியுமல்ல தென்மொழியுமல்ல. இப்பரத கண்டத்தில் பஞ்ஜாபீ, ஹிந்துஸ்தானீ, பங்காளீ முதலானவைகள்தான் வடமொழிகளாகும். இப்படியே குஜராட், மஹாராஷ்ட்ரம், கர்ணாடகம் முதலானவை மேற்கு மொழிகளாகும். உர்டு, தெலுங்கு வகையறா கிழக்குமொழிகளாகும். இதுபோல் தமிழ் தென்மொழி யென்பதில் ஸந்தேஹமில்லை. ஸம்ஸ்கிருதத்தை வடமொழி யென்று சொல்லுவது தப்பு. இவ்விந்தியாவில் வடதேசங்களிலுள்ளவர்கள் இத்தென்தேசத்தில்தான் ஸம்ஸ்கிருதஜ்ஞானம் அதிகமா யிருப்பதாகவும், இதுவே ஸம்ஸ்கிருதத்திற்கு இருப்பிடமென்றும், இதனால்தான் முக்கியமான வேதாந்த மதப்பிரவர்த்தகர்கள் எல்லோரும் இத்தென்தேசத்திலேயே ஆவிர்பவித்தார்களென்றும் எண்ணுகிறார்கள். தென்தேசத்திலுள்ளவர்கள் ஸம்ஸ்கிருதம் வடதேசத்திலிருந்து வந்ததாகவும் அது வடமொழி யென்றும் எண்ணுகிறார்கள்.

றிதெல்லாம் காலவைசித்திரியமே தவிர, வேறல்ல. உண்மையில் ஸம்ஸ்கிருதம் தேவமொழியே. யாருக்கு ஈசுவராதி தேவர்களிடத்தில் பக்தி யிருந்து வருகின்றதோ அவருக்கு ஸம்ஸ்கிருதத்தின் பேரில் வெறுப்பு இருக்கக்கூடாது. வெறுப்பு உண்டானால், அது நல்லதின் பொருட்டாகாது. வெறுப்பில்லாமல் கிரமமாயிருந்துவருகிறவர்கள் அவரவர்களின் நிலைமைக்கும் சக்திக்கும் தக்கபடி ஸம்ஸ்கிருத பாஷையின் ஞானத்தை ஸம்பாதித்துக் கொள்ளவேண்டியது மவசியம். அவர்கள் தமிழ்ப் புஸ்தகங்களைப் படித்துவரும்போது அபசப்தங்கள் ஏற்படாமலிருக்கும்பொருட்டும் ஷை ஞானம் முக்கியம். இவ்வுலக பாஷைகளின் பதங்களைப்போல் ஸம்ஸ்கிருத பதங்களையும் எப்படி உச்சரித்தாலும் பாதகமில்லை யென்று சொல்லக்கூடாது. ஸம்ஸ்கிருத அக்ஷரங்கள் யாவும் முன் குறிப்பிட்டபடி உயர்ந்த மந்திர பீஜாக்ஷரங்களா யிருப்பதால், அவைகளின் உச்சரிப்பில் மாறுதலேற்பட்டாலும், அவைகளின் சேர்க்கையாலுண்டாகின்ற வார்த்தைகளைத் தப்பாக உச்சரித்தாலும், தோஷ முண்டென்று சாஸ்திரமூலமாய் வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றது. சாஸ்திர வாக்கியத்தில் விசுவாஸமில்லாதவர்களைப்பற்றி வியவஹாரமே யில்லை. அவர்கள் பின்னால் தங்களுடைய கதி இன்னதென்று நேரில் அனுபவத்தினால் தெரிந்து கொள்வார்கள்.

19. முன்சொல்லிய விபரங்கள் பூராவையும் கவனத்துடன் சேர்த்துப் பார்த்து ஆலோசித்து, பலவிதமாய் தார்மிகத்தன்மையிலிருந்து விலகிக் கெட்டுப் போயிருக்கிற ஜாதிப்பிராம்மணர்களையும், விபரீதக் கல்வியினாலும் கொள்கைகளினாலும் பிரம்மத்வேஷ கோஷ்டியில் சேர்ந்தும் கெட்டுப்போயிருக்கிற மற்ற ஜாதியார்களையும், நீக்கி கணக்கிட்டுப்

பார்த்தால், இக்காலத்தில் பிராம்மணர்களுக்குள்ளும் பிராம் மணரல்லாதவர்களுக்குள்ளும் உண்மையான தார்மிகர்கள் வெகு ஸ்வல்பமாகத்தானிருக்கக் கூடுமென்றே துலங்கும். இங்கு ஓர் ஸந்தேகமேற்படக்கூடும். மேற் சொல்லியபடி அபூர்வமாகவாவது உண்மையான தார்மிகர்கள் அதர்மம் மிகுந்த இக்கலிகாலத்தில் இருக்கக் கூடுமா? எப்படி துஷ் டர்களும் மூடர்களும் கலியில்தான் மனித ஜன்மங்களை எடுக்கக் கூடியவர்களோ, அப்படியே உண்மையில் தார்மிகர் களாயிருப்பவர்கள் மற்ற தர்மயுகங்களில் ஜன்மங்களை அடையலாமே யொழிய இந்த பாபயுகத்தில் அவர்களுக்கு பூலோகத்தில் ஜன்மங்கள் நியாயமாய் ஏற்படுவதற்கில்லையே? வாஸ்தவத்தில் இச்சங்கைக்கு இடமில்லை. கலியுகத்திலும் தர்மம் முழுவதும் மறைவடைந்து விடவில்லை. கால்பங்கு தர்மம் இருந்துகொண்டுதானிருக்கிறது. அதர்மமே இல் லாத கிருதயுகத்தில் அதார்மிகர்களுக்கு மனிதஜன்மத்திற்கு அவகாசமில்லை யென்பது போல், கால்பங்கு தர்மத்துடன் கூடிய கலியுகத்தில் தார்மிகர்களுக்கு ஜன்ம முண்டாகா தென்று சொல்வதற்கில்லை. உலகத்தை ஒழுங்குப்படுத்தித் தாங்குவதே தர்மந்தான். தர்மமே யில்லாத காலத்தில் உல கமும் இருக்கமாட்டாது. ஆகையால், தார்மிகர்கள் எக் காலத்திலுமிருந்து வருவார்கள். தவிரவும், கலியுகத்தில் தார்மிகர்களில்லையானால் அதார்மிகர்கள் இதில் மனித ஜன்ம மெடுப்பதிலும் பிரயோஜனமில்லாமல் போய்விடும். துஷ் டத்தனமும் மூடத்தனமும் எவ்வளவு அதிகமாயிருந்த போதிலும், அதார்மிகர்களை மெள்ளமெள்ள நல்வழியில் திருப்பி அவர்களும் நற்கதியை அடையும்படி செய்யக்கூடிய வர்கள் தார்மிகர்கள்தான். முன் சொல்லியபடி, இவ்விதம் நற் கதியை அடைவதற்கு அவகாசங்கொடுப்பதற்காகவே

அதார்மிகர்களுக்கு மனித ஜன்மம் ஏற்படும்பொருட்டு இக்கலிகாலம் அமைக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், அதார் மிகர்களின் நன்மையை உத்தேசித்தும் இக்கலியில் தார்மிகர் கள் ஸ்வல்பமாகவாவது பூலோகத்திலிருக்க வேண்டியதவ சியம். அன்றியும், இக்காலத்தில் யார் தார்மிகரென்று சொல்லப்படுகிறாரோ அவர் ஸம்பூர்ணதார்மிகராக மாட் டார். சில அம்சங்களிலாவது குறைவு இருந்துகொண்டு தானிருக்கக்கூடியது. கிருதயுகத்திலுள்ள தார்மிகரைப்போல் யாரையும் கலியுகத்தில் பார்க்க முடியாது. ஸகல விதத் திலும் சக்தரான கிருதயுகதார்மிகரிடம் அதர்மச் செய்கை யே யில்லாமலிருப்பதுடன் தர்மச்செய்கைகளும் ஸம்பூர்ண மாய் காணப்படும். அல்ப சக்தரான கலியுக தார்மிகரிடம் அதர்மச்செய்கையே யிருக்கமாட்டாதென்பது வாஸ்தவமா னலும் தர்மச் செய்கைகள் ஸம்பூர்ணமாயில்லாமல் கால ஸ்தேச வர்த்தமானங்களுக்கும் தன்னுடைய ஸ்வல்ப சக்திக் கும் அனுகுணமாகவே மிதமாய் காணப்படும். மேலும், தார்மிகரின் தார்மிகத்தன்மை ஸ்திரப்படும்பொருட்டும் அவருக்கு கலியுகத்திலும் ஜன்மம் கொடுபடக்கூடும். தர்ம காரியங்களுக்கு விசேஷ ஸெளகரிய முள்ள மற்ற யுகங்களில் தர்மங்களை அப்பியஸித்துவந்த தார்மிகரை விசேஷ அஸெள கரியத்துடன் கூடிய கலியுகத்திலும் ஜன்ம மெடுக்கும்படி செய்து அவரின் தார்மிகத்தன்மை பரீக்ஷை செய்யப் பட்டு உறுதிப்படுத்தப்படுகிறது. இந்தப்படி தார்மிகர் களுக்கு இக்கலியுககாலம் பரீக்ஷாகாலமென்றும் எண்ணப் படலாம். தவிரவும், இக்காலத்தில் தார்மிகராக இருப்பவர் மற்ற யுகங்களில் தர்மாசரணைகளைச்செய்து, அவை பூர்த்தி யாகாமல் அரை குறையாகவே யிருந்த காரணத்தினல் அவைகளை பூர்த்திசெய்து, சித்தசுத்தி முதலானதை பூர்ணமா

யடைந்து, மோக்ஷத்தின்பொருட்டு மேல் ஞான மார்க்கத்தை அவலம்பிப்பதற்காகவும் இக்கலியுகத்தில் ஜன்மத்தை பெற்றிருக்கலாம். அன்றியும், சிலர்கள் உத்தம ஆதிகாரிக புருஷர்களாகவேயிருந்து உலகத்திலுள்ள பாமரஜனங்களை கரையேற்றி விடுவதற்காகவே அவதரித்து ஜனங்களுக்கு மத்தியில் தார்மிகர்களாக விளங்கவுங்கூடும்.

20. தவிரவும், எப்படி, முன் சொல்லிய பிரகாரம், தர்மமே இல்லாத காலத்தில் உலகமே இருக்கமாட்டாதோ, அப்படியே மனிதனுடைய தர்மாசரணைகளை திட்டப்படுத்தியும் ஒழுங்குபடுத்தியும் வரக்கூடிய மதமே இல்லாதகாலத்தில் மனித ஜன்மமும் இருக்கக்கூடியதல்ல. முன் இரண்டாவது பாராவில் கண்டபடி, மோக்ஷமடைய வழி தேடுவதே மனித ஜன்மத்தின் முக்கிய உத்தேசமாகையால், மோக்ஷ மார்க்கத்தில் செல்லுவதற்கு ஸாதனமான மதம் என்பது மனித ஸ்ருஷ்டி காலத்திலேயே ஸித்தமாயிருக்க வேண்டிய அவசியம். ஒவ்வொரு கல்பாரம்பத்திலும் பூர்வகல்ப கர்மானுஸாரியாக மனித ஸ்ருஷ்டி ஏற்படுவதாலும், கல்பங்களின் தொடர்ச்சி அனாதிபாயுள்ளதாகையாலும், மனித ஸ்ருஷ்டிக்கும் ஆதி கிடையாது. ஆகையால், அனாதிகாலமாய் ஸித்தமாயிருந்து வந்திருக்கிற மதந்தான் வாஸ்தவமான மதமாகும். நேற்று பிறந்து நாளை நாசமடைகிற மதங்கள் மதங்களே ஆகா. சரியான கணிதப்படி சுமார் 196 கோடி வருஷங்களுக்கு முன்பாக நடப்பு கல்பாரம்பத்தில் மனித ஸ்ருஷ்டி ஏற்பட்டதாக வெளியாகிறது. ஹிந்து மதத்தைத் தவிர உலகத்திலுள்ள மற்ற மதங்கள் யாவற்றும் குறிப்பிட்ட ஸமீப காலங்களில் உண்டாயிருப்பதாகவே அம்மதஸ்தர்களால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. 2000, 2500 வருஷங்களுக்குள்ளாக பிறந்திருப்பதாகச் சொல்லப்படுகின்ற மதங்

கள் உண்மையான மதங்களாயிருக்கக்கூடுமாஞல், ஷை காலங்களுக்கு முன்னுலுள்ள அனேக கோடிவருஷங்களடங்கிய பூர்வ காலங்களில் கடவுள் மனிதனுடைய நற்கதி விஷயமாக என்ன ஏற்பாடு செய்திருந்தாரென்று ஷை மதவாதிகள் நிரூபிக்க வேண்டியதாயிருக்கும். முன்னுல் வேறு மதங்கள் இருந்து மறைந்துபோனதாக அவர்கள் சொல்லும் பக்ஷத்தில், அவ்வேறு மதங்களேயும் உண்மையான மதங்களென்றே அவர்கள் ஒப்புக்கொள்கிருர்களாவென்றும், அவைகள் கடவுளுடைய உண்மையான மதங்களாயிருந்தால் ஏன் நாசமடைந்தன வென்றும், எக்காலமும் ஊர்ஜிதத்திலிருந்து வரக்கூடிய மதத்தை ஸ்தாபித்துவைக்க கடவுளுக்கு சக்தி இல்லையாவென்றும், ஏற்படக்கூடிய கேள்விகளுக்கு அவர்கள் ஜவாப் சொல்ல வேண்டியதாயுமிருக்கும். மேற்கண்ட முன் மதங்கள் வாஸ்தவ மதங்களல்லவென்பதும், தங்களுடைய இப்பாலுண்டான மதங்கள்தான் உண்மையானவையென்பதுமே அவர்களுடைய கக்ஷியாஞல், அவர்களுடைய மதங்கள் ஏற்பட்ட காலங்களுக்கு முன்னுல் கடவுள் மனிதர்களே கவனிக்கத் தவறிவிட்டாரென்றே சொல்லுகிருர்களா? அப்படியாஞல், ஷை முன் காலங்களிலிருந்த மனிதர்களின் கதி என்ன ஆயிற்றென்றும் ஷை மதவாதிகள் சொல்ல வேண்டியதுண்டு. நன்ருக ஆராய்ச்சிசெய்தால், மேற்கண்டபடி அநாதிகாலமாக ஸித்தமாயிருந்திருப்பதே உண்மையான மதத்தின் ஒரு முக்கிய லக்ஷணமென்றே வெளியாகும். எவ்விதம் கடவுள் அநாதியோ, மனிதப் பிறவியும் அநாதியோ, அவ்விதம் மனிதர்களின் நன்மைக்காக கடவுளால் ஏற்படுத்தப்பட்டதாகச் சொல்லப்படுகிற மதமும் அநாதியாகவே இருக்கவேண்டுமென்பதே நிச்சயம். மத்தியகாலங்களில் சிற்சில மஹாபுருஷர்களாகிய மனிதர்

களால் ஏற்படுத்தப்பட்ட மதங்கள் உண்மையான மதங்களாகக்கூடியவையல்ல. அம்மதங்களால் பரலோக விஷயமான சில ஸாமான்ய நன்மைகள் மனிதர்களுக்கு உண்டாக்கக்கூடுமானாலும், முக்கிய புருஷார்த்தமாகிய மோக்ஷத்தை அவைகள் மூலமாய் எவ்விதத்திலும் ஸாதித்துக்கொள்ள முடியாது. இவ்வுலகத்தில் ஹிந்து மதம் ஒன்றுதான் அநாதிகாலமாயிருந்து வந்திருப்பதாகவும், வேதம் என்ற ச்ருதி ஒன்றுதான் மனிதனால் ஏற்படுத்தப்படாததும் மோக்ஷமார்க்கத்தை வெளிப்படுத்தியதும் அநாதிஸித்தமான ஈச்வர வாக்காகவுமிருப்பதாகவும் துலக்கப்பட்டிருக்கிறது. அன்றியும், உண்மையான மதம் ஒன்றாகவே இருக்கக்கூடியதால், அவ்வித மதப்பார்வையில் வேறு மதங்களிருப்பதற்காவது, அவ்வேறு மதங்களிலிருந்து ஜனங்களைத்திருப்புவதற்குள்ள யத்னத்தைச் செய்வதற்காவது காரணமே யிருக்க மாட்டாது. இதனால்தான் அநாதியான ஹிந்து மதத்தில் மற்ற மதங்களிலிருந்து யாரையும் திருப்புவதான காரியத்திற்கே இடம் கொடுக்கப்படவில்லை. ஹிந்துப்பார்வையில் உலகமெங்கும் ஒரே மதந்தான் உள்ளது; அது ஆர்ய வைதிக மதத்தைத் தவிர வேறல்ல. இம்மதத்தில் அடங்கிய ஸாமான்ய தர்மங்கள் விசேஷ தர்மங்கள் இவ்விரண்டுக்குள்ளாக ஹிந்துக்களில்லாதவர்களால் ஸாமான்ய தர்மங்கள் மாத்திரம் ஆசரிக்கப்பட்டு வருகின்றன. தார்மிக ஹிந்துக்களால் ஷை இருவகை தர்மங்களும் அனுஷ்டிக்கப்படுகின்றன. நடப்பு ஜன்மத்தில் ஹிந்துவில்லாதவருடைய மதத்தை ஸாமான்ய தர்மங்கள் மாத்திர மடங்கிய மிலேச்சமதமென்று சொல்லிய போதிலும், இது ஹிந்து மதத்திற்கு வெளிப்பட்டதான தனி மதமாகிவிடமாட்டாது. உண்மையில், ஹிந்து மதத்தில் அடங்கிய தர்மங்களுக்குள் அகப்

படாத தர்மங்களே உலகத்தில் எங்கும் எந்த மதத்திலும் கிடையாது. அதாவது, நற்கதியை அடைய ஸாதனமென்று எதெல்லாம் உலகத்தில் மற்றவர்களால் குறிப்பிடப்பட்டிருக்கிறதோ அதெல்லாம் ஏற்கனவே ஹிந்து சாஸ்திரங்கள் மூலமாய் வியக்தமாய் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆகையால், உலகத்திலுள்ள மற்ற எல்லா மதங்களும் ஒரு விதத்தில் ஹிந்து ஆர்ய மதத்திற்குள் அடங்கியவைகளென்றே சொல்லவேண்டும். முன், முதல் பாகம் 13-வது பாராவில் குறிப்பிட்டபடி உலகத்திலுள்ள எல்லா மனிதர்களும் ஹிந்து ஆர்ய பரம்பரையைச் சேர்ந்தவர்களேயானாலும், இங்கு சொல்லியபடி எல்லோருடைய உண்மையான மதமும் ஆர்ய வைதிக மதமேயல்லாது வேறல்லவென்பதும் வாஸ்தவமானாலும், ஹிந்துக்களுக்குள் விசேஷ தர்மங்கள் காப்பாற்றப்பட்டு அவைகளின் ஆசரணைகளும் நடந்தேறி வந்திருப்பதால், ஹிந்துக்கள் மற்றவர்களைவிட தனி ஸ்தானத்திலுள்ளவர்களென்றே எண்ணவேண்டும். முன்னாலேயே விவரித்த பிரகாரம், ஸாமான்ய தர்மங்களின் ஆசரணையினால்தான் மனிதனுக்கு மனிதத்தன்மை, அதாவது, உயர்ந்த ஜீவத்தன்மை ஸித்திக்கக்கூடியதால், இவ்வித ஸித்தியின்பொருட்டு மிலேச்ச மதங்களும் உபயோகமுள்ளவைதானென்பதில் தடையில்லை. ஆனால், ஸாமான்ய தர்மங்களால் மாத்திரம் மனிதன் தன்னுடைய நிஜமான ஸச்சிதானந்த மோக்ஷ ஸ்வரூபமாகிய ஆத்மத்தன்மையை அடையவே முடியாது. மோக்ஷ புருஷார்த்தத்தை ஸாதித்துக்கொள்ளும்பொருட்டு ஹிந்து விசேஷ தர்மங்களையும் கைக்கொள்ள வேண்டுமானால், ஷை தர்மாசரணைகளுக்காக பிரத்தியேகமாய் ஏற்பட்டிருக்கிற ஹிந்து ஜனவகுப்புகளில் சேர்க்கப்பட்டபின்புதான் அவைகளை கைக்கொள்ளக்கூடும்.

எப்படி விசேஷ வித்யாப்பயிற்சிக்காக ஏற்பட்டிருக்கிற உயர்ந்த வித்யாசாலையில் முக்கிய உபாத்தியாயர் சில குறிப்பிட்ட யோக்கியதையுள்ள மாணுக்கர்களை மாத்திரம் அவரவர்களின் நிலைமைக்குத் தக்கபடி அந்தந்த வகுப்புகளில் சேர்த்து வைப்பாரோ, அப்படியே ஈசுவரர் அவரவர்களுக்கு அனுகூலமான தார்மிக ஹிந்து ஜன வகுப்புகளுக்குள் பிறவியைக் கொடுத்து சில குறிப்பிட்ட ஜீவர்களை இவ்வார்ய மஹாவித்யாசாலையில் தனித்தனியான விசேஷ தர்மாப்பியாஸ மார்க்கங்களில் சேர்த்து வைக்கிறுர். இப்படி பிறவியை ஏற்படுத்துவது ஈசுவரருடைய செய்கையே தவிர மனித காரியமல்ல. பள்ளிக்கூடவகுப்புகளில் பையன்களைச் சேர்த்து வைக்கிற காரியம் உபாத்தியாயரின் காரியமே தவிர பையன்களாலேயே செய்யப்படக்கூடிய காரியமல்ல. ஆகையால், ஹிந்து வில்லாதவரை ஹிந்துவாகச்செய்ய மனிதனுக்கு அதிகாரமில்லை. புனர்ஜன்ம விபரத்தையும் பிறவியின் காரணங்களையும் அறியக்கூடாத ஜனங்களின் மனதுகளில் இவ்வுண்மை பதியக்கூடியதல்ல. விசேஷ தர்மங்களின் அப்பியாஸத்தில் உத்தேசமில்லாத மிலேச்ச மதஸ்தர்களுக்கும், ஏற்கனவே ஹிந்துக்களாயிருந்தும் அவ்வுத்தேசம் நசித்துப் போனவர்களுக்கும், மேற்கண்டபடி தார்மிக வகுப்புகளில் ஜன்மம் ஏற்படமாட்டாது. இவர்கள் ஸாமான்ய தர்மாசரணைக்கு மாத்திரம் தகுதியுள்ள மனித கோஷ்டிகளில்தான் பின்னுல் ஜன்மங்களை அடையக்கூடும். ஸாமான்ய தர்மாப்பியாஸ பலத்திஞல் விசேஷ தர்மாப்பியாஸத்தில் நோக்கம் ஏற்பட்டிருக்கிற உத்தம ஜீவ மாணுக்கர்களை தார்மிக மஹா வித்யாசாலைக்கு அனுப்பி உபகரித்து வருகிற (Feeder) ஸ்தானத்தில் மற்ற மதங்கள் உலகத்திலிருந்துவருவதாகவும் சொல்லலாம். எப்படி ஸர்க்காரால் ஏற்படுத்தப்பட்டி

ருக்கிற கவர்ன்மெண்டு காலெஜூக்கு பிரைவேட்டாக ஏற்படுத்தி நடத்திவரப்படுகின்ற சில்லரைப் பள்ளிக்கூடங்கள் உபகரித்து வருகின்றனவோ (As Feeders), அப்படியே உலகத்திலுள்ள மற்ற மதங்கள் மனிதர்களாலேயே உண்டாக்கப்பட்டிருந்த போதிலும், அவைகள் ஆர்யமதத்திற்கே உபகாரிகளாகவுமிருக்கக்கூடும். எவ்விதம் ஸாமான்ய கீழ் பள்ளிக்கூடங்களில் மேலான முக்கிய வித்யைகள் போதிப்பிக்கப்படாமலிருந்தபோதிலும், அப்பள்ளிக்கூடங்களும் **வித்யாசாலைகள்** என்றே சொல்லப்படுகின்றனவோ, அவ்விதமாகவே முக்கிய புருஷார்த்தமாகிய மோக்ஷமாவது அதற்கு நெருங்கிய ஸாதனமாயுள்ள விசேஷ தர்மங்களாவது மனிதனால் ஏற்படுத்தப்பட்ட மதங்களினால் ஸாதித்துக்கொள்ளப் படக்கூடாமலிருந்தபோதிலும், அவைகளும் **மதங்கள்** என்றே உலகத்தில் வியவஹாரிக்கப்படுகின்றன. சில காலங்களில் கீழ் வித்யாசாலைகளிலிருந்து மாணாக்கர்கள் பிரதான வித்யாசாலைக்கு அனுப்பப்படாமலிருப்பதுடன், பிரதான வித்யாசாலையிலுள்ள மாணாக்கர்களுக்குள்ளாகவே அனேகர்கள் அவ்வித்யாசாலையில் தங்கி நிற்க யோக்கியதையில்லாமல் அதை விட்டு வெளியேறிப் போய்விடவும் கூடும். இப்படி தங்களுடைய யோக்கியதைக் குறைவினால் வெகு பெயர்கள் வெளியேறிப்போயும், சிலர்கள் மாத்திரம் தங்கியும், புதிதாக மாணாக்கர்கள் வந்து சேராமலும், இருப்பதினால் அவ்வுயர்ந்த வித்யாசாலைக்கு யாதொரு மதிப்புக் குறைவும் வந்துவிடமாட்டாது. இது போலுள்ள ஸ்திதி இக்கலியுகத்தில் தார்மிக வைதிக மதத்திற்கு வந்திருப்பதாகச் சொல்ல வேண்டும். உண்மையான தார்மிகர்கள் வெகு ஸ்வல்பமாயிருந்து வருகிற காரணத்தினால் அவர்களுக்காவது ஆர்யமதத்திற்காவது யாதொரு மதிப்புக் குறைவும் வந்து விட்டதாக

எண்ணக் கூடாது. இக்கலியுகக் கடைசிகாலம் வரையில் நாளடைவில் தார்மிகர்களின் எண்ணிக்கை வர வர குறைந்து கொண்டுதானிருக்கும். இது இயற்கையாகவே காலத்தின் காரியமாக நடந்துவரும்.

மூன்ருவது பாகம் முற்றும்.

---

# தர்ம விமர்சனம்

---

நான்காவது பாகம்

## தார்மிகப்பார்வையும் விபரீதச்சட்டங்களும்

1. பார்க்கப்பட்ட பொருள் ஒன்ருனாலும், அதில் பலவித பார்வைகள் ஜனங்களுக்கு ஏற்படக்கூடும். அவரவரின் தனித்தனியான ஸ்திதிக்குத் தக்கவாறு பார்வை வேறுபடும். இன்று பிறந்த குழந்தையின் திருஷ்டியில் வஸ்துக்களுக்குள்ள பரஸ்பரவித்தியாஸங்கள் புலப்படாமல், ஸகலமும் தன் கண்களைத்தொடுவது போல் அதற்குத் தோன்றும். ஸமீபம் தூரம் என்ற பேதப்பார்வையும் அக்குழந்தைக்கிராது. இப்படியே மற்றவர்களாலும் ஒரே வஸ்து பார்க்கப்பட்ட போதிலும், அந்த வஸ்துவின் ஸ்வரூபத்தை அறியாதவனுடையவும் அதை நன்கு அறிந்தவனுடையவும் பார்வை ஒன்ருகமாட்டாது. படித்து அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளக்கூடியவன் புஸ்தகத்தைப் பார்ப்பதற்கும் படிக்கத் தெரியாதவன் அப்புஸ்தகத்தைப் பார்ப்பதற்கும் வித்தியாஸமுண்டு. இருவருடைய பார்வையும் ஒரேவிதமல்ல. அன்றியும், அவரவரின் மனேபாவனைக்கும் இச்சைக்கும் வாஸனு ஸ்வபாவங்களுக்கும் தக்க விதங்களில் பார்வைகளும் பேதப்படக்கூடியவை. திருஷ்டிக்கு விஷயமான சிறு ஆட்டுக்குட்டி ஒன்றேயானுலும், அது விளையாடுவதற்கு போக்கிய

மான பிராணியாக பாலகர்களால் பார்க்கப்படுகிறது. அதை அழகுள்ள ஈசுவர ஸ்ருஷ்டியாக மற்ெறாருவர் பார்க்கிறார். தன்னைப்போல் அதொரு ஜீவனென்று எண்ணியும், இரு வரும் ஈசுவரரிடமிருந்துண்டாயிருப்பதால் அதின் பேரில் ஸஹோதரபாவத்தை பாராட்டியும், மற்ெறாருவர் அதை அன்புடன் பார்த்துவருகிறார். ஈசுவரர் அந்தர்யாமியாக அதிலுமிருப்பதால் அதை ஈசுவரவடிவமாகவே மற்று மொருவர் பக்தியுடன் பார்க்கிறார். கர்மகதி விபரத்தில் ஞாபகமுள்ள மற்ெறாருவரால் அது அந்நியாயமாய் மனிதன் கையிலகப்பட்டுக் கொல்லப்படுவதற்காக பிறந்திருக்கிற பரிதபிக்கப்படவேண்டிய பிராணியாகப் பார்க்கப்படுகிறது. வேறொருவன் அதில் மாம்ஸம் எவ்வளவு கிடைக்குமென்பதை கவனித்து அதை கொல்லப்படத்தகுந்ததாகவே பார்க்கிறான். இந்தப்படி, ஜனங்களுடைய ஞானத்திலும் ஸ்வபாவத்திலுமிருந்துவருகிற வித்தியாஸங்களுக்கு அனுஸரணையாக ஒரே விஷயத்தில் பலவித பார்வைகளுண்டாகலாம். ஆகையால், உலகத்தில் காணப்படுகிற பதார்த்தங்களும் நடந்துவருகிற நடவடிக்கைகளும் எல்லோராலும் ஒரே விதமாய் பார்க்கப்படுவதுபோல் சொல்லக்கூடாது. எல்லோருக்கும் ஒரேவிதப் பார்வை எவ்விஷயத்திலுமிருக்கக்கூடியதல்ல. ஒரே மனிதனிடத்திலும் ஒரே காலத்தில் வலது கண்ணினால் பார்க்கப்படுவதும் இடது கண்ணினால் பார்க்கப்படுவதும் கொஞ்சம் வெவ்வேறுதான். பார்க்கப்பட்ட வஸ்து ஒன்றாகவே யிருந்தபோதிலும், கண்களில் தென்படுகிற அதின் அம்சங்கள் முழுமையும் ஒன்றல்ல. சற்று கவனித்துப் பார்ப்பவர்களுக்கு இவ்விஷயம் துலங்கும். கண்களின் ஸ்தானவித்தியாஸத்தினால் எவ்விதம் வஸ்துக்களின் வெவ்வேறு அம்சங்கள் பார்க்கப்படுகின்றனவோ, அவ்வித

மாகவே பல விதங்களில் வேறுபட்டுள்ள வாஸனுகுணகர்மங்களுக்கொற்றபடி நானுப்பிரகாரமாய் பின்னப்பட்டிருக்கிற மனோபாவனைகளுடன் கூடி தனித்தனி ஸ்தானங்களிலிருந்து வருகிற ஜீவர்களின் மனதுகளிலும் உலக விஷயங்களின் வெவ்வேறு அம்சங்கள் தோன்றக்கூடியவை. இந்தப்படி பலவாருகத் தோன்றுகிற அம்சங்களும் அனேகமாய் உண்மையில் அவைகளுள்ளபடி தோன்ருமல் பார்க்கிறவர்களின் மேற்கண்ட விசேஷ மனோபாவனுபேதங்களினுல் மாறுதலடைந்தே தோன்றும்.

2. மேற்சொல்லியபடி பார்வை வித்தியாஸப் படக்கூடியது வாஸ்தவமானுலும், எவ்விதப் பார்வையும் உண்மையான பார்வையல்லவென்று எண்ணிவிடக்கூடாது. சிலது உண்மையான பார்வையாகவே யிருக்கலாம். ஓர் உதாஹரண மெடுத்துக் கொள்வோம். ரயில் வண்டியில் பிரயாணமாகப் போகும்போது ஒருவர் உட்கார்ந்திருக்கிற இடத்திற்கு எதிர்பக்கத்திலுள்ள ஜென்னல் கொஞ்ச நீல வர்ணக்கண்ணுடியால் மூடப்பட்டிருந்தால், அக்கண்ணுடியில் அவருக்குப்பின்புறமுள்ள மலை, மரம், செடி, கட்டிடம் வகையருக்கள் விபரீதமாய் ஓடுவதாகக் காணப்படுகின்றன. இதெல்லாம் பிரதிபிம்பத் தோற்றமேயல்லாது வேறல்ல. எது வரையில் இப்பிரதிபிம்பத்தில் மனதை வைத்து அவர் பார்த்துக்கொண்டிருப்பாரோ அது வரையில் கண்ணுடியின் நிஜஸ்வரூபமாவது கண்ணுடிக்கப்பால் வாஸ்தவத்தில் அவருக்கெதிரிலிருக்கிற பதார்த்தங்களாவது அவருடைய பார்வைக்கு விஷயமாகக் கூடியவையல்ல. பார்க்கப்பட்டதெல்லாம் கேவலம் பிரதிபிம்பந்தானென்று எண்ணி கண்ணுடியை உற்றுப்பார்க்க ஆரம்பித்தால் பிரதிபிம்பங்கள் உடனே மறைந்து போவதுடன் கண்ணுடியின் நிஜத்தன்மையும் பார்

வைக்கு நேர் விஷயமாகிவிடும். அப்பால், கண்ணாடியையும் லக்ஷியமாக எண்ணாமல் அதின் மூலமாய் அதற்கு வெளியி லுள்ள வஸ்துக்களை பார்க்க உத்தேசித்து நன்றாக உற்றுப் பார்த்தால், கண்ணாடியும் பார்வையிலிருந்து விலகிப்போய், அதற்கப்பாலிருக்கிறவைகளே நேராகப் பார்க்கப்பட்டவை யாகும். எதிரில் கண்ணாடிஜென்னலிருந்தாலும், கண் திறந்திருந்தாலும், மனது வேறு ஞாபகத்திலிருந்து கொண்டு கண்ணுடன் ஸம்மந்தப்படவில்லையானால், அந்த ஜென்னலாவது அதற்கப்பாலுள்ள வஸ்துக்களாவது அல் லது பிரதிபிம்பங்களாவது கண்ணுக்கு விஷயமாகா. அதெல்லாம் அவரால் பார்க்கப்பட்டதாக மற்றவர்களுக்குத் தோன்றினாலும், உண்மையில் பார்க்கப்பட்டதாகமாட் டாது. இவ்விதப் பார்வையை முழுவதும் பொய்யான பார் வை யென்றே சொல்லலாம். பிரதிபிம்பத்தை மாத்திரம் ஸாக்ஷாத்கரிக்கிற பார்வையை மோஹப்பார்வை யென்று சொல்லவேண்டும். பார்க்கப்படுவது வெறும் தோற்றமே தவிர வாஸ்தவமில்லையாதலால் இதுவும் உண்மையான பார் வையல்ல. இப்பிரதிபிம்பத் தோற்றத்தை கிரஹிக்கிற மோ ஹப்பார்வையை விலக்கிவிட்டு கொஞ்சம் முன் குறிப்பிட்ட பிரகாரம் உற்றுப்பார்ப்பதினால் கண்ணாடியே பார்வைக்கு விஷயமாகக்கூடியதானாலும், இக்கண்ணாடிப் பார்வை நிலை நிற்கக்கூடிய பார்வையல்ல. இது க்ஷணங்கூட தங்கி நிற்கக் கூடாத பார்வையாதலால், கண்ணாடிக்கப்பால் உண்மையில் எதிரிலிருக்கிற வஸ்துக்களைப் பார்க்க யத்தனித்தா லொழிய கண்ணாடியாலுண்டாகிற பிரதிபிம்பங்களே மறுபடியும் தோன்றும். கண்ணாடியை ஒரு பொருட்டாக எண்ணாமல் அதற்கப்பாலுள்ள வாஸ்தவ விஷயங்களை நேரில் கிரஹிக் கிற பார்வையே உண்மையான பார்வையாகும். இவ்வித

மாக பார்வை நான்கு விதமென்று சொல்லக்கூடும். அதாவது 1. பார்வையே யில்லாத பார்வை, 2. மோஹப்பார்வை, 3. க்ஷணிகப்பார்வை, 4. உண்மைப்பார்வை. இவைகளில் 1, 3 லக்கபார்வைகள் வியவஹார யோக்கிய மில்லாத பார்வைகளாயிருப்பதால், அவைகளை நீக்கிவிட்டு, பொதுவாக பார்வையை மோஹப்பார்வையென்றும் உண்மைப் பார்வை யென்றும் மாத்திரம் இருவகைப்பட்டதாக பாவித்துக்கொள்ளலாம்.

3. எதுவரையில் மோஹப்பார்வையில் புத்தி சென்று கொண்டிருக்கிறதோ அது வரையில் உண்மை துலங்க மாட்டாது. உண்மை துலங்கவேண்டுமானால், வெறும் தோற்றங்களில் ஸத்தியபுத்தியைச் செலுத்தாமல் அவைகள் நீங்கிவிடும்படியான முயற்சியைச் செய்யவேண்டும். தோற்றங்கள் நீங்கினால் மட்டில் போதாது. வாஸ்தவப் பொருள் துலங்கும்படிக்குள்ள விசேஷ யத்தினத்தையுஞ் செய்ய வேண்டும். இவ்வித யத்தினத்தைச் செய்யாவிடில், முன்னால் மறைவடைந்த தோற்றங்கள் மறுபடியும் தோன்றிக் கொண்டேயிருக்கும். பொய்யான தோற்றங்கள் நீங்குவதற்கும், உண்மையான பொருள் விளங்குவதற்கும், செய்யப்படுகிற முயற்சிகளே உண்மைப்பார்வை முயற்சிகளாகும். காணப்படுகிறதும் அழியக்கூடியதுமான தோற்றங்களடங்கிய இப்பிரபஞ்சம் பூராவும் மித்தியை யென்றும், ஸகலத்திற்கும் அதிஷ்டானமாகிய ஆத்மவஸ்து ஒன்றுதான் உண்மைப் பொருளென்றும், அது ஸச்சிதானந்த ரூபியென்றும், அதுவே நாமென்றும், வேதத்தின் மூலமாய் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. எப்படி முன் உதாஹரணத்தில் உண்மைப் பொருளை மறைத்துக்கொண்டும், உண்மையில்லாத தோற்றங்களை வெளிக்காட்டிக்கொண்டும் கண்ணாடி மனிதனை

மோஹபடுத்தி வருகிறதோ, அப்படியே ஆத்மப்பொருளைக் காணவொட்டாமல் செய்துகொண்டும், மனதுடன் கூடிய இந்திரியங்களின் விஷயங்களாகிய மித்தியாபூதத் தோற்றங்களை தன்னிடத்தில் வெளிக்காட்டிக்கொண்டும், மாயையென்ற பிரகிருதி ஜீவனை பிரமிக்கச் செய்துவருகிறது. எவ்விதம் பிரதிபிம்பங்களை ஒரு பொருட்டாகவே எண்ணாமலும், கண்ணாடியின் இருப்பையும் தன்மையையும் கவனிக்காமலும், நன்றாய் உற்றுப்பார்ப்பதான முயற்சியைச் செய்து எதிரிலுள்ள உண்மைப்பொருள்களை பார்க்கக்கூடுமோ, அவ்விதமாகவே கர்ம-பக்தி-ஜ்ஞானாப்பியாஸ ரூபங்களான தகுந்த முயற்சிகளின்பேரில் துச்சமான மித்தியாப் பிரபஞ்சத்தோற்றங்களை லக்ஷியஞ்செய்யாமல் தள்ளி ஒதுக்கியும், ஷை தோற்றங்களுக்குக் காரணமான மாயையைக் கடந்தும், மாயாதீதமான உண்மைப் பொருளாகிய ஆத்மவஸ்துவை ஸாக்ஷாத்கரித்துக்கொள்ளக்கூடும். இப்படி ஸாக்ஷாத்கரித்துக் கொள்வதுதான் முக்கியார்த்தத்தில் உண்மையான பார்வையாகும். இதற்கு ஸாதனமாயுள்ள மேற்கண்ட முயற்சிகள்தான் தர்மமுயற்சிகளென்று சொல்லப்படுகின்றன. ஷை உண்மைப் பார்வையில் நோக்கங்கொண்டு உலகதிருச்யவிஷயங்களை துச்சமாக பாவித்தும், ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கு அனுகூல ஸாதனமாயிருக்கக்கூடிய விதமாகவே உலகநடவடிக்கைகளை உபயோகப்படுத்தி நடந்துகொண்டும், அதற்கு முழுவதும் விரோதப்படக்கூடிய விபரீத நடவடிக்கைகளில் புத்தியைச்செல்லவிடாமல் தடுத்துக்கொண்டும், தர்ம முயற்சிகளைச் செய்துவருவதே தார்மிகர்களின் முக்கிய காரியமாகும். ஷை உண்மைப் பார்வையில் உறுதியாயிருக்கிற நோக்கத்தையும் உண்மைப் பார்வையென்றே சொல்வதுண்டு. இதுவே தார்மிகப்பார்வையென்

றும் சொல்லப்படுகிறது. இவ்வித பார்வை தார்மிகர்களான ஹிந்துக்களைத்தவிர மற்ற யாருக்குங்கிடையாது. எங்கும் எல்லோரிடத்திலும் ஆத்மாவே உண்மைப்பொருளென்றும், அது ஒன்றேயல்லாமல் பலவல்லவென்றும், பிரபஞ்சத் தோற்றங்களுக்குக் காரணம் மித்தியாபூதமான மாயைதானென்றும், அம்மாயைக்கப்பால், அதாவது, அதற்கு அதீதமாக ஆத்மா விளங்குகிறதென்றும், ஹிந்துக்களில்லாதவர்களுக்குத் தெரியாதாகையால், அவர்களுக்கு உண்மைப்பார்வையே யில்லை யென்பதும், பிரபஞ்சத் தோற்றங்களிலேயே ஸத்தியபுத்தியை வைத்து அவைகளிலேயே எப்போதும் நோக்கமுள்ளவர்களாயிருப்பதால் அவர்கள் மோஹப்பார்வையுள்ளவர்கள்தானென்பதுமே நிச்சயம். அவரவர்களின் பார்வைக்குத்தக்கபடி அவரவர்களின் ஆசரணைகளும் வித்தியாஸப்படும். கண்ணாடியின்மீதுள்ள பிரதிபிம்பத்திலேயே ஸத்திய புத்தியுடன் திருஷ்டியுள்ளவர்களிடத்தில் கண்ணாடியின் ஸ்வரூபத்தையாவது கண்ணாடிக்கப்பாலுள்ள உண்மைப்பொருள்களையாவது தெரிந்துகொள்வதற்குள்ள முயற்சியே யிருக்க மாட்டாது. பிரதிபிம்பத்தில் விபரீதமாய்ப் போய்கொண்டிருக்கிற நேத்திர விஷயப்போக்கை அனுஸரித்தே ஷையார்களின் திருஷ்டியும் சென்றுகொண்டிருக்கும். பிரதிபிம்பத்தோற்றங்களை விலக்கி உற்றுப்பார்க்கிற பிரயத்தினமே அவர்களிடமிராதாகையால், வாஸ்தவத்தில் உற்றுப் பார்ப்பவரின் திருஷ்டி தங்களுடைய திருஷ்டியைவிட வேறு என்பதும், தாங்கள் பார்த்துக்கொண்டிருப்பதை ஷையார் பார்க்கவில்லையென்பதும், ஷையார் பார்ப்பதை தாங்கள் பார்க்கவில்லையென்பதுமான ஞானமும் அவர்களுக்குக் கிடையாது. இதினாலேயே இப்பாரதகண்டத்தில் இக்காலத்தில் ஹிந்துக்களின் ஆசரணைவிஷயமாக பலவித

துர்வியவஹாரங்களும், சச்சரவுகளும், தர்மவிரோதமான கொடிய துர்ச்செய்கைகளும் அதிகமாய் மோஹப்பார்வையுள்ளவர்களிடம் காணப்படுகின்றன. சில முக்கிய உதாஹரணங்களை சற்று கவனிப்போம்.

4. இப்புஸ்தகத்தில் முன் மூன்றாவது பாகத்தில் காண்பித்த பிரகாரம் தார்மிகர்களே உண்மையான ஹிந்துக்களாயிருக்கிறபடியாலும், ஹிந்து வில்லாதவர் மிலேச்சரென்று கூறப்பட்டிருப்பதாலும், தார்மிகப்பார்வைக்கு எதிரிடையான மோஹப்பார்வையை மிலேச்சப் பார்வையென்றும் இங்கு இப்பால் சொல்லிவரப்படும். இந்திரியங்களால் கிரஹிக்கப்படுவதே மிலேச்சப்பார்வையில் உண்மையென்று எண்ணப்பட்டிருப்பதால், இந்திரியத் தோற்றங்கள் வாஸ்தவத்தைத் துலக்கவில்லையென்றும், வாஸ்தவமும் ஸர்வாதிஷ்டானப்பொருளுமான ஆத்மாவை ஸாக்ஷாத்கரித்துக் கொள்ளக்கூடிய யத்தினங்களே மனிதன் செய்யவேண்டிய காரியங்களென்றும், இவ்வித யத்தினங்களை யார் யார் எப்படிச்செய்தால் ஆத்மதர்சனம் கிட்டுமென்றும், விபரமாய் போதித்துவருகிற சாஸ்திரவாக்கியங்களிலும் அவைகளை அனுஸரித்துவருபவர்களின் வார்த்தைகளிலும் ஷை மிலேச்சப் பார்வையுள்ளவர்களுக்கு விசுவாஸமில்லாமையும் துவேஷ புத்தியும் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டிருக்கின்றன. பெரும்பாலும் ஷையார்களுக்கு "சாஸ்திரம்" என்ற சொல்லே கர்ணகடோரமாயிருக்கிறது. சாஸ்திரங்களில் என்ன சொல்லப்பட்டிருக்கின்றனவென்று தெரிந்து கொள்ளக்கூடாத அஜ்ஞான ஸ்திதியிலிருந்துகொண்டே சிலர்கள் சாஸ்திரமெல்லாம் பிசகென்றுமாத்திரம் பெருங்கூச்சலிட்டுக்கொண்டும், கண்ணில் பட்ட சாஸ்திர புஸ்தகங்களைக் கொளுத்திவிடுவதான மூடச்செய்கையைச்செய்து

கொண்டும் வருகிறார்கள். சாஸ்திரத்தில் துவேஷபுத்தி யிருந்தாலும் புஸ்தகங்களை நாசஞ்செய்தாலும் கெடுத லும் நஷ்டமும் யாருக்கென்று அவர்கள் தெரிந்து கொள்ளவில்லை. புஸ்தகங்கள் போய் விட்டால் சாஸ் திரம் போய்விடாது. தவிரவும், துவேஷபுத்தியுடன் கூடிய மிலேச்சப்பார்வை யுள்ளவர்களின் வசத்தில் வரக்கூடிய சாஸ் திரபுஸ்தகங்கள் நாசத்தை அடைவதே கோரத்தகுந்தது. உத்தம அதிகாரிகளால் படிக்கப்பட்டு அவர்கள் மூலமாய் ஸகலஜனங்களையும் கடைத்தேறச்செய்து வைக்கக்கூடிய புஸ்தகங்கள் சந்தைக்கடைக்கு வந்து சீர் குலைந்து போகும் படி யேற்பட்டால் அப்புஸ்தகங்களேயில்லாமல் போகும்படி செய்வதும் ஒருவிதத்தில் நன்மையென்றே சொல்லவேண் டும். உண்மையான தார்மிகர்களின் உபயோகத்திலிருக்கிற புஸ்தகங்கள் மற்றவர்களுக்குக் கிடைக்கப் போகிறதில்லை. அப்படியே கிடைத்து சிலதுகள் பலாத்காரமாய் நாசப்படுத் தப்பட்டாலும், தார்மிகர்களின் புத்திகளில் ஸ்திரமாய் பற்றியிருக்கிற சாஸ்திரக்கொள்கைகளைக் கொளுத்திவிட முடியாது. இப்பூமியில் மூடத்தனமான துர்ச்செய்கைகள் எவ்வளவு நடந்தாலும், ஸகல சாஸ்திரங்களும் எந்த மூல காரணத்திலிருந்து வெளிப்பட்டனவோ அவ்வீசுவரரை மிலேச்சப்பார்வையுள்ளவர்கள் நோக்கப்போகிறதுமில்லை, நாசஞ்செய்யவும் முடியாது. ஆதலால், சாஸ்திரங்களுக்கு எக்காலத்திலும் கெடுதல் ஏற்படக்கூடியதல்ல. எந்தக்காலத் தில் சாஸ்திர புஸ்தகங்கள் அபூர்வமாக பெரியோர்களிடம் மாத்திரமிருந்து வந்தனவோ, அந்தக்காலத்தில்தான் சாஸ் திர வாக்கியங்களில் விசுவாஸமும் அவைகளின் பிரகாரம் தவறாமல் ஆசரணைகளும் ஜனங்களிடம் விசேஷமாய் காணப் பட்டன. அச்சுப்போட்டு புஸ்தகங்கள் அதிகமாக வெளிப்

பட்ட பின்பு அவைகளில் மதிப்பும் சிரத்தையும் குறைந்து போனதுடன் அவைகளை வாசிப்பவர்களும் அனுஸரித்து நடந்துவருபவர்களும் மிகவும் குறைந்து போய்விட்டார்கள். ஆகையால், முன் சொல்லியபடி விபரீதக் கொள்கைகளையுடைய அனதிகாரிகளின் திருஷ்டியில் தென்படக்கூடிய சாஸ்திரபுஸ்தகங்களெல்லாம் எவ்விதமாகவாவது நாசமடைவதும் முடிவில் அனுகூலந்தான்.

5. மிலேச்சப்பார்வை ஸ்திரப்பட்டுவிட்டவர்களுக்கு அப்பார்வையில் விசேஷமாய் தேர்ச்சியடைந்தவர்களே மஹான்களாகக் காணப்படுவார்கள். இப்படிப்பட்ட மஹத்வத்தை சீக்கிரத்தில் அடைவதும் சுலுவாதலால், இப்பரதகண்டத்தில் எல்லா உள் நாடுகளிலும் ஏராளமாய் இம்மஹான்கள் தலையெடுத்து பெரும்பாலும் மற்ற ஜனங்களிடத்திலும் அதே பார்வையை விருத்தி செய்வித்து வருகிறார்கள். இந்தப்படி ஹிந்துக்களுக்குள்ளாகவே மிலேச்சப்பார்வை அதிகமாய் விருத்திசெய்யப்பட்டுவந்திருப்பதால், இங்கிலிஷ்காரர் முதலான பிறவி மிலேச்சர்கள் ஹிந்து தார்மிகப்பார்வைக்கும் தங்களுடைய பார்வைக்கும் வித்தியாஸமிருப்பதை அறிந்து கொள்ளாமலும், வித்தியாஸமிருப்பதாகக் கொஞ்சம் தெரிந்து கொண்டவர்கள்கூட தார்மிகப்பார்வையின் மேன்மையை விசாரித்துத்தெரிந்துகொள்ளாமலும், தார்மிகப்பார்வை சிலர்களிடந்தானிருக்கிறதென்ற பாவனையுடன் அதை அலக்ஷியஞ்செய்துகொண்டும், ஷெ பார்வைக்கும் சாஸ்திரப்படிக்குள்ள கொள்கைகளுக்கும் ஆசரணைகளுக்கும் போதுமான மதிப்பைக் கொடுக்காமலே நடந்து வருகிறார்கள். முன் மூன்றாவது பாகம் 2-வது பாராவில் கண்டபடி தார்மிகர்களின் ஸகல நடவடிக்கைகளிலும் மதஸம்பந்தமிருந்துவருவதினால் இவர்களுக்கு மதமே

முக்கியமாயிருக்கையில், மோக்ஷப்பார்வையுள்ளோர்களிடத்தில் "மதஸம்பந்தம்" என்று சொன்னால் இதுவே அவர்களுக்கு பிராந்தி விஷயமாகத் தோன்றுகிறது. ஹிந்து மதத்தைத் தவிர உலகத்திலுள்ள மற்ற எல்லா மதங்களிலும் மிலேச்சப்பார்வையே உறுதிப்பட்டு வந்திருப்பதினாலும், முன் சொல்லிய உண்மைப்பார்வை விபரமே அம் மதப்பிரவர்த்தகர்களுக்குக்கூட தெரிந்திருந்ததாக வெளியாகாததினாலும், ஹிந்து தார்மிகர்களின் மதப்பார்வையும் தங்களுடைய மதப்பார்வைபோல்தானென்று மற்ற மதஸ்தர்கள் எண்ணிக்கொண்டும், மனித நடவடிக்கைகளில் அயார்கள் எது சரியென்று எண்ணுகிறார்களோ அதுவே ஹிந்துப் பார்வையிலும் சரியாயிருக்கவேண்டுமேயல்லாமல் சில விஷயங்களில் வேறு விதமாய் தார்மிகர்களால் எண்ணப்பட்டால் அது பிசகுதானென்று தீர்மானித்துக்கொண்டும், அனேகமாய் தர்மாசரணையிலிருந்து விலகிவிட்ட ஹிந்து பாஷண்டர்களுடன் ஒற்றுமையாயிருந்து தர்மங்கள் மேன் மேலும் கெடும்படியான காரியங்களை இப்பால் அதிகமாய்ச் செய்துவரத் தலைப்பட்டுவிட்டார்கள். இவ்விதம் ஒற்றுமையாயிருப்பவர்களில் அனேகர்களும் அப் பாஷண்டர்களில் சிலர்களும் காலவசத்தினால் ராஜாங்கத்தை நடத்துபவர்களாகவுமிருப்பதால் இவ்வார்ய தர்ம தேசத்திலேயே தர்ம நோக்க முள்ளோர்கள் ஒதுங்கியிருந்து பிழைக்கவேண்டியதாயிருக்கிறது. தார்மிகர்கள் ஒதுங்கிப்போனாலும், அவர்களை அதர்மக்கொள்கையுள்ளவர்கள் பின் தொடர்ந்து ஹிம்ஸை செய்வதற்குள்ள முயற்சிகளையுஞ்செய்துவருகிறார்கள். அம் முயற்சிகளுக்கு ராஜாங்கத்தார்களே தப்பான சட்டதிட்டங்களை ஏற்படுத்திக்கொண்டு உதவிசெய்து வரத்தொடங்கிவிட்டால், நீதியைக் கருதி ஈசுவரரைத் தவிர

வேறு யாரிடம் தார்மிகர்கள் முறையிடக்கூடும்? ஷை நீதி எப்படிப்பட்டதென்பதை ஒரு முக்கிய நடப்பு வியவஹார விஷயமாகிய விவாஹத்தை உதாஹரித்துக் கொஞ்சம் வெளிப்படுத்துவோம்.

6. காமபூர்த்தியையும் லௌகிக ஸௌகரியங்களையும் உத்தேசித்தே உலகமெங்கும் மிலேச்சப்பார்வையில் ஸ்திரீ புருஷர்களுக்குள் விவாஹம் நடத்தப்பட்டுவருகிறது. ஹிந்து தார்மிகர்களுக்குள் நடத்தப்படுகிற விவாஹம் அப்படியல்ல. தார்மிகப்பார்வையில் மனித ஜன்மத்தின் முக்கியமான உத்தேசம் திருச்யபிரபஞ்சத்திற்கும் அதின் காரணமான மாயைக்கும் அதீதமாயுள்ள ஆத்மப் பொருளை ஸாக்ஷாத்கரித்து பிரபஞ்ச துக்கத்திலிருந்து மோசனத்தை அடைந்து பேரானந்தத்தில் ஸ்திரமாயிருப்பதே. இவ்வித மோசனமே பரம புருஷார்த்தம். இதற்கு ஸாதனமாயிருக்கிற அவாந்தரபுருஷார்த்தம் தர்மம். தர்மத்தைக் கைக்கொள்வதினால் ஞானமுண்டாகி ஸம்ஸாரபந்தத்திலிருந்து மோசனம் ஸாதித்துக் கொள்ளப்படுகிறது. முக்கியமாய் இவ்வித தர்ம புருஷார்த்தம் புருஷன் ஸ்திரீ இருவர்களுக்கும் ஸித்திக்கும்பொருட்டே தார்மிகர்களுக்குள் விவாஹம் நடந்தேறிவருகிறது. தர்ம ஸித்தியே இவ்விவாஹத்தின் பிரதான உத்தேசம். காம பூர்த்தியும் லௌகிக ஸௌகரியங்களும் கீழான ஸாமான்ய பலன்களேயல்லாமல் முக்கிய உத்தேசங்களல்ல. காம பூர்த்தியில் கொஞ்சங்கூட உத்தேசமில்லாமலே விவாஹத்தைச் செய்து கொள்ளலாம். ஜரத்காரு முதலான மஹான்களின் விவாஹங்களில் இவ்வுத்தேசமிருந்திருப்பதேயில்லையென்று வெளியாகிறது. பின்னால் குறிப்பிடப்போகிற பிராஜாபத்யமென்று சொல்லப்பட்ட தார்மிகவிவாஹத்தின் கருத்து தர்மாசரணையைத்

தவிர வேறல்லவென்றும் தெரியவருகிறது. துவிஜபுருஷர் உபநயன காலத்தில் குருவை அடைந்து, பிரஹ்மோபதேசத்தைப் பெற்று, தன்ஜன்மத்தின் முடிவான உத்தேசமென்ன, அதை ஸாத்தியப்படுத்திக் கொள்ளக்கூடிய மார்கம் எது, அம்மார்கத்தில் செல்லவேண்டியதற்குரிய ஸாதனங்கள் யாவை, இந்த ஸாதனங்களைக்கைகூடச்செய்கிற உபாயங்கள் எவை, ஷை உபாயங்களை உபயோகப்படுத்துகிற கிரமம் யாது, இதெல்லாவற்றையும் பிரம்மசரியாசிரமத்தில் நன்கு ஆராய்ச்சிசெய்து தெரிந்துகொண்டு அப்பால், ஸமாவர்த்தனத்தினுல் அவ்வாசிரமத்தை முடித்துக்கொண்டு, தான் முன்னுல் குருமுகமாகவும் புஸ்தகங்களிலிருந்தும் தீர்மானமாய் தெரிந்து கொண்டிருக்கிற விஷயங்கள் பூராவையும் தன்னுடைய நேர் அனுபவத்திற்குக் கொண்டுவருவதற்காக தர்மாப்பியாஸத்தின்பொருட்டு இரண்டாவது ஆசிரமமாகிய கார்ஹஸ்தியத்தில் விவாஹம் மூலமாய் பிரவேசிக்கிறார். சாஸ்திரத்தில் குறிப்பிடப்பட்ட பிரவிருத்தி நிவிருத்தி தர்மங்களுக்குள் முதலாவதாக அனுஷ்டிக்கப்பட வேண்டிய பிரவிருத்தி தர்மங்களின் அப்பியாஸங்கள் பெரும்பாலும் தர்ம பத்னீயின் ஒத்தாசையை அபேக்ஷிக்கிறவைகளாயிருக்கின்றன. புருஷனுல் மாத்திரம் அவைகள் பூர்த்தியாகக்கூடியவையல்ல. ஆதலால், விவாஹத்தினுல் ஒரு கன்னிகையை தன்பத்னீயாக ஸ்வீகரித்துக்கொண்டு, அவளுக்கு தர்மகைங்கரியத்தில் அப்பியாஸத்தை ஏற்படுத்திக்கொடுத்து அவளுடைய ஒத்தாசையின்பேரில் பிரவிருத்தி தர்மங்களைச் செய்துவருகிறார். ஷை ஒத்தாசைக்குப் பிரதிபலனுக ஷை தர்மாசரணைகளினுலுண்டாகிற புண்ணிய பலன்களில் சரிபாதிபாகம் அந்த பத்னீக்கு ஸித்தித்து விடுகிறது. இவ்விதமாக தர்மாசரணைகளிலும் அவைகளின் பலன்களிலும் ஸ்திரீ

புருஷர்கள் ஸமபாத்தியஸ்தர்களாக இருந்துகொண்டு, பிர விருத்தி தர்மஸித்தியினுல் சித்த சுத்தியையும் மேல் அப ரோக்ஷாத்மஜ்ஞானப் பிராப்தியின்பொருட்டு மற்றுமுள்ள ஸாதன ஸம்பத்துக்களையும் கிரமமாகப்பெற்று, இருவரும் முடிவில் மோக்ஷத்தை அடைவதற்குள்ள உபாயத்தை ஸாதித்துக்கொள்கிருர்கள். புருஷனுக்கு ஒத்தாசையாக இருந்து வருவதே ஸ்திரீக்கு தர்மாசரணேயே தவிர அவளு க்கு தனிமையான தர்ம காரியங்கள் கிடையாது. பெரும் பாலும் வேதமந்திரங்களே உச்சரித்துக்கொண்டே தர்மா சரணே நடக்க வேண்டியதாயிருப்பதாலும், வேதோச்சார ணத்தில் துவிஜஸ்திரீக்குங்கூட அதிகாரமில்லேயாதலாலும், அவ்வித தர்மாசரணேயில் நேராக அதிகாரியாயிருக்கிற துவிஜ பர்த்தாவுக்கு உதவியாயிருப்பதே அவளுக்கு ஸ்வதர்ம மாகும். இப்படியே, வேதோச்சாரணத்தில் அதிகாரமில் லாத சூத்திரருக்கும் துவிஜர்களின் தர்மாசரணேகளுக்கு அனுகூலமாயிருந்து ஒத்தாசை செய்வதைத் தவிர தனியான கர்மாக்கள் கிடையாது. இந்தப்படி ஒத்தாசையாயிருக்கிற பர்த்தாவுக்கு கைங்கரியஞ்செய்வதே சூத்திரஸ்திரீக்கும் ஸ்வதர்மமாகும். இப்படிக்கெல்லாம் முக்கியமாய் பர்த்தா வின் தர்மகாரியங்களுக்கு உதவி செய்து கிரமம் கிரமமாய் தர்ம மோக்ஷங்களே ஸித்தித்துக்கொள்வதற்காகவே ஹிந்து ஸ்திரீகளுக்கு விவாஹம் விதிக்கப்பட்டிருக்கிறது. இதினு லேயே விவாஹமான ஸ்திரீகள் தர்மபத்னிகளென்று சொல் லப்படுகிருர்கள். இவ்விதமாக, புருஷனுடைய அவசியமான தர்மாசரணேகளில் ஒத்தாசை செய்து வருவதற்கு பத்னீயும், ஸ்திரீக்கு தர்மபலன் ஸித்திக்கும்பொருட்டு பர்த்தாவும், விவாஹத்தினுல் ஒன்று சேர்த்துவிடப்படுகிருர்கள். இந்தப் பிரகாரம் தர்மஸித்திக்காகவே விவாஹம் நடந்தேறி வரு

வதில், உலகத்தில் எந்நாளும் தர்மாசரணை பாரம்பர்யக்கிரம மாக நடந்தேறிவரும்பொருட்டு தம்பதிகள் ஸந்ததிவிருத்தியைச் செய்துவருவதும் முக்கியமென்று எண்ணப்பட்டு வந்திருக்கிறது. ஸாமான்ய திருஷ்டியில் தர்ம்பரம்பரையின் அபிவிருத்தி உலக நன்மையின்பொருட்டு முக்கியமாயிருப்பதுடன் அது பிதுருக்களின் நன்மைக்கும் காரணமாயிருப்பதினால், புத்திரோத்பத்தி அவசியமென்றும் வற்புறுத்தி வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், பரமார்த்தத்தில் மாத்திரம் திருஷ்டியுள்ளோர்களுக்கு அது அவசியமில்லை யென்றும் தெளிவாய் அவ்வேதத்திலேயே வெளிப்படுத்தப்பட்டுமிருக்கிறது. ஆகையால், ஸந்ததியையுண்டாக்குவது அவசியமா இல்லையாவென்பது அதிகாரி தாரதம்மியத்தைப் பொறுத்துத் தீர்மானிக்கப்படவேண்டிய விஷயம். அவசியமென்று ஏற்படுகிற இடத்திலும், தன்னுடையவும், பிதுருக்களுடையவும், உலகத்தினுடையவும் தர்மஸம்பந்தமான நன்மையைக்கருதி புத்திரோத்பத்தி அவசியமென்று சொல்லப்பட்டதே யொழிய காமபூர்த்தி ஸம்பந்தமாகச் சொல்லப்பட்டதல்ல. காமபூர்த்திக்காகச் செய்யப்படுகிற விவாஹம் தர்ம விவாஹமே யாகமாட்டாது. அது சாஸ்திரத்தில் தூஷிக்கப்பட்டுமிருக்கிறது. எவ்விதத்திலும் தார்மிகர்களுக்குள் தர்மஸித்தியே விவாஹத்தின் முக்கிய உத்தேச மென்பதே உண்மை.

7. முன் பாகங்களில் காட்டியவிதமாக ஹிந்துகளுக்குள் வேதமுறைப்படி ஜாதிபேதங்களிருந்து வருவதில், பிராம்மணன் தர்மங்களை தான் ஆசரித்து வருவதுடன் மற்ற ஜாதியார்களுக்கும் தர்மங்களை உபதேசித்து அவர்களும் ஆசரித்து வரும்படி செய்ய வேண்டிய பொறுப்பையும் அவர்களுக்கு தர்மாசரணையை நடத்திவைக்க வேண்டிய கடமையையும்

வஹித்து வருகிறபடியாலும், இவ்வித ஸ்தானத்திலிருப்பவரிடம் தர்மாசரணை மிகவும் நன்ருயிருந்துவரவேண்டிய தவசியமானதாலும், பிராம்மண ஜாதியில் நடந்தேறிவருகிற விவாஹம் எப்போதும் தார்மிகவிவாஹமாகவே நடத்தப் படவேண்டியது முக்கியம். சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட எட்டுவித விவாஹங்களில் உத்தமமும் கிரமமுமான விவாஹங்களாகிய பிராம்மம், தைவம், ஆர்ஷம், பிராஜாபத்யம் இந்நான்கு மாத்திரம் பிராம்மணனுக்கு விதிக்கப்பட்டிருக்கின்றன. காந்தர்வாதி கீழான நான்கு விவாஹங்களும் பிராம்மணனுக்கு நிந்தியமென்றும், அவைகளை அவர் செய்யவே கூடாதென்றும் சாஸ்திரத்தில் வியக்தமாய் சொல்லப்பட்டிருக்கிறது. காந்தர்வாதி விவாஹங்கள் க்ஷத்திரியாதி மற்ற ஜாதியார்களுக்கு அனுமதிக்கப்பட்டு அவர்களுக்குள் நடந்தேறி வந்திருப்பதால் ஸ்திரீ ருதுவான பின்பும் விவாஹம் அவர்களால் நடத்தப்பட்டு வருகிறது. முக்கியமாய் பிராம்மண ஜாதியில், விவாஹத்தினுல் ஸ்திரீ புருஷனுடன் கூட தர்மாசரணையில் பிரவேசிப்பிவிக்கப்படுகிருள். பாணிக்கிரஹணகாலம் முதலே தர்மகைங்கரியத்தின் அப்பியாஸத்தில் புருஷனுல் தயார் செய்யப்பட்டு வருகிருள். புருஷன் உபநயன காலத்தில் குருவை அடைந்து ஞானுப்பியாஸத்தில் பிரவேசிப்பது போல், ஸ்திரீ விவாஹகாலத்தில் புருஷனை குருவாக அடைந்து தர்மாப்பியாஸத்தில் பிரவேசிக்கிருள். ஏற்கனவே புருஷன் பிரம்மசரியாசிரமத்தில் செய்யப்பட்ட ஞானுப்பியாஸத்தினுல் வித்வானுயிருப்பதால், ஸ்திரீ தன்னுடைய தர்மாப்பியாஸ காலத்திலேயே சிறுகச் சிறுக புருஷனுல் ஞானவிஷயத்திலும் அப்போதைக்கப் போது போதிப்பிவிக்கப்பட்டு தெளிவை ஏற்படுத்திக்கொள்ளக்கூடும். எப்படி புருஷனுடைய முன் பரோக்ஷதர்ம

ஜ்ஞானம் பின் தர்மாசரணையால் ஸ்வானுபவத்திற்குக் கொண்டுவரப்படுகிறதோ, அப்படியே புருஷனுக்கு ஒத்தாசையாக நடத்திவரப்படுகிற ஸ்திரீயின் தர்மாசரணைகளும் புருஷனுடைய வித்தியோபதேசங்களினால் தெளிவுபடுத்தப்படுகின்றன. இயற்கையாகவே புருஷப்பிறவிக்கு ஞானப்பிடிமானமும் (Intellectuality) ஸ்திரீபிறவிக்கு உணர்வுப்பிடிமானமும் (Emotionality) ஸ்வபாவத்தில் அதிகமாக ஏற்பட்டிருக்கிறபடியால், ஆரம்பத்தில் புருஷனுக்கு உபநயனத்தினால் ஞானப்பியாஸத்திலும், ஸ்திரீக்கு விவாஹத்தினால் தர்மாப்பியாஸத்திலும், பிரவேசங்களைச் செய்துவைத்து, அப்பால் புருஷனுடைய ஞானம் தர்மாப்பியாஸத்துடனும், ஸ்திரீயின் தர்மாப்பியாஸம் ஞானத்துடனும், சேர்க்கப்பட்டு இவ்விரண்டும் சேர்ந்தே முக்கிய உண்மைப்பார்வைக்கு நேர் ஸாதனங்களாக அத்புதமாய் அமைக்கப்படுகின்றன. புருஷனுடையவும் ஸ்திரீயுடையவும் இவ்வித கூட்டு அப்பியாஸங்கள் சில வருஷங்கள் தொடர்ந்து நடந்து வந்தால் தான், இருவர்களுடைய ஸ்வபாவங்களிலும் ஒரே விதமான ஸம்ஸ்காரம் நாளடைவில் ஏற்பட்டு பலப்பட்டுவரும். அதாவது, இருவரும் அடிக்கடி தர்மங்களை சேர்ந்து ஆசரித்துக் கொண்டும், அந்த தர்ம விஷயமான தத்வங்களையும் மற்றுமுள்ள வித்தியைகளையும் புருஷனிடமிருந்து ஸ்திரீ கிரஹித்துத் தெரிந்து கொண்டும், பர்த்தாவிடத்தில் பத்னீக்கு ஈசுவரபாவனையும் குருபக்தியும் ஸ்திரப்பட்டு அவள் சுச்ரூஷை செய்துகொண்டும், புருஷன் பத்னீயிடத்தில் சிஷ்யபாவனையுடனும் விசுவாஸத்துடனுமிருந்து தன்னுடைய நல்வழியில் அவளுக்குத் தேர்ச்சியை உண்டாக்கிக்கொண்டும் வந்தால் கூடிய சீக்கிரத்தில் இருவர்களிடத்திலும் ஒரே விதமான ஸ்வபாவங்களும், எண்ணங்களும், கொள்கைகளும் பலப்

பட்டு வருவதுமல்லாமல் இருவர்களுக்குள்ளும் பரஸ்பரம் ஏகத்வபாவனையும் உறுதிப்பட்டுக் கொண்டேவரும். இவ் வித ஏகத்வம் ஸ்திரீ ருதுவாவதற்கு முன்பாகவே ஸித்தித்து விடவேண்டியது மிக்க அவசியம். சரீரப்புணர்ச்சியில் ஞாபகத்துடன் ஏற்படக்கூடியதாக மிலேச்சக்கொள்கையில் சொல்லப்படுகிற ஏகத்வம் உண்மையான ஏகத்வமல்ல. அது நிலையற்றதும் அசுத்தமாயுமுள்ளது. அங்கு ஏகத்வ பாவனையென்பது மோஹத்தைத் தவிர வேறல்ல. உண்மை யான ஏகத்வம் தார்மிக தம்பதிகளுக்குள்ளேதான் ஏற்படக் கூடியது. ருதுவாகிறதற்கு முன்னாலேயே பெண்களுக்கு மேலேகண்டபடி மனோபாவனைகளும் விசேஷ யோக்கியதை யும் உண்டாகிவிடக்கூடுமோவென்று ஸந்தேஹிக்கக்கூடியவர் கள் செம்மையாய் உஷஸ்தியுபாக்கியான தத்வங்களை தெரி ந்து கொண்டால் தெளிவை அடைந்துவிடுவார்கள்.

8. மேற் சொல்லியபடி உண்மையான ஏகத்வம் ஸித் தித்த பிறகுதான நிஷேகத்தினால் குலவிருத்தியின்பொருட்டு புருஷனிடமிருந்து ஸந்ததிபீஜத்தை பெற்றுக்கொள்வதற்கு பத்னீ யோக்கியதை யுள்ளவளாகிறாள். அவள் ருதுவா வதற்கு முன்பாகவே இவ்வித யோக்கியதையை ஸம்பாதித் திருந்தால்தான் ருதுவான பிறகு இதின் இரண்டாவது பாகம் 10-வது பாராவில் குறிப்பிட்ட சாஸ்திரப்படிக்குள்ள ஸமாவேசனத்தை ஆசரிப்பதற்கும் அப்பால் நிஷேகத்தைச் செய்துகொள்வதற்கும் தகுதியுள்ளவளாகக் கூடும். ருது காலத்திற்கு முன்னமேயே பர்த்தாவிடத்தில் தீவ்ரமான பக் தியும், தர்மாப்பியாஸத்தில் உறுதியான ஊக்கமும், மனஸில் களங்கமற்ற சுத்தியும் ஸித்தித்திருக்கிறவளுடன்தான் ருது வானதற்கப்பால் ஸமாவேசனக்கிரியையை விதிப்படி நடத்த ஸாத்தியப்படக்கூடியது. தார்மிகர்களுக்கு ஸமாவேசனம்

விதிக்கப்பட்டிருப்பதினாலேயே, பெண் ருதுவாவதற்கு வெகு காலத்திற்கு முன்னாலேயே, மேற்கண்ட மூவகை ஸித்தியின் பொருட்டு, விவாஹமாக வேண்டுமென்பதே நிச்சயம். மேலும், உலகத்தில் தார்மிக விதை அபூர்வமான விதை. இவ்விதையை சுத்தப்படாத க்ஷேத்திரத்தில் விதைத்து வீண் படுத்தலாகாது. ஸாமான்ய சப்பாத்திவிதையை எங்குமெறிந்தாலும் அது உடனே வேர்பிடித்து வளர்ந்துவரும். உயர்ந்த விதை முளைக்கவேண்டுமானால், சில காலத்திற்கு முன்பாகவே நல்ல பூமியில் குழிவெட்டி, நல்லமண்போட்டு, உரம் சேர்த்து, காய வைத்து, பக்குவப்படுத்தவேண்டியதவசியம். இவ்வளவும் செய்து அப்பால் தகுந்த பருவகாலத்தில் அவ்விதையை ஊன்றினால் அது வேர் பிடித்து மரமாகவோ கொடியாகவோ ஓங்கிவளரும். இதுபோல், புருஷனும் தார்மிகஸந்ததிக்குள்ள விதையை நிஷேகக்கிரியையினால் பத்னீயிடம் விதைப்பதற்கு சில வருஷங்களுக்கு முன்பாகவே அவளை கன்னிகை பருவத்தில் பத்னீயாக அடைந்து அவளுடைய சரீரத்தையும் சித்தத்தையும் தன்னுடைய பலவித தர்மாசரணைகாரியங்களினாலும் உபதேசங்களினாலும் கொஞ்சங்கொஞ்சமாக சுத்தப்படுத்தி சீராக்கிக்கொண்டும், தங்களிருவர்களுக்குள்ளும் பரஸ்பரம் உண்மையான ஏகத்வத்தை ஏற்படுத்திக்கொண்டும் வருவதற்காகவே ருதுகாலம் வரையில் அவகாசம் கொடுக்கப்பட்டிருக்கிறது. எப்படி புருஷன் 7-வயதுக்கப்பால் குருவை அடைந்து பிரம்மசாரியாகவேயிருந்து வித்தியாப்பியாஸத்தை பூர்த்திசெய்து கொள்கிறானோ, அப்படியே ஸ்திரீயும் 7-வயதுக்கப்பால் பர்த்தாவை அடைந்து ருதுவாவதற்கு முன்பாகவே தன் சுத்தியையும் தர்மாப்பியாஸத்தையும் உறுதிப்படுத்திக்கொள்கிறாள். இப்படி தர்மாப்பியாஸம் முன்னாலேயே உறுதிப்பட்டிருந்தால்

தான் அவள் ருதுவான காலம் முதல் தர்ம க்ஷேத்திரமா யிருந்து தார்மிகஸந்ததி பீஜத்தை தரிக்க யோக்கியையா யிருக்கக்கூடும். எல்லோருக்கும் 7-வயதில் பகுத்தறிவு ஆரம்பிப்பதால், ஸ்வபாவத்தில் புத்தி பல முள்ள (Intellectual) புருஷன் உபநயனத்தைச் செய்து கொண்டு பிரம்மாப்பியாஸத்தையும்,உணர்வு பலமுள்ள (Emotional) ஸ்திரீ விவாஹத்தைச் செய்துகொண்டு தர்மாப்பியாஸத்தை யும், அவ்வயதிலேயே அல்லது கூடிய சீக்கிரத்தில் தொடங்க வேண்டுமென்று கட்டாயமாய் விதிக்கப்பட்டிருக்கிறது. ஸ்திரீயை உத்தேசித்து புருஷனிடம் புத்திபலமும், புருஷனை உத்தேசித்து ஸ்திரீயிடம் உணர்வு சக்தியும், அதிகமென் பது மாறாத தத்வம். அனேக ஸ்திரீகளிடம் புத்திகூர்மை விசேஷமாய் காணப்படலாம். ஆனால், இது தகுந்த ஸமயங் களில் அவர்களின் ஸ்வபாவஸித்தமான உணர்வுசக்தியினால் ஆழ்த்தப்பட்டுவிடக்கூடும். அவர்களின் புத்தி கூர்மையா யிருக்கலாமே யல்லாது, அது நிலைத்து நின்று சித்தத்தின் உணர்வுகளையும் அவைகளாலுண்டாகக் கூடிய விக்ஷேபங் களையும் எதிர்த்துத் தடுத்துவிடக்கூடிய பலம் அதற்குக் கிடையாது. யுத்தத்தில் சத்துருவை எதிர்த்து ஜயம்பெற வேண்டுமானால் பலமும் கூர்மையுமுள்ள பெரும் வாளால் ஓங்கி அடித்து நடத்தக்கூடிய காரியம் ஸமயத்தில் பின்னால் மடங்கிவிடக்கூடியதும் கூர்மை மாத்திரமுள்ளது மான க்ஷௌரக்கத்தியினால் நடக்கமாட்டாது. புத்திபலம் புருஷனிடத்திலும், உணர்வு பலந்தான் ஸ்திரீயிடத்திலு மிருக்கிற விஷயம் தத்வசாஸ்திரத்தினால் ஸந்தேஹமின்றி தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. மோக்ஷத்திற்கு அந்தரங்க ஸாதனமான ஞானஸித்தியைப் பெறுவதற்கு புத்திபலம் அவசியம்; புத்தி கூர்மை மாத்திரம் போதாது. புத்திபலம்

வெகு ஜாஸ்தியாயிருந்துவிட்டால் கிருஹஸ்த தர்மாசரணை யில் பிரவேசிக்காமலே பிரம்மசரியத்திலிருந்தே மேலான நிவிருத்தி மார்க்கங்களைத் தேடி அபரோக்ஷாத்மஜ்ஞானத் தை ஸாதித்துக்கொள்ளலாம். இப்படிப்போல் உணர்வு சக்தி வெகு ஜாஸ்தியாயிருந்ததினால் ஞானத்தை ஸாதித்துக் கொள்ள முடியாது. அது அஜ்ஞானத்திலேயே முடிவாகும். புத்திபலத்தினால் அடக்கி சீர்படுத்தப்படாத உணர்வுசக்தி அனர்த்தத்தையே விளைவிக்கும். இதினால்தான் ஸ்திரீகள் ஒவ்வொருவரும் ஞானத்தைப்பெற்று நற்கதியை அடை யும்பொருட்டு விவாஹஞ்செய்து கொள்ளவேண்டியதவசிய மென்று சாஸ்திரத்தில் வற்புறுத்திச் சொல்லப்பட்டிருக் கிறது. இவ்வித கட்டாயவிதி புருஷனுக்கு ஏற்படக்காரண மில்லை.

9. இக்காலத்தில் பிரம்மசரியாசிரமத்தை சரியாக அனுஷ்டித்து வராமலும், தன்னை வித்வானாகச் செய்து கொள்ளாமலும், தான் விவாஹஞ்செய்துகொள்கிற கன்னி கையை தர்மாசரணையில் தேர்ச்சியடையும்படி செய்விக்க தனக்கு யோக்கியதையில்லாமலும், பெரும்பாலும் புருஷ னால் விவாஹஞ்செய்யப்பட்டுவருவதால், சாஸ்திரப்படி விவாஹதினத்திலேயே பத்னீ புருஷனுடைய கிருஹத்திற்குப் புரப்பட்டுப்போய் (ஞவிஸஞ) அங்கு அக்னி காரியாதி தர்மாசரணைகளுக்கு அனுஸரணையாக இருந்து வருவது அனேகமாய் நின்று போய், ருதுகாலத்திற்கப்பால் நிஷேகத் திற்குக் குறிப்பிடப்படுகிற தினம் வரையில் அவள் தன் பிற ந்த வீட்டிலேயே யிருந்துவருகிறதான வழக்க மேற்பட் டிருக்கிறது. ஆகினும், ஸ்திரீபுருஷர்கள் சேர்ந்திருந்து விசேஷ ஹோமங்கள், ஔபாஸனம், ஸ்தாலீபாகம் முத லான எந்த முக்கிய கர்மாக்கள் மிகவும் அவசியமாக நடத்

தப்படவேண்டியவைகளோ அக்கர்மாக்களை பர்த்தா இப்போதும் ஒருவிதமாய் பத்னியிருக்கிற இடத்திலேயே நடத்திக்கொண்டுதானிருக்கிறார். இப்படி ஸ்திரீ பிறந்த வீட்டிலேயே யிருந்து கொண்டும், அங்கேயே அவசியமான தர்மங்கள் புருஷனால் நடந்தேறிக்கொண்டும் வருவதினாலேயே விவாஹத்தின் முக்கிய உத்தேசம் தர்மாசரணையே தவிர சரீர ஸம்பந்தமில்லையென்பது வியக்தமாய் துலங்கும். நிஷேக காலம் முதல்தான் ஸ்திரீ புருஷர்களுக்குள் சரீரஸம்பந்த மிருக்கலாம். விவாஹம் ஸ்திரீயின் சுத்திக்காக ஏற்பட்டிருக்கிற வைதிக ஸம்ஸ்காரம். நிஷேக மென்ற கர்ப்பாதானக்கிரியை பின்னால் வரப்போகிற ஸந்ததியின் சுத்திக்காக ஏற்படுகிற வைதிக ஸம்ஸகாரம். தார்மிகர்களுக்குள் பத்னீ ருதுவானபின்பு ஷை ருதுகால ஸம்பந்தமான தோஷங்களை நிவிருத்தி செய்யும்பொருட்டு ருதுசாந்திக்கும் அதற்கப்பால் நிஷேகத்திற்கும் நாள் குறிப்பிடப்பட்டு ஷை விசேஷங்கள் பஹிரங்கமாய் நடத்தப்படுவதால், ஷை காலம் வரையில் தம்பதிகளுக்குள் சரீரப்புணர்ச்சி இராதென்பதும் இருக்கக்கூடாதென்பதும் ஸித்தமே. விவாஹம் வேறு நிஷேகம் வேறு என்பதையும், விவாஹத்தினால் மாத்திரம் சரீரப்புணர்ச்சியிருக்கக்கூடியதில்லை யென்பதையும், அறிந்துகொள்ளாமல் மிலேச்சப்பார்வையுள்ளோர்கள், அப்பார்வையில் விவாஹமென்பதற்கு சரீரப்புணர்ச்சியிலேயே தாத்பரியமிருப்பதை முன்னிட்டு, தார்மிகர்கள் நடத்தி வருகிற விவாஹத்தினால் சிறு கன்னிகைகளுக்கும் அவர்களின் பர்த்தாக்களுக்கும் சரீரஸம்பந்தமிருக்கக்கூடுமென்று மூடத்தனமாக எண்ணிக்கொண்டும், பெண்கள் 14-வயதுக்கு மேல் விவாஹஞ்செய்து கொள்வதுதான் நியாயமென்று பிதற்றிக் கொண்டும் தார்மிகர்களின் ஸர்வோத்தம

மான தர்மாசரணைகளைக் கெடுத்துவிடவும் ராஜாங்க சட்ட மூலமாக தார்மிகர்களை ஹிம்ஸை செய்யவும் ஏற்பாடுசெய்திருக்கிறார்கள். இதின் மூன்றாவது பாகம் 9, 10 பாராக்களில் சொல்லியபடி ராஜாங்கத்தார்களுக்கு அப்படிப்பட்ட சட்டத்தை ஏற்படுத்துவதற்கு அதிகாரமே யில்லை. ஏற்பட்டதாகச் சொல்லப்படுகிற போலிச்சட்டம் சட்டமே யாகாது. ஹிந்துக்களின் திருஷ்டியில் ராஜாவுக்குள்ள உத்தம அதிகாரமெல்லாம் விஷ்ணுப் பிரதிநிதிஸ்தானத்தில் உண்டாயிருக்கிறது. விஷ்ணுவின் நேர் ஆஜ்ஞாரூபங்களாகிய சுருதி ஸ்மிருதிகளுக்கு எதிரிடையாக ராஜா சட்டத்தையுண்டு பண்ணினால் ஷை பிரதிநிதிஸ்தானத்திற்குக்குறைவுண்டாவதே பலனேயல்லாமல் ஷை சட்டத்திற்கு சட்டத்தன்மை லபித்தித்துவிடமாட்டாது. ஈசுவரசட்டங்களுக்கு உட்பட்டுத்தான் மனிதராஜாங்கத்திற்கு சட்டமேற்படுத்த அதிகாரமுண்டு. அவைகளை மீறிச்செய்யப்பட்டது எவ்வகையிலும் ஊர்ஜிதத்திற்கு வரக்கூடிய சட்டமே யில்லை. ஷை சட்டத்தை ஆதாரமாக பாவித்துத் தார்மிகர்களுக்கு எவ்வித ஹிம்ஸை அல்லது தீங்கு நடந்தாலும் அதற்கும் அதினாலுண்டாகும் நஷ்டி முதலானதற்கும் ராஜாங்கமும் முடிவில் ஜவாப்தாரியாயிருந்து ஸகல பரிஹாரங்களையுஞ்செய்து கொடுக்கும்படி ஏற்படுமென்பதை ராஜாங்கத்தார்கள் உறுதியாய் அறிந்துகொள்ளவேண்டும். தார்மிகர்களின் பார்வையில் தர்மம் பெரியதே தவிர ராஜாங்கத்தார்களின் கட்டாயத்திற்காக அவர்கள் அதர்மத்தில் பிரவேசிக்கக்கூடியவர்களில்லை. ருதுவாவதற்கு முன்பாக விவாஹமானால் உடனே சரீரப்புணர்ச்சியுமிருக்கலாமென்று மேற்கண்டபடி கண்மூடித்தனமாய் எண்ணிக்கொண்டு ருதுகாலத்திற்கு முன்னாலேயே கன்னிகைகளுக்கு அவசியமாய் நடத்தவேண்

டிய சாஸ்திரவிதிப்படிக்குள்ள ஸம்ஸ்காரத்தை நடத்த வொட்டாமல் செய்வதற்கு யாருக்கும் அதிகாரங் கிடையாது. விவாஹம் ஒன்றுதான் ஸ்திரீகளுக்கு வேதோக்த மந்திரங்களினால் நடத்தப்படவேண்டிய ஸம்ஸ்காரம். இந்த ஒரு ஸம்ஸ்காரங்கூட சாஸ்திரத்தில் குறிப்பிட்ட காலத்திற்குள் அவர்களுக்கு நடத்தக்கூடாவிடில் அவர்களுடைய ஜன்மமே வீணாகப்போய்விடும். உண்மையான தார்மிகர்கள் இதற்கு இடங்கொடுக்கவே மாட்டார்கள். ருதுவாகிற காலம்வரையில் சரீரப்புணர்ச்சியே இருக்கக்கூடாதென்பதற்கும் இருக்கமாட்டாதென்பதற்கும் ஏகோபித்துஎல்லா தார்மிகர்களும் ஒற்றிருப்பார்கள். இதுவே அவர்களின் கொள்கை. இதுவே சாஸ்திர ஸம்மதம். ருதுகாலத்திற்கு முன்பாக பெண்கள் விவாஹ ஸம்ஸ்காரத்தினாலும் அப்பாலுள்ள தர்மாசரணைகளினாலும் முன் சொல்லியபடி தர்மபத்னீகளாகும்படியாகத் தயார்செய்யப்பட்டுவருவதை தார்மிகர்கள் நிறுத்திவிடவேண்டுமென்று யார் சொன்னாலும் இது நடக்கக்கூடாத விஷயம். சாஸ்திரத்திற்கு நேர் எதிரிடையாக நடந்து பாபிகளாகிவிடவேண்டுமென்றும், இல்லாவிடில் ஜயிலுக்குப் போக வேண்டுமென்றும், அபராதம் செலுத்த வேண்டுமென்றும் சொல்வது எவ்விதத்தில் நியாயமாகுமோ தெரியவில்லை. தர்மத்தை அறியக்கூடிய ராஜா இருந்தால் தர்மத்திற்கு விரோதமாக நடப்போர்களை தண்டிப்பது நியாயமாகும். தர்மத்தை அறியக்கூடாத ராஜாங்க விஷயத்தில் தர்மவிரோதிகளை தண்டிக்காமலிருப்பது நடக்கக் கூடியதானாலும், தர்மத்தை. சாஸ்திர விதிப்படி, அனாதிகாலமாக நடத்திவந்திருக்கிற பிரகாரம், ஆசரித்து .வருவதற்காக தார்மிகர்களை தண்டிப்பதானால், ஜயிலுக்கு ஜயில் தன்மையே நஷ்டமாகிவிடுமென்பதும், அவர்களிடமிருந்து

அபராதம் வசூலிப்பதானால் அது தப்பான அபகரிப்பே யாகுமென்பதுமே நிச்சயம். தர்மத்தைத் தெரிந்து கொள்ளாதவர்கள் மற்றவர்களை அதர்மத்தைச் செய்யச் சொல்லி கட்டாயப்படுத்தினாலும், அவ்வதர்மத்தைச் செய்தால் அது கொடிய பாபமேயல்லாமல் நியாயமான காரியமாகிவிடமாட்டாது. உண்மையில் தார்மிகர்களாயில்லாமல், மேற்கண்ட போலி சட்டத்தை ஒரு முகாந்திரமாக வைத்து தர்மவிரோதமாக நடந்துவரக்கூடியவர்களைப்பற்றி வியவஹாரமேயில்லை. அவர்களின் அதர்ம நடத்தை பிரமாணமாகக் கூடியது மல்ல. வாஸ்தவத்தில் தார்மிகர்களாயிருப்பவர்களின் விஷயத்தில், ஷை சட்டமிருப்பதினால் அவர்களுடைய தர்மாசரணை கொஞ்சமேனும் மாறிப்போகவே மாட்டாதென்பது இங்கு உறுதியாய்ச் சொல்லப்படுகிறது.

10. முன் பாராவில் ஒப்புக்கொள்ளப்பட்டபடி இக்காலத்தில் புருஷனுக்கு விவாஹத்திற்கு முன்பாக சரியான பிரம்மசரியமும் வித்தியாப்பியாஸமுமில்லாமலும் ஸ்திரீக்கு ருதுவாவதற்கு முன்பாக தர்மானுஸரணையில் சாஸ்திரப்படிக்குள்ள சரியான அப்பியாஸம் ஏற்படக்கூடாமலுமிருந்து வருவதினால், ஏன் ருதுவானபிறகே விவாஹத்தைச் செய்யக் கூடாதென்று சிலர் கேட்கலாம். பர்த்தா வித்வானாக இருந்து அவரால் பத்னிக்கு ருதுகாலத்திற்கு முன்பாக செய்து வைக்கப்படவேண்டிய பூரா நன்மைகளும் உண்டாகக் கூடாமலிருப்பது வாஸ்தவமானாலும், இக்காலத்திலும் சில முக்கிய நன்மைகள் பத்னிக்கு ஏற்பட்டு விடுகின்றன வென்பதில் ஸந்தேஹமில்லை. சரியான காலத்தில் செய்யப்பட்ட விவாஹமாகிய வேதோக்த ஸம்ஸ்காரத்தினால் அவளுக்கு சுத்தி ஸித்தித்து விடுகிறது. முன் குறிப்பிட்ட சில பிரதான தர்மாசரணைகளிலும் மற்றும் பிதுருகாரியாதி

களிலும் பர்த்தாவுடன் கூடவே அனுஸரணையாக இருந்து நடத்தி வருவதினால் தர்ம ஸித்தியும் கொஞ்ச முண்டாகி விடுகிறது. தவிரவும் முன் இரண்டாவது பாகத்தின் 10-வது பாராவில் சொல்லியபடி விவாஹமில்லாமல் ருதுவாகிவிட்ட பிராம்மணப்பெண் சாஸ்திரப் பிரகாரம் விருஷளீ, அதாவது, சூத்திரப்பெண்ணுக்கு ஸமானமாகிவிடுகிறபடியால், சாஸ்திரத்தில் குறிப்பிட்ட காலத்திலேயே பிராம்மணப் பெண்ணுக்கு விவாஹத்தை நடத்துவதினால் அவளுக்கு சூத்திரத்தன்மை வந்து விடாமலும் அவளுடைய பரம்பரையின் பிராம்மண்யத்திற்கு ஹானியுண்டாகாமலும் காப்பாற்றப்படுகிறது. அன்றியும், ருதுவாவதற்கு முன்பாகவே தன்னுடைய பர்த்தா இன்னாரென்று நிச்சயப்பட்டுவிடுவதால், அவர் விஷயத்திலேயே ஞாபகம் சென்று கொண்டும், அவரே தன்னை இஹலோகத்திலும் பரலோகத்தில் நற்கதியின்பொருட்டும் பாதுகாத்து ரக்ஷிக்கிறவரென்று எண்ணிக் கொண்டு மிருப்பதால், பின்னால் ருதுவான பிறகும் அப் பர்த்தாவின் ஞாபகமேதொடர்ந்து பலப்பட்டு வருமே தவிர வேறு விதமான ஆலோசனைக்கு இடமிராது. மேலும், மேற் சொல்லியபடி உலகத்தில் பெரும்பாலும் ஜனங்கள் கலி காலக் கொடுமையினால் சாஸ்திர விரோதமாக நடந்து வருவதை காரணமாக வைத்து, ஒருவரும் சாஸ்திரத்தை நன்றாக அனுஸரித்து நடந்து வரக்கூடாதென்று சொல்வது எவ்வகையிலும் நியாயமாகாது. சாஸ்திரவாக்கியங்களில் உறுதியான நம்பிக்கையும், தர்மாசரணையில் தீவ்ரமான ஊக்கமும், சோம்பல் முதலான தோஷங்களில்லாமையும், இந்திரியப் போக்குகளுக்கு இடங்கொடுக்காமல் மனஸை அடக்கி நல்வழியிலேயே செல்லும்படி செய்வதும், அதர்ம ஷஹவாஸங்களை தாக்ஷிண்யமின்றி விலக்குவதும், வெகு அபூர்வமாய்

இக்காலத்தில் சிலர்களிடந்தான் காணக்கூடுமே யல்லாமல் ஸாதாரணமாய் காணமுடியாது. இவ்வித அபூர்வமான சில தார்மிகர்களையும் மற்றவர்களுக்கொப்பந்தம் கெட்டுப்போய் விடும்படி செய்வது ராஜாங்கத்தார்களுக்கு தர்மமல்ல. கலி மஹிமையினால் தர்ம விரோதிகளுக்கே உலகப்பார்வையில் ஏற்ற மிருந்து வந்த போதிலும், தார்மிகர்களேயில்லாமல் பூராவும் உலகத்தைவிட்டு மறைந்துபோகும்படி செய்து விடக்கூடாது. எப்படி ராஜாங்கத்தார்களே அபூர்வமான பதார்த்தங்கள் அழிந்து போகாமல் அவைகளை ம்யூஸியத்தில் வைத்து பந்தோபஸ்து செய்தும், அபூர்வமான பிராணிகள் நசித்துப் போகாமல் அவைகளை பார்க்கில் வைத்து ஸம்ரக்ஷணை செய்தும் வருகிறார்களோ, அப்படியே இக்காலத்தில் வெகு அபூர்வமாயிருக்கக்கூடிய தார்மிகர்களையும், மற்றவர்களுடைய தொந்தரவுகளினால் அவர்கள் ஸ்வதர்மங்களிலிருந்து நழுவி விழுந்து கெட்டுப்போகாமலிருக்கும்படி, பாதுகாத்து வருவதும் ராஜாங்கத்தார்களின் கடமையாகும். காலவசத்தினால் அவர்களுக்கு இப்படிப்பாதுகாப்பதில் புத்தியுண்டாகாமல்போனாலும், அவர்களே தர்ம விரோதமான சட்டங்களையும் தப்பு நடவடிக்கைகளையும் ஏற்படுத்திக்கொண்டு தார்மிகர்களையும் ஸநாதனமான தர்ம மார்க்கத்தையும் கெடுத்து விடாமலிருந்தாலே போதுமானது. மதஸம்பந்தத்தில் பிரவேசிப்பதாக உத்தேசமில்லையென்றும் ஜனங்களின் சரீரஸம்பந்தமான லௌகிக (Social) நன்மையைக் கருதி மாத்திரம் சட்டத்தை ஏற்படுத்துவதாகவும் ராஜப்பிரதிநிதி சொல்லிவந்திருக்கிறபடியால், சரீரஸம்பந்த விஷயமாக எதாவது நிபந்தனைகளை ஒருக்கால் ஏற்படுத்தலாமென்று எண்ணக்கூடுமே தவிர, கேவல வைதிக ஸம்ஸ்காரமும், அதாவது, முழுவதும் மதஸம்பந்தப்பட்ட

தும், சரீரப்புணர்ச்சி விஷயமே கொஞ்சங்கூட ஸம்பந்தப் படக்கூடாததும், புருஷர்களின் உபநயனஸ்தானத்தில் ஸ்திரீகளுக்கு தர்மமோக்ஷ ஸித்திகளின்பொருட்டு விதிக்கப் பட்டிருக்கிறதுமான விவாஹ விஷயத்தில் பிரவேசித்து அதைக் கெடுப்பது ராஜாங்க நிலைமைக்கு முற்றிலும் தகாத காரியம். மிலேச்சப்பார்வையுள்ளோர்களால் எது விவாஹ மென்று எண்ணப்படுகின்றதோ அந்த ஸ்தானத்தில் தார்மிகர்களுக்குள் நிஷேகக்கிரியைதான் நடத்தப்படுகிறதேயல் லாமல் விவாஹமல்ல. "விவாஹம்" என்ற வார்த்தை பொதுவாயிருப்பது பற்றியே விபரீதஜ்ஞானம் ராஜாங்கத் தார்களுக்குண்டாயிருக்கக்கூடும். தார்மிக விவாஹத்திற்கு ஒப்பாக ஹிந்துவில்லாதவர்களால் யாதொரு விசேஷமும் நடத்தப்படவில்லையென்றும், அது ஷியார்களின் விவா ஹம் போலர்காதென்றும், அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டியது மிக்க அவசியம். எப்படி புருஷன் ஸ்திரீஸங் கத்தைச் செய்து கொள்ளக்கூடிய வயது வருவதற்கு முன் பாகவே பால்யத்தில் ஆரம்பித்து சரீரமனப்பயிற்சிகளைச் செய்து கொள்ளவேண்டுமோ, அப்படியே ஸ்திரீயும் ருது வாகி நிஷேகத்தினால் புருஷஸங்கம் தனக்கு ஏற்படுவதற்கு முன்பாகவே பால்யத்தில் ஆரம்பித்து சரீரமனதுகளின் சுத்திகளையும் தர்மாசரணையில்தேர்ச்சியையும் ஸம்பாதித்துக் கொள்வதற்காகவே தார்மிக விவாஹம் நடக்கிறதென்று ராஜாங்கத்தார்கள் அறிந்து கொள்ளவேண்டும். முடிவில் முன் சொல்லப்பட்ட முக்கிய உண்மைப் பார்வையின் ஸித்தியும் இவ்விவாஹத்தின் பலனாகும். பிறவியிலாவது கொள்கையிலாவது ஹிந்துக்களில்லாதவர்கள் தங்களுடைய மிலேச்சப்பார்வையை விலக்கிக்கொண்டு உண்மைப் பார் வைக்கு வழிதேடுவதற்கு சக்தர்களாயில்லாமல் போனாலும்,

உலகத்தில் ஒருவருக்கும் வேதப்படிக்குள்ள உண்மைப்பார் வையே இருக்கமாட்டாதென்றுவது, அது ஸித்திப்பதற் குள்ள மார்க்கத்தில் ஒருவரும் யத்தினஞ்செய்யக்கூடாதென் றுவது, சொல்வது புத்தியுள்ளோர்களுக்கு அழகில்லை. பிறவிக் குருடருக்கு வெளிச்சம் தெரியவில்லையானால் வெளிச்சமே கிடையாதென்றுவது வெளிச்சத்தைப் பார்ப்பவரே கிடையா தென்றுவது அக்குருடர் சொன்னால், அவ்வார்த்தைக்கு மதிப்புங்கிடையாது, அவ்வார்த்தைக்கு இணங்கி அதற்கு அனுகுணமாக கண்ணுள்ளோர் நடக்கப் போகிறதுமில்லை.

11. வெகு காலத்திற்கு முன்பாக ஈஸ்ட் இந்தியா கம்பெனியார்களின் ஆளுகையில் ஸதீவிஷயமாகவும் விதவை களின் புனர்விவாஹ விஷயமாகவும் இரண்டு சட்டங்களேற் பட்டன. அச்சட்டங்களும் நியாயமில்லையானாலும் அவை களால் தார்மிகர்களுக்கு அதிகக்கெடுதல் உண்டாகிவிட வில்லை. இங்கு முதலில் ஸதீ விஷயத்தை யெடுத்துக்கொள் வோம். ஸதிக்கு பர்த்தாவுடன் அனுமரணம் அவசிய மென்று சாஸ்திரத்தில் விதிக்கப்படவில்லை. அது ஸதீயின் இஷ்டத்தைப் பொறுத்தது. அனுமரணம் ஏற்படாத ஸ்திரீ க்கு பாபமாவது உலகத்தில் மதிப்புக் குறைவாவது கிடை யாது. பாண்டு மஹாராஜாவுடன் அனுகமனஞ்செய்ய வேண்டுமென்று குந்தீ, மாத்ரீ இரண்டு ஸ்திரீகளும் ஒரு வருக் கொருவர் போட்டி செய்ததில், மாத்ரீயின் சரீரஸங்க மே பர்த்தாவின் மரணத்திற்குக் காரணமாயிருந்ததுபற்றி, மாத்ரீயே செய்யலாமென்று தீர்மானிக்கப்பட்டதின் பேரில் அவள் மாத்திரம் செய்தாள். அதினால் குந்தீ தேவிக்கு யாதொரு குறைவும் வந்துவிடவில்லை. முன் 8-வது பாரா வில் கண்டபடி உண்மையான ஏகத்வம் ஹிருந்து தம்பதி களுக்குள் ஏற்படுவதால், பர்த்தாவின் காலம் சென்றவுடன்

தன்னுடைய காலமும் சென்று விட்டதாகவே பத்னீ எண்ணிக் கொண்டு பர்த்தாவுக்குப் பின்பு ஜீவித்திருக்கிற தன் சரீரத்தை துரும்பாக பாவித்து மனப்பூர்வமாய் தியாகஞ் செய்யத் துணிந்து விடுகிறாள். இப்படி துணிவுடன் கூடிய ஸ்திரீயும் அனுகமனம் செய்து விடாமலிருக்கும்படி மற்றவர்கள் கூடிய வரையில் அவளுக்கு போதிப்பிக்கவேண்டுமென்றே சாஸ்திரத்தில் தசால்லப்பட்டிருக்கிறது. இவ்வித போதனையை கவனிக்காமல் அவள் எப்படியாவது சரீரத் தியாகத்தைச் செய்தே விடுவாளென்று உறுதியாய் தோன்றும்பக்ஷத்தில் அவள் செய்கிற தியாகம் துர்மரணரூபமாயில்லாமல் சாஸ்திர முறைப்படி ஸத்கதியின்பொருட்டே இருக்கட்டுமென்று, அதாவது, அவளுடைய ஸத்கதிக்கு துர்மரணத்தினால் கெடுதலுண்டாகக் கூடாதென்று, மாத்திரம் உத்தேசங்கொண்டு அனுமரண விதானப்படி ஸதியால் அனுகமனம் செய்யப்படுவதற்கு இடம் கொடுக்கப் பட்டிருக்கிறது. மேற்கண்ட ஸதீ விஷயமான சட்டம் ஏற்பட்டதினால் ஷை சாஸ்திர விதானப்படி அனுமரணம் நடக்காமல் நின்றுவிட்டதே தவிர, அனுமரணமே நின்று போய் விடவில்லை. முன் காலங்களிலும் அனுமரணம் மிகவும் அபூர்வமாகத்தான் நடந்து வந்தது. இப்போதும் சிலகாலங்களில் அது நடந்து வருவதாக பத்திரிகைகள் மூலமாய் அடிக்கடி வெளிப்படுத்தப்பட்டுவருகிறது. ஆனால், இக்காலத்தில் ஷை சட்டமிருந்து வருவதால் பஹிரங்கமாய் அனுமரணம் நடக்கக்கூடாதது பற்றி, அது பல விதங்களில் துர்மரண ரூபமாகவே நடந்து வந்து ஸதிகளின் நற்கதி விஷயத்தில் இடஞ்சலேற்பட்டிருக்கிறதைத் தவிர வேறல்ல. ஆகினும், அனுமரணம் சாஸ்திரப்படி கட்டாயமில்லாததால் அது விஷயமாக தார்மிகர்கள் விசேஷ முயற்சி யெடுத்துக்

கொண்டு ஷை சட்டம் ரத்தாகும்படி செய்யவில்லை. ஷை சட்டத்தை அனுஸரித்து அனுகமனத்தைச் செய்யாமலிருந்தால் தோஷமில்லை. இப்போது விவாஹ விஷயமாக ஏற்பட்டிருக்கிற சட்டம் அப்படியல்ல. இச்சட்டத்தை யனுஸரித்து பிராம்மணப்பெண், ருதுவாகி விடக்கூடிய காலமாகிய 14-வயது வரையில் விவாஹத்தைச் செய்து வைக்காவிட்டால் பிதாவும் கொடும் பாபியாகி விடுகிறார், அப்பெண்ணும் சூத்திரப் பெண்ணுக்கு துல்யமாகிவிடுகிறாள். இதனால் அந்த பிதாவின் குலமும் ருதுவானபின் விவாஹத்தைச் செய்து கொள்கிற பர்த்தாவின், அதாவது, அப்பெண்ணின் குலமும் இரண்டும் கெட்டுப் போய் விடுகின்றன; உலகத்தில் உண்மையான பிராம்மண்யத்திற்கும் அதின் மூலமாய் ஆர்ய மதத்திற்குமே நாசமேற்பட்டு விடக் கூடியதாயிருக்கிறது. இனி மத விஷயத்தில் ராஜாங்கத்தார்கள் பிரவேசிக்க மாட்டார்களென்ற விக்டோரியா மஹாராணியின் 1858-ம் வருஷத்திய அருமையான பிரதிஜ்ஞைக்கு இச்சட்டம் நேர் விரோதமாயிருக்கிறது. 1830-ம் வருஷத்தில் ஷை ஸதீவிஷய சட்டமும் 1856-ம் வருஷத்தில் விதவைகளின் புனர்விவாஹ விஷய சட்டமும் மேற்கண்டபடி ஈஸ்ட் இந்தியா கம்பெனியார்களால் ஏற்படுத்தப்பட்டவைகளே யன்றி ராஜாவின் அல்லது ராணியின் நேர் ஆளுகையில் புதிதாக ஏற்பட்டவையல்ல. அன்றியும், அவைகளால், முன் சொல்லியதும் பின்னால் 16-வது பாராவில் சொல்லப்போகிறதுமான முகாந்திரங்களினால், விசேஷமாய் தர்மத்தை நாசப்படுத்தக்கூடிய கெடுதல் உண்டாக வில்லை. ஆகையால், அவ்விரண்டு சட்டங்களும் பின்னால் உறுதிப்பட்டு வந்திருப்பதையும் தார்மிகர்கள் லக்ஷியஞ்செய்து ஆக்ஷேபிக்கவில்லை. ஆர்ய மதத்தையே அழித்து விடக்கூடியதாயிருக்கிற இப்

போதுள்ள விவாஹ விஷய சட்டமோவெனில் மிகவும் விபரீத மாயுள்ளது. இது ராஜாங்க சட்ட புஸ்தகத்தில் காணப்படு கிறவரையில் ராஜாங்கத்தார்கள் விக்டோரியா மஹாராணிக் கும் ஈசுவரருக்கும் துரோஹஞ்செய்வதாகவே ஏற்படுவதுந் தவிர இது பிரிடிஷ் நீதிக்கே மாறக்கூடாத பெரிய களங்க மாகவே யிருந்து வரும்.

12. இப்பால் கொஞ்சம் விதவைகளின் புனர் விவாஹ விஷயத்தையும் சுருக்கமாய் கவனிப்போம். முன் காண்பி விக்கப்பட்டபடி தார்மிக ஸ்திரீ புருஷர்களுக்குள்ளாக ஏகத் வம் உறுதியாக ஏற்பட்டிருப்பதில், பர்த்தாவின் ஆயுள் முடிவானவுடன் முன் பாராவில் கண்டபடி ஸ்திரீகள் சரீரத் தியாகத்தைச் செய்துவிட தைரியமில்லாமலே அனேகமா யிருக்கக்கூடியதால், இவர்கள் தங்களுடைய பாக்கி ஆயுள் நாள்களில் தீவ்ரமான விரக்தியுடனிருந்து கொண்டும், இற ந்து போன பர்த்தாரூபத்தையே ஈசுவரவடிவமாக தியானித் துக் கொண்டும், ஷை பர்த்தா காட்டியிருக்கக்கூடிய, அல் லது, அப்பால் தார்மிகர்களான பெரியோர்கள் குறிப்பிடு கிற, வழியிலேயே பக்தியைச்செலுத்திக்கொண்டும் ஞானுப் பியாஸத்தைச் செய்து கொண்டும், பர்த்தாவின் சுசுரூஷைக் குப்பதிலாக குடும்பத்திலுள்ளோர்களுக்கு உபகார காரியங் களைச் செய்து கொண்டிருந்தால் மரணத்திற்குப் பின்பு ஸர்வோத்தம கதியை அடைந்து விடுவார்கள், அல்லது, உயர்ந்த லோகங்களுக்குப் போய் தங்கள் தங்களுடைய பர்த்தாவுடன் சேர்ந்து சுகித்திருப்பார்கள். ஹிந்து தார் மிகக் கொள்கையில் விவாஹமென்பது இப்பூலோகத்தில் நடப்பு ஜன்மத்தில் மாத்திரம் ஸ்திரீ புருஷர்களைச் சேர்த்து வைப்பதான காரியமல்ல. விவாஹச் சேர்க்கை தர்ம ஸம் பந்தமான சாசுவதச் சேர்க்கை. முன் ஜன்மங்களில் ஏற்

பட்டிருந்த சேர்க்கையை அநுஸரித்தே நடப்பு ஜன்மத்தி லும் சேர்க்கை யுண்டாகிறது. முன் ஜன்மங்களில் பரஸ் பரம் சேர்க்கையிருந்திருப்பதுண்டாவென்று ஜாதகங்களை ஒற்றுப் பார்ப்பதினால் கண்டு பிடிக்கக்கூடியதாயுமிருக்கிறது. புருஷன் மரணத்தை அடைந்துவிட்டால், விவாஹ ஸம்பந் தம் விட்டுப் போகாது. பின்னால் வரப்போகிற ஜன்மங்களி லும் அந்த ஸம்பந்தம் தொடர்ந்தே வரும். தம்பதி இருவர் களும் ஒழுங்காயிருந்து வந்தால், இருவர்களும் அல்லது ஒருவர் மோக்ஷமடைகிற வரையில் அந்த ஸம்பந்தம் நீங்கிப் போகாது. புருஷன் முன்னாடியே மோக்ஷ மார்கத்தில் பிர வேசித்து ஸ்திரீக்கு அம்மார்க்கம் பிடிபடக்கூடாமலிருந் தால் இவளுக்கு மறு ஜன்மத்தில் புருஷத்வம் கிடைத்து அப்பால் மேன் மேலும் நற்கதியின் பொருட்டு அப்பியா ஸங்கள் செய்யப்பட்டுவரும். முன் ஜன்மங்களாவது பின் ஜன்மங்களாவது உண்டென்ற விபரமே தெரியாத மிலேச்ச மதஸ்தர்களிடம் நடந்தேறி வருகிற விவாஹத்தில் தற்கால சரீரஸம்பந்தத்திற்கு மேலான உத்தேசமே கிடையாது. ஆகையால், அவர்களுக்குள் புருஷன் மரணமடைந்து விட் டால், ஸ்திரீ ஸ்வதந்திரையாக வேறு புருஷனை விவாஹஞ் செய்து கொள்ளக் கூடுமென்று ஏற்பட்டிருக்கிறது. ஆர் யர்களுக்குள் மரணத்தினால் புருஷன் வெளியேறிப் போனா லும், இப்பிரிவு தாத்காலிகப்பிரிவுதானென்றும், ஸ்திரீ அந்த புருஷனை மறுபடியும் சேர்ந்துவிடுவாளென்றும், வியக்தமாய் தெரியவருவதால், அப்படி மறுபடியும் சேர்ந்து விடக்கூடிய காலம் வரையில் ஸ்திரீ வைராக்கியத்துட னிருந்து வருகிறாள். எப்படி பர்த்தா தன்னுடைய ஊரை விட்டு வெளிப் பிரதேசங்களுக்குப் போயிருந்தால், அவ ருடன் மறுபடியும் சேர்ந்திருக்கிற வரையில் பத்னீ விரக்தி

யுடன் ஒழுங்காகவே யிருந்து வருவாளோ, அப்படியே தார்மிக விதவைகளின் ஸ்திதியென்று அறிந்து கொள்ள வேண்டும். தார்மிகப்பார்வையில் பர்த்தா அயலூருக்குப் போவதற்கும் பரலோகம் போவதற்கும் அதிக வித்தியாஸமில்லை. அயலூருக்கு சாசுவதமாய் போயிருக்கிற பர்த்தாவை பின்னால் எப்படி பத்னீ அவ்வூருக்குப்போய் அடையக்கூடுமோ, அப்படியே விதவையாகிவிட்டவளும் தன்னுடைய மரணத்திற்கப்பால் பதிலோகமே போய் பர்த்தாவுடன் வாழ்ந்து வருவாள். ஒருக்கால் கர்மகதியில் புருஷன் கெட்ட நிலையிலிருந்துவிட்டால், பதிவிரதையான ஸ்திரீக்கு உயர்ந்த லோகபதவியே கிடைத்து சுகித்திருந்து அப்பால் பர்த்தாவுக்கு நல்ல ஸ்திதி யேற்படும் போது அவரிடம் போய்ச் சேருவாள். ஆகையால், முன் சொன்னபடி, தார்மிகப்பார்வையில் விவாஹ ஸம்பந்தம் மரணத்தினால் விட்டுப் போய்விடக்கூடிய ஸம்பந்தமல்ல. விதவைக்கும் பர்த்தா இருக்கிறார்; ஆனால், அவர் வேறு உலகத்திலிருக்கிறார். பர்த்தா ஊரைவிட்டு வெளியூருக்குப் போய்விட்டால் பெண்சாதி வேறு விவாஹஞ் செய்து கொள்வது எப்படி நியாயமில்லையோ, அப்படியே விதவையும் வேறு பர்த்தாவை அடையக்கூடாது. எவ்விதம் இந்த உலகத்திலேயே கர்மவசத்தினால் பர்த்தா வேறு தேசத்திற்குப் போயிருப்பதினாலாவது தண்டனை யடைந்து ஜயிலுக்கு அல்லது தீவீபாந்தரத்திற்கு அனுப்பப்பட்டிருப்பதினாலாவது ஸ்திரீ புருஷர்களுக்குள் நீடித்த பிரிவு ஏற்பட்டு ஸ்திரீ கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பது பாபத்தின் பலனென்று எண்ணப்படுகிறதோ, அவ்விதமாகவே பால்யத்திலேயே விதவையாகப்போய் இப்பிறவி வாழ்நாள் பூராவும் புருஷ வியோகத்தினால் கஷ்டமேற்படுவதும் மஹத்தான பாபத்தின் பலனாகும். எந்தப்

படி இவ்வுலகத்தில் வேறு இடத்திற்கு வெளியேறிப் போயி ருக்கிற பர்த்தாவுக்குப் பதிலாக வேறொருவனை பர்த்தா வாகக் கொள்வது நியாயமில்லையோ, அந்தப்படியே இப் பிரபஞ்சத்தில் வேறு உலகத்திற்குப் போயிருக்கிற பர்த்தா வுக்கு பதிலாக வேறொருவனை பர்த்தாவாக அடைவதும் நியாயமில்லை. இவ்வுலகில் பர்த்தா இருக்கும்போது வேறு விவாஹஞ் செய்துகொண்டால் ஸ்திரீயும் புதுப்புருஷனும் ஸர்க்கார் தண்டனைக்குள்ளாவது போலவே பரலோகம் போயிருக்கிற பர்த்தாவையுடைய புனர்விவாஹஞ்செய்து கொள்கிற விதவையும் அவளை மணம் புரிகிற பாபியும் ஈசுவர ருடைய கடுந்தண்டனைக்குள்ளாவார்கள். சாஸ்திர திருஷ்டி யில் இரண்டாவது பர்த்தாவுடன் சேருகிற விதவை பர புருஷ ஸங்கமாகிய மஹா பாபத்தையும், அவளுடன் சேரு கிற புதுபர்த்தாவும் பரஸ்திரீகமனமாகிய மஹா பாபத்தை யுமே அடைந்து அததற்குள்ள கொடிய தண்டனையை இரு வர்களும் பின்னால் அனுபவிப்பார்கள்.

13. இங்கு ஓர் பெரும் ஸந்தேஹ முண்டாகலாம். தார்மிகப்பார்வையில் விவாஹத்தினால் ஸ்திரீபுருஷர்களுக்கு சாசுவத ஸம்பந்த மேற்படுகிறதென்ற காரணத்தினால் வித வை புனர் விவாஹஞ் செய்து கொள்ளக்கூடாதென்று சொல்வது போல், பத்னீ இறந்துபோனால் புருஷனும் வேறு விவாஹஞ் செய்து கொள்ளக்கூடாதென்று ஏன் விதிக்கப் படவில்லை யென்று கேட்கக்கூடும். இக்கேள்விக்கு பதி லாக பத்னீ உயிருடனிருக்கும்போதே பர்த்தா வேறு ஸ்திரீயையும் விவாஹஞ்செய்து கொள்ளக்கூடியதால் பத்னீ இறந்து போன பின்பு செய்து கொள்வதில் குற்றமில்லை யென்று சொல்லக்கூடியதாயிருப்பதில் மற்றொரு கேள் விக்கு மிடமுண்டாகிறது. அதாவது, ஒரு தடவை விவாஹ

மான ஸ்திரீ வேறு பர்த்தாவை எக்காலத்திலும் அடையக் கூடாதென்று சொல்வது போல், புருஷனும் இரண்டாவது பத்னியை எக்காலத்திலும் விவாஹஞ்செய்து கொள்வதும் தப்பென்று ஏன் சொல்லக்கூடாதென்று ஆக்ஷேபிக்கலாம். ஸ்தூல திருஷ்டியில் இது நியாயமான ஆக்ஷேபணை தான். ஆகிலும், சில நுட்பமான காரணங்களினால் ஒரு ஸ்திரீயைக் காட்டிலும் அதிகமாக, அதாவது, பல ஸ்திரீகளைக்கூட புருஷன் விவாஹ மூலமாய் ஸ்வீகரித்துக் கொள்ளலாமென்று சாஸ்திரம் இடங்கொடுத்திருக்கிறது. இப்படி இடங்கொடுத்திருந்தபோதிலும், தர்மப்பார்வையில் முதலாவது ஸ்திரீக்கே பிரதானத்தன்மை சாஸ்திரத்தில் கொடுபட்டிருப்பது மல்லாமல், காமத்தை முன்னிட்டு இரண்டாவது ஸ்திரீயை விவாஹஞ் செய்து கொள்பவனை தூஷித்து மிருக்கிறது. ஆயினும், மேற்கண்டபடி கொஞ்சம் சாஸ்திரமே இடங்கொடுத்ததின் காரணங்களையும் சற்று விசாரிப்போம். இவ்விசாரணையிலேயே விதவைகளின் புனர்விவாஹம் கூடாதென்பதும் வெளியாகும். முன் 7-வது, 8-வது பாராக்களில் விவரித்தபடி புருஷனுக்கு புத்தி பலமும் ஸ்திரீக்கு உணர்வு பலமும் இருந்து வருவதில், மோக்ஷத்தை உத்தேசித்து தர்மவிருத்தியின் பொருட்டும் ஞானப்பிராப்தியின்பொருட்டும் ஒவ்வொரு ஸ்திரீயும் விவாஹத்தினால் பதியை அடைய வேண்டியது அவசியமாயிருக்கிறது. இந்தப்படி கட்டாயமாக ஒவ்வொரு புருஷனும் பத்னியை அடையவேண்டுமென்று விதியில்லையென்றும் முன் குறிப்பிடப்பட்டது. புருஷன் ஸ்வதந்திரனாக பிரம்மசாரியாகவே யிருந்து ஞானாப்பியாஸத்தைச் செய்துகொண்டு பூரா வாழ் நாள்களையும் கழிக்கலாம். அல்லது, பிராம்மண பிரம்மசாரி ஸன்யாஸியாகவும் போக

லாம். விவாஹத்தைச் செய்துகொண்டு பத்னீயைக் காப் பாற்றி குடும்பபாரத்தை வஹிக்கக்கூடிய சக்தியே யில்லாத புருஷனும் விவாஹ மில்லாமலே ஆயுள் பூராவு மிருக்கலாம். இவ்விதமாக புருஷர்களுக்குள்ளாக அனேகர்களுக்கு விவா ஹம் ஏற்படாமலே யிருக்கக்கூடும். ஸ்திரீகளின் விஷயத்தி லோ, அவர்களுடைய சுத்திக்காகவும் நற்கதியின் பொருட் டும் விவாஹத்தைத் தவிர வேறு வைதிக ஸம்ஸ்காரமே கிடையாதாகையால், விவாஹமில்லாமல் ஒரு ஸ்திரீயுமிருப் பதற்கில்லை. இப்பரதகண்டத்தில் சுருதிஸ்மிருதிகளை அனு ஸரித்து நடந்துவரவேண்டியவர்களான ஹிந்துக்கள் 20 கோடி ஜனங்களிருப்பதாக சுமாராய் வைத்துக்கொள்வோம். அனேகமாய் ஸென்ஸஸ் கணக்குகளினால் புருஷர்களைவிட ஸ்திரீகளின் எண்ணிக்கை கொஞ்சம் அதிகமாக வெளியான போதிலும், இங்கு ஆலோசனையின்பொருட்டு ஸ்திரீகளு டையவும் புருஷர்களுடையவும் நபர் எண்ணிக்கை ஸம மாகவே யிருப்பதாக பாவித்துக் கொள்வோம். இப்படி 10 கோடி புருஷர்களும் 10 கோடி ஸ்திரீகளும் ஹிந்துக்களுக் குள்ளிருந்துவருவதில், ஷை 10 கோடி புருஷர்களில் மேற் கண்ட பலகாரணங்களினால் ஒரு கோடி புருஷர்கள் விவாஹ மில்லாமலே யிருந்துவிடக் கூடுமென்று உத்தேசமாய் குறிப் பிட்டுக் கொள்வோம். முன் காட்டியபடி 10 கோடி ஸ்திரீ களுக்கும் விவாஹம் அவசியம் நடக்கவேண்டியதாயிருப்ப தால், விவாஹஞ்செய்து கொள்ளக்கூடிய 9 கோடி புருஷர் களுக்குள்ளாகவே 10 கோடி ஸ்திரீகளுக்கும் விவாஹம் நடக்க வேண்டியதாயிருக்கிறது. சில புருஷர்களாவது ஒரு ஸ்திரீக்கு மேல் அதிக ஸ்திரீகளை விவாஹஞ் செய்து கொண்டாலொழிய எல்லா ஸ்திரீகளுக்கும் விவாஹம் ஏற் படுவது ஸாத்தியப்படமாட்டாது. அதாவது, கிருஸ்துவர்

களுக்குள்ளிருப்பது போல் ஒவ்வொரு புருஷனுக்கும் ஒவ்வொரு ஸ்திரீ தான் இருக்கலாமென்றால், 9 கோடி புருஷர்களுக்கும் 9 கோடி ஸ்திரீகள் விவாஹஞ் செய்யப் பட்டு பாக்கியுள்ள ஒரு கோடி ஸ்திரீகளுக்கு விவாஹமே செய்யக் கூடாத துர்க்கதி ஏற்பட்டுவிடும். ஆகையால், ஸகல ஸ்திரீகளுக்கும் விவாஹம் நடந்து அவர்கள் விவாஹத்தினலேற் படக்கூடிய ஸம்ஸ்கார சுத்தியையும், பரம்பராபிவிருத்தியையும், தர்ம வித்தியையும், ஞானப்பிராப்தியையும், முடிவில் நற்கதியையும் அடையும்பொருட்டே, அவர்கள் பேரிலுள்ள கருணையினல் சாஸ்திரத்தில் புருஷன் பல ஸ்திரீகளை விவாஹஞ் செய்து கொள்ளலாமென்று அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிற தென்று எல்லோரும் தெரிந்து கொள்ளவேண்டும். இவ்வித அனுமதி இருப்பதினல்தான் ஹிந்துக்களுக்குள் விவாஹமாக வேண்டிய ஸகல ஸ்திரீகளுக்கும் கிரமத்தின் பேரிலாவது விவாஹம் நடந்து வந்து கொண்டிருக்கிறது. இவ்வித அனுமதியில்லாத கிருஸ்துவ தேசங்களிலும் ஜன வகுப்புகளிலும் ஏராளமாய் ஸ்திரீகள் விவாஹத்திற்கு இடமில்லாமலே யிருந்து கஷ்டப்பட்டு வருகிற விஷயம் அத்தேச புஸ்தகங்கள் பத்திரிகைகள் மூலமாய் நன்றாக வெளியாகின்றது. இப்பெரும் கஷ்டம் ஹிந்துக்களுக்குள் ஏற்படவில்லை.

14. மேலும், புருஷன் பல ஸ்திரீகளை கல்யாணஞ் செய்து கொள்வதினல் அவருடைய தர்மாசரணைக்காவது, பத்னீகளின் தர்ம வித்திக்காவது, பரம்பராதர்மம் காப் பாற்றப்படுவதற்காவது யாதொரு குறைவு முண்டாகாது. அவருடைய ஸ்திதி பல புருஷர்களைக் கொண்ட ஸ்திரீயின் கெட்ட ஸ்திதியைப்போலாகாது. பல ஸ்திரீகள் விவாஹஞ் செய்யப்பட்டாலும், ஷை விவாஹங்களினல் புருஷனு

டைய குடும்பத்தில் ஸ்திரீகள் எல்லோரும் சேர்ந்துவிடு கிறார்கள். பிராம்மணனுயிருந்தால் அவருடைய கோத்திரமே எல்லா ஸ்திரீகளுக்கும் வந்துவிடுகிறது. ஸ்திரீகள் எவ்வளவு பெயர்களானாலும், எல்லோரிடத்திலும் பிறக்கிற குழந்தைகளுக்கும் பிதா இன்னுரென்றும், குடும்ப தர்மம் இன்னதுதானென்றும், நிச்சயப்பட்டிருக்கிறது. பல புருஷர்களை ஸ்வீகரித்திருக்கிற ஸ்திரீயின் குழந்தைகளுக்கு பிதா இன்னுரென்ருவது ஸ்வதர்மம் எதென்ருவது சொல்வதற்கு இடமில்லை. தவிரவும், குடும்பங்களின் அபிவிருத்தியை, அல்லது ராஜியத்தின் ஜனபிவிருத்தியை கவனித்தால் ஒரு புருஷனுக்கு பல ஸ்திரீகளிருப்பதுதான் அனுகூலமேயொழிய ஒரு ஸ்திரீக்கு பல புருஷர்களிருப்பது உபயோகப்படாது. ஒரே புருஷன் பத்து ஸ்திரீகளிடத்தில் ஒரே வருஷத்தில் பத்து குழந்தைகளை ஜனிப்பிவிக்கக்கூடும். ஒரே ஸ்திரீக்கு நூறு புருஷர்களிருந்தாலும் அவள் ஒரு வருஷத்தில் ஒரு குழந்தைக்கு மேல் பெறக்கூடியவளல்ல. அன்றியும், யாரிடம் சரீர பலமும் புத்தி பலமும் மற்றவரை அடக்கும் தன்மையும் ஸ்வபாவத்தில் இருக்கக்கூடியவைகளோ அவர் ஒருவராகவும் அடக்கப்படவேண்டியவர்கள் பலராகவுமிருப்பதுதான் கிரமம். புருஷனுக்கு சரீரபலமும் புத்தி பலமுமிருப்பதாலும், ஸ்வபாவத்திலேயே அபலையாயிருக்கிற ஸ்திரீயானவள் புருஷனுல் காப்பாற்றப்படவேண்டியவளானதாலும், நற்கதியின்பொருட்டு புத்தி பல முள்ளோரே உணர்வு பல முள்ளவரை அடக்கி வருவது அவசியமும் நியாயமுமாயிருப்பதாலும், புருஷன் ஒருவராகவும் ஸ்திரீகள் பலர்களாகவும் இருப்பது தோஷமில்லை. மேலும், விவாஹத்திஞல் புருஷன் குருவாகவும் பத்னீ சிஷ்யையாகவும் ஏற்படுவதில், பல சிஷ்யர்கள் ஒரே குருவுக்கு இருக்கக்

கூடியதாலும், பல குருக்களை அண்டிய ஒரு சிஷ்யனுக்கு நற்கதியின்பொருட்டு அப்பியாஸ மார்க்கம் கிளுப்தப் படக் கூடாததாலும், ஒரு புருஷனுக்கு பல பத்னீகளிருப் பது தப்பாகமாட்டாது. ஆகையால், ஸ்திரீகளின் ஹிதத் தை யுத்தேசித்தும் உலகத்தின் நன்மையைக்கருதியும் சாஸ் திரம் சில குறிப்பிட்ட ஸந்தர்ப்பங்களில் பல ஸ்திரீகளை புருஷன் விவாஹஞ்செய்து கொள்ளலாமென்று இடங் கொடுத்திருக்கிறது. குறிப்பிட்ட ஸந்தர்ப்பங்களைத் தவிர மற்றதுகளில் அப்படி விவாஹஞ் செய்வது நியாயமில்லை யென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமாக, ஒரு பத்னீ இருக்கும் போதே வேறு ஸ்திரீகளையும் விவாஹஞ் செய்து கொள்வதற்கு புருஷனுக்கு அதிகார மிருப்பதால், பத்னீ இறந்து போன பின்பு அவர் வேறு பத்னீயை ஸ்வீ கரிப்பதில் ஆக்ஷேபணையிருக்கக்கூடியதல்ல. ஆதலால், முன் பாராவின் ஆரம்பத்தில் குறிப்பிட்ட ஸந்தேஹத்திற்கும் கேள்விக்கும் இடமேயில்லை. எல்லா ஸ்திரீகளுக்கும் ஒரு தடவை விவாஹம் ஏற்படுவது ஸாத்தியப்படுவதற்காகவே புருஷர்கள் தகுந்த காரணமிருந்தால் அதிக ஸ்திரீகளை கல் யாணஞ்செய்து கொள்ளலாமென்று போக்கு விட்டுச் சொல்லப்பட்டிருக்கிறது. முன் சொல்லியபடி இப்படி போக்கு விட்டிருப்பதினுல்தான் எல்லா ஸ்திரீகளுக்கும் சாஸ்திர விதிப்படி கொஞ்சம் சிரமப்பட்டாவது ஹிந்துக் களுக்குள் விவாஹம் நடந்தேறிவருகிறது. ஆகையால், விவாஹ விஷயத்தில் ஒவ்வொரு ஸ்திரீக்கும் ஒரு அவகாசத் திற்கு மேலாக இரண்டாவது அவகாசம் கொடுப்பதற்கே யில்லை. ஸ்திரீகள் விதவைகளான பிறகும் புனர் விவாஹஞ் செய்யத்தலைப்பட்டுவிட்டால் அம்மட்டில் விவாஹமாகாத பெண்களுக்கு பர்த்தாவே கிடைக்க மார்க்கமில்லாமல்

போய்விடும். அதாவது, முன் குறிப்பிட்ட 9 கோடி புரு ஷர்களுக்குள்ளாக 10 கோடி ஸ்திரீகளுக்கு விவாஹமாக வேண்டியிருப்பதில் ஏற்கனவே கிரமத்தின் பேரிலேயே ஒவ்வொரு ஸ்திரீக்கும் ஒரு தடவை விவாஹம் நடத்தப்பட்டு வருவதில், விதவைகளும் புனர் விவாஹம் பண்ணிக்கொள்வதானுல், 10 கோடி ஸ்திரீகளில் புனர் விவாஹஞ்செய்து கொள்ளக்கூடிய ஒரு கோடி ஸ்திரீகளுக்கு நபர் ஒன்றுக்கு இரண்டு பர்த்தாக்களும் (அதிகமாகவும் ஏற்படக்கூடும்) மற்றவர்களுக்கு ஒவ்வொரு பர்த்தாவுமாக 11 கோடி பர்த்தாக்களை 9 கோடி புருஷர்களில் தயார் செய்ய வேண்டியதாயிருக்கும். இது கிரமத்தின் பேரில் கூட நடக்கக்கூடாத விஷயமாதலால், ஒரு கோடி கன்யாப் பெண்களுக்கு ஒரு தடவை கூட விவாஹத்திற்கு இட மன்னியில் போய்விடும். இது மிகவும் வியஸனப்படவேண்டிய விஷயம். ஆகையால், புனர் விவாஹஞ்செய்து கொள்கிற ஒவ்வொரு ஸ்திரீயும் அவளை மணம் புரிகிற ஒவ்வொரு புருஷனும் விவாஹமாகாத பெண்களுக்கு துரோஹஞ்செய்பவர்களாகவே ஏற்படுகிறுர்கள். விதவையாகப்போன ஸ்திரீயைப் பார்த்துவிட்டு பரிதாபத்தின் பேரில் அவளை ஸ்வீகரித்துக் கொள்கிறவன் அவனுடைய அச்செய்கையினுல் விவாஹமேயாகாத ஒரு பெண்ணுக்கு பர்த்தாவே கிடைக்கவொட்டாமல் தான் செய்வதாகத் தெரிந்து கொண்டு அப்பெண்பேரில் பரிதாபப்படுகிறதில்லை. விதவையின்பேரில் அவனுக்குண்டாகிற பரிதாபத்திற்குக் காரணம் மோஹமே யல்லாது அது ஆலோசனையின்பேரிலுண்டான உண்மையான பரிதாபமல்ல. விதவையை மணம்புரிகிற ஒவ்வொருவனும் இப்படி கன்யாப் பெண்களுக்கு துரோஹகரமான கொடுந்தூர்ச் செய்கையைச் செய்து வருவதுந்தவிர அவ்விதவையையும்

தன்னையும் தன் குலத்தையும் கெடுத்து அதோகதியில் வீழ்த்தி விடுகிறான். சாஸ்திரத்தை கவனிக்காத ராஜாவும் முன் சொல்லிய லௌகிக நியாயத்தை மாத்திரம் கருதி, அதாவது, ராஜியத்திலுள்ள ஸகல பெண்களுடையவும் நன்மையை உத்தேசித்து நீதி செலுத்துகிறதாயிருந்தாலும், விதவைகளின் புனர் விவாஹத்திற்கு இடங்கொடுபட மாட்டாது. ஒவ்வொரு புனர் விவாஹமும் கன்யாப் பெண்களுக்கு விரோதமான துர்ச்செய்கையே யென்று ராஜா அறிந்து கொள்ளவேண்டியது மிகவும் முக்கியம். பெரும்பாலும் இவ்வித துர்ச்செய்கைக்கு இடங் கொடுத்திருப்பதினால் தான் மிலேச்ச ராஜியங்களில் விவாஹமில்லாமலே ஜீவ காலம் பூராவையும் பலவிதமாய்செலவழித்து வருகிற கணக்கிலடங்காத ஸ்திரீகளை எப்போதும் பார்க்கலாம். ஷை துர்ச்செய்கைக்கு இடங்கொடுப்பதற்கு முன்குறிப்பிட்டபடி மோஹந்தான் காரணம்; அதாவது, ஓங்கி வளர்ந்து மோஹப்படுத்திவருகிற விதவையைப் பார்த்து மயங்கி நிற்கின்ற மூடனுடைய கலங்கிய புத்தியில் சிறு கன்யாப்பெண்களுடைய கதிவிஷயமான ஆலோசனை உதிக்கிறதேயில்லை.

15. மேற்கண்ட பல காரணங்களினால் பெண்களுக்கு ருதுவாவதற்கு முன்பாகவே விவாஹஞ்செய்யப்படவேண்டு மென்பதும், விதவைகளின் புனர்விவாஹம் கூடாதென்பதும், நிச்சயப்படுத்தப்பட்டாலும், 7 வயதுக்கு மேல் ருதுவாகிற காலமாகிய 14-வது வயது வரையில் பெண்களுக்கு விவாஹம் நடக்காமலிருந்து விட்டால், 14 வயதுக்குள்ளாக பெண்கள் விதவைகளாகிவிட மாட்டார்களென்ற உறுதியிருப்பதால், இப்படி விவாஹம் நடக்காமலிருப்பதே பெரும் அனுகூலமில்லையாவென்று மறுபடியும் சிலர்கள்

எண்ணக்கூடும். இவ்விஷய ஸம்பந்தமான தத்வத்தை சரி யானபடி ஆராய்ச்சிசெய்து பார்க்காமலிருப்பதினுலேயே திரும்பத்திரும்பவும் வெகு பெயர்களின் ஸாமான்ய புத்தி களில் பால்ய விவாஹம் பெண்களுக்குக் கூடாதென்ற எண் ணம் உறுதியடைந்து வந்திருக்கிறது. இப்படி எண்ணு வதற்கு நேர் காரணம் கர்மகதி விபரத்தையும் ஜன்மத் தின் உத்தேசங்களையும் அறியாமலிருப்பதேயாகும். முன் மூன்ருவது பாகம் 2-வது பாராவில் கண்டபடி பிராரப்த கர்ம பலத்தை அனுபவிப்பதும் நற்கதிக்கு வழி தேடு வதும் மனித ஜன்மத்தின் முக்கிய உத்தேசங்கள். ஒரு ஜீவன் பிறக்கும் போதே அக்காலம் முதல் எவ்வளவு காலம் வரையில் ஜீவித்திருக்க வேண்டுமென்பதும், ஷை ஜீவனகாலத் தில் பிராரப்த கர்ம பலத்தின் ரூபங்களாகிய சுகம் துக்கம் இவ்விரண்டும் எவ்வளவு அனுபவிக்கப்படவேண்டுமென்ப தும், நிச்சயப்பட்டிருக்கின்றன. பிராரப்தமென்பது இரு வகை, அதாவது, 1. ஸப்பிரதிபந்தப் பிராரப்தம் 2. அப் பிரதிபந்தப் பிராரப்தம். இவ்விரண்டில் ஸப்பிரதிபந்தப் பிராரப்தத்தினுல் உண்டாகக்கூடிய துக்கங்களை சாஸ்திரத் தில் குறிப்பிட்ட பிராயச்சித்த பரிஹார காரியங்களி ஞல் விலக்கிவிடக்கூடும். அப்பிரதிபந்தப்பிராரப்த கர்ம பலன்களாகிய சுகங்களையாவது துக்கங்களையாவது எவ் வகையிலும் தடுக்க முடியாது. அவைகள் கட்டாயமாக ஏற்பட்டே தீரும். இப்படியே ஸப்பிரதிபந்தப் பிராரப்த பலனும் அதற்குரிய பிராயச்சித்தாதி கர்மாக்களைச் செய் யாவிடில் வந்தே தீரும். அவரவர்களுடைய ஜாதகங்களை நன்ருய் பரிசோதித்துப் பார்ப்பதினுல் ஷை இருவகை பிராரப்தகர்மங்களின் விபரமும் முன்னுலேயே தெரியக்கூடி யது. இப்படித் தெரிந்துகொண்டு ஸப்பிரதிபந்தப்பிரா

ரப்த விஷயமான கெடுதல்கள் நேரிடாமல் அவைகளை நீக்கிக் கொள்ளலாம். ருதுவாவதற்கு முன்பாகவே பால்யத்தில் விதவையாவது முன் சொன்னபடி பெரும் கெட்ட பிரா ரப்த கர்ம பலன். இப்படிப்பட்ட கர்மம் எந்தப்பெண்ணுக் காவது இருப்பதாக ஜாதகத்தில் துலங்கினால் அதை விலக்கு வதற்குள்ள பிரயத்தினத்தைச் செய்யவேண்டியது பிதாவு டையவும், விவாஹத்திற்குப் பின்பு பர்த்தாவுடையவும், கடமையாகும். இப்படிச் செய்ய அவர்களுக்கு புத்தியுண் டாகாவிட்டாலும், அல்லது, செய்தும் பலிக்காமல் வைதவ் யம் ஏற்பட்டு விட்டாலும் அதை அப்பிரதிபந்தப்பிராரப்த மாகவே, அல்லது அது போலவே, எண்ணிக்கொண்டு பொறுமையுடன் ஸஹித்து வர வேண்டியதைத் தவிர வேறொன்றும் செய்தவற்கில்லை. இப்படிப்பட்ட வைதவ்யத் திற்குக் காரணம் மேலே குறிப்பிட்டபடி முன் ஜன்மங்களில் செய்யப்பட்டிருந்த மிகவும் கொரோமான பாபகர்மாவேதவிர பால்ய விவாஹம் காரணமல்ல. பால்ய விவாஹம் ஏற்பட்ட வர்களுக் கெல்லாம் பால்யத்திலேயே வைதவ்யம் வந்துவிட வில்லை. பால்ய விவாஹம் நடக்காவிட்டால் பால்யத்திலே யே வைதவ்யம் வர இடமே யில்லையென்று நினைத்து அவ் விவாஹம் கூடாதென்று சொல்லக்கூடாது. சாப்பிடும் போது ஆஹாரத்தில் விஷமிருந்து விட்டால் மரணம் வரு மே யென்றுத்தேசித்து ஒருவரும் சாப்பிடவே கூடா தென்று சொல்லலாமா? ரயிலேறிப்போனால் சில ஸமயங் களில் பாலம் உடைந்து போய் ஜனங்களுக்கு அபாயம் வருகிறதேயென்று எண்ணி ரயிலில் போகவே கூடாதென்று சொல்வது சரியாகுமா? அவசியமாக நடத்தி வரவேண்டிய விஷயத்திலும் தைவவசத்தினால், அதாவது, பூர்வ கர்மத் தின் பலனாக, எப்போதாவது யாருக்காவது நேரிடக் கூடிய

கெடுதல்கள் நேரிட்டுக் கொண்டுதானிருக்கும். முன் விவரிக்கப்பட்ட அனேக ஹேதுக்களினால் தார்மிகர்களுக்குள் பெண்களுக்கு பால்ய விவாஹம் அவசியம் நடத்தப்பட வேண்டியதுதானென்று தீர்மானமாக ஏற்படுவதில் விசேஷ முன் ஜன்ம காரணங்களினால் சிலர்களுக்கு அனர்த்தமுண்டாகலாமென்று எண்ணிக்கொண்டு அதை நடத்தாமல் எல்லா தார்மிக ஸ்திரீகளேயும், ஆர்ய தர்மத்தையும், தார்மிக பரம்பரையையும், உலகத்தின் நன்மையையும், கெடுத்து விட வேண்டுமென்று சொல்வது எவ்விதத்திலும் நியாயமாகாது. அன்றியும், உண்மையான தத்வத்தை நன்முக விசாரித்தால், ருதுவாவதற்கு முன்பாகவே விதவையாகி விட்ட பெண்ணையுத்தேசித்து ருதுவாகி கொஞ்சம் புருஷ ஸங்கத்தை அனுபவித்திருக்கிற பெண் விதவையாவதில் தான் அதிக கஷ்டமேற்படுகிறது. வைதவ்ய முண்டாவதினுல் ருதுவாகிறதற்கு முன்னுலேயே விரக்திமார்க்கத்தில் இறங்கி பரலோக நன்மையின்பொருட்டு பக்தி ஜ்ஞானுப்பியாஸங்களேச் செய்து வர ஆரம்பித்துவிட்டவர்களுக்கு அதிகமாக துக்கமும் கஷ்டமும் மனஸில் தோன்ற மாட்டாது. அப்பெண்களேப் பார்க்கிறவர்களும் உலகச்சிற்றின்பங்களில் பழக்கமுள்ளவர்களுமான மற்ற பாமரஜனங்களுக்குத்தான் அப்பெண்கள் விஷயத்தில் அதிகமாக பரிதாபமுண்டாகக் கூடியது. எப்படி விசேஷ பூர்வ புண்ணிய வசத்தினுல் அதி பால்யத்திலேயே ஸன்யாஸத்தைப்பெற்றுக் கொண்ட பிரம்மசாரியைப்பார்த்து பாமரஜனங்கள் பரிதாபப்பட்டாலும், அவர் தன்னுடைய ஆசிரமத்திற்குரியதும் ஸத்கதிக்கனுகூலமுமான அப்பியாஸங்களேயே செய்துகொண்டு இந்திரிய விஷய சுகங்களில் மனஸைச் செலுத்தாமலும் செலுத்த அவகாச மில்லாமலு மிருந்து

வந்து பின்னால் எல்லோராலும் கொண்டாடத்தகுந்த மஹானாகி விடுகிறாரோ, அப்படியே விசேஷ பூர்வ பாபவசத்தினால் விதவையாகிவிட்ட ருதுவாகாத பெண்ணும் விரக்தியுடனும் பக்தியுடனுமிருந்துவந்து மற்ற ஸ்திரீகளை அபேக்ஷித்து வெகு லெகுவாய் உயர்ந்த பதவியை அடைந்துவிடக்கூடும். ருதுவான பிறகு விதவையாகப் போவதைவிட ருதுவாவதற்கு முன் விதவையாகி விடுவது அதிக கஷ்டமென்று நினைப்பது அறியாமையே யாகும். ஆகையால், முன் சொல்லியபடி நியாயமாய் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஒரு தடவை விவாஹம் நடத்திவைக்க வேண்டிய அவசியம். இப்படி நடத்தி வைக்கப்பட்டபின்பு பலமான பிராரப்த துஷ்கர்ம வசத்தினால் வைதவ்யம் வந்து விட்டால், அதை பொறுத்துக் கொண்டும், வைராக்கியத்துடனிருந்து பரலோக நன்மைக்காக ஏகாந்தமாய் விசேஷ யத்தினங்களைச் செய்யும்பொருட்டு தனக்கு அந்நிலைமை வந்திருப்பதாக எண்ணிக் கொண்டும், அதை அநுகூல விஷயமாக உபயோகப்படுத்திக் கொள்வதே உத்தமியான தார்மிக ஸ்திரீயின் லக்ஷணமாகும்.

16. மிலேச்சப் பார்வையே பலப்பட்டிருந்த சில லௌகிகர்கள் முதன்மையாயிருந்து முன்னால் 11-வது பாராவில் சொல்லியபடி விதவைகளின் புனர் விவாஹ விஷயமான சட்டம் ஏற்படும்படி செய்தார்கள். ஆனால், அச்சட்டத்தினால் புனர் விவாஹத்தின்பொருட்டு ஸர்க்காரின் அனுமதியிருப்பதாக மட்டும் காண்பிவிக்கப்பட்டதேயொழிய புனர் விவாஹம் கட்டாயமாய் செய்யப்படவேண்டுமென்ற விதி ஏற்படாததினால், தார்மிகர்களுக்கு அதினாலும் விசேஷ கெடுதல் உண்டாகவில்லை. அந்த சட்டமும் முக்கியமாய் பிராம்மணர்களை உத்தேசித்தே செய்யப்பட்டது. இப்

படி 1856-ம் வருஷத்தில் சட்டமேற்பட்டும் அது முதல் நாளது வரையில் சுமார் முக்கால் நூற்றுண்டில் பிராம் மணர்களுக்குள் எவ்வளவு புனர்விவாஹங்கள் நடந்திருக் கின்றனவென்று கணக்குப்பார்த்து சற்று ஆலோசித்தால் தற்கால ஆசாரசீர்திருத்தக்காரர்களும் ஷை சட்டத்திற்காக பெரும் முயற்சி யெடுத்துக் கொண்டவர்கள் உயிருடனிருந் தால் அவர்களும் மிகவும் வெட்கமடைவார்களென்பதில் ஸந்தேஹமில்லை. எப்போதாவது மிக்க அபூர்வமாக வித வைகளை மணம் புரிந்தவர்களும் சாஸ்திர வாஸனையேயில் லாத மிலேச்சக் கல்விப்பார்வையுள்ளவர்களே யல்லாமல் மற்றவர்களல்ல. ஷை சட்டத்தினல் தார்மிகர்களின் ஸ்திதி யாவது ஆசாரணைகளாவது அணுவளவும் மாறிப் போக வில்லை. ஆகையால், முன் குறிப்பிட்டபடி அது விஷயமாக வும் தார்மிகர்கள் முயற்சி யெடுத்து அதை ரத்து செய்வித் துக்கொள்ளவில்லை. இக்காலத்தில் 14 வயதைக் குறிப்பிட்டு விவாஹ விஷயமாகச் செய்யப்பட்டிருக்கிற சட்டம் மிகவும் அனர்த்தத்தையே விளைவிக்கக்கூடியது. உண்மையான ஆர் யர்களாகிய தார்மிகர்களின் பார்வையில் விவாஹத்திற்கு எவ்வளவு முக்கியத்தன்மையிருக்கிறதென்று ராஜாங்கத்தார் கள் தெரிந்து கொண்டதாகத் துலங்க வில்லை. தர்ம சாஸ் திரத்தை அனுஸரித்துச் செய்யப்பட்ட விவாஹந்தான் தர்ம விவாஹமாகும். தர்ம விவாஹத்தினல்தான் தர்ம பத்னீ ஏற்படுகிருள். பத்னீ தர்மபத்னீயாயிருந்தால்தான் புருஷன் பிரவிருத்தி தர்மாசரணைகளைச் செய்யக்கூடும். கிருஹஸ்தாசிரமம் முக்கியமாய் பிரவிருத்தி தர்மாசரணை களுக்காகவே ஏற்பட்டிருக்கிறது. சாஸ்திரப்படிக்குள்ள விவாஹத்தைச் செய்து கொண்டு கிரமமாக தர்மங்களை ஆசரித்துவருகிற கிருஹஸ்தரின் ஆதரவின் பேரில் மற்று

ஆசிரமங்களின் இருப்பும் சுத்தத்தன்மையும் பொறுத்து நிற்கின்றன. அதர்ம விவாஹத்தினால் கிருஹஸ்தாசிரமம் கெட்டுப்போய்விட்டால், மற்ற ஆசிரமங்களும் கெட்டு நாசத்தை அடைந்து விடக்கூடியவை. மேற்கண்ட சட்டத்தை அனுஸரிக்கும் பக்ஷத்தில் அனேகமாய் 14-வது வயதில் இவ்வுஷ்ண தேசத்திலுள்ள பிராம்மணப் பெண்கள் ருதுவாகி விடக்கூடியதால், சாஸ்திர விரோதமாக விருஷளியை மணம் புரிவது மன்னியில், விவாஹத்துடன் தொடர்ந்தே நிஷேக முகூர்த்தத்தையும் நடத்தும்படி ஏற்படும். முன் பலமுறை அவசியமென்று காட்டியபடி க்ஷேத்திரம் பரிசுத்தப்பட அவகாசமில்லாமலே ஏற்கனவே கெட்ட ஸ்திதியை அடைந்து விருஷளியாயிருப்பவளுடன் சரீரப்புணர்ச்சிக்காக விவாஹம் நடப்பதாகவே முடிவாகும். தர்மாசரணைகளிலும், சுத்தமான தர்ம பரம்பரை உண்டாவதிலும், ஆர்யமதம் நீடித்து நின்று மனிதனுக்கு நற்கதியின்பொருட்டு ஹிதத்தைச் செய்து வருவதிலும், சிரத்தையுள்ள தார்மிகர்கள் மேற்படி சட்டப்படிக்குள்ள அதர்ம விவாஹத்தை நடத்திக் கொண்டு அதோகதியை அடைய வேண்டுமென்றால் இது ஒருக்காலத்திலும் ஸாத்தியப்படக்கூடாத விஷயம்.

17. ஆகையால், அச்சட்டம் உடனே ரத்துச்செய்யப்படாவிட்டால், அதை மீறியே தார்மிகர்களுக்குள் எப்போதும் விவாஹம் நடந்தேறிவரும். விவாஹங்களினால் ஜயிலுக்குப் போவதும் அபராதங் கொடுப்பதும் அவர்களுக்குள் அவசியமான ஸங்கதிகளாகவே ஸஹஜமாய் ஏற்பட்டுவிடும். உண்மையில் குற்றவாளியாயிருந்து ஜயிலுக்குப்போய் அதினால் துராசாரங்களும் கர்மலோபங்களும் உண்டானால் அந்த பாபங்கள் குற்றவாளியை அடையும். தர்மத்தை ஆசரிப்பதற்காக அநியாயமாய் விபரீத சட்டத்

தை அநுஸரித்து ஜயிலுக்கு அனுப்பப்பட்டு ஷை பாபங்கள் ஏற்பட்டால் அவை ராஜாவையும் ஷை சட்டத்திற்குக் காரண பூதர்களாயிருந்தவர்களையுந்தான் அடையக் கூடியவை. ஜயிலுக்குப்போனவர்களுக்கு அந்த பாபஸம்பந்தமே யிருக்கமாட்டாது. ஆகையால், தார்மிகர்களுக்கு ஷை ஜயில் வாஸத்தினால் அதிகதோஷமேற்படாது. அபராத விஷயத்திலும், கல்யாணங்களில் விசேஷமாக அதிகச் செலவுகளைச்செய்யாமல் நிறுத்திக்கொண்டு ஸர்க்காருக்கு வீண் தண்டமாக தொகை செலுத்தப்பட்டுவரும். தார்மிகரே வலுவில் அபராதத்தைச் செலுத்தாமல் ஸர்க்காரே பலாத்காரமாக வசூலித்துக்கொள்ளும்படி செய்வதும் வழக்கத்திற்கு வந்து விடக்கூடும். இப்படியே அடிக்கடி ஜயிலுக்குப் போய்க்கொண்டும் அபராதம் வசூலிக்கப்பட்டும் வந்தால் நாளடைவில் சில தார்மிகர்களின் குடும்பங்கள் தரித்திர தசையை அடைந்து விடலாம். ஆனால், பிராம்மண விஷயத்தில், தரித்திரனாகி விட்டால் அவருக்கு யாதொரு குறைவுமில்லை. சொத்தில்லாமையே பிராம்மணனுக்கு உத்தம லக்ஷணமென்று முன் இரண்டாவது பாகத்தின் 7-வது பாராவில் விவரிக்கப்பட்டுமிருக்கிறது. தரித்திர தசையை அடைந்த பிறகு ஸர்க்கார் அபராதம் வசூலிக்க இடமேயில்லாமல் நின்று போகக்கூடியது. அபராதம் செலுத்தாததினால் அதிகமாய் சில மாஸங்கள் ஜயிலிலிருக்கும்படி நேரிடுவதையும் தார்மிகர்கள் லக்ஷியஞ்செய்யப் போகிறதுமில்லை. இது நிற்க. விவாஹத்தை நடத்திவைக்கிற உபாத்தியாயர்களுக்கும் தண்டனையுண்டென்று ஷை விபரீத சட்டத்தில் கண்டிருப்பதால், இனி பிராம்மணர்களுக்குள் எல்லோரும் கிரமப்படி, அல்லது அவசியமான மட்டிலாவது, வேதாத்தியயனத்தைச் செய்துகொண்டு அந்தந்த கிருஹஸ்

தர்களே தங்களுடைய ஸந்ததிகளின் விவாஹங்களை நடத்தி வைக்கும்படியான யோக்கியதையை ஸம்பாதித்துக்கொண்டு விடுவது முக்கிய மென்றே ஏற்பட்டுவிட்டது. அனேக தார்மிகர்வீடுகளில் உபாத்தியாயத்தை வைத்துக் கொண் டிருக்கக் கூடிய புரோஹிதரை எங்கும் விவாஹத்தை நடத் திக் கொடுக்கும்படி சொல்வது நியாயமில்லை. அவரே எல் லோருக்கும் நடத்திவைப்பதும் ஸாத்தியப்படாது. அவர் ஒப்புக் கொண்டு கொஞ்சம் நடத்திவைத்தாலும், அவர் அடிக்கடி ஜயிலிலிருக்கும்படி நேரிடுமேயல்லாது உபாத்தி யாயத் தொழில் ஒழுங்காக நடக்காது. ஆதலால், மிலேச் சக் கல்வியிலும் விசேஷப் பற்றுதலுள்ள தார்மிகர்களும் அக் கல்வியை பெரும்பாலும் விட்டொழித்து வேதாத்தியயனத் தைச் செய்து ஸ்வதர்மாசரணைகளை கிரமமாய் நடத்திக் கொண்டிருக்கும்படியான காலம் வந்து விட்டதென்று சொல்லவேண்டியதாயிருக்கிறது. இப்படி தர்மத்திலேயே உறுதியாய் நின்றுகொண்டு, காலக்கொடுமையால் தங்களுக் குண்டாகிற அஸௌகரியங்களையும் கஷ்டங்களையும் ஒரு பொருட்டாக எண்ணுமலே இருந்துவருகிற தார்மிகர்கள் முழுவதும் நசித்துப் போய் விடும்படி ஈசுவரர் செய்துவிட மாட்டாரென்பது நிச்சயமே. இவ்விதமாக சகல விபரீத அதர் மப்பிரவாஹ வேகத்தையும் அலக்ஷியஞ்செய்து எதிர்த்து நீந்தி ஸம்ஸாரதுக்கத்திலிருந்து கரையேறுகிற தார்மிகர் களின் ஸந்ததிகளே இக்கலியுகக்கடைசியில் மிஞ்சி தர்ம மூர்த்திகளாக விளங்குவார்கள். அதர்மக்கொள்கை தடித் துப்போய் அட்டஹாஸஞ்செய்துவருபவர்களெல்லோரும் அக்காலத்தில் இருந்த இடமே தெரியாமல் முன் மூன்று வது பாகத்தின் 5-வது பாராவில் சொல்லியபடி அழிந்து போய்விடுவார்கள். அழிவில்லாமல் ஸ்திரமாய் எந்நாளு

முள்ளவர்கள் தார்மிகர்களே தவிர மற்றவர்களல்ல. தார்மிகர்களைப் பூராவும் கெடுத்துவிடும்படியான எந்தக் காரியமும் முடிவில் பலிக்கமாட்டாதென்பதே ஸத்யம். அப்படி கெடுத்துவிடுவதான உத்தேசத்துடன் செய்யப்படுகிற ஒவ்வொரு முயற்சியும் பெரும் பாபமேயாகும். ஏதோ ஜனங்களுக்கு நன்மை செய்வதாக மோஹங்கொண்டு தர்ம விரோதமான சட்டமேற்படும்படி முயற்சித்து வந்தவர்களெல்லோரும் விவேகமில்லாமையால் காடும்பாபத்தையே செய்து வந்திருக்கிறார்கள். இப்பெரும் பாபத்திலிருந்து இவர்களுக்குக் கொஞ்சமாவது விடுதலை யுண்டாக வேண்டுமானால் இவர்களும் இனியாவது நல்வழியில் திரும்பி தார்மிகர்களுடன் ஒற்றுமையாயிருந்து ஷை சட்டம் உடனே ரத்தாகி விடும்படியான பிரயத்தினத்தைச் செய்யவேண்டியதவசியம். அறியாமையால் அக்கிரமவழியில் இறங்கி தகுதியில்லாத காரியத்தைச் செய்தவர்கள் அப்பால் நன் மார்க்கத்தில் பிரவேசித்து தங்களுடைய முன் அக்கிரம காரியத்தினால் தீங்கு விளையாமல் செய்து கொள்வதே புத்தியுள்ளோர்களுக்கு லக்ஷணமேயல்லாமல், முன் கெட்ட வழியில் தங்களுக்கு ஏற்பட்ட வீண் வீம்பை மேன்மேலும் கொண்டு செலுத்துவது அவர்களுக்கு அழகு மல்ல, ஹிதமுமல்ல, பெருந்தன்மையுமாகாது.

18. ஷை விபரீதச்சட்டம் உடனே பூராவும் ரத்தாக வேண்டியதே ராஜாங்கத்தார்களுள்பட எல்லோருக்கும் நன்மையாகும். ஒருக்கால் பலர்களின் அதர்மக் கொள்கைகளினால் அது பூராவும் ரத்தாகக்கூடாமலிருந்தாலும், அதிலுள்ள கிரிமினல் தண்டனை விஷயமான பாகத்தையாவது நீக்கிவிடச்செய்யவேண்டியது மிகவும் அவசியம். இந்த பாகத்தை உடனே நீக்காவிட்டால், ராஜாங்கத்தின்

தண்டனை சக்திக்கே மதிப்புக்கெட்டுப்போய், தண்டனையை தண்டனையாகவே ஜனங்கள் எண்ணுமலிருந்துவிடும்படி நேரிடும். இது ராஜாங்கத்திற்கு கௌரவக்குறைவேயன்றி மேன்மையல்ல. இனி அதிகமாகச் சொல்வது அனுவசிய மாகும். தங்களுடைய தற்கால நிலைமையில் ராஜ்யதந்திர (Politics) விஷயமாக ஒன்றும் சொல்வதற்குத் தகுதியில்லாதவர்களுங்கூட, ஜனங்களின் தர்ம நாசத்திலும் அதோகதியிலும் முடிவடையக்கூடிய ராஜாங்கச் செய்கைகளை ஆக்ஷேபித்து, உண்மையைத் துலக்கிக்காட்டவேண்டியதாக ஆபத்தர்மம் ஏற்பட்டுவிடுகிறது. தவிரவும், இப்படி உண்மையை வெளிப்படுத்துவதின் மூலமாய் கொடிய அனர்த்தங்களைத் தடுக்க யத்தனிப்பது ராஜ்யதந்திரத்தில் பிரவேசித்ததாக மாட்டாது. விவாஹச் சட்டம் ராஜ்யதந்திர நன்மையைக்கருதி ராஜாங்கத்தினுல் ஸ்வயமாய் நிர்மாணஞ் செய்யப்பட்டதல்ல. இது ஏதோ ஜனங்களின் கோரிக்கையின்பேரில் செய்யப்பட்ட சட்டமாகவே காட்டப்பட்டிருக்கிறது. இந்தியா சட்ட ஸபையில் ஆசாரசீர்திருத்தக்காரர்களின் (Social Reformers) யத்தனத்தின் பேரில் சட்ட மசோதா ஒரு விதமாய் கொண்டுவரப்பட்டது. அது விஷயமாக ஜனங்களின் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்வதற்காக என்பதாக சில கம்மிஷன் விசாரணை நடவடிக்கைகள் நடத்தப்பட்டன. ஆதியில் சட்டப்படிக்குள்ள அனுமதியின் பேரில் கொண்டுவரப்பட்ட மசோதா போதாதென்றெண்ணி ஷை அனுமதிக்கு மாறுதலாகவும், சட்டப்படி அதிகாரமில்லாமலும், ஷை மசோதாவில் கண்டிருந்த 12 வயதை 14 ஆக அதிகப்படுத்தி விடுவதற்கும், அதில் காணுமலிருந்த கிரிமினல் தண்டனைக்குள்ள விபரத்தையும் சேர்த்து விடுவதற்கும் ஆசாரசீர்திருத்தக்காரர்களுக்கு நியாய விரோத

மான ஒரு அவகாசம் இவ்விசாரணையினால் கொடுபட்டதாக முடிவாயிற்றேயொழிய, தார்மிகர்களின் எதிரிடையான அபிப்பிராயத்திற்கு நியாயப்படிக்குள்ள மதிப்பைக் கொடுத்ததாக வெளியாக வில்லை. அனேகமாய் மேற்கண்ட விசாரணை நடவடிக்கைகளில் மிலேச்சக்கல்வியில் தேர்ந்திருக்கிற சில பிரதான லௌகிகர்களின் அபிப்பிராயம் மாத்திரம் தேடப்பட்டதேயல்லாமல் உண்மையான ஹிந்துக்களின் அபிப்பிராயம் லக்ஷியஞ்செய்யப்படவுமில்லை, தெரிந்து கொள்ளப்படவுமில்லை. இந்தப்படி விசாரிக்கப்பட்டவர்களுக்குள் தார்மிகப்பார்வையுள்ளவர்கள் மிகவும் ஸ்வல்பமாகவும் மிலேச்சப்பார்வையுள்ளோர்களே அதிகமாகவுமிருந்தால், ஷை மெஜாரிடியார்களுடைய அபிப்பிராயத்தையே ஜனங்களின் அபிப்பிராயமென்று பாவித்துக்கொண்டு ஷை சட்டமேற்படும்படியான மேல் காரியங்கள் நடத்தப்பட்டன. அன்றியும், ஜனங்களுக்குள்ளாகவே மெஜாரிடியார்களின் அபிப்பிராயம் ஷை சட்டத்திற்கு அனுகூலமாயிருப்பதாகச் சொல்வதை வாஸ்தவமென்று வைத்துக் கொண்டாலுங்கூட, ஷை மெஜாரிடியார்களின் கொள்கையை அனுஸரித்து மைனாரிடியார்களாகிய தார்மிகர்களின் தர்மாசரணையைக் கெடுத்துவிடலாமாவென்று கவர்ன்மெண்டார் ஆலோசிக்கத் தவறிவிட்டார்கள். சட்ட மசோதாவில் கண்ட விஷயம் மத ஸம்பந்தப்பட்டதென்ற காரணத்தினாலேயே அது விஷயமாய் கம்மிஷன்விசாரணை நடவடிக்கை செய்யப்பட்டன வென்பது நிச்சயம். அப்பால் ராஜப்பிரதிநிதி வெளியிட்டபடி கேவல சரீர ஸம்பந்தமான லௌகிக (Social) நன்மையைக் கருதியே ஷை சட்டம் ஏற்பட்டதென்பது உண்மையாயிருக்கக்கூடுமானால் கம்மிஷன் நியமிப்பதற்காவது விசாரணை செய்வதற்காவது கார

ணமேயிருந்திருப்பதில்லை. மசோதாவில் கண்ட 12 வயதுக்கு முன்பாக ஸ்திரீயிடம் புருஷனுக்கு ஸங்கம் கூடாதென்பதற்கு முன்னமேயே அனுவசியமாகச் சட்டம் ஏற்பட்டிருக்கிறது. அதுவுமல்லாமல், ஸ்திரீ ருதுவாவதற்கு முன்பாக புருஷஸங்கம் ஏற்பட்டால் அது கெடுதல்தானென்பதைத் தெரிந்துகொள்ள கம்மிஷனும் வேண்டாம், விசாரணையும் வேண்டாம். இவ்வித விஷயங்களைப்பற்றி விசாரணை செய்யப்படவுமில்லை. மைனாரிடியைச் சேர்ந்தவர்களானாலும் சில ஜனங்களுடைய அபிப்பிராயம் வேறுபட்டிருந்தால் மத விஷயத்தில் ராஜாங்கத்தார்கள் பிரவேசிப்பதற்கு இடமில்லையென்று தெரிந்து கொண்டதின் பேரில் ஷை சட்டத்திற்கு மதஸம்பந்தமில்லையென்று வீண் ஸமாதானம் சொல்லப்படுகிறதேயல்லாமல், உண்மையில் ஷை சட்டமசோதா ஸபைக்கு வந்தது முதல் அதை மதஸம்பந்தப்பட்டதாக எண்ணியே கவர்ன்மெண்டாராலும் மற்றவர்களாலும் ஸகல நடவடிக்கைகளும் நடத்தப்பட்டு வந்திருக்கின்றன. தவிரவும், கேவல சரீரஸம்பந்தமான லௌகிக நன்மையை மாத்திரம் கருதி மதாசரணைவிஷயத்தில் பிரவேசித்து சட்டத்தை ஏற்படுத்த ராஜாங்கத்தார்களுக்கு எவ்விதத்திலும் அதிகாரமில்லை. ஹிந்துவிவாஹம் லௌகிக ஒப்பந்தமில்லையென்றும் அது பூராவும் மதஸம்பந்தமான வைதிகஸம்ஸ்கார மென்றும் (Religious Sacrament) ராஜாங்கத்தார்களுக்கு ஸ்பஷ்டமாய் தெரிந்திருக்கக்கூடும். மெயின் முதலான இங்கிலீஷ்காரர்களாலேயே ஹிந்துலா புஸ்தகங்களில் இது வியக்தப்படுத்தப்பட்டும் ராஜாங்கத்தின் ஸகல நியாயஸ்தலங்களிலும் நெடுநாளாகவே நன்முக ஊர்ஜிதப்படுத்தப்பட்டும் வந்திருக்கிறது. இவ்விதமான வைதிகஸம்ஸ்காரமாகிய விவாஹத்திற்கும் கேவல சரீரப்புணர்ச்சிக்கும் நேர்

ஸம்பந்தமே கிடையாதென்று முன் பலவாறுகக் காட்டப்பட்டிருக்கிற விபரங்களும் அனேகமாய் தெரிந்திருக்கக்கூடியவை. அன்றியும், மதஸம்பந்தப்பட்ட விஷயத்தில் சில சரீர காரியங்கள் உண்மையில் நடந்தேறிவருகிறதாயிருக்கக்கூடிய விஷயங்களிலும் ராஜாங்கத்தார்கள் பிரவேசிப்பது நியாயமாகாது. மகம்மதீயர்களுக்குள் ஆண்குழந்தைகளுக்கும் பாலகர்களுக்கும் மதஸம்பந்தமாகவே சுன்னத் (Circumcission) விசேஷம் நடத்தப்பட்டுவருவதில், அது அக்கிரமமான சரீர ஹிம்ஸையென்று சொல்லிக்கொண்டு சட்டஸபையிலுள்ள மகம்மதீயர்களில்லாத மெஜாரிடி மெம்பர்கள் ஒன்று சேர்ந்து இனி சுன்னத் காரியம் நடக்கவே கூடாது, நடத்திஞல் தண்டனை யேற்படுமென்று சட்டத்தை உண்டாக்கிவைத்துவிட்டால், மைஞரிடியார்களாகிய இத்தேச மகம்மதீயர்கள் அச்சட்டத்திற்குக் கட்டுப்பட்டு ஷை காரியத்தைச் செய்யாமல் நிறுத்திவிடுவார்களா? மாட்டார்கள். இப்படியிருக்கையில், வாஸ்தவத்தில் சரீர ஸம்பந்தத்திற்கே இடமில்லாமலிருக்கிற ஹிந்து வைதிக விவாஹ விஷயத்தில் தார்மிகர்கள் மைஞரிடியைச் சேர்ந்தவர்களாஞலும் பிரகிருத விவாஹச் சட்டத்திற்குட்பட்டு அவர்களுடைய உத்தமமான தர்மாசரணைகளைக் கெடுத்துக்கொண்டு விடுவார்களா? மாட்டார்களென்றே உறுதியாய் ராஜாங்கத்தார்கள் நிச்சயப்படுத்திக்கொள்ளவேண்டும். ஆகையால், ஷை சட்டம் முடிவில் ஏற்பட்டிருக்கிற நிலைமையில் சட்டஸபையில் அதின் பிரவேசத்திற்குள்ள சட்ட ஸம்பந்தமான முன் அனுமதியே அதற்கு உண்டாகாததிஞல் அது செல்லக்கூடியதேயில்லை யென்பதுடன், அது உண்மையில் மத ஸம்பந்தமான தென்றே வியக்தமாயிருப்பதாலும், அது விக்டோரியா மஹாராணியின் பிரதிஜ்ஞைக்கு முற்றிலும்

விரோதப்படுவதாலும், யாரை முக்கியமாய் உத்தேசித்து, அதாவது, யாருடைய நன்மைக்கென்று, ஷை சட்டம் செய்யப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்ட தார்மிர்களின் கொள்கைக்கு எதிரிடையாக அது செல்லக்கூடாததாலும், தார்மிகர்களின் அநுஷ்டானத்திற்காகவே உத்தேசிக்கப் பட்ட சட்டத்தை தார்மிகரில்லாதவர்கள் கூடி நிர்மாணஞ் செய்வதற்கு அதிகாரமேயில்லாததினாலும், ஷை சட்டம் ஏற்பட்டு விட்டதாகச்சொல்லப்பட்டாலுங்கூட, அது தார் மிகர்களின் சாசுவதமான நன்மைகளைக் கெடுத்து அவர்களை யும் அவர்களுடைய பின் ஸந்ததிகளையும் துர்க்கதியில் தள்ளிவிடக்கூடியதாயிருப்பதால் அதை அநுஸரித்து அவர் கள் நடந்து வருவது ஸாத்தியப்படக்கூடாமலிருப்பதாலும், ராஜாங்கத்தார்கள் எவ்வகையிலாவது ஷை சட்டத்தை, மேன்மேலும் அது அனர்த்தங்களை விளைவிக்க வொட்டா மல், உடனே ரத்துசெய்து விடவேண்டுமென்பதே ஸித் தம். இப்படி ரத்தாகும்படியாக லௌகிக ஸாமர்த்தியத் துடன் கூடிய தார்மிக கிருஹஸ்தர்களெல்லோரும் ஏகோ பித்து, ஈசுவரர்பேரிலேயே பொறுப்பை வைத்து, விசேஷப் பிரயத்தினங்களை இனி காலதாமதமன்னியில் சீக்கிரத்தில் செய்யவேண்டிதவசியம்.

நான்காவது பாகம் முற்றும்.

---

# தர்ம விமர்சனம்

## ஐந்தாவது பாகம்

## தர்மஜ்ஞானதத்வங்களும் முக்கியாவதாரங்களும்

1. மனிதச்செய்கைகளுக்குள் தர்மச்செய்கைகளே ஞானத்திலும் மோக்ஷத்திலும் முடிவடையக்கூடியவைகள். மனிதச்செய்கைகள் இருவகை, ஸாமான்யச் செய்கைகள் விசேஷச் செய்கைகள். ஸாமான்யச்செய்கைகளும் இரண்டு விதங்கள், ஒன்று எல்லாப்பிராணிகளுக்கும் பொதுவாயுள்ள சரீர ஸம்பந்தமான செய்கைகள் (Animal activities) மற்றொன்று மனிதர்களுக்குள் மாத்திரம் பொதுவாயிருக்க வேண்டிய தர்மச்செய்கைகள் (Moral activities). மேற்கண்ட விசேஷ மனிதச்செய்கைகள் கர்மங்கள் என்ற பார்வையிலும் தர்மங்கள் என்ற பார்வையிலும் இருவிதங்களாக கவனிக்கப்பட வேண்டியவை. இவைகளில் கர்மங்கள் இருவகைப்படும், ஒன்று பிரவிருத்தி கர்மங்கள் மற்றொன்று நிவிருத்தி கர்மங்கள். இவ்வுலக சுகங்களின்பொருட்டு மனிதனால் செய்யப்படுகின்ற விசேஷ முயற்சிகள் பிரவிருத்தி கர்மங்களாகும். கடைசியில் மனப்பூர்வமான நிவிருத்தியில் (Renunciation) உத்தேசங்கொண்டு செய்யப்படுகின்ற கர்மங்கள் நிவிருத்தி கர்மங்கள். இந்த நிவிருத்தி கர்மங்களுக்குள்ளும் இரண்டு பேதங்களுண்டு, ஒன்று மோக்ஷத்தில் இச்சையுடன் சேராதது மற்

றென்று முடிவில் மோக்ஷத்திற்காகவே செய்யப்படுவது. மோக்ஷஸ்வரூபத்தை அறியாதவர்களும் பரலோகம் போய் எந்நாளும் சுகித்து வாழ்ந்திருக்கவேண்டுமென்று எண்ணிக் கொண்டிருப்பவர்களுமான ஹிந்துக்களல்லாதவர்களின் மதானுஷ்டானங்கள் இவைகளில் முதலாவது வகுப்பைச் சேர்ந்தவையாகும். மேற்குறிப்பிட்ட தர்மச்செய்கைகளும் இருவிதங்களாகின்றன, அதாவது, பிரவிருத்தி தர்மங்கள் நிவிருத்தி தர்மங்கள். பிரவிருத்தி தர்மங்களெல்லாம் மனதுடன் கூடிய வாக், கை, கால் முதலான கர்மேந்திரியங்களால் ஸாத்தியப்படக்கூடியவையாதலால், அவை முக்கியமாய் கர்மரூபங்களாகவே யிருக்கின்றன. கர்மங்களே பிரவிருத்தி கர்மங்களென்றும் நிவிருத்தி கர்மங்களென்றும் முன் காட்டியபடி இருவகைப்பட்டிருப்பதில், இவைகளில் மோக்ஷத்தில் உத்தேசத்துடன் செய்யப்படுகின்ற நிவிருத்தி கர்மங்கள் மாத்திரம் பிரருவித்தி தர்மங்களாகி விடுகின்றன. மேலும், முன் குறிப்பிட்டபடி மனதுடன் கலந்த கர்மேந்திரியங்களால் நடத்தப்பட வேண்டிய ஷை பிரவிருத்தி தர்மங்களுக்குள்ளாக, கர்மேந்திரியங்களுக்குப் பிரதானத்தன்மை ஸித்தித்திருக்கிற, அதாவது, பெரும்பாலும் சரீரகாரிய ரூபங்களாகிய, நித்திய-நைமித்திககர்மங்களென்றும், மனதுக்குப் பிரதானத்தன்மை ஸித்தித்திருக்கிற, அதாவது, முக்கியமாய் மனதின் காரியரூபங்களாகிய, ஸகுணோபாஸனங்களென்றும் இரு வகை பேதங்களிருக்கின்றன. இவைகளில் நித்திய-நைமித்திக கர்மங்களினால் சித்தத்தின் சுத்தியும், ஸகுணோபாஸனங்களினால் சித்தத்தின் ஐகாக்கிரியமும் ஸித்தித்து இவைகளால், முன் இரண்டாவது பாகத்தில் குறிப்பிட்டபடி, முறையே அந்தக்கரணத்தின் மலதோஷமும் விக்ஷேப

தோஷமும் நீக்கப்பட்டுவிடுகின்றன. அனேகமாய் கர்மேந்திரியங்களுக்கு ஸம்பந்தமில்லாமலும் ஆரம்பத்தில் சுரோத்திரமாகிய ஞானேந்திரியத்திற்கும் அப்பால் மனதுக்கு மாத்திரமும் விசேஷமாய் ஸம்பந்தப்பட்டதுமான சிரவண-மனன-நிதித்தியாஸன ரூபங்களாகிய ஞானாப்பியாஸங்கள் நிவிருத்தி தர்மங்களென்று சொல்லப்படுகின்றன. ஸர்வோத்தமமான ஆத்மதத்வத்தை காதினால் குருவிடமிருந்து கிரஹித்து புத்தியில் உட்கொள்வது சிரவணம். இப்படி குருவிடமிருந்து சிரவணம் மூலமாய் கிரஹிக்கப்பட்ட தத்வத்தைப்பற்றி அடிக்கடி ஆலோசித்துப் பரிசீலனை செய்து அது ஸம்பந்தமாய் மனதில் உதிக்கக்கூடிய ஸந்தேஹங்களை அப்போதைக்கப்போது குருமுகமாகவும் வேறு விதங்களிலும் நிவிருத்திசெய்துகொண்டு ஷை தத்வ விஷயமான பரோக்ஷஜ்ஞானத்தை உறுதிப்படுத்திக்கொள்வது மனனம். இப்படி மனனத்தினால் ஸந்தேஹமின்றி ஸ்திரப்படுத்திக் கொள்ளப்பட்ட பரோக்ஷமான தத்வஜ்ஞானத்தை அபரோக்ஷமாகச் செய்து ஸ்வானுபூதிக்குக்கொண்டுவரும் பொருட்டு, அதையே இடைவிடாமல் தைலதாரைபோல் தியானித்துக்கொண்டிருப்பது நிதித்தியாஸனமாகும். இதையே நிர்குணோபாஸனமென்றும் சொல்லுவதுண்டு. சிரவண-மனனகாலத்திலும் புஸ்தகத்தைப் பார்த்துப்படிப்பதில் நேத்திரேந்திரியத்திற்கும் வாக்காகிய கர்மேந்திரியத்திற்குங் கூட சில வேளைகளில் பிரவிருத்தியிருக்கக்கூடியதானாலும், இதெல்லாம் முக்கிய மில்லையாதலாலும், ஸர்வஸங்க-கர்ம பரித்தியாகத்தைச் செய்து விட்டே சிரவண-மனன-நிதித்தியாஸனரூபஜ்ஞானாப்பியாஸங்களைச் செய்வதே முக்கிய பக்ஷமாகையாலும், சிரவணாதிகளின் நேர் உத்தேசமே நைஷ்கர்ம்யஸித்தியானதினாலும், இவைகளுக்கு நிவிருத்தி

தர்மங்கள் என்ற பெயர் உசிதந்தான். சிரவண-மனனங்களின்பேரில் கிரமமாயேற்பட்ட நிதித்தியாஸனத்தின் பூர்த்தியினால், முன் இரண்டாவது பாகத்தில் சொல்லியபடி, ஆவரண தோஷமென்ற அஜ்ஞானம் நீக்கப்பட்டும், ஜீவத்வம் மறைவடைந்தும், ஸமாதி நிலைத்தும், அபரோக்ஷாத்ம ஜ்ஞானாந்தானுபவமே ஸித்தித்துவிடுகின்றது. இந்த ஸித்தியே தர்ம புருஷார்த்தத்தின் முடிவான பலன். மேற் சொல்லிய விபாகங்கள் இதின் அடுத்த பக்கத்தில் கண்ட கொடிவழி மூலமாகவும் வியக்தப்படுத்தப்படுகின்றன. அதில் குறிப்பிட்ட தர்மரூபமான ஸாமான்யச் செய்கைகளினால் உத்தம ஜீவத்வம் மனிதனால் ஸாதித்துக்கொள்ளப்படக் கூடும். இவ்வுத்தம ஜீவத்வமே மிலேச்ச மதஸ்தர்களுடையவும் துவைதவாதிகளா யிருந்துவருகின்ற சில ஹிந்துக்களுடையவும் முடிவான உத்தேசம். மேற்கண்ட ஸாமான்ய தர்மரூபச் செய்கைகளுடன் சேர்ந்த பிரவிருத்தி-நிவிருத்தி தர்மரூபமான விசேஷச் செய்கைகளினால் சுத்த-ஸச்சிதானந்த-ஆத்மத்வமே அனுபூதியில் உறுதிப்படுத்திக்கொள்ளப் படுகிறது. ஹிந்து துவைதவாதிகளும் இவ்விசேஷ தர்மச் செய்கைகளை ஒருவிதமாய்ச் செய்துவந்தபோதிலும், அவர்களுடைய உத்தேசமும் மனோபாவனைகளும் வேறுபட்டு விட்டதால், அச்செய்கைகள் ஆத்மத்வஸித்தியில் முடிவடையக் கூடியவையல்ல. ஜீவத்வப் பிடிமானமிருக்கும் வரையில் ஸ்வாத்மானுபூதி விளங்கமாட்டாது. இது நிற்க. எவ்வகையிலும் ஷை கொடிவழியில் கண்ட விசேஷ தர்மச்செய்கைகள் ஹிந்துக்களுக்கு மாத்திரமேற்பட்டிருக்கின்றன. அதில் காட்டிய மற்ற ஸாமான்ய-விசேஷச்செய்கைகள் யாவற்றும் ஹிந்துக்களிடத்திலும் ஹிந்துவில்லாதவர்களிடத்திலும் பொதுவாகவே காணப்படுகின்றன.

## மனிதச் செய்கை.

- ஸாமான்யச் செய்கை
  - எல்லா பிராணிகளுக்கும் பொதுவாயுள்ள சரீர ஸம்பந்தமான செய்கை (Animal activity)
  - மனிதர்களுக்குள் மாத்திரம் பொதுவாயிருக்க வேண்டிய தர்மச் செய்கை (Moral conduct)
- விசேஷச் செய்கை
  - கர்மம் என்ற பார்வையில்
    - பிரவிருத்தி கர்மம்
    - நிவிருத்தி கர்மம்
      - மோக்ஷத்தில் உத்தேசத்துடன் சேராதது (ஹிந்துக்களல்லாதவர்களுடைய மதானுஷ்டானங்கள் இவ்வகுப்பில் அடங்கியவை)
      - முடிவில் மோக்ஷத்திற்காகவே செய்யப்படுவது } = பிரவிருத்தி தர்மம்
  - தர்மம் என்ற பார்வையில்
    - பிரவிருத்தி தர்மம்
    - நிவிருத்தி தர்மம்

(மோக்ஷத்தில் உத்தேசத்துடன் சேராதது / பிரவிருத்தி தர்மம்)

- ஸத் கர்மம்
  - நித்தியகர்மம்
  - நைமித்திககர்மம்
- ஸகுணோபாஸனம் | இதனால் விக்ஷேப தோஷம் நிவிருத்தியாகின்றது | (நிவிருத்தி தர்மம்)
  - சிரவணம்
  - மனனம்
  - நிதித்யாஸனம் (நிர்குணோபாஸனம்)

நித்தியகர்மம், நைமித்திககர்மம் — இவைகளால் மலதோஷம் நிவிருத்தியாகின்றது.

சிரவணம், மனனம், நிதித்யாஸனம் (நிர்குணோபாஸனம்) — இவைகளால் ஞானமேற்பட்டு ஆவரண தோஷம் நிவிருத்தியாகின்றது.

2. மல-விக்ஷேப-ஆவரணங்களாகிய தோஷங்கள் மூன்றையும் அப்புறப்படுத்தியும், ஜீவத்வ நிலைமையை விட்டொழித்தும், சுத்தமான ஆத்மத்வ நிலைமையில் நிற்போர் ஞானியென்று கூறப்படுகிறார். மேலான ஜீவன்முக்த ஸ்தானங்களை அடையாத ஞானிக்கும் வ்யுத்தானமென்ற வெளிப்பார்வைகாலத்தில், அவருடைய முன் ஸமாதி காலத்திய ஆத்மானந்தானுபவத்தின் தெளிவான ஞாபகத்தினால், திருச்யப்பிரபஞ்சத் தோற்றங்களில் ஸத்யபுத்தி கொஞ்சமேனுமில்லாமல் அவர் அவைகளை லக்ஷியஞ்செய்யாமலேயிருந்து வருவார். அவைகள் ஸ்வப்நத் தோற்றங்களைப் போலவே அவரால் எண்ணப்பட்டுவரும். அதாவது, எப்படி ஸாதாரண மனிதன் நித்திரையைவிட்டு விழித்துக்கொண்ட பிறகு தன்னுடைய முன் ஸ்வப்நகாட்சிகளெல்லாம் பொய் யென்று தெரிந்துகொண்டிருக்கின்றானோ, அப்படியே ஞானியும் பிரபஞ்சத் தோற்றங்கள் யாவும் மித்யையென்று அத் தோற்றக்காலத்திலேயே அறிந்துகொண்டிருக்கிறார். எவ்விதம் விழிப்பதற்கு முன்பாக நித்திரையென்ற தூக்ககாலத்தில் ஸ்வப்நத்தோற்றங்கள் உண்மையாகவே காணப்படுகின்றனவோ, அவ்விதமே ஞானமேற்படுவதற்கு முன்பாக அவித்யை யென்ற அஜ்ஞானகாலத்தில் திருச்யப் பிரபஞ்சத் தோற்றங்களும் வாஸ்தவமென்றே எண்ணப்படுகின்றன. அதாவது, நித்திரா மோஹத்தினால் ஸ்வப்நப்பிரபஞ்சம் ஸத்யமாகத் தோன்றுவதுபோலவே, அவித்யாமோஹத்தினால் ஜாக்கிரத் பிரபஞ்சமும் ஸத்யமாகவே தோன்றுகின்றது. ஜாக்கிரத்காலத்திலுள்ள ஜீவனென்ற சிதாபாஸனே ஸ்வப்நகாலத்தில் இருவகைப்பட்டு ஸ்வப்ந ஜீவனாகவும் ஸ்வப்நப்பிரபஞ்சமாகவும் பிரிந்திருப்பதுபோல் காணப்படுகின்றான். அதாவது, ஜாக்கிரத் அவஸ்தை

யில் காண்பான் (திருக்) எவனோ அவனே நித்திரைமூலமாய் ஸ்வப்நாவஸ்தையில் உண்டான தன்னுடைய முக்கியாம் சப்பிரதிபிம்பத்தினால் ஸ்வப்நகாண்பானாகவும், தன்னுடைய மனோவாஸனா சக்தியினால் காணப்படுகிறவைகளடங்கிய ஸ்வப்நஜகத்தாகவும், இருவிதமாகத் தோன்றுகின்றான். இப்படி தானே இரண்டுபட்டிருப்பதுபோல் காணப்படுவதான ஞானம் அவித்யைக்கும் நித்திராமோஹத்திற்கும் கட்டுப்பட்டிருக்கின்ற அச்சிதாபாஸனுக்குக் கிடையாது. முன் அனுபவமில்லாமல் பின்னால் ஞாபகமிருக்க முடியாதாகையாலும், ஜாக்கிரத் காலத்தில் சிதாபாஸனுக்கு பூர்வ ஸ்வப்நானுபவம் ஞாபகத்திலிருப்பதாலும், ஸ்வப்ந ஜீவன் இருந்ததையும் ஸ்வப்நஜகத்து காணப்பட்டதையும் அந்த ஸ்வப்ந காலத்தில் சிதாபாஸன் பார்த்துக்கொண்டிருந்தானென்பதில் ஸந்தேகமில்லை. ஆனால், அக்காலத்தில் பார்த்துக் கொண்டிருக்கிற ஸாக்ஷியாகத் தன்னைத் தெரிந்துகொள்ளாமலும், தன்னுடைய ஜாக்கிரத் ஜீவத்தன்மையை மறந்தும், தன்னுடைய ஏகதேசப் பிரதிபிம்பாம்சமாகிய ஸ்வப்ந ஜீவனையே தானென்று அபிமானித்தும், இந்த அபிமானத்தினால் ஸ்வப்ந ஜீவனுடன் ஏகத்வத்தை ஸம்பாதித்துக் கொண்டும், ஸ்வப்ந சுக-துக்கங்களை தானே அனுபவிப்பதாக சிதாபாஸன் மோஹங்கொண்டிருக்கின்றான். நித்திரையிலிருந்து தனக்கு விடுதலையேற்பட்ட பின்புதான் ஸ்வப்ந காலத்திய நிலைமைகளுடையவும் அனுபவங்களுடையவும் மித்யாத்வம் சிதாபாஸனுக்கு விளங்குகின்றது. நித்திரை நிவிருத்தியாகும் ஸமயத்தில் ஸ்வப்நஜீவன் தன்னுடைய தாத்காலிகமும் தோற்றம் மாத்திரமுமான தனி நிலைமையை விட்டுவிட்டு தன் நிஜஸ்வரூபியான சிதாபாஸனுடன் ஒன்றாகி விடுகின்றான், ஸ்வப்நப்பிரபஞ்சமும் மறைந்து போய்

விடுகின்றது. எப்படி ஸ்வப்நஜீவன் தன் ஸ்திதிக்குக் காரணமான நித்திரையிலிருந்துகொண்டு ஸ்திரமாயுள்ள தன் நிஜஸ்வரூபமான சிதாபாஸத்தன்மையை அறியாமலிருந்துவருகின்றானோ, அப்படியே சிதாபாஸனும் தன் ஸ்திதிக்குக் காரணமான அவித்யையிலிருந்துகொண்டு ஸ்திரமாயுள்ள தன் நிஜஸ்வரூபமான ஆத்மத்தன்மையை அறியாமலிருந்து வருகின்றான். அவித்யை நிவிருத்தியாகிவிட்டால், சிதாபாஸன் தன்னுடைய தாத்காலிக ஜீவத்தோற்ற நிலைமையை விட்டுவிட்டு தனக்கு அதிஷ்டானபூதமான ஆத்மாவுடன் ஒன்றாகிவிடுகின்றான். திருச்யப் பிரபஞ்சமும் அப்போது அது இருந்த இடமே தெரியாமல் மறைந்துபோய் விடுகின்றது. அவித்யைக்குட்பட்டிருக்கிற சிதாபாஸன் நித்திரா காலத்தில் தன்னுடைய நிலையற்ற பிரதிபிம்பாம்சமாகிய ஸவப்நஜீவனுடன் ஏகீபாவத்தை அடைந்து தன்னை மறந்து நிற்பதுபோல் மாயாதீதனாகிய ஆத்மா தன்னை மறந்து சிதாபாஸனாகவே ஆகிவிடுகிறதில்லை. சிதாபாஸனுக்கு தன்னுடைய ஸாக்ஷி நிலைமை தெரியாமலே ஸ்வப்ந ஸ்திதிகளும் அநுபவங்களும் விஷயமாகின்றன. ஆத்மாவுக்கோ வெனில் ஸாக்ஷி நிலைமையில் சிதாபாஸனுடைய ஸ்திதிகளும் அநுபவங்களும் பிரத்தியக்ஷமாகின்றன. சுத்தமான ஆத்மத்வ ஸ்தானத்திலேயே கேவல ஸாக்ஷியாக மாத்திரமிருந்து வருகிற ஞானிக்கு சிதாபாஸ நிலைமைக்குரிய பிராரப்த சுக-துக்க போகானுபவங்கள் விஷயங்களான போதிலும், அவைகள் அவரை பந்தப்படுத்தக்கூடியவையல்ல. அந்தக்கரணப்பிரதிபிம்பரூபசைதன்யமாக மாத்திரமிருக்கிற சிதாபாஸத்தோற்றத்தில் ஞானிக்கு 'தான்' என்ற அபிமானம் கிடையாது. ஆகையால், சிதாபாஸனுடைய காரியங்களையும் போகங்களையும் ஒரு பொருட்டாகவே எண்ணாமல் ஞானி எப்

போதும் ஆத்மதிருப்தராக இருக்கிறார். வ்யுத்தான தசையிலிருக்கிற ஞானியின் திருஷ்டியில் ஜகத்து இருப்பதாகத் தோன்றியபோதிலும், அவர் அத்தோற்றத்தை மேலே கண்டபடி ஸ்வப்நத்தோற்றம்போல் பாவித்து உதாஸீனஞ் செய்து விடுகின்றார்.

3. மேற்சொல்லிய ஸ்வப்நதிருஷ்டாந்தத்தினால் அத்வைதக் கொள்கை அஸம்பாவிதமில்லையென்று துலங்கும். ஆத்மா ஒன்றே உண்மைப் பொருளானால் எப்படி அதுவே காண்பானாகிய திருக்ரூப ஜீவனாகவும் காணப்படுகின்றதாகிய திருச்யரூப ஜகத்தாகவும் இருவிதமாகப் பிரிந்து காணப்படலாமென்று ஆக்ஷேபணை செய்யப்படுமானால், அவ்வாக்ஷேபணையைக் கண்டிக்க மேற்படி ஸ்வப்நதிருஷ்டாந்தம் உபயோகப்படும். ஸ்வப்நத்தைக் காண்கிற மனிதனுடைய ஸ்தூல சரீரம் ஒரேயிடத்தில் படுத்திருக்கின்றது. அது வேறு எங்கும் போகவில்லை. ஸ்வப்ந ஜீவனே பெரும் மலைகள், வனாந்தரங்கள், பட்டணங்கள், தேசகள் எல்லாவற்றையும்; இது போல் தன்னைத்தவிர வேறு ஜீவர்கள் ஏராளமாயிருப்பதையும் ஸ்வப்நத்தில் பார்க்கின்றான். இவ்வித மலை முதலானவை அவனுடைய மனதுக்குள்ளாகவே பார்க்கப்படுகின்றன. அனேகமாய் ஸ்வப்நங்களில் காணப்படுகின்ற தோற்றங்கள் பூராவும் பாஹ்யப்பிரபஞ்சத் தோற்றங்களைப் போல் எல்லாவிஷயத்திலும் ஒரே விதமாகக் காணப்படவில்லை. கொஞ்சம் வித்தியாஸமாகவே காணப்படுகின்றன. ஆகையால், ஸ்வப்நகாலத்தில் தன்சரீரத்தைவிட்டு ஜீவன் வெளியேறிப்போய் வருவதாகச் சொல்லுவதற்கில்லை. ஸ்வப்நத்தில் காணப்பட்ட தேசமும் ஜாக்கிரத் காலத்தில் காணப்பட்ட தேசமும் ஒரே விதமாக இருக்கக்கூடிய விஷயத்திலும், இரவில் ஸ்வப்நங்காணும்போது அத்தேசத்தில் தான்

பகலில் ஸஞ்சரித்து வருவதாகத் தோற்ற முண்டாகின்றது. தவிரவும், ஸ்வப்நஜீவன் வாஸ்தவத்தில் அவ்வெளிதேசத் திற்கு ஸ்வப்நகாலத்தில் வந்திருந்ததாக அத்தேசத்திலுள்ள வர்கள் சொல்லுவதுமில்லை. அன்றியும், ஜீவசிதாபாஸன் அந்தக்கரண விசிஷ்டனானபடியால், சரீரத்தை விட்டு ஜீவன் வெளியேறிப்போக வேண்டுமானால் அந்தக்கரணம் பூராவும் சரீரத்தை விட்டு வெளியேறிப்போகவேண்டும். பஞ்சப் பிராணங்களும் அந்தக்கரணத்தின் பாகங்களாயிருப்பதால், அவைகளும் வெளியே போகவேண்டும். அவைகள் வெளிப் பட்டுவிட்டால் சரீரம் பிணத்திற்கு ஸமானந்தானாகும். மூச்சு விடுதல் வாங்குதல், ரக்த ஓட்டம், ஜீர்ணகாரியம் முத லான எவ்வித பிராணசேஷ்டைகளும் சரீரத்திலிருக்கமாட் டா. அமருக ராஜாவின் சரீரத்தில் பிரவேசிப்பதற்காக பகவத்பாத ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் தன் சரீரத்தை விட்டு வெளியேறிப்போனபோது அச்சரீரம் பிணம்போல வே ஆயிற்றென்பது வெகு பெயர்களுக்குத் தெரிந்த விஷ யம். ஸ்வப்ந காலத்திலோ தூங்கும் மனிதனுடைய சரீரத் தில் பிராணங்களுடைய சேஷ்டைகள் அதிகமாகவே காணப் படுகின்றன. ஆதலால், அக்காலத்தில் சரீரத்தைவிட்டு ஜீவன் வெளியேறிப் போவதில்லை யென்பதே உறுதி. ஆகி லும், விஸ்தாரமான வெளிப்பிரபஞ்சம் ஸ்வப்நத்தில் காணப் படுகின்றது. இந்த ஸ்வப்நப்பிரபஞ்சம் மனோவாஸனா சக்தி யினால் மனதுக்குள்ளாகவே ஜீவகர்மானுஸாரியாக ஈசுவரப் பிரேரணையின்பேரில் ஸ்ருஷ்டிக்கப்படுகின்றதென்றுதான் சொல்லவேண்டும். படுத்துக்கிடக்கிற ஸ்தூலதேகத்திலேயே ஸ்வப்நப் பிரபஞ்சத்தைப் பார்ப்பதாகச் சொல்லமுடியாது. ஷை தேகத்திலாவது அதின் நுட்பமான நாடிகளிலாவது பெரும் மலைகளும் தேசங்களுமில்லையென்பது திண்ணமே.

ஸ்வப்நத்துடன் கூடிய நித்திரையிலும் பாஹ்யமான இந்திரியங்கள் யாவும் அடங்கி வேலை செய்யக்கூடாமலிருப்பதாலும், மனதுமாத்திரம் ஸ்வப்நத்தில் வேலை செய்து வருவதாலும், மனோவிசிஷ்டனும் வாஸனாமயனுமான சிதாபாஸனே முன் சொல்லியபடி ஸ்வப்ந ஜீவனாகவும் ஸ்வப்ந ஜகத்தாகவும் இருவிதமாக விளங்குகின்றானென்பதே நிச்சயம். எப்படி இவ்விதமாக ஜாக்கிரத்கால காண்பானாகிய ஜீவசிதாபாஸன் ஒருவனே ஸ்வப்நகாலத்தில் காண்பானாகிய ஸ்வப்ந ஜீவனாகவும் காணப்படுகின்றதாகிய ஸ்வப்ந ஜகத்தாகவும் விளங்குகின்றானோ, அப்படியே உண்மையில் எப்போதும் ஒன்றாகயிருந்துவருகிற ஆத்மாவும் வியாவஹாரிக அவித்யா தசையில் ஜீவசிதாபாஸனாகவும் திருச்யப் பிரபஞ்சமாகவும் விளங்குவதாகச் சொல்லப்படுவது யுக்தி விரோதமில்லையென்றே வெளியாகும். ஆனால், யுக்தி விரோதமில்லாமல் சொல்லப்படுவதெல்லாம் கட்டாயமாக உண்மையாகவே யிருக்க வேண்டுமென்பது அவசியமில்லை. மேற்கண்ட ஸ்வப்ந திருஷ்டாந்தத்தினால் அத்வைதக் கொள்கைக்கு யுக்தியின் அனுஸரணையும் ஏற்பட்டிருப்பதாகமாத்திரம் சொல்லக்கூடுமே தவிர, யுக்தியினாலேயே ஷை கொள்கை ஸ்தாபிக்கப்பட்டிருப்பது போல் சொல்லக்கூடாது. ஆத்மா ஒன்றுதான் உள்ளது, மற்றதெல்லாம் தாத்காலிகத் தோற்றமே தவிர ஸத்தியமல்ல வென்பது வியாவஹாரிக தசையைக் கடந்து உண்மையான ஆத்மத்வநிலையிலிருப்பவருக்குத்தான் தெரியக்கூடுமேயல்லாது, அவித்யைக்குட்பட்ட ஸ்தானத்திலிருப்பவரால் அவ்வுண்மையை எவ்வித யுக்தியினாலும் கண்டு பிடிப்பதாவது ஸ்தாபிப்பதாவது ஸாத்தியப்படமாட்டாது. அதாவது, பரிமிதமான ஜீவ புத்தியினால்

அபரிமிதமான அகண்டாத்மாவின் தத்வத்தைப் பூர்ணமாக அறிவது எவ்வகையிலும் ஸாத்தியமில்லை. அது ஈசுவர வாக்காகிய சுருதியின் மஹாவாக்கியங்களால் மாத்திரம் வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றது. இப்படி சுருதியால் வெளியாகியிருக்கின்ற தத்வம் யுக்தி விரோதமில்லை யென்பதற்கு ஜீவத்வநிலையிலிருக்கிற மனிதன் மேற்குறிப்பிட்டபடி ஸ்வப்நதிருஷ்டாந்தத்தை உபயோகப்படுத்திக் கொள்ளலாம். இம்மட்டில்தான் இவ்விஷயத்தில் ஷை திருஷ்டாந்தம் உபயோகமுள்ளதாகும்.

4. ஸ்வப்நதிருஷ்டாந்தத்தில் ஒரு பெரும் கேள்விக்கிடமுண்டு. ஸ்வப்நம் கலைந்தவுடன் ஸ்வப்ந ஜீவன் ஜாக்கிரஜ்ஜீவனுடன் ஏகீபாவத்தையடைவதுமல்லாமல் ஸ்வப்ந ஜகத்து முழுவதும் மறைந்துவிடுகின்றது. ஸ்வப்நத்தில் காணப்பட்ட மற்ற ஜீவர்களும் இருந்தவிடம் தெரியாமல் போய்விடுகிறார்கள். ஜாக்கிரத்கால அனுபவங்களும் இப்படியே மித்யை யென்று சொல்லியது வாஸ்தவமானல், ஒரு ஜீவனுக்கு மோக்ஷமேற்படும்போது திருச்யப் பிரபஞ்சம் பூராவும் லயமாவதுந்தவிர மற்ற ஜீவர்களும் மறைவடைய வேண்டுமேயென்று கேட்கலாம். உண்மையிலோ ஒருவன் ஞானத்தைப்பெற்று மோக்ஷமடைவதாகச் சொல்லப்படுங் காலத்தில் மற்றவர்களின் ஸ்திதிகளிலாவது இவர்களுக்குள்ள பிரபஞ்சத் தோற்றங்களிலாவது வித்தியாஸம் யாதொன்றும் ஏற்படுகிறதில்லை. இப்படிக்கிருக்கையில் ஸ்வப்நதிருஷ்டாந்தம் எவ்விதம் சரியாகக்கூடும்? இந்த ஸந்தேஹம் நிவிருத்தியாகவேண்டுமானல் யதார்த்த தத்வத்தை கொஞ்சம் விவரமாய் தெரிந்துகொள்ளவேண்டிய தவசியமாகும். உண்மையில், ஜாக்கிரத் அனுபவங்கள் ஸ்வப்ந அனுபவங்களைப்போல் மித்யைதான். ஆகிலும், ஒரு ஜீவ

னுக்கு முக்தி ஸித்தித்தால் அவன் ஸம்மந்தப்பட்ட மட்டில் தான் பிரபஞ்சமும் மற்ற ஜீவர்களும் மறைவடைவார்களே யல்லாமல், இம்மற்ற ஜீவர்களின் பார்வையில் இம்மறைவுண் டாகாதென்பதே வாஸ்தவம். எந்த மனிதனுடைய நித்தி ரையில் ஸ்வப்நப்பிரபஞ்சம் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கின்ற தோ, அவனைவிட்டு நித்திரை விலகிவிட்டால் ஸ்வப்நத்தில் காணப்பட்ட ஸகலமும் பாக்கியின்றி மறைந்துவிடும். இப் படிக்கன்னியில், அவனுடைய நித்திரையும் ஸ்வப்நமும் தொடர்ந்தே நடந்துவரும்போது அந்த ஸ்வப்நத்தில் காணப்பட்ட மற்றொரு ஜீவன் அந்த ஸ்வப்நப்பிரபஞ்சத்தி லிருந்து தான் தப்பித்துக்கொள்ளும்படியான காரியங்களைச் செய்வதாகச் சொல்லி முயற்சித்து மறைந்து போய் விடக் கூடுமானால், அதினால் அந்த ஸ்வப்நத்தில் காணப்பட்ட மற்ற ஜீவர்களாவது பிரபஞ்சமாவது மறைந்துவிடக் கூடிய தல்ல. அவித்யைக்குட்பட்டிருக்கின்ற ஜீவனாகிய மனிதனு டைய ஸ்வப்நதிருச்யம் போல், ஜாக்கிரத்திருச்யம் பூராவும் ஒரே ஜீவனுடைய மனோவாஸனாகாரியமல்ல. இது மாயா பதியாயிருக்கின்ற ஸமஷ்டி ரூபியான ஈசுவரருடைய ஸங்கல் பத்தினால் ஏற்பட்டுள்ளது. எது வரையில் இப்படி மாயை யை ஸ்வீகரிப்பதின் மூலமாய் ஜகத்து தோன்றிக்கொண் டிருக்கவேண்டுமென்று ஈசுவரஸங்கல்பம் செய்யப்பட்டிருக் குமோ, அதுவரையில் அது தோன்றிக்கொண்டேயிருக்கும். இதைத்தான் கல்பமென்று சொல்லுகிறது. ஜீவனுடைய நித்திரை நீங்கிவிட்டால் ஸ்வப்நதிருச்யம் முழுவதும் நீங்கி விடுவதுபோல், ஈசுவரன் தன் ஸ்வாதீனத்திலிருக்கின்ற மாயையை உபஸம்ஹாரஞ்செய்து விட்டால் திருச்யப் பிரபஞ்சம் பூராவும் லயமடைந்து பிரளயம் ஏற்படுவதாகச் சொல்லப்படுகின்றது. ஆகையால், ஸ்வப்நதிருஷ்டாந்தத்

தில் சொல்லப்பட்டதுபோல், கல்பமத்தியில் எந்த ஜீவனு வது தனக்கு அவித்யையின் நிவிருத்தியுண்டாகும்படியான யத்தினங்களைச்செய்து தன் ஜீவத்வ நிலையை விட்டொழித்து மாயாதீதமான ஆத்மத்வ நிலையிலேயேயிருக்கும்படி செய்து கொண்டால் அந்த ஜீவன் ஸம்பந்தப்பட்டமட்டில் திருச்யப் பிரபஞ்சம் பூராவும் மற்ற ஜீவர்கள் எல்லோரும் பார் வைக்கு விஷயமாகாமல் மறைந்துவிடக்கூடும். ஒரு விதத் தில் இப்பிரபஞ்சத் தோற்றங்கள் யாவற்றும் ஈசுவரஸ்வப் நத்தோற்றங்களென்றே சொல்லலாம். ஆனல், ஜீவன் அவசனுக நித்திரையினுல் மயங்கி தன் நிலை தவறியிருப்பது போல், ஈசுவரன் மாயையினுல் மயங்கிப்போவதுமில்லை, நிலை தவறி நிற்பதுமில்லை. ஈசுவரன் ஸ்வதந்திரராக மாயையைப் கைக்கொள்வதற்குக் காரணமே ஜீவர்களுடைய கர்மங்கள் தான். ஜீவர்கள் அவரவர்களின் கர்ம பலன்களை அனுபவிப்ப தற்காகவே ஜகத்காரியங்கள் நடந்து வரும்படியாக மாயாவி யாயிருந்து ஈசுவரன் ஸகலத்தையும் செய்விக்கின்ருர். மாயா விஸ்தானத்திலிருக்கின்ற, அதாவது மாயை மூலமாய் பிரதி பிம்பித்துப்பிரகாசிக்கின்ற பிரம்மசைதன்யமாகிய ஈசுவரனை யும் சிதாபாஸனென்று சொல்லக்கூடும். ஆனல், அவர் ஸகல ஜீவர்களுக்கும் ஜகத்துக்கும் பொதுவாயுள்ள ஸமஷ்டி சிதாபாஸன். அவருடைய மாயாஸ்வீகரணத்தினுல் ஸ்வப்நம் போல் உண்டாகித் தோன்றிவருகிற திருச்யப் பிரபஞ்சத் தில் நாம் ஜீவர்களெல்லோரும் தோன்றிக்கொண்டிருக்கின் ருேம். நம்முடைய தனித்தனியான யத்தினங்களினுல் முன் சொல்லியபடி இப்பிரபஞ்ச ஸம்ஸாரக்கட்டிலிருந்து நாம் விடுதலையடைந்து விடலாம். இப்படி விடுதலையடையாதவர் கள் நடப்பு கல்பத்திலும் பின்வரும் கல்பங்களிலும் பலவித மான ஜன்மங்களையெடுத்து நானுப்பிரகாரமாகத் தோன்றிக்

கொண்டேயிருந்து சுகதுக்கங்களை அனுபவித்து வருவார்கள். பிரம்மம், ஈசுவரன், ஜீவன், ஜகத்து இந்நான்கின் தத்வங்களை கொஞ்சம் விபரமாய் தெரிந்துகொள்ளும்பொருட்டும், முன் குறிப்பிட்ட ஸந்தேஹம் முழுவதும் நிவிருத்தியாகும்பொருட்டும், இப்பால் ஒரு ஸ்தூல திருஷ்டாந்தத்தை யெடுத்துக்கொண்டு சற்று சோதித்துப்பார்ப்போம்.

5. ஓர் குளமிருப்பதாக மனவில் பாவித்துக்கொள்ள வேண்டும். இக்குளத்தில் மூன்று அடி ஜலம் இருக்கின்றது. குளத்தின் மத்தியில் மூன்றடி உயரமுள்ள பலவித பாத்திரங்கள் ஜலத்திற்குள் வைக்கப்பட்டிருக்கின்றன. இப்பாத்திரங்களிலும் ஜலம் பூர்ணமாயிருக்கின்றது. பாத்திரங்களின் மேல்வாய் மட்டங்களும் குளத்தின் ஜலமட்டமும் ஸமமாயிருக்கின்றன. குளத்திற்கு மேலுள்ள ஆகாசம் குள ஜலத்திலும் பாத்திரங்களிலுள்ள ஜலத்திலும் பிரதிபிம்பித்துத் தோன்றுகின்றது. வெட்ட வெளியாகிய ஆகாசம் பிரதிபிம்பிக்குமாவென்று ஸந்தேஹப்படவேண்டாம். குளத்தின் அருகாமையிலுள்ள தென்னமரங்கள் ஜலத்தில் பிரதிபிம்பிக்கும் போதும் மனிதனுடைய உருவம் பிரதிபிம்பிக்கும் போதும் இரண்டின் உயரதாரதம்மியமும் பிரதிபிம்பத்தில் காணப்படுகின்றது. இப்படியே 20 அடி உயரத்தில் பரந்து போகின்ற பக்ஷியின் பிரதிபிம்பத்தைக் காட்டிலும் 200 அடி உயரத்தில் பரந்துபோகின்ற பக்ஷியின் பிரதிபிம்பம் வித்தியாஸமாகவே தோன்றுகின்றது. அதாவது, பார்க்கப்படக்கூடிய வஸ்துக்கள் ஜலத்தில் பிரதிபிம்பிப்பதுமல்லாமல் அவைகளொன்றுக்கொன்றுள்ள இடை வெளியான ஆகாசமும் (space) அதில் பிரதிபிம்பிக்கின்றதென்பதில் ஸந்தேஹமில்லை. இந்தப்படி குள ஜலத்திலும் பாத்திரங்களிலுள்ள ஜலத்திலும் பிரதிபிம்பித்துக் காணப்படுகின்ற

ஆகாசம் வாஸ்தவ ஆகாசமல்ல; அது வெறும் தோற்றமே. உண்மையில் குளத்திலும், பாத்திரங்களிலும், ஜலத்திலும், எங்கும் ஊடுருவி வியாபித்திருக்கின்ற ஆகாசம் வாஸ்தவ ஆகாசம். குளம் பூராவும் ஆகாசத்தில் பிரதிஷ்டையை அடைந்திருக்கின்றது. ஆகாசத்தினுல் ஏற்பட்டிருக்கிற இடைவெளியில்தான் (in space) குளம் அமைக்கப்பட்டிருக்கின்றது. அன்றியும், சுருதியினுல் வெளியிடப்பட்டிருக்கிற பிரகாரம், ஆகாசதத்வத்திலிருந்தே வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவீ இவைகளின் தத்வங்கள் கிரமமாயுண்டாயிருப்பதால், ஆகாசதத்வமே குள ரூபமாகவும் பாத்திரங்கள் ரூபமாகவும் ஜல ரூபமாகவும் காணப்படுகின்றதென்றே சொல்லவேண்டும். மண்ணுல் செங்கலும், மண் செங்கல்களால் அறைகளும், அறைகளால் வீடும், அமைக்கப்பட்டிருந்தால், மண்ணே வீடு ரூபமாகத் தோன்றுகின்றதென்பதே வாஸ்தவம். மண்ணில்லாவிடில் அவ்வீடும் இராது. இதுபோல், ஆகாச தத்வமில்லாவிடில் பஞ்சபூதமயமான மேற்கண்ட மற்றவைகளும் இல்லாமல் போய்விடும். இவ்விதமாக குளம் முதலானதே ஆகாச காரியமாயிருப்பதால் ஸகலமும் ஆகாசமயமேயாகும். இந்தப்படி குளத்திற்கு இடங்கொடுத்திருக்கிறதும், அதற்கும் அதிலுள்ளவைகள் யாவற்றிற்கும் மூல உபாதான காரணமாக இருந்து வருகின்றதுமான, ஆகாசமே உண்மையான வியாபக ஆகாசம். அதாவது, இதுவே உள்ளும் புறமும் எங்கும் வியாபித்திருக்கிற ஆகாசம். இப்பிரகாரமாக, இரண்டுவித ஆகாசம் குளத்திலும் பாத்திரங்களிலும் இருக்கின்றது, ஒன்று வெறும் தோற்றமாகிய பிரதிபிம்ப ஆகாசம், மற்றொன்று வாஸ்தவமான வியாபக ஆகாசம். மேலே சொல்லியபடி, வியாபக ஆகாசமில்லாவிடில் குளம் முதலானது இருக்க

முடியாது. இவையில்லாவிடினும் வியாபக ஆகாசமிருக்கும். இப்படியே, பிரதிபிம்ப ஆகாசத்தின் ஸ்திதியும் வியாபாக ஆகாசத்தைப்பொருத்திருக்கின்றது. பிரதிபிம்ப ஆகாசம் இல்லாவிட்டாலும் வியாபாக ஆகாசமிருக்கும். இந்த ஸ்திதியில் "குள ஆகாசம்" என்று சொன்னால் குளவியாபக ஆகாசம் என்றாவது, குளப்பிரதிபிம்ப ஆகாசம் என்றாவது, அல்லது இரண்டும் சேர்ந்து என்றாவது அர்த்தமாகும். இவ்விதமாகவே, "பாத்திர ஆகாசம்" என்று சொல்லும் போதும் மூவகையாகவும் அர்த்தமாகும். இப்பால் அடியிற் கண்டபடி உபமானங்களை பாவித்துக்கொள்வோம்:—

ஆகாசம் = பிரம்மம் (சுத்தாத்மா).
குளம் = ஜகத்து (ஸமஷ்டி ஈசுவர சரீரம்).
பாத்திரம் = வியஷ்டி ஜீவ சரீரம்.
ஜலம் = அந்தக்கரணம்.
ஆகாசப்பிரதிபிம்பம் = சிதாபாஸன்.

| | |
|---|---|
| குள ஆகாசம், அதாவது குள வியாபக ஆகாசம் (பிரம்மம்) + குளப்பிரதிபிம்ப ஆகாசம் (ஸமஷ்டி சிதாபாஸன்) இரண்டும் சேர்ந்து | = ஈசுவரன். |
| பாத்திர ஆகாசம், அதாவது பாத்திர வியாபாக ஆகாசம் (பிரம்மம்) + பாத்திரப்பிரதிபிம்ப ஆகாசம் (வியஷ்டி சிதாபாஸன்) இரண்டும் சேர்ந்து | = ஜீவன். |

ஆகாசத்திலேயே குளம் உண்டாகியும் இருந்தும் வருவது போல், ஒவ்வொரு கல்பத்திலும் காணப்படுகின்ற ஜகத்தும் பிரம்மத்திலேயே உண்டாகி அதிலேயே பிரதிஷ்டையை அடைந்திருக்கின்றது. எவ்விதம் குளத்துக்கு வெளியிலும்

ஆகாசமிருக்கின்றதோ, அவ்விதமே ஜகத்துக்கு வெளியிலும் பிரம்மம் உண்டு. அதாவது, ஜகத்துக்கு அதீதமாயுள்ளதும் பிரம்மந்தானென்று தாத்பரியம். பிரளய காலத்தில் ஜகத்து ஈசுவரமாயையில் லயமாகிவிடுகின்றது. ஸச்சிதானந்த ரூபியான பிரம்மத்திற்கு அபின்னமாயிருக்கிற திரிகுணாத்மகமான மாயாசக்தியில் ஸத்வகுணப்பிரதான மாயா சக்தி மூலமாய் பிரகாசிக்கின்ற பிரம்மசைதன்யம் ஈசுவரனென்றும், ரஜோகுணப்பிரதான மாயையாகிய அவித்யை மூலமாய் விளங்குகின்ற பிரம்மசைதன்யம் ஜீவனென்றும், தமோகுணப்பிரதான மாயையாகிய தாமஸீ மூலமாய் காணப்படுகின்ற பிரம்மசைதன்யம் பிரகிருதியென்றும் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருப்பதில், ஸத்வகுணமாயை ஸமஷ்டி அந்தக்கரண ரூபமாகவும், அவித்யை வியஷ்டி அந்தக்கரண ரூபமாகவும், பரிணமைப்பட்டபின்புதான் ஈசுவரனும் ஜீவனும் வியக்தமாய் பிரகாசிப்பதாகத் தெரியவருவதால், அதாவது, ஸமஷ்டி அந்தக்கரணம் லயமாயிருக்குங் காலமாகிய பிரளயத்திலும், வியஷ்டி அந்தக்கரணம் லயமாயிருக்கின்ற ஸுஷுப்தி காலத்திலும், முறையே ஈசுவரனும் ஜீவனும் இருந்து வருவது வாஸ்தவமானாலும், அவர்களுக்கு அப்போது பிரகாசமிருப்பதாக வியாவஹாரிகரீதியில் சொல்ல இடமில்லாததை முன்னிட்டு, மேற்கண்ட உபமானத்தில் ஜலமாகிய அந்தக்கரணத்தையே பிரதிபிம்ப காரணமாகக் குறிப்பிட்டிருக்கிறதென்று அறிந்துகொள்ள வேண்டும். பிரதிபிம்பத்தன்மையாகிய சிதாபாஸத்தன்மையில் ஸமஷ்டி சிதாபாஸனாகிய ஈசுவரனும் வியஷ்டி சிதாபாஸனாகிய ஜீவனும் வெவ்வேறுதான், இருவர்களும் ஒன்றாகமாட்டார்கள். ஈசுவரத்வம் ஜீவத்வம் இரண்டும் சிதாபாஸத்தன்மையை ஒட்டியே ஏற்பட்டிருக்கின்றன.

குளப்பிரதிபிம்ப ஆகாசமும் பாத்திரப்பிரதிபிம்ப ஆகாசமும் ஒன்றாகமாட்டாது. ஆயினும், குளத்திலும் பாத்திரங்களிலும் வியாபக ஆகாசம் ஒன்றாகவேயிருக்கின்றது. இதுபோல் ஈசுவர-ஜீவர்களிடமும் அதிஷ்டானபூதமான பிரம்மம் ஒன்றாகவே யிருப்பதால், பிரம்மத்வ பார்வையில் ஈசுவரனும் ஜீவனும் ஒன்றே தவிர வெவ்வேறல்ல. [இங்கு திருஷ்டாந்தத்தில் பஞ்ச பூதங்களில் ஒன்றாகிய ஆகாசத்தை அவயவமுள்ளதாகச் சொல்லக்கூடியதாலும், இக்காரணத்தினால் பாத்திரத்தில் ஸம்பந்தப்பட்டிருக்கிற வியாபக ஆகாசம் குளவியாபக ஆகாசத்தின் ஒருபாகமென்று சொல்லக்கூடியதாலும், குளத்திலும் பாத்திரங்களிலுமுள்ள வியாபக ஆகாசம் ஒன்றுதான் என்றுசொல்லியிருப்பதை ஆக்ஷேபிக்க இடமிருந்த போதிலும், தார்ஷ்டாந்தத்தில் பிரம்மம் அவயவமில்லாததாகவும் அகண்டமாகவும் பிரிக்கப்படக்கூடாததாகவும் இருப்பதாக சுருதி மூலமாய் தெரியவருவதால், மேற்படி ஆக்ஷேபணை தார்ஷ்டாந்தத்தில் இருக்கக்கூடியதல்லவென்பது ஞாபகத்திலிருக்கவேண்டும்.] ஈசுவரனிடமும் ஜீவர்களிடமும் எங்கும் ஒரே பிரம்மம் ஸம்பூர்ணமாயிருக்கின்றதென்பதே உண்மை. மேலும், ஒரு பாத்திரத்தில் பிரதிபிம்பித்திருக்கிற ஆகாசத்திற்கு அப்பாத்திரத்தின் மாறுதலினாலும், அதிலுள்ள ஜலத்தின் கலக்கம் அசைவுதல் முதலானதாலும், வேறுபாடுகள் ஏற்படக்கூடும். இவ்வித வேறுபாடுகள் அந்தந்த பாத்திரங்களின் ஸ்தான பேதங்களினாலும் மேல்வாய்களின் ஆகிருதி பேதங்களினாலும் ஒவ்வொரு பாத்திரத்திலும் தனித்தனி விதமாகவே காணப்படலாம். இவ்வேறுபாடுகளின் ஸம்பந்தம் எங்கும் பொதுவாயிருக்கிற வாஸ்தவமான வியாபக ஆகாசத்திற்குக் கிடையாது. பந்தம், மோக்ஷம் இரண்டும் ஜீவ

(வியஷ்டி) சிதாபாஸனுக்குத்தான் ஏற்பட்டிருக்கின்றன. மோக்ஷமென்றால் ஜீவனுக்கு ஸம்ஸாரஹேதுவான ஜீவத் தன்மையைக்கொடுத்திருக்கிற சிதாபாஸத்வம், அதாவது, கேவல ஆத்மப்பிரதிபிம்பத்தன்மை நீங்கிப் போய் சுத் தாத்மத்வம் (பிரம்மத்வம்) மிஞ்சி நிற்பதென்று அர்த்தம். பிரதிபிம்பத்திற்கு ஸாதனங்களாயிருப்பவை நீங்கிப்போனால் பிரதிபிம்பமும் நீங்கிவிடும். அந்தக்கரணமும் அதின் காரண மாகிய அவித்யையும் இல்லாமல் போய்விட்டால் சிதாபாஸத் தோற்றமும் இருக்கமாட்டாது. முன் குறிப்பிட்டபடி ஒவ் வொரு பாத்திரத்திலும் தனித்தனியாகவே பிரதிபிம்ப ஆகா சத்தின் வேறுபாடுகள் இருப்பதுபோல், ஒவ்வொரு சரீரத் திலும் தனித்தனி வேறுபாடுகளுடன் கூடிய ஜீவசிதா பாஸன் இருந்து வருவதில், ஒரு ஜீவனுடைய சிதாபாஸத் வம் மறைந்து போனால் மற்ற ஜீவர்களின் சிதாபாஸத்வம் மறைவடைந்து விடாது. எப்படி சிதாபாஸத்தன்மையில் ஈசுவரனும் ஜீவனும் வெவ்வேறென்று சொல்லப்பட்டதோ, அப்படியே அத்தன்மையில் ஜீவர்களும் பரஸ்பரம் வெவ் வேறுதான். எவ்விதம் குளத்திலுள்ள பாத்திரங்களில் ஒரு பாத்திரம் உடைந்துபோய் அந்த பாத்திரத்தில் காணப் பட்ட ஆகாசப்பிரதிபிம்பம் மறைந்துவிட்டதானால் அக் குளத்திலுள்ள மற்ற பாத்திரங்களில் காணப்படுகின்ற ஆகா சப்பிரதிபிம்பங்களுக்கு மாறுதல் வந்துவிடாதோ, அவ்வித மாகவே ஒரு ஜீவனுக்கு மோக்ஷம் ஏற்பட்டால் மற்ற ஜீவர் களுக்கும் மோக்ஷம் வந்துவிடமாட்டாது. குளமே அழிந்து போனால்தான் அதிலுள்ள எல்லா பிரதிபிம்பாகாசங்களும் போய்விடும். இதுபோல் தாத்காலிகமான மஹாப்பிரளயத் தில்தான் ஸகல ஜீவத்தோற்றங்களும் தாத்காலிகமாக மறை வடைந்து ஈசுவரமாயையில் அடங்கிவிடக்கூடும். மற்றக்

காலங்களில், அதாவது, கல்ப காலங்களில் அந்தந்த ஜீவர்களுடைய பந்தங்களும் மோக்ஷங்களும் தனித்தனிதான். ஆகையால், முன் நான்காவது பாராவின் ஆரம்பத்தில் ஸ்வப்ந திருஷ்டாந்தத்தை முன்னிட்டுக் கேட்கப்பட்டபடி ஒரு ஜீவனுக்கு முக்தியேற்படுங்காலத்தில் திருச்யப் பிரபஞ்சம் முழுவதும் லயமாவது மன்னியில் மற்ற எல்லா ஜீவர்களும் மறைந்துபோகவேண்டுமே யென்று சங்கித்தது சரியல்ல வென்பது ஸித்தம்.

6. ஜாக்கிரத்திருச்யப் பிரபஞ்சத்தோற்றங்களை ஒரு விதத்தில் ஈசுவரனுடைய ஸ்வப்நத்தோற்றங்களாக பாவித்துக்கொள்ளலாமென்று முன் சொல்லப்பட்டது. அதாவது, எப்படி ஸ்வப்நத்தோற்றங்கள் உண்மையில்லையோ, அப்படியே ஸகல ஜகத்தோற்றங்களும் வாஸ்தவமில்லையென்று தெரிந்துகொண்டே ஸாக்ஷி நிலைமையில் ஈசுவரன் பார்த்துக்கொண்டிருக்கிறார். ஈசுவரனுடைய பார்வையும் ஞானியுடைய பார்வையும் ஒரேவிதமென்று சொல்லலாம். இப்பார்வை சிதாபாஸப்பார்வையல்ல. ஈசுவரனிடத்திலும் ஞானத்தை அடைந்திருக்கிற ஜீவனிடத்திலும் சிதாபாஸத்தன்மையும் கூடவே யிருப்பதாக எண்ணப்பட்டபோதிலும் எப்போதும் சிதாபாஸத்தன்மை ஈசுவரனுக்கு ஸ்வாதீனப்பட்டு அடங்கியிருப்பதாலும், ஞானியாயிருக்கிற ஜீவனுடைய சிதாபாஸத்தன்மை ஞானக்னியால் கொளுத்தப்பட்டு வீர்யமில்லாமல் போய்விட்டபடியாலும், ஷை இருவர்களுடைய திருஷ்டியும் சிதாபாஸ திருஷ்டியல்ல, அது ஸாக்ஷி மாத்திர திருஷ்டியே, அதாவது, ஆத்ம திருஷ்டியேயாகும். ஈசுவரன் எப்படியோ, அப்படியே ஞானியும் எப்போதும் ஆத்மத்வ நிலையிலேயே உள்ளவர். இப்படி ஆத்மத்வ நிலையிலிருக்கின்ற ஞானியின் ஸ்திதி வேறு, ஜீவத்வ நிலையிலிருந்து

கொண்டு ஞானத்திற்காக பாடுபடுகின்ற தார்மிகரின் ஸ்திதி வேறு. அதாவது, ஞானீ ஆத்மாவே தவிர வேறல்ல; தார்மிகரோவெனில் சிதாபாஸனே. எப்படி நித்திரையில் இரண்டுபட்டுள்ள சிதாபாஸனுடைய ஏகதேசப்பிரதிபிம்பாம்சமாக ஸ்வப்நஜீவன் விளங்குகின்றானோ, அப்படியே அவித்யை மூலமாக பின்னப்பட்ட ஆத்மப்பிரதிபிம்பாம்சமாக சிதாபாஸன் விளங்குகின்றான். ராஜா தூங்கும் போது துஸ்ஸ்வப்நமேற்பட்டு தாரித்திரிய கஷ்டங்களை அனுபவிப்பதாக ராஜ-ஜீவாம்சமாகிய ஸ்வப்நஜீவன் எண்ணிக்கொண்டிருக்கையில் அவனிடம் அந்த ஸ்வப்நத்திலேயே யாராவது மஹாபுருஷன் வந்து "நீ உண்மையில் மஹாராஜாவேயல்லாமல் தரித்ரனல்ல, நித்திராமோஹத்தினால் உன்னிடம் தாரித்திரிய கஷ்டம் வந்திருப்பதுபோல் தோன்றுகின்றது, நித்திரை விலகிவிட்டால் உனக்கு ஸ்வதஸ்ஸித்தமான மஹாராஜத்தன்மை தானாகவே விளங்கும், நித்திரையை விலக்கும் உபாயம் இதுவே" என்று சொல்லி ஷை உபாயத்தை அந்த ஜீவனுக்கு வெளிப்படுத்தியதின்பேரில் அவன் அவ்வுபாயத்தைக் கைக்கொண்டு ஆசரித்து வருவதானால் எவ்விதமோ அவ்விதமாகவே தார்மிக சிதாபாஸனும் குரு-வேதாதி-ஆப்த வாக்கியங்களில் நம்பிக்கையை வைத்து தன்னுடைய அவித்யையை விலக்கிவிடுவதற்கும், தனக்கு அதிஷ்டானமாகிய சுத்தாத்மாவுடன் ஏகீபாவத்தை அடைந்து ஸச்சிதானந்த ஸ்வரூபியாகவே யிருந்து வருவதற்கும் உபாயமாக தர்மயத்தினங்களைச் செய்து வருவதாக எண்ணவேண்டும். இவ்வித யத்தினங்களினால் அவித்யையாகிய மஹாநித்திரை விலகிப் போய்விட்டால், அந்த தார்மிகருடைய ஜீவத்வமாகிய பிரதிபிம்பத்தன்மையும் நீங்கி கேவலாகண்டாத்ம ஸ்வரூபியாகவே அவர் மிஞ்சி நின்றுவிடுவார். ஸாமான்ய ஸ்வப்நமத்தியில்

விழிப்புண்டாகி ஸ்வப்ந கஷ்டங்கள் வாஸ்தவமில்லை யென்று தெரிந்துகொண்ட பிறகும் அந்த ஸ்வப்நவாஸனையினால் அதுவே கொஞ்சம் தொடர்ந்து காணப்படுவதுபோலும் தோன்றக்கூடும். இப்படித் தொடர்ந்து தோன்றுங்காலத்தில் தன்னுடைய நிஜஸ்வரூபஜ்ஞானமும் கூடவே யிருந்து வருவதினால் ஷை தோற்றங்களால் துக்க முண்டாகாமலிருந்துவிடும். இப்படி விழிப்புடன் கூடியும் ஸ்வப்ந துக்க மில்லாமலு மிருக்கிறவன் ஜாக்கிரத் ஜீவனேயல்லாமல் ஸ்வப்ந ஜீவனல்ல. இதுபோல், அவித்யை நீங்கி ஸம்ஸார துக்கங்களும் மனதைவிட்டு விலகிப்போய் ஆனந்தானுபவத்துடன் கூடியிருக்கிற ஞானீ ஆத்மாவே யல்லாமல் சிதாபாஸனல்ல. நித்திரை நீங்குவதற்கு முன்பாக முன் சொல்லியபடி நித்திரையை விலக்க யத்தனிப்பவன் ஸ்வப்ந ஜீவனே தவிர ஜாக்கிரத் ஜீவனில்லை யென்றதுபோல், அவித்யாநிவிருத்தியின் பொருட்டு சாஸ்திர விஹிதமான தர்ம மார்க்கங்களில் பிரயத்தினங்களைச் செய்து வருகிற தார்மிகரும் சிதாபாஸனே தவிர சுத்தாத்மா அல்ல.

7. இங்கு ஓர் சங்கை உண்டாகக்கூடும். நித்திரையிலிருந்து விழிப்பு ஏற்பட்டவுடன் ஸ்வப்ந ஜீவனும் ஸ்வப்ந ஜகத்தும் மறைந்துபோய் விடுவது போல், ஞானத்தின் உற்பத்தியினால், அதாவது, அவித்யை விலக்கப்பட்டுவிட்டால் அதில் பிரதிபிம்பித்திருந்த ஜீவனும் நஷ்டமாகவே போய் விடுவதாகத் தெரியவருவதால், ஞானத்தினால் தன்னுடைய ஹானியே உண்டாகக்கூடியதாக தார்மிகரும் எண்ணக்கூடும். அதாவது, ஞானத்தின்பொருட்டு யத்தினஞ்செய்பவரும் சிதாபாஸ ரூபியுமான தார்மிகர் ஞானமேற்பட்ட பின்பு மறைந்துவிடுகிறாரென்றும் அப்போதுள்ள ஞானீ சிதாபாஸனல்லவென்றும் ஆத்மாவேயென்றும் சொன்னால்,

ஸ்வநாசமே ஞானத்தின் பலனென்றுதானே வெளியாகிற தென்று தார்மிகர் கேட்கலாம். இவ்விடத்தில் பின் சொல் லப்படுவதை அறிந்து கொள்ள வேண்டும். ஆத்மா வேறு சிதாபாஸன் வேறு என்று சொல்லுவதினால், ஆத்மத்வ ஸம் பந்தமில்லாமலே சிதாபாஸன் தனியாயிருப்பதாக அர்த்த மில்லை. இப்படித் தனிப்பட்டிருக்கவும் முடியாது. ஜாக் கிரத் ஜீவன் வேறு அவனுடைய அம்சந்தான் ஸ்வப்நஜீவன் என்றால் ஜாக்கிரத் ஜீவனில்லாமல் ஸ்வப்ந ஜீவன் இருக்கலா மென்று சொல்லக்கூடாது. சந்திரன் வேறு கண்ணாடியில் தோன்றுகின்ற சந்திரப்பிரதிபிம்பம் வேறு என்றால் சந்திர னுடைய இருப்பும் ஸான்னித்தியமும் இல்லாமலே பிரதி பிம்பத்தின் இருப்பு இருக்கலாமென்று எண்ணக்கூடாது. ஸ்வப்ந ஜீவனுடைய இருப்பு ஜாக்கிரத் ஜீவனுடைய இருப் பைப் பொருத்து நிற்கின்றது. கண்ணாடியிலுள்ள பிரதி பிம்பத்தின் இருப்பு சந்திரனுடைய இருப்பைப் பொருத் திருக்கின்றது. இவைகளுக்கு ஸ்வதந்திரமான தனியிருப் புக்கிடையாது. இப்படியே, சிதாபாஸனுடைய இருப்பும் ஆத்மாவின் இருப்பைச் சார்ந்தேயிருக்கின்றது. தவிரவும், சந்திர பிம்பப்பிரதிபிம் பதிருஷ்டாந்தத்திற்கும் ஆத்ம-சிதா பாஸவிஷயத்திற்கும் ஒரு பெரும் வித்தியாஸமிருப்பதையும் கவனிக்க வேண்டும். சந்திரன் கண்ணாடிக்கு வெளியில் வெகு தூரத்திலிருக்கின்றது. சந்திரனுடைய ஸான்னித் தியம் கண்ணாடிக்கு ஏற்படாமலுமிருந்துவிடக்கூடும். இப் படி ஸான்னித்தியம் இல்லாவிடில் பிரதிபிம்பமும் இல்லா மல் போய்விடும். அதாவது, கண்ணாடியிருந்தும் சந்திரனு மிருந்துங்கூட பிரதிபிம்பம் ஏற்படாமலிருக்கலாம். ஆத் மாவுக்கும் சிதாபாஸனுக்குமுள்ள ஸம்பந்தவிஷயம் இப் படியல்ல. ஸகலத்திற்கும் அதிஷ்டான வஸ்துவாகவே

ஆத்மா இருப்பதால், அவித்யையும் அவித்யாவிசிஷ்டனுகிய ஜீவனும் ஆத்மாவிடத்திலேயே தோன்றுவதாகத்தான் சொல்லவேண்டும். வாஸ்தவத்தில் ஜீவசிதாபாஸன் பிரதி பிம்பமாத்திரனேயாளுலும், அப்பிரதிபிம்பம் ஏற்படுகிற இடத்தில் கூட பிரம்மமும் (வியாபக ஆகாசத்தைப்போல்) ஸ்வதஸ்ஸித்தமாக எப்போதும் இருந்துகொண்டிருப்பதா லும், இந்த வியாபக வஸ்து இல்லாமல் பிரதிபிம்பத்திற்கே அவகாசமுண்டாகக்கூடாததாலும், வியாபக வஸ்துவின் இருப்பும் பிரதிபிம்பத்தின் இருப்புடன் சேர்ந்தேயிருக்கின் றது. பெரும் அக்னிக்குழியின் மத்தியில் ஒரு சிறு சக்கிரா காரமான இரும்புத்துண்டு கிடந்தால், அந்த துண்டு இரும் பில் பிரகாசிக்கின்ற அக்னியும் சக்கிராகாரமாகத் தோன்று வதுபோல், ஸர்வாதிஷ்டானப் பொருளாகிய ஆத்மாவும் அதிலேயே யிருப்பதாகத்தோன்றுகின்ற அவித்யையின் மூல மாய் பிரகாசிக்கும்போது அவித்யையின் வக்கிராதிகளுட னேயே யிருக்கிற சிதாபாஸனுகக் காணப்படுகிறார். ஆகை யால், சிதாபாஸன் ஆத்மாவுக்கு வெளிப்பட்டவனல்ல. ஆத் மத்வ ஸம்பந்தமில்லாமல் சிதாபாஸனுக்கு இருப்பே இருக்க முடியாது. எப்படி பாத்திர ஜலத்தில் பிரதிபிம்பித்துக் காணப்படுகின்ற ஆகாசத்தோற்றத்திலும் உண்மையான பாத்திரஜல வியாபக ஆகாசம் கூடவே இருந்துகொண் டிருக்கின்றதோ, அப்படியே சிதாபாஸனிடத்திலும் வாஸ்த வமான அதிஷ்டான ஆத்மத்தன்மை சேர்ந்து இருந்து கொண்டிருக்கின்றது. ஆகிலும், இரும்பின் சக்கிராகாரத் தன்மை பிரதானமாய் சோபிப்பதுபோல், ஆத்மத்வம் அடங்கி நிற்பது போலிருந்து அவித்யாவிசிஷ்டத்வமே, அதாவது ஜீவத்வமே, மேலிட்டுக் காணப்படுவதால், சிதா பாஸன் விளங்குவதாகச் சொல்லப்படுகிறது. மேலான

நிவிருத்தி தர்மாசரணையினால் ஞானப்பியாஸம் பலித்துவிடு வதின் பேரில் சிதாபாஸத்தன்மைக்கு ஹானி ஏற்பட்டால் உண்மையில் ஸ்வஸ்வரூபபூதமான ஆத்மத்தன்மைக்குக் குறைவுவந்துவிடாது. ஆகையால், ஞானமேற்பட்ட பின்பு ஆத்மாவே ஞானிரூபியாக விளங்குகின்றார், சிதாபாஸன் மறைந்துவிடுகின்றான், என்று சொல்லுவதினால் ஸ்வநாசமே ஏற்படுமோவென்ற ஸந்தேஹத்திற்கும் பயத்திற்கும் கொஞ்சமேனும் காரணமில்லையென்று தெரிந்துகொள்ளவேண்டும்.

8. ஆத்மத்வ நிலையிலேயே யிருந்து வருகின்ற ஞானியின் உண்மையான ஸ்திதியை அஜ்ஞானிகள் அறிந்துகொள்ள சக்தர்களல்ல. இப்படியே ஸாமான்ய தர்மங்கள் விசேஷ தர்மங்கள் இவ்விரண்டையும் ஆசரித்து வருகின்ற தார்மிகரின் ஸ்திதியை ஸாமான்ய தர்மங்களை மாத்திரம் ஆசரித்து வருபவரால் நன்கு தெரிந்துகொள்ளமுடியாது. இதுபோலவே, ஸாமான்ய தர்மங்களைக்கூட கைக்கொள்ளாமல் மிருகத்திற்கு ஸமானமாயிருந்துவருகிற மனுஷ்யாதமன் ஸாமான்ய தர்மங்களை மாத்திரம் ஆசரித்து வருபவருடைய யோக்கியதையைக்கூட அறிந்துகொள்ள சக்தனாகமாட்டான். இப்படிப்பட்ட பலவித சக்திக்குறைவுகளினாலேயே மனிதர்களுக்குள் கொள்கைகளின் விஷயமாக ஒருவருக்கொருவர் அடிக்கடி வீண் வாதங்கள் நடந்துகொண்டிருக்கின்றன. உலகத்தில் காணப்படுகின்ற மதங்களுக்குள் பரஸ்பர மேற்படுகிற த்வேஷங்களுக்கும் சச்சரவுகளுக்கும் இதுவே ஒரு முக்கிய காரணம். அவரவர்களின் நிலைமை இன்னதென்று தெரிந்துகொண்டுவிட்டால், மனிதர்களுக்குள் காணப்படுகின்ற தர்க்கக்ஷிகள் அனேகமாய் மறைந்துவிடக்கூடியவை. ஸாமான்ய தர்மங்கூட (Ordinary Mora-

lity) உண்டென்ற விபரமே தெரியாத காட்டு மனிதனிடம் "மற்றவருக்கு தீங்கு செய்யக்கூடாது" என்று சொன்னால் இது சரியென்று அவனுடைய புத்தியில் ஏறமாட்டாது. சொல்லுகிறவர் ஏதோ பிதற்றுகிறார் என்றுதான் அவனுடைய மனஸில் படும். மனிதமாம்ஸத்தையே தின்று வருகிற ஒரு கானிபலிடம் "நீ உன் பெண்சாதியையே கொன்று தின்னலாமா" என்று ஒரு கிருஸ்துவப்பாதிரி கேட்டதற்கு அவன் "ஏன், பெண்சாதியின் மாம்ஸமானால் ருசிக்குறைவுண்டா" என்று பதில் கேட்டதாக ஓரிடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி மிருகப்பிராயமாயுள்ள மனிதர்களிடம் மிகவும் கீழான ஸாமான்யதர்மாசரணையைக்கூட ஏற்படுத்துவது சிரமமான காரியம். இவ்விஷயத்தில் ஆபிரிகா அமெரிகா கண்டங்களில் கானிபல் முதலான கீழ்ஜனங்களை சீர்திருத்துவதற்காக கிருஸ்துவப் பாதிரிகள் எடுத்துக்கொண்டிருக்கிற அபரிமிதமான சிரமம் மிகவும் மெச்சத்தகுந்தது. கீழ்ப்படிகளிலிருந்து வருகிற ஜனங்களிடம் மேலான ஸாமான்ய தர்மங்களையே போதிப்பது பிரயோஜனப்படாது. அந்தந்த ஜனங்களின் தத்கால நிலைமைக்கு அடுத்த மேல்படிக்கு ஸம்பந்தப்பட்ட தர்மங்களையெடுத்துசொல்லி உபதேசித்தால்தான் அவர்கள் அவைகளை சிரமப்பட்டுத் தெரிந்துகொண்டு ஆசரணைக்குந் கொண்டுவரக்கூடும். இப் பரத கண்டத்தைத் தவிர மற்ற எல்லா தேசங்களிலும் ஸாமான்ய தர்மங்களே குறைவுபட்டுப் போயிருப்பதால், அங்கு அவ்வித தர்மங்களையே ஊர்ஜிதத்திற்குக்கொண்டு வரும்பொருட்டு அந்தந்த தேசங்களுக்கும் ஜனங்களின் நிலைமைகளுக்கும் தக்க விதங்களில் பலவாறாக மதங்கள் உண்டாகி வந்திருக்கின்றன. ஸ்ரீ புத்தர், கிருஸ்து முதலான மதப்பிரவர்த்தகர்கள் ஸாமான்ய தர்மங்களின் ஞானத்திலும்

ஆசரணையிலும் உத்தமத் தேர்ச்சியுள்ளவர்கள். ஸாமான்ய தர்மங்களுக்குமேல் வேறு தர்மங்கள் உண்டென்ற விபரத்தை அறியக்கூடாத ஸ்திதியிலிருப்பவர்களுக்கு பௌத்த மதம், கிருஸ்துவமதம் முதலானதுகளில் உறுதியாய் பற்றுதல் ஏற்படுமென்பதில் ஸந்தேஹமில்லை. ஷை மதப்பிரவர்த்தகர்களின் வரலாறுகளைக் கேட்டால் ஸாமான்ய தர்மங்களே அவர்கள் ரூபமாய் உருவெடுத்து வந்ததாகவே வெளியாகும். பெரும்பாலும் இவ்வித மஹான்களுடைய மதப் பிரவிருத்திகளில் உலகத்தில் ஹிந்துவில்லாதவர்களுடைய உத்தம ஜீவத்தன்மை பொருத்து நிற்கின்றது. இவ்வுத்தம ஜீவத்தன்மையை (Soul perfection) அடைவதே அவர்களுக்கு நற்கதி (Salvation) என்று சொல்லப்படுகின்றது. முன் பாகங்களில் விவரித்திருக்கிற பிரகாரம் ஸாமான்ய தர்மங்களின் ஆசரணையினுல்தான் மனிதனுக்கு மனிதத்தன்மையே ஸித்திக்கின்றது. ஆனுல், இந்த ஆசரணையினுல்மாத்திரம் மோக்ஷத்தை அடைவது, அதாவது, ஜீவத்தன்மையை விலக்கிக்கொண்டு ஆத்மத்தன்மையிலேயே யிருந்து வருவது, ஸாத்தியப்படமாட்டாது. இவ்வித மோக்ஷத்தை அடையவேண்டுமானுல் ஸாமான்ய தர்மங்களுடன்கூட ஷை மோக்ஷத்திற்கு ஸாதனங்களென்று வேதத்தில் குறிப்பிடப்பட்ட விசேஷ தர்மங்களையும் ஆசரித்துவரவேண்டும். முன் பல தடவை காட்டியபடி ஹிந்துக்களுக்குள்தான் விசேஷ தர்மங்கள் நடந்தேறி வருகின்றன. அனுதியான ஹிந்துமதத்தில் இவ்விசேஷ தர்மங்களிருந்து வருவதைப் பார்த்துவிட்டு உலகத்திலுள்ள புதுமதங்களிலும் அனுஷ்டானங்கள், பூஜைகள், ஜபங்கள், உபவாஸங்கள், விரதங்கள் முதலான சிற்சில ஆசரணைகளை ஒரு விதமாய் ஜனங்கள் சொந்தமாய் ஏற்படுத்திக்கொண்டிருக்கிறுர்கள். மனிதனு

லேயே ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட இவ்விசேஷ ஆசாரணை கள் அததற்குள்ள ஸாமான்ய நன்மைகளைக் கொடுக்கக்கூடிய வைகளானாலும், அவைகள் மோக்ஷத்திற்கு ஸாதனமான விசேஷ தர்மங்களாகிவிடமாட்டா. உண்மையான மோக்ஷ ஸ்வரூபம் எந்த வேதத்தினால்மாத்திரம் வெளியிடப்பட் டிருக்கின்றதோ அவ்வேதத்திலேயே அந்த மோக்ஷத்தை அடைய ஸாதனங்களென்று எவை வெளியிடப்பட்டிருக் கின்றனவோ அவைதான் விசேஷ தர்மங்களாகக் கூடியவை கள். வர்ணாசிரமதர்மங்கள் இவ்விசேஷ தர்மங்களில் முக்கிய மானவை. மோக்ஷமே ஹிந்துக்களுக்கு பரமபுருஷார்த்தமா யிருக்கிறபடியாலும், மோக்ஷந்தான் பரம புருஷார்த்த மென்ற விபரமே மற்றவர்களுக்குத் தெரியாததினாலும், மேற்சொல்லியபடி விசேஷ தர்மங்கள் ஹிந்துக்களைத் தவிர மற்றவர்வளுக்குக் கிடையாதென்பதே உண்மை. ஆகை யால், ஹிந்துக்களுக்குள் ஸாமான்ய தர்மம் விசேஷ தர்மம் இரண்டும் யாரால் கிரமப்படி ஆசரிக்கப்பட்டு வருகின்றன வோ அவரே தார்மிகராவார். விசேஷ தர்மத்தைக்கைக் கொள்ளாமல் பாஷண்டராயிருந்துகொண்டு ஸாமான்ய தர் மத்தை மாத்திரம் ஆசரிப்பவர் ஹிந்துப்பார்வையில் மிகவும் கீழான ஸ்திதியிலுள்ளவர். விசேஷ தர்மத்துடன் சேர்ந்த ஸாமான்ய தர்மத்திற்குத்தான் ஹிந்துக்களுக்குள் மதிப் புண்டு.

9. ஸாமான்ய தர்மத்துடன் சேராத விசேஷ தர்ம மும் நிந்திக்கப்படத்தகுந்தது. ஸ்ாமான்ய தர்மத்தினால் மனிதத்தன்மை லபித்திருந்தால்தான், அதின்பேரில் விசேஷ தர்மத்தினால் காலக்கிரமத்தில் சுத்தாத்மத்தன் மையை ஸாதித்துக் கொள்ளலாம். முன் மூன்றாவது பாகத்தில் காட்டியபடி ஸாமான்ய தர்மாசரணையினால் ஸம்

ஸாரப்பிரவாஹத்தில் கீழே ஆழ்ந்து போகாமல் நீர்மட்டத்தில் மிதந்திருக்கத் தெரிந்து கொண்டிருந்தால்தான் அதின் பேரில் விசேஷப்பிரயத்தினங்களால் நீஞ்சிப்போய் கரை யேறி ஸம்ஸாரத்திலிருந்து மோசனத்தை அடையலாம். ஜலத்திற்குள் முழுகி மூச்சு முட்டிப்போகாமல் மேலே மிதந்திருக்கவே தெரிந்துகொள்ளாதவருக்கு நீஞ்சிப்போவது எப்படி ஸாத்தியப்படாத விஷயமோ, அப்படியே ஸாமான்ய தர்மத்தைக் கைக்கொள்ளாதவர் விசேஷ தர்மத்தை மாத்திரம் ஆசரித்து நற்கதியை அடையவே முடியாது. விசேஷ தர்மத்துடன் சேராத ஸாமான்ய தர்மத்திற்காவது மனிதத் தன்மை வஸித்திக்கிறதான நன்மையாவது பலனைக்கூடும். ஸாமான்ய தர்மத்துடன் சேராத விசேஷ தர்மத்திற்கு யாதொரு வீர்யமுங் கிடையாது. இக்கலியுகம் பிறந்த பிறகு, இப்பரதகண்டத்தில் பல விடங்களில் அனேக கர்மடர்கள் சில விசேஷ தர்மாசரணைகளில் மாத்திரம் புத்தியைச் செலுத்திக் கொண்டு வைராக்கியம், பூததயை முதலான ஸாமான்ய தர்மாசரணைகளிலிருந்து விலகி யிருந்தபடியால், ஸ்ரீ புத்தர் அவதரித்து ஸாமான்ய தர்மங்களே ஆசரிக்கப்பட வேண்டியவையென்று உபதேசித்தார். ஸாமான்ய தர்மங்களிலிருந்து விலகிப்போய் இருவித தர்மங்களையும் கெடுத்துக் கொள்வதைவிட விசேஷ தர்மங்களை விட்டுவிட்டு ஸாமான்ய தர்மங்களையாவது ஜனங்கள் கைக்கொள்ளட்டுமென்று உத்தேசித்து ஸ்ரீபுத்தர் விசேஷ தர்மங்களைக் கண்டித்துக்கொண்டும், ஸாமான்ய தர்மங்களே முக்கியமென்று வற்புறுத்திக்கொண்டும், ஜனங்களை ஸாமான்ய தர்ம மார்க்கத்தில் மறுபடியும் ஸ்தாபித்தார். இக்காரியம் ஒருவிதத்தில் ஆர்ய மதத்திற்கு அனுகூலமாயிருந்தபடியால் ஸ்ரீ புத்தரை விஷ்ணுவின் அவதாரமாகவே ஹிந்

துக்கள் பாவித்தார்கள். ஆகிலும், ஸ்ரீபுத்தர் விசேஷ தர்மங்களைக்கூடாதென்று கண்டித்தது வேத விருத்தமாகையால், அவர் மற்றும் சில விஷயங்களிலும் சுருதிக்கு எதிரிடையாக ஸ்தாபிக்க யத்தனித்த பௌத்த மதத்தை ஹிந்துக்கள் ஒப்புக்கொள்ளாமல் நிராகரித்து விட்டார்கள். பௌத்த மதம் இப்பாரதகண்டத்தில் வேர் பிடித்துத் தங்கியிருக்க முடியாமல் போனாலும், அது சைனு, பர்மா, ஸயாம், போர்ணியோ, ஜப்பான் முதலான வெளிதேசங்களில் பரவி அங்கு வேர் பிடித்து ஓங்கி வளர்ந்திருக்கின்றது. ஹிந்து தார்மிகர்களுக்குள்ளாக விசேஷ தர்மங்களுடன் எப்போதும் சேர்ந்திருக்கவேண்டிய ஸாமான்ய தர்மங்களுக்கு உஜ்ஜீவனமும், ஸாமான்ய தர்மாசரணைக்கு மாத்திரம் அதிகாரிகளான ஜனங்களை அடங்கிய வெளி தேசங்களில் ஒரு மத ரூபமாக ஸாமான்ய தர்மங்களின் உறுதியான ஸ்தாபனமுமே ஸ்ரீ புத்தரின் உத்தேசமாயிருந்திருக்கவேண்டுமென்று தோன்றுகின்றது. பகவானுடைய அவதாரமென்பது வாஸ்தவமாயிருக்கக் கூடுமானல், ஸ்ரீ புத்தரே விசேஷ தர்மங்களைக் கண்டிக்கலாமாவென்று ஆச்சரியப்படவேண்டாம். ஒரு விஷயத்தை வற்புறுத்திச் சொல்லும் போது அதற்கு அன்யமாயிருப்பதைக் கண்டிப்பதும் அவ்வற்புறுத்தலில் தாத்பரியமாகுமே யல்லாது மற்றதின் கண்டனத்தில் தாத்பரியமாகாது. யோக சாஸ்திரத்தில் யமம், நியமம் என்று முதல் இரண்டு அங்கஸாதனங்கள் சொல்லப்பட்டிருப்பதில், யமம் இல்லாமல் நியமம் பிரயோஜனப்படாதாகையால், நியமத்தை ஆசரிக்காமல் விட்டுவிடலாம், யமத்தை விடக்கூடாது என்று கண்டிருப்பதற்கு யமத்தின் முக்கியத் தன்மையில் தாத்பரியமேயல்லாமல் நியமத்தின் விஸர்ஜனத்தில் தாத்பரியமாகாது. இப்படியே, ஸ்ரீ குமாரிலபட்

டர் ஸாக்ஷாத் ஞான பண்டிதரான ஸ்ரீ ஸுப்பிரம்மண்ய ருடைய அவதாரமாகவே யிருந்தபோதிலும், அவர் அவதரித்தகாலத்தில் பௌத்தமதப்பிரசாரத்தினுல் ஸத்கர்ம மார்க்கம் ஆசரிக்கப்படாமல் கெட்டுப்போயிருந்ததில் அம் மார்க்கத்தை மறுபடியும் ஊர்ஜிதத்திற்குக் கொண்டுவரும் பொருட்டு ஞானமார்க்கமாகிய நிவிருத்தி தர்மமார்க்கத்தை யே அவர் சுருதிக்கு எதிரிடையாகக் கண்டித்திருப்பதாகவும் தெரியவருகிறது. ஆகையால், ஜனங்களின் தத்காலரீதியை உத்தேசித்து சில விஷயங்களில் ஸாதாரண மனிதப்பார்வை யில் சாஸ்திர விருத்தமான பிரசாரங்கள் செய்யப்பட் டிருந்ததாகக் காணப்பட்டபோதிலும், பிரசாரஞ் செய்த வரிடம் பகவதம்சம் பொருந்தியிருக்கலாமென்றே எண்ண வேண்டியதாயிருக்கிறது. பகவானுடைய காரியங்களின் உண் மையான தத்வம் அவருக்குத்தான் நன்கு தெரியுமே யல் லாது, அதை பூர்ணமாய் கண்டுபிடித்துவிடுவது மனித னுக்கு ஸாத்தியப்படக்கூடாத விஷயம். பகவானுடைய மேலான தத்வப்பார்வையும் மனிதனுடைய கீழான வெளிப் பார்வையும் ஒன்றாகக்கூடியதல்ல. மேற்கண்ட விபரத்தினுல், சாஸ்திர விரோதமாக பிரசாரங்களைச்செய்து வந்திருக்கிற வர்கள் எல்லோரும் பகவதம்சங்களாயிருக்கலாமென்றும் சொன்னதாக எண்ணிவிடக்கூடாது.

10. தர்மவிபரங்கள் யாவற்றையும் நன்றாகப் பரிசீல னஞ்செய்து பார்த்தால், முன் குறிப்பிட்டபடி ஸாமான்ய தர்மம் விசேஷ தர்மம் இரண்டும் சேர்ந்தே மோக்ஷ புரு ஷார்த்தத்திற்கு ஸாதனமாகின்றனவென்பதாகவே தீர்மான மாய்த் தெரியவரும். முடிவில் மோக்ஷத்திலேயே உத்தேசங் கொண்டிருக்கிறவரும், ௸ இருவகை தர்மங்களையும் கைக் கொண்டிருப்பவருமான ஹிந்து தார்மிகருடைய ஆசாரணை

களின் பெருமையை சரியானபடி மதிப்பதற்கு ஸாமான்ய தர்மத்தில் மாத்திரம் பற்றுதலுள்ள மற்ற மதஸ்தர்களுக்கு ஸாமர்த்தியம் அனேகமாயிருக்கமாட்டாது. விசேஷ தர்மத்தின் உத்தேசமும் அவசியத்தன்மையும் அம்மதஸ்தர்களுக்குத் தெரியாதாகையால், அவ்வித தர்மத்தை அனுவசிய மென்றும் தப்பென்றுங்கூட கண்டிப்பதிலேயே அவர்களுடைய புத்தி பிரவர்த்தித்துக்கொண்டிருக்கும். இது ஸஹஜந்தான். எப்படி மற்ற மதஸ்தர்களால் ஸாமான்ய தர்மத்தின் அவதார மூர்த்திகளான ஸ்ரீ புத்தர், கிருஸ்து முதலானவர்கள் விசேஷமாய் கொண்டாடப்படுகின்றார்களோ, அப்படியே ஸாமான்ய தர்மங்கள் விசேஷ தர்மங்கள் இவ் விருவகை தர்மங்களின் அவதார மூர்த்திகளான ஸ்ரீ ராமர், யுதிஷ்டிரர் முதலானவர்கள் ஹிந்து தார்மிகர்களால் அதிகமாய்க் கொண்டாடப்படுகின்றார்கள். உலகத்தில் முக்கியமாய் பிரவிருத்தி தர்மத்தை நன்கு ஆசரித்துக்காட்டுவதற்காகவே ஸ்ரீ மஹாவிஷ்ணு தன்னுடைய அம்சத்தினால் ஸ்ரீராமராக அவதரித்தார். ஸ்ரீ ராமரே தார்மிகர்களால் தீவ்ரமாய் உபாஸிக்கப்படத்தகுந்த திவ்யோத்தம மூர்த்தி. இப்படியே ஸாக்ஷாத் ஞான மூர்த்தியான பரமசிவன் ஷண்மதஸ்தாபனாசார்ய ஜகத்குரு பகவத்பாத ஸ்ரீசங்கராசாரிய ரூபமாக அவதரித்து, நிவிருத்தி தர்மங்களின் முக்கியத்தன்மையையும், பிரகாரங்களையும், நிவிருத்தி தர்மங்களால் ஸாதித்துக்கொள்ளப் படக்கூடிய உத்தமோத்தம பிரம்மஜ்ஞானத்தின் மேன்மையையும் எடுத்துக்காட்டிக்கொண்டும், ஷை ஞானம் கிருதோபாஸகர்களுக்கு சீக்கிரத்தில் ஸித்திக்கக்கூடியதால், அக்காலத்தில் ஜனங்களின் உபாஸனைகளில் காணப்பட்ட வேத விருத்தமான ஆசாரணைகளை நீக்கச்செய்து அவ்வுபாஸனைகளை சுத்தப்படுத்திக்கொடுத்துக் கொண்டும், உலகத்தில் ஞான

மார்க்கத்தை உறுதியாய் ஸ்தாபித்தது ஜகத்பிரஸித்தமே. ஞானத்திற்கும் ஞானத்தின்மூலமாய் மோக்ஷத்திற்கும் பிரவிருத்தி-நிவிருத்தி தர்மங்கள் யாவும் ஸாதனரூபங்கள். ஞானமும் மோக்ஷமும் (௨௰) பல ரூபங்கள். தார்மிகர்கள் அப்பியாஸிகள். ஞானிகளும் ஜீவன்முக்தர்களும் கரையேறியவர்கள். வித்யையை ஸம்பாதிப்பதற்காக வித்யாசாலையிலிருந்து அப்பியஸிப்பவர்களைப்போல் ஞானமோக்ஷங்களை ஸாதித்துக்கொள்வதற்காக தர்மாப்பியாஸத்தில் உழைப்பவர்கள் தார்மிகர்கள். எவ்விதம் வித்யை பூர்த்தியாகி வித்யாசாலையை விட்டு வெளியேறுகிறகாலம்வரையில் வித்யாசாலையின் விதிநிஷேதங்களுக்குக் கட்டுப்பட்டிருந்தே வித்யாப்பியாஸங்களைச் செய்யவேண்டுமோ, அவ்விதமாகவே ஞானத்தின் ஸித்தி பரியந்தம் தர்மசாஸ்திரத்தில் குறிப்பிடப்பட்ட விதிநிஷேதங்களுக்குக் கட்டுப்பட்டுக்கொண்டிருந்தே தார்மிகர் தர்மாப்பியாஸங்களைச் செய்துவரவேண்டும். வித்யை பூர்த்தியாகி மாணுக்கத் தன்மையைக்கடந்து மேற் சென்று விட்டவரை அவ்வித்யாசாலையின் விதி-நிஷேதங்கள் எப்படி கட்டுப்படுத்தமாட்டாவோ, அப்படியே ஞானிகளும் ஜீவன்முக்தர்களும் தர்மசாஸ்திர விதி-நிஷேதங்களுக்குக் கட்டுப்பட்டவர்களில்லை. ஆகிலும்,தார்மிகர்களுக்கு குருஸ்தானத்திலிருப்பவர் கொஞ்சம் கட்டுப்பட்டிருப்பதாக நடந்து வரவேண்டியதுண்டு. அதாவது, வித்யாசாலையில் மாணுக்கர்களைக்கட்டுப்படுத்துகிற விதி-நிஷேதங்கள் பூராவும் உபாத்தியாயர்களைக்கட்டுப்படுத்தமாட்டா; உபாத்தியாயர்களைக்கட்டுப்படுத்தக்கூடிய சில விதி-நிஷேதங்களும் அவ்வித்யாசாலையை விட்டு வெளியேறிப்போய் ஸ்வதந்திரமாயிருந்து வருகின்ற வித்வான்களை கட்டுப்படுத்தக்கூடியவையல்ல. இப்படியே, ஆத்மஜ்ஞாணுப்பியாஸிகள் நடந்துவரவேண்டிய

பிரகாரங்களுக்கும் குருஸ்தானத்திலிருப்பவர்களான ஞானிகள் நடந்துவரவேண்டிய பிரகாரங்களுக்கும் வித்தியாஸமிருக்கக்கூடும். இவ்வித பிரகாரங்கள் யாதொன்றுக்கும் ஸம்பந்தப்படாமலும் கட்டுப்படாமலும் ஸ்வதந்திரராகவே பிரம்மநிஷ்டர் இருந்து வருவார். இவருடைய பார்வையில் தானாகிய ஆத்மாவைத் தவிர இரண்டாவதுக்கே இருப்பில்லை யாகையால் மேற்கண்டபடி குருஸ்தானத்திலிருப்பவருடைய லோகஸங்கிரஹகாரியங்கூட இவரிடமிருக்கமாட்டாது. இவர் முற்றிலும் தர்மாதர்மங்களுக்கு வெளிப்பட்டவர். அத்விதீயமான அகண்டாத்மஸ்தானத்திலேயே யிருப்பவரைக்கட்டுப்படுத்தக்கூடியது யாதொன்றுமேயில்லை. இவ்வித ஸ்தானத்திலிருப்பவர் ஸாக்ஷாத் பிரம்மமேயல்லாமல் வேறல்ல. இப்படிப்பட்டவரிடமும் ஏதாவது ஆசரணைகள் தோன்றக்கூடுமானால் அவை ஸகுணப்பிரம்மமான ஈசுவரனுடைய ஆசரணைகளுக்கொப்பாகும். ஷை ஆசரணைகளுக்கு தர்மாதர்மஸம்பந்தமே யிருக்கமாட்டாது. இவை அதீதமானவை. ஸாமான்ய மனுஷிய ராஜாங்கத்தில்கூட சட்டத்திற்குக் கட்டுப்படாத செய்கைகள் (Acts of State) சட்டங்களுக்கு உத்பத்தி ஸ்தானமாகிய ராஜாவிடம் இருக்கலாமென்று சொல்லுங்கால், ஸகல தர்மங்களுக்கும் மூலகாரணராகிய பரமாத்மா விஷயத்தில் கேட்பானேன்? இவ்விதமாய் தர்மாதர்மங்களுக்கெல்லாம் அதீதமாயிருக்கக்கூடிய ஆசரணைகள் எவ்விதமான ஆசரணைகளாயிருக்கலாமென்பதும் உலகத்தில் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. சென்ற துவாபரயுகத்தில் பகவான் பரமாத்மாவே ஸ்ரீ கிருஷ்ணனாக பூர்ணாவதாரஞ்செய்து கேவலம் மண்ணைத்தின்னும் அஜ்ஞஸ்தானம் முதல் சுத்தப்பிரம்ம ஸ்தானம்வரையில், அதாவது, சிசுஸ்தானம், பாலகஸ்

தானம், பிரம்மசர்ய-கார்ஹஸ்த்யஸம்பந்தமாயுள்ள நாலு வித தார்மிகஸ்தானங்கள், ஞானிஸ்தானம், ஜீவன்முக்த ஸ்தானம், குருஸ்தானம், ஈசுவரஸ்தானம் இவைகளெல்லா வற்றிலுமிருந்துகொண்டு, அந்தந்த ஸ்தானங்களுக்குரிய விதங்களில் நன்கு உலகத்தில் ஆசரித்துக்காட்டியிருக்கிறார். இந்த பூர்ணாவதாரத்தின் மஹிமையையும் ரஹஸ்யங்களை யும் உள்ளபடி தெரிந்துகொள்ள தார்மிகர்களுக்கே சிரமப் படும். இப்படியிருக்க, தார்மிகர்களின் நிலைமையைக்கூட சரியானபடி அறிந்துகொள்ள சக்தியற்றிருக்கின்ற அதார் மிகர்களான நாஸ்திகர்களும் மிலேச்சர்களும் ஸ்ரீகிருஷ்ணன் சுத்தாத்மஸ்தானத்திலிருந்து நடத்திக் காட்டியிருக்கின்ற செய்கைகளின் தத்வத்தை எப்படி தெரிந்துகொள்ளக் கூடும்? ஸ்ரீ கிருஷ்ணன் மேற்கண்டபடி ஸகல ஸ்தானங்களி லும் எவ்விதமான அத்புத ஆசரணைகளை நடத்திக்காட்டி யிருக்கின்றாரென்று சுருக்கிச்சொல்லக்கூட இங்கு அவகாச மில்லாததால், அவருடைய செய்கைகளில் எது மூடர்களால் விசேஷமாய் தூஷிக்கப்பட்டுவருகின்றதோ அதைமாத் திரம் உதாஹரணத்திற்கு எடுத்துக்கொண்டு இதற்குப் பின்னுள்ள இரண்டுபாராக்களில் மேற்படி தூஷணையின் அநீதித் தன்மையையும் பகவானுடைய செய்கையின் தத்வத்தையும் கொஞ்சம் வெளிப்படுத்துவோம். வெகு பாகவதர்கள் நெடு நாளாக ஸ்ரீ கிருஷ்ணனை ஜாரசோரசிகாமணி யென்று நிந் தாஸ்துதி செய்து வந்திருப்பதையும், பகவானை ஜாரனுகவே பாவித்து கோபிகாஸ்திரீகள் அவருடன் கிரீடித்ததாக கிரந் தங்களில் சொல்லப்பட்டிருப்பதையும் முன்னிட்டு ஸ்ரீகிருஷ் ணன் உண்மையில் ஜாரனுகவே நடந்துவந்திருக்கிறுரென்று சில நாஸ்திகர்கள் அவரை தூஷிக்கின்றார்கள். அதிபால்யா வஸ்தையில் வெண்ணெய், பால், தயிர்களை அவர் திரு

டினுரென்பது ஒருக்கால் பெரும் குற்றமாகாமல் போனு லும், அவர் கோபிகாஸ்திரீகளுடன் கிரீடித்தது அக்கிர மந்தானென்றும், இப்படி கெட்ட நடையுடன் கூடியிருந்த வரை தைவமாகக்கொண்டாடுகின்ற மதம் மதமேயாகா தென்றும், கிருஸ்துவின் உத்தமமான நடத்தைகளில் இப் படி எவ்வகையிலும் குற்றஞ்சொல்லுவதற்கு இடமேயில் லாததால் கிருஸ்துவ மதமே உண்மையான மதமென்றும் சொல்லிக்கொண்டு கிருஸ்துவப்பாதிரிகள் கிருஸ்துவப் பள்ளிக்கூடங்களில் படித்து வருகின்ற ஹிந்துமாணுக்கர் களின் அறியாப் புத்திகளை அடிக்கடி கலக்கிக்கொண்டு வந் திருக்கின்றுர்கள். ஹிந்துப்பையன்களின் வீடுகளில் மதவிஷய மான சரியான போதனைகளை முன்னுலேயே அவர்களுக்குச் செய்யத்தவறிவிட்டது மன்னியில், அப்பையன்களை கிருஸ் துவப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பி மேற்சொல்லியபடி பாதிரிகளின் தப்பு அபிப்பிராயங்களுக்கும் உபதேசங்களுக் கும் அப்பையன்கள் வசப்பட்டுவிடும்படியாக ஹிந்துப் பெரியோர்கள் ஆலோசனையில்லாமல் செய்து வந்திருப் பதின் பலனைப் பெரும்பாலும் அவர்களும் அனுபவித்துக் கொண்டுதான் வருகிறுர்கள். ஆகிலும், காலவசத்தினுல் அவர்களில் அனேகர்களுக்கு இன்னும் சரியான புத்தி வந்த தாகத் தெரியவில்லை. இது நிற்க.

11. ஸ்ரீ கிருஷ்ணன்பேரில் குற்றஞ்சாட்டப்பட்ட செய்கை வாஸ்தவத்தில் தர்மச்செய்கையுமல்ல, அதர்மச் செய்கையுமல்ல. சட்டத்திற்குள் அகப்படாத ஸ்வதந்திர மான ராஜச்செய்கை (Act of State) யைப்போல், அது தர்மாதர்மங்களுக்கு அதீதமானதும் ஆத்ம நிலைமையில் மாத்திரம் ஏற்படக்கூடியதுமான அன்யாதிருச ஸ்வதந்

திரச் செய்கை. இதெப்படி யென்பது பின்னால் வெளியா கும். தர்மாதர்மங்களுக்கு அதீதமான செய்கைகளை உல கத்தில் செய்து காட்டவேண்டுமானால் அதிகாரி, காலம், நிமித்தம் இம்மூன்றிலும் அவ்வித அதீதத்தன்மை பொருந்தி யிருக்கவேண்டும். அச்செய்கைகளைச் செய்யக் கூடிய அதிகாரி அகண்டாத்மஸ்தானத்தில் உறுதியடைந்திருக்க வேண்டும். அதற்குக் கீழ்ப்பட்ட ஸ்தானங்கள் யாவும் தர்மாதர்மங்களுக்குஉட்பட்டஸ்தானங்கள். அகண்டாத்மப் பிராப்திக்கு ஸாதனமாக தர்மம் அவலம்பிக்கப்படுகின் றது. எதை ஸாதித்துக்கொள்ள வேண்டுமோ, அது ஏற் கனவே ஸித்தித்திருந்தால் ஸாதனத்தைக் கைக்கொள்ள வேண்டியதில்லை. ஆகையால், அனுபவத்தில் யாருக்கு ஆத் மப்பிராப்தி ஸ்வதஸ்ஸித்தமாயிருக்கின்றதோ அந்த ஆத்ம வான்தான் தர்மாதர்மங்களுக்கு அதீதராயுள்ளவர். ஸாக்ஷாத் பரமாத்மாவே ஸ்ரீ கிருஷ்ண ரூபியாக அவதரித் திருந்ததால், ஸ்ரீ கிருஷ்ணன் அவ்வித அதீதர்தான் என் பதில் ஸந்தேஹமில்லை. அவர் அவதரித்த க்ஷணம் முதல் ஒவ்வொரு அவஸரத்திலும் பகவானே அவரென்பது ஸ்பஷ்டமாய் காட்டப்பட்டிருக்கின்றது. ஸ்ரீராமாவதாரத் தில்போல் பரதத்வம் ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில் மறைக்கப்பட வேயில்லை. ஸ்ரீ கிருஷ்ணன் பரமாத்மாதான் என்று வியக்த மாய் எல்லோருக்கும் தெரியும்படியாகவே அவர் நடந்து வந்திருக்கிறார். எந்த கிரந்தம் மூலமாய் அவர் கோபிகை களுடன் கிரீடித்தாரென்று தெரியவருகின்றதோ அதிலேயே அவர் பரமாத்மாதானென்று சொல்லப்பட்டிருப்பதையும் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். அந்த கிரந்தத்தில் கண் டிருப்பதில் ஒரு பாகத்தை ஒப்புக்கொள்வேன் மற்ற பாகங் களை ஒப்புக்கொள்ள மாட்டேனென்று சொல்லுவது வியவ

ஹாரத்திற்கு உசிதமாகாது. ஷை அவதார காலத்தில் உல கத்திலுள்ள பெரியோர்கள் எல்லோரும் ஸ்ரீ கிருஷ்ணனை பகவானாகவே தெரிந்துகொண்டு அப்படியே அவரை நடத்தி வந்திருக்கிறார்கள். ஸர்வோத்தம தேவரிஷி ஸ்ரீ நாரதர் ஸ்ரீ கிருஷ்ணனை தர்சிப்பதற்காகவே துவாரகைக்கு வந்து ஸ்ரீ கிருஷ்ணனுடைய அத்புதமான கிருஹஸ்த தர்மாசரணை களைப்பார்த்து ஆச்சரியப்பட்டிருக்கிறார். ஸகலலோக ஸ்ரு ஷ்டி கர்த்தராகிய ஸாக்ஷாத் சதுர்முகப்பிரம்மாவே ஸ்ரீகிருஷ் ணனிடம் வந்து தன்னுடைய அபராதங்களை க்ஷமிக்க வேண்டுமென்று பிரார்த்தித்துக்கேட்டுக் கொண்டிருக்கிறார். இவ்விஷயத்தில் அதிகமாய் விவரிப்பது அவசியமில்லை. எக் காலமும் உலகப்பற்றுதலே இல்லாதிருந்தவரும் ஜீவன்முக் தர்களுக்குள் ஸர்வசிரேஷ்டருமான ஸ்ரீ சுகப்பிரம்மமே ஸ்ரீ கிருஷ்ணன் பரமாத்மாவே யென்றும் அவருடைய சரித் திரத்தைக் கேட்பதே மோக்ஷ ஸாதனமென்றும் நிச்சய மாய் வெளிப்படுத்தியிருக்கும்போது, யார் மறுதளிக்கக் கூடும்? ஆகையால், ஸர்வாத்மரூபியான ஸ்ரீ கிருஷ்ணன் தர்மாதர்மங்களுக்கு அதீதமாயிருக்கக்கூடிய காரியங்களைச் செய்வதற்கு ஸர்வோத்தம அதிகாரிதான் என்பதில் ஸந்தே ஹத்திற்கு இடமேயில்லை. ஜீவர்களாயிருந்து அபரோ க்ஷாத்ம ஸாக்ஷாத்காரஜ்ஞானத்தை அடைந்திருப்பவர்களே அவ்வித காரியங்களைச் செய்வார்களேயானாலுங்கூட புண்ய பாபங்கள் ஏற்படாதென்று சுருதிவாயிலாக வியக்தமாய் தெரியவரும்போது, பரமாத்மா விஷயத்தில் சொல்லவும் வேண்டுமோ? ஞானிகளும் பரமாத்மாவும் அவ்வித அதீத மான காரியங்களை அனுவசியமாகவாவது ஜகத்தின் நன்மை யின்பொருட்டில்லாமலாவது ஒருக்காலமும் செய்யமாட் டார்களென்று ஆஸ்திகர்கள் உறுதியாய் நம்பவேண்டும்.

நம்முடைய கீழான தார்மிகப்பார்வையில் எவ்விஷயத்திற்கும் அதிகாரி விமர்சனத்தைச் செய்வது வழக்கத்திற்கு வந்திருப்பதால், நாம் பிரகிருத விஷயத்தில் பகவானையும் மேற்கண்டபடி 'அதிகாரி' என்று சொல்லுகிறோமே யொழிய, அவர் உண்மையில் அதிகாரிஸ்தானத்திற்கு நிரம்பவும் மேலான ஸ்வதந்திரஸ்தானத்திலுள்ளவர். அவர் அதிகாரி தானு என்று வியவஹரித்துத் தீர்மானிக்க யத்தனிப்பதே அபசாரமாகும். இனி இரண்டாவதாக ஆலோசிக்கப்பட வேண்டிய "காலம்" என்ற விஷயத்தை எடுத்துக்கொள்வோம். காலாதீதரான ஸாக்ஷாத் பகவானுகிய ஸ்ரீ கிருஷ்ணன் ஸம்பந்தப்பட்டமட்டில் கால நிபந்தனையை உண்மையில் கவனிக்க வேண்டியதேயில்லை. ஆகிலும், தான் க்ஷத்திரிய மனிதரூபங்கொண்ட காரணத்தினுல், அவர் காலவிய வஸ்தையையும் அனுஸரித்தே நடத்திக்காட்டியிருக்கிறார். ஸாதாரணமாய் மனிதனுக்கு நல்லது-கெட்டது என்ற விவேசனசக்தி 7-வயதுக்குமேல்தான் உண்டாவதாக எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அவரவர்களின் நிலைமைக்குத்தக்கபடி 16-வயதுக்குமேல் அந்த சக்தி பரிபூர்ணமாகின்றது. இதினுலேயே இக்காலத்திய கிரிமினல் சட்ட நடவடிக்கைகளிலும் 7-வயது வரையில் செய்யப்பட்ட எச்செய்கையும் குற்ற மாகாதென்றும், 7-வயதுக்கப்பாலும் பால்யாவஸ்தையில் செய்யப்பட்ட செய்கைகளை கொடுங் குற்றங்களாக பாவிக்காமலும் அவைகளுக்குக்கடுந்தண்டனைகளை விதிக்காமலும் பால்ய குற்றவாளிகளுக்கு ஸர்க்காரே நல்வழிப்பயிற்சியையுண்டாக்கி வைக்க வேண்டுமென்றும் நியாயமுறை யேற்பட்டிருக்கின்றது. இப்படியே, தர்ம விஷயத்திலும் 7-வயதுக்கு மேல்தான் தர்மாதர்ம விவேசனத்துடன் தர்மத்தை ஆசரித்துவரயோக்கியதை உண்டாகின்ற

தென்றும் வெளியிடப்பட்டிருக்கிறது. இதனால்தான் துவிஜ புருஷர்களுக்கு 7-வயதுக்கப்பால் உபநயனம் விதிக்கப்பட்டிருக்கின்றது. ஷை விவேசனாரம்ப காலம் முதல் விவேசன பரிபூர்த்தி காலத்திற்குள்ளாக உபநயனத்தை கட்டாயம் நடத்தித் தீரவேண்டும். பிராம்மண-க்ஷத்திரிய-வைசிய ஜாதிகளின் தாரதம்மியத்திற்கு ஏற்றபடி ஷை விவேசன ஆரம்பத்தின் காலங்களும் வேறுபடுகின்றன. இக்காரணத்தினால் ஸாதாரணமாய் பிராம்மணனுக்கு 8-வது வயது முதலும், க்ஷத்திரியனுக்கு 11-வது வயது முதலும், வைசியனுக்கு 12-வது வயது முதலும், உபநயனம் நடத்தப்படவேண்டுமென்றும் விதிக்கப்பட்டிருக்கிறது. இப்படி விவேசன ஆரம்பகாலம் வேறுபடுவதற்கு அனுகுணமாக விவேசன பூர்த்திகாலமும் வேறுபடக்கூடுமாதலால் பிராம்மண-க்ஷத்திரிய-வைசியர்களுக்குள் உபநயனத்தின் கடைசி காலமும் முறையே 16, 22, 24-வது வயதுகளென்று சாஸ்திரத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பிராம்மணப் பையன்கள் விஷயமாக 8-வது வயதுக்குள் எப்படியோ, அப்படியே க்ஷத்திரியர்களுக்குள் உபநயன ஆரம்ப காலமாகிய 11-வது வயதுக்குள்ளாக பையன்களுக்கு தர்மாதர்ம விவேசனமிராதென்றும் அவர்கள் அவ்வயதுவரையில் தர்மாசரணைகளுக்கு யோக்கியர்களல்லவென்றும் ஏற்பட்டிருப்பதால், ஷை 11-வது வயதுக்குள்ளாக க்ஷத்திரியப் பையனால் செய்யப்படுகின்ற எவ்வித காரியமும் தர்மமுமாகாது அதர்மமுமாகாது என்பதே ஸித்தம். ஸர்வஜ்ஞனான ஸ்ரீ கிருஷ்ணன் அவருடைய அவதார காலத்தில் முன் ஸ்ரீராமாவதார காலத்திய தண்டகாரண்ய வாஸிகளில் அனேகர்கள் அவரவர்களுடைய கர்மகதிப் பிரகாரம் கோபிகாஸ்திரீகளாக ஜன்மங்களை எடுத்திருக்கிறார்களென்றும், அவர்கள் தன்னுடைய முன் வாக்

குப்படி ஆலிங்கன சுகத்தை விரும்புவார்களென்றும், அந்த சுகத்தை அவர்களுக்குக்கொடுத்தே தீரவேண்டுமென்றும், இப்படி தான் செய்வது தன்னுடைய உபநயனவயது வந்ததற்கப்பால், அதாவது, உலகப்பார்வையில் தர்மாதர்ம விவேசன காலம் வந்ததற்கப்பால், நியாயமாகத் தோன்றுதென்றும், நிச்சயமாய் தெரிந்து கொண்டவராதலால், அதிபால்ய ஸ்தானத்தில் தானிருக்கும்போதே கோபிகாஸ்திரீகளின் கோரிக்கையை நிறைவேற்றிக்கொடுத்துவிட்டால் உலகத்தார்களின் தர்ம திருஷ்டியிலும் குற்றமாகாதென்று எண்ணியே தன்னுடைய அதிபால்யாவஸ்தையிலேயே (ஏழு வயதிலேயே) அந்த ஸ்திரீகளுடன் கிரீடித்தார், அதாவது விளையாடினார். அப்பால் இவருக்கு உபநயன காலம் வருவதற்கு முன்பாகவே இவர் கோகுலத்தை விட்டு தன்னுடைய சொந்த குலத்திற்குப் போய்விட்டார். அதற்குப் பிறகு இவர் கோகுலத்திற்கு வரவுமில்லை, கோபிகாஸ்திரீகளை பார்க்கவுமில்லை. இந்தப்படி அதிபால்யாவஸ்தையில் கோபிகைகளுடன் விளையாடியதை குற்றமாகுமென்று எப்படி சொல்லக் கூடுமோ தெரியவில்லை. ஸ்ரீ கிருஷ்ணன் உண்மையில் தர்மாதர்மங்களுக்கு அதீதமான காரியங்களை எந்த வயதிலும் செய்யத் தகுதியுள்ளவராயிருந்தபோதிலும், மேற்கண்டபடி உலகத்தில் சாஸ்திரப்படிக்குள்ள தர்ம மரியாதைக்கு விரோதமாக தான் நடத்தக்கூடாதென்று உத்தேசித்தே, உலக திருஷ்டியில் எந்த வயதில் அந்தக்காரியங்களைச் செய்தால் குற்றமாகத் தோன்றமாட்டாதோ அவ்வயதிலேயே அவைகளை நடத்திக்காட்டினார். இப்படி நடத்திக்காட்டிய காரியங்கள் இன்னவை யென்றும் இவைகளை ஏன் நடத்திக் காண்பிக்கவேண்டுமென்றும் இதன்மேல் "நிமித்தம்" என்ற மூன்றாவது விஷயத்தை எடுத்துக்கொண்டு பரியாலோசனை

செய்வோம். முதலில் ஒரு ஆக்ஷேபணை செய்யப்படக்கூடும். யௌவன புருஷனுக்குள்ள விஷயபோக சக்தியே யிருக்க கூடாததும் களங்கமற்ற மனோவிருத்திகளுடன் கூடியதுமான அதிபால்யாவஸ்தையிலுள்ள பாலகன் பரஸ்திரீகளுடன் எப்படி விளையாடினாலும் குற்றமில்லையென்பது நியாயந்தான். ஸ்ரீகிருஷ்ணனோ வெனில் ஸாதாரண மனிதனல்ல, அவர் பகவானென்றே ஒப்புக்கொள்ளப்படுகின்றது. ஆகையால், அவருடைய சரீரம் பார்வைக்கு பாலசரீரமாயிருந்தபோதிலும் அதிலிருந்திருக்கிற சக்தி ஸாதாரண பாலகனுடைய சக்திபோலல்ல, அது அபரிமிதமான பகவத் சக்தியே. இப்படிக்கிருக்கையில் பரஸ்திரீகளுடன் ஸர்வ சக்தனை ஸ்ரீ கிருஷ்ணனுடைய விளையாட்டு எப்படி நியாயமாகுமென்று ஆக்ஷேபிக்கலாம். ஸ்ரீ கிருஷ்ணனை ஸர்வ சக்தனை பகவானென்று ஒப்புக்கொண்டுவிடும்பக்ஷத்தில், இனி சொல்லப்போகிற நியாயங்களும் சரியென்றே ஷெ ஆக்ஷேபகருடைய புத்தியில் பதிந்துவிடக்கூடும். பூர்வம் தண்டகாரண்ய வாஸிகளாயிருந்து கர-தூஷணாதி 14000 ராக்ஷஸ வீரர்களை ஒருவராகவே யுத்தத்தில் எதிர்த்து ஸம்ஹாரஞ் செய்த ஸ்ரீராமரை ஆலிங்கனஞ் செய்யப்பிரியப்பட்டவர்களில் அனேகர்கள் முன்சொல்லியபடி கோபிகாஸ்திரீகளாக ஜனித்திருப்பதையே ஸ்ரீ கிருஷ்ணனுடைய செய்கைக்கு முதல் நிமித்தமாகச் சொல்லவேண்டும். இவ்விடத்தில் ஒரு கேள்வி ஏற்படலாம். தண்டகாரண்ய வாஸிகளுக்கு தான் முன்னால் கொடுத்திருந்தவாக்கை பரிபாலனஞ்செய்யவேண்டுமானால், அவர்களெல்லோரையும் தன்னுடைய பிந்திய அவதாரகாலத்தில் பகவான் தன் பத்னீகளாகச்செய்துகொண்டு ஆலிங்கன சுகத்தைக்கொடுப்பதே சரியாகுமே தவிர, அவர்களை பரஸ்திரீகளாகச்செய்து அப்பால் அவர்களை ஆலிங்

கனஞ் செய்து கொள்வதானல் அது எப்படி கிரமமாகு மென்று கேட்கலாம். இங்கு தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் ஒன்றுண்டு. ஜீவர்களுக்கு பின்ஜன்மங்கள் ஏற்படு கிற பிரகாரங்களும் இப்பின்ஜன்மங்களில் அவர்களுக்கும் மற்ற ஜீவர்களுக்கும் விவாஹாதி ஸம்பந்தங்களினால் உண் டாகின்ற சேர்க்கைகளும் அவரவர்களின் சொந்த பூர்வகர்ம வைசித்திரியங்களைப் பொருத்திருக்கின்றன. எவ்விதத்திலும் அந்த கர்மங்களுக்கு கொஞ்சமேனும் மாறுதலாக பகவான் வேறு விதமான ஜன்மங்களையாவது ஸம்பந்தங்களையாவது ஏற்படுத்துகிறதேயில்லை; இப்படி ஏற்படுத்துவது நியாயமு மல்ல. தண்டகாரண்ய வாஸிகளின் கர்மகதிப் பிரகாரமாக வும் அவர்களுக்கேற்பட்டிருந்த மனோபாவனைப்பிரகாரமாக வும் அவரவர்களுக்குத் தகுந்த ஸ்தானங்களுக்குரிய ஜன் மங்களும் சேர்க்கைகளும் ஸ்ரீ கிருஷ்ணவதார காலத்தில் ஏற்பட்டன. ஷை கர்ம-மனோபாவனானுஸாரியாக மேற்கண்ட தண்டகாரண்ய வாஸிகளுக்குள்ளாக எவர்களுக்கு பகவா னுடைய பத்னீ ஸ்தானங்களே கிடைக்கக்கூடியதாயிருந்தன வோ. அவர்களெல்லோரும் பின்னல் பகவானுக்கு பத்னீ களாகவே ஏற்பட்டார்கள். இவ்விதமானவர்களில் அனே கர்கள் கர்மகதிப்படி ராஜகன்னிகைகளாக ஜனித்து நர காஸுரனுடைய காராக்கிருஹ ஹிம்சைக்குட்பட்டிருந்த ஸ்திதியில் ஏராளமாயிருந்ததினலேயே பகவான் 16000 ஸ்திரீகளுக்கு அதிகமாகவே விவாஹஞ் செய்து கொள்ளும் படி நேர்ந்தது. இந்தப்பெரும் பத்னீ கோஷ்டியில் சேரக் கூடாதவர்களும் அன்யர்களுக்கு பத்னீகளாயிருந்துகொண் டே பகவானுடைய ஆலிங்கன சுகத்தையும் அடையவேண்டு மென்ற விதமான விசித்திர கர்மகதி யுள்ளவர்களும், இது போல் தங்களுக்கு விவாஹம் ஏற்படாமலிருந்தும் பகவா

னுக்கு பத்னிகளாகும்படியான விசேஷ புண்ய கர்மமில்லா தவர்களுமான இவ்விருவகை தண்டகாரண்ய வாஸிகளெல் லோரும் கோபிகாஸ்திரீகளாக ஜனித்திருந்தார்கள். ஆகை யால், மேலேகுறிப்பிட்ட ஆக்ஷேபணை சரியன்று. பூர்வகர்மத் தினால் கோபிகாஸ்திரீயாகவும் ஜனித்து பகவானை விவாஹமே செய்து கொள்ளும்படியான விசேஷ பாக்கியத்துடனுங் கூடியவள் ராதா ஒருத்தியென்றே வெளியாகின்றது. இப் பால் ஷை மற்ற கோபிகைகளின், அதிலும் அவர்களுக்குள் பரஸ்திரீகளாயிருந்தவர்களின், விஷயத்தைச் சோதிப்போம்.

12. இங்கு முக்கியமாய் அடியிற்கண்டவைகள் கவனிக் கப்பட வேண்டியவைகள்:—

(1) குறிப்பிட்ட கோகுலங்களிலிருந்த புருஷர்கள் ஸ்திரீகள் எல்லோருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் பகவான்தான் என்று அனுபவத்துடன் நிச்சயமாய் தெரியும். ஆனால், நிர்க் குணபரப்பிரம்ம ஸ்வரூபஜ்ஞானம் கோபிகைகளுக்கு இல்லா திருந்ததால், அவரை மனிதரூபியான பரமாத்மாவாக மாத் திரம் எண்ணினார்கள்.

(2) பகவானுடைய அங்கஸ்பர்சமும் அவருடன் நெருங்கிய பலவித லீலைகளும் கோபிகாஸ்திரீகளுக்கு ஏற் பட்டனவே யொழிய, கீழான விஷயஸங்கபோகம், அதா வது, சரீரப்புணர்ச்சி நடந்திருப்பதேயில்லை.

(3) பகவானுடைய அங்கஸ்பர்சத்தாலேயே ஸ்திரீகளு க்கு தாத்காலிகமாக பேரானந்தமே (பிரம்மானந்தமே) ஏற் பட்டுவிட்டதாலும், விஷயானந்தங்கள் யாவும் பேரானந் தத்தில் அடக்கமாதலாலும், ஸ்திரீகள் தங்களுக்கு அந்த அங்கஸ்பர்சகாலத்தில் ஸகல விஷயானந்தங்களும் அனு பவத்தில் ஸித்தித்து விட்டதாகவே எண்ணிக் கொண்டிருந் தார்கள்.

(4) பகவானை தங்களுடைய ஜாரன் என்றே அந்த ஸ்திரீகள் எண்ணியிருந்த போதிலும், இந்த எண்ணத்தினு லாவது பகவானுடைய அங்கஸ்பர்சத்தாலாவது அந்த ஸ்திரீகளுக்கு பாபம் ஏற்படவுமில்லை, பகவானுக்கு தோஷம் வந்துவிடவுமில்லை.

(5) பகவானும் தன்னிடம் வந்த ஸ்திரீகளை வரக்கூடா தென்று உறுதியாய் தடுத்துவிடக் கூடாத ஸ்திதியிலிருந் திருக்கிறார்; தடுத்திருக்கிறதாயிருந்தால் அதுவே அவரு டைய பரமாத்மதன்மைக்கு விரோதப்பட்டிருக்கும்.

ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவின் சரீரம் பிராகிருத பௌதிக சரீரமல்ல. இந்த விஷயம் ஒரு விதத்தில் அவருடைய அவதார காலத்திலேயே வியக்தமாச்சுது. அவருடைய சுத்த மாயாசக்தியே ஸத்வாம்சப் பிரதானமாயிருந்து கொண்டு அதின் ஏகாம்சத்தினால் அப்ராகிருத திவ்ய மங் கள விக்கிரஹ ரூபமாகப் பிரகாசித்தது. அதின் ரூபலாவண்ய மும் அன்யாதிருசமாயிருந்த விபரம் உலகப் பிரஸித்தமே. இவ்வித விக்கிரஹத்தின் ஸ்பர்சம் எந்த ஜீவனுக்காவது கிடைத்தால் அந்த ஸ்பர்சகாலத்தில், ஷை அப்ராகிருத சுத்தஸத்வ மாயைக்கும் ஜீவனுடைய பிராகிருதமான அசுத் தக் கலப்புடன் கூடிய ராஜஸ அவித்யைக்குமுள்ள பரஸ்பர விரோதத்தினாலும், ஷை சுத்த மாயையின் பலாதிக்கியத்தி னாலும், அந்த ஜீவனிடமிருக்கிற அவித்யை உடனே ஒதுக் கித் தள்ளப்பட்டும், அதினால் ஜீவத்வமே அக்காலத்தில் மறைவடைந்தும், ஸ்வஸ்வரூபமான ஆத்மானந்தமே விளங் கும். இந்தக் காரணத்தினால்தான் ஸ்ரீ கிருஷ்ணனுடைய குழந்தைப் பருவத்தில் அவரை எடுத்துக்கொண்டு போனவர் களுக்கெல்லாம் தங்களுக்கு இன்னதென்றே தெரியாத ஆனந்தக்களிப்புண்டானதாகத் தெரியவருகிறது. அவர்

களுக்குள் யார் யார் எந்தெந்த ஸ்திதியிலிருந்தார்களோ அந்தந்த ஸ்திதிக்குத் தகுந்த விதங்களில் அவர்களிடம் பூர்ணமாய் ஆனந்தானுபவம் விளங்கிற்று. ஸ்ரீ கிருஷ்ண னுக்கு வெளியில் வந்து விளையாடுகிற பருவமாகிய பால்யா வஸ்தை வந்த பிறகு அவரைத் தொட்டு அவருடன் விளை யாடுவதற்கு அனேகர்களுக்கு அவகாசம் அதிகமாகவே உண்டாச்சுது. இப்படி விளையாடிவந்தவர்களுக்குள்ளிருக் கக்கூடிய ருதுமதிகளான கோபிகைப் பெண்களுக்கு அவர் களுடைய மனஸ்ஸ்வபாவங்களுக்குத் தக்கபடி பகவத் ஸ்பரிசத்தினால் உண்டான பேரானந்தத்தில் புருஷஸங்க சுகங்கூட அடங்கியிருந்ததாகவே அவர்களுக்குத் தோன் றிற்று. இந்த ஸங்கதி கோபிகாஸ்திரீகளுக்குள் சீக்கிரத்தில் பரவி, அவர்கள் எல்லோரும் பாலகராயிருந்த ஸ்ரீ கிருஷ்ண னைத் தேடி அடிக்கடி அவரிடம் நெருங்கி வந்து கிரீடிக்கும் படி யேற்பட்டது. அங்கஸ்பர்சத்தினால் தங்களுக்கு அபரி மிதமான சுகம் உண்டாவதாகத் தெரிந்துகொண்ட பிறகு அவரை தங்களுடைய ஜாரனாகவே பாவித்தும் வந்தார்கள். இப்படி அவர்கள் பாவித்து வந்தபோதிலும், ஸ்ரீ கிருஷ் ணன் பரமாத்மா என்ற ஞானமும் அவர்களிடம் கூட்டவே யிருந்து வந்திருக்கின்றது. அதாவது, பரபுருஷன் என்ற ஸ்தானத்தில் ஸ்ரீ கிருஷ்ணனிடம் ஜாரபுத்தியை வைக்கா மல், தாங்கள் உள்பட ஸகலர்களுக்கும் ஆத்ம ஸ்வரூபீ என்ற ஸ்தானத்திலேயே அவரை தங்களுடைய ஜாரனாக எண்ணினார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் பரமாத்மாதான் என்று எண்ணிக்கொண்டே அவரிடம் எந்த உத்தேசத்தினாலாவது வருபவர்களுக்கு தோஷமுண்டாகுமா வென்று ஆலோசிக்க வேண்டியதுண்டு. காமபூர்த்தியை உத்தேசித்து பகவானி டம் பக்தியைச் செலுத்தி வந்தவர்களுக்கும் துர்க்கதி ஏற்

படமாட்டாது. நல்லதானாலும் கெட்டதானாலும் எக்கார ணத்தினாலாவது பரமாத்மாவையே நிரந்தரமாக தியானித் துக்கொண்டிருப்பவர்களுக்கு நற்கதியே கிடைக்குமென்று வெளியாகின்றது. ஸ்ரீ கிருஷ்ணனை எப்போதும் தூஷித்துக் கொண்டேயிருந்த சிசுபாலனுக்கு நற்கதி கிடைக்கவில்லையா? இதற்கு பகவானுடைய ஞாபகம் தொடர்ந்திருந்ததே கார ணம். த்வேஷத்தினால் பகவானை எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பவனுக்கு நற்கதியுண்டாகுமானால், பிரேமை யினால் அவரையே தியானித்து வந்த கோபிகாஸ்திரீகளுக்கு ஏன் நற்கதி கிடைத்திராது? எப்போது ஸ்ரீகிருஷ்ணன் தங் களுக்கு அந்தர்யாமியாயிருக்கிற பரமாத்மாவே யென்ற உறுதியான ஞானம் அந்த ஸ்திரீகளிடமிருந்ததோ, அப் போது அவரிடம் அவர்கள் சென்றதற்கு தோஷம் ஏற் படாது. தன்னிடத்திலேயே தான் செல்லுவது தோஷ மாகுமா? ஸ்ரீகிருஷ்ணனை பரமாத்மாவாகத் தெரிந்துகொள் ளாமல் மனிதஜாரனாக மாத்திரம் பாவித்து அவரிடம் சென் றிருப்பார்களேயானால் அவர்களுக்கும் தோஷமேற்பட்டிருக் கும், ஸ்ரீ கிருஷ்ணனும் அவர்களுடைய கண்களில் தென்பட் டிருக்க மாட்டார். ஸ்ரீ கிருஷ்ணன் பரமாத்மா வென்ற ஞானத்துடனும் அவர்கள் அவரிடம் விளையாடிக்கொண் டிருக்கும்போதே எப்போதாவது அந்த ஞானம் குறை வடைந்து அவரை பெரும்பாலும் மனிதஜாரனைப்போலவே பாவித்து கிரமத்தை மீறி அவர்கள் நடந்துவர ஆரம்பித்த ஸமயங்களில் அவர்களுடைய பார்வையிலிருந்து அவர் மறைந்துவிட்டதாகவே கிரந்தத்தில் வெளிப்படுத்தப்பட்டு மிருக்கின்றது. அன்றியும், உலகத்தில் பத்னீ தன் பர்த்தா வைக் கொண்டாட வேண்டியதின் முக்கிய காரணம் பர்த்தா பரமாத்மஸ்தானத்திலிருக்கிறாரென்பதே. வைதிகவிவாகத்

தில் வரன் பரமாத்மஸ்தானத்திலேயே வதூவின் பிதாவால் பூஜை செய்யப்படுகிற விஷயம் எல்லோருக்கும் தெரியும். வரரூபியான பரமாத்மாவுக்கே கன்னிகை தானஞ்செய்யப் படுகிறாள். ஸர்வஜகத்தையும் பரித்து வருகின்ற பரமாத் வே எல்லோருக்கும் உண்மையான பர்த்தா. பரமாத்மா வின் பிரதிநிதியாகவே உலகத்திலுள்ள ஸாதாரண பர்த்தா விளங்குகின்றார். பர்த்தாவிடத்தில் எப்போதும் பத்னீக்கு பரமாத்மபுத்தி யிருக்க வேண்டியதவசியம். ஸாக்ஷாத் பர மாத்மாவே ஸ்ரீ கிருஷ்ணரூபியாக அவதரித்திருந்த போது அவரிடம் சென்றதும் பர்த்தாவிடம் சென்றதாகவே ஆகும். தவிரவும், பரமாத்மாவிடம் செல்லுவதே ஜன்மஸாபல்ய மென்று சாஸ்திரம் மூலமாய் வியக்தப்பட்டிருப்பதால், எவ்விதமாகவாவது பரமாத்மாவிடம் செல்லுவதற்கு அவ காசம் உண்டாகுமானால், மற்ற யாவற்று ஸங்கங்களையும், அபிமானங்களையும், மானாவமானங்களையும் உதறித் தள்ளி விட்டு அவரிடம் செல்லுவதே உத்தம தர்மமாகும். இவ் விஷயத்தில் பிதா, பர்த்தா, ஸஹோதரர், புத்திரர், சிறு குழந்தை முதலான யாரையும் உதாஸீனஞ் செய்து விடலா மென்றே உறுதியாய்த் தெரியவருகின்றது. இப்படியே கோபிகாஸ்திரீகள் ஆசரித்தும் காட்டியிருக்கின்றார்கள். ஆகையால், ஷை ஸ்திரீகள் ஸ்ரீ கிருஷ்ணனிடம் சென்றது குற்றமேயாகாது. இனி ஸ்ரீ கிருஷ்ணன் ஸம்பந்தப்பட்ட மட்டில் மேற் சொல்லிய விஷயத்தை கவனிப்போம். அவர் ஒருக் காலமும் கோபிகைகளை கிரீடைக்காக அழைத்ததில்லை. அவர்கள் தன்னிடம் வந்த பிறகும் ஒவ்வொரு ஸமயத் திலும் அவர்களுக்கு ஸாதாரண தர்மங்களை போதித்து அவரவர்களின் வீடுகளுக்குத் திரும்பிப் போகும்படியாகவே உபதேசித்திருக்கிறார். இப்படி உபதேசிக்கப்பட்டும் அவர்

கள் திரும்பிப் போகாமல் அவர்களுடைய பக்தியின் உறுதி யும் குடும்ப ஸம்பந்தங்களில் பற்றுதலில்லாமையும் நன்கு வெளிக்காட்டப்பட்ட பின்புதான் அவர்களுடைய வரவை ஒப்புக்கொண்டு கிரீடித்திருக்கிறார். உண்மையில் பகவா னிடம் வந்து சேர்ந்தவர்களை அவர் நிராகரிக்கவே முடி யாது. "என்னை அடைந்தவர்களை நான் கைவிடமாட் டேன்" என்றும், "எந்நாளும் அவர்களுக்கு துர்க்கதி ஏற் படாது" என்றும் சொல்லப்பட்டிருக்கின்ற பகவத் வாக் கியங்கள் பொய்யாக மாட்டா. அவித்யா மோஹத்தினால் பரமாத்ம நினைவேயில்லாமலும் அவர் உண்டென்பதையே ஒப்புக்கொள்ளாமலுமிருந்து அவரை நிராகரித்த ரூபமான ஆத்ம ஹநந தோஷத்திற்கு ஜீவர்கள் பாத்தியப் பட்டிருக்க லாமே யொழிய, பரமாத்மா இருக்கிறார் என்ற உறுதியான ஞான மேற்பட்டு அவரை ஸாக்ஷாத்கரித்துக் கொண்டவர் களை பரமாத்மா தள்ளிவிட முடியாது. அவர்களும் ஸ்வ ஸ்ரூபியான அவரை விட்டு விலகவும் முடியாது. தன்னையே விட்டு தான் எப்படி தள்ளப்படக்கூடும், அல்லது, விலகக் கூடும்? ஆகையால், ஸ்ரீ கிருஷ்ணன் கோபிகைகளின் வரவை முடிவில் சரியென்று ஒப்புக்கொண்டே தீர வேண்டியதா யிற்று. இப்படி அவர்களுடைய வரவை அங்கீகரித்து அப் பால் அவர் அவர்களுடன் கிரீடித்து வந்ததிலும் சரீரப் புணர்ச்சி ஏற்பட்டுவிடவில்லை. முன் அவதாரத்தில் ஆலிங் கனந்தான் பிரதிஜ்ஞை செய்யப்பட்டதே யல்லாது ஸம் போக ரூபமான சரீரப் புணர்ச்சியல்ல. இப்புணர்ச்சி ஏற் படாமலே இப்புணர்ச்சியாலுண்டாகக் கூடிய ஆனந்தத் தைக் காட்டிலும் வெகு மடங்கு அதிகமானதும் உண்மை யானதுமான பிரம்மானந்தத்தையே அவர்கள் அந்தக்கிரீ டைகளில் அனுபவித்ததால், சரீரப்புணர்ச்சி விஷயமான

தனி விருத்தியே அந்தக் கிரீடா காலங்களில் அவர்களுடைய மனசுகளில் உதிக்கவில்லை. இவ்விதமாக ஸ்ரீ கிருஷ்ணன் அத்யத்புதமாகவும் ஸாமான்ய மனிதப் பார்வையிற்கூட குற்றந் தோன்ற இடமில்லாமலும் கோபிகைகளுடன் ராஸக் கிரீடைமுதலான பாலக் கிரீடைகளைச் செய்துவந்தார். உலகத்தில் மிகவும் அரிதான நித்தியப் பிரம்மசாரித்தன்மை ஸ்ரீ கிருஷ்ணனுக்கே இருந்ததாக பின்னால் வெளியானதைக்கொண்டும், அவர் ஸம்பந்தப் பட்டமட்டில் ஷை கிரீடைகள் யாவற்றும் காம ஸம்பந்தமேயில்லாத மிக்க பரிசுத்தமானதும் அவைகளில் சேர்ந்தவர்களுக்கெல்லாம், அவர்களிடமிருந்த அசுத்தத்தன்மையைப் போக்கடித்து, நற்கதியைக் கொடுத்து வந்ததுமான லோகோத்தரக் கிரீடைகளென்பதே நிச்சயம். அவாப்த ஸமஸ்தகாமனுகிய பகவானுக்கு அந்தக் கிரீடைகளினுல் ஆகவேண்டியதாக ஒன்றுமே இருந்திருக்கக் கூடியதல்ல. கோபிகைகளின் மஹத்தான பூர்வ புண்ணியங்களே அவைகளுக்கு முக்கிய ஹேது. கர்மபலதாதாவாகிய ஸ்ரீ கிருஷ்ணரூபியான பரமாத்மா அந்தக் கிரீடைகள்மூலமாய் கோபிகைகளுக்கு கர்மகதியில் உண்டாகவேண்டிய விசேஷஆனந்தானுபவத்தை அவர்களுக்குக் கொடுக்காமலிருந்திருக்கவே முடியாது. ஷை கிரீடைகளில் ஏதாவது அசுத்தத்தன்மை அல்லது அக்கிரமத்தன்மை கொஞ்சமாகிலும் ஸம்பந்தப் பட்டிருக்குமானுல், ஷை கிரீடாசரித்திரங்களேயே மஹா பாவனங்களென்றும் அவைகளைக் கேட்பவர்களுக்கே நற்கதி யேற்படுமென்றும் ஸ்ரீ சுகரே அபிப்பிராயப்பட்டிருக்க மாட்டார். ஸ்ரீ கிருஷ்ண விஷயத்தில் எவ்வகையிலும் தோஷ மேற்படமாட்டா தென்பது வாஸ்தவமானுலும், கோபிகைகள் ஸம்பந்தப் பட்டமட்டில் ஸ்ரீ கிருஷ்ணனிடத்

தில் பரமாத்மபுத்தியுடன்கூட ஜாரபுத்தியையும் அவர்கள் வைத்தது தப்புத்தானேயென்று மறுபடியும் கேட்டால் மேலே கொஞ்சம் சொல்லுகிறோம். ஸ்ரீ கிருஷ்ணன் தங்களுக்கு அந்தர்யாமியான பகவானே யென்று அவர்கள் எண்ணியிருந்தது உறுதியே. ஆகிலும், அவர்கள் அவரை ஜாரனென்றும் எண்ணியதால், அவருடன் ஏகத்வபாவனையை தங்களுக்கு ஸ்திரப்படுத்திக்கொள்ளாமல், அவர் புமான், தாங்கள் ஸ்திரீகள், அவர் வேறு, தாங்கள் வேறு, என்பதான த்வைதபாவனையை தங்களுடைய பக்தியில் கலந்து கொண்டிருந்தார்களென்று வெளியாகின்றது; அதாவது, அவர்களின் மனசுகளில் சுத்தாத்வைதபாவனை உண்டாகவில்லை யென்று ஏற்படுகிறது. ஆகையால், அவர்களுடைய பக்தி எவ்வளவு தீவ்ரமாயிருந்தபோதிலும் அது அபர பக்திதான் ஆகும். அபரபக்தியின் பலனாக வைகுண்டவாஸம் கிடைத்து காலாந்தரத்தில் மறுபடியும் பூலோகத்தில் ஜன்மத்தை அடையும்படி நேரிடும். இவ்விஷயம் பொதுவாக பின்னால் வேறு பாகத்தில் குறிப்பிடப்படும். கோபிகைகளின் ஸ்திதியை அபேக்ஷித்து, ஸ்ரீ கிருஷ்ணனை விவாஹமே செய்துகொண்ட ஸ்திரீகளின் நிலைமை உயர்ந்தது. விவாஹத்தினால் முன் நான்காவது பாகத்தில் கண்டபடி சாஸ்திரப் பிரகாரம் ஸ்திரீ-புமான்களுக்குள் உண்மையான ஏகத்வம் ஏற்பட்டு ஸ்திரப்பட்டுவிடக் கூடியதால், இவ்வித ஸ்திரீகளுக்கு பரபக்தி உறுதிப்பட்டு கிரமமுக்தியாவது அல்லது ஏகத்வ ஸாக்ஷாத்காரஜ்ஞானமே லபித்தித்து கைவல்ய முக்தியேயாவது நிச்சயமாய் ஏற்பட்டிருக்கும். ஆகையால், கோபிகாஸ்திரீகளுக்கு மேற்கண்டபடி ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் ஜாரபுத்தியுமிருந்ததினால் அம்மட்டில் அவர்களுக்கு நற்கதி தாரதம்மிய விஷயத்தில் குறைவுதான்

இருந்திருக்குமென்பதில் ஸந்தேஹமில்லை. முன் சொல்லிய பல காரணங்களினால் ஸ்ரீ கிருஷ்ணன் ஜாரனல்லவென்பது தெளிவாய் தெரியக்கூடும். எங்கும் மூடத்தனமும் தப்புப் பிதற்றல்களும் அதர்மச்செய்கைகளும் மிகுந்திருக்கிற இக் கொடிய காலத்தில் புத்தியில்லாதவர்கள் துரார்த்தஞ் செய்து தாங்களும் கெட்டு மற்றவர்களையும் கெடுத்துவிடக் கூடிய விதத்தில் பகவத் பக்தர்கள் முன் குறிப்பிட்டபடி பகவானை ஜாரசோரனென்று நிந்தாஸ்துதி செய்வதை இனிமேலாவது நிறுத்திவிட்டால் எல்லோருக்கும் நன்மையுண்டு. பகவானுடைய திவ்ய-கல்யாணகுணங்கள் அனந்தமாயிருக்கும்போது அவைகளைக் குறிப்பிட்டே அவரை ஸ்துதி செய்வதுதான் உத்தமமாகும். ஸ்ரீ பாகவதத்தை செம்மையாய் படித்துப் பார்த்தவர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணன் ஜாரனென்ற துரபிப்பிராயமாவது துர்ப்புத்தியாவது ஒருக்காலமும் உண்டாகாது. அந்த மஹாகிரந்தத்தைப் பார்க்காமலும், பார்க்க யோக்கியதை யில்லாமலுமிருப்பவர்கள்தான் மற்றவர்களிடமிருந்து ஏதோ சில வார்த்தைகளையும் தப்பு நிரூபண-ஸ்துதிகளையும் கேட்டுவிட்டு பிதற்றிக் கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீகிருஷ்ணனுடைய பரமாத்மஸ்தானத்திற்குரிய விசேஷச் செய்கைகளின் மஹிமைகளை உள்ளபடி தெரிந்து கொண்டவர்கள் அவைகளை ஸாதாரணச் செய்கைகளாக பாவித்து விளையாட்டாக நிந்தாஸ்துதிக்கு உபயோகப்படுத்திக் கொள்வது முற்றிலும் தகாத காரியம். ஆகையால், பாகவதர்களே இந்த விஷயத்தில் இனி ஜாக்கிரதையுடனிருக்கவேண்டியதவசியம்.

13. மேலே விவரித்த பிரகாரம் ஸாக்ஷாத் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே தர்மசாஸ்திர நிபந்தனைகளுக்கு இணங்கியும் அவைகளுக்கு விரோதமில்லாமலும் தன்னுடைய தர்மா

தர்மாதீதமான காரியங்களைக்கூட நடத்திக்காட்டியிருப்பதி ஞல், கேவலம் தார்மிகஸ்தானத்திலிருப்போர்கள் அந்த நிபந் தனைகளுக்குக் கட்டுப்பட்டே எப்போதும் நடந்துவர வேண்டுமென்பதே உறுதிப்படுத்தப்படுகின்றது. ஷை தர்ம சாஸ்திர நிபந்தனைகளை மீறி நடப்போர்களுக்கு ஞானப் பிராப்தியின்பொருட்டுள்ள ஸாதனஸம்பத்துக்கள் ஸித்திக் கவே மாட்டா. அதிலும், பிரவிருத்தி தர்மமார்க்கங்களி லிருப்போர்கள் வெகு ஜாக்கிரதையுடனிருந்து அவரவர் களுக்கு ஏற்பட்டிருக்கின்ற நித்திய-நைமித்திககர்மாக்களை யும் உபாஸனைகளையும் சிரத்தையுடன் விதிப்பிரகாரம் செய்துகொண்டுவந்தால்தான் சித்தசுத்தியும் சித்தத்தின் ஐகாக்ரியமும் ஸித்தித்து பகவத்கிருபையால் நிவிருத்தி தர்ம மார்க்கப் பிரவேசத்திற்கு யோக்கியதை உண்டாகக்கூடும். பகவதாஜ்ஞாரூபங்களாகிய சுருதி-ஸ்மிருதிகளை அனுஸரித்து நடப்பதே பகவானுடைய கிருபைக்கு ஹேதுவாகும். அவ ருடைய ஆஜ்ஞைகளை மீறிநடந்துகொண்டே அவருடைய கிருபையைத்தேடுவதான எந்தக்காரியமும் ஸித்திபெறு தென்பதே உண்மை. இக்காலத்தில் சிலர்கள் தங்களை பாக வதர்களென்று அல்லது யோகிகளென்று சொல்லிக்கொண்டு அவர்களுக்கு வர்ணுசிரம கிரமப்படி ஏற்பட்டிருக்கின்ற நித்திய-நைமித்திககர்மங்களை ஒழுங்காகச் செய்து வராமல், பகவானை எப்போதும் நாமஸங்கீர்த்தனங்களால் பஜனை செய்து, அல்லது யோகாப்பியாஸஞ் செய்து கொண்டி ருந்தால் போது மென்று எண்ணங் கொண்டிருக்கிறுர்கள். இது சரியென்று. பகவந்நாமஸங்கீர்த்தனம் யோகாப்பி யாஸம் இவைகள் உத்தம காரியங்கள்தான். ஆனுல், இவை நித்திய-நைமித்திககர்மாசரணையுடன் சேர்ந்திருந் தால்தான் பலவத்தாகும். ஓர் உதாஹரண மெடுத்துக்

கொள்வோம். ஒரு பிதாவுக்கு மூன்று குமாரர்களிருக்கின்றார்கள். இரண்டாவது குமாரன் பிதாவிடமே எப்போதுமிருந்து அவரைப் பார்த்துக்கொண்டும் "அப்பா! அப்பா!" என்று கூப்பிட்டுக்கொண்டும் கொஞ்சிவிளையாடிக் கொண்டுமிருக்கின்றான். எப்போதாவது அவனிடம் பிதா ஒரு காரியத்தைச் சொல்லி "அதைச் செய்" என்றால் அவன் செய்கிறதில்லை. இப்படி பிதாவின் சொல்லை மீறி நடந்தாலும் அவன் பிதாவைவிட்டு விலகுகிறதில்லை. "அப்பா! அப்பா" என்று சொல்லிவருவதை நிறுத்துகிறதுமில்லை. மூன்றாவது குமாரன் பிதாவின் ஸமீபம் வருகிறதேயில்லை. அப்பா அப்பாவென்று கூப்பிட்டுத் தொந்தரவு செய்கிறதுமில்லை. ஆனால், அவனை பிதா கூப்பிட்டு குறிப்பிட்ட காரியத்தைச் செய்யவேண்டுமென்று எப்போது ஆஜ்ஞை செய்தாலும் அந்தக்காரியத்தை அவன் உடனேசெய்து முடித்துவிட்டே மற்ற வேலைகளை கவனிப்பான். இவ்விருவர்களுக்குள் எந்தக் குமாரன்பேரில் பிதாவுக்கு அன்பும் கிருபையும் அதிகமாயிருக்கக்கூடியவை? தன்னுடைய கட்டளைப்படி நடந்துவருகின்ற மூன்றாவது பையன்பேரில்தான் அவருக்குப் பிரியம் அதிகமாயிருக்கும். இதுபோல், பகவானுடைய ஆஜ்ஞாரூபங்களாகிய சுருதி-ஸ்மிருதி விதிகளின்படி ஆசரிக்கப்பட்டு வரவேண்டிய கர்மங்களை நன்றாகச் செய்து வாராமல், அவருடைய தியானத்தைச் செய்து கொண்டிருப்பவர் அல்லது நாமாக்களைச் சொல்லிக்கொண்டிருப்பவர் பேரில் அவருக்கு கிருபை உண்டாகக்கூடியதல்ல. யோகாப்பியாஸம் நாமஸங்கீர்த்தனம் இவைகளைச் செய்யாமலிருந்த போதிலும் சாஸ்திர விஹிதமான கர்மங்களை ஒழுங்காய்ச் செய்து வருகிறவர்பேரில்தான் பகவத்கிருபை வாஸ்தவத்தில் ஏற்படும். குறிப்பிட்ட கர்மங்களை கிரமமாய்ச் செய்துகொண்டும்,

யோகாப்பியாஸ-நாமஸங்கீர்த்தனங்களினுல் பகவானை தியானித்துக்கொண்டும் பஜித்துக்கொண்டு மிருப்போர் மேற்கண்ட இருவர்களையும்விட மிகவும் உத்தம ரென்பதில் தடையில்லை. இவர் விஷயத்தில் அதிகமாகவே பகவத்கிருபை வெகு சீக்கிரத்தில் உண்டாகுமென்பது நிச்சயமே. மேலே சொல்லிய உதாஹரணத்தில் கண்ட இரண்டு குமாரர்களையும் அபேக்ஷித்து, பிதாவிடமேயிருந்து கொண்டும், அவரை பஜித்துக் கொண்டும், பிதாவின் ஆஜ்ஞைகளையும் உடனுக்குடன் தவறுமல் சிரத்தையாய் நடத்திக்கொண்டும் வருகின்ற முதலாவது குமாரனிடம் அந்த பிதாவுக்கு வெகு அதிகமாகவே திருப்தியிருக்குமென்பது நியாயந்தான். ஆகையால், பகவத்கிருபையிலும் தங்களுடைய நற்கதியிலும் உத்தேசமுள்ள பகவத்பக்தர்கள் யோகிகள் எல்லோரும் சாஸ்திர விஹிதமான வர்ணுசிரம கர்மங்களைக் கைவிடாமல் செம்மையாய்ச் செய்து வரவேண்டும். தகுந்த அதிகாரிகளாயிருப்பவர்கள் ஸர்வகர்மங்களையும் ஸன்யாஸத்தினுல் விஸர்ஜனஞ்செய்துவிட்டு பரமாத்மத்தியானபரர்களாகவேயிருந்து வருவதற்கும் சாஸ்திரம் இடங்கொடுத்திருக்கின்றது. இந்தப்படி சாஸ்திர விதியை அனுஸரித்து கர்மபரித்தியாகத்தைச் செய்வதும் ஸர்வோத்தம காரியந்தான். இவ்விதமாக சாஸ்திரீயத்தியாகத்தைச் செய்யக்கூடாதவர்கள் கர்மத்தியாகத்தை ஒருக்காலமும் செய்யவே கூடாது; செய்தால் பாஷண்டர்களாகி ஈசுவர தண்டனைக்குள்ளாவார்கள். வர்ணுசிரமிகளான தார்மிகர்கள் யாவரும், ராஜாவுக்குள்ளடங்கிய உத்தியோகஸ்தர்களைப்போல், பகவதாஜ்ஞையால் தனித்தனியே குறிப்பிட்ட கர்மஸ்தானங்களில் அமர்ந்தவர்கள். எவ்விதம், லௌகிக உத்தியோகத்திலிருப்பவருக்கு வேலை செய்யமுடியாவிட்டாலும், வேலை

போதுமென்ற புத்தியுண்டாலும், ஸர்க்கார் விதிப் படிக்குள்ள ராஜீநாமாவைக் கொடுத்துவிட்டு வேலையின் தொந்தரவிலிருந்து நீங்கிக் கொள்ளலாமோ, அவ்வித மாகவே பிரவிருத்தி தார்மிகஸ்தானத்திலிருப்பவருக்கு வைராக்கியத்தினாலும் வித்யா பலத்தினாலும் கர்மத்தியாகத் தில் புத்தியுண்டானால், நிவிருத்தி தர்ம விதிப்படிக்குள்ள ஸன்யாஸத்தைக் கிரமமாய்ச் செய்துகொண்டு கர்ம மார்க் கத்திலிருந்து விலகிக்கொள்ளலாம். இப்படிக்கன்னியில், தான் வர்ணாசிரமக் கட்டுப்பாடுகளைக் கடந்த பகவத் பக்தன் அல்லது யோகீசுவரன் என்று சொல்லிக்கொண்டு கர்மத்தி லிருந்து நழுவிப்போய் விட்டால், பிரஷ்டத்தனந்தான் பல னாகும். விதிப்படிக்குள்ள ராஜீநாமாவைக் கொடுக்காமல் ஸர்க்கார் உத்தியோகஸ்தர் தனக்கு ஏற்பட்டிருக்கிற வேலை யைச் செய்யாமல் நிறுத்தி விட்டால், இராஜாவின் கோபத் திற்கும் தண்டனைக்குந்தான் உள்ளாவார். பகவத்பக்தர்கள் என்றாவது, அல்லது யோகிகள் என்றாவது தனி வகுப்புகள் கிடையாது. பக்தி, யோகம் இரண்டும் எல்லா வர்ணதர்மங் களிலும் ஆசிரமதர்மங்களிலும் பலவிதமாய்ச் சேர்ந்தே ஸம் பந்தப்பட்டிருக்கின்றன. வரணாசிரம விதிகளை பேதித்துக் கொண்டு உபாஸனைகளையாவது யோகாப்யியாஸங்களையா வது செய்துவரலாமென்று சாஸ்திரம் கொஞ்சங்கூட இடங் கொடுக்கவே இல்லை. பக்தியும் யோகமும் ஞானஸாதனங் கள். ஸகல ஞான ஸாதனங்களுக்குள்ளும் ஸத்கர்மானுஷ் டானம் அடிப்படையான (Foundation) முக்கிய ஸாதனம். அடிப்படையை பலப்படுத்திக்கொள்ளாமல் மேல் ஸாத னங்களைத் தேடுவது உபயோகப்படாது. ஞானத்திலும் மோக்ஷத்திலும் உத்தேசமுள்ள பிரவிருத்தி தர்மமார்க்க ஸ்தர்கள் தங்களுக்கு அவசியமாய்த் தேவையாயிருக்கின்ற

சித்தசுத்திக்கு ஹேதுவானதும் யோக-பக்திகளுடன் சேர்ந்திருக்கின்றதுமான ஸத்கர்மத்தை விட்டுவிட்டு, தனியாக பக்திமார்க்கத்திலாவது ஹடயோகமார்க்கத்திலாவது பிரவேசிக்கமாட்டார்கள். இப்படிப் பிரவேசிப்பவர் எவரோ, அவருக்கு ஞான-மோக்ஷங்களில் உத்தேசமில்லை யென்பதும் ஹடயோக-பக்திகளினால் ஏற்படக்கூடிய சில அவாந்தர பலன்களாகிய தீர்க்காயுஸ், சரீரபலம், ஆரோக்கியம், அணிமாதி ஸித்திகள், ஐசுவர்யவிருத்தி, ஸந்ததிவிருத்தி முதலானவைகளையே அவர் முக்கிய பலன்களாக உத்தேசித்திருக்கிறாரென்பதுமே நிச்சயம். இவ்வித பலன்கள் காமங்களேயல்லாமல் வேறல்ல. காமங்களிலேயே நோக்கங்கொண்டு செய்யப்படுகின்ற பக்தியாவது யோகமாவது உண்மையான பக்தியுமாகாது, யோகமுமாகாது. அன்றியும், நித்திய-நைமித்திக கர்மங்களை ஒழுங்காய்ச் செய்து வருபவருக்குத்தான் காம்ய கர்மங்களும் பலவத்தாகக் கூடியவை. அதாவது, வேதவிஹிதமான கர்மங்களிலிருந்து நழுவிப் போயிருக்கிறவருடைய காம்யகர்மங்களும் பலிக்கக் கூடியவையல்ல. ஆகையால், அவரவர்களின் தனித்தனியான உத்தேசம் எதுவாயிருந்தபோதிலும், பிரவிருத்தி தர்ம மார்க்கத்திலிருக்கின்றவர்களும் நிவிருத்தி தர்ம மார்க்கத்தில் முன் சொல்லிய பிரகாரம் சாஸ்த்ரோக்த விதிப்படி ஸன்யாஸஞ் செய்து பிரவேசிக்காமலிருப்பவர்களுமான எல்லோருக்கும் ஸத்கர்மானுஷ்டானம் மிக்க அவசியமென்பதே ஸித்தம். இங்கு மற்றொரு விஷயமும் கவனிக்கப்படவேண்டியதுண்டு. பக்தியில் யாருக்கும் அதிகார மிருக்கின்றது. த்விஜரானாலும், சூத்திரரானாலும், பஞ்சமரானாலும், யாரும் சாஸ்திரக்கிரமப்படி பக்திமார்க்கத்தில் ஈடுபட்டு நற்கதியைத் தேடிக்கொள்ளலாம். ஹடயோகம் இப்படியல்ல. இது முக்கியமாய் வானப்

பிரஸ்தாசிரமத்திற்குரியது. சாஸ்திரப் பிரகாரம் வானப் பிரஸ்தாசிரமத்தில் பிரவேசிக்க அதிகாரியா யிருக்கின்ற பிராம்மண-க்ஷத்திரியர்களுக்குத்தான் அந்த யோகாப்பிய ஸத்தை (அதுவும் குருமுகமாய்) செய்துவர அதிகாரமுண்டு. மற்றவர்களால் அப்பியஸிக்கப்பட்டால், அது உலகத்தி லுள்ள மூடஜனங்களை மோஹிக்கச் செய்ய மாத்திரம் உபயோகப்படுமே யல்லாது உண்மையான நன்மையின் பொருட்டு ஏற்படாதென்பதையும், முடிவில் அனர்த்தமே அதற்குப் பலனுகு மென்பதையும் எல்லோரும் தெரிந்துக் கொள்ளவேண்டும்.

ஐந்தாவது பாகம் முற்றும்.

# தர்ம விமர்சனம்

## ஆறுவது பாகம்

## ஸகுணோபாஸனம்

1. ஸாமான்ய அர்த்தத்தில் "உபாஸனம்" என்பது சித்த விக்ஷேபத்துடன் கூடிய ஜீவனுக்கு விதிக்கப்பட்டிருக்கின்றது. சித்தம் நாநாப்பிரகாரமாக பலவிடங்களிற்சென்று அலைந்துகொண்டிருப்பதை நிறுத்தி உபசாந்தியடையும் பொருட்டு, அதை சாந்தாத்மஸ்வரூபியான பிரம்மம் என்ற பரம் பொருளின் ஸமீபத்திலேயே யிருந்து வரும்படி செய்விப்பது உபாஸனமாகும். இந்த அர்த்தத்துடன் கூடிய உபாஸனம் என்ற பதம் துவைத நிலைமையில் பக்தியால் செய்யப்படுகின்ற காரியத்தைத்தான் குறிப்பிடக்கூடியது. பரம் பொருளாகிய நிற்குணப் பிரம்ம வஸ்து இரண்டற்றதாகவும் அகண்டமாகவுமிருப்பதினால், "அதின் ஸமீபத்திலிருப்பது" என்று சொல்லப்படுகின்ற வார்த்தைகளுக்கே அர்த்தங்கிடையாது. அதாவது, சுத்தப் பிரம்மம் உபாஸன விஷயமாயிருக்க முடியாது. ஆகிலும், குணக்கட்டுக்குட்பட்டிருக்கின்ற உபாஸகனாகிய ஜீவன் தன்னுடைய ஜீவத்தன்மையே மித்யையென்றும், தான் உண்மையில் நிர்க்குணப் பிரம்மமே யென்றும் நிரந்தரமாக மனவலினால் பாவித்துக் கொண்டிருப்பதே நிர்க்குணோபாஸனமென்று கூறப்படுகின்றது. அதாவது, நிர்க்குணப்பிரம்மமாகவே எப்போதும் இருந்து வருகின்ற தன்னுடைய நிஜஸ்வரூபத்திலேயே

ஸ்திரமாய் தான் இருப்பதான பாவனை பலப்பட்டுத் தொடர்ந்திருப்பதே இந்த நிர்க்குணோபாஸனமாகும். இது வே அத்வைத பிரம்மானுபூதிக்கு மிகவும் அந்தரங்க ஸாதன மாகிய நிதித்தியாஸன மென்ற ஞானப்பியாஸம். இது கேவலம் மனோபாவனுரூபமாயிருப்பதாலும், தான் பிரம்ம மாகவேயிருப்பதான நேர் அனுபூதிரூபமாயில்லாததாலும், இதை பிரம்மத்திற்கு அருகாமையில் இருப்புப்போல் வர் ணித்து, இதற்கு நிர்க்குணோபாஸனமென்ற பெயர் கொடுக் கப்பட்டிருக்கின்றதென்று தெரிந்துகொள்ளவேண்டும்; அல் லது, "ஸமீபத்தில் இருத்தல்" என்பதற்கு "அதிஸமீபத் தில், அதாவது, ஒன்ருகவே இருத்தல்" என்றும் விசே ஷார்த்தம் செய்யப்படலாம். இந்த நிர்க்குணோபாஸனம் பலப்பட்டுவிட்டால் மனோவிருத்திகள் அடங்கி, ஸமாதி ஏற்பட்டு, அதில் அபரோக்ஷாத்மஜ்ஞானம் விளங்கி, அப் பால் கைவல்யமோக்ஷமே ஸித்தித்து விடுகின்றது. இவ்வித மோக்ஷஸித்தியே நிர்க்குணோபாஸனத்தின் நேர் உத்தேசம். மோக்ஷத்தை புருஷார்த்தமாகக்கொள்ளாத ஹிந்துவில்லாத வர்களிடம் நிர்க்குணோபாஸனம் இருக்கக் கூடியதல்ல. ஆகை யால், தர்ம-மோக்ஷங்கள் எப்படி உலகத்தில் ஹிந்துக் களுக்கு மாத்திரம் புருஷார்த்தங்களாயிருக்கின்றனவோ, அப்படியே மேலான நிதித்தியாஸனமென்ற நிர்க்குணோபா ஸனமும் ஹிந்துக்களுக்கு மாத்திரமுள்ளது. மற்ற மதஸ்தர் களால் மதஸம்பந்தமாய்ச் செய்யப்படுகின்ற தியானுதிகள் யாவற்றும் (Meditation, Contemplation etc.) துவைத பாவனையுடன் கூடிய ஸகுணத்தியானுதிகளைத்தவிர வேறல்ல. மோக்ஷத்தில் உத்தேசத்துடன் சேராத இவ்வித தியானுதி கள், முன் ஐந்தாவது பாகத்திற்கண்டபடி, உபாஸனங் களாகமாட்டா. இப்படியிருந்தும், இவைகளையும் ஸகுணோ

பாஸனங்களென்று வெகுபெயர்கள் சொல்லிக்கொண்டிருக்கின்றார்கள். இந்தப்படி சொல்லிவருவதற்கு முக்கிய காரணம் இப்பால் கலியுகத்தில் ஹிந்துக்களுக்குள்ளாகவே வெகு ஜனங்கள் மேலான அத்வைதக்கொள்கையிலிருந்து நழுவிப்போய், கீழான த்வைத நோக்கங்களையே தங்களுக்குப் பலவாறாக ஸ்திரப்படுத்திக்கொண்டேயிருந்தும், கைவல்யமோக்ஷத்தில் உத்தேசமில்லாமலேயிருந்தும், ஸகுணப் பிரம்மலோகங்களுக்குப் போவதையே மோக்ஷமென்று எண்ணி அதற்குத் தகுந்த விதங்களில் பக்திமார்க்கத்தில் ஈடுபட்டிருந்தும் வந்திருப்பதேயாகும். இப்படி ஹிந்துக்களுக்குள்ளாகவே அனேகர்களுக்கு த்வைத புத்தி ஸ்திரப்பட்டிருந்தபோதிலும், பிரம்மமாகிய பரமாத்மாவே ஏகமான ஸத்தியப்பொருளென்றும், அவர் ஸர்வவியாபீ, அதாவது, அவர் இல்லாத இடமே (வஸ்துவே) கிடையாதென்றும், ஸகல ஜகத்தும் அவரிடத்திலேயே பிரதிஷ்டையை அடைந்து விளங்குகிறதென்றும், அதாவது, அவரே ஜகத்காரண வஸ்து, அவர் இல்லாவிடில் ஜகத் இருக்கமாட்டாதென்றும், அவரே ஸகல ஜீவர்களின் ஹிருதயங்களிலும் ஸச்சிதானந்தஸ்வரூபியாய் பிரகாசிக்கின்ற ஆத்மா, அவரே நான் (ஜீவாத்மா) நானே அவர், காணப்பட்டதும் காணப்படாததுமான ஸகலமும் அவரே, கால-தேச-பதார்த்தங்களுக்கு அதீதமாயுள்ளதும் அவரே, அவர் அரூபீ, வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதவர் என்றுமுள்ள அத்வைத பரமான பரமாத்மதத்வங்களை வெளிப்படுத்திய வேத வாக்கியங்களையும் அவர்கள் உச்சரித்துக்கொண்டும், தங்களுடைய த்வைதக்கொள்கைக்கு அநுகுணமாக அவ்வாக்கியங்களுக்கே அர்த்தங்களைச் செய்து விடுவதாய் வீணாக சிரமப்பட்டுக் கொண்டும் வந்திருக்கின்றார்கள். மேற்கண்ட தத்வங்கள்

இந்தப்பிரகாரம் துவைத நோக்கத்துடன் கூடிய ஹிந்துக் களிடமும் மாத்திரம் நிற்காமல், நாளடைவில் இவ்விந்தியா வுக்கு ஸமீபத்திலிருக்கின்ற வெளிப்பிரதேசங்களிலுள்ள ஹிந்துவில்லாதவர்களுக்கும் கொஞ்சங் கொஞ்சமாக இத் தேசவாஸிகள் மூலமாக வெளிப்படுத்தப்பட்டிருந்ததால், இந்த ஆசியா கண்டத்திலேயே உண்டாகியும் இவ்வுலகில் மற்ற கண்டங்களிலும் வியாபித்து வந்திருக்கின்றதுமான புது மதாந்தரங்களுக்கு ஸம்பந்தப்பட்ட புஸ்தகங்களிலும் ஷை தத்வங்கள் ஒருவிதமாய் கண்டெழுதப்பட்டும் வந் திருக்கின்றன. ஆனால், ஷை தத்வங்கள் உண்மையாயிருக்கு மானால் அவைகள் ஷை மதாந்தரஸ்தர்களுடைய துவைதக் கொள்கைக்கு விரோதப்படுமேயென்ற ஆலோசனை அவர் களிடம் பூர்ணமாய் இருந்திருப்பதில்லையென்றும் வெளியா கின்றது. அவர்களும் ஹிந்து துவைதவாதிகளைப்போலவே ஷை தத்வங்களுக்கு ஏதோ ஒருவிதமாக அர்த்தங்களைக் கற் பிக்க யத்தனித்தும் வருகின்றார்கள். இது நிற்க. ஹிந்து வில்லாதவர்களுள்பட எல்லா துவைதவாதிகளும் தங்கள் தங்களுடைய தியானுதிகளை மேற்கண்டபடி கடவுளின் உபாஸனங்கள்தானென்றும், தாங்கள் உத்தேசித்திருக் கின்ற பரலோகப்பிராப்தியும் அதிலேற்படுகின்ற சுகலாபங் களுமே மனிதனுக்கு நற்கதியாகுமென்றும் சொல்லிக் கொண்டிருந்தபோதிலும் அவர்களில் யாருக்கும் முன் சொல்லிய நிர்க்குணோபாஸனம் கிடையாதென்பதும், அது கைவல்யமோக்ஷத்தின்பொருட்டு ஞானமார்க்கத்திலிருந்து வருகின்ற அத்வைதியான உத்தம தார்மிக ஹிந்துவுக்குத் தான் உண்டென்பதும் நிச்சயமே.

2. வாஸ்தவத்தில் நிர்க்குணமாயும், ஏகமாயும், அகண்டமாயும், அரூபியாயும், அவாங்மானஸகோசரமா

யும், சுத்தஸச்சிதானந்தஸ்வரூபியாயுமுள்ள பிரம்மப் பொருள், "ஸமீபத்தில் இருப்பது" என்ற ஸாமான்ய அர்த்தத்தில், உபாஸனத்திற்கு விஷயமாக வேண்டுமானால், உபாஸகனுடைய கீழான அல்ப நிலமைக்குத்தக்கபடி அப் பொருளுக்கு குணங்களைக் கற்பித்து அவனுடைய மன துக்கு புலப்படக்கூடியவிதமாக அதை இறக்கி வைத்துக் கொள்ளவேண்டியதவசியமாகும். சரீரத்திற்கும் கிஞ்சிஜ் ஞாதி அல்பகுணங்களுக்கும் உபாஸகன் கட்டுப்பட்டு நிற் பதுபோல், பரமாத்மாவை ஒரு ரூபத்திற்கும் ஸர்வஜ்ஞாதி மஹாகுணங்களுக்கும் கட்டுப்பட்டிருப்பதுபோல் செய்து கொண்ட பிறகுதான் அவருடைய ஸமீபத்திலிருப்பதான பாவனையுடன் அவரை உபாஸித்து வருவது ஸாத்தியப் படக்கூடும். அவருடைய ஸமீபத்திலிருப்பதென்றால், உபா ஸகன் ஸகல இந்திரியங்களுடன்கூடிய தன் மனதுக்கு அவரையே விஷயமாகச்செய்து கொள்வதென்று அர்த்தம். உபாஸனமென்பது முக்கியமாய் மனதின் காரியமேயானு லும், ஸாதாரண மனிதனுடைய மனதினால் பாவிக்கப்படக் கூடிய விஷயங்கள் பெரும்பாலும் இந்திரியவிஷயங்களா யிருக்கிறபடியால் கண், காது முதலான ஞானேந்திரியங் களை பரமாத்மாவின் விக்கிரஹதர்சனம், கல்யாணகுண சிரவணம் முதலானவைகளில் சேர்ப்பித்துக்கொண்டும், வாக், கை, கால் முதலான கர்மேந்திரியங்களை அவருடைய ஸ்தோத்திர-ஸங்கீர்த்தன-அர்ச்சன-பிரதக்ஷிணாதி காரியங் களில் நியமித்துக்கொண்டும், மனதை அவருடைய ஸ்வரூ பத்தியானத்திலிருக்கும்படிசெய்துகொண்டும் இருக்கவேண் டும். அதாவது, இந்திரியங்களின் ஸ்வபாவங்களுக்குத் தக்க படி, அவைகளுக்கு நல்வழியில் போக்குவிட்டுக்கொண்டே மனதை உபாஸனத்தில் ஸ்திரப்படுத்திக்கொள்ளவேண்டும்.

இப்படிப் போக்குவிடாமல் இந்திரியங்களைக் கட்டிப்போட்டு விட்டு மனதினால்மாத்திரம் தியானஞ்செய்துவருவதற்குப் பெரும்பாலும் ஜனங்களுக்கு சக்தியிருக்கமாட்டாது. அநேகமாய் இவர்களுடைய மனதுகள் இந்திரியங்களுக்கு அனுஸாரியாகவே யிருக்கக்கூடியவை. இவர்கள் பலாத்காரமாக இந்திரியங்களை அடக்கி பகவத்தியானத்தில் புத்தியைச்செலுத்த யத்தனித்தாலும், இவ்வித தியானத்தில் தங்களுடைய இந்திரிய விஷயமாகவே பகவத் ஸ்வரூபமும் காணப்படுவதுந் தவிர இந்திரிய விஷயங்கள் ஸம்பந்தமாகவே மனோராஜ்யங்களும் உபாஸனகாலத்திலேயே விஸ்தாரமாய் பெருகச்செய்யப்பட்டு மனோவிக்ஷேபம் அதிகமாகிவிடவுங்கூடும். கட்டுக்கடங்காத இந்திரியங்களின் போக்குகளை அனுஸரித்து மனது சஞ்சலப்படுவதைக் குறைத்து விடுவதற்காகவே ஆரம்ப அப்பியாஸத்தில் உபாஸகருக்கு பாஹ்ய (ஸ்தூல) பூஜை அவசியமென்று ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. முதலில் வெளிப்பூஜாதிகளில் அப்பியாஸங்களைச் செய்யாமல் பகவத்தியானத்தைச் செய்ய யத்தனிப்பவர்களின் மனதுகள் அவர்களுக்கு வசப்படாமல் ஷை தியானகாலத்திலேயே ஊர் சுற்றிக் கொண்டிருப்பது வெகுபெயர்களுக்கு அனுபவ ஸித்தம். இந்திரியங்களின் வியாபாரங்களுக்கும் கொஞ்சம் போக்குவிட்டு அவைகள் பூராவும் பகவத்கைங்கர்யாதிகளில்மாத்திரம் விநியோகப்படும்படி செய்து, அப்பால் மனதை பகவத்ஸ்வரூபத்தியானத்தில் ஈடுபடும்படிசெய்ய யத்தனிப்பதே கிரமமான மார்க்கம். இந்தப்பிரகாரம் அப்பியாஸிகளுடைய வெளிஇந்திரியங்களுக்கும் பகவத்கைங்கர்யகாரியம் ஏற்படவேண்டியதாயிருப்பதால், அவ்வித கைங்கர்யத்திற்கு பாத்திரரான பகவானுக்கும் ஒரு வெளிப்படையான ஸ்தூலரூபத்தைக் கற்பிக்க வேண்டியதும் அவ

சியமாயிருக்கின்றது. உண்மையில் அரூபியான பரமாத்மா வுக்கு இப்படி ஸ்தூலரூபத்தைக் கற்பிக்கலாமாவென்று சங்கைப்படவேண்டாம். அவருக்கு எல்லாவித ரூபங்களும் பொருந்தக்கூடியவைதான். இது பின்னால் தெளிவு படுத்தப் படும். அன்றியும், எவ்விதமான ரூபகல்பனத்தைச் செய்தாலும் பரமாத்மாவுக்குக் குறைவு வந்துவிடமாட்டாது. உபாஸகரின் கீழான ஸ்தானத்திற்குத் தகுந்தவிதமாக பரமாத்மா தணிந்திருந்து பக்தியால் செய்யப்பட்ட அல்பமான கைங்கர்யங்களைப் பெற்றுக்கொண்டுவிட்டதினால் அவருடைய மேன்மைக்கு ஹானியில்லை. பெரும் சக்கிரவர்த்தி ஸ்தானத்திலிருப்பவர் தன்னிடம் அன்புடன் ஒரு சிறு குழந்தை ஒரு அல்பமான கற்கண்டுத்துண்டைக் கொடுக்க வந்தால், அதை அவர் வணங்கிக் குனிந்து பெற்றுக்கொண்டுவிட்டால் அவருடைய உயர்ந்த ஸ்தானத்திற்குக் குறைவுண்டாகிவிடாது. இப்படி அவரைத் தணியும்படி செய்வதினால் அக்குழந்தைக்குக் கெடுதலுமில்லை. குழந்தையின் தாழ்ந்த நிலைமையை உத்தேசித்து அவர் வணங்கித் தணியும்படி ஏற்படுகின்றது. இப்படி அவர் தணிந்து நிற்பது குழந்தையின் ஸந்தோஷத்தின்பொருட்டு அவசியமாயிருக்கின்றது. அவருக்கு அதினால் நஷ்டமுமில்லை, லாபமுமில்லை.

3. ஆனால், சிலர்கள் அடியிற்கண்டபடி எண்ணக்கூடும். குழந்தையின் உயரத்திற்குத் தக்கபடி சக்கிரவர்த்தி குனிந்து கொண்டு குழந்தையை ஆதரித்து ஸந்தோஷிக்கச் செய்வது அவருக்குத்தகாத காரியமல்ல; இது அவருடைய மனித இயற்கைக்கு விரோதமாகமாட்டாது. ஸ்தூல விஷயங்களில் பெரும்பாலும் பற்றுதலுடன் எப்போதும் வெளிமுகப்பட்டிருக்கின்ற இந்திரியங்களுக்கு விஷயமாகக் கூடிய ஸ்தூலரூபத்தை பரமாத்மாவுக்குக் கற்பிக்கிறதாயிருந்தால்

இது அவருடைய அரூபிஸ்வரூபத்திற்கு விரோதப்படுமே யென்றும், இப்படி பரமாத்மாவின் இயற்கைக்கு விரோதமாகக் கற்பிக்கப்பட்ட ரூபத்தில் அவர் இருப்பதாக பாவிப்பதும் நியாயமில்லையே யென்றும் கேட்கலாம். சற்று கவனித்துப் பார்த்தால், ஸ்தூலரூபகல்பனத்தினுல் பரமாத்மஸ்வரூபத்திற்கு விரோதம் ஏற்படவில்லையென்றே வெளியாகும். பரமாத்மா உண்மையில் அரூபீ என்பதில் ஸந்தேஹமில்லை. ஆகிலும், அவரிடம் ஸ்தூலரூபகல்பனம் ஸாத்தியப்படக்கூடும். ஸாமான்யமாய் இவ்வுலகத்தில் எங்கும் வியாபித்திருக்கின்ற மின்சாரத்திற்கு (Electricity) ஒரு விதத்தில் ரூபமுமில்லை யென்றே சொல்லலாம். இது ஓர் விசித்திர வளைவுள்ள கம்பியில் (Spiral wire) ஸம்பந்தப்பட்டு ஜ்யோதிர்மயமாய் பிரகாசித்தால், கம்பியின் வளைவுத்தன்மையை மின்சாரத்தில் ஆரோபித்து மின்சாரமே வளைந்திருப்பதாக பாவிக்கப்படலாம். அதாவது, ரூபவத்தான பதார்த்த ஸம்பந்தத்தினுல் அரூபவத்தான தத்வத்தில் ரூபவத்வ கல்பனம் ஏற்படக்கூடும். தவிரவும், அரூபவத்தான மின்சாரத்தில் ரூபவத்தான கம்பி இருப்பதாகச் சொல்லக் கூடாமலிருந்தபோதிலும், ரூபவத்தான கம்பியில் அரூபவத்தான மின்சாரம் இருப்பதாகச் சொல்லலாம். இப்படியே, அரூபியான பரமாத்மாவிடத்தில் ஸ்தூல விக்கிரஹம் இருப்பதாகச் சொல்லுவதற்கில்லையானுலும், ரூபவத்தான ஸ்தூல விக்கிரஹத்தில் அரூபியான பரமாத்மா இருக்கக்கூடுமென்றே சொல்லவேண்டும். அதாவது, அரூபியான தத்வத்தில் ரூபவத்தான வஸ்து இருப்பதாகச் சொன்னுல்தான் விரோதம் ஏற்படும். [ஷை தத்வத்தில் அவ்வித வஸ்துவின் தோற்றம் இருப்பதாக எண்ணப்படக் கூடுமே யல்லாது, அவ்வஸ்துவே அதிலிருப்பதுபோல் சொல்லக் கூடாது.] ரூபவத்தா

யிருக்கின்ற வஸ்துவில் அரூபியாயிருக்கின்ற தத்வத்தின் ஸம்பந்தமிருக்கலாம், இதில் விரோதமில்லை. ஆகையால், அரூபியும் ஸர்வவியாபியுமான பரமாத்மாவின் ஸம்பந்தம் ஸ்தூல விக்கிரஹாதிகளில் இருப்பது அவருடைய இயற்கையான ஸ்வரூபத்திற்கு விரோதமாகாது. கம்பியின் வளைவுத்தன்மை அக்கம்பியிலுள்ள மின்சாரத்திற்கே ஆரோபிக்கப்படுவதுபோல், விக்கிரஹத்திலுள்ள பரமாத்மாவும் விக்கிரஹரூபியாகவே இருப்பதாக பாவிக்கப்படலாம். மேலும், பரமாத்மாவின் ஸர்வவியாபித்தன்மை எங்கும் பரிபூர்ணமாயுள்ளது. ஸ்தூல ரூபத்துடன் கூடிய வஸ்துக்களிலும் ஸம்பூர்ணமாய் பரமாத்மஸம்பந்தம் இல்லாமலிருப்பதற்கில்லை. வேதத்தினால் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறபடி அரூபங்களாகவும் ரூபஸஹிதங்களாகவுமிருக்கிற ஸகல வஸ்துக்களிலும் பரமாத்மா இருக்கிறாரென்பது, அதாவது, மனது முதலான ஸூக்ஷ்ம வஸ்துக்களிலும் கல் முதலான ஸ்தூல பதார்த்தங்களிலும் எங்கும் அவர் இருந்து வருகிறாரென்பது நிச்சயமாதலால், ஸ்தூலாதி ஸகல ரூபங்களும் அவருக்குப் பொருந்தக்கூடியவைதான். அவர் "ஏகர்" என்றும் "அகண்டர்" என்றும் சொல்லப்பட்டிருப்பதால், அவர் ஒரு வஸ்துவில் அதிகமாயிருக்கிறாரென்றாவது மற்றதில் குறைவாயிருக்கிறாரென்றாவது சொல்லுவதற்கில்லை. எக்காலமும் நிரவயவராகவும் பிரிக்கப்படத்தகாதவராகவுமிருக்கின்ற அகண்டபரமாத்மா எல்லாவிடங்களிலும், ஒவ்வொரு வஸ்துவிலும், முன் சொல்லியபடி பரிபூர்ணமாய் இருப்பதாகவே அறிந்துகொள்ளவேண்டும். இப்படி ஒரேவிதமாக எங்கும் பரமாத்மா நிறைந்திருப்பது வாஸ்தவமாயிருக்கையில், அவர் ஹிருதயம், ப்ருமத்தியம், அர்ச்சை, மாதா, பிதா, குரு, பர்த்தா, அக்னி, ஸூர்யன்,

அதிதி, யதி முதலான சில இடங்களில் மாத்திரம் பிரகாசிப்பதாகவும், மற்ற இடங்களில் பிரிகாசிக்கவில்லை யென்றும் உலகத்தில் வியவாஹாரம் இருந்துகொண்டிருக்கிறது. இவ்விதமாக சாஸ்திரத்திலும் குறப்பிடப்பட்டிருக்கிறது. அவர் பிரகாசிக்கின்ற இடங்கள் அவருடைய உபலப்திஸ்தானங்களென்று சொல்லப்படுகின்றன. பொதுவாகவே ஜீவர்களுடைய பார்வைகளின் சக்திக்குறைவை உத்தேசித்து அவ்வித உபலப்தியிருக்கக்கூடாத ஸ்தானங்களாக பெரும்பாலும் உலகத்திலுள்ள பதார்த்தங்கள் சொல்லப்படுகின்றனவேயொழிய, உண்மையில் உபலப்திஸ்தானங்களில்லாத வஸ்துக்களாவது இடங்களாவது எங்கும் எக்காலத்திலும் கிடையாது. ஸூர்யன் கண்ணாடியிலும் ஜலத்திலும் மாத்திரம் ஸ்பஷ்டமாய் பிரதிபிம்பித்துத் தோன்றினாலும், மற்ற பதார்த்தங்களிலும் ஒருவிதமாய் விளங்கிக் கொண்டேயிருப்பதுபோல் பரமாத்மாவும் எங்கும் எப்போதும் பிரகாசித்துக்கொண்டே யிருக்கின்றார். அந்தப்பிரகாசத்தைப் பார்ப்பதற்கு ஜீவர்களால் உபயோகப்படுத்தவேண்டிய புத்தியாகிய கருவி அனேகமாய் கூர்மையாயில்லாமல் மழுங்கி மந்தமாய்ப் போயிருப்பதே பிரகாசமில்லை யென்று சொல்லுவதற்குக் காரணமாகும். கருவியை சுத்தப்படுத்திக்கொண்டு நன்றாகப்பார்க்கிறதென்ற "ஸம்யக்தர்சன" அப்பியாஸத்தை பலப்படுத்திக் கொண்டவருக்கு ஸகல வஸ்துக்களும் பரமாத்மாவின் உபலப்திஸ்தானங்கள்தான். ஸ்ரீ பிரஹ்லாதருக்கு ஸ்தம்பங்கூட உபலப்திஸ்தானமாகவில்லையா? இவ்வித ஸம்யக்தர்சனம் யாருக்கு நன்கு ஸித்தித்து எங்கும் பிரம்மதர்சனமிருந்து வருகின்றதோ அவரே, இதின் முதலாவது பாகத்தில் குறிப்பிட்டபடி, முக்யபக்ஷ ஸமதர்சியாவர். உத்தம ஸமதர்சனமில்லாத அஜ்ஞானிக

ளான அப்பியாஸகர்கள் எல்லோருக்கும் அவரவர்களின் நிலைமைக்குத்தக்க விதமாய் உபலப்திஸ்தானம், மற்றவை யென்ற வித்தியாஸப்பார்வை இருந்துகொண்டுதானிருக்கும். இவர்களுக்குள் எவர்களுக்கு புத்திசக்தி மிகவும் குறைவாயிருக்கின்றதோ அவர்களுக்கு வியக்தமாய் கண்களுக்குப் புலப்படக்கூடிய ஸ்தூல விக்கிரஹங்களில்தான் பகவான் இருப்பதாகவும் மற்ற இடங்களில் இல்லை யென்றுங்கூடத் தோன்றக்கூடும் (ஶ்ரீமத்பாகவதம் ௩-௨௯-௨௨).

4. பரமாத்மாவின் உபாஸனத்தில் ஸ்தூலரூபகல்பனம் அவசியமென்றும், ஸகல ரூபங்களிலும் அவரே பிரகாசிக்கிறாரென்றும் சொல்லப்பட்ட விஷயத்தில் மறுபடியும் சிலர்களுக்கு ஸந்தேஹம் உதிக்கலாம். வாஸ்தவத்தில் அரூபியாயிருக்கிற பொருளை எல்லோரும் அரூபியாகவே உபாஸிப்பது உத்தமமில்லையா? கீழ் ஸ்திதிகளிலுள்ள அல்ப புத்திகளுடன் கூடிய அதிகாரிகளுக்கு ஸ்தூல ரூபத்தின் மூலமாய் ஆராதனம் அவசியமென்று சொல்லப்பட்டது உண்மையாயிருக்கக்கூடுமானால், அவ்வித கீழான அதிகாரிகள் ஹிந்துக்களுக்குள் மாத்திரம் இருப்பதாகவும், ஹிந்துவில்லாதவர்கள் எல்லோரும் மேலான அதிகாரிகளென்றும் தாத்பரியமா? அப்படியில்லாவிடில், மகம்மதீய-கிருஸ்துவ மதங்களிலுள்ள ஸகல ஜனங்களும் பாஹ்யமான ஸ்தூலரூபத்தை அவலம்பிக்காமலே கடவுளை உபாஸித்துவருகிற விஷயம் எப்படி ஸாத்தியப்பட்டிருக்கக்கூடும்? அவர்கள் விக்கிரஹாராதனம் கூடாதென்று கண்டித்து வந்திருப்பதினாலேயே அவர்கள் எல்லோரும் விக்கிரஹாராதனத்தைச் செய்து வருகின்ற ஹிந்துக்களைவிட வெகு மேலானவர்களென்று ஏன் அபிப்பிராயப்படக்கூடாது? யதார்த்தத்தை உள்ளபடி தெரிந்து கொண்டுவிட்டால் இவ்வித ஸம்சயம் உடனே

நிவிருத்தியாகிவிடும். ஆதியில் வேதத்தினுல் வெளியிடப் பட்ட "அரூபீ, ஸர்வவியாபீ, ஸர்வஹிருதயவாஸீ" முதலான கடவுளின் லக்ஷணங்களை முன் குறிப்பிட்டபடி மற்ற மதஸ்தர்கள் கிளிப்பிள்ளைகளைப்போல் திருப்பிச்சொல்லிக்கொண்டிருக்கிறார்களேயல்லாமல், கடவுளின் நிஜஸ்வரூபத்தையாவது ஜீவனுடைய நிஜஸ்வரூபத்தையாவது அவர்கள் உண்மையாய் அறிந்து கொண்டவர்களில்லை. நிர்க்குணப்பிரம்ம விஜ்ஞானம் அவர்களுக்குக் கிடையாது; அவர்களுக்குள் ஏற்படக்கூடியதுமல்ல. இந்த ஸ்திதியிலுள்ளவர்களுக்கு அரூபித்தன்மை, ஸர்வவியாபித்தன்மை முதலான ஸர்வாத்ம லக்ஷணங்கள் பிடிபடக்கூடியவையல்ல. அவர்கள் கடவுள் என்று யாரைச்சொல்லுகிறார்களோ அவர் எக்காலமும் ஸகுணமூர்த்திதான். அவர் மேலான உத்தமலோகத்திலேயே எப்போதும் வாஸஞ்செய்வதாகவும், அவ்வுத்தம லோகஞ்சென்று அங்கு அவரைப்போல் ஆனந்தியாயிருப்பதே மனிதனுக்கு ஸர்வோத்தம நற்கதி யென்பதாகவும் உறுதியான கொள்கையுடனிருந்துவருவதால், அவர்கள் இப்பூலோகத்தில் கண்ணிற்படக்கூடிய வஸ்துக்களிலும் கடவுள் இருக்கக்கூடுமென்று எண்ணுமலே யிருந்து வருகின்றார்கள். கடவுள் கண்ணுல் பார்க்கப்படக்கூடிய வஸ்துக்களில் இல்லாமல் வெகுதூரத்தில் வேறு உலகத்தில் இருப்பதாக தியானிக்க வேண்டியதாயிருப்பதால், அவர்களெல்லோரும் மனதினுல் மாத்திரம் அவரை ஒருவிதமாய் பாவனை செய்து வருகின்றார்கள். கடவுள் ஸர்வவியாபீ என்பது அவர்களுடைய உண்மையான கொள்கையாயிருக்குமானுல், கடவுள் ஸ்தூலவிக்கிரஹத்தில் இல்லையென்று அவர்கள் எண்ணவே மாட்டார்கள். அல்பபுத்தியுடன் கூடிய ஹிந்து உபாஸகன் ஸ்தூல விக்கிரஹத்திற்கு வெளியிலும் கடவுள்

இருப்பதாகத் தெரிந்து கொள்ளவில்லையானாலும், அவன் ஷை விக்கிரஹத்தில் கடவுள் இருக்கிறாரென்று எண்ணி யிருப்பது ஒருக்காலமும் தப்பாகமாட்டாது. விக்கிரஹத்தில் மாத்திரம் கடவுள் இருப்பதாக எண்ணுகிறவனைத்தான் சாஸ் திரம் அல்பபுத்தியுடன்கூடியவன் என்று சொல்லியிருக் கின்றதே தவிர விக்கிரஹத்தைப் பூஜை செய்வதற்காக அல்ல. விக்கிரஹத்திலும் கடவுளிருப்பது உண்மையானால், அதை ஏன் பூஜைக்கு உபயோகப்படுத்தக்கூடாது? இந்த பூலோகத்தில் தென்படக்கூடிய எவ்வித ஸ்தூலவஸ்துக்களி டத்திலும் கடவுள் இல்லையென்று ஷை மற்ற மதஸ்தர்கள் எண்ணியிருப்பதினாலேயே அந்த வஸ்துக்களை பூஜைக்கு உபயோகப்படுத்தக் கூடாதென்று அவர்கள் அபிப் பிராயங் கொண்டிருக்கிறார்கள். எப்போது அவர்கள் ஸ்தூலவஸ்துக்களில் கடவுள் இல்லையென்று எண்ணி விட்டார்களோ அப்போது நிச்சயமும் ஸ்தூலவஸ்துக் களடங்கியதுமான இப்பூலோகத்திலேயே கடவுள் இல்லை யென்றே அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்களென் பதும் நிச்சயம். இப்படிப்பட்ட எண்ணமுள்ளவர்கள் கடவுளை ஸர்வவியாபியென்று வாயினால் மாத்திரம் சொல்லி வருவதற்கு அர்த்தமே கிடையாது. அவர்களுடைய அந் தரங்கக்கொள்கையில், கடவுள் ஏதோ ஒரு உயர்ந்த ஸ்தா னத்திலிருந்துக் கொண்டு, மனிதராஜாவைப்போல், அங் கிருந்தே தன்னுடைய ஆஜ்ஞாசக்தியினால் ஸகல உலக காரியங்களையும் நடத்திவருகிறாரென்றே பாவிக்கப் பட்டி ருப்பதாகத்தான் வெளியாகின்றது. எப்படி இராஜாவின் அதிகாரம் ராஜ்யம் பூராவிலும் பரவி ஸர்வவியாபியா யிருக்கின்றதோ, அப்படியே கடவுளின் அபரிமிதமான ஆஜ்ஞாசக்தி ஜகத்துப் பூராவிலும் பரவி ஸர்வவியாபியா

யிருக்கிறதென்றும், ராஜா தன் அரண்மனையில் ஆனந்தமாய் ஸிம்மாஸனத்தில் வீற்றிருப்பது போல் கடவுள் அவருடைய சொந்த உலகத்திலேயே தன் பூர்ணானந்தத்தியிருந்து வருகிறாரென்றுமே அவர்களுடைய கொள்கையாயிருக்கவேண்டும். அதாவது, கடவுளின் ஆஜ்ஞாசக்திக்குத் தான் ஸர்வவியாபித்தன்மை யுண்டேயல்லாது கடவுளுக்கே ஸர்வவியாபித்தன்மை யில்லையென்றே அவர்கள் சொல்லுவதாகத்தான் ஏற்படும். ஸர்வவியாபியாயில்லாமல் ஓரிடத்தில் காணப்படக்கூடிய கடவுள் அரூபியாகவுமிருப்பதற்கில்லை. ஓரிடத்தில் காணப்படக்கூடிய தன்மையே ரூபத்தின் காரியம். இந்தப்படி கடவுளுக்கு சொந்தமாகவே ஒரு ரூபம் ஸ்திரமாயிருக்குமானால், அவரை வேறு ரூபத்தின் மூலமாய் உபாஸிப்பது பிசகுதானாகும். ஆகையால், மிலேச்ச மதஸ்தர்கள் ஸ்தூலவிக்கிரஹாதிகளை உபயோகப்படுத்துகிறதில்லையென்பது நியாயந்தான். ஹிந்துக்களுக்கோவெனில், உண்மையில் கடவுள் ஸர்வவியாபிதானென்றும், அரூபிதானென்றும், அவரே ஸகல உலகங்களிலும், அதுபோல் இவ்வுலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களிலும் ஸம்பூர்ணராயிக்கிறாரென்றும், ஸகல ரூபங்களிலும் அவரே பிர காசிக்கிறாரென்றும் உறுதியாய்த் தெரியவந்திருப்பதால், இவர்கள் மாத்திரம் ஸ்தூலவிக்கிரஹாராதனத்தைச் செய்துவருகிறார்களென்பதும் நியாயந்தான்.

5. ஒருக்கால் ஷை அன்னியமதஸ்தர்கள் அடியிற்கண்டபடி கக்ஷி சொல்லக்கூடும். கடவுளே ஸர்வவியாபியென்பதும் அவர் அரூபிதானென்பதுமே தங்களுடையவும் கொள்கையென்றும், ஸர்வவியாபியானதினால் ஸ்தூலவஸ்துக்களிலும் அவர் இருக்கிறாரென்பது உண்மையானாலும், ஸ்தூலவஸ்துக்கள் ரூபங்களுடன் கூடியிருப்பதால் அரூபியான அவரை ஸ்தூலவிக்கிரஹம் மூலமாய் ஆராதனஞ்

செய்வது தப்பென்பது தங்களுடைய தீர்மானமென்றும் அவர்கள் வாதிக்கலாம். இந்தப்படி ரூபத்தின் மூலமாய் அரூபியானகடவுளைக் கொண்டாடக் கூடாதென்பது வாஸ்தவமானால் ஸூக்ஷ்மரூபத்தின் மூலமாக (Through mental image) அவரைத் தொழுவதும் தப்பென்றே முடிவாகும். மனதினால் செய்யப்படக்கூடிய தியானத்திற்குக் கடவுளை விஷயமாக்க வேண்டுமானால், அவருக்கு ஒரு ஸூக்ஷ்ம ரூபத்தை மனதினால் கற்பித்தே யாகவேண்டும். பாவனாரூபமாகிய ஸூக்ஷ்மரூபங்கூட இல்லாமல் கடவுளை மனதினால் தியனஞ்செய்ய முடியாது. மனமே த்வைதத்திற்குட்பட்ட திருச்யகோடியைச் சேர்ந்திருப்பதால், அது மற்றொரு திருச்யத்தைத்தான் விஷயீகரிக்குமே யல்லாமல், அதிருச்யமான கடவுளாகிய அரூபவஸ்துவை கிரஹிக்க அதற்கு சக்தி கிடையாது. அரூபங்களாயிருக்கின்ற ஆகாசம், மின்சாரம், நற்குணங்கள், துர்க்குணங்கள், கணிததத்வங்கள் (Arithmetic) முதலானவைகளை மனது கிரஹிக்கவில்லையாவென்று கேட்டால், இவைகளைப்பற்றிச் சிந்திக்கும்போதும் ஒவ்வொரு விஷயத்திலும் ஏதாவது வியக்தமான ரூபத்தை அல்லது உதாஹரணத்தைப் பிடிமானமாக ஞாபகத்தில் அல்லது பாவனையில் வைத்துக்கொண்டுதான் மனது சிந்தனை செய்யக்கூடுமென்று உறுதியாய்ச் சொல்லுகின்றோம். இது மனஸ்தத்வசாஸ்திரத்தில் முடிவாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிற விஷயம். இதை இங்கு விஸ்தரித்தால் பிரகிருதத்திற்கு ஸம்பந்தமன்னியில் மிகவிரியும். மனமே கட்டுக்கடங்கிய (Limited) உள்ளிந்திரியமாதலால், அது ஏதாவது ஒருவிதமான கட்டுக்கு அடங்கியிருக்கிற ரூபவத்தான விஷயத்தைத்தான் உட்கொள்ளக்கூடும். ஓரிடத்தில் கட்டுக்கு அடங்கியதும் திருச்யரூபியுமான மனதி

ளுல் ஸர்வவியாபியும், அனந்தமும், அதிருச்யமும், அரூபியுமான பரமாத்மப் பொருளை (உண்மையான கடவுளை) எவ்விதத்திலும் கிரஹிக்க முடியாதென்பதாக சுருதியே முறையிடுகின்றது; இவ்விதமாகவே தத்வஜ்ஞானிகளான மஹான்களால் ஸம்சயமின்றி ஸித்தாந்தப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆகையால், மற்ற மதஸ்தர்கள் மனதிளுல் கடவுளை தியானிப்பதாகச் சொல்லும்போதெல்லாம் அவருக்கு ஒரு ஸூக்ஷ்மரூபத்தைக் கற்பித்துக்கொண்டே தியானஞ் செய்கிருர்கள் என்பதே நிச்சயம். எவ்விதரூபமும் இல்லாத கடவுளுக்கு ஸூக்ஷ்மரூபத்தைக்கற்பிப்பது நியாயமாயிருக்குமாளுல், ஸ்தூலரூபத்தையும் அவருக்கு ஏன் கற்பிக்கக் கூடாதென்று கேட்கிருேம். அரூபியாயிருக்கிறவரிடம் ரூபகல்பனத்தைச் செய்வதே தோஷமாகுமாளுல், மனதிளுல் செய்யப்படுகின்ற ஸூக்ஷ்மரூபகல்பனமும் தோஷந்தாளுகும். ஆகையால், கடவுள் உண்மையில் அரூபீ என்ற காரணத்திளுல் ஸ்தூலவிக்கிரஹாராதனம் கூடாதென்று சொன்ளுல், அதே காரணத்திளுல் ஸூக்ஷ்மரூபத்தில் அவரை மனதிளுல் தியானஞ் செய்வதும் அக்கிரமந்தானென்பதாகவே முடியும். அதாவது, கடவுளின் அரூபித்தன்மையிளுல் அவரிடம் ரூபகல்பனத்தைச் செய்வது தோஷமாகுமாளுல், இவ்வித தோஷம் எல்லாமதஸ்தர்களுக்கும் பொதுவேயாகும். மனிதனுடைய மனதின் சக்திக்குறைவை யுத்தேசித்து எல்லா மதஸ்தர்களும் இவ்வித தோஷத்திற்கு உடன்படவேண்டியதாயிருக்கிறது. முன்குறிப்பிட்ட மற்ருெரு விஷயத்தை கவனித்தால், அதாவது, கடவுளின் ஸர்வவியாபித்தன்மையை உத்தேசித்தால், ஹிந்துக்கள் செய்து வருகிறபடி ஸ்தூலம், ஸூக்ஷ்மம் இருவகை வஸ்துக்களிலும் கடவுளின் ஸான்னித்தியத்தைப் பாராட்டி ஆராதனையைச் செய்வதே

சரியென்பதும், அவசியமென்பதும், ஸ்தூல வஸ்துக் களில் அவர் இல்லாதிருப்பதுபோல் எண்ணி அவரு டைய ஸர்வவியாபித்தன்மைக்கு விரோதப்படும்படியாக ஸ்தூலவிக்கிரஹாராதனத்தை தூஷித்துவருவதே பெரும் தோஷமாகுமென்பதும் வியக்தமாய் வெளியாம். ஆகையால், முன் பாராவின் ஆரம்பத்தில் சங்கித்தபடி மற்ற மதஸ்தர் களைவிட ஹிந்துக்கள் எவ்வகையிலும் கீழ்ப்பட்டவர் களில்லையென்று ஏற்படுவதுமல்லாமல், ஹிந்துக்களுடைய ஆசாரணைகளே கடவுளின் ஸர்வவியாபித்தன்மைக்கு ஒத்தி ருக்கின்றனவென்றும் எல்லோரும் அறிந்து கொள்ள வேண்டும். ஹிந்துக்களிடம் ஸ்தூலவிக்கிரஹாராதனம் இருப்பதினாலேயே இவர்கள் இவ்வுலகத்தில் மற்ற யாவரை யுங் காட்டிலும் நிரம்பவும் உயர்ந்தவர்களென்பதும், மற்ற வர்கள் விக்கிரஹாராதனத்தின் தத்வங்களைத் தெரிந்து கொள்ளாமலே அறிவில்லாமையால் கண்மூடித்தனமாக அதை தூஷித்துக்கொண்டு வந்திருக்கிறார்களென்பதும் மறுபடியும் பின்னால் ஸ்பஷ்டப்படுத்தப்படும்.

6. விக்கிரஹத்தில் மாத்திரம் கடவுள் இருப்பதாக எண்ணி பூஜைசெய்கிறவரை அல்பபுத்யுள்ளவரென்று முன்னால் சொல்லப்பட்டது. இவ்வித அல்பபுத்தியில்லாத வர்களும், காணப்பட்டதும் காணப்படாததுமான ஸகல வஸ்துக்களிலும் இடங்களிலும் ஒரே கடவுள் பரிபூர்ண ராயிருக்கிறாரென்று உறுதியாய்த் தெரிந்து கொண்டிருக்கின் றவர்களும், அதிகூர்மையான புத்தியுள்ளவர்களுமான ஹிந்துமஹான்களிலும் வெகுபெயர்கள் ஸ்தூல விக்கிர ஹாராதனத்தைச் செய்துவருகிறார்கள். இவர்களை மூடர்க ளென்று சொல்பவர்தான் மூடராவர். இவ்வித, மஹான் களும் ஏன் ஸ்தூலவிக்கிரஹபூஜையைச் செய்து வருகிறார்க ளென்று யோசிக்கவேண்டியதுண்டு. இவர்கள் வெளிப்படை

யான ஸ்தூலப்பிடிமானமில்லாமலே மனதினுல் மாத்திரம் தியானஞ் செய்து வரக்கூடிய யோக்கியதையுள்ளவர்களென் பதில் சற்றும் ஸந்தேஹத்திற்கிடமில்லை. ஆகிலும், இவர் கள் ஸ்தூலபூஜையை விட்டுவிடவில்லை. ஏன்? இப்படிப்பட்ட மஹான்களுக்கும் ௸ பூஜையினுல் ஆகவேண்டிய காரியம் ஏதோ யிருப்பதாகத்தான் எண்ணவேண்டும். அதென்ன வென்று பொறுமையுடன் விசாரித்துத் தெரிந்துகொள்ள வேண்டியதவசியம். இதைத் தெரிந்து கொண்டுவிட்டால் விக்கிரஹாராதனத்தின் அவசியத்தன்மையும் மேன்மையும் நன்கு வெளிப்படும். உண்மையில் அரூபியாயிருப்பது பிரம் மத்தைத்தவிர வேறல்ல. ரூபமென்றால் அளவுக்குட்பட்ட எல்லையுடன் கூடியிருப்பது. எது அகண்டமாயும் இரண் டற்றதாயுமுள்ளதோ அதுதான் மற்றொன்றினுல் கண்டிக் கப்படாததினுல் அளவுக்குட்படாத அரூபியான உண் மைப்பொருளாகும். பிரம்மமென்ற பரமாத்மாதான் இவ் வுண்மைப்பொருள். பரமாத்மாவைத்தவிர வேறொன்றும் உண்மையில் கிடையாது. எப்படி, முன் ஐந்தாவது பாகத் தில் குறிப்பிட்டபிரகாரம், ஒரே சிதாபாஸன் ஸ்வப்ந-திருக் காகவும் ஸ்வப்ந-பிரபஞ்சமாகவும் இரண்டுபட்டிருப்பது போல் தோன்றுகின்றனோ, அப்படியே ஒரே பரமாத்மா வியாவஹாரிக-திருக்குகளாகிய ஜீவர்களாகவும் வியவஹாரிக திருச்யப்பிரபஞ்சமாகவும் இரண்டுபட்டிருப்பது போல் தோன்றுகின்றார். பார்க்கின்ற (அறிகின்ற) திருக்கைக்காட் காட்டிலும் வேறாகவே பார்க்கப்படுகின்ற (அறியப்படுகின்ற) திருச்யம் காணப்படுவதால், திருச்யம் பூராவும் அளவுக் குட்பட்ட எல்லைகளுடன் கூடிய ரூபவத்தான வஸ்துக்களே யாகும். முன் பாராவில் குறிப்பிட்ட ஆகாசம், மின் சாரம் முதலிய அறியப்படக்கூடிய ஸகலமும் திருச்யங்களே

தவிர வேறல்ல. எதுவரையில் திருச்யங்களிருப்பதான தோற்றம் திருக்காகிய ஜீவனுக்கு இருந்து வருகின்றதோ அதுவரையில் இந்த ஜீவனும் பரிமிதப்பட்டவன்தானென்பதும் நிச்சயமே. இந்தப்படி பரிமிதப்பட்டிருக்கின்ற ஜீவனும் ரூபவான்தான். பரிமிதப்பட்டவனாகவே யிருந்து வருகின்ற ஜீவனுக்கு ஸம்ஸாரதுக்கமும் தொடர்ந்திருந்தேவரும். இந்த ஸ்திதியில் ஜீவனுக்கு, தன்னுடைய பரிமிதத்தன்மை இல்லாமற்போய், அகண்ட பிரம்மத்தன்மையில் மாத்திரம் தான் மிஞ்சி நிற்கவேண்டுமென்ற உத்தேசம் ஏற்பட்டால், அதாவது, ஜீவன் மோக்ஷத்தை அடைய வேண்டுமானால், தன்னிடத்திலிருக்கின்ற பரிமிதத்தன்மையையும் தான் ஸம்பந்தப்பட்டமட்டில் வெளியிலுள்ள திருச்யத் தோற்றங்களையும் போக்கடித்துக்கொள்ளவேண்டிய தவசியம். தனக்கு வெளி திருச்யங்களின் தோற்றங்கள் பூர்ணமாய் லயமாகி மறைவடைகிறவரையில் தன்னுடைய பரிமிதத்தன்மையும் நிவிருத்தியாகமாட்டாது. தன்னிடத்திலும் மற்ற யாவற்றிலும் அநித்தியமாகவும் ரூபவத்தாகவுமிருக்கின்றவை எவையோ அவையெல்லாவற்றையும் தள்ளி ஒதுக்கிவிட்டும், இப்படி ஒதுக்குவதினால் "தான்" "மற்றது" என்ற பேதமும் அற்றுப்போகும்படி செய்துவிட்டும், இரண்டற்ற நித்தியமான அரூபவஸ்துவாகவே நின்றுவிடவேண்டும். அதாவது, திருக்காகிய தன்னிடத்தில் எந்த அநித்தியச்சேர்க்கைகள் ஆரோபணஞ்செய்யப்பட்டு பரிமிதப்பட்ட ரூபவானாகிய திருக்காக தன்னைச்செய்தனவோ அவைகளையும், திருச்யப்பிரபஞ்சத்தில் எந்த அநித்தியச்சேர்கைகளின் ஆரோபணத்தினால் திருச்யத்வம் (ரூபவத்வம்) விளங்குகின்றதோ அவைகளையும் திரஸ்காரஞ்செய்வதின் மூலமாய் தன்னுடைய ஸ்வதஸ்ஸித்தமான அத்விதீய பிரம்மானுபவத்தை ஸ்திரப்படுத்திக்கொள்ளவேண்

டும். இவ்விதமாக இருவகையான அப்பியாஸம் அவசிய மாயுள்ளது, ஒன்று தன்னிடத்திலுள்ள ஆரோபணங்களைப் போக்கடிப்பது, மற்றொன்று திருச்யப்பிரபஞ்சத்திலுள்ள ஆரோபணங்களை விலயப்படுத்துவது. ஜீவர்கள் அநேகர்களா யிருந்தபோதிலும், ஒவ்வொரு ஜீவனுக்கும் தன்னைத்தவிர மற்ற ஜீவர்களெல்லோரும் திருச்யப்பிரபஞ்சத்தைச்சேர்ந்த வர்கள்தான். ஆகையால், தன்னிடத்திலுள்ள ஆரோபணங் களும் தான் ஸம்பந்தப்பட்டமட்டில் தனக்கு விஷயங்க ளாகக்கூடியதாக திருச்யப்பிரபஞ்சத்திலுள்ள ஆரோபணங் களும் நிவிருத்தியடைந்து விட்டால், தன்னிடத்திலும் பிர பஞ்சத்திலும் பொதுவாயும் ஏகமாயுமுள்ள பிரம்மவஸ்து தானாகவே பிரகாசிக்கும். பிரபஞ்சத்திலுள்ள ஆரோபணங் களை விலக்குவது எப்படியென்று ஆலோசிக்க வேண்டும். பிரபஞ்சாத்மகமான ஜகத்தோ அதிவிஸ்தாரமாகவும் நானா விதபேதங்களுடன் கூடிய அனந்தமான வஸ்துக்களடங்கிய தாகவுமிருக்கின்றது. ஜகத்திலுள்ள ஸகல வஸ்துக்களையும் சோதித்து அவைகளிலுள்ள ஆரோபணங்களைப் போக்கடிப் பது ஜீவனுக்கு ஸாத்தியப்படக்கூடாத காரியம். இப்படிச் செய்யவேண்டிய அவசியமுமில்லை. மாதிரிக்காக எதையாவது ஒரு திருச்யவஸ்துவை யெடுத்துக்கொண்டு அதிலுள்ள ஆரோபணங்களை விலக்கிவிடத் தெரிந்துகொண்டுவிட்டால் போதுமானது. பூததத்வபரிசோதகர் (Chemist) எப்படி ஒரு பதார்த்தத்தைச் சோதித்துப்பார்த்து அதைப்போ லொற்ற ஸகல பதார்த்தங்களின் தத்வங்களையும் தெரிந்து கொண்டுவிடுகின்றாரோ, அப்படியே பிரம்மத்தை ஸாக்ஷாத் கரிக்க இச்சிப்போராகிய ஜிஜ்ஞாஸுவும் திருச்ய பதார்த் தங்களில் ஒன்றை மாதிரிக்காக விக்கிரஹ ரூபமாய் தன் எதிரில் வைத்துக்கொண்டு, அதில் ஏற்கனவே ஏறிப்

பற்றச்செய்யப்பட்டிருக்கின்ற ஆரோபணத்தோற்றங்களை (Phenomenal appearances) மனதினால் ஒதுக்கித்தள்ளி, அதிலுள்ள ஸர்வவியாபியான உண்மைப்பொருளாகிய (Noumenal reality) பிரம்மத்தை ஸாக்ஷாத்கரித்துவிட யத்தனிக்கவேண்டும்.

7. இப்படி யத்தனிக்கும்போது ஏதாவது ஒரு ஸ்தூலவஸ்து எதிரிலிருப்பதே போதாதோ, அதை பூஜை செய்யவேண்டியதற்கு என்ன அவசியமென்று ஸந்தேஹிக்கக்கூடும். உபாஸனத்தின் முடிவான உத்தேசம் வெறும் மனோபாவனையல்ல; விக்கிரஹத்திலுள்ள பிரம்மப் பொருளை நேராக ஸாக்ஷாத்கரிக்கிறதான அனுபவ வித்தியே அவ்வுத்தேசம். விக்கிரஹத்தை எதிரில் வைத்துக் கொண்டு அதில் பிரம்மபுத்தியைச் செலுத்தித் தியானித்தால் மட்டில் போதாது. யாராவது ஒருவர் ஒரு கலப்பு வஸ்துவை (Compound Salt) கெமிஸ்டின் கையில் கொடுத்து, அதில் இன்ன தத்வங்கள் (Elements) அடங்கி யிருக்கின்றனவென்றும் வெளியிட்டு, அந்த தத்வங்களைப் பிரித்தெடு என்று சொல்லி யிருந்தால், அந்த கெமிஸ்ட் அவ்வஸ்துவை எதிரில் வைத்துக்கொண்டிருந்து அதில் குறிப்பிட்ட தத்வங்களை மனதினால் தியானஞ் செய்து கொண்டு மாத்திரமிருந்தால் அவைகள் வெளியாகமாட்டா. அவைகளை வெளிப்படுத்தக்கூடிய காரியங்களை (Experiments) செய்யவேண்டும். இதுபோலவே, விக்கிரஹத்தைப் பார்த்துக்கொண்டு அதிலுள்ள பிரம்மத்தை தியானித்தால் மட்டில் அந்த உண்மைப்பொருள் அனுபவத்திற்கு வரமாட்டாது. பிரம்மத்தின் லக்ஷணம் ஸச்சிதானந்த லக்ஷணம். விக்கிரஹத்திலோ விபரீத லக்ஷணங்களே காணப்படுகின்றன. அது அழிவுள்ளதாகையால் ஸத்துமில்லை, அது ஜடமாகை

யால் சித்துமில்லை, சித்தே இல்லாவிடத்து ஆனந்தமும் கிடையாதென்பது நிச்சயமே. இவ்வித விக்கிரஹத்தில் ஸச்சிதானந்தஸ்வரூபியான பிரம்மத்தின் அனுபவரூப தர்சனம் ஏற்படவேண்டுமானல், அதில் அதிகமாய் வேலை செய்யவேண்டியதுண்டு. முதலில் அதில் ஸச்சிதானந்தப் பிரம்மம் இருக்கிறதென்ற பாவனையை உபாஸகர் தன்னிடம் உறுதிப்படுத்திக்கொள்ளவேண்டும். இவ்வித பாவனையை ஸ்திரப்படுத்திக்கொள்வதுடன், விக்கிரஹத்தின் ஸ்தூல ரூபத்திற்கு ஆதாரமாகவும் அதற்கு அனுகுணமாகவும் அதை ஸம்பந்தித்து ஸூக்ஷ்மரூபமும் இருப்பதாக பாவித்துக்கொள்ளவேண்டும். இந்த ஸூக்ஷ்மரூபமும் வெளியில் தெரிகின்ற ஸ்தூலரூபமும் சேர்ந்து பிரம்மத்திற்கு குணவத்வத்தையும் ரூபவத்வத்தையும் ஏற்படுத்தி யிருப்பதாகவும் எண்ணிக்கொள்ளவேண்டும். இவ்விதமாக பாவிக்கப்பட்ட ஸூக்ஷ்மரூபமும் விக்கிரஹத்தின் ஸ்தூலரூபமும் ஜீவரூபங்களில்லை யென்பதும் ஞாபகத்திலிருக்கவேண்டும். இவ்வுலகத்தில் ஜீவர்களின் ஸ்தூல சரீரங்கள் நான்கு வகைப்பட்டவைகள், அதாவது, அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம், ஜராயுஜம். மேற்கண்ட விக்கிரஹத்தின் ஸ்தூல ரூபமோ இந்நான்கு விதங்களிலும் சேராதது. அது ஜீவசரீரங்களுக்கு வேறுபட்டுள்ள, ஆனல் உலகத்தில் அடங்கிய, ஸ்தூலரூபம். இவ்வுலகமுள்பட, ஸகல ஜீவ சரீரங்களுமுள்பட, ஸ்தூலஜகத்துப் பூராவும் ஸகுண பரமாத்மாவுக்கு ஸ்தூல சரீரமென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால், ஷெ விக்கிரஹம் ஜீவசரீரங்களில் சேராமலும் பரமாத்மாவின் சரீரத்தில் அடங்கியுமிருக்கின்றது. இக்காரணத்தினல் அதை பரமாத்மாவின் சரீரமாகவே பார்ப்பது நியாயமாகும். ஆனல், ஸ்தூலஜகத்துப்பூராவும்

பரமாத்ம சரீரமாயிருக்கையில் அதின் லேசலேசபாகத்தையே அச்சரீரமாக எப்படிப் பார்க்கலாமென்று கேட்கக்கூடும். உபாஸகர் ஜகத்துக்குள் அடங்கியவராகையால், ஸ்தூல ஜகத்துப்பூராவையும் அவர் பார்க்கிறதற்கில்லை. ஜகத்துக்கு வெளிப்பட்டு நின்று பார்க்கக்கூடுமானால்தான், அது முழுவதும் பார்வைக்கு விஷயமாகும். இப்படி முழுஜகத்தையும் விஷயீகரித்துக்கொண்டுதான் ஸகுண பரமாத்மாவை உபாஸிக்கலாமென்று சொல்லவுங்கூடாது. எப்படி ஒரு மனிதன் தான் ஆச்ரயித்திருக்கிற யஜமானனை உபாஸித்து ஸ்தோத்திரஞ் செய்யும்போது அவருடைய கண்ணை அல்லது பாதத்தை மாத்திரம் பார்த்துக்கொண்டு செய்தாலும் அந்த ஸ்தோத்திரம் அந்த யஜமானனுக்கே ஸம்பந்தப்படுகின்றதோ, அப்படியே ஜகத்தில் ஒரு அல்ப பாகமாகிய விக்கிரஹத்தை நோக்கி உபாஸகரால் செய்யப்படுகின்ற காரியம் யாவற்றும் பரமாத்மாவுக்கே ஸம்பந்தப்படக்கூடியது. மேலும், அல்பபாகமாகவே விக்கிரஹமிருந்தபோதிலும், அதிலும் அகண்டரான பரமாத்மா பரிபூர்ணராயிருக்கிறாரென்று முன்னமே காண்பிவிக்கப்பட்டுமிருக்கிறது. இப்படியே, விக்கிரஹத்தில் ஸம்பந்தப்பட்ட ஸூக்ஷ்மரூபமும் ஸமஷ்டி ஸூக்ஷ்ம ஜகத்தின் அல்பபாகமாகவே இருந்தபோதிலும் அதின் மூலமாய் உபாஸிக்கப்படுகிற அகண்டரான பரமாத்மாவுக்கு பூர்ணத்தன்மை குறைந்துவிடமாட்டாது. இவ்விதமாக, பிரகிருத உபாஸகர் ஸம்பந்தப்பட்ட மட்டில், குறிப்பிட்டவிக்கிரஹமே பரமாத்மாவின் ஸமஷ்டி-ஸ்தூல தேஹப்பிரதிநிதியாகவும், அத்துடன் ஸம்பந்தப்பட்ட ஸூக்ஷ்மாகாரமே பரமாத்மாவின் ஸமஷ்டி-ஸூக்ஷ்ம தேஹப்பிரதிநிதியாகவும், இவ்விரண்டு தேஹங்களுக்கும் காரணமாயிருக்கிற மாயைக்கு

அதிபதியாயும் அதீதராயுமிருப்பவரே ஸகுணப்பிரம்ம மென்ற பரமாத்மாவாகவும் இருந்து வருவதில், ஸாக்ஷாத் பரமாத்மாவின் முன்னிலையில் உபாஸகர் தன்னுடைய தனிமையான ஜீவத்வநிலைமையை விட்டொழித்து தான் பரமாத்மாவுடன் ஒன்றுகிவிடுவதான ஸாயுஜ்யமோக்ஷ ஸித்தியின்பொருட்டு தான் எப்படி நடந்து கொள்ள வேண்டுமோ அந்தப்படி பின்வருமாறு பூஜாக்கிரமத்தில் நடந்து வருகின்முர்.

8. எதிரிலிருக்கின்ற விக்கிரஹம் பரமாத்மவிக்கிரஹந் தானென்பதை முதலில் சிலகிரியைகளினுல் உபஸகர் உறுதிப் படுத்திக்கொள்கிருர். ஸர்வவியாபியான பரமாத்மா எவ்வித மாக ஜீவனுகிய தன்னிடத்தில் இருந்து வருகிருரோ, அவ்வித மாகவே விக்கிரஹத்திலுமிருக்கிருர் என்பதை ஸ்திரப்படுத் திக்கொள்ளும்பொருட்டு, உபாஸகர் ஆரம்பத்தில் தன்னு டைய ஹிருதயத்தில் பகவானை தியானித்துக்கொண்டு விக்கிர ஹத்திலும் ஆவாஹனக்கிரியையினுல் பகவானுடைய ஸான் னித்தியத்தை ஸ்தாபித்துக்கொள்கிருர். எப்படி உண்மையில் தான் நிர்க்குணப்பிரம்மமாயிருந்தாலும் வியஷ்டி சரீரப் பிராணபுத்தியாதிகளால் தனக்கு ஜீவத்வம் ஏற்பட்டிருக் கின்றதோ, அப்படி பகவானுக்கும் ஸமஷ்டி சரீரப்பிராண புத்தியாதிகளினுல் ஸகுணத்வம் ஏற்பட்டிருப்பதான விபரத் தையும் பிராணப்பிரதிஷ்டாதி காரியங்களினுல் வியக்தப்படுத் திக்கொள்கிருர். எவ்விதம் ஒரு கிருஹஸ்தர் தன் சொந்த நன்மையை உத்தேசித்து தன்னுடைய இருப்பிடத்திற்கு தன் தேசமஹாராஜாவையே வரும்படி செய்து கொண்டு விடக்கூடுமாலுல், அவர் வந்தவுடன் பல உபசாரங்களை, அம்மாஹாராஜாவுக்குத் தேவையில்லாமலிருந்தாலும், மரி யாதையின்பொருட்டு அந்த கிருஹஸ்தர் செய்து வருவா

ரோ, அவ்விதமாகவே தன் முன்னிலையில் ஸாக்ஷாத் ஸகுண பிரம்மமாகிய பகவானுடைய ஸான்னித்தியம் லபித்து விட்டதாக நிச்சயப்படுத்திக்கொண்டு உபாஸகர், பகவானுக் குத் தேவையில்லை யென்பதைத் தெரிந்துகொண்டவரானு லும், மரியாதைக்காகவும் பின் சொல்லப்போகிற காரணத்தி ற்காகவும் ஆஸனம், அர்க்கியம், பாத்யம், ஸ்நாபனம், வஸ்த் திரம், சந்தனம், புஷ்பம், அலங்காரம், அர்ச்சனம், தூபம், தீபம், நைவேத்தியம், கர்ப்பூரஹாரத்தி, புஷ்பாஞ்சலி, ஸ்தோத் திரம் முதலானவைகளால் உபசரிக்கின்றார். ஷை உபசாரங் களினுல் உபாஸகர் சிறுகச்சிறுக மமதாபரித்தியாகத்தை (தனது என்பதை விட்டொழித்தலை) செய்துவிடுகின்றார். தனக்குப் பிரியமும் சொந்தமுமாயுள்ள ஸுகவிஷயங்களையும் பதார்த்தங்களையும் பகவானுக்கு ஸமர்ப்பணஞ் செய்து விட்டும், அவைகளிலும் அவைகளைப்போலொற்ற மற்ற திருச்யங்களிலும் தனது என்ற புத்தியைப் போக்கடித்து விட்டும், பிறகு உபாஸகருக்கு சரீர-பிராண-புத்தியாதிகளி லிருந்த அஹந்தா (தான்) என்பதும் ஆத்ம நிவேதனத்தினுல் கடைசியில் அவரால் பரித்தியாகஞ் செய்யப்படுகிறது. இவ் விருவகை தியாகந்தான் ஆராதனையின் முக்கிய கருத்து. இவ்விருவிதத்தியாகம் ஸம்பூர்ணமாய்ச் செய்யப்பட்டுவிட் டால், ஜீவத்வமே, அதாவது, சிதாபாஸத்வமே மறைந்து போய்விடும். இந்த ஸம்பூர்ணத்தியாகம் மேலான நிவிருத்தி தர்மங்களாகிய ஞானுப்பியாஸங்களினுல் தான் ஸித்திக்கக் கூடியதானுலும், விக்கிரஹாராதனத்தினுல் இதை வெகு தூரம் ஸாதித்துக்கொள்ளலாம். இந்த ஆராதனத்தில் ஒவ் வொரு நாளும் கொஞ்சங்கொஞ்சமாக திருச்யபதார்த்தங் களில் "தனது" என்ற புத்தியும், சரீராதிகளில் "தான்" என்ற புத்தியும் குறைந்துகொண்டேவருவதற்குள்ள அப்பியா

ஸங்களை மனவினாலும், வாக்கினாலும், சரீரத்தினாலும் செய்துவருவதற்கு அவகாசமிருந்து கொண்டிருக்கிறது. இவ்வித அப்பியாஸங்களினால் எவ்வளவு சீக்கிரத்தில் தன் மேலான உத்தேசம் பின் ஞானப்பியாஸத்தை முன்னிட்டு நிறைவேறக்கூடுமோ அவ்வளவு சீக்கிரத்தில் ஸாமான்ய மனிதனுக்கு தியானத்தினால் மாத்திரம் அவ்வுத்தேசம் ஞானப்பியாஸத்தின்பேரில்கூட கைகூடமாட்டாது. விக்கிரஹத்திலுள்ள பிரம்மப் பொருளை நேராக ஸாக்ஷாத்கரிப்பதே விக்கிரஹாராதனத்தின் முடிவான உத்தேசமென்று முன் சொல்லப்பட்டது. இப்படி ஸாக்ஷாத்கரிப்பதற்கு விரோதிகளாயிருப்பது தன்னுடைய ஜீவத்வமும் விக்கிரஹம் போலொற்ற ஸகல திருச்யத்தின் ரூபவத்வமுந்தான். ஜீவத்வம் என்பது அஹந்தா (நான்) மமதா (எனது) ரூபமாக விளங்குகின்றது. சரீராதிகளில் "நான்" என்ற புத்தியும் மற்றவைகளில் "அன்யம்" என்ற புத்தியும், இம்மற்றவைகளுக்குள் சிலவைகளில் "எனது" என்ற புத்தியும் இருந்து கொண்டிருக்கும்வரையில் ஜீவத்வம் போகாது. மேற்கண்ட பூஜாக்கிரமத்தில் பதார்த்தத்தியாகரூபமான உபசாரங்களால் "எனது" என்ற புத்தி நாளுக்குநாள் குறைந்து கொண்டே வரும்; ஆத்ம நிவேதனத்தினால் "நான்" என்ற புத்தியும் மலினப்பட்டுவிடும். "நான்" என்ற புத்தியிருக்கும்வரையில்தான் "அன்யம்" என்பதும் கூடவே யிருந்து வரும்; "நான்" என்பது மலினப்பட்டால் "அன்யம்" என்ற புத்தியும் குறைந்துவிடும். இவ்வித அப்பியாஸங்களுடன்கூட, விக்கிரஹத்தில் ஸ்தூலவஸ்து புத்தியை வைக்காமல் அதையே பரமாத்மாவென்று எண்ணி பூஜையைச் செய்துவந்தால் விக்கிரஹத்தின் ரூபவத்வமும் பார்வையிலிருந்து மறைந்து போகும். எப்படி முன் சொல்லிய உதா

ஹரணத்தில் தாஸன் யஜமானனுடைய கண், பாதம் முத லான சரீர அவயவங்களைப் பார்த்துக்கொண்டே பேசிக் கொண்டிருந்தாலும் பிரார்த்தனைசெய்து கொண்டிருந்தா லும், தன் பார்வைக்கு விஷயம் அவயவங்கள்தா னென்ற ஞாபகமேயில்லாமல், தன்சொற்களை கிரஹிக்கின்ற அறிவு ஸ்வரூபியாயிருக்கின்ற யஜமானனே தன்னால் பார்க் கப்பட்டவரென்று உறுதி யேற்பட்டுவிடுகின்றதோ, அப்படி யே காலக்கிரமத்தில் உபாஸகருக்கும் விக்கிரஹரூபத்தின் பார்வையே யில்லாமல் போய் ஸாக்ஷாத் பரமாத்மாவே தன் அனுபூதி விஷயமாகிவிட்டதாக உறுதி யேற்பட்டுவிடும். இந்தப்பிரகாரம், மேற்குறிப்பிட்ட விரோதிகளான தன்ஜீவத் வமும் விக்கிரஹத்தின் ரூபவத்வமும் நாசமடைந்து, விக்கிர ஹாராதனத்தின் முடிவான உத்தேசமாகிய பிரம்மஸாக்ஷாத் காரம் ஸித்தித்து விடக்கூடும். உலகத்தில் விக்கிரஹாரா தனத்தின் கருத்தைத் தெரிந்து கொள்ளாமலே வெகு ஜனங்கள் பூஜை செய்து வந்து ஸித்தியைப் பெறாமலிருக் கிறார்களென்ற காரணத்தினால் விக்கிரஹாராதனத்தையே உபயோகமில்லை யென்று சொல்லிவிடக்கூடாது. இவ்வித மாகவே, தியானக்கிரமங்களையும் அவைகளின் உத்தேசங் களையும் அறிந்துகொள்ளாமலே வெகு பெயர்கள் நெடு நாள் தியானித்து வந்தும் யாதொரு பயனையும் காணாமலி ருக்கிறார்களே யென்றெண்ணி தியானமே பிரயோஜனமில்லை யென்று சொல்லிவிடுவதும் நியாயமாகாது. விக்கிரஹாரா தனத்தின் கிரமங்களையும் தத்வங்களையும் நன்றாக விசாரித் துத் தெரிந்து கொண்டு அதைச் செய்பவர்களுக்கு அதின் மேலான பலன் இன்னதென்று வெளியாகாமற் போகாது. **அனாத்மத்தியாகமும் ஆத்மநிவேதனமுமே** அதில் முக்கிய காரியங்கள். ஸகலகாரியகரணங்களுடன் கூடிய தன்னையே

பகவானுக்கு அர்ப்பணஞ் செய்துவிடுவது ஆத்மநிவேதனம். இதைத்தான் வந்தன-நமஸ்காரங்கள் குறிப்பிடுகின்றன. அனாத்மத்தியாகத்தினாலும் ஆத்மநிவேதனத்தினாலும் வியஷ்டிஜீவத்தன்மை நசித்துப்போய்விட்டால், உபாஸகரிடத்தில் பாக்கியிருப்பது அதிஷ்டான-பிரம்மந்தான். வியஷ்டியை ஆபேக்ஷித்து ஸமஷ்டி என்ற வியவஹாரம் ஏற்பட்டிருப்பதால், உபாஸகரின் வியஷ்டித்வத்தின் மறைவுதலின் காலத்திலேயே அவர் ஸம்பந்தப்பட்டமட்டில் ஸமஷ்டித்வமும் ஸகுணத்வமும் பகவானை விட்டு நீங்கி அவ்வதிஷ்டான பிரம்மமாகவே பகவானும் மிஞ்சி நின்றுவிடுகின்றார். உபாஸகர், உபாஸ்யர் என்ற பேதமே மறைந்துபோய், அகண்டகஸச்சிதானந்தபிரம்மமே நிரந்தரமாக விளங்குகின்றது.

9. மேற்கண்ட விக்கிரஹாராதனக்கிரமம் உயர்ந்த ஞானப்பியாஸியான பரோக்ஷாத்மஜ்ஞானியால் அனுஸரிக்கப்படுகின்றது. இவ்வித பரோக்ஷஜ்ஞானிக்கு விவேக-வைராக்கியாதிகள் ஏற்கனவே பலப்பட்டிருக்கக்கூடியதாலும், மமதா (தனது என்ற) பாவனையும் மிகவும் குறைவுபட்டிருக்கு மாகையாலும், பூஜையில் உபசாரக்கிரியைகளை விஸ்தாரப்படுத்தாமல் சுருக்கமாகச் செய்து முடித்துவிட்டு, தன்னிடத்தில் விசேஷமாய் குறைவுபடாமலிருந்தவரக்கூடிய அஹந்தையின் (தான் என்பதின்) பரித்தியாகத்தின்பொருட்டு ஆத்மநிவேதனத்திலும் அதின் ஸம்பந்தமான தியானப்பிரார்த்தனாதிகளிலும் இவர் அதிக காலத்தைச் செலவழிப்பார். ஸாதாரணமாய் மமதையின் ஒழிவின் பேரில்தான் அஹந்தையின் ஒழிவை ஸாத்தியப்படுத்திக்கொள்ள வேண்டியதாயிருக்கிறபடியாலும், வைராக்கிய முண்டாகாமலும் பரோக்ஷாத்மஜ்ஞானம் ஏற்படாமலுமிருக்கின்ற உபாஸ

கருக்கு இந்திரியவிஷயத்தியாகத்தில் அப்பியாஸஞ் செய்வதே முக்கியமானதாலும் இவர் ஆராதனத்தில் உபசாரகாரியங்களை விஸ்தாரப்படுத்திக் கொண்டும், பகவானை உத்தேசித்துத் தியஜித்துவரக்கூடிய பதார்த்தங்களை அதிகப்படுத்திக்கொண்டுமிருந்து, கடைசியில் செய்யவேண்டிய ஆத்ம நிவேதனகாரியத்தை ஒரு விதமாக பாவனையாய் நடத்திவருவார். ஸ்வபாவத்தில் மமதை மிகவும் அதிகப்பட்டிருக்கக் கூடியவருடைய பூஜையில் ஸாமான்களின் சேர்க்கை ஸம்பந்தமாகவும் மற்றவிதங்களிலும் ஆடம்பரம் விசேஷமாய் காணப்படும். அவருடைய ஸ்திதியில் இதுவும் அவசியந்தானென்றே சொல்லவேண்டும். அன்றியும், உபாஸகர்களுக்குள் பரஸ்பரம் காணப்படுகின்ற மற்றுமுள்ள குணதாரதம்மியங்களுக்குத்தக்கபடி அவர்களுடைய உபாஸ்ய மூர்த்திகளும் பேதப்படக்கூடியவை. எப்படி ஸகல ஜீவர்களிடத்திலும் ஆத்மா என்ற பிரம்மம் ஒன்றேயானாலும் நாநாவித குணக்கலப்புகளினால் ஜீவர்கள் ஒருவருக்கொருவர் பின்னப்பட்ட ஸ்வபாவங்களுடன் கூடியிருக்கின்றார்களோ, அப்படியே ஒவ்வொரு உபாஸகருக்கும் தன்னுடைய உபாஸ்யவஸ்து குணாதீதமான பரமாத்மா என்ற பிரம்மந்தானென்று பொதுவாய்த் தெரிந்திருந்தபோதிலும், தன்னுடைய மனதைக் கவரக்கூடிய குணவிசேஷங்களுடன் கூடிய பரமாத்ம மூர்த்தியில்தான் மனப்பற்றுதலும் பக்தியும் அவருக்கு உண்டாகக்கூடியதாயிருக்கின்றது. ஆந்தரமான குணங்களில் மாத்திரமில்லாமல், வெளி வேஷ ஸம்பந்தத்திலும் ஒவ்வொருவருக்கும் தனித்தனியே ஒவ்வொருவித வேஷத்தில்தான் திருப்தியும் மரியாதையும் தானாகவே உண்டாகின்றது. தன்னுடைய மனதுக்குப் பிடித்தமில்லாத குணமாவது ரூபமாவது காணப்படுகின்ற இடத்தில் மதிப்

பும் மரியாதையும் மனதில் உதிக்கிறதேயில்லை. இது மனித ஸாமான்யத்திற்கே இயற்கையாயுள்ளது. அபரோக்ஷ ஸாக்ஷாத்காரமில்லாமல் அஜ்ஞானிஸ்திதியிலேயே உபாஸகர்களெல்லோரும் இருந்துவருவதால், அவரவர்களின் அஜ்ஞான நிலைமைக்கு அனுகுணமாக அவர்கள் தனித்தனியான உபாஸ்யமூர்த்திகளை ஆசிரயித்தும், உபாஸித்தும் மேற்செல்லவேண்டியதாயிருக்கின்றது. உண்மையில் பரமாத்மா நிர்க்குணராகவும் அரூபியாகவுமிருப்பதினாலேயே, அந்தந்த உபாஸகருக்குத் தகுந்த விதங்களில் குணாரோபணத்தையும் ரூபகல்பனத்தையும் பகவானிடத்தில் செய்வது ஸாத்தியப் பட்டிருக்கிறது. இப்படிக்கன்னியில், பகவானே வாஸ்தவத்தில்குணவானாகவும் ரூபவானாகவும் இருப்பாரேயானால், அவருடைய சொந்த குண-ரூபங்களுக்கு மாறுதலாயிருக்கிற குணரூபங்களை அவரிடம் ஆரோபிப்பது உசிதமேயாகாது. அவருடைய வாஸ்தவமாயுள்ள குணரூபங்களுக்கு ஈடுபடக் கூடிய ஸ்பாவத்துடன் சேர்ந்தவர்கள்தான் அவரிடம் உண்மையான பக்தியைச் செலுத்தக்கூடும். மற்றவர்களுக்கு அவரிடம் பக்தியுண்டாகக் கூடியதேயில்லை. இதனாலேயே, கடவுளை குறிப்பிட்ட குண-ரூபங்களுடன் கூடியவராகவே ஏற்படுத்திக்கொண்டிருக்கிற மதாந்தரங்களிலுள்ள ஜனங்களில் அதிகப்பெயர்கள் (Majority) அக்கடவுள் பேரில் தங்களுக்கு மனப்பற்றுதலே யில்லாமலிருந்து வருகின்றார்கள். உதாஹரணத்தை உத்தேசித்து மாத்திரம் கிருஸ்துவமதத்தை எடுத்துக்கொள்வோம். அம்மதத்தில் கடவுளுக்குள்ளதாகச் சொல்லப்பட்டிருக்கின்ற அரிதான நற்குண-ஸ்வபாவங்களினால் மத்தியஸ்தானத்திலுள்ள வெகு பெயர்களுக்கு அக்கடவுளிடம் பக்தியுண்டாகக்கூடும். அவ்வித மேலான குண-ஸ்வபாவங்களின் அருமையைத்

தெரிந்துகொள்ளக்கூடாத தாழ்ந்த ஸ்திதியிலுள்ளவர்களின் மனதுகளைக் கவர்ந்து வசப்படுத்தக்கூடியதான மூர்த்திகளே அம்மதத்தில் இல்லாததினால் மேற்படி ஸ்திதியிலுள்ளவர்கள் பேருக்கு மாத்திரம் தங்களை கிருஸ்துவர்களென்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு அம்மதம் உபயோகப் படாமலேயிருந்து வருகின்றது. மத்தியமஸ்திதியிலுள்ள வர்களுக்குள்ளும் கொஞ்சம் ஆலோசனபலமுள்ளவர்கள் அக்கடவுள் மலையில் (on the Mount) தன்னுடைய ரூபத்தி லேயே ஆவிர்ப்பவித்து வெளியிட்டுச் சொல்லியிருக்கின்ற சில வார்த்தைகளை கவனிக்கும்போது அக்கடவுள் அஸூயை (Jealousy) உள்ளவராகவே காணப்படுகிறாரே என் றெண்ணி, அஸூயையுடன் கூடியவர் எப்படி கடவுளாவ ரென்று மலைத்து அவரிடம் பக்தி நிலைக்காமலிருந்து வரு கின்றார்கள். வேறு சில கிருஸ்துவர்கள் "ஸகுணஸ்வரூபியான கடவுள் ஸாமான்யமாய் யத்தனஞ் செய்பவரைப்போல் ஆறு நாள் சிரமப்பட்டு வேலையைச் செய்து இப்பூலோகத்தை 6000 வருஷங்களுக்கு முன்பாக ஸ்ருஷ்டித்தார், ஏழாவது நாளில் சிரமபரிகாரஞ் செய்துகொண்டார்" என்ற கிருஸ்துவ மதக்கொள்கையை ஒப்புக்கொள்ள முடியாமலிருக்கின்றார் கள். பூமிதத்வசோதகர்களாயிருக்கிற (Geologists) கிருஸ்து வர்கள் மேற்குறிப்பிட்ட ஸ்ருஷ்டிகாலத்தைத் தப்பென்றும் இப்பூலோகம் உண்டாகி வெகு கோடி வருஷங்களாயிருக்க வேண்டுமென்றும் உறுதியாய்ச் சொல்லுகிறார்கள். மற்றும் சில தத்வபரிசோதனையில் ஆவலுள்ள புத்திகூர்மையுடன் கூடியவர்கள் குண-ரூபங்களுடன் சேர்ந்திருக்கிறகடவுளிடம் (Personal God) உண்மையில் கடவுள்தன்மையே பூர்ணமா யிருக்கமுடியாதே என்ற சங்கையின் பேரில், கிருஸ்துவமதம் ஆலோசனையேயில்லாத கீழான அதிகாரிகளுக்குத்தான் சரி

யென்றும், அது தத்வசாஸ்திரத்திற்கு விரோதப்படுவதால் உண்மையாயிருக்கக் கூடியதில்லையென்று அந்தரங்கத்தில் தீர்மானித்துக் கொண்டும், ஜனங்களிடம் புழங்கிவருவதற்காக மாத்திரம் (as mere social matter) தங்களை கிருஸ்துவர்களென்று சொல்லிக்கொண்டுமிருக்கின்றார்கள். இவ்விதமாக கிருஸ்துவமதம் கீழ்ஸ்திதிகளிலுள்ளவர்களுக்கு உபயோகப்படாமலும் (as too high), மத்தியமஸ்திதிகளிலுள்ளவர்களிலும் அனேகர்களுக்கு திருப்திப்படாமலும் (as unsatisfactory), மேலான ஸ்திதியிலுள்ளவர்களுக்கு கீழ்ப்பட்டதாகவும் (as too low), உண்மையில்லாமலும் (as untrue) இருந்துவருவதற்கு முக்கியகாரணம் அம்மதத்தில் குறிப்பிடப்பட்ட கடவுள் ஸ்வரூபத்தில் ஸகுணராகவேயிருப்பதும், நாநாவித ஜீவர்களுக்கு ஒரேவித உபாஸ்யத்தை (Ideal for devotion) கொடுத்திருப்பதுமே தவிர வேறல்ல.

10. உபாஸகர்களின் பரஸ்பரபேதங்களினால் பரமாத்மாவிடத்திலும் நாநாவித குண-ரூபகல்பனம் அவசியமென்று ஏற்பட்டபோதிலும், இவ்வித குண-ரூபகல்பனத்தைச் செய்யவே வெகு ஜனங்களுக்கு யோக்கியதையிருக்கக் கூடியதில்லை. மனது வசப்படாமல் இந்திரிய-விஷயபோகங்களைத் தேடி அலைந்து கொண்டிருக்கும்போது, பரமாத்மாவின் நற்குணகணங்களையும் அவைகளுக்கு ஒற்றுமையாயிருக்கக் கூடிய ரூபத்தையும் பாவனை செய்வதற்கும், பாவனுபலத்தின் பேரில் ஸ்தூலமாய் கற்பிக்கப்படவேண்டிய விக்கிரஹத்தை உண்டாக்குவதற்கும் பெரும்பாலும் ஜனங்கள் சக்தியற்றவர்களாகவுமிருக்கிறார்கள். தவிரவும், இந்தப்படி ஒவ்வொருவரும் தனித்தனியாகவும் புதிதாகவும் அவ்வித பாவனையைச் செய்வது அவசியமுமில்லை. ஸகலவித மனித

ஸ்வபாவங்களுக்கும் தக்கவிதங்களில் பரமாத்மாவின் குண பாவரூபபேதங்கள் பிரத்யேகமாய் சாஸ்திரத்தில் குறிப் பிடப் பட்டிருக்கின்றன. அவைகளில் தனக்குத் திருப்திகர மான எதையாவது ஒன்றை அவலம்பித்துக்கொண்டும் அதற் குரிய ஸ்தூலவிக்கிரஹத்தை ஸம்பாதித்துக் கொண்டும் அல்லது ஏற்படுத்திக்கொண்டும் உபாஸனத்தைச் செய்து வருவதே மனிதன் செய்யவேண்டிய காரியம். பேரானந்த ஸமுத்திரக்கரையில், அவ்வானந்தாமிருதத்தை நேரில் கையி லெடுத்தோ அல்லது அதிலேயே ஸம்பூர்ணமாய் பிரவே சித்தோ அனுபவிக்கக்கூடியவர்களான ஸாமான்ய ஞானி களையும் விசேஷஜ்ஞானிகளான ஜீவன்முக்தர்களையும் தவிர மற்ற எல்லோரும் அதை எடுத்துப் பானஞ் செய்வதற் காகவே, தயாராகவும் தினுசு தினுசாகவும் வைக்கப்பட்டிருக் கின்ற ஏராளமான திவ்ய ஸ்வர்ணபாத்திரங்களில் ஒன்றைக் கைக்கொண்டு பேரானந்தத்தை உடனே கிரஹித்து அனுப விப்பதைவிட்டு, மணலைப்பிடித்து தனிப்பாத்திரத்தை தானே உண்டாக்கிவிடுவதாக வீண்யத்தனத்தைச் செய்து காலத்தை வியர்த்தப்படுத்திக் கொண்டும், அமிருதபானத் தைச் செய்யவே முடியாத ஸ்திதியில் இருந்து கொண்டும் இருப்பவர் புத்தியுள்ளவராகமாட்டார். குணங்களின் மூவ் வகை பேதங்களை யனுஸரித்து மூன்று பிரதான ஸகுணப் பிரம்ம மூர்த்திவிபவங்களும், முக்குணங்களுக்கும் ஐந்து ஞானேந்திரியங்கள் ஐந்து கர்மேந்திரியங்கள் மனது ஆக இந்த பதினொன்றுக்கும் பரஸ்பரம் பலவிதமாக ஏற்படக் கூடிய ஸம்பந்த வேறுபாடுகளின் காரணத்தினால் மேற்கண்ட மும்மூர்த்திகளின் அம்சங்களாகவே தனித்தனியே விளங்கு கின்ற (11 ருத்திரர்கள் +12 ஆதித்தியர்கள் + 8 வஸுக் கள் + 2 அச்வினீதேவதைகள் = 33) முப்பத்துமூன்று முக்

கிய தேவதா மூர்த்திகளும் இருப்பதாக சாஸ்திரத்தில் துலங்குகின்றது. இவ்வித ஒவ்வொரு தேவதையுடையவும் அம்சபூதர்களாக கணக்கிலடங்காத தேவர்கள் சிற்சில அவாந்தர பேதங்களுடன் இருந்து வருவதாகவும், இக்காரணத்தினல் மொத்தம் முப்பத்துமுக்கோடி தேவதா மூர்த்திகளுண்டென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு "கோடி" என்ருல் "அனந்தம்" என்றுதான் கருத்து. மேற்கண்ட பிரதான ஸகுண மூர்த்திகளுக்கும் அம்சதேவதா மூர்த்திகளுக்கும் தனித்தனியே சக்திரூபங்களும் விசேஷ ஸ்திரீவியக்திகளில் ஏற்பட்டிருக்கின்ற விஷயமும் பிரவஸித்தமே. இதுவுந் தவிர, லோக-திக்பாலர்கள் முதலான வேறு சில பிரதான தேவதா மூர்த்திகளும், பரமாத்மாவின் விசேஷ அம்சபூதர்களாக ஆவிர்ப்பவித்திருக்கின்ற கணபதி, ஸுப்பிரம்மண்யர் முதலான ஸர்வோத்கிருஷ்ட மூர்த்திகளும், ஸங்கர்ஷணுதி திவ்யதம மூர்த்திகளும், பலவித அவதாரரூபங்களும், அவரவர்களுக்குள்ள சக்திரூபங்களும் இருந்து வருகின்ற விபரமும் சாஸ்திர கிரந்தங்கள் மூலமாய் எல்லோருக்கும் தெரியவரும். இவ்விதமாக சாஸ்திரத்தில் குறிப்பிடப்பட்ட லக்ஷணங்களையுடைய அனந்தமான ஸகுண-தேவதா-மூர்த்திசக்திகளில், முன் சொல்லியபடி, எது எந்த உபாஸகருக்குப் பிடித்தமுள்ளதாயிருக்குமோ அதையே அவர் மனதினல் தியானித்துக்கொண்டு அதற்குரிய ஸ்தூலவிக்கிரஹத்தை ஆராதித்துவர வேண்டும். தனக்கு இன்னதுதான் பிடித்தமென்றுகூடத் தெரியக்கூடாத ஸ்திதியிலிருப்பவர் விபரந்தெரிந்த ஒரு தார்மிகப் பெரியோரை குருவாக ஆசிரயித்து அவர் ஏற்படுத்துகிற விக்கிரஹத்தைக் கைக்கொண்டு அவர் குறிப்பிடுகிற மார்க்கத்தில் உபாஸனத்தைச் செய்துவரவேண்டும். தன்னுடைய சொந்த

மனப்பிடித்தத்தின்பேரில் ஸகுண மூர்த்தியைக் கைக்கொள் பவரும் சரியான குருவை அடைந்து, அவரிடம் தன்னுடைய மனோபாவங்களை வெளிப்படுத்தித் தன்னுடைய மனப்பிடித் தம் கிரமமான மார்க்கத்திலேயே ஏற்பட்டிருக்கிறதென்பதை யும் உறுதிப்படுத்திக்கொண்டு, அந்த குரு மூலமாக விக்கிர ஹாராதனத்தைத் தொடங்கி நடத்தி வருவதே உத்தம மாகும். இந்தப்படி ஒவ்வொரு மனிதனும், அவனுடைய ஸ்திதி தாழ்ந்ததானாலும் உயர்ந்ததானாலும், குண-ரூபங்கள் மூலமாய் பரமாத்மாவிடம் பக்தியைச் செலுத்திக் கரை யேறும்பொருட்டு, தார்மிகஹிந்து மதத்தில் நாநாவிதகுண-ரூபங்கள் பகவானிடம் மேற்கண்டபடி ஆரோபிக்கப்பட்டிருக் கின்றன. இவ்வித ஆரோபணங்களைச் செய்தது யாரென்று ஒரு கேள்வி ஏற்படலாம். இவை ஜீவர்களாலேயே செய்யப் பட்ட ஆரோபணங்களல்ல, ஜீவர்களை நிமித்தீகரித்து பரமாத்மாவின் ஸங்கல்பத்தினால் ஏற்பட்ட ஆரோபணங்கள். இவை பெரும்பாலும் பிரபஞ்ச அத்தியாரோபக்கிரமத்தில் (ஸ்ருஷ்டியில்) ஏற்பட்டவை. பிரபஞ்சஸ்ருஷ்டியே ஜீவர்களை உத்தேசித்தே நடந்து வருவதுபோல், பரமாத்மாவிடத்தில் பலவித குண-ரூப ஆரோபணங்களும் ஜீவர்களுக்காகவே செய்யப்பட்டு வருகின்றன. அதாவது, ஜீவர்களுடைய நன் மைக்காகவே பகவானுடைய ஸங்கல்பத்தினால் அவரிடத்தி லேயே அனேகவித குண-ரூபாரோபணம் பகவன்மாயா காரியமாக நடக்கிறது. "ஆரோபணம்" என்று சொல்வதி னாலேயே உண்மையல்லவென்று துவனிக்கின்றது. பிரபஞ்ச ஸ்ருஷ்டியே வாஸ்தவமில்லையென்பதே ஸத்தியம். ஆனால், இது யாருக்கு வாஸ்தவமில்லையென்பதை கவனிக்கவேண்டும். ஸகல நிருச்யவிலயம் அனுபூதிக்கு வந்திருக்கின்ற ஞானிக்கு வாஸ்தவமில்லை. அஜ்ஞானிக்கு வாஸ்தவந்தான். ஞானியின்

பார்வையில் ஜகத்துப் பூராவும் மித்யைதான். ஸம்ஸாரி ஸ்தானத்திலிருக்கின்ற அஜ்ஞானிக்கு தன் சரீரம், சுற்றத்தார்கள், ஸம்ஸாரஸுக-துக்கங்கள், வீடு, சொத்துக்கள், இவ்வுலகம் எல்லாம் உண்மையாயிருப்பது எப்படியோ, அப்படியே அவன் ஸம்பந்தப்பட்டமட்டில் ஸ்வர்க்கம், நரகம், நாநாவிததேவதாமூர்த்திகள், ஸகலமும் வாஸ்தவந்தானேயொழிய பொய்யல்ல. எவருக்கு இவ்வுலகமும் தான் தனி ஜீவனென்பதும் ஞானத்தினால் மறைவடைந்து விடுமோ, அவருக்குத்தான் மற்ற உலகங்களுமில்லை, தேவதைகளுமில்லை.

**11.** இப்பால், முன் குறிப்பிட்ட ஜகத்ஸ்ருஷ்டிக்கிரமத்தில் எவ்விதமாக பரமாத்மாவிடத்தில் குண-ரூபகல்பனங்கள் ஏற்பட்டனவென்பதை விசாரிப்போம். இவ்விசாரம் வியாவஹாரிகதசையில்தான் நடக்கக்கூடியது. வியாவஹாரிகத்திற்கு அதீதமான பாரமார்த்திக தத்வம் உண்மையில் விசாரவிஷயமேயல்ல, அது ஸ்வானுபூதிவிஷயம். கல்பம், பிரளயம் என்ற விஷயங்கள் வியாவஹாரிக விஷயங்கள் தான். பாரமார்த்திகத்தில் கல்பமாவது, பிரளயமாவது, ஈசுவரரென்ற ஸகுணப்பிரம்மமாவது, பரமாத்ம-ஜீவாத்ம பேதங்களாவது, ஜகத்தாவது, ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹாரங்களாவது யாதொன்றும் கிடையாது. ஆகையால், நம்முடைய பிரகிருதவிசாரம் வியாவஹாரிகத்தில் பிரளயத்தின் முடிவிலும் கல்பத்தின் ஆரம்பத்திலும் என்ன நடந்திருக்கின்றதென்பதைத்தான் கொஞ்சம் வியக்தப்படுத்தக்கூடியது. பிரளயங்களும் கல்பங்களும் அநாதிகாலமாக மாறி மாறி வந்துகொண்டிருக்கிறபடியால், அவைகளுக்கு முதல் ஆரம்பமாவது அவ்வித ஆரம்பத்திற்குக் காரணமாவது உண்டென்று சொல்லுவதற்கில்லை. பாரமார்த்திக திருஷ்டியில் பிரளய-கல்பங்களே மேற்கண்டபடி மித்யையாயிருப்பதால்

உண்மையில்லாதவைகளுக்கு உண்மையான ஆரம்பகாலமாவது காரணமாவது இருக்கக்கூடியதேயில்லை. ஜீவர்கள் ஸம்பந்தப்பட்டமட்டில், ஏதாவது ஒரு குறிப்பிட்ட பிரளயத்திற்கு அல்லது கல்பத்திற்கு ஆதியும் அந்தமும் உண்டென்று சொல்லக்கூடும். நடப்பு கல்பத்தின் ஆரம்பத்தில் ஸ்ருஷ்டிக்கிரமம் எப்படியிருந்ததென்று தெரிந்துகொண்டால் ஒவ்வொரு கல்பாரம்பத்திலும் அவ்விதமாகவே அது நடந்து வருவதாக ஊஹித்துக்கொள்ளலாம். பிரளயகாலத்தில் ஈசுவரரைத்தவிர வேறு யாதொன்றும் கிடையாது. அதற்கு முன்னிருந்த கல்பத்திலிருந்தவர்களும் கைவல்ய முக்தியை அடையாதவர்களுமான ஜீவர்கள் எல்லோரும் ஸுஷுப்தியில் போல் அவரவர்களுடைய காரணசரீரமாகிய அவித்யையில் லயமாகியும், ஷை காரணோபாதியும் மற்றும் ஜகத்துப்பூராவும் ஈசுவரமாயையில் அடங்கி லயப்பட்டும், இம்மாயையும் ஈசுவரரிடம் அடங்கி ஒடுங்கியும் இருக்கின்ற ஸ்திதி பிரளயமென்று கூறப்படுகின்றது. இவ்வித ஈசுவர மாயைக்கு அவ்யக்தமென்றும் ஆவரணசக்தி யென்றும் பெயர்களுண்டு. இம்மாயையில் ஸத்வகுணம் பிரதானமாயுள்ளது. சுத்தப்பிரம்மத்திற்கு அபின்னமாயிருக்கிறதும் அநிர்வாச்யமும் குணஸாம்யத்துடன் கூடியதுமான மூலப்பிரகிருதி யென்ற சுத்தமாயாசக்தியிடத்தில் ஸத்வகுணம் தலையெடுத்து அம்மாயாசக்தியே ஸாத்விக அவ்யக்த மாயையாக விளங்குங்கால் அதின் மூலமாய், அதாவது, அதை உபாதியாகக்கொண்டு, பிரகாசிக்கின்ற பிரம்மசைதன்யத்திற்கு ஈசுவரர் என்று பெயர் ஏற்பட்டிருக்கின்றது. நாம் ஸம்பந்தப்பட்டமட்டில், பிரளய-கல்பங்களின் தொடர்ச்சிக்கு ஆதியே இருந்திருப்பதில்லையாதலால், முதல் முதல் எந்தக்காலத்தில் குணஸாம்யத்துடன்கூடிய சுத்தமாயை ஸத்வகுணத்துடன்

கூடிய அவ்யக்தமாகத் தோன்றிற்றென்பது சொல்லப்படக் கூடியதேயில்லை. பிரளய-கல்பங்களின் தொடர்ச்சி அநாதியா யிருப்பதுபோல் அவ்யக்தமாயாசபளிதரான ஈசுவரரும் அநாதியே. ஜீவர்களெல்லோருக்கும் இவ்வீசுவரர்தான் ஸர்வோத்தமரும் அநாதியுமான ஸகுணப்பிரம்மமென்ற முக்கிய பரமாத்மா. இவரே ஸகல ஜகத்துக்கும் அரூபியான ஸமஷ்டி காரணாத்மா. பிரளயத்தின் முடிவுகாலத்தில், ஈசுவரரால் அதிஷ்டிதமாயிருக்கிற (ensouled) ஸாத்விக அவ்யக்த மாயை யென்ற ஆவரணசக்தியிலிருந்து ரஜோகுணம் தலை யெடுத்திருக்கிற மஹத் என்று பெயர் கொண்ட விக்ஷேப மாயாசக்தி உத்பன்னமாகின்றது. இந்த மஹத்தின் மூலமாய் பிரகாசிக்கின்ற பிரம்மசைதன்யத்திற்கு ஹிரண்யகர்ப்பர் என்று பெயர். எல்லையற்ற மஹாந்தகாரஸமுத்திரம் போலி ருக்கின்ற அவ்யக்தமாயையில் மத்தியில் உதித்திருக்கிற மஹத்தத்வத்தின் அபிமானியாகிய இந்த ஹிரண்யகர்ப்பர் அஸ்பஷ்டமாயும் ஸ்பஷ்டமாயும் விளங்குகின்ற தேஜோ ரூபியாயிருந்துகொண்டு வரப்போகிற ஸகலஜகத்துக்கும் ஸமஷ்டி ஸூக்ஷ்மாத்மாவாக இருந்து வருவார். இந்தப்படி அவ்யக்தமாயாந்தகாரமத்தியில் உண்டாயிருக்கிற மஹத் தத்வத்தில் தோன்றுகின்ற ஹிரண்யகர்ப்பரைத்தான் புரா ணங்கள் பிரளயமஹாஸமுத்திரத்தில் ஆல் இலையில் பள்ளி கொண்டு யோகநித்திரையிலிருக்கிற சிசுரூபியான மஹா விஷ்ணு வென்று வர்ணிக்கின்றன. இவரே ஸர்வஸூக்ஷ்ம பாலகர். இந்த ஹிரண்யகர்ப்பரால் அதிஷ்டிதமாயிருக்கிற ஷை ராஜஸ மஹத்தென்ற விக்ஷேபமாயாசக்தியிலிருந்து தமோகுணம் தலையெடுத்திருக்கின்ற அஹங்காரம் என்ற பெயருடன்கூடிய ஸ்தூலமாயாசக்தி யுண்டாகின்றது. இந்த அஹங்காரசக்தி மூலமாய் பிரகாசிக்கின்ற பிரம்மசை

தன்யத்திற்கு விராட் என்று பெயர். இவருடைய உத்பத்தியைத்தான் மஹாவிஷ்ணுவின் நாபிகமலத்திலிருந்து ஏற்பட்ட உத்பத்தியாக புராணங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. இவர் ஸ்பஷ்டமான ரூபத்துடன் கூடியவர். இவர்தான் ஸகல ஜகத்துக்கும் ஸமஷ்டி ஸ்தூலாத்மா. இவரே ஸர்வஸ்தூலபாலகர். இவ்விதமாக ஒவ்வொரு பிராளயாந்தத்திலும் ஈசுவரர், ஹிரண்யகர்ப்பர், விராட் என்பதான மூன்று ஸகுணப்ரம்மஸ்வரூபங்கள் முதலில் விளங்குகின்றன. இம்மூன்றும் ஜகத்தின் ஸமஷ்டியாத்மஸ்வரூபங்கள். இந்தப்படி பிரம்மத்திற்கு மூவ்வகையாக ஸகுணத்வம் ஏற்பட்டிருந்தபோதிலும், ஸமஷ்டியாத்மஸ்வரூபிகளான (Universal Beings) ஈசுவராதி மூவர்களும் ஜகத்துக்குள்ளடங்கிய ஜீவர்களுக்கு (Individual Beings) நேராகவே உபாஸனவிஷயமாகக் கூடியவர்களில்லை. உபாஸனாரம்ப அப்பியாஸகாலத்தில் உபாஸ்யத்தைக்காட்டிலும் உபாஸகர் அன்னியராகவும் வெளிப்பட்டவராகவும் இருந்துகொண்டே உபாஸ்யத்தை உபாஸனவிஷயமாகச் செய்துகொள்ளவேண்டியதாயிருக்கிறது. ஆகையால், உபாஸகர்களாகிய அல்பஜீவர்களுடைய உபாஸனஸௌகரியத்தின் பொருட்டும் மற்றுமுள்ள ஜகத்காரியங்களையுத்தேசித்தும், மேற்கண்ட மூவர்களே, பின்னால் விவரிக்கப்போகிற பிரகாரம், தங்கள் தங்களுடைய அம்சங்களை வியஷ்டிரூபங்களுடன் ஏற்படுத்தி ஜீவர்களுக்கு ஸகுணோபாஸன ஸௌகரியத்தைச் செய்து கொடுத்திருக்கின்றார்கள்.

12. இம்மூவர்களிடத்திலிருந்தும் தனித்தனியாக இரண்டு அம்சங்கள், ஒன்று புருஷரூபத்திலும் மற்றொன்று ஸ்திரீரூபத்திலும் வெளிப்பட்டன. ஈசுவரரிடமிருந்து அவருடைய ஸ்வாம்சமாக ருத்திரரும், அவருடைய மாயை

யின் அம்சமாக ஸரஸ்வதீயும் ஆவிர்ப்பவித்தார்கள். இப்படியே, ஹிரண்யகர்ப்பரிடமிருந்து ஸ்வாம்சமாக விஷ்ணுவும், மாயாம்சமாக கௌரீயென்ற உமையும் உண்டானார்கள். விராட்டிடமிருந்து ஸ்வாம்சமாக பிரம்மாவும், மாயாம்சமாக லக்ஷ்மீயும் வெளிப்பட்டார்கள். இந்தப்படி ஒரே உத்பத்திஸ்தானம் ஏற்பட்டிருக்கிறவர்களுக்குள் ஸஹோதரத்வம் இருந்து வருவதும் சாஸ்திரப்பிரஸித்தமே. அதாவது, ருத்திரரும் ஸரஸ்வதீயும், விஷ்ணுவும் கௌரீயும், பிரம்மாவும் லக்ஷ்மீயும் ஸஹோதர-ஸஹோதரிகள். இவர்களுக்குள்ளாக ருத்திரர் ஜகத்ஸம்ஹாரகர்த்தா, விஷ்ணு பரிபாலன கர்த்தா, பிரம்மா ஸ்ருஷ்டிகர்த்தா. இப்படியே, ஸரஸ்வதீ கிரியாசக்தி, கௌரீ ஞானசக்தி, லக்ஷ்மீ இச்சாசக்தி. ஈசுவரர், முன்குறிப்பிட்டபடி, அரூபியானதாலும், அநாத்மஸ்ருஷ்டியில் அவருடைய அவ்யக்தமாயை அந்தகாரஸமுத்திரத்திற்கு ஒப்பிடப்பட்டிருப்பதாலும், அவரும் அவருடைய அம்சபூதர்களான ருத்திரரும் ஸரஸ்வதீயும் தமோகுணஸம்பந்த முள்ளவர்களென்றும், அவ்வந்தகாரஸமுத்திரமத்தியில் ஸ்பஷ்டாஸ்பஷ்டதேஜோரூபியாய் விளங்கினவரும் ஸூக்ஷ்ம விஜ்ஞானத்துடன் கூடினவருமான ஹிரண்ய கர்ப்பரும் அவருடைய அம்சபூதர்களான விஷ்ணுவும் கௌரீயும் ஸத்வகுண ஸம்பந்தமுள்ளவர்களென்றும், அஹங்காரமாயா-சபளிதரான விராட்டும் அவருடைய அம்சபூதர்களான பிரம்மாவும் லக்ஷ்மீயும் ரஜோகுண ஸம்பந்தமுள்ளவர்களென்றும் எண்ணப்பட்டு வந்திருக்கின்றது. மேலும், கோரகிருத்யமான ஸம்ஹாரகாரியம் ருத்திரரிடத்திலும், ஸர்வலோக ஹிதகரமான பரிபாலன காரியம் விஷ்ணுவிடத்திலும், ஸ்ருஷ்டிகாரியம் பிரம்மாவிடத்திலும் இருந்து வருவதினாலும் இம்மூவர்களின் முறையே தமஸ்-ஸத்வ-ரஜோகுணங்கள் உறுதியடைந்திருப்

பதாகவும் பாவிக்கப்பட்டு வந்திருக்கின்றது. ஆனால், இவ்வித எண்ணங்களும் பாவனைகளும் சரியல்லவென்பதும், உண்மையில் ருத்திரர் ஸத்வகுணவான் என்பதும், விஷ்ணு ரஜோகுணவான் என்பதும், பிரம்மா தமோகுணவான் என்பதும் பின்னால் துலக்கிக்காட்டப்படும். குறிப்பிட்ட மூன்று தேவிகளும் மாயையின் அம்சங்களாகவே உண்டாகியிருப்பதில், அந்தந்த மாயையில் அடங்கியிருந்த அப்பிரதான குணங்களில் ஒன்றே பிரதான குணமாக அந்தந்த அம்சங்களில் தனித்தனியே விளங்குகின்றது. ஈசுவரருடைய அவ்யக்தமாயை ஸத்வகுணப்பிரதானமானாலும் அதில் அடங்கியிருந்த தமோகுணம் ஸரஸ்வதியிடம் பிரதானப்பட்டு அவள் கிரியாசக்தியாகவும், ஹிரண்யகர்ப்பருடைய மஹத் என்ற மாயை ரஜோகுணப்பிரதானமானாலும் அதில் அடங்கியிருந்த ஸத்வகுணம் கௌரீயிடம் பிரதானப்பட்டு அவள் ஞானசக்தியாகவும், விராட்டின் அஹங்காரமாயை தமோகுணப்பிரதானமானாலும் அதில் அடங்கியிருந்த ரஜோகுணம் லக்ஷ்மீயிடம் பிரதானப்பட்டு அவள் இச்சா சக்தியாகவும், பிரத்தியேகமாய் விளங்குகின்றார்கள். இந்தப்படி மூன்று தேவிகளுடையவும் பிரதான குணங்கள் அவரவர்களின் ஸஹோதரர்களுடைய மேற்கண்ட உண்மையான குணங்களுக்கு வேறாக மாறிப்போனதற்கு விசேஷகாரணமுண்டு. ஸஹோதர-ஸஹோதரிகளுக்குள் குணபேதமிருந்தால்தான், அடியில் குறிப்பிடப்போகிறபடி, பதி-பத்னிகளுக்குள் ஸமானகுணவத்வம் ஏற்படுவது ஸாத்தியப்படக்கூடும். எந்த தேவீ எந்த ஸகுணமூர்த்திக்கு பத்னீஸ்தானத்தில் சக்திரூபிணியாக அம்மூர்த்தியுடன் சேர்க்கப்பட வேண்டியவளோ அந்த மூர்த்தியின் குணமே அவளுக்கிருக்கவேண்டியதவசியமாகையாலும்; ஸஹோதர-ஸ்ஹோதரிகளுக்குள்

ளாக பதி-பத்னீபாவம் ஏற்படக்கூடாமலிருப்பதாலும், தேவிகளின் குணங்கள் மேற்சொல்லியபடி பின்னப்பட வேண்டியதாயிற்று. இப்படி பின்னப்படுவது, அதாவது, எந்த மாயையின் அம்சமாக ஒவ்வொரு தேவீயும் ஆவிர்ப் பவித்தாளோ அந்த மாயையின் பிரதானகுணத்திற்கு வேறு பட்டுள்ள குணம் அந்த தேவிக்கு இருப்பது ஸாத்தியமா வென்று சற்றும் ஸந்தேஹப்படவேண்டாம். எங்கும், யாரி டத்திலும் முக்குணங்களும் சேர்ந்தேயிருப்பதால் இது ஸாத்தியந்தான். ஸத்வகுணப் பிரதானையான அவ்யக்த மாயையிலிருந்து ரஜோகுணப்பிரதானையான மஹத் என்ற மாயையும், இந்த ரஜோகுணப்பிரதானையான மஹத்தி லிருந்து தமோகுணப்பிராதனையான அஹங்காரமாயையும் உண்டாகவில்லையா? இது போல்தான், தேவீகளின் குண விசேஷங்களும் மாறுதலாக ஏற்பட்டனவென்று அறிந்து கொள்ளவேண்டும். பிரம்மாவின் ஸ்ருஷ்டிக்கிரியையில் கிரியா சக்தியின் அவசியத்தன்மையினால், அவர் ஸரஸ்வதீயுடன் சேர்க்கப்பட்டிருக்கிறார். த்வைதாத்மகமான ஜகத்தின் ஸ்திதி காமம் என்ற இச்சையையே மூலமாகக்கொண்டிருக் கிறபடியால், ஜகத்பரிபாலகரான விஷ்ணு இச்சாசக்தியான லக்ஷ்மீயுடன் சேர்க்கப்பட்டிருக்கிறார். பின்னால் காட்டப் போகிற பிரகாரம் ஸ்வயம் ஞானனந்தமயராகவும் நித்தியாத் மாவாகவுமிருக்கிற ருத்திரருடைய அனாத்ம-த்வம்ஸகிருத் யத்தில் ஞான சக்தியின் ஆனுகூல்யமிருப்பதால், அவர் கௌரீ யுடன் சேர்க்கப்பட்டிருக்கிறார். இவ்விதமாய் த்ரிமூர்த்தி களும் மூன்று தேவீகளும் அடங்கிய மஹாதம்பதித்ரய ரூபமாக பரம்பொருளே விசேஷமாய் ஸகுணப்பட்டு சோபிக்கின்றது.

13. முன் சொல்லியபடி அம்சாம்சிபாவம் ஏற்பட்டி ருப்பதால் ருத்திரருக்கும் ஈசுவரருக்கும், இப்படியே விஷ்ணு

வுக்கும் ஹிரண்யகர்ப்பருக்கும், பிரம்மாவுக்கும் விராட்டுக்கும் அபேதம் ஸித்தித்திருக்கின்றது. ஜீவர்கள் ஈசுவராதி ஸமஷ்டிரூபிகளை நேராக உபாஸித்துவர சக்தர்களில்லையாதலால், இவர்களுக்கு ஈசுவராம்சமாகிய ருத்திரரே ஜகத்தின் ஸமஷ்டி காரணாபிமானியாகவும், ஹிரண்யகர்ப்பாம்சமாகிய விஷ்ணுவே ஸமஷ்டி ஸூக்ஷ்மாபிமானியாகவும், விராடம்சமாகிய பிரம்மாவே ஸமஷ்டி ஸ்தூலாபிமானியாகவும் இருந்து வருகின்றார்கள். வாஸ்தவத்தில் கேவல சைதன்யத்திற்கு குணவத்வம் கிடையாது. குணத்வம் மாயையைச்சேர்ந்தது. மாயாசக்தி-ஸம்பந்தமாகவே சைதன்யத்தில் குணவத்வம் ஆரோபிக்கப்படுகின்றது. முன் காட்டிய விபரப்பிரகாரம் எவ்விதம் ஈசுவர-ஹிரண்யகர்ப்ப-விராட் மூவர்களும் பிரம்ம சைதன்யமே தவிர வேறல்லவோ, அவ்விதமே அவர்களுடைய ஸ்வாம்சபூதர்களான ருத்திர-விஷ்ணு-பிரம்மா மூவர்களும் பிரம்மசைதன்யமேயல்லாமல் வேறல்ல. ஆயினும், மாயா-ஸம்பந்தத்தினால் அம்சிகளில் ஆரோபிதமான அந்தந்த குணவத்வம் அம்சங்களிலும் ஸம்பந்தப்பட்டிருக்கின்றது. அதாவது, எப்படி ஸாத்விக-அவ்யக்த-மாயா-சபளிதரான ஈசுவரர் ஸத்வகுண பூயிஷ்டரோ, அப்படியே அவருடைய ஸ்வாம்சபூதரான ருத்திரரும் ஸத்வகுண பூயிஷ்டர். மேலும், ருத்திரர் ஸத்வகுணப் பிரதானையான கௌரீயுடன் சேர்க்கப்பட்டுமிருக்கிறார். எவ்விதம் ராஜஸ-மஹத்-என்ற-விக்ஷேபமாயா-சபளிதரான ஹிரண்யகர்ப்பர் ரஜோகுணபூயிஷ்டரோ, அவ்விதமாகவே அவருடைய ஸ்வாம்சபூதரான விஷ்ணுவும் ரஜோகுண பூயிஷ்டர். விஷ்ணு ரஜோகுணப்பிரதானையான லக்ஷ்மீயுடன் சேர்க்கப்பட்டு மிருக்கிறார். எப்படி தாமஸ-அங்காரமாயா-சபளிதரான விராட் தமோகுணபூயிஷ்டரோ, அப்படியே

அவருடைய ஸ்வாம்சபூதரான பிரம்மாவும் தமோகுண பூயிஷ்டர். இவர் தமோகுணப் பிரதானையான ஸரஸ்வதி யுடன் சேர்க்கப்பட்டு மிருக்கிறார். வியக்தமாய் பைங்களோப நிஷத் முதலான சுருதிபாகங்களில் விவரித்திருக்கிற பிரகாரம் இதுவே வேதத்தின் முடிவான கொள்கை. இதற்கு எதிரிடையாக ருத்திரரை தமோகுணவானென்றும், ஜீவர்களிடம் காணப்படுகின்ற தமோகுணம் எவ்விதம் தூஷிக்கப்படத்தகுந்ததோ அவ்விதமே த்ரிமூர்த்திகளில் ஒருவரிடமிருக்கின்ற தமோகுணமும் தூஷிக்கப்படத் தகுந் ததுதானென்றும் ஜனங்கள் அபிப்பிராயப்படும்படியாக கிரந்தங்களில் எழுதிக்கொண்டு நெடுநாளாக சில சிவத்து வேஷிகள் தப்புப் பிரசாரத்தைச் செய்து வந்திருக்கின்றார் கள். முன்குறிப்பிட்டபடி, ஈசுவரர் அரூபியாயிருப்பதும், அவருடைய அவ்யக்தமாயை அறுத்மப்பார்வையில் அந்த காரஸமுத்திரத்திற்கு ஸமானமாகச் சொல்லப்பட்டிருப் பதும், அவருடைய அம்சபூதரான ருத்திரரின் செய்கை கோரரூபமான ஸம்ஹாரகிருத்தியமாயிருப்பதுமான இவை யெல்லாம் ஈசுவரரையும் ருத்திரரையும் தமோகுணவான்க ளாகச் செய்துவிடக்கூடியவையல்ல. அரூபியாயிருப்பது பிரம்மத்தின் ஓர் லக்ஷணமாகையால், அவ்யக்தமாயிருக்கிற ஸாத்விக மாயையின் மூலமாய் பிரம்மம் ஈசுவரராக விளங்கும் போதும் அதற்கு வியக்தத்தன்மை ஏற்படக் கூடாததுபற்றி ஸ்வயமான அரூபித்தன்மைக்கு ஹானி யுண்டாகாமலிருந்து விடுவதினால் தமோகுண ஸம்பந் தத்தை ஈசுவராரிடத்தில் ஆரோபிப்பது அஜ்ஞான காரியமே தவிர வேறல்ல. அரூபியாயிருப்பது ஈசுவரருக்குப் பெரு மையே யல்லாமல் குறைவல்ல. ஈசுவரருக்கும் பிரம்மத்திற்கு முள்ள அபேதத்தையே அது குறிப்பிடுகின்றதென்று சொல்லவேண்டும். மேலும், அவ்யக்தமாயாத்மகமான பிரள

யாந்தகாரத்தை தமோகுண இருளைப்போல் பாவித்து, அம்மாயைக்கு அதிபதியும் இவ்வித பிரளய காலத்திலும் ஸாக்ஷியாயிருந்துவருபவருமான ஈசுவரரை தமோ குணவானென்று எண்ணியதும் அறியாமையேயாகும். இந்த ஸாக்ஷித்தன்மையும் அவருடைய மேன்மையைத்தான் குறிப்பிடுகிறது. ஒவ்வொரு கல்பத்திலும் ஜகத்தின் ஸூக்ஷ்மாம்சங்களும் ஸ்தூலாம்சங்களும் ஸ்ருஷ்டிக்கப்படுகின்றனவேயல்லாமல், அதின் காரணரூபம் ஸ்ருஷ்டிக்கப்படுவதில்லை. பிரளயத்திலும் காரண ரூபமாக ஈசுவரமாயையில் ஜகத்து இருந்து கொண்டுதானிருக்கிறது. இவ்வித காரண ரூபம் இருப்பதினால்தான் பின் கல்பாரம்பத்தில் ஜகத்தின் ஸூக்ஷ்ம ஸ்தூலத்தன்மைகளின் உத்பத்தி ஸாத்தியப்படக் கூடியதாயிக்கின்றது. பிரளயமானாலும் கல்பமானாலும், இருவித ஜகத்தின் அவஸ்தைகளிலும் ஸமஷ்டி காரணாத்மாவாகிய ஈசுவரர் அவசியம் இருந்தே தீரவேண்டும். இதனாலேயும் அவர் நித்தியரென்று ஸ்திரப்படுத்தப்படுகின்றது. அவர் ஸர்வகாரணமூர்த்தியாதலால், அவரே ஸகல உத்பத்திக்கும் காரணம். அவரிடமே ஸகலமும் பிரதிஷ்டையை அடைந்து நின்றுவருகின்றது. அவரிடமே ஸகலமும் கல்பாந்தத்தில் லயத்தையும் அடைகின்றது. ஈசுவர-ஹிரண்யகர்ப்ப-விராட் ஸ்வரூபங்களுக்குள்ளாக ஸூக்ஷ்ம ஹிரண்யகர்ப்ப ஸ்வரூபம், ஸதூல விராட் ஸ்பரூபம் இவ்விரண்டும் கல்பத்திற்காக மாத்திரம் வியக்தப்படுகின்றன. காரண-ஈசுவர ஸ்வரூபமோவெனில் மேற்கண்டபடி கல்பங்களிலும் பிரளயங்களிலும் தொடர்ந்தே ஸர்வாந்தர்-ஸர்வ ஸாக்ஷிஸ்வரூபமாக இடைவிடாமலிருந்து வருகின்றது. ஈசுவரர் ஒருவர்தான் எப்போதும் விழிப்புடனிருப்பவர். ஸூக்ஷ்ம-ஸ்தூலாபிமானங்களுடன் கூடியிருக்கின்ற ஹிரண்யகர்ப்ப-விராட் ஸ்வரூபங்கள் இரண்டுக்கும் உத்பத்தியு

முண்டு, நாசமுமுண்டு. கல்பாரம்பத்திற்கு முன்னுல் ஹிரண்யகர்ப்பர் உண்டாவதை ருத்திரர் நேரில் பார்க்கிருரென்பதாக சுருதி வியக்தமாய்ச் சொல்லுகின்றது (ஹிரண்யகர்ப்பம் பஶ்யத ஜாயமானம்). முன் சொல்லியபடி ஹிரண்யகர்ப்பர். யோகநித்திரையிலிருந்ததையும் ஈசுவரர் ஸாக்ஷியாக இருந்து பார்த்துக்கொண்டிருந்திருக்கிருர். விராட்டின் உத்பத்தியோ ஸர்வப்பிரஸித்தமே. உத்பத்தியுள்ளவர்களுக்கு நாசமும் உண்டென்பது நிச்சயமே. அன்றியும், ஸ்தூலம் ஸூக்ஷ்மத்திலிருந்து உண்டாவதும், ஸூக்ஷ்மம் காரணத்திலிருந்து உண்டாவதும் எல்லோருக்கும் தெரிந்தவிஷயம். உண்மையில் ஸர்வகாரணமாயிருப்பதற்கு வேறு உத்பத்திகாரணமில்லையென்பதும், இருக்குமென்று சொல்லக்கூடுமாகுல் அனவஸ்தா தோஷம் வருமென்றும் வெகு பெயர்களுக்குத் தெரியவரும். ஆகையால், ஸர்வகாரணுத்மாவாகிய ஈசுவரருக்குத்தான் உத்பத்தி-நாசங்கள் கிடையாதென்பது ஸித்தம். இந்தப்படி பலவிதங்களில் ஈசுவராதி மூவர்களுக்குள்ளும் பரஸ்பர அவாந்தர வித்தியாஸங்களிருப்பதற்கு அனுகுணமாகவே அவர்களுடைய ஸ்வாம்சபூதர்களான ருத்திர-விஷ்ணு-பிரம்மா மூவர்களுக்குள்ளும் வித்தியாஸங்களுண்டென்பதும் நிச்சயமே.

14. இனி ருத்திரரின் ஸம்ஹார-கிருத்தியம் தமோகுணகாரியமாவென்பதை சற்று விசாரிப்போம். அநித்தியமாயிருக்கின்ற அனுத்மாவுக்குத்தான் நாசமுண்டு. ஆத்மாவுக்கு நாசங்கிடையாது. ஆகையால், ருத்திரருடைய ஸம்ஹாரகிருத்தியம் எப்போதும் அனுத்மஸம்பந்தமாகவே நடத்தப்படுகின்றது. அனுத்மஸம்பந்தத்திருல்தான் ஜீவனுக்கு ஜீவத்வமே ஏற்பட்டிருக்கின்றது. ஜீவனுக்கு ஸம்பந்தப்பட்டிருக்கின்ற அனுத்மாவின் தூவம்ஸம் அவசியமா

இல்லையா வென்று விசாரிக்கையில், அவசியமென்றே வெளியாகின்றது. இவ்வித துவம்ஸம் இருவகை, 1. **ஆத்யந்திக துவம்ஸம்**, 2. **தாத்காலிக துவம்ஸம்**. ஆத்யந்திக துவம்ஸத்தினால் ஜீவனுக்கு கைவல்யமோக்ஷமே ஸித்தித்துவிடுகின்றது. தாத்காலிக துவம்ஸத்தினால் ஒருவித சரீர-ரூப-அனாத்மஸம்பந்தம் விலகிப்போய் மற்றொருவித சரீர-ரூப-அனாத்மஸம்பந்தம், உண்டாகின்றது. ஆகையால், முக்தியின்பொருட்டு ஆத்யந்திகமான அனாத்மநாசம் அபேக்ஷிக்கப்படுகின்றது. அனாத்மபூதமான சரீரத்தின் கிரஹணம் பூர்வகர்மத்தின் பலன். கர்மங்கள் மூவகை, 1. **ஸஞ்சிதம்**, 2. **பிராரப்தம்**, 3. **ஆகாமி**. அனாதியான முன்மனித ஜன்மங்களில் செய்யப்பட்ட நாநாவித நற்செய்கை-துர்ச்செய்கைகளின் காரணத்தினால் பெரும் மூட்டையாகச் சேர்ந்து காலத்தில் பலன்களைக் கொடுப்பதற்காக விருத்தியாகிக்கொண்டே வந்திருக்கின்ற கர்மவினைகள் ஸஞ்சிதகர்மங்கள். ஒரு ஜன்மம் ஏற்படும்போது, அந்த ஜன்மத்தில் ஷைகர்மவினைகளுக்குள்ளாக எவைகளின் பலன்களாக ஸுக-துக்கங்கள் அனுபவிக்கப்படவேண்டுமென்று ஈசுவரஸங்கல்பமேற்பட்டிருக்கின்றதோ அவைகள் பிராரப்தகர்மங்கள். இவ்வித ஜன்மம் மனிதஜன்மமாயிருந்தால், இதிலும் புதிதாக ஜீவனால் செய்யப்படுகின்ற செய்கைகள் ஆகாமிகர்மங்கள். இந்த ஆகாமிகர்மங்கள்தான் ஸஞ்சிதமூட்டையைப் பெருக்கச்செய்கின்றன. எதுவரையில் ஜீவனுக்கு ஸஞ்சிதகர்மங்கள் பாக்கியிருந்துவருமோ அதுவரையில் மறுபடியும் அடிக்கடி அவனுக்கு ஜன்மங்கள் வந்துகொண்டிருக்கும். ஸகல ஸஞ்சித நாசமும் ஜன்மமில்லாமையும் ஏற்படவேண்டுமானால், இதற்கு ஒரு உபாயந்தான் உண்டு. அது அபரோக்ஷாத்மஜ்ஞானப்பிராப்தியே. அதாவது, கர்மபந்தங்களுக்குக்

கட்டுப்பட்டிருக்கின்ற ஜீவனுடைய விமோசனத்தின் பொருட்டு அவனுக்கு ஸம்பந்தப்பட்ட ஸகல அனாத்மச் சேர்க்கைகளுடையவும் ஆத்யந்திக த்வம்ஸம் ஸாத்தியப்பட வேண்டுமானால், ஜீவ ஞானத்தைத் தவிர ஸாதனாந்தரம் கிடையாது. ஜகத்தில் ஞானப்பியாஸிகளாயிருக்கின்ற எல்லா ஜீவர்களுக்கும் ருத்திரரூபியான ஈசவரர்தான் ஞானதாதா (ஞானத்தைக் கொடுப்பவர்). ஞானப்பியாஸத்தின் பரிபாக காலத்தில் ஜீவனுக்கு அவரே ஞானத்தைக் கொடுத்து நடப்பு ஜன்மத்தின் பிராரப்த முடிவுகாலத்தில் அந்த ஜீவனுடைய அனாத்மஸம்பந்தம் பூராவையும் ஆத்யந்திகமாக த்வம்ஸஞ்செய்து விடுகிறார். அஜ்ஞானி விஷயத்திலோவெனில் பிராரப்தமுடிவில் தாத்காலிகமான அனாத்ம-த்வம்ஸத்தைத்தான் செய்கிறார். இதின் காரணத்தையும் தெரிந்து கொள்ள வேண்டியதவசியம். ஆத்மஸ்தானந்தான் மோக்ஷஸ்தானம். எதுவரையில் ஒருவருக்கு தான் கர்த்தா, போக்தா என்ற பாவனைகளுடன் கொஞ்சமாகிலும் தன்னிடத்தில் அனாத்மபுத்தியிருந்துவருமோ, அது வரையில் மோக்ஷம் எட்டமாட்டாது. ஆத்மப்பிரம்மைகத்வஸாக்ஷாத்காரமானது தோஷங்களுடன் கூடிய அந்தக் கரணங்களையுடையவர்களுக்கும் ஆத்மவிசாரத்தைக் கிரமப்படி செய்யாதவர்களுக்கும் ஒருக்காலும் கிட்டாது. மலம், விக்ஷேபம், ஆவரணம் இம்மூன்று தோஷங்களும் அந்தக்கரணத்தில் இருக்குங்கால், தன்னிடத்தில் ஜீவத்வபுத்தியே ஸ்திரப்பட்டிருக்குமே யல்லாமல் ஆத்மத்வபுத்தியிருக்காது. எதுவரையில் அனாத்ம பூதங்களான ஸ்தூல-ஸூக்ஷ்மசரீரங்களில் "தான்" என்ற எண்ணமும், வெளியிலுள்ள விஷயங்களில் "தனது" என்ற எண்ணமும் ஜீவனிடத்தில் காணப்படுகின்றவோ அதுவரையில் அவன் அனாத்மஸ்தானங்களிலேயே யிருந்து

கொண்டு ஸம்ஸாரியாக ஸுக-துக்கங்களை அனுபவித்து வருவான். இப்படிப்பட்டவன் ஷை மூன்று தோஷங்களையும் நிவிருத்திக்கவேண்டுமென்று இச்சித்தால், ஸம்ஸாரியாகவும் கர்த்தா-போக்தாவாகவுமிருந்துகொண்டே திருப்பித்திருப்பி சாஸ்திரத்தில் குறிப்பிட்ட யத்தினங்களைச் செய்ய வேண்டியதாயிருக்கின்றது. இவ்வித யத்தினங்கள் பஹுப்பிரகாரங்களாயிருப்பதுந் தவிர, ஷை ஸுக-துக்க காரணங்களாகிய பூர்வகர்மங்களும் நாநாவாக இருந்து பல ஜன்மங்களைக் கொடுக்கக்கூடியதா யிருப்பதால், ஷை யத்தினங்களை அனேக ஜன்மங்களில் செய்து வரவேண்டியதாகவே யிருக்கிறது. கர்மங்களின் வைசித்திரியத்தினால் அவைகளின் பலபோகங்களின்பொருட்டு அடிக்கடி மத்தியில் மனித ஜன்மமில்லாமலே வேறு கீழ் திர்யக் முதலான ஜன்மங்களும் அல்லது தேவர் முதலான மேல் ஜன்மங்களும் ஏற்படக்கூடும். இவ்வித கீழ்-மேல்ஜன்மங்களில் கர்மபல-போகங்கள் மாத்திரமுண்டே யல்லாமல், புதிதாக கர்ம-ரூப-யத்தினங்களைச் செய்ய ஜீவனுக்கு அவகாசங்கிடையாது. சித்தத்தை சரியானபடி சிக்ஷித்துவரவேண்டிய யத்தினங்கள் அநேகமாய் மனிதஜன்மத்தில்தான் நடக்கக்கூடியவை. புவர் லோகம் முதலுள்ள மேல் உலகங்களிலும் உபாஸனஞ் செய்வதற்கு அவகாச முண்டென்பது உண்மையானாலும், அங்கு மலதோஷத்தைப் போக்கடிக்கக்கூடிய ஸத்கர்மானுஷ்டான-ரூப-யத்தினங்களுக்கு இடமேயில்லை. ஆகையால், மற்ற ஜன்மங்களுக்கு மத்தியில் இப்பூலோகத்தில் எப்போது மனித ஜன்மம் கிடைக்குமோ அப்போதுதான் சித்தசுத்தியின்பொருட்டும், அப்பால் ஞானத்தின்பொருட்டும் முயற்சிகளைச் செய்ய வேண்டியதாயிருக்கிறது. தவிரவும், ஸர்வஸாக்ஷியான ஈசுவரரே கர்மபலனைக் கொடுப்பவராகவுமிருக்

கிறார். ஆதலால், அஜ்ஞானி-ஜீவர்களுக்கு எப்படி சித்த சிக்ஷணம் மூலமாய் முடிவில் ஞானோத்பத்தி-ஸௌகரியம் ஸித்திக்கக்கூடுமோ, எப்படி அவர்களுடைய ஞானப்பிரதிபந்தகங்களாயிருக்கிற விசேஷ வைதிக-லௌகிக-காம்ய கர்மங்களுக்கு அவைகளின் பலானுபவம் மூலமாய் நாசம் ஏற்படக்கூடுமோ, அப்படியே ஜீவர்களுக்கு நாநாவித ஜன்மங்களை அடிக்கடி ஈசுவரர் கொடுக்கின்றார். இப்படி அவர்களுக்குத் தொடர்ந்து பல ஜன்மங்களை ஏற்படுத்த வேண்டுமானால், அடிக்கடி அவர்களுக்கு மரணத்தையும் ஏற்படுத்துவது அவசியமாயிருக்கின்றது. ஆகையால், அடுத்தடுத்து மரணத்தைச் செய்வித்தே ஞானோத்பத்தியின் ஸௌகரியத்தை உண்டாக்க வேண்டியதாயிருக்கின்றது; அதாவது, ஈசுவரருடைய ஸம்ஹாரகிருத்தியம் ஜீவர்களின் ஞானோத்பத்திக்காகவே ஏற்பட்டிருக்கிறதாகத்தான் சொல்வேண்டும். சரீர நாசங்களை அடிக்கடிசெய்து வைத்து ஸத்கர்மங்களுக்கும், உபாஸனங்களுக்கும், கர்மபலானுபவம் மூலமாய் ஞானபிரதிபந்தககர்மங்கள் நசிப்பதற்குமாக பல விதமாய் ஈசுவரரால் ஜீவர்களுக்கு அவகாசங்கள் கொடுபடுகின்றன. ஸத்கர்மங்களினால் சித்த சுத்தியையும், உபாஸனங்களினால் சித்தத்தின் ஐகாக்ரியத்தையும், ஸுக-துக்க போகங்களினால் ஞானப்பிரதிபந்தக-கர்மங்களின் நாசத்தையும் திருச்ய விஷயங்களில் வெறுப்பு அல்லது வைராக்கியத்தையும் அடைந்து, அதாவது, ஞானத்திற்குப் பூர்வாங்க ஸாதனங்களைப் பெற்று, தீவ்ரமான ஞானேச்சையின் பேரில் கிரமப்படி ஸத்குருநாதரை ஆசிரயித்து வேதாந்த தத்வ விஷயமான சிரவண-மனனங்களைச் செய்து, நிதித்தியாஸன ரூபமான யோகத்தில் எப்போதும் யார் இருந்து வருகிறரோ அந்த முமுக்ஷுவுக்கு ஈசுவரரே ஸர்

வோத்கிருஷ்டமும் அழியக் கூடாததுமான அபரோக்ஷாத்ம விஜ்ஞானத்தைக் கொடுக்கிறார். இந்தப்பிரகாரமாக, ஈசுவரருடைய ஸம்ஹாரகாரியம் அனர்த்தத்தின்பொருட்டில்லை யென்பதும், ஜீவர்களின் மோக்ஷஸாதன-ரூபமாகவே நடத்தப்பட்டு வருகிற தென்பதும், அதாவது, மரணத்தை ஏற்படுத்துவதின் உத்தேசமே சாசுவதமாய் ஜனன-மரணத்திலிருந்து விடுவிப்பதே யென்பதுமே ஸத்தியம். ஸ்வயம் ஞானமூர்த்தியாயிருப்பவரும், ஞான நேத்திரமாகிய மூன்றாவது நேத்திரத்துடன் கூடியவரும், சுருதி-ஸ்மிருதிப் பிரஸித்தமாய் ஞானப்பிரதாதாவாயிருப்பவரும், ஸாக்ஷாத் ஞானசக்திக்கே பதியாயிருப்பவருமான ருத்திர ரூபியாகிய ஈசுவரர் ஸகல ஜீவர்களையும் மோக்ஷ நிலைக்குத் தூக்கிவிடுவதற்காகவே மேற்கண்டபடி தன்னிடத்திலேயே ஸம்ஹார கிருத்தியத்தையும் சேர்த்துவைத்துக்கொண்டிருக்கிறார். ஸர்வப்பிரகாசகமாகிய ஞானம் ஸத்வகுணத்தையே குறிப்பிடுமாகையாலும், முன்னால் சொல்லப்பட்ட மற்ற காரணங்களாலும், ருத்திரர் பரம ஸாத்விகமூர்த்தியென்பதே நிச்சயம். இவ்வித ஞானேசுவரரிடம் அஜ்ஞான மௌட்டியாதி லக்ஷணங்களுடன் சேர்ந்திருப்பதாகச் சொல்லப்படுகின்ற கீழான தமோகுணத்தை ஆரோபிப்பது சாஸ்திரஜ்ஞர்களுக்கு யோக்கியமேயில்லை. உண்மையில் முன் காட்டியபடி தமோகுணப்பிரதானராயிருக்கின்ற பிரம்மாவிடமுள்ள தமோகுணம் அஷ்டி கீழான தமோகுணமல்ல வென்றும் தெரிந்துகொள்ளவேண்டும். வியஷ்டி ஸ்வரூபங்களில் ஸம்பந்தப்பட்டிருக்கின்ற குணங்களின் அவாந்தர தாரதம்யங்களும் உச்சத்வ-நீசத்வங்களும் ஒரே விதமாய் ஸமஷ்டி ஸ்வரூபங்களில் ஸம்பந்தப்பட்ட குணங்களிலும் இருக்குமென்று எண்ணுவது தப்பு. ஸமஷ்டியாத்மஸ்வரூபங்கள்

மூன்றிலுமுள்ள குணங்கள் ஒன்றுக்கொன்று பின்னப் பட்டிருந்த போதிலும், அவை யெல்லாம் மஹா உத் கிருஷ்ட, அப்பிராகிருத, கல்யாண, ஐச்வர குணங்களே யல்லாமல் கிழான, அல்ப, பிராகிருத, பந்தப்படுத்தக்கூடிய குணங்களல்ல.

15. முன் 13-வது பாராவில் காட்டப்பட்டபடி, பிரம் மா-விஷ்ணு-ருத்திரர் மூவர்களும் ஏகமான ஸாக்ஷாத் நிர்க் குணப்பிரம்மசைதன்யமே தவிர வேறல்ல. மாயாஸம்பந்தத் தினுல் மூவகையான குணபேதங்களும் மூர்த்தி பேதங்களும் பிரம்மத்தில் ஆரோபிக்கப்பட்டிருக்கின்றன. பிரகிருத விஷயத்திற்கு அவசியமான மட்டில் . தமோகுணத்தை மாத்திரம் உதாஹரணத்திற்கு எடுத்துக்கொண்டு ஷெ மும் மூர்த்தி ஸம்பந்தமாயுள்ள தமோகுணம் ஜீவர்களின் தமோ குணத்தைப்போலாகாதென்பது இங்கு கொஞ்சம் விவரிக் கப்படும். தமோகுணப்பிரதானமாகிய மாயை தாமஸீ என் றும் சொல்லப்படுகிறது. இதுவே அஹங்கார ரூபியாக பஞ்ச பூதங்களுக்கும் அவைகளின் காரியங்கள் யாவற்றுக் கும் மூலகாரணமாயிருந்து வருகிறது. இந்த விஷயம் பின் ஞல் வியக்தப்படுத்தப்படும். கேவலம் அஹங்கார வடிவ மாக மாத்திரமிருக்கிற தாமஸீயினுல் பிரம்மசைதன்யம் முழுவதும் மறைவடைந்துவிடமாட்டாது. பின் குறிப்பிடப் போகிறபடி அஹங்காரம் பூததன்மாத்திரைகளாகவும் பஞ்சீ கிருதபூதங்களாகவும் பரிணமப்பட்டுத் தடித்துப்போன பிறகுதான் அது பிரம்மசைதன்யத்தை மறைக்கக்கூடிய தென்று எண்ணப்படலாம். கண்ணுடியும் (Plain Glass) ஸாதாரண பானையும் இரண்டும் மண்ணுலேயே செய்யப்பட் டிருந்த போதிலும், கண்ணுடியின் உபாதான காரணமாகிய மண் சுத்தமாயும் ஸ்வச்சமாயும் (Clear and transparent)

இருந்தும், பானையின் உபாதான காரணமாகிய மண் விபரீத மாய் (Opaque) இருந்தும் வருவதால், கண்ணாடிக்குள் வைக்கப்பட்டிருக்கிற மின்சார தீபத்திற்கு வெளிப்பிரகாச மும், பானைக்குள் வைக்கப்பட்டிருக்கிற மின்சாரதீபத்திற்கு வெளிப்பிரகாசமில்லாமையும் காணப்படுவதுபோல், அஹங் காரதத்வத்தை மாத்திரம் உபாதியாகக்கொண்ட பிரம்மா வின் ஸ்வாத்மப் பிரகாசத்திற்கு கொஞ்சமேனும் குறை வுண்டாகாமலும், அஹங்கார காரியங்களான பாஞ்ச பௌதிக ஸூக்ஷ்ம-ஸ்தூல உபாதிகளுக்குக் கர்மகதியில் கட்டுப்பட்டிருக்கின்ற ஜீவர்களிடந்தான் பிரம்மசைதன்யத் தின் பிரகாசம் மறைவுபட்டிருப்பதாகவுமிருந்து வருகின் றது. ருத்திர-விஷ்ணு-பிரம்மாக்களின் மாயோபாதிகளு டைய தாரதம்யப்படி, வெண்மை-சிவப்பு-நீலவர்ணக் கண் ணாடிகளைப்போல், அவாந்தர பேதங்களிருப்பது ஸத்திய மானாலும், அவ்வித மாயாபேதங்கள் ஷை மும்மூர்த்திகளின் ஸ்வயம் பிரகாசத்தன்மைக்கு விரோதமில்லாமலே யிருக்கின் றன. பின் சொல்லப்போகிற பிரகாரம் மும்மூர்த்திகளின் ஸ்தானங்கள் மற்ற ஸ்தானங்களை அபேக்ஷித்து காரண-ஈசு வர ஸ்தானங்களாயிருப்பதினாலும், காரண ஸ்தானத்திற்கு ஸத்வகுணமே பிரதானமானதினாலும், மும்மூர்த்திகளின் உபாதிபூதமாயைகளும் அவாந்தர குணபேதங்களுடன்கூட ஸத்வகுணத்திற்கு லக்ஷணமான ஸ்வச்சத்தன்மையுடனும் சேர்ந்தே யிருக்கின்றன. எப்படி ஸூர்ய பிம்பத்தை உற் றுப்பார்த்துக்கொண்டிருக்கக்கூடியவரின் திருஷ்டியில் அது கொஞ்சம் நீலவர்ணத்துடன் கூடிய பிம்பமாகவே காணப் பட்டாலும், அந்த நீல வர்ணம் ஸூர்யதேஜஸ்ஸை கொஞ் சங்கூட குறைத்துவிடாமலிருக்கின்றதோ, அப்படியே பிரம்மாவிடமுள்ள தமோகுணமும் அவருடைய ஸ்வயம்

பிரகாசரூபித்தன்மைக்குக் குறைவை யுண்டாக்கி விடமாட்டாது. ஜீவர்களுடைய தமோகுணத்தை இருளுக்கு ஒப்பிட்டிருப்பதுபோல், பிரம்மாவின் தமோகுணத்தை இருளைப்போல் எண்ணிவிடக்கூடாது. அஜ்ஞான இருளாகிய தமோகுணம் ஸர்வஜ்ஞ மூர்த்தியான பிரம்மாவிடம் எவ்வகையிலும் ஸம்மந்தப்படக்கூடியதேயில்லை. கீழான தமோகுண இருளை ஸர்வஜ்ஞரிடம் ஆரோபிப்பது ஸூர்யக்கிரஹண காலத்தில் ஸூர்யனிடம் இருளை ஆரோபிப்பது போலவே யாகும். எவ்விதம் ஒரு எலுமிச்சம்பழத்தை கண்ணுக்கு எதிரில் கையில் வைத்துக்கொண்டு ஸூர்ய பிம்பத்தையே கண்ணில் படாமல் மறைத்து விடக்கூடுமோ, அவ்விதமாகவே எதிரில் ஸமீபத்திலிருக்கிற சிறு சந்திர கோளத்தினால் வெகுதூரத்திலிருக்கிற பெரும் ஸூர்ய மண்டலமே கிரஹண காலத்தில் மறைக்கப்பட்டுவிடுகின்றது. எலுமிச்சம்பழத்தினால் எப்படியோ, அப்படியே சந்திரன் குறுக்கிடுவதினால் ஸூர்யனுடைய ஸ்வப்பிரகாசத்திற்குக் குறைவுண்டாகமாட்டாது. சந்திரக்கிரஹணத்திலோவெனில் சந்திரனுக்குள்ள பிரதிபலனரூபப்பிரகாசம் நஷ்டமாகிவிடும்படியாக பூமியின் சாயை-ரூபமான இருள் சந்திரனை உண்மையில் வியாபித்து விடுகின்றது. இதுபோலவே, அவித்யா வசங்கதனாகிய ஜீவ-சிதாபாஸனுக்குத்தான் உண்மையான தமோகுண ஸம்பந்த மிருக்கக்கூடுமேயல்லாது, மாயாபதியான ஸர்வஜ்ஞருடைய ஸ்தானத்தில் அது ஒட்டக்கூடியதல்ல. வாஸ்தவத்தில் ஜீவனிடத்திலும் அந்தராத்மாவாயிருப்பவர் பரமாத்மாவேயானாலும், அவர் ஜீவ-அவித்யாகாரியங்களாகிய கோசங்களினால் மூடப்பட்டவர்போல் காணப்படுகிறார். எந்த ஜ்யோதிஸ் ஸூர்யனிடத்தில் விளங்குகின்றதோ அதுவே இவ்வுலகமத்தியிலும் (Centre)

சந்திர மத்தியிலும் இருந்து வருவது வாஸ்தவமானாலும், அது தடித்த இருளடைந்த கோசங்களினால் (Opaque Covering layers) மறைபட்டுப்போய், இவ்வுலகமும் சந்திரனும் மேல் பார்வையில் ஸ்வயம்பிரகாசங்களா யில்லாமலிருக்கின்றன. இவ்விதமாகவே, ஜீவனிடத்திலுள்ள அந்தராத்மாவும் அவித்யா-கார்ய-கோசங்களினால் மறைவு பட்டுப்போய், ஜீவன் தமோகுண இருளால் பாதிக்கப்படக்கூடிய ஸ்திதியிலிருந்து வருகின்றான். முன் சொல்லியபடி, ஜீவனிடமிருக்கின்ற ஆத்மா மண்பானைக்குள்ளிருக்கிற மின்சார தீபத்தைப் போலிருக்கிறபடியால், மண்பானையின் வெளிப்புறம் ஸ்வயம் பிரகாசமாயில்லாமல் அது இருளினால் பாதிக்கப்படக்கூடியதாயிருப்பதுபோல், வியஷ்டி மனோ-ரூப-ஜீவகோசமும் தமோகுணத்தினால் பாதிக்கப்படக்கூடியதாயிருக்கின்றது. தன்னிடத்தில் இருள் அடர்ந்திருக்கையில், தான் தமோ குணத்திற்குள்ளடங்கி யிருப்பதாகத் தெரிந்து கொண்டிருக்கிற ஜீவன், பரமாத்மாவிடத்தில் தமோகுணம் ஸம்பந்தப் பட்டிருப்பதாகச் சொல்லப்பட்ட சாஸ்திர வாக்கியங்களை முன்னிட்டு, பரமாத்மாவும் தன்னைப்போலவே தமோகுணத்தினால் பாதிக்கப்படக்கூடியவரென்றே தூரபிப்பிராயத்தைக் கொண்டிருக்கின்றான். ஸூர்யப்பிரகாசத்திற்கு முன்பாக இருள் நிற்கமாட்டாதென்பதும், ஸூர்யனிடம் கிரஹண காலத்தில் காணப்படுகின்ற இருள் பார்க்கிறவனுடைய ஸ்தானத்தில் ஸம்பந்தப்பட்டிருக்கிற சந்திரச்சாயை-ரூபமான இருளே யல்லாமல் ஸூர்யனிடம் யாதொரு இருளுமில்லை யென்பதுமே எப்படி ஸத்தியமோ, அப்படியே பரமாத்மாவிடம் ஆரோபிக்கப்படுகின்ற கீழான தமோ குணமும் ஆரோபிக்கின்ற ஜீவனைச் சேர்ந்ததேயல்லாமல் பரமாத்மாவைச் சேர்ந்ததில்லையென்று உறுதியாய்த் தெரிந்து கொள்ள வேண்டும்.

16 ஜகத்துப்பூராவும் மேற்கூறிய மும்மூர்த்திகளால் ஸமஷ்டியாத்ம ஸ்வரூப நிலைமைகளில் வியாபிக்கப்பட்டும் உஜ்ஜீவிக்கபபட்டுமிருக்கின்றது. ஏற்கனவே முன் சொல்லியபடி, ஜீவர்கள் ஸம்பந்தப்பட்ட மட்டில், ஈசுவராதி மூவர்களுக்கும் ருத்திராதி மூவர்களுக்கும் அபேதத்தையே பாராட்டி, ருத்திரரைத் தவிர தனியாக ஈசுவரர் வேறுகிடையாதென்றும், விஷ்ணுவைத் தவிர ஹிரண்யகர்ப்பர் வேறு கிடையாதென்றும், பிரம்மாவைத் தவிர விராட் வேறு கிடையாதென்றும், உறுதியான எண்ணம் ஒவ்வொரு உபாஸகருடைய மனதிலுமிருக்கவேண்டியதவசியம். முக்கியமாய் உபாஸகர்களை அனுக்கிரஹிக்கும்பொருட்டே ஈசுவராதி மும்மூர்த்திகளும் ருத்திராதி மூன்று ரூபங்களில் பிரகாசிக்கின்றார்கள். அதாவது, உபாஸகர்கள் பார்க்கக் கூடியதான ரூபங்களை ஈசுவராதிகளே தரித்துக்கொண்டு ருத்திராதி திரிமூர்த்திகளாக சோபிக்கிறார்களென்பதே உண்மை. முன் அம்சாம்சிபாவம் சொல்லப்பட்டிருப்பதில், அம்சியினால் தன்னிடத்தில் செய்து கொள்ளப்பட்ட நிருச்யமான ஏகதேசரூபத்தின் ஆரோபணமே அம்சத்வக் கிரஹணமென்று அறிந்துகொள்ளவேண்டும். ஆகையால், இரண்டு ஜதை மும்மூர்த்திகளிருப்பதாக எண்ணிவிடாமல், பிரம்மா-விஷ்ணு-ருத்திரர்களே ஸர்வோத்க்ருஷ்ட மும்மூர்த்திகளென்றும், இவர்களே ஸமஷ்டி ரூபவான்களாகவும் வியஷ்டி ரூபவான்களாகவும் இருவிதமாகவுமிருக்கின்றார்களென்றும், இவர்களுக்கு மேலாகவாவது அன்யர்களாகவாவது வேறு மும்மூர்த்திகள் கிடையாதென்றும் நிச்சயப்படுத்திக்கொள்ள வேண்டும். இந்த விதமாகவே, கௌரீ என்ற பார்வதியையே ஸாத்விக அவ்யக்தமாயை யென்றும், லக்ஷ்மியையே ராஜஸ மஹத்ரூபிணியான மாயையென்றும்,

ஸரஸ்வதீயையே தாமஸாஹங்கார ரூபிணியான மாயை யென்றும் மனதில் உறுதிப்படுத்திக்கொள்ளவேண்டும். எப்படி மேற்கண்டபடி ருத்திரர் ஸர்வகாரணாத்மாவோ அப்படியே கௌரீ ஸர்வகாரண மாயாத்மிகையான ஆவரண சக்தி. விஷ்ணு ஸர்வ ஸூக்ஷ்மாத்மாவாயிருப்பதுபோல், லக்ஷ்மீ ஸர்வ ஸூக்ஷ்மமாயாத்மிகையான விக்ஷேபசக்தி. எவ்விதம் பிரம்மா ஸர்வஸ்தூலாத்மாவோ, அவ்விதம் ஸரஸ்வதீ ஸர்வ ஸ்தூலமாயாத்மிகையான ஸ்தூலசக்தி. ஜகத்தின் ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹார காரியங்கள் பூராவும் இம்மூன்று சக்திகளின் அனுஸரணையின்பேரில் மேற்கண்ட மும்மூர்த்திகளால் நடத்தப்படுகின்றன. இது மாத்திரமல்ல. ஜகத்து முழுவதும், அதில் ஒவ்வொரு அணுவும், அந்தந்த மாயா சக்திகளுடன் கூடிய மும்மூர்த்திகளால் அதிஷ்டிக்கப்பட்டிருக்கிறது (Is ensouled). காரணத்தை விட்டு ஸூக்ஷ்மமாவது, ஸூக்ஷ்மத்தை விட்டு ஸ்தூலமாவது தனியாயிருக்கக்கூடாததால், திருச்யப்பிரபஞ்சத்தில் எங்கும் மும்மூர்த்திகளும் மூன்று சக்தி தேவிகளும் சேர்ந்தே யிருக்கிறார்களென்றே சொல்லவேண்டும். ஆனால், பிராதான்ய தாரதம்மியத்தினால் ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரண வஸ்துக்களென்றும் ஸ்தானங்களென்றும் தனித்தனியாக வஸ்து-ஸ்தானபேதங்கள் வியவஹரிக்கப்படுகின்றன. முதலில் மாயாகார்ய பேதங்களை கவனிப்போம். மாயாகார்யமும் திருச்யமுமான (காணப்பட்ட, அனுபவிக்கப்பட்ட) ஜகத்து முழுவதும் பாஞ்ச பௌதிகம், அதாவது, ஐந்து பூதங்களினால் (Elements) அமைக்கப்பட்டுள்ளது. ஐந்து பூதங்களாவன, பிருதிவீ, அப், தேஜஸ், வாயு, ஆகாசம். இந்த ஐந்தும் ஒன்றோடொன்று சேர்க்கப்படாமலிருந்தால் (not conpounded) அவை பூததன்மாத்திரைகளென்று சொல்லப்படுகின்

றன. ஜகத்திலுள்ள ஸூக்ஷ்ம வஸ்துக்கள் யாவும் இந்த தன் மாத்திரைகளாலேயே அமைக்கப்பட்டிருக்கின்றன. ஐந்து பூதங்களும் ஒன்றோடொன்று குறிப்பிட்ட விதத்தில் சேர்க்கப்பட்டுவிட்டால் (compounded) அவை பஞ்சீகிருதபூதங்களென்று சொல்லப்படுகின்றன. அடியிற்கண்ட பஞ்சீகரணத்தினல் சேர்க்கப்பட்டது பஞ்சீகிருதம். ஐந்து தன் மாத்திரைகளிலும் ஐந்து அணுக்களை எடுத்துக்கொண்டு, ஒவ்வொரு அணுவையும் இரண்டாகப்பிரித்து, ஒவ்வொரு தன்மாத்திரை அணுவின் ஒவ்வொரு பாதியைத் தனியாக வைத்துவிட்டு, மற்றொரு பாதியை நான்கு அரைக்கால் பாகங்களாகப் பிரித்து வைத்துக்கொண்டு, முன் தனியாக வைக்கப்பட்ட ஒவ்வொரு பாதி பாகத்துடனும் மற்ற நான்குபூதங்களின் நான்குஅரைக்கால் பாகங்களைச்சேர்த்துவிட்டால், ஐந்து பஞ்சீகிருத பூதங்கள் ஏற்பட்டு விடுகின்றன. ஜகத்திலுள்ள ஸ்தூல வஸ்துக்கள் யாவும் இந்த பஞ்சீகிருத பூதங்களாலேயே அமைக்கப்பட்டிருக்கின்றன. இவ்விதமாக ஸ்தூல பூதங்கள் ஸூக்ஷ்ம பூததன்மாத்திரைகளிலிருந்துண்டாயிருக்கின்றன. பூததன்மாத்திரைகளுக்குள்ளும் காரண-கார்ய பாவங்கள் சுருதியில் சொல்லப்பட்டிருக்கின்றன. அதாவது, ஆகாசத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து தேஜஸ், தேஜஸ்ஸிலிருந்து அப், அப்பிலிருந்து பிருதிவீ என்பதாக உத்பத்திக்கிரமம் வெளியிடப்பட்டிருக்கிறது. ஆகாசத்திற்கே பரம்பராகாரணங்கள் எவையென்று விசாரிக்குங்கால், அது அஹங்காரத்திலிருந்தும், அஹங்காரம் மஹத்திலிருந்தும், மஹத் அவ்யக்தத்திலிருந்தும், உண்டானதாக விவரிக்கப்பட்டிருக்கிறது. அவ்யக்தாதி மூன்றும் சுத்தமாயை யென்ற மூலப்பிரகிருதியிலிருந்துண்டாயிருப்பதாக முன்னமே சொல்லப்பட்டுமிருக்கிறது.

இங்கு ஓர் ஸந்தேஹம் ஏற்படக்கூடும். தைத்திரீய சுருதியில் ஆத்மாவிலிருந்தே ஆகாசம் உண்டாயிருப்பதாகக் காணப்படுகிறதே யென்று கேட்கலாம். அங்கு "ஆத்மாவிலிருந்து" என்று சொன்னதற்கு "ஆத்மாவின் சக்தியிலிருந்து" என்றுதான் தாத்பர்யம். இரண்டற்றதான ஆத்மாவிலிருந்து வேறொன்றும் உண்டாவதற்கில்லை. உண்டாவது என்ற வியவஹாரமே மாயிக ஜகத்வியவஹாரந்தான். ஸர்வப்பிரபஞ்சத்திற்கும் மூலகாரணமான ஆத்மமாயையிலிருந்து பரம்பரையாய் ஆகாசம் உண்டாயிற்று என்பதுதான் கருத்து. இவ்விதமாக மூலப்பிரகிருதியென்ற மாயையிலிருந்துண்டான ஸகல வஸ்துக்களையும் அடியிற் கண்ட மூன்று பெரும் வகுப்புகளில் அடக்கலாம்:—

(1) காரண ரூபங்களான—1. அவ்யக்தம்
2. மஹத்
3. அஹங்காரம்,

(2) ஸூக்ஷ்ம ரூபங்களான-ஐந்து பூததன்மாத்திரைகளால் அமைக்கப்பட்டவை.

(3) ஸ்தூல ரூபங்களான- ஐந்து பஞ்சீகிருத பூதங்களால் அமைக்கப்பட்டவை.

17. காணப்படுகின்ற ஜகத்துப் பூராவிலும் எங்கும் ஒவ்வொரு வஸ்துவிலும் மேற்குறிப்பிட்ட காரண-ஸூக்ஷ்ம-ஸ்தூல ரூபங்கள் மூன்றும் சேர்ந்திருக்கின்றன. ஆகிலும், முன் சொல்லியபடி பிராதான்யம்-அப்பிராதான்யம் என்பதை முன்னிட்டு இப்பூலோகம் முதல் மேலான ஸத்தியலோகமென்ற ஏழாவது லோகம் வரையுள்ள லோகங்களுக்குள்ளாக இந்த பூலோகம் ஸ்தூலலோகமென்றும், புவர்லோகம் முதல் தபோலோகம் வரையுள்ள (ஓ³வஃ, ஸு³வஃ,

8ஹம், ஜநம், தவம்) ஐந்து லோகங்களும் ஸூக்ஷ்மலோகங்களென்றும், ஸத்தியலோகம் காரணலோகமென்றும் அறிந்துகொள்ளவேண்டும். அதாவது, பூலோகத்தில் பஞ்சீகிருத பூதங்களின் பிராதான்யமும், புவராதி ஐந்து லோகங்களில் பஞ்சதன்மாத்திரைகளின் பிராதான்யமும், ஸத்தியலோகத்தில் தன்மாத்திரைகளுக்கும் காரணமாகிய ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரண மாயைகளுக்கே பிராதான்யமும் இருந்து வருகின்றன. புவராதி ஐந்து லோகங்களுக்குள்ளும், புவர் லோகத்தில் பிருதிவீ தன்மாத்திரைக்கும், ஸுவர் லோகத்தில் அப்தன்மாத்திரைக்கும், மஹர் லோகத்தில் தேஜஸ்தன்மாத்திரைக்கும், ஜன லோகத்தில் வாயு தன்மாத்திரைக்கும் தபோலோகத்தில் ஆகாச தன்மாத்திரைக்கும் பிராதான்யமுண்டென்றும் அவாந்தர பேதங்கள் வெளியாகின்றன. இந்தப்படியே, ஏழாவதான ஸத்தியலோகத்திலும் மாயாப் பிராதான்ய விஷயமாய் அவாந்தர பேதங்களுண்டு. காரணலோகமென்ற இந்த ஸத்தியலோகமே **ஸகுணப்பிரம்மலோக**மென்றும் சொல்லப்படுகின்றது. மேற் சொல்லிய ஸகுணப் பிரம்மங்களான மும்மூர்த்திகளும் இதில் தெளிவாய் பிரகாசிக்கின்றார்கள். இதுவே சதுர்முகப்பிரம்மாவின் **ஸத்திய லோக** மென்றும், விஷ்ணுவின் **வைகுண்ட** மென்றும், ருத்திரரின் **கைலாஸ** மென்றும் மூன்று விதமாகவும் விளங்குகின்றது. இம்மூன்றுக்குள்ளாக, **ஸத்தியலோகத்தில்** ஸ்தூல மாயாசக்தியாகிய **அஹங்காரத்தி**னுடையவும், **வைகுண்டத்தில்** ஸூக்ஷ்மமாயாசக்தியாகிய மஹத்தத்வத்தினுடையவும், **கைலாஸத்தில்** காரணமாயாசக்தியாகிய **அவ்யக்தத்தி**னுடையவும் **பிராதான்யம்** விசேஷமாய்க் காணப்படுகின்றது. பூராதி ஏழு லோகங்களுக்குள்ளாக ஸத்திய லோகமென்ற ஸகுணப் பிரம்ம லோகம் காரணலோகமென்று சொல்லப்

பட்டது வாஸ்தவமானாலும், அந்த லோகத்திலும் மேற் சொல்லிய முகாந்திரத்தினால், அதாவது தனித்தனியான மாயாசக்திப்பிராதான்யமிருப்பதினால் **ஸத்திய லோகம் ஸ்தூல ஸகுணப்பிரம்மலோக** மென்றும், **வைகுண்டம் ஸூக்ஷ்ம ஸகுணப்பிரம்மலோக** மென்றும், **கைலாஸம் காரண ஸகுணப்பிரம்மலோக** மென்றும் பிரத்தியேகமாய் விவரிக்கப்பட்டிருக்கின்றன. அன்றியும், எப்படி மாயை யின் முக்குணங்களும் மாயாகாரியங்களில் சேர்ந்திருக்கு மானாலும், பிரதானத்தன்மையை உத்தேசித்து **ஸ்தூலத்தில் தமோகுண**மும், **ஸூக்ஷ்மத்தில் ரஜோகுண**மும், **காரணத் தில் ஸத்வகுண**மும் விசேஷமாய் காணப்படுகின்றனவோ, அப்படியே பரமாத்மஸ்வரூப லக்ஷணங்களாகிய ஸத், சித், ஆனந்தம் இம்மூன்றும் எப்போதும் சேர்ந்தேயிருக்குமென் பது உண்மையானாலும், இவை பின்னப்பட்டதாயுள்ள மாயாகாரியங்களின் மூலமாய் கவனிக்கப்படும்போது, **ஸ்தூ லத்தில் ஸத்தும், ஸூக்ஷ்மத்தில் சித்தும், காரணத்தில் ஆனந்தமும்** பிரதானப்பட்டிருப்பதாகவே தனித்தனியே பிரகாசிக்கின்றது. **இதினால்தான், பூலோகத்தில் ஸத்துடைய வும், புவராதி ஐந்து லோகங்களில் சித்துடையவும், ஸகுணப் பிரம்மலோகங்களில் ஆனந்தத்துடையவம் பிராதான்யம்** அனுபவிக்கப்படுகின்றது. கீழ் ஆறு லோகங்களை அபே க்ஷித்து ஏழாவதான ஸகுணப்பிரம்ம லோகங்கள் ஆனந்தப் பிரதனமான லோகங்களானாலும், அவைகளுக்குள்ளாகவே ஒன்றுக்கும் மற்றொன்றுக்குமுள்ள அவாந்தர பேதங்களை முன்னிட்டு, அவைகளுக்குள்ளாக ஸ்தூலலோகமாகிய **ஸத் திய லோகத்திலும் பிரம்மா-ஸரஸ்வதீயிடத்திலும் ஸத்தன் மையின் பிராதான்யமும்**, பொதுவாக **அந்த லோக வாஸி களிடம் ஸ்தூலக்கிரியா** ஸம்பந்தமான விசேஷ **உத்ஸாஹ**

மும், ஸூக்ஷ்மலோகமாகிய வைகுண்டத்திலும் விஷ்ணு-லக்ஷ்மீயிடத்திலும் சித்தன்மையின் பிராதான்யமும், பொதுவாக வைகுண்டவாஸிகளிடம் ஸூக்ஷ்ம புத்தி விருத்தி ரூப ஸுக விசேஷங்களும், காரண லோகமாகிய கைலாஸத்தி லும் ருத்திர-கௌரீயிடத்திலும் ஆனந்தப்பிராதான்யமும், பொதுவாக கைலாஸவாஸிகளிடம் காரணாத்மநிஷ்டமான நிஜானந்தமும் முக்கியமாய் சோபிக்கின்றன. இவ்விதமாக திரிமூர்த்திகளுக்குள்ளாக ருத்திரரூபியான ஈசுவரர் ஆனந்த ஸ்வரூபியாயிருப்பதினால்தான், அவர் ஆனந்த தாண்டவத்தைச் செய்து வருகின்றார். சில காலங்களில் ஈசுவரருடன் கூடவே ஆனந்த ஸ்வரூபிணீயான கௌரீயும் அவ்வித தாண்டவத்தைச் செய்து வந்திருப்பதும் அனேகர்களுக்குத் தெரிந்த விஷயம். மேலும், ஸ்தூல சரீர காரியமாகிய கர்மத்தில் ஸத்தன்மையும், ஸூக்ஷ்மமானஸகாரியமாகிய உபாஸனத்தில் சித்தன்மையும் காரண ஆத்மானுபூதி ரூபமாகிய ஞானத்தில் ஆனந்தமும் முக்கியமாயிருப்பதையும் அறிந்து கொள்ளவேண்டும். இக்காரணத்தினால்தான், கிரியாப்பிராதான்யம் ஸத்தியலோகத்திலும், பக்திப்பிராதான்யம் வைகுண்டத்திலும், ஞானப்பிராதான்யம் கைலாஸத்திலும் விசேஷமாய் விளங்குவதாகத் தெரியவருகின்றது. இப் பூலோகத்தில் நடத்தப்படுகின்ற தேவ-பிதுருகாரியங்களான கர்மாக்களில் கர்மங்கள் சரியாய் நடந்து வருவதை பிரம்மாவே மேற்பார்த்து வருவதான பாவனையுடன் பிரம்ம வரணம் செய்யப்பட்டு வருவது தார்மிகர்களுக்குத் தெரியவரும். தார்மிகர்களின் நற்கதியின்பொருட்டு ஈசுவரரால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்ற பிரவிருத்தி-நிவிருத்தி தர்மங்களுக்குள்ளாக, கர்மரூப-பிரவிருத்திதர்மத்திற்கு பிரம்மாவின் ஆதரவும், உபாஸனரூப-பிரவிருத்திதர்மத்திற்கு விஷ

ணுவின் ஆதரவும், ஞானப்பியாஸரூப-நிவிருத்திதர்மத்திற்கு ருத்திரரின் ஆதரவும் அதிகமாய் அபேக்ஷிக்கப்படுகின்றன. பிரம்மாவினால் ஸ்ரீமண்டனமிச்ர ரூபமாகச் செய்யப்பட்ட அவதாரத்தில் கர்மங்களின் முக்கியத்தன்மையும், விஷ்ணுவால் ஸ்ரீராம ரூபமாகவும் ஸ்ரீ கிருஷ்ண ரூபமாகவும் செய்யப்பட்ட முக்கியாவதாரங்களில் பக்தியின் பிரதானத்தன்மையும், ருத்திரரால் ஸ்ரீ சங்கரபகவத்பாத சுரூபமாகச்செய்யப்பட்ட அவதாரத்தில் ஞானத்தின் முக்கியத்தன்மையும் விசேஷமாய் வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன. இப்படிச் சொல்வதினால், பிரம்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் ஞானத்திலாவது, ருத்திரருக்கும் பிரம்மாவுக்கும் பக்தியிலாவது, விஷ்ணுவுக்கும் ருத்திரருக்கும் கர்மத்திலாவது ஆதரவில்லையென்று அர்த்தமில்லை. ருத்திரர் எப்படி எல்லோருக்கும் தக்ஷிணாமூர்த்தி அவஸரத்திலும் மற்ற விதங்களிலும் ஆதிஜ்ஞான குருவோ, அப்படியே விஷ்ணுவும் பிரம்மாவும் ஸகலர்களுடையவும் ஞானகுருமஹாபரம்பரையில் முதலில் இருக்கின்றார்கள். இப்படியே, தேவ-பிதுருகர்மாக்களில் ருத்திர-விஷ்ணுக்களுக்கு ஏராளமான ஸம்பந்தமிருப்பது வெகு பெயர்களுக்குத் தெரிந்த விஷயமே. பக்தி விஷயத்திலும் மும்மூர்த்திகளும் ஈடுபட்டவர்கள்தான் என்பதிலும் ஸந்தேஹமில்லை. ஆகையால், முன் சொல்லிய பேதங்கள் பிராதான்ய விஷயங்களென்று மாத்திரம் தீர்மானித்துக்கொள்ள வேண்டும்.

18. மோக்ஷப்பிரதிபந்தகமாக மலம், விக்ஷேபம், ஆவரணம் என்ற மூன்று தோஷங்கள் ஜீவர்களிடமிருப்பதாக முன் பலதடவை சொல்லப்பட்டது. இதன் இரண்டாவது பாகத்தில் குறிப்பிட்ட பிரகாரம், மலதோஷம் வெகுதூரம் நிவிருத்தியானால்தான் விக்ஷேபத்தைப்போக்கடிப்பது ஸாத்

தியப்படக்கூடியதாகும். ஷெ இரண்டு தோஷங்களும் பெரும்பாலும் நீக்கப்பட்டால்தான் ஆவரண தோஷத்தை விலக்குவதற்குள்ள யத்தினம் பலிக்கக்கூடியதாகும். ஆகையால், (1) மலதோஷத்தை மாத்திரம் நீக்கவேண்டுமானல் ஸத்கர்மானுஷ்டானம் மாத்திரம்போதுமானது; (2) விக்ஷேப தோஷத்தை நீக்கவேண்டுமானல் ஸத்கர்மானுஷ்டானம் ஸகுணோபாஸனம் இரண்டும் அவசியங்களாகும்; (3) ஆவரண தோஷத்தைநீக்கவேண்டுமானல் ஸத்கர்மானுஷ்டானம், ஸகுணோபாஸனம், சிரவண-மனன-நிதித்தியாஸன ரூப ஜ்ஞானப்பியாஸங்களாகிய நிவிருத்தி தர்மங்களைக் கைக்கொள்ளுதல் இம்மூன்றும் அவசியங்களாகும். மோக்ஷத்தில் இச்சையுள்ள முமுக்ஷுக்களான தார்மிகர்கள் பலவிதமாய் காணப்படுகின்றார்கள் (1)—சிலர்கள் வேதவிஹிதமான கர்மானுஷ்டானத்தினுலேயே மோக்ஷம் லபித்திதுவிடுமென்று எண்ணிக்கொண்டு தீவ்ரகர்மானுஷ்டானபரர்களாக மாத்திரமிருந்து வருகின்றார்கள். இவர்களுடைய பார்வையில் ஸ்தூலக்கிரியாசக்தியே ஸர்வோத்தம பரசக்தியாக விளங்குகிறாள். ஸர்வகர்மங்களுக்கும் ஸாக்ஷிபூதராயிருந்து மேல் பார்த்து வருகின்ற பிரம்மாவே முக்கியமாய் ஸர்வஸாக்ஷியான பரமாத்மாவாக இவர்களால் பாவிக்கப்படுகிறார். ஸத்கர்மத்திலும் உபாஸனம் கலந்தேயிருக்கின்றது; ஆனல், அதின் உபாஸனம்சத்திற்கு அப்பிராதான்யமும் ஸ்தூலக்கிரியாம்சத்திற்குப் பிராதான்யமுமிருந்து வருவதினல், அது "ஸத்கர்மம்" என்ற பெயரால் மாத்திரம் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. இந்தப்படி கர்மத்தில் அடங்கியிருக்கின்ற உபாஸனஸம்பந்தத்தில் பரமாத்மா கர்மஸாக்ஷியாகவே ஷெ தார்மிகர்களால் உபாஸிக்கப்படுகிறார். இவ்வித உபாஸனத்திலும் தங்களுக்கு அபேதமாகவே உபாஸ்யத்தை

பாவித்து உபாஸித்து வருகின்றார்கள். பின்னால் எட்டாவது பாகத்தில் சொல்லப்போகிற பிரகாரம் இவ்வுபாஸனம் பரபக்தியையே குறிப்பிடுமாகையால், இவர்கள் கிரமமுக்தியைப் பெறத் தகுந்தவர்களாகவும் காணப்படுகின்றார்கள். இவ்வித உபாஸனத்துடன் கலந்த ஸத்கர்மானுஷ்டானம் ஸ்திரப்பட்டும், மேற்கண்டபடி கிரியாசக்தியிடத்திலேயே பரசக்திபாவனை பலப்பட்டும் வந்திருக்கின்ற இப்படிப்பட்ட தார்மிகர்களுக்கு பிரம்மாவின் ஸத்தியலோகத்துடைய பிராப்தி ஸித்தித்துவிடுகின்றது. ஆகிலும், ஷை பரபக்தி கர்மத்திற்குள்ளடங்கியதாக அப்பிரதானத்தன்மையுடனிருப்பதால், இவ்வித தார்மிகர்கள் தங்களை கர்த்தாக்களாக பாவித்து வந்திருப்பது நின்று போகாமலும், இவர்களுக்கு இந்தப்படி தங்களிடத்திலுள்ள கர்த்ருத்வ பாவனையின் காரணத்தினால் அஹங்காரதாரணம் ஏற்படாமலும் இருந்து வருவதால், அஹங்காரமாயை பிரதானமாயிருக்கிற ஸத்திய லோகத்தைக் கடந்து மேற்செல்லக்கூடாதவர்களாயுமிருக்கின்றார்கள். சுருதியில் கர்மத்தினால் பித்ருலோகமும், வித்தையினால் (உபாஸனத்தினால்) தேவலோகமும் பிராப்தமாகுமென்று கண்டிருக்கையில், கர்மானுஷ்டாதாவுக்கு பிரம்மாவின் ஸத்தியலோகமே பிராப்தமாகிவிடுகிறதென்று சொல்லுவது சரியாகுமாவென்று கேட்கலாம். பிராகிருத தார்மிகர்கள் முமுக்ஷுக்களென்று முன்னமேயே குறிப்பிடப்பட்டது. மோக்ஷத்தைத்தவிர வேறொன்றிலும் இவர்களுக்கு இச்சை கிடையாது. தனித்தனியாக கர்மங்களுக்குச் சொல்லப்பட்டிருக்கின்ற பலன்களில் இவர்களுக்கு உத்தேசமில்லையாதலால், அவ்வித பலன்களை மாத்திரம் அனுபவிக்கும்படியான ஸௌகரியங்களுடன் கூடிய பித்ருலோகமென்ற புவர்லோகத்திற்கு இவர்கள் போவதற்குக் காரணமில்லை.

அவ்வித பலன்களில் இச்சையில்லாமலே இவர்களால் செய்யப்பட்டிருக்கின்ற கர்மங்கள் இவர்களுக்குச் சித்தசுத்தியை ஏற்படுத்திக் கொடுக்குமென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனால், அவைகளின் பலன் சித்தசுத்தியே யென்ற ஞானம் இவர்களுக்குக் கிடையாது. அவைகளையே இவர்கள் மோக்ஷத்திற்கு அந்தரங்க ஸாதனங்களாக எண்ணிக்கொண்டிருந்திருக்கிறார்கள். அவை பரம்பராஸாதனங்கள்தானென்று இவர்கள் அறிந்து கொள்ளாமலிருந்திருப்பது மல்லாமல், மோக்ஷத்தின் வாஸ்தவஸ்வரூபத்தையும் இவர்கள் நன்றாகத் தெரிந்து கொண்டவர்களில்லை. அன்றியும், உபாஸ்யரான பரமாத்மாவிடத்தில் இவர்களுக்கு ஏகத்வபாவனை உறுதியாயிருந்த போதிலும், இந்த ஏகத்வம் எப்படிப்பட்டதென்பதையும் இவர்கள் செம்மையாய் கிரஹித்தவர்களில்லை. இதெல்லாவற்றிற்கும் காரணம் இவர்கள் உபாஸனத்தை முக்கியமா யெண்ணாமல், அதை கர்மத்திற்கே அங்கபூதமாய் பாவித்து வந்திருப்பதும், ஞானப்பியாஸத்தில் பிரவேசிக்காமலே யிருந்து வந்திருப்பதுமே தவிர வேறல்ல. இவ்விதமான தார்மிகர்கள் அஹங்காரதாணத்தின்பொருட்டும், உபாஸனம் பலப்படும்பொருட்டும், மேலான ஞானப்பியாஸத்தைச் செய்யும்பொருட்டும் ஸத்தியலோகம் போய் பிரம்மாவின் ஸன்னிதியிலேயே தகுந்த யத்தினங்களைச் செய்துவரக்கூடும். (2)—சில தார்மிகர்கள் மேற்கண்டபடி கர்மானுஷ்டான பரர்களாகவும் தீவ்ர உபாஸகர்களாகவும் காணப்படுகின்றார்கள். இவர்களிடம் கர்மங்கள் அப்பிரதானங்களாயும் உபாஸனங்கள் பிரதானங்களாயுமிருந்து வருகின்றன. இவர்களுடைய கொள்கையில் உபாஸனமே மோக்ஷத்திற்கு முக்கிய ஸாதனமென்றும், ஸவிசேஷ விசேஷப இச்சாசக்தியே பரசக்தியென்றும், விஷ்ணுவே

மோக்ஷதாதாவென்றும் உறுதியாய் பாவிக்கப்பட்டிருக்கின்றது. விஷ்ணுவிடமிருந்தே மோக்ஷத்தை இச்சிக்கவேண்டுமென்று சாஸ்திரத்திலும் வியக்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது (மோக்ஷமிச்சேஜ்ஜநார்தநாத்). ஆகையால், இவர்கள் சித்தசுத்தியின்பொருட்டு ஸத்கர்மாக்களை அனுஷ்டித்துக்கொண்டும், தீவ்ர விஷ்ணுபக்தர்களாயிருந்துகொண்டும், விஷ்ணுவையே தங்களுடைய அந்தர்யாமியான பரமாத்மாவாக அபேத பாவனையுடன் உபாஸித்துக்கொண்டும் வருகின்றார்கள். இவ்வுபாஸனம் பரபக்தியையே வெளியிடுவதால், இவர்கள் கிரமமுக்தியை அடைய யோக்கியர்களாகவேயிருக்கின்றார்கள். இவ்விதமாக ஸத்கர்மானுஷ்டானத்துடன் கலந்த பகவதுபாஸனம் பலப்பட்டும், ஸூக்ஷ்ம விக்ஷேப இச்சாசக்தியாகிய லக்ஷ்மீபீடத்திலேயே பரசக்தி பாவனை ஸ்திரப்பட்டும் வந்திருக்கின்ற தார்மிகர்களுக்கு விஷ்ணுவின் வைகுண்டலோகத்துடைய பிராப்தி ஸித்தித்து விடுகின்றது. ஆகிலும், ஷை பரபக்தியில் ஏகத்வ பாவனை மட்டுமிருப்பதாலும், அதாவது, இந்த பாவனை மனோவிருத்திரூபமேயல்லாமல் அனுபூதிரூபமில்லையாதலாலும், இவ்வனுபூதி ஏற்படுகிறவரையில் தங்களிடம் **போக்தாக்கள்** என்ற பாவனை கூடவேயிருந்து வருமாகையாலும், இவ்வனுபூதி உண்டாவதற்கும் தங்களுடைய போக்துருத்வம் நசித்துப்போவதற்கும் ஸாதனமாயுள்ள மேல்ஞானப்பியாஸத்தில் ஷையார்களுக்கு பிரவிருத்தியில்லாமலிருந்திருப்பதாலும், போக்துருத்வ காரணபூதையான மஹத் என்ற ஸூக்ஷ்ம இச்சாசக்திமாயையே பிரதானமாயிருக்கிற வைகுண்டலோகத்தைக் கடந்து அவர்கள் மேற்செல்லக் கூடாதவர்களாயிருக்கின்றார்கள். ஆனால், அவர்கள் இஷ்டப்பட்டால் பிரம்மாவின் ஸத்திய லோகத்தையும் பார்க்கலாம்.

முன் சொல்லப்பட்டபடி முக்கியமாய் கர்மானுஷ்டான பரர்களாக மாத்திரமிருந்து ஸத்தியலோகப் பிராப்தி யேற்பட்டவர்களுக்குத்தான் வைகுண்டதர்சனம் கிடைக்காதே யொழிய, கர்மானுஷ்டானத்துடன் தீவ்ர உபாஸனபரர்களாகவுமிருந்து வைகுண்டலோகத்தை அடைந்தவர்களுக்கு ஸத்தியலோகதர்சனம் அஸாத்தியமல்ல. (3)—மற்றும் சில தார்மிகர்கள் மேற்கண்டபடி கர்மானுஷ்டாதாக்களாகவும் உபாஸகர்களாகவும் இருந்து வருவதுமல்லாமல், விசேஷமாய் அத்வைதஜ்ஞாநாப்பியாஸிகளாகவுமிருக்கின்றார்கள். ஜீவப்பிரம்மைகத்வபோதரூபமான அபரோக்ஷஜ்ஞானமே மோக்ஷஸாதனமென்பதும், ஸர்வகாரணபூதையான ஆவரணஜ்ஞானசக்தியாகிய கௌரீயே பரசக்தியென்பதும், ஞானப்பிரதாதாவாகிய சங்கரரென்ற ருத்திரரூபியான ஈசுவரரே உண்மையான மோக்ஷதாதாவென்பதும் இவர்களுடைய முடிவான கொள்கை. ஞானந்தான் மோக்ஷஸாதனமென்று வேதசாஸ்திரங்களில் ஸந்தேஹமின்றி தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸமஷ்டி காரணாத்மாவும் ஒப்பற்ற ஞானேசுவரராகவுமிருக்கின்ற சங்கரரிடமிருந்தே ஞானத்தைப் பெறவேண்டுமென்றும் சாஸ்திரம் வியக்தமாய்ச் சொல்லுகின்றது. சங்கரரிடமிருந்து ஞானத்தைப் பெற்றுக் கொண்டபிறகுதான் ஜீவனுக்கு முக்தியுண்டு. முக்தியென்றால் அநாதியான முன் கர்மங்களின் காரியத்தொடர்ச்சியில் ஏற்பட்டுள்ள சரீரமாகிய தனி அறை (Solitary cell)யிலிருந்தும் இதற்கு இருப்பிடமான திருச்யப்பிரபஞ்ச-ஜகத்தாகிய இந்த மஹா காராக்கிரஹத்தி (ஜயிலி) லிருந்தும் விடுதலையை அடைந்து ஸச்சிதானந்தப் பிரம்மமாக மிஞ்சி நிற்பதே. இவ்வித ஜகத்ரூபமான காராக்கிரஹத்தின் பரிபாலகர் விஷ்ணு. சங்கரரிட

மிருந்து ஞானத்தைப் பெற்றுக்கொண்டவரைத்தான் மோக்ஷ காராக்கிரஹத்திலிருந்து விஷ்ணு விடுவிப்பார். விடுதலைக்கு ஹேதுவான ஞானம் ஏற்படாதவரையில், விடுதலையைச் செய்ய விஷ்ணுவுக்கு அதிகாரங் கிடையாது. அவ்வித ஞானத்தை சங்கரரிடமிருந்து பெற்றுக்கொண்டுவிட்ட ஜீவனை விடுதலை செய்யாமலிருக்கவும் விஷ்ணுவுக்கு அதிகாரமில்லை. எப்படி மஹாராஜாவிடமிருந்து ஒரு கைதியின் விடுதலை விஷயமாக ஆஜ்ஞை கிடைத்து விட்டால் காராக்கிரஹத்தின் முக்கியாதிகாரி (Jail Superintendant) அக்கைதியை விடுதலை செய்தே தீரவேண்டுமோ, அப்படியே ஞானிகளுக்கு விடுதலையை (ஜகத்திலிருந்து மோசனத்தை) விஷ்ணு கொடுத்தே தீரவேண்டும். மஹாராஜாவிடமிருந்து ஆஜ்ஞை ஏற்பட்டபோதிலும், விடுதலையைச் செய்பவர் காராக்கிரஹ அதிகாரிதான் என்பது எப்படி ஸத்தியமோ அப்படியே சங்கரரிடமிருந்து ஞானம் பிராப்தமானாலும் மோசனத்தைச் செய்துவைப்பவர் விஷ்ணுதான் என்பதில் ஸந்தேஹமில்லை. இதினால்தான் முன்சொல்லியபடி சங்கரரிடமிருந்து ஞானத்தையும் விஷ்ணுவிடமிருந்து மோக்ஷத்தையும் இச்சிக்கவேண்டுமென்று சாஸ்திரத்தில் துலக்கப்பட்டிருக்கின்றது. மோக்ஷம் விஷ்ணுவால் ஏற்படுவது வாஸ்தவமானாலும், அதை ஏற்படுத்தும்படி செய்விப்பது சங்கரருடைய காரியமேயாகையால் உண்மையான மோக்ஷ தாதா சங்கரர்தான் என்பதே ஸித்தம். ஆகையால், பிரகிருதத்தில் குறிப்பிட்ட தார்மிகர்கள் முக்கியமாய் ஞானப்பியாஸிகளாயிருப்பதில், இவர்கள் ஞானேசுவரரான சங்கரருடைய பக்தர்களாகவே பெரும்பாலுமிருந்து வருகின்றார்கள். இவர்கள் சித்த-சுத்தியின்பொருட்டு, அதாவது மலதோஷ நிவிருத்திக்காக, ஸத்கர்மங்களை அனுஷ்

டித்துக்கொண்டும், சித்த-சாஞ்சல்ய நாசத்தின்பொருட்டு, அதாவது விக்ஷேப தோஷ நிவிருத்திக்காக, சங்கரரையே தங்களுடைய அந்தராத்மா என்ற பரமாத்மாவாக அபேத பாவனையுடன் உபாஸித்துக்கொண்டும், இந்த அபேத பாவனை நேர் அனுபூதிஜ்ஞான ரூபமாக ஸித்தித்து விடும் பொருட்டு, அதாவது ஆவரண தோஷ நிவிருத்திக்காக, சிரவண-மனன-நிதித்தியாஸன ரூபஜ்ஞானுப்பியாஸங்களை தீவ்ர மாய்ச்செய்துகொண்டும் வருகின்றார்கள். ஷை உபாஸனம் பரபக்தியையே குறிப்பிடுவதால், இவர்கள் கிரம முக்தியைப் பெறுவதற்குத் தகுதியுள்ளவர்களே. இந்தப்பிரகாரமாக ஸத்கர்மானுஷ்டானத்துடனும், ஈசுவரோபாஸனத்துடனும், தீவ்ரஜ்ஞானுப்பியாஸத்துடனும், காரண-ஆவரண-ஜ்ஞான சக்தியாகிய உமாதேவியென்ற கௌரீயிடத்திலேயே ஸ்திர மான பரசக்தி பாவனையுடனும் கூடினவர்களான இந்த தார்மிகர்களுக்கு ருத்திரரின் கைலாஸ லோகம் பிராப்த மாகி விடுகின்றது. கைவல்ய மோக்ஷஸித்திபரியந்தம், அதாவது, காரணுத்மிகையான அவ்யக்தமாயையின் தரண யோக்கியதை ஸித்திக்கும் வரையில், இவர்கள் கைலாஸத்தி லேயே இருந்துகொண்டு உபரி ஜ்ஞானுப்பியாஸங்களைச் செய்துவரவேண்டும். இவர்கள் இஷ்டப்பட்ட காலங் களில் வைகுண்ட-ஸத்திய லோகங்களையும் பார்க்கக்கூடும். ருத்திரரின் ஸன்னிதியில் எப்படியோ, அப்படியே விஷ்ணு வின் ஸன்னிதியிலும் பிரம்மாவின் ஸன்னிதியிலுமிருந்து கொண்டு இவர்கள் உத்தமஜ்ஞானுப்பியாஸங்களைச் செய்து வரலாம். மேற்கண்ட விபரப்படி கிரமமுக்தி மார்க்கக் கிரமத்தில் பிரம்மாவின் ஸ்தூலலோகமாகிய ஸத்திய லோகத் திற்குமாத்திரம் போகக்கூடிய முமுக்ஷுக்கள் ஸூக்ஷ்ம லோகமாகிய வைகுண்டத்திற்காவது காரணலோகமாகிய

கைலாஸத்திற்காவது போகக்கூடியவர்களில்லை. இந்தப் படியே, வைகுண்டத்திற்கு மாத்திரம் போகக்கூடிய முமுக்ஷுக்கள் ஸத்தியலோகத்திற்கும் போகக்கூடியவர்களானாலும் கைலாஸத்திற்குப் போகக்கூடியவர்களில்லை. கைலாஸத்திற்குப் போகக்கூடிய முமுக்ஷுக்கள் மாத்திரம் மூன்று ஸகுணப்பிரம்ம லோகங்களிலும் இஷ்டப்படியிருந்துவரக்கூடும்.

19. ஸகல லோகங்களிலும் வஸ்துக்களிலும் ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் இம்மூன்றும் சேர்ந்தேயிருக்குமென்று முன் சொல்லப்பட்டது. காரணமில்லாமல் ஸூக்ஷ்மமாவது ஸூக்ஷ்மமில்லாமல் ஸ்தூலமாவது இருக்கவே முடியாது. ஆனால், ஸ்தூலாவஸ்தையில்லாமல் ஸூக்ஷ்மாவஸ்தையும் ஸ்தூல-ஸூக்ஷ்மாவஸ்தைகளில்லாமல் காரணாவஸ்தை மாத்திரமும் இருக்கக்கூடும். பச்சைவெட்டுச் செங்கல்களால் நிர்மாணஞ்செய்யப்பட்டிருக்கிற ஒரு வீட்டை முன் 5-வது பாகத்தில் கண்டபடி உதாஹரணத்திற்கு எடுத்துக்கொள்வோம். மண்ணில்லாவிடில் செங்கலில்லை. மண்-செங்கல்களில்லாவிடில் வீடும் இருக்கமாட்டாது. செங்கல் ரூபமும் வீடு என்ற ரூபமும் இல்லாமல் போனாலும், அவ்விரண்டுக்கும் காரணமான மண் இருந்தே தீரும். எப்படி மண்ணில் செங்கலும் வீடும் பிரதிஷ்டையை அடைந்திருக்கின்றனவோ, அப்படியே ஸ்தூலம் ஸூக்ஷ்மம் இரண்டும் காரணத்தில் பிரதிஷ்டையை அடைந்திருக்கின்றன. எவ்விதம் மண்ணே செங்கலாகவும் வீடாகவும் தோன்றுகின்றதோ, அவ்விதம் காரணமே ஸூக்ஷ்மமாகவும் ஸ்தூலமாகவும் விளங்குகின்றது. வியஷ்டி ஜீவாத்ம விஷயத்தில் உண்மையான காரண-பாரமார்த்திகஜீவாத்மாவாகிய பிராஜ்ஞன் ஒருவனே அவஸ்தாபேதங்களினால் ஸ்தூலாபிமானியாகிய

விசுவனாகவும் ஸூக்ஷ்மாபிமானியாகிய தைஜஸனாகவும் விளங்குகின்றானேயல்லாமல் பிராஜ்ஞன்-விசுவன்-தைஜஸன் என்பதாக மூன்று ஜீவாத்மாக்கள் தனித்தனியாயில்லையென் பதே அனுபவஸித்தம். இந்தப்படிக்கே, ஸமஷ்டி-ஸர் வாத்ம விஷயத்திலும் பிரம்மா-விஷ்ணு-ருத்திரர்களென்று காணப்படுகின்ற மூவகைபேதத்தோற்றங்களும் வியவஹா ரங்களுமிருந்தாலும், மூன்று ஸமஷ்டி ஆத்மாக்கள் வாஸ்த வத்தில் தனித்தனியாயில்லையென்பதே உண்மை. அதாவது, ஸமஷ்டி காரணாத்மாவான ருத்திரரே ஸமஷ்டி ஸூக்ஷ்மாத் மாவாகிய விஷ்ணுவாகவும் ஸமஷ்டி ஸ்தூலாத்மாவாகிய பிரம்மாவாகவும் விளங்குகின்றார். இப்படியே, காரண-அவ் யக்தமாயாத்மிக-ஜ்ஞானசக்தியாகிய உமாதேவியே (கௌரீ யென்ற பார்வதியே) ஸூக்ஷ்ம மஹதாத்மிக-இச்சாசக்தி யாகிய லக்ஷ்மீயாகவும் ஸ்தூலாஹங்காரமாயாத்மிக-கிரியா சக்தியாகிய ஸரஸ்வதீயாகவும் விளங்குகின்றாள். பிரயோ ஜனத்தை உத்தேசிக்காமல், அதாவது இச்சையில்லாமல், கிரியை செய்யப்படுகிறதேயில்லை. நிஷ்காமகர்மமென்று சொல்லப்படுகின்ற விஷயத்திலும், சித்தசுத்திரூபப் பிர யோஜனத்தையாவது பகவதாஜ்ஞானுஸரணரூபப் பிரயோ ஜனத்தையாவது லோகஸங்கிரஹரூபப் பிரயோஜனத்தை யாவது இச்சித்துக்கொண்டுதான் அந்த கர்மம் செய்யப்படு கின்றது. ஆகையால், கிரியை எப்போதும் இச்சையைப் பொருத்தே நிற்கின்றது. இச்சையோவெனில் ஞானத்தைப் பொருத்து நிற்கின்றது. எந்த விஷய ஸம்பந்தமாக இச்சை உண்டாகின்றதோ அந்த விஷயத்தின் ஞானத்தை முன் னிட்டே அது உண்டாகக்கூடும். பிரத்தியக்ஷத்தினாலேயோ ஞாபகத்தினாலேயோ அல்லது புதிதான மனோபாவனையி னாலேயோ ஏறக்குறையத் தெளிவாக எது முதலில்

ஞானத்திற்கு விஷயமாகின்றதோ அது ஸம்பந்தமாகத் தான் இச்சை உதிக்கும். ஞானத்தை முன்னிடாமல் இச்சை உண்டாவதேயில்லை. இச்சையை முன்னிடாமல் கிரியை உண்டாவதில்லையென்று முன்னால் காண்பிக்கப்பட்டது. ஆதலால், இச்சையில் கிரியையும், ஞானத்தில் இச்சையும் பிரதிஷ்டையை அடைந்திருக்கின்றன. அந்தந்த சக்திகளுடன் கூடியவர்களுக்குள்ள பரஸ்பரஸம்பந்தங்களும் மேற்கண்டதற்கு ஒற்றுமைபாகவேயிருக்கும். அதாவது, கிரியாசக்திரூபிணியாகிய ஸரஸ்வதி இச்சாசக்திரூபிணியாகிய லக்ஷ்மீபீடத்திலும், லக்ஷ்மீ ஞானசக்திரூபிணியாகிய கௌரீபீடத்திலும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறார்கள். இவ்விதமாக ஸரஸ்வதீ, லக்ஷ்மீ இருவர்களும் கௌரீயை ஆசிரயித்தவர்களே. கௌரீயை விட்டுத் தனியாக ஸரஸ்வதீ-லக்ஷ்மீகளால் க்ஷணங்கூட இருந்துவர ஸாத்தியப்படமாட்டாது. ஆகையால், மூன்று தனி தேவிகள் இருப்பதுபோல் சொல்லாமல், மேற்சொல்லியபடி கௌரீயே மற்ற இருவர்களைப் போலவும் விளங்குகிறாளென்றே சொல்லவேண்டும். இப்படியே, காரண ஸகுணப் பிரம்மலோகமாகிய கைலாஸமே ஸூக்ஷ்ம ஸகுணப்பிரம்மலோகமாகிய வைகுண்டமாகவும் ஸ்தூல ஸகுணப்பிரம்ம லோகமாகிய ஸத்திய லோகமாகவும் தோன்றுகின்றதென்றே எண்ணவேண்டும். இவ்விதமாக முவ்வகைப்பட்டுத்தோன்றுவதெல்லாம், ஜீவர்களின் குணபேதங்களையும் அவைகளின் காரியங்களான யோக்கியதாபேதங்களையும் முன்னிட்டு, எல்லோரையும் ஜீவத்வ ஸ்தானத்திலிருந்து உத்தாரணஞ் செய்வதற்காகவே, பரமாத்மாவால் முன் குறிப்பிட்டபடி ஸங்கல்பிக்கப்பட்டிருக்கின்றதென்பதே உண்மை. இவ்வுண்மை நன்றாக ஸகுணோபாஸகரின் புத்தியில் பதிந்துவிட்டால்,

அதாவது, ஸகுணப் பிரம்மலோகத்திரய-மூர்த்தித்திரய-தேவீத்திரய ஸம்பந்தமாயுள்ள திருச்ய பேதங்களெல்லாம் உபாஸகர்களின் குணபேதங்களைப்பொருத்தவைகளே தவிர வேறல்லவென்று தெரிந்துகொண்டுவிட்டால், குணங்களைக் கடந்து ஸ்வானுபூதி ரூபமாய் பார்க்க யத்தனிப்பதற்கு, அதாவது சிரவண-மனனரூபஜ்ஞானாப்பியாஸங்களைச் செய்து சீக்கிரத்தில் நிதித்தியாஸனரூப நிர்க்குணோபாஸனத்தைக் கைக்கொள்வதற்கு யோக்கியராகிவிடுவார். கிரமமுக்தி மார்க்கத்தில் கைலாஸத்தையே அடையக்கூடிய அல்லது அடைந்திருக்கின்ற முமுக்ஷுவிடந்தான் இவ்வித விசேஷ யோக்கியதை யிருக்கக்கூடியது. இவர் ஸர்வ காரண ஸகுணப்பிரம்ம மூர்த்தியான ருத்திரரையும் ஸர்வகாரண மாயா சக்தியான கௌரீயையும் மனதினாலாவது பிரத்தியக்ஷமாக வாவது தர்சனஞ்செய்யும்போதே ஷை இரண்டு மூர்த்திகளிலும் காணப்படுகின்ற ஸ்தூலாம்சங்களும் ஊஹிக்கப்படுகின்ற ஸூக்ஷ்மாம்சங்களும் ஆரோபிதங்களேயல்லாமல் வாஸ்தவமில்லையென்றும், தன்னால் தத்காலத்தில் ஸாக்ஷாத்கரிக்கக்கூடாத காரணாம்சந்தான் வாஸ்தவமென்றும் நிச்சயமாய்த்தெரிந்து கொண்டிருக்கின்றார். முன்னாலேயே காண்பிவித்தபடி காரணாம்சம் ஆனந்த பூர்ணமாகவேயிருப்பதால் அவ்வம்சம் ஸ்வாத்மானுபூதிவிஷயமே யல்லாமல் பின்ன-திருச்ய விஷயமல்ல. அன்றியும், ஸ்தூலத்வ-ஸூக்ஷ்மத்வங்களை ஒட்டியே காரணத்வ வியவஹாரம் ஏற்பட்டிருக்கின்றதே யொழிய, இது தனியாக ஏற்படுவது கிடையாது. ஸ்தூலத்வ-ஸூக்ஷ்மத்வங்களின் மித்யாத்வம் ஸித்தமாயிருக்கும்போது, காரணத்வமும் மித்யைதானென்றே இவர் தெரிந்துகொண்டு விடுகின்றார். ருத்திரரின் ஆனந்த தாண்டவாதி ஸமயங்களில் பிரகாசிக்கின்றதும்

எப்போதும் அவரிடம் ஸ்வதஸ்ஸித்தமாயிருப்பதுமான பேரானந்தம் துரீயாத்ம ஸ்வரூபமேயாதலால், ருத்திரரின் உண்மையான காரணஸ்தானம் துரீயஸ்தானமேயல்லாமல், முக்குணங்களுக்காவது மூன்று அவஸ்தைகளுக்காவது உட்பட்ட மூன்றாவது ஸ்தானமல்ல. ஜீவர்கள் அவர்களுடைய காரண உபாதியான அவித்யைக்கு வசப்பட்டிருப்பதால், அவித்யாகாரியங்களான ஸ்தூல-ஸூக்ஷ்ம ஸ்தானங்களாகிய ஜாக்கிரத்-ஸ்வப்நாவஸ்தைகளிலிருந்து விடுபட்டு, கேவல அவித்யா ஸ்தானமாகிய ஸுஷுப்தி-அவஸ்தையில் கட்டுப்பட்டிருக்கும்போது, அவர்கள் மூன்றாவதான காரண ஸ்தானத்திலுள்ள பிராஜ்ஞர்களென்று சொல்லப்படுகின்றார்கள். ஷை மூன்று ஸ்தானங்களையும் உத்தேசித்து கைவல்ய மோக்ஷ ஸ்தானமாகிய ஆத்மஸ்தானம் துரீய (நான்காவது) ஸ்தானமென்று கூறப்பட்டிருக்கிறது. மேற்சொல்லிய விதமான பந்தத்துடன் கூடிய மூன்றாவது ஸ்தானமே ருத்திரருக்குக் கிடையாது. அவருக்குக் காரணோபாதியாகச் சொல்லப்பட்ட மாயை அவருடைய ஸ்வாதீனத்திலேயேயிருப்பதாலும், அம்மாயையினால் அவருடைய பிரம்மத்வத்திற்குக் கொஞ்சங்கூட குறைவுண்டாகக்கூடாததாலும் அவருடைய ஸ்வஸ்தானம் துரீயமென்ற பிரம்மஸ்தானந்தானென்பதே நிச்சயம். உண்மையில் ஸர்வகாரணமாயிருப்பது ஏகமான பிரம்மத்தைத் தவிர வேறல்ல. ருத்திரர் காரணாத்மரூபியென்றால், அவரே பிரம்மந்தான் என்றே அர்த்தம். இவ்வுண்மை சுருதியிலும் இதிஹாஸ-புராணங்களிலும் நன்கு வெளிப்படுத்தப்பட்டுமிருக்கின்றது. ஸாமான்ய ஜீவப்பிரபஞ்ச திருஷ்டியில் ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரணஸ்தானங்களென்று முக்குணங்களையும் ஒட்டி எவை சொல்லப்பட்டிருக்கின்றனவோ, அவைகளுக்கு அதீதமான

துரீயப் பிரம்மஸ்தானத்தில் ருத்திரர் இருந்து வருவதினால் தான், ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரணரூப ஸம்ஸாரத்திரயத்தையும் நிச்சேஷமாய் பஸ்மஞ்செய்துவிட அவருக்கு பரிபூர்ண சக்தி யிருக்கின்றது. இவ்வித சக்தி மற்ற யாருக்குங் கிடையாது. இதனால் தான் அவரே திரிபுரஹர ரென்றும் திரிபுராந்தக ரென்றும் பிரஸித்தி ஏற்பட்டிருக்கின்றது. ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரணாத்மகமான பந்தத்திரயமே புரத்திரயம் (முப்புரம்). இந்த முப்புரத்தில் எல்லா ஜீவகோடிகளும் பத்தர்களாய் (அடைபட்டவர்களாய்) இருக்கின்றார்கள். இம்முப்புரமே "ஜகத்" என்று சொல்லப்படுகின்றது. ஸ்தூலத்வத்தில் பற்றுதல், ஸூக்ஷ்மத்வத்தில் பற்றுதல், காரணத்வத்தில் பற்றுதல் இம்மூன்றுமே திரிபுராஸுரர்கள். இவ்வஸுரர்களை ஹதஞ்செய்து முப்புரத்தையும் நாசஞ்செய்ய மேற்கண்டபடி ருத்திரர் ஒருவரே சக்தர். இவர் மூன்றாவதாகச் சொல்லப்பட்ட காரண ஸ்தானத்திற்குக்கட்டுப்பட்டவராயிருந்தால், காரணபுரமுள்பட முப்புரத்தையும் நாசஞ்செய்ய இவரால் முடிந்திருக்கமாட்டாது. இவருக்கு மாயை வசப்பட்டிருப்பதாலும், இவரே துரீயப் பிரம்மத்தைத்தவிர வேறில்லையாதலாலும், அனாத்மபூதமான முப்புரத்தையும் கொளுத்தி பஸ்மமாகச் செய்வதும் திரிபுராஸுரர்களை ஸம்ஹாரஞ் செய்வதும் இவருக்கு ஒரு பெரிய காரியமில்லாமலிருந்திருக்கின்றது. வேறு ஸாதனங்களைத்தேடாமலே, கேவல மந்தஹாஸத்துடன் தன் மூன்றாவதான ஞான நேத்திரத்தைக் கொஞ்சம் திறந்ததினாலேயே திரிபுர ஸம்ஹாரம் ஸித்தித்து விட்டது. அனாத்ம பூதமான ஸகலத்துடையவும் நாசத்தில் ஆத்மஜ்ஞானம் ஒன்றுதான் ஸாதனம் என்பது நன்றாக வெளியிடப்பட்டது. இங்கு குறிப்பிட்ட மந்தஹாஸம் ருத்திரரின் ஆனந்த ஸ்வரூபத்தையே

துலக்குகின்றது. மேற்கண்டபடி திரிபுரஸம்ஹாராதிகளைச் செய்யும்பொருட்டு விஷ்ணு-பிரம்மாதிகளான ஸகல முக்கிய தேவர்களாலும் ருத்திரர் பிரார்த்திக்கப்பட்டார். பந்தாத்மகமான லோகங்களின் ஸம்ரக்ஷணையின்பொருட்டு ஏகதேசத்தில் ஏதாவது துஷ்ட ஸம்ஹாராதிகாரியம் செய்யப்படவேண்டுமானால், அது விஷ்ணுவாலேயே (ருத்திராம்சத்தின் ஆவேசத்துடன் கூடிய அவதாரங்களைச் செய்து) முடித்துவிடப்படக்கூடும். விராட்டு-ஸமஷ்டி-ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரண பூதமான ஸர்வமும் நாசத்தை அடையவேண்டுமானால், அதாவது, ஸாக்ஷாத் கைவல்ய மோக்ஷமே ஏற்படவேண்டுமானால், ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரண ஸ்தானங்களாகிய மூன்று ஸ்தானங்களுக்கும் அப்பாலுள்ள துரீய ஸ்தானத்தில் யார் இருந்து வருகின்றாரோ அவர் ஒருவரால்தான் அவ்வித நாசம் ஏற்படக்கூடும். இவ்விதமாக ருத்திரர் உண்மையில் துரீயப்பிரம்மமே யென்ற விஷயம் மேலே குறிப்பிட்ட உத்தம ஜ்ஞானப்பியாஸிகளுக்குத் தெரியவருமாகையால், இவர்களுடைய உறுதியான ஏகத்வ புத்தியுடன் கூடியதும் சிவபக்தியுடன் கலந்ததுமான ஞானப்பியாஸம் சுத்த நிர்க்குணோபாஸனமாகவே ஏற்பட்டு, முடிவில் இவர்களை துரீயநிர்க்குணப்பிரம்மப்பிராப்தி ரூபமான ஸாயுஜ்ய கைவல்ய மோக்ஷத்தில் சேர்ப்பித்து விடுமென்பதே ஸித்தம்.

20. இங்கு மறுபடியும் ஒரு கேள்விக்கிடமிருப்பதாகச் சிலர்கள் எண்ணக்கூடும். ஸகுணோபாஸகர் உத்தமோத்தம ஸகுணப்பிரம்மலோகத்திற்குச் சென்ற பிறகும் அவருக்கு அங்கே நிர்க்குணோபாஸனம் நிலைத்து பலப்பட்ட பின்புதான் அபரோக்ஷாத்மஜ்ஞானம் உதிக்கக்கூடியதாயிருப்பதினால், நிர்க்குணோபாஸனந்தான் முக்கியமென்பதும் அதுவே

ஞானத்திற்கு அந்தரங்க ஸாதனமென்பதுமே வாஸ்தவ மென்று ஏற்படுகின்றது. இந்தப்படியே முன்னால் சொல்லப் பட்டுமிருக்கிறது. ஸகுணப்பிரம்மலோகத்திற்குப்போய்ச் சேருவதற்குள்ள விசேஷ உபாஸனாதி கிரமங்களை எடுத் துக்கொள்ளாமலே இவ்வுலகத்தில் நிர்க்குணோபாஸனா-அப்பி யாஸத்திலேயே புத்தியைப் பூராவும் செலுத்தி ஞானப் பிராப்திக்கு வழியைத் தேடிக்கொள்வதே உத்தமமில்லையா வென்று கேட்கலாம். அதாவது, கைலாஸாதி லோகப் பிராப்தியின்பொருட்டு அதிக யோக்கியதையை உண்டாக் கக்கூடியதான விசேஷ ஸகுணோபாஸனங்களைக் கைக்கொள் ளாமலே, ஞானப்பியாஸத்திற்கு எம்மட்டில் அவசியமா யுள்ளதோ அம்மட்டில் நித்திய-நைமித்திக கர்மங்களால் சித்த-சுத்தியையும், ஷை கர்மங்களில் அடங்கியிருக்கின்ற ஸாமான்ய உபாஸனங்களின் மூலமாக சித்த-ஐகாக்ரியத்தை யும் ஸாதித்துக்கொண்டும், ஒழுங்காய் சிரவண-மனனங் களைச் செய்து பரோக்ஷஜ்ஞானத்தை ஸம்பாதித்துக்கொண் டும், மேலான நிதித்தியாஸன ரூபமான நிர்க்குணோபாஸனத் தை அப்பியஸித்து வருவதே சிலாக்கியமென்று மேற்கண்ட வர்கள் எண்ணலாம். இப்படி எண்ணுவது சாஸ்திர விரோத மில்லையென்று சொல்லக்கூடியதானாலும், புனர்ஜன்மகஷ்டங் களுக்குட்படாமலே நிதித்தியாஸனம் உறுதிப்பட்டு முடி வான உத்தேசமாகிய ஞானஸித்தி லகுவாயும் சீக்கிரத் திலும் நிச்சயமாகவும் கைகூட வேண்டுமானால் பரபக்திக் கிரமத்தில் மேற்சொல்லிய விசேஷ உபாஸனங்களைச் செய்து ஸகுணப்பிரம்மலோகஞ்சென்று அங்கு மேல் யத் தினங்களைச் செய்வதே பெரும்பாலும் முமுக்ஷுக்களுக்கு அனுகூலமென்பதாகவே வெளியாகின்றது. கர்மலோகமாகிய இவ்வுலகத்தில் பிரவிருத்தி தர்ம மார்க்கத்திலிருந்துவருபவர்

களுக்கு நிதித்தியாஸனாபிப்யாஸம் ஸம்பூரணமாய் இக் கொடிய கலிகாலத்தில் பலப்படுவது அனேகமாய் சிரமப் படும். அதாவது, ஷெ தார்மிகர்கள் வேதவிஹிதமான நித் திய-நைமித்திக கர்மங்களையும் அவசியமான லௌகிக காரி யங்களையும் செய்யாமலிருக்கக்கூடாததாலும், இக்கர்ம பூமி யில் ஸுக-துக்கானுபவங்கள் பலவிதமாக ஏற்பட்டுக்கொண் டே யிருக்கக்கூடியதாலும், இவ்வித கர்ம-கார்ய-அனுபவ காலங்களில் தைலதாரையைப்போல் நிரந்தரமாக ஆத்ம சிந் தனத்தைச்செய்வது பெரும்பாலும் ஸாத்தியப்படக்கூடாத தாலும், அவர்களுடைய நிதித்தியாஸன அப்பியாஸத்திற்கு அடிக்கடி பங்கம் ஏற்பட்டுக்கொண்டுதானிருக்கும். தொடர் ந்து நடத்தப்படாமல் இப்படி விட்டு விட்டுச் செய்யப்படு கின்ற தியானம் சீக்கிரத்தில் ஸமாதியில் முடிவடையக்கூடிய தல்ல. ஸமாதி நிலைத்து அபரோக்ஷஜ்ஞானம் ஸித்தித்தா லொழிய பாக்கியுள்ள ஸஞ்சித கர்மவினைகள் நாசமாக மாட்டா. ஆகையால், பிரவிருத்தி தர்ம மார்க்கத்திலிருந்து கொண்டு நிதித்தியாஸனாப்பியாஸத்தைச் செய்து வருகின்ற வர்களும் விசேஷ ஸகுணோபாஸனத்தைக் கைக்கொள்ளாத வர்களுமான முமுக்ஷுக்கள் ஞானஸித்தி பரியந்தம் திரும் பத்திரும்பவும் இவ்வுலகத்தில் ஜன்மங்களை அடையும்படி யாகவே நேரிடும். எல்லா லோகங்களுக்குள்ளாக காரண லோகமாகிய ஸகுணப் பிரம்ம லோகத்தில் காரணத்வஸம்பந் தத்தில் முன் காட்டியபடி ஸத்வகுணப்பிராதான்யமே விசேஷமாயிருப்பதாலும், அங்குள்ளவர்களுக்கு பசி, தாகம், சோகம், மோஹம், ஜரை, மரணம் இந்த ஆறு ஊர்மிகளென்ற தோஷங்கள் கிடையாதாகையாலும், அந்த லோகத்தில் (அதிலும் ஸர்வோத்தமமான காரண-காரண லோகமாகிய கைலாஸத்தில்) எவ்வளவு ஸ்பஷ்டமாகவும் சீக்கிரமாகவும்

நிச்சயமாகவும் ஆத்மப்பிரகாசம் விளங்கக்கூடியதோ அவ்வளவு தெளிவாயும் ஜரூராயும் உறுதியாயும் தமோகுணப் பிரதானமான இப்பூலோகத்தில் விளங்கக்கூடியதில்லே. இவ்வுலகத்திலுள்ள இக்காலத்திய முமுக்ஷுக்களுக்குள்ளாக வெகுபெயர்கள் விசேஷ உபாஸனமார்க்கத்தைக்கைக்கொள்ளாமலே ஞானப்பியாஸத்தைச் செய்து வருவதாகச்சொல்லிக்கொண்டும், இனி தங்களுக்கு பூலோகத்தில் புனர்ஜன்மமே கூடாதென்ற தீவ்ர எண்ணங்கொண்டுமிருக்கின்றார்கள். இவர்களில் அனேகர்கள் ஞானஸித்தி ஏற்படுவது லகுவான காரியமென்றும் தப்பாக எண்ணிக்கொண்டுமிருக்கின்றார்கள். இங்கு புனர்ஜன்மம் இவர்களுக்கு ஏற்படாமலிருக்க வேண்டுமானல், இவர்களுடைய தத்கால யத்தினங்கள் நடப்பு ஜன்மத்திலேயே ஞானஸித்தியில் முடிவடையக் கூடுமானல்தான் அவ்வுத்தேசம் நிறைவேறும். ஞானம் ஸித்திக்காமல் ஞானப்பியாஸக-ஸ்தானத்திலிருக்கும்போதே ஜீவகாலம் முடிவாகிவிட்டால் மறுபடியும் இங்கு ஜன்மம் ஏற்பட்டே தீரும். அதைத் தடுக்கமுடியாது. ஞானஸித்தியை அடையாத ஞானப்பியாஸகருக்கு புனர் ஜன்மம் உண்டாகாமலிருப்பதற்கு இரண்டு மார்க்கங்கள் தான் உண்டு, ஒன்று ஞானப்பியாஸத்துடன் தீவ்ரமான பரபக்தியும்சேர்ந்திருந்து கிரமமுக்தியைப் பெறுவதற்குள்ள யோக்கியதை ஸ்திரப்பட்டிருக்கவேண்டும், மற்றொன்று தீவ்ரதரமான வைராக்கியத்தை முன்னிட்டுத் தகுந்த அதிகாரியாயிருந்தால் பிரவிருத்திதர்ம மார்க்கத்தை விட்டு முழுவதும் விலகி பரமஹம்ஸாசிரமத்தைக் கைக்கொண்டு சுருதிப்படிக்குள்ள பரமஹம்ஸ தர்மங்களை நன்கு ஆசரித்து வரவேண்டும். இவ்வித பரபக்தரும் பரமஹம்ஸரும் ஸகுணப் பிரம்ம லோகஞ்சென்று அங்கு ஞானஸித்தியை நிச்சய

மாய்ப் பெறுவார்கள். இவ்விருவர்களுக்கும் இப்பூலோகத்தில் மறு ஜன்மம் ஏற்படவே மாட்டாது. இந்த விபரம் இதன் கடைசி இரண்டு பாகங்களில் கொஞ்சம் துலக்கிக் காட்டப்படும். ஸகுணப்பிரம்மலோகவாஸ காலத்தில் இவ்விருவர்களுடைய பூர்வ கெட்ட கர்மங்கள் யாவற்றும் நல்ல கர்மங்களில் அனேகங்களும் அததற்குரிய பலன்களைக் கொடுக்க அவகாசமன்னியில் அடங்கியேயிருந்துவந்து இவர்களுக்கு ஷை லோகத்தில் ஞானஸித்தி ஏற்பட்டவுடன் நிச்சேஷமாய் நாசத்தை அடைந்து விடுகின்றன. இவ்விருவர்களைத்தவிர மற்ற அப்பியாஸகர்களெல்லோரும் பூலோகத்தில் மறுபடியும் அடிக்கடி ஜன்மங்களை எடுத்துக் கொண்டும் அவரவர்களின் பூர்வ நல்ல-கெட்ட கர்மபலன்களை அனுபவித்துக்கொண்டுமே யிருப்பார்கள். ஆகையால், எந்த முமுக்ஷுவின் மனதில் தனக்கு மறு ஜன்மமே வேண்டாமென்ற எண்ணம் உறுதியாயிருக்குமோ அவர் வெறும் ஞானப்பியாஸத்தை மாத்திரம் செய்துவந்தால் போதாது; பரபக்தியைச் செலுத்தி ஸகுணோபாஸனத்தையும் செம்மையாய் நடத்திவர வேண்டியதுமவசியம். விசேஷ ஸகுணோபாஸன பலத்தினால் தனக்கு ஸகுணப் பிரம்மலோகப்பிராப்தியையும் பூலோகத்தில் புனர்ஜன்மமில்லாமையையும் ஸ்திரப்படுத்திக் கொண்டே ஞானப்பியாஸத்தினால் கைவல்ய முக்திக்கு வழிதேடுவதுதான் யுக்தியுக்தமான செய்கையாகும். ஸகுணோபாஸனத்தில் செலவாகக்கூடிய காலத்தை ஞானப்பியாஸத்திலேயே சேர்த்துச் செலவழித்தால் ஞானம் சீக்கிரத்தில் கைகூடலாமே யென்று நினைத்துக் கொண்டு ஸகுணப்பிரம்மலோகத்திற்குப்போய் சேருவதற்கு இடமில்லாமலே செய்து கொண்டிருந்தும் ஞானஸித்தி பூர்த்தியாகாமல் போய்விட்டால் மறுபடியும் இக்கலிகாலத்

தில் இங்கு ஜன்மங்களும் அவைகளை ஒட்டிய அஸௌ கரியங்களும் கஷ்டங்களும் திரும்பி வந்து கொண்டேதா னிருக்கக்கூடியவை. ஆதலால், புனர் ஜன்மத்தில் பயமும், ஞானவஸித்தியில் ஊக்கமும் மிகுதியாயுள்ளவர்களும் வேத விதிப்படி பரமஹம்ஸாசிரமத்தைக் கைக்கொள்ளத் தகுதி யில்லாதவர்களுமான முமுக்ஷுக்கள் எல்லோரும் ஸகுணோ பாஸனத்தை நன்கு அவலம்பிக்கவேண்டியதவசிய மென் பதே உறுதி. ஸகுண மூர்த்தியான ஈசுவரருடைய அனுக் கிரஹத்தினுலேயே மாயாதரணம் மூலமாய் ஆத்மதத்வ வஸித்தி விளங்கவேண்டியதாயிருக்கின்றது. ஈசுவர மாயை யைக் கடப்பது கஷ்டமென்றும் அவ்யக்தமான நிர்க்குணப் பிரம்மமார்க்கம் பிடிபட்டு அதில் செல்லுவது தேஹவான் களுக்குமிகவும் சிரமப்படுமென்றும் பகவானே கீதையில் வெளியிட்டுச் சொல்லியுமிருக்கின்றார். மேற்கண்ட ஈசுவரா னுக்கிரஹத்தைப் பெரும்பாலும் ஸகுணோபாஸன பலத்தினு லேயே ஸாதித்துக்கொள்ள வேண்டியதாயிருக்கின்றது. ஆகையால், ஞானுப்பியாஸகர்களும் உறுதியுடன் பரபக்தி யைச் செலுத்தி உத்தம ஸகுணோபாஸகர்களாகவு மிருப் பதே நன்மை.

ஆருவது பாகம் முற்றும்.

# தர்ம விமர்சனம்

## ஏழாவது பாகம்.

## ஸ்திரீ-சூத்திரர்களும் வேதமந்திரஜபமும்.

1. ஸ்திரீகளுக்கும் சூத்திரர்களுக்கும் வேதமந்திர ஜபங்களில் அதிகாரமில்லை. "யஜ்ஞாநாம் ஜபயஜ்ஞோऽஸ்மி" என்று பகவான் கீதையில் சொல்லியிருப்பதால், ஜபம் முக்கிய யஜ்ஞமேயாகும். ஸ்திரீகளுக்குத்தனியாகவாவது, சூத்திரர்களுக்கு எவ்வகையிலாவது யஜ்ஞத்தில் அதிகாரமில்லையென்பது சாஸ்திரப் பிரஸித்தம். யஜ்ஞம் முதலான விசேஷ கர்மாக்களில் யஜமான ஸ்தானத்திலிருக்கிற பர்த்தாவின் ஸமீபத்திலேயே பத்னீ எப்போமிருந்துகொண்டிருப்பதால், மந்திரங்களைக் காதால் கேட்பதினால் த்விஜ ஸ்திரீகளுக்கு தோஷமில்லை. அன்றியும், யஜ்ஞங்களில் சிற்சில ஸமயங்களில் பத்னீயாலேயே சில மந்திரங்கள் சொல்லப்படவேண்டுமென்று வேதத்திலேயே விதிக்கப்பட்டிருப்பதால், குறிப்பிட்ட மந்திரங்களை உச்சரிப்பதிலும் ஸ்திரீகளுக்கு தோஷமில்லை. இந்த விலக்கைத்தவிர வேறு எவ்விதத்திலும் ஸ்திரீகளுக்கு மந்திரோச்சாரணத்தில் அதிகாரமில்லையென்றே வேத சாஸ்திரங்களில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. சூத்திரர்களுக்கோ வேத மந்திரங்களைக் காதால் கேட்பதற்குக் கூட அதிகாரமில்லையென்பதே சாஸ்திரஸித்தாந்தம். இப்படியிருக்க, இக்கலிகாலத்தில் ஸ்திரீகளாலும் சூத்திரர்களா

லும் சிவபஞ்சாக்ஷரீ முதலான மஹாமந்திரங்கள் ஜபிக்கப் பட்டுவருகின்றன.

2. பிரணவத்தை மாத்திரம் விலக்கி ஷை-யார்கள் ஜபஞ்செய்யலாமென்று சில சிஷ்டர்கள்கூட அபிப்பிராயப் படுகிறார்கள். மந்திரத்திற்குப் பிராணஸ்தானீயமாயிருப் பது பிரணவம். பிரணவத்தை விலக்கிவிட்டால், மந்திரத் திற்கு வீர்யமே போய்விடும். மந்திரத்திற்கு மந்திரத் தன்மையே யிராதென்றுதான் சொல்லவேண்டும். தவிர வும், இவர்கள் சொல்லுகிறபடி மூலமந்திர ஜபத்தில் பிரண வோச்சாரணமில்லாவிட்டாலும், திக்பந்தனம் திக்விமோ சனஞ்செய்யும்போது "ஓம் பூர்புவ: ஸுவரோம்" என் பதாய் கடைசியில் பிரணவத்தையே உச்சரித்தாக வேண்டிய தாயிருக்கிறதே. அப்பொழுது மாத்திரம் உச்சரிப்பதற்கு அதிகாரம் எப்படி யேற்படும்?

3. ஸ்திரீ-சூத்திரர்களுக்கு உபநயனமில்லாததினால், காயத்திரீமந்திரத்தையாவது, அதற்கு மூலமான வியாஹ்ரு திகளையாவது உச்சரிக்க நியாயமில்லை. வியாஹ்ருதிகள் காயத்திரீயின் பீஜங்களென்பது பிரஸித்தம். ஸன்யாஸ காலத்தில் காயத்திரீவிஸர்ஜனஞ் செய்யும் போது மூல பீஜமான "பூ:, புவ:, ஸுவ:" என்ற மூன்று வியா ஹ்ருதிகளில் காயத்திரீயை உபஸம்ஹாரஞ் செய்து, அப் பால் ஷை மூன்று வியாஹ்ருதிகளையும் அவைகளுக்கு மூல பீஜமான பிரணவத்தில் அடங்கும்படி செய்விக்கிற பிரயோக காரியம் தர்மசாஸ்திரவித்வான்களுக்குத் தெரிந்த விஷயம். இப்படிப்பட்ட வியாஹ்ருதிகளின் உச்சாரணத் தில் ஸ்திரீ-சூத்திரர்களுக்கு அதிகாரமில்லையானால், இவர் கள் "ஓம் பூர்புவ: ஸுவரோம்" என்று சொல்லி எப்படி திக்பந்தனம், திக்விமோசனஞ் செய்யக்கூடும்?

4. ஸ்திரீகளுக்கு ஸ்வயமாயும், சூத்திரர்களுக்கு எவ் விதத்திலும், யஜ்ஞஞ்செய்ய அதிகாரமில்லை யென்று முன் சொல்லப்பட்டது. ஜபமென்பது யஜ்ஞரூபமாகையால், "ஸ்வாஹா (ஶிரஸே ஸ்வாஹா), வஷட் (ஶிகாயை வஷட்), ஹும் (கவசாய ஹும்), வௌஷட் (நேத்ரத்ரயாய வௌஷட்), பட் (அஸ்த்ராய பட்)" முதலான யஜ்ஞப்பிரயோகமந்திரங்களே ஜபத்தில் அங்கந்யாஸங்களில் உபயோகப்படுகின்றன. "ஸ்வாஹா," "வஷட்," "வௌஷட்," ஸாமாந்ய மஹாமந்திர பாகமாகிய "ஹும் பட்", இவைகளெல்லாம் விசேஷ மந்திரத்தன்மையுள்ளவை யென்று வைதிகர்களுக்கு நன்றாய் தெரியவரும். உபநயனமேயில்லாத ஸ்திரீ-சூத்திரர்கள் இவைகளை யுச்சரித்து அங்கந்யாஸஞ் செய்வது எப்படி ந்யாயமாகும்? இவர்களுக்கு யஜ்ஞாங்கபூதமான யஜ்ஞோப வீதமே கிடையாதாகையால், யஜ்ஞங்களுக்குள் உத்தம யஜ்ஞமாகிய ஜபத்தில் இவர்களுக்கு அதிகாரமில்லை யென் பதே நிச்சயம்.

5. சிலர்கள் அங்கந்யாஸ மந்திரங்களிலுள்ள "ஸ்வாஹா" முதலான விசேஷ மந்திரங்களை நீக்கிவிட்டு, அவைகளுக்குப் பதிலாக "நம:" என்று மாத்திரம் ஸ்திரீ-சூத்திரர்கள் சொல்லிவரலாமென்றும், இப்படியே வியாஹ்ருதிகளையும் பிரணவத்தையும் நீக்கிவிட்டு திக்பந்தனாதி காலங்களில் திக்தேவதைகளின் நாமங்களைச் சொல்லிவரலா மென்றும் அபிப்பிராயப்பட்டு, இவ்விதமாயுஞ் சிலர்களால் ஆசரிக்கப்பட்டு வருகிறது. அதாவது "ஶிரஸே நம:, ஶிகாயை நம:, கவசாய நம:, நேத்ரத்ரயாய நம:, அஸ்த்ராய நம:" என்று அங்கந்யாஸங்களும், "இந்த்ராய நம:, அக்நயே நம:" இம்மாதிரியாய் திக்பந்தனாதிகளும்

செய்யப்படுகின்றன. இவ்விதஞ் செய்தால் வாஸ்தவ அங்கந் நியாஸமாகுமென்றும், வாஸ்தவ பஞ்சாக்ஷராதி ஜபமாகு மென்றும் எந்த சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிற தென்று ஷை அபிப்பிராயங்கொண்டவர்கள்தான் சொல்ல வேண்டும். மேற்கண்ட விதமன்னியில் வேறு சில விதமாக வும் நியாஸாதி மந்திரங்களை மாற்றிச் சொல்லலாமென்று சில புராண வாக்கியங்களிருப்பதாகச் சொல்லுகிறார்கள். இப்படிப்பட்ட புராணவாக்கியங்கள் எம்மட்டில் பிரமாண மாக அங்கீகரிக்கப்படத் தகுந்தவை யென்ற விஷயம் பின்னால் சொல்லப்படும்.

6. துவிஜர்களுக்கு, அதாவது, பிராம்மண-க்ஷத்திரிய-வைசியர்களுக்கு, அந்தந்த வர்ண தாரதம்மியத்துடன், பிரம்மோபதேச ஸம்ஸ்காரத்தினாலேயே மூன்றாவது நேத் திரமுண்டாவதாகத் தெரியவருகிறது. இதினால்தான் அந்த ஸம்ஸ்காரத்திற்கே உபநயனகர்ம என்று பெயர் வந்தது. இந்த ஸம்ஸ்காரமில்லாத ஸ்திரீகளுக்கும் சூத்திரர்களுக்கும் மூன்றாவது நேத்திரமே கிடையாது. மேலும், இவர்களுக்கு வேதவிதிப்படி மந்திரத்துடன்கூடிய சௌளஸம்ஸ்கார மும் இல்லாதபடியால் சிகையுங் கிடையாது, கேசந்தா னுண்டு. சிகையுமில்லாமல், மூன்றாவது நேத்திரமுமில்லாமல் "ஶிகாயை வஷட், நேத்ரத்ரயாய வௌஷட்" என்று சொல்லி அங்கந்நியாஸஞ்செய்தால், அதற்கு என்ன பலனுண்டோ தெரியவில்லை.

7. சூத்திரர்களுக்கு வேதோக்தமான சௌளமாவது உபநயனமாவது இல்லாவிடினும், துவிஜஸ்திரீகளுக்குச் சூடா கர்மாவும், உபநயன ஸ்தானத்தில் விவாஹமும் ஏற்பட் டிருப்பதால், ஏன் துவிஜ ஸ்திரீகள் மந்திரோச்சாரணஞ் செய்யக்கூடாதென்று கேட்கலாம். ஸ்திரீகளுக்குத் தாந்தி

ரிகமாய் மந்திரமில்லாமலே பாவனையாக சூடாகர்மஞ்செய்யப்படுகிறதே யொழிய வேதோக்த-மந்திரவத்தான கர்மாவினுலுண்டாகக்கூடிய சிகை அவர்களுக்கு ஏற்படவில்லை. சூத்திரர்களுக்கும் தாந்திரிகமாய் மந்திர மன்னியில் லௌகிக சிகை வைக்கப்படுகிறது. இதெல்லாம் வைதிக ஸம்ஸ்காரத்தாலுண்டானதும், வைதிக கர்மாங்கபூதமுமான சிகையாக மாட்டாது, கேசமென்றுதான் சொல்லவேண்டும். த்விஜ ஸ்திரீகளுக்குள் விதவைகளுக்கோ கேசம் பூராவும் எடுபட்டுப் போவதால் சிகையில்லையென்பது நிச்சயமே. இப்படியிருந்தும் விதவைகளுக்குத்தான் மந்திரஜபம் முக்கியமென்றும் கக்ஷி சொல்லுகிருர்கள். அன்றியும், ஸன்யாஸிகளிலுள்ள பேதங்களில் சிகையை தரித்துவருகிற குடீசக ஸன்யாஸிக்கும் பஹூதகஸன்யாஸிக்கும்மாத்திரம் வேதத்தில் மந்திரஜபாதிகாரங்கொடுபட்டிருக்கிறது·முண்டன மேற்பட்டிருக்கிறவரும் கர்மமார்க்கத்தைவிட்டுப் பூராவும் வெளியேறினவருமான பரமஹம்ஸ ஸன்யாஸிக்கு கர்மாங்க பூதசிகை யில்லாததினுலும் மற்றும் பல காரணங்களினுலும் மந்திரஜபாதிகாரம் வேதத்தில் சொல்லப்படவில்லை. அவருக்கு தியானுதிகாரந்தான் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனுல், இக்காலத்தில் பரமஹம்ஸாசிரமத்திற்குத் தகுதியில்லாதவர்களும் பரமஹம்ஸர்களாகிவிட்டதாக பாவனை செய்வதால், இவர்களுடைய ஆந்தரயோக்கியதையை அனுஸரித்து இவர்களுக்கும் ஸம்பிரதாயரூபமாக மந்திரஜபங்கள் பெரியோர்களால் விதிக்கப்பட்டு நடந்தேறி வருகின்றன. யோக்கியதை யில்லாதவருக்கு பரமஹம்ஸாசிரமத்தை யேற்படுத்துவதும், பரமஹம்ஸரை மந்திரஜபஞ்செய்யும்படி விதிப்பதும் வேதவிருத்தந்தான். உண்மையான பரமஹம்ஸருக்கு மந்திர ஜபங் கிடையாது. ஆனுல், சிகையில்லாத பரமஹம்ஸர்

ஜபஞ் செய்வதற்கும், மந்திரஜபயோக்கியதைக்குள்ள ஸம்ஸ்காரமில்லாத ஸ்திரீகளும், மந்திரவத்தான எவ்வித ஸம்ஸ்காரமுமில்லாத சூத்திரர்களும் ஜபஞ் செய்வதற்கும் அதிக வித்தியாஸமுண்டு. முன்னாலேயே ஜபத்தில் அதிகாரத்தை அடைந்திருந்தவரே அப்பால் பரமஹம்ஸராக மேல் ஸ்தானத்திற்குப் போயிருப்பதால், ஜபஞ் செய்வதினால் அவருக்குப் பாபமாவது நரகப்பிராப்தியாவது ஏற்படாது. தவிரவும், ஸன்யாஸ காலத்தில் அவருடைய வெளிப்படையான சிகையும் யஜ்ஞோபவீதமும் விஸர்ஜனஞ்செய்யப்பட்டாலும், அவைகளுக்குப்பதிலாக அவர் ஜ்ஞான ரூபமான ஆந்தரசிகையையும் ஆந்தரயஜ்ஞோபவீதத்தையும் தரித்துவருவதாகத்தான் சாஸ்திரத்தின் கொள்கை. "ஜ்ஞாநஶிகா ஜ்ஞாநயஜ்ஞோபவீதிநः" என்று வேதமேசொல்லுகிறது. பரமஹம்ஸர், தான் இருக்க வேண்டிய நிலையை விட்டு, கீழ்ப்பட்ட வெளிப்படையான அநுஷ்டான-பூஜா-ஜபாதிகளைக் கைக்கொண்டால், அவருக்குவேதப்படி கிரமமாய்க்கிடைக்கவேண்டிய ஸர்வோத்தம பதவி கிடைக்காமல் கீழ்ப்பட்ட புண்ணிய லோகந்தான் கிடைக்கக்கூடியது. எப்படியும் அவருக்கு இப்போதிருக்கிற ஸ்திதியைவிட உயர்ந்த ஸ்திதிதான் கிடைக்கும். கீழான ஸ்திதிக்குப் போகமாட்டார். ஆகையால், பரமஹம்ஸர் விஷயத்தில் அதிகக் கெடுதலில்லை. மந்திர ஜபஞ் செய்கிற ஸ்திரீ-சூத்திரர்களோவெனில், வேத மந்திரத்தையே உச்சரிக்க அதிகாரம் அவர்களுக்கு எப்பொழுதும் கிடையாததினால், அதை ஜபஞ்செய்தால் கீழான நரகத்திற்கே போய் கஷ்டத்தை அனுபவிக்கும்படி நேரிடும்.

8. உபநயன ஸ்தானத்தில் ஸ்திரீகளுக்கு விவாஹம் விதிக்கப்பட்டிருப்பதாக சாஸ்திரமே குறிப்பிடுவதினால், விவாஹமாயிருந்தால் ஸ்திரீகளுக்கு உபநயனத்தின் பலன்

பூராவும் வந்து விட்டதென்று கக்ஷி சொல்லப்பட்டால், இதுவும் ஏற்றுக் கொள்ளப்படத்தக்கதல்ல. உபநயன ஸ்தானத்தில் விவாஹமேற்பட்டிருப்பது வாஸ்தவமானாலும், உபநயனத்தின் பலன் வேறு, விவாஹத்தின் பலன் வேறுதான். இரண்டும் ஒன்றாக மாட்டாது. ஒன்றாகுமானல், ஸ்திரீகள் வேதாத்தியயனஞ் செய்யக்கூடாதென்று ஏன் விதிக்கப்பட வேண்டும்? வைதிகர்களின் அக்னிஹோத்திரஸ்தானத்தில் லௌகிகர்களுக்கு ஔபாஸனம் மாத்திர முண்டென்பதாகச்சொன்னால், அக்னிஹோத்திரத்தின் பலனும் கேவல ஔபாஸனத்தின் பலனும் ஒன்றுதானென்று எப்படி சொல்லக்கூடாதோ, அப்படியே ஸ்திரீகளுக்கு உபநயன ஸ்தானத்தில் விவாஹம் விதிக்கப்பட்டிருந்த போதிலும், உபநயனத்தாலேற்படக்கூடிய மூன்றாவது நேத்திரங்கூட ஸ்திரீகளுக்குண்டென்று சொல்ல முடியாது. பிரம்மோபதேசத்தால் தான் மூன்றாவது நேத்திரத்தின் உத்பத்தி ஸாத்தியப்படும். இது இக்கலியுகத்தில் ஸ்திரீகளுக்குக் கிடையாது. யுகாந்தரங்களில் ஸ்திரீகளுக்கும் உபநயனமிருந்ததாகவும், இவர்களுக்கு விசேஷ தர்மவிதிகள் ஏற்பட்டிருந்ததாகவும் கிரந்தங்கள் மூலமாய் வெளியாகிறது. இந்த விஷயம் வேறு. இவ்வித விசேஷ ஸம்ஸ்காரங்களும், விதிகளும், இவைகளைக் குறிப்பிடுகிற வேத பாகங்களும் இக்கலியுகத்திற்குக் கிடையாது. அனந்தமாயிருக்கிற வேதங்கள் யாவற்றையும், அல்லது, பெரும்பாலுமாவது அத்தியயனஞ்செய்து அனுஸரித்து அனுஷ்டித்துவர இக்கலியில் ஜனங்களுக்கு சக்தியும் யோக்கியதையும் இராதென்பதை யுத்தேசித்து ஸாக்ஷாத் விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீ வேதவியாஸர் இக்காலத்திற்குரியதாய் லேசாயனுஷ்டிக்கக்கூடிய வேத பாகங்களை மாத்திரமெடுத்து விபாகப்படுத்தி நான்கு வேதங்களாக வெளிப்

படுத்தியிருக்கிறார். இந்த வேதவிதிகளின்படிக்கும் இவை களை யனுஸரித்து பிரசாரத்திலிருக்கிற ஸ்மிருதிகளின்படிக் கும் இக்காலத்தில் ஸ்திரீகளுக்கு உபநயன ஸம்ஸ்காரங் கிடையாது. இக்கலியுகத்திற்குள்ள வேதசாஸ்திர விதிகளின் பிரகாரம் வாஸ்தவ உபநயன முள்ள துவிஜபுருஷர்களுக்குத் தான் வேத மந்திரோச்சாரணத்தில் அதிகாரமுண்டு. வேதத் திலடங்கிய மந்திரங்களும் மஹாவாக்கியங்களும் வேதத்தின் ஸாரபூதமானதால், வேதாத்தியயனஞ் செய்ய யோக்கியதை யைக்கொடுக்கிற உபநயன ஸம்ஸ்காரம் வேத சாஸ்திரப்படி யாருக்குக்கிடையாதோ அவருக்கு ஷை மந்திரங்களையும் வாக்கியங்களையும் உச்சரிப்பதற்காவது ஜபஞ் செய்வதற் காவது அதிகாரமில்லையென்பதே உண்மையான மதஸித்தாந் தம். "ஸஹ௰ஃ-ᛞசாரிணீ" என்ற காரணத்தினால் துவிஜ ஸ்திரீக்கு ஔபாஸனம் முதலான கர்மாக்களில் சில காலங் களில் தண்டுலஹோமாதி காரியங்களைச் செய்ய அதிகார மிருந்தபோதிலும், அக்காரியங்கள் மந்திரமில்லாமல் சரீரத் தால் செய்யப்பட வேண்டிய காரியங்களே யன்றி, வாக்கி னால் அக்காரியங்களுக்குரிய மந்திரங்களை உச்சரித்துச் செய்யப்படவேண்டியவையல்ல.

9. ஸ்திரீ-சூத்திரர்களுக்கு வேத மந்திரோச்சாரணத் தில் அதிகாரமில்லாமலிருந்தாலும், மந்திரத்தின் பதங் களின், அதாவது, வார்த்தைகளின் வரிசைக்கிரமத்தை மாற்றிவிட்டால், அவர்கள் உச்சரித்து ஜபஞ் செய்யலா மென்று சிலர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள். "ஶிவாய நஃ" என்று மாற்றிவிட்டால், அவர்களுக்கு மந்திர ஜபஞ் செய்யும் தோஷம் வராதென்று சொல்லுகிறார்கள். இந்த ஜபம் எதற்காகச்செய்யப்பட வேண்டுமென்று கேட்கிறேன். வார்த்தைகளின் மாறுதலினால் வாக்கியத்தின் மந்திரத்தன் மையே நஷ்டமாய்ப் போய்விடுகிறது. மந்திரத்தன்மையில்

லாத வாக்கியத்திற்கு ஜபஞ் செய்யப்படக்கூடிய யோக்கியதையுங் கிடையாது. ஜபத்திற்கு யோக்கியமில்லாததை ஜபஞ் செய்யலாமென்று சொன்னால், அதின் பிரயோஜனமென்ன? மந்திர ஜபத்திற்குள்ள பலன் கிடைக்குமா? மேற்கண்ட அபிப்பிராயத்தையும் அனுஸரித்து கண்மூடித்தனமாய் ஆசரித்து வருகிறவர்களுமிருக்கிறார்கள். மேலும், "நமச் ஶிவாய" என்று ஸ்திரீ-சூத்திரர்கள் சொல்லக்கூடாதென்றும், சொன்னால் சாஸ்திரப்படி நரகலோகமே அவர்களுக்கு கதியாகுமென்றும் தெரிந்து கொண்டு, "ஶிவாய நமஃ" என்பதாகச் சொல்லட்டுமென்று ஏற்படுத்தினால், இதையே ஜபரூபமாய் அடுத்தடுத்து சீக்கிரத்தில் சொல்லிவந்தால் "நமஃ ஶிவாய" என்றே சொல்லுவதாக முடியும். எப்படி "மரா" "மரா" என்று ஜபித்து வந்த வேடனும் "ராம" "ராம" என்றே ஜபிக்கும்படி ஏற்பட்டு அதின் நன்மையை அடைந்தானோ, அப்படியே "ஶிவாய நமஃ+ ஶிவாய நமஃ" என்று ஜபிக்கும் ஸ்திரீ-சூத்திரர்களும் "நமஃ ஶிவாய" என்றே ஜபிக்கும்படி நேர்ந்து அதின் நரகபலனையடைவதாகவே முடிவாகும். விஸர்க்கத்தின் உச்சரிப்பு 'ஹ'காரத்தின் உச்சரிப்புப் போலிருப்பதால், மேற்கண்டபடி பஞ்சாக்ஷரமாகவே சேர்ந்து விடாதென்று சொன்னால், இதுவும் சரியன்று. உண்மையில் 'ஹ'காரத்தின் உச்சரிப்பு விஸர்க்கத்திற்குக் கிடையாது. விஸர்க்கத்தின் உச்சரிப்பு வேறுதான். அவஸரத்தில் அடுத்தடுத்துச் சொல்லும்போது பஞ்சாக்ஷரத்தையே உச்சரித்ததாகத்தான் ஏற்படும். ஆகையால், மந்திர வார்த்தைகளை முன்பின்னாக மாற்றி ஜபஞ் செய்தால் தோஷமில்லையென்று சொல்லுவதும்தப்பு.

10. இப்படியாவது, பிரணவத்தையும் நீக்கி, ந்யாஸ மந்திரங்களையும் மாற்றி, ஜபத்தின் "யஜுஸ்" லக்ஷணத்

தையும் போக்கடித்து, திக்பந்தன-திக்விமோசன மந்திரங் களையும் வேறுபடுத்தி, மூலமந்தரத்தின் பதங்களையே தாறுமாறாக மாற்றி அதற்கு மந்திரத்தன்மையே யில்லாமல் செய்து, ஸ்திரீ-சூத்திரர்கள் ஜபஞ் செய்யட்டு மென்று என்ன தர்ம ஸங்கல்பமோ தெரியவில்லை. இது பெரும் மோசமே. ஸ்திரீ-சூத்திரர்களுக்கு ஏதோ வாஸ்தவ மந்திரோபதேசஞ் செய்வதாய் பாவனையைக்காட்டி அவர் களை நம்பும்படி செய்வித்து, மந்திரமில்லாததைக் கொடுத்து மோசஞ்செய்வதைத்தவிர வேறல்ல. உபதேசமில்லாமலே "ஶிவாய நமஃ" என்று அவர்கள் சொல்லலாம். ஜபநிபந் தனைகளும் அங்கந்யாஸம் கரந்யாஸம் முதலான தப்பு ஆடம்பரங்களு மில்லாமலே "ஶிவாய நமஃ" என்று சொல்லி ஈசுவரனை வணங்குவதாக மனவில் பாவனையோ டிருக்கலாம். ஆனால், முன் பாராவில் கண்ட காரணத்தினால், இதையே அவர்கள் அடுத்தடுத்துச் சொல்லி ஜபித்து வரு வது மாத்திரம் கூடாது.

11. காலரீதியை அனுஸரித்து எங்கும் சிரத்தையும் பக்தியும் குறைவுபட்டிருப்பதினால் ஸ்திரீ-சூத்திரர்களுக்கு வெறும் நாமோச்சாரணத்தில் திருப்தியாவது கௌரவபுத்தி யாவது பெரும்பாலும் இல்லாமலிருப்பதாலும், அவர் களுக்கு மந்திரமென்று சொன்னால்தான் இயற்கையாகவே பய-பக்தி-விசுவாஸம் ஏற்படக்கூடியதாய்க் காணப்படுவதி னாலும், அவர்களுக்கு ஏதோ மந்திரோபதேசஞ்செய்வதாய் காண்பிவித்து, அவர்களுடைய மனதுகளைக் கொடிய லோக வியவஹாரங்களிலிருந்து திருப்பி தினந்தோறும் இரண்டு நாழிகையாவது ஆந்தரமான ஈசுவரத்தியானத்தில் ஈடுபடும் படி செய்வித்தால்தான் அவர்களுக்கும் நல்லது, லோகத் திற்கும் க்ஷேமமென்றும், அதிலும் ஸ்திரீகளின் விஷயத்தில்

அவர்களை ஏகாந்தமாய் உட்காரச்செய்து, ருத்திராக்ஷமாலையையாவது துளசிமணிமாலையையாவது உருட்டிக்கொண்டிருக்கும்படி செய்வித்தால்தான் மனதுக்கு நாளடைவில் சாந்தியுண்டாகி, குடும்பங்களில் ஸ்திரீகளாலேற்படக்கூடிய பலவித வம்புகளும் கலகங்களும் குறைவுபடுமென்றும் அபிப்பிராயப்பட்டு மந்திரமில்லாத வாக்கியங்களானாலும் ஸ்திரீ-சூத்திரர்கள் ஜபிக்கட்டுமென்று சில பெரியோர்கள் நெடுநாளாய்ச் சொல்லி நடத்திவந்திருக்கிறார்கள். வாஸ்தவம். கால-இயற்கைக்குப்போக்கு விடுவதும் நல்ல காரியந்தான். ஆனால், இந்தக் காரியத்தினால் புதிதாய் அதிகமான அனர்த்தங்கள் விளையாமலிருக்குமானால்தான் இது நல்ல காரியமாகும். உண்மையிலோ, பெரியோர்கள் இப்படிப் போக்கு விட்டு அனதிகாரிகளான ஸ்திரீ-சூத்திரர்களுக்கு ஜபத்தையேற்படுத்தியதினால் மேன்மேலும், நாளுக்குநாள் அதிகமாகவே, லோகத்தில் அனர்த்தங்கள் விருத்தியடைந்து வந்திருக்கின்றன. எப்பொழுது பெரியோர்களே இவர்களுக்கு மந்திரோபதேசஞ்செய்ததாய்க் காட்டிக்கொண்டார்களோ, அப்பொழுதே இவர்களுக்கு மந்திரோச்சாரண-ஜபங்களில் அதிகாரமுண்டென்று வியக்தமாய் ஒப்புக்கொண்டதாகவே ஆகிவிட்டபடியால், பின்னால் இவர்கள் வேறு (அதாவது, வாஸ்தவமான) மந்திரங்களைத் தாங்கள் கைக்கொள்வதிலும் தோஷமில்லையென்பதாகவே இவர்களுக்கு மனோபாவமுண்டாகி, வேதத்தில் சொல்லிய மஹாமந்திரங்களையே தாங்களே கண்டவர்களிடமிருந்து ஸம்பாதித்துக்கொண்டு ஜபஞ்செய்து தங்களுடைய பின்னுள்ள நரகதண்டனையை உறுதிப்படுத்தி வந்திருக்கிறார்கள். இப்படி இவர்களுக்கு மந்திரங்களை ஜபஞ்செய்ய யோக்கியதையில்லையென்று சொல்லுவதற்குக்கூட தங்கள் நடத்தை

யால் மேற்கண்ட பெரியோர்கள் தங்களுக்கு வாயில்லாமல் தடை செய்து கொண்டு விட்டார்கள்.

12. மேலும், இக்காலத்தில் சாஸ்திரப்படி வேதமந்திர ஜபஞ்செய்யக்கூடிய பிராம்மண-க்ஷத்திரிய-வைசிய ஜாதியார்களுக்குள், மற்றவர்களுக்கு உபதேசஞ்செய்ய அதிகாரமில்லாத க்ஷத்திரிய-வைசியர்கள், தங்கள் ஜாதிதர்மங்களிலிருந்து நழுவி, பெரும்பாலும் சூத்திரர்களைப் போலாகி விட்டபடியாலும், ஸ்வதர்மத்தை இன்னும் கொஞ்சம் பரிபாலித்து வந்திருக்கிற பிராம்மணனுக்கு மந்திரோபதேசஞ்செய்ய அதிகாரமிருந்து கொண்டிருப்பதாலும், முன் சொன்ன பிரகாரம் மந்திரஜபஞ்செய்து வருகிற சூத்திரர்களும் தங்களுக்கு பிராம்மணனுக் கொப்பாக ஜபத்தில் அதிகாரமிருப்பதாக எண்ணிக்கொண்டதுபோல், மற்றவர்களுக்குத் உபதேசிப்பதற்கும் தங்களுக்கு அதிகார முண்டென்ற தப்பான அபிப்பிராயங்கொண்டு, மற்றுமுள்ள சூத்திரர்களுக்குத் தாங்களே மந்திரங்களை உபதேசிக்க ஆரம்பித்தார்கள். அவர்களுக்குள்ளாகவே குருக்களென்பதாகவும் தேசிகரென்பதாகவும் பல பெயர்களுடன் குரு ஸ்தானத்தை வஹிப்பவர்களும் உண்டானார்கள். இப்படி மந்திரங்களைத் தாங்களே ஜபித்து வரவும், மற்றவர்களுக்கு உபதேசஞ்செய்யவும் ஸாத்தியமென்று எண்ணிவிட்டபடியால், வேத வாக்கியங்களையும் மந்திரங்களையுங்கண்டே தமிழ் முதலான தேசிய பாஷைகளில் புஸ்தகங்களையு மெழுதத் தலைப்பட்டார்கள். வேத வாக்கியங்களைக்கொண்டே விசாரஞ்செய்கிற சூத்திரர் சண்டாள ஜன்மத்தையடைவாரென்று சாஸ்திரம் சொல்லுகிறது. "வேதாக்ஷரவிசாரேண ஶூத்ரஶ்சாண்டாலதாம் வ்ரஜேத்". சூத்திரர்களின் மேற்கண்ட சாஸ்திர-விருத்தமான செய்கைகளெல்லாவற்றுக்கும் திரவிய-பேராசை

பிடித்த பிராம்மணுதமனே ஒத்தாசையாயிருந்திருக்கிறுன். இவ்விதமாக, சூத்திரர்களுக்குள்ளாகவே குருக்களும், சிஷ்யர்களும், புஸ்தகங்களுமேற்பட்ட பின்பு பிராம்மணனுடைய ஒத்தாசை காலக்கிரமத்தில் அவர்களுக்குத் தேவையில்லை யென்ற எண்ணமும் வந்துவிட்டது. தவிரவும், ஜகத்குரு முதலானவர்களின் மடங்களைப்பார்த்து விட்டு, குருஸ்தானத்திலிருந்து மந்திரோபதேசஞ்செய்பவர் மடாதிபதியாகவும் ஸன்யாஸியாகவுமிருப்பதே மேன்மை யென்றெண்ணி, சூத்திரர்களும் தாங்களே சொந்தமாய் மந்திரோபதேச பீடங்களென்றே பெயரிட்டு மடங்களை ஸ்தாபித்துக்கொண்டும், பிராம்மணனுக்கேற்பட்டிருக்கிற ஸன்யாஸாசிரமத்திற்குரிய காஷாயவஸ்திரத்தைத் தரித்துக்கொண்டும், ஹம்ஸஸன்யாஸியைப்போல் ஜடையை வளர்த்துக்கொண்டும், அல்லது பரமஹம்ஸ ஸன்யாஸியைப்போல் தலையை மொட்டை யடித்துக்கொண்டும், தாங்களே ஸன்யாஸி-வேஷம் பூண்டு, கலியின் ஏவுதலினுல் மேலுக்கு மேலாக சாஸ்திர நிபந்தனைகளை மீறி லோகத்தில் தர்மங்களைக் கெடுத்து நாசஞ்செய்யவும், குருடருக்கு வழி காட்டிய குருடர் போல் தாங்களும் தங்களையண்டினவர்களும் அதோகதியை யடையவும் மார்க்கத்தைத் தேடிக்கொண்டுவிட்டார்கள். இக்காலத்தில் சூத்திர மடங்களிலும் வெளியிலும் காஷாயவஸ்திரந்தரித்து பஹிரங்கமாய் ஸன்யாஸியென்றேசொல்லிக்கொண்டுவரும் பண்டாரங்களையும், சாமிகளையும், சாதுக்களையும் நூற்றுக்கணக்காய்ப் பார்க்கலாம். சாஸ்திரத்திலோ, பிராம்மணனைத் தவிர மற்ற ஜாதியார்களுக்கு ஸன்யாஸாசிரமம் கிடையாதென்று வியக்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸன்யாஸாசிரமம் கூடாதென்றுல் வைராக்கியமாவது நிவிருத்தி மார்க்கத்தில் இச்சையாவது பிரவேசமாவது கூடாதென்று தாத்பரியமல்ல.

வைராக்கியத்தை அப்பியஸிக்கவேண்டியது எல்லோருடைய
வும் கடமைதான். எல்லோருக்கும் நிவிருத்தியிலேயே புத்தி
யிருக்க வேண்டியதும் அவசியந்தான். ஆனால், அவரவர்
களின் ஜாதிக்குத் தக்கபடி நிவிருத்தி மார்க்கம் தனித்தனியே
குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஒருவருக்கு விதிக்கப்பட்டிருக்
கிற மார்க்கத்தில் மற்றவர் பிரவேசிப்பது கூடாது. லிங்கத்
துடன், அதாவது, காஷாய வஸ்திரம் முதலான அடையாளங்
களுடன் ஏற்பட்டிருக்கிற ஸன்யாஸமார்க்கம் பிராம்மண
னுக்கு மாத்திரம் வேத சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்
கிறது, மற்றவர்களுக்குக் கிடையாது.

"മുഖജാനാമയം ധർമ്മോ
വൈഷ്ണവം ലിംഗധാരണം ।
ബാഹുജാതോരുജാതാനാം
നായം ധർമ്മോ വിധീയതേ ॥"

க்ஷத்திரிய-வைசிய-சூத்திரர்களும் ஸ்திரீகளும் வைராக்கியத்
தை ஸம்பூர்ணமாய்க் கைக்கொண்டு சாஸ்திரத்தில் குறிப்
பிட்டபடி லிங்கமன்னியில் வீரமார்க்கத்தில் பிரவேசித்து
சரீரத்தைத் தியாகத்தைச் செய்யலாம். இப்படியே திரௌ
பதியுடன் பாண்டவர்களும், திருதராஷ்டிரரும், விதுரரும்,
காந்தாரீ, குந்தீ முதலானவர்களும் கடைசியில் மஹாப்பிரஸ்
தானரூபமாய் வீரமார்க்கப்பிரவேசஞ் செய்திருக்கிறார்கள்.
இந்த விஷயம் வேறு. ஸன்யாஸ மென்ற நான்காவது ஆசிர
மம் சூத்திராதிகளுக்குக் கிடையாதென்பதை மாத்திரமிங்கு
தெரிந்துகொண்டால் போதும். க்ஷத்திரியனாகிய அர்ச்சு
னன் பாரதயுத்த ஆரம்பத்தில் தான் ஸன்யாஸியாய் போய்
பிக்ஷையெடுப்பதே நல்லதென்று சொன்னதற்கு ஸ்ரீ
கிருஷ்ணன் கீதையில் இப்படிச் செய்வது க்ஷத்திரியனுக்கு
தர்மமல்ல வென்றும், மற்றவருடைய தர்மத்தைக் கைக்

கொள்ளக்கூடாதென்றும் பலவிதமாய்ச் சொல்லி அர்ச்சுனனுக்கு உபதேசித்திருக்கிறார். க்ஷத்திரியனுக்கேயில்லாத ஸன்யாஸமும் பிக்ஷையெடுத்தலென்பதும் இக்காலத்தில் சூத்திரருக்கு எப்படி வந்ததென்று கலிபுருஷன்தான் சொல்லவேண்டும். வேதசாஸ்திரப்படி சூத்திரருக்கு கிருஹஸ்தாசிரமம் ஒன்று தானுண்டு. "ஶுஶ்ரூஷா வ்ருத்திரேவாஸ்ய ஸைவ நாஶ்ரமோ நரேஷு ப்ரோக்த:". வைசியருக்கு பிரம்மசரியம், கார்ஹஸ்தியம் இவ்விரண்டு ஆசிரமங்களுமுண்டு. க்ஷத்திரியருக்கு பிரம்மசரியம், கார்ஹஸ்தியம், வானப்பிரஸ்தம் இம்மூன்றுமுண்டு. பிராம்மணனுக்கு மாத்திரம் ஸன்யாஸமுள்பட நான்கு ஆசிரமங்களுமுண்டு.

> "ப்ரஹ்மசாரீ க்ருஹஸ்தஶ்ச
> ஆஶ்ரமௌ த்வௌ விஶ: ஸ்ம்ருதௌ |
> க்ஷத்ரியஸ்ய த்ரய: ப்ரோக்தா
> ப்ராஹ்மணஸ்ய சதுர்விதா: ||"

நான்காவதான ஸன்யாஸாசிரமத்திற்குத் தகுதியில்லாத ஜாதியைச் சேர்ந்தவன் ஸன்யாஸிக்குள்ள லிங்கத்தை தரித்து பிக்ஷையெடுத்தால் அவன் கொடும்பாபியென்று சாஸ்திரம் முறையிடுகிறது. அவன் உண்மையான ஸன்யாஸிகளின் பாபங்களை அபகரித்துக்கொண்டு நரகத்திற்குச் சென்று கஷ்டப்பட்டுவிட்டு பின்னால் மிருகம் முதலிய கீழான ஜன்மத்தை யடைவானென்று தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

> "அலிங்கீ லிங்கிவேஷேண
> யோ வ்ருத்திமுபஜீவதி |
> ஸ லிங்கிநாம் ஹரத்யேந:
> திர்யக்யோநௌ ச ஜாயதே ||"

காஷாயவஸ்திரத்தை பிரம்மணன் ஒருவன்தான் தரிக்கலா மென்றும், மற்றவர்களுக்கு தரிக்க அதிகாரமில்லை யென்றும் சாஸ்திரம் குறிப்பிட்டுச் சொல்லுகிறது.

"காஷாயம் ப்ராஹ்மணஸ்யைகம்
நாந்யவர்ணஸ்ய கஸ்யசித்।"

சூத்திரர்களில் மிக்க சிரத்தையுடனும் தீவ்ரமான பக்தியுடனும் கூடிய அனேகர்கள் சாஸ்திர விதிகளையறிந்து கொள்ளாமலும், தாங்கள் எப்படியாவது இனி பிறப்பிறப்புத்துன்பக் கடலில் விழுந்து ஆழ்ந்து கிடக்காமல் கரையேறவேண்டு மென்றெண்ணியும், மேற்கண்டபடி மந்திரோபதேசங்களைப் பெற்றுக்கொண்டும், துறவி வேஷத்திற்கு முதற்படியாக சிலர்கள் தலையை மொட்டையடித்துக்கொண்டு வெள்ளை வேஷ்டியை தரித்து "ஐயா" என்ற பெயரை வஹித்துக் கொண்டும், சிலர்கள் கடைப்படியாக காஷாயவேஷ்டியையே தரித்து "சாமி" யென்றும், வடதேசத்தில் " ஸாது" வென்றும், பெயர்களை வஹித்துக் கொண்டும் பிக்ஷையெடுத் துக்காலக்ஷேபஞ்செய்து வருகிறார்கள். இவர்களைப்பார்த்து மற்றுஞ் சிலர்கள் மேற்கண்ட நல்ல எண்ணத்துடனேயே தாங்களும் தங்களுடைய குடும்பங்களைவிட்டு வெளியேறி துறவிவேஷம் பூண்டுகொள்ளவேண்டுமென்ற உத்தேசங் கொண்டவர்களாகவுமிருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்க ளெல்லோருக்கும் சாஸ்திரவிதிகளை வெளிப்படுத்த வேண்டியது அவசியம். கெடுதலென்று தெரிந்திருந்தால் இவர்கள் மந்திர ஜபங்களைச் செய்வதிலாவது, துறவிவேஷத்தைத் தரிப் பதிலாவது பிரவேசித்திருக்கமாட்டார்கள், இனி பிரவேசிக்க வும் மாட்டார்கள். ஏற்கனவே பிரவேசித்திருந்தாலும் மறு படியும் சரியான கிருஹஸ்தமார்க்கத்தில் திரும்பி வந்து சேர

வும் கூடும். இவ்விருவித ஜனங்களின் சாசுவத நன்மையைக் கருதி இங்கு கொஞ்சம் வெளியிடப்பட்டது. இவர்கள் ஜடையை வளர்த்துக் கொண்டதினாலும், மொட்டையடித்துக் கொண்டதினாலும், காஷாயவஸ்திரத்தை தரித்துக் கொண்டதினாலும், மந்திரங்களை ஜபிப்பதினாலும் உபதேசிப்பதினாலும் ஸன்யாஸிகளாகிவிடமாட்டார்களென்றும், கொடும்பாபிகளேயாவர்களென்றும், அவர்களுக்குள்ள கிருஹஸ்தாசிரமம் அவர்கள் ஒதுக்கி உதறித்தள்ளினாலும் அவர்களை விட்டுப் போகாதென்றும், வாஸ்தவத்தில் கிருஹஸ்தர்களாயிருக்கிற இவர்களுக்கு அன்ன பிக்ஷையைப்போட்டால் பிக்ஷைபோட்டவர்களுக்கும் பிக்ஷையை வாங்கி உண்பவருக்கும் பாபந்தான் பலனென்று சாஸ்திரஞ் சொல்லுகிறதென்றும், இவர்கள் தங்களுக்குத்தகுதியில்லாத ஸன்யாஸி வேஷத்தைக் கலைத்துவிட்டு தங்கள் தங்கள் கிருஹத்திலேயேயிருந்துகொண்டு வைராக்கியத்துடனும் ஞானத்துடனுங் கூடியிருந்து தங்களுடைய ஸ்வதர்மத்தை நடத்திவருவதினால் எவ்வகையிலும் குறைவில்லை யென்றும், இதுவே மேன்மை இதுவே இவர்களுக்கு மோக்ஷஸாதனமென்றும் இவர்கள் நன்றாய்த்தெரிந்து கொள்ளவேண்டியது மிக்க அவசியம்.

13. முன் சொன்ன விபரப்படியெல்லாம் இந்த ஆர்யதர்ம நாட்டில் தர்மவியவஸ்தை கெடும்படியான காரணங்களில் முன் 11-வது பாராவிற் சொல்லியபடி மந்திரோபதேசஞ் செய்வதாய் பாவனை செய்து கால இயற்கைக்குப் போக்கு விட ஆரம்பித்த பெரியோர்களே ஒரு முக்கிய காரணமென்று சொல்லவேண்டும். இவர்களே இவ்வளவு தூரம் அதர்மங்களும் அனர்த்தங்களும் காட்டுத்தீபோல் ஓங்கிவளரும்படி செய்துவிட்டார்கள். கலிப்பிசாசத்திற்கு கொஞ்சம் போக்கு விட்டு இடங்கொடுத்ததில், அது மேன்மேலும் தைரியங்

கொண்டு அட்டஹாஸஞ்செய்து தலைசுற்றி ஆடத் தொடங்கிவிட்டது. இனி அடக்கினாலும் அடங்காதென்றே தோன்றுகிறது. ஸாக்ஷாத் பகவானே அவதாரமெடுத்து வந்து தர்ம விரோதிகளை துவம்ஸஞ்செய்து அடக்கினால்தான் அடங்கலாம். பகவானே சொல்லியிருக்கிறபடி (ஸம்பவாமி யுகே யுகே) அவர் கிலுப்தமாக ஒவ்வொரு சதுர்யுகமென்ற மஹாயுகத்தின் கடைசியிலும், அதாவது ஒவ்வொரு கலி முடிவிலும், மற்றும் மிக்க அவசியமான காலங்களிலும் (யதா யதா ஹி தர்மஸ்ய) அவதாரமெடுத்து அதர்ம நாசத்தையும் தர்ம ரக்ஷணையையும் செய்தே வருகிறார். இது நிற்க. திரேதாயுகத்தில் ஸ்ரீராம ராஜ்யத்தில் ஒரு சூத்திரன் தன் ஜாதிக்குத் தகுதியில்லாத வானப்பிரஸ்தாசிரமத்தைக்கைக்கொண்டு யோகத்தையும் தபஸ்ஸையும் செய்து வந்ததினால் அந்த ராஜ்யத்தில் ஜனங்களுக்கு அகாலமரண முண்டாகத்தொடங்கியதால், கருணாமூர்த்தியான ஸ்ரீ ராமர் அந்த சூத்திரனைக்கண்டு பிடித்து அவனை ஸம்ஹாரஞ் செய்த பின்பு முன்னால் அகால மரணமடைந்தவனும் பிழைத்து மறுபடியும் ராஜ்யத்தில் எல்லோரும் சுகித்திருந்தார்களென்று இதிஹாஸம் மூலமாய் வெளியாகிறது. இக்கலிகாலத்திலோ ஸ்ரீ ராமருக்கொப்பான சக்கிரவர்த்தியுங்கிடையாதென்பதுடன் மேற்கண்ட சூத்திரனைப்போல் நூற்றுக் கணக்காகவும் ஆயிரக் கணக்காகவும் விதிவரம்பு மீறி அக்கிரமங்களைச் செய்யத் தொடங்கிவிட்டார்கள். வேத மந்திரங்களை ஜபிக்கிறார்கள். மற்றவர்களுக்கும் மந்திரோபதேசஞ் செய்கிறார்கள். ஸன்யாஸி வேஷத்தையும் கைக்கொண்டிருக்கிறார்கள். மடங்களையும் ஸ்தாபித்துக்கொண்டார்கள். வேத வாக்கியங்களையும் உச்சரிக்கிறார்கள். யோகாப்பியாஸத்தையும் செய்ய ஆரம்

பித்திருக்கிறார்கள். தர்மவிஷயமாயும், யோகவிஷயமாயும், வேதாந்த தத்துவவிஷயமாயும் தங்களுக்குத் தோன்றியவாறு தாராத்தங்களைச் செய்துகொண்டு புஸ்தகங்களையுமெழுதி அச்சுப்போட்டுப் பிரசாரஞ் செய்யத் தலைப்பட்டுவிட்டார்கள். இவ்வளவும் சேர்ந்து இந்நாட்டில் நடந்துவரும்போது அகாலமரணங்களும், புதிது புதிதான கொடிய மாரணாந்த வியாதிகளும், சரியானகாலங்களில் மழையில்லாமலிருப்பதும், அகாலங்களில் மழை பொழிந்து நாசப்படுத்துவதும், எங்கும் எப்போதும் பஞ்சகாலமாகவே யிருப்பதும், ஜனங்களுக்குப் பொதுவாகவே வீடுகளிலும் வெளியிலும் சுகமேயில்லாமலிருப்பதும், ஜனங்களுக்குள்ளும் ஜாதிகளுக்குள்ளும் பரஸ்பரம் நம்பிக்கைக் குறைவும், த்வேஷமும், சச்சரவுகளுமிருப்பதும், ராஜாக்களுக்கும் பிரஜைகளுக்கும் பரஸ்பரம் நம்பிக்கைக்குறைவு ஏற்படுவதும், இவை போன்ற மற்றுமுள்ள கெடுதல்களும் ஏராளமாக இக்காலத்தில் காணப்படுகின்றன வென்பது ஆச்சரியப்படத்தக்கதல்ல. இவ்வளவு காணப்பட்டும் ஜனங்களுக்கு புத்திவாராமலிருப்பதும், தாங்கள் சுகித்திருப்பதாகவே பிரமம் கொண்டிருப்பதுந்தான் ஆச்சரியப்படத்தகுந்தது. இதுவும் கலிமகிமைதான்.

14. ஸம்ஸாரக்கடலில் முழுகி கஷ்டப்படாமல் அதை விட்டுக் கரையேறுவதற்கு உபாயமாக ஈசுவரனால் ஏற்படுத்தப்பட்டிருக்கிற "மதம்" என்ற ஸாதனத்தையே கலிபுருஷன் தன்னுடைய விபரீத காரியத்திற்கு உபயோகப்படுத்திக்கொள்கிறான். சாஸ்திரத்தில் குறிப்பிட்ட பிரகாரம் தங்கள் தங்களுக்குரிய ஜாதிவியவஸ்தைப்படிக்கும் ஆசிரமதர்மப்படிக்கும் வரம்பு தவறாமலிருந்துகொண்டு அவரவர்களின் ஸாதனங்களைக்கைக்கொண்டு எல்லோரும்

கரையேற வழியிருக்க, சூத்திராதிகளை மற்றவர்களின் மத ஸாதனங்களைக் கைக்கொள்ளச்செய்து அவர்களை துர்க் கதியில் வீழ்த்தி வருகிற கலியின் சக்தி அபரிமிதந்தான், மெச்சத்தகுந்ததுதான். அறியாக் குழந்தைகளை ஹிம்ஸை செய்து கொன்றுவிடவேண்டுமென்று எண்ணுகிற பாபி யானவன் எப்படி பிளவை முதலான கெட்டநோய்களைக் கிறி ஆற்றிப் போக்கடிப்பதற்காக அத்தொழிலில் அதிகாரம் பெற்ற விருணசிகித்ஸகனிடமிருக்க வேண்டிய கூர்மை யான சேதனகத்திகளை யெடுத்துக் குழந்தைகளிடங் கொடுத்து அக்குழந்தைகள் அக்கத்திகளால் தங்கள் நாக்கு களை அறுத்துக்கொண்டும் கழுத்துகளை வெட்டிக்கொண்டும் மரிக்கும்படி செய்விக்கக்கூடுமோ, அப்படியே கலிபுருஷன் சாஸ்திரப்பிரகாரம் அதிகாரிகளின் வசத்திலிருந்து அவர்களுக்கும் அவர்கள் மூலமாய் லோகத்திற்கும் சிரே யஸ்ஸையுண்டாக்கக் கூடிய மந்திரங்களையும் ஸன்யாஸ தர்மங்களையும் அனதிகாரிகளும் தர்ம-ஜ்ஞானசிசுக்களு மான சூத்திராதிகளிடங்கொடுத்து அவைகளாலேயே அவர் கள் கெட்டு அதோகதியை அடையும்படி வெகு லேசாய்ச் செய்து வருகின்றான். இதெல்லாம் காலக்கொடுமையே.

15. மேலே சொல்லியபடி மந்திரஜபவிஷயமாக சாஸ் திர விரோதமாய்ச் செய்யப்படுகிற ஆசாரணைகளுக்கு ஆதார மாக அவ்வாசாரணைகளை அனுமோதிக்கிறவர்கள் சில புராண வசனங்களைக் குறிப்பிடுகிறார்கள். புராணம் பிரமாணமல்ல வென்று நான் சொல்லவில்லை. ஆனால், சுருதி-ஸ்மிருதிக ளுக்கு விரோதமில்லாத பாகங்களைத்தான் பிரமாணமாக ஒப் புக்கொள்ளவேண்டும். அனுதியான சுருதி ஒன்றுக்குத்தான் ஸ்வதந்திரமான பிராமாண்யமுண்டு. ஸ்மிருதிகளுக்கும் சுருதியை அனுஸரித்திருக்கிறவரையில்தான் பிராமாண்யம்

ஒப்புக்கொள்ளப்படுகிறது. சுருதிக்கு விரோதமான ஸ்மிருதி வாக்கியங்கூட தள்ளத்தகுந்ததுதான். இப்படியே, சுருதி-ஸ்மிருதிகளுக்கு விருத்தமாய் புராணங்களில் கண்டிருப்பவைகளெல்லாம் தள்ளத்தகுந்தவைகளே. சுருதி ஒன்றுதான் அமானுஷமான, அதாவது, மனுஷ்யனால் ஏற்படுத்தப்படாத சாசுவதமான பிரமாணம். சுருதியில் ஒன்றையுஞ் சேர்ப்பதற்காவது, கழிப்பதற்காவது, மாற்றுவதற்காவது இடமில்லை. சாகைகள், ஒவ்வொரு சாகையிலுமுள்ள பிரச்னங்கள், பிரச்னங்களிலுள்ள மந்திரங்கள், மந்திரங்களிலுள்ள பதங்கள், பதங்களிலுள்ள வர்ணங்கள், அதாவது எழுத்துக்கள், இவைகளின் மாத்திரைகள், இவையெல்லாம் ஆதிகாலம் முதல் கணக்கிடப்பட்டு கிலுப்தப்பட்டிருக்கின்றன. ஒரு அக்ஷரத்தையாவது சேர்க்க, எடுக்க, மாற்ற முடியாது. ஆகையால், சுருதியின் பிராமாண்யம் எக்காலத்திலும் மாறுமல் ஸ்திரமாயுள்ள பிராமாண்யம். புராணங்களோ அப்படியல்ல. யார் யார் எந்த எந்தக்காலங்களில் ஆர்யமதமென்றே சொல்லிக்கொண்டு இப்பரதகண்டத்தில் புதிதான மதஸ்தாபனங்களைச் செய்ய யத்தனித்திருக்கிறார்களோ, அவரவர்களுடைய சிஷ்யபரம்பரையில் எல்லோரும் தங்களுக்குப் புராணங்களில் ஆதாரமிருப்பதாகவே சொல்லிவந்திருக்கிறார்கள். அவர்கள் சொன்னகாலத்திற்கப்பால் அவர்கள் சொல்லியபடி புராணவாக்கியங்களும் வெளியிடப்பட்டிருக்கின்றன. பௌத்தர்கள், ஜைனர்கள் முதலானவர்கள் வேதசாஸ்திரமதத்தை விட்டுப் பூராவும் வெளியேறினவர்கள். வேதசாஸ்திரப்படிக்குள்ள மதமென்றே சொல்லிக்கொண்டு இக்கலியுகத்தில் முதலில் சுருதிவிலக்காக ஸித்தாந்தத்தை யேற்படுத்திக் கொண்டவர்கள் சைவஸித்தாந்திகள். இவர்களால்தான் பஞ்சாக்ஷரத்தை யாரும் ஜபிக்கலா

மென்று ஆதியில் சொல்லப்பட்டது. இவர்கள் சொல்லிய படி ஸ்காந்த புராணத்தில் வாக்கியங்களும் கதைகளுமிருப் பதாகக் காட்டுகிறார்கள். ஸ்காந்த புராணமோ மிகப்பெரிய கிரந்தம். பூராஸ்காந்தத்தையுஞ் சேர்த்துப் புஸ்தகமாகப் பார்த்தவர்கள் அபூர்வம். பூராவும் இன்னும் அச்சுப் போடப்படவில்லை. அச்சுக்குவராத காலத்திலேயே மதவிய வஹாரமேற்பட்டிருந்தபடியால் எதை யெழுதி ஸ்காந்த மென்று சொன்னாலும் கேள்வியிருந்திருப்பதில்லை. நான் ஸ்காந்தபுராணமே பிரமாணமல்ல வென்று சொல்லவில்லை. அதிலும் பிரகிருதவிஷயத்தைப்பற்றி சில பாகங்கள் சுருதி-ஸ்மிருதிகளை யனுஸரித்தே யிருக்கின்றன. அவைகளைப்பிர மாணமாக ஒப்புக்கொள்கிறேன். அதில் பிரணவகல்பத்தில டங்கிய பிரணவகீதையில் மந்திரங்களை ஜபிக்கிற ஸ்திரீகள் நரகத்திற்குப் போவதாய் ஸ்பஷ்டமாய்ச் சொல்லப்பட்டி ருக்கிறது.

“உத்ஜாபஸ்ய நார்யஸ்ய ஸர்வே நிரயகாமிந:”.

இந்த வாக்கியம் வேத-சாஸ்திரத்தை யனுஸரித்திருக்கிறது. இது சரியான பிரமாணந்தான். இதற்கு விரோதமாய் பிரம்மோத்தரகண்டம் முதலான இடங்களில் ஸ்திரீ-சூத்திர-ஸங்கரஜாதியார்களுக்குக்கூட பஞ்சாக்ஷர மந்திரத்தில் அதிகாரமுண்டென்று சொல்லிய வாங்கியங்களையும் கதை களையும் கக்ஷியின் பேரில் ஏற்பட்டதாகத்தள்ளி விடவேண் டியதுதான் நியாயம். சைவஸித்தாந்தப்பிரகடன காலத்தில் ஷை வஸித்தாந்திகளுக்கும் வேதத்தில் கொஞ்சம் பயம் பாக்கி யிருந்ததால் பிரணவத்தையாவது ஸ்திரீ-சூத்திராதிகள் உச்சரிக்காமல் விலக்கவேண்டுமென்று வாக்கியங்களில் குறிப் பிட்டார்கள். ராமானுஜரின் காலத்தில் அந்த பயமும்

தெளிந்துவிட்டது. வர்ணாசிரமவிதிகளை மீறி ராமானுஜர் தன்னுடைய பிரம்மணகுருவை விட்டு வெளியேறி, வேத சாஸ்திரப்படி மற்ற யாருக்கும் உபதேசஞ் செய்யவாவது சொல்லவாவது யோக்கியதையில்லாத ஒரு சூத்திரரை குருவாக அடைந்து வேதாந்தாப்பியாஸஞ் செய்ததாக ஸ்ரீ வைஷ்ணவர்களே ஒப்புக்கொள்கிறார்கள். சூத்திரரால் செய்து கொடுக்கப்பட்ட 1000த்துடன் கூடிய 4000 தமிழ் திருவாய்மொழிப்பிரபந்தத்தையும் ஸ்ரீவைஷ்ணவப் பிராமணர்கள் பக்தி-சிரத்தையுடனும் நியமத்துடனும் வேதம்போல் எண்ணி பாராயணஞ்செய்துவருகிற விஷயம் பிரஸித்தமே. சூத்திர வாக்கியத்திற்கு மதிப்பு எவ்வளவென்று வியக்தமாய் சாஸ்திரத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது.

"𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌶𑍂𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌤𑌸𑍍𑌯 𑌚 ।
𑌵𑌚𑌨𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌨 𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌂 𑌶𑍁𑌨𑍋𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟 𑌹𑌵𑌿𑌰𑍍𑌯𑌥𑌾 ॥
𑌶𑍍𑌵𑌚𑌰𑍍𑌮𑌣𑌿 𑌯𑌥𑌾 𑌕𑍍𑌷𑍀𑌰𑌮𑌮𑍇𑌧𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 ।
𑌤𑌥𑌾 𑌶𑍂𑌦𑍍𑌰𑌮𑍁𑌖𑌾𑌦𑍍𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌨 𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑌂 𑌕𑌦𑌾𑌚𑌨 ॥"

"𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌚𑍍𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌪𑍍𑌯𑌾𑌪𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌦𑌯𑍇𑌤𑍍 ॥"

மேலும், ராமானுஜர் மைசூர் ராஜ்யத்தில் ஒரு தேவாலயத்தில் சண்டாளர்களைப் பிரவேசிக்கும்படி செய்தார். அவர் செய்ததையனுஸரித்து இப்பவும் அவ்வாலயத்தில் வருஷத்தில் ஒரு தினத்தில் அப்படி சண்டாளாதி பஞ்சமர்கள் பிரவேசித்து வருவதாகவும், அதற்கு மறுதினத்தில் ஸம்ப்ரோக்ஷணம் நடந்து வருவதாகவும் தெரியவருகிறது. இப்படிக்கெல்லாம் வைதிக-வர்ணாசிரமதர்மவிதிகளை உல்லங்கனஞ் செய்துவரப்பட்டதையனுஸரித்து ஸ்ரீ வைஷ்ணவர்களின் மதப்படி பிரணவத்துடன் கூடிய அஷ்டாக்ஷரமந்திரத்தை சூத்திராதிகளுள்பட யாரும் ஜபிக்கலாமென்று துணிவாய்

வெளியிடப்பட்டது. மந்திரங்களை எல்லோருக்கும் விய வஸ்தை யன்னியில் வெளியிடாமல் ரகஸியமாய் வைத்தி ருக்க வேண்டுமென்ற சுருதிவிதியையும் குருவாக்கியத்தை யும் மீறி, ராமானுஜரே, சூத்திரர்கள் பஞ்சமர்கள் உள்பட ஸகலஜனங்களும் கூட்டங்கூடிக் கேட்கவேண்டுமென்ற உத் தேசத்துடன், ஒரு கோபுரத்தின்மேல் ஏறி நின்று கொண்டு அஷ்டாக்ஷரமந்திரத்தை கெட்டியாய்ச் சொல்லி ஜனங்களு கெல்லாம் உபதேசித்ததாகவும், இந்த அக்கிரமச்செய்கை உயர்ந்தலோகோபகாரச் செய்கை யென்றும் ஸ்ரீ வைஷ்ண வர்கள் கௌரவமாய்ச் சொல்லிக்கொள்கிறார்கள். தவிரவும், வேதோக்தமான புண்ட்ரத்தையே நீக்கிவிட்டு, தூர்வாஸஸ் ரிஷியின் சாபத்தினால் சிலர்களுக்கு மாத்திரம் காரணார்த்த மாயேற்பட்ட புரோணோக்தமான யோனிபுண்ட்ரத்தை தரித்து வருகிறார்கள். ஆனால், ஸ்ரீ வைஷ்ணவர்கள் யோனி புண்ட்ரவிஷயமாண புராணகதையை ஒப்புக்கொள்கிறதில்லை. அவர்கள் தங்களுடைய புண்ட்ரத்தை ஸ்ரீபாதங்களென்று சொல்லிக்கொள்கிறார்கள். ஷெ பாதங்களையே அவர்களால் பூஜை செய்யப்பட்டு வருகிற ஆலயாதிகளில் அவர்கள் பக வானுடைய நெற்றியிலும் ஏன் சாத்துகிறார்களென்று கேட் டால் பதில் சொல்லுகிறதில்லை. தூர்வாஸஸ்ஸின் சாபத் தால் எந்தக்குடும்பத்திற்கு யோனிபுண்ட்ரம் விதிக்கப்பட்டி ருந்ததோ, அந்தக்குடும்பத்தில் ராமானுஜர் ஜனித்து ஷெ புண்ட்ரம் அவருடைய குலபுண்ட்ரமாக ஏற்பட்டிருந் திருக்கலாம். அவர் தனியாய் மதஸ்தாபனஞ்செய்தபோது தன்னுடைய புண்ட்ரத்தையே தன் சிஷ்ய கோடிகளுக்கு அடையாளத்திற்காக விதித்திருக்கக்கூடும். இவ்விதமாய் இப்போது பிரஸித்தமான ஐயங்கார் நாமம் ஸ்ரீ வைஷ்ண வர்களுக்கு ஏற்பட்டதாகச் சொல்லக்கூடும். இப்பரத

கண்டம் பூராவிலும் ஐயங்கார் பூஜை செய்யாத விஷ்ணு ஆலயங்களெல்லாவற்றிலும் பகவானுக்கு வேதோக்தமான கோபீசந்தன ஊர்த்துவபுண்ட்ரந்தான் சாத்தப்பட்டுவரு கிறது. ஐயங்கார்களைப்பார்த்துவிட்டு, அறியாமையால், விஷ்ணுபக்தர்கள் ஐயங்கார் நாமத்தைத்தான் தரிக்க வேண்டுமென்ற அபிப்பிராயத்தின் பேரில், ஸ்மார்த்தர் களில் சிலர்களும் தங்களுக்குள்ள வேதோக்த கோபீ ஊர்த் துவ புண்ட்ரத்தை விட்டு விட்டு யோனிபுண்ட்ரத்தையே ஒரு விதமாய் தரித்துவருகிறார்கள். இப்படியே கொஞ்சங் கொஞ்சமாக மற்றுமுள்ள வைதிக ஆசாரணைகளையும் அஜ்ஞா னத்தால் மாற்றிக்கொண்டுவருகிறார்கள். காலக்கொடுமை யால் காணப்படுகின்ற இவையெல்லாவற்றுக்கும் புராணப் பிரமாணமுண்டு. கடைசியில் தனிமதஸ்தாபனஞ்செய்த மத்துவரின் சிஷ்ய கோடிகளும் சுருதி விலக்கான தங்களு டைய புது ஸம்பிரதாயங்களுக்கும் புராணப்பிரமாணமிருப்ப தாகவே சொல்லுகிறார்கள். ஆனால், மத்துவராவது மாத்து வர்களாவது வர்ணதர்மத்தை, அதாவது, ஜாதிவியவஸ்தை யைக் கெடுக்கவில்லை. சுருதியில் சொல்லப்பட்ட ஊர்த்துவ புண்ட்ரத்தையும் உபயோகப்படுத்தி வருகிறார்கள். ஆனால், சுருதிப்படி அத்துடன் பஸ்மோத்தூலனத்தைச் செய்து கொள்ளாமல் முத்திரைகளையும் அக்ஷதையினால் திலகரேகை களையுஞ் சேர்த்து தரித்துவருகிறார்கள். இவர்கள் சுருதி-ஸ்மிருதிகளைவிட புராணத்தையே முக்கியப்பிரமாணமாகக் கைக்கொண்டு சுருதி-ஸ்மிருதிகளால் விதிக்கப்பட்டிருக்கிற நித்திய-நைமித்திககர்மாக்களைவிட புராணோக்தமான காம் மிய விரதாதிகளில் அதிகப்பற்றுள்ளவர்களாய்க் காணப்படு கிறார்கள். புராணோக்தமான ஏகாதசீ விரதத்திலும் துவா தசிபாரணையிலும் இவர்களுக்கிருக்கிற சிரத்தை சுருதி-

ஸ்மிருதிவிஹிதமான ஸந்தியாவந்தனாதிகளில் காணப்பட வில்லை. இவர்களுக்கு துவாதசீ பாரணை காலம் முக்கியமே யல்லாமல் ஸந்தியாவந்தன-மாத்தியாஹ்னிக காலங்கள் முக்கியங்களல்ல. இதுவும் நியாயந்தானென்று சில புராண வசனங்களைச் சொல்லி ஸாதிக்கயத்தனிக்கிறார்கள். இந்தப் படி எல்லா மதஸ்தர்களும் அவரவர்களுக்குத் தக்க புராண வாக்கியங்களிருப்பதாய் அச்சுப்புஸ்தகங்களையுங் காட்டு கிறார்கள். இக்காலத்திலோ அச்சுப்போடுவது சுளுவு. எந்த மதத்திற்கும் அச்சிடப்பட்ட புராண புஸ்தகங்களுண்டு. ஒவ்வொரு க்ஷேத்திரத்திற்கும், தீர்த்தத்திற்கும் புராண மிருப்பதுபோல், ஒவ்வொரு கொள்கைக்கும் புராணமுண்டு. பஞ்சாக்ஷரமில்லாத ஸ்திரீகளுக்கு சுத்தி போதாதென்றும், சிராத்தாதிகளுக்கு சமையல் செய்ய அவர்கள் யோக்கியர்க ளல்லரென்றும் சொல்லுவதற்கும் புராண வாக்கியங்களைச் சொல்லுகிறார்கள். இப்படியே அஷ்டாக்ஷரஜபஞ்செய்யாத ஸ்திரீகளுக்கு சுத்தி கிடையாதென்று சொல்லுகிற வேறு புராண வாக்கியங்களுமுண்டு. மேலும், சரீரத்தில் சூடு முத்திரை போடப்பட்டிருந்தால் அதிக அசுத்தியே ஸ்மிருதி களில் சொல்லப்பட்டிருக்கிறது. தப்தாங்கியைப் பார்ப் பதும் தொடுவதும் தோஷமாகும். இதற்கு நேர் விரோத மாய், சில சைவர்களின் கொள்கைப்படி சூலமுத்திரையில் லாதவர்களும், ஸ்ரீவைஷ்ணவ-மாத்துவர்களின் கொள்கைப் படி சங்கம், சக்கிரம் முதலான முத்திரைகளால் முத்திரா தானஞ்செய்து கொள்ளாதவர்களும் அசுத்தர்களென்ற வசனங்களையும் அவரவர்களின் புராணங்களில் காட்டுகிறார் கள். புராணத்தை நம்பி ஸ்மார்த்த ஸ்திரீகளும் பஞ்சாக்ஷ ரத்தை ஜபிக்கவேண்டுமானால், அதை நம்பி பலவிதமான சூடு களையும் ஸ்திரீகளுள்பட ஸ்மார்த்தர்களெல்லோரும் போட்

டுக்கொள்ளவேண்டியதும் அவசியமேயாகும். ஸநாதன மான வேத சாஸ்திரங்களை முக்கியமென்று நம்பி ஆசரித்துக் கொண்டு வைதிகஸ்மார்த்தர்களாயிருப்பவர்களுக்கு சூட்டு முத்திரைஅடையாளம் வேண்டியதில்லை. வைதிகமதத்தை விட்டு வெளிப்பட்டவர்களுக்கு ஒரு அடையாளம் அங்கத்தி லிருப்பதும் நல்லதுதான். ஒரு ஸன்யாஸி வேதோக்த மான தன் ஸ்வதர்மத்தை விட்டு விலகிப்போனால் ஒருவித சூட்டு முத்திரையினால் அங்கத்தில் அடையாளமிட்டு அந்த ஸன்யாஸியை ராஜா தன் ராஜ்யத்தை விட்டு வெளியேற்ற வேண்டுமென்று சாஸ்திரஞ்சொல்லுகிறது.

> "ப்ரவ்ரஜ்யாம் க்ருஹீத்வா து
> யஃ ஸ்வதர்மே ந திஷ்டதி ।
> ஶ்வபதேநாங்கயித்வா தம்
> ராஜா ஶீக்ரம் ப்ரவாஸயேத்" ॥

இக்காலத்திலோ இப்படிச் செய்யப்பட்ட ராஜா கிடையாது. சுருதி-ஸ்மிருதி மார்க்கத்திலிருந்து வெளியேறி, தாங்கள் ஸ்மார்த்தர்களே யல்லவென்று, அதாவது ஸ்மிருதியை அனுஷ்டிப்பவர்களே அல்லவென்று ஒப்புக்கொள்பவர்கள் தங்களைத் தாங்களே சூட்டு முத்திரையால் அடையாளமிட் டுக்கொள்ளவேண்டு மென்பது ஈசுவரஸங்கல்பமாயிருக்க லாம். ஹிந்து மதத்தையே விட்டு பஹிரங்கமாய் வெளிப் பட்டவர்களுக்கு அடையாளம் அனவசியம். அவர்கள் வேத-சாஸ்திரமதத்தைச்சேர்ந்தவர்களல்லவென்று ஸ்பஷ்ட மாய்த் தெரியக்கூடும். சைவ-வைஷ்ணவ-மாத்துவர்கள் தாங் கள் ஹிந்துக்களென்றும், சுருதி-ஸ்மிருதிகள் தங்களுக்கும் பிரமாணங்கள்தானென்றும் சொல்லிக்கொண்டு வேதசாஸ் திரங்களுக்கு விரோதமான ஸம்பிரதாய ஆசரணைகளைக்கைக்

கொண்டிருப்பதால், இவர்களுக்கு சரீரத்திலேயே அடையாளமிருப்பது நியாயமென்றே சொல்லவேண்டும். ஈசுவர ஸங்கல்பம் நிஷ்காரணமாயுண்டாகாது. வைஷ்ணவ-மாத்துவர்களில் புருஷர்கள், ஸ்திரீகள் எல்லோரும் முத்திராதானஞ் செய்து கொள்கிறார்கள். சைவர்களில் சில இடங்களில் மாத்திரம் சில வகுப்பினர்கள் வடதேசத்தில் அபூர்வமாய் சூல முத்திரையைத் தரிப்பதாய்த் தெரியவருகிறது. இத்தென் தேசத்தில் காணப்படவில்லை. வேதோக்தமான கர்மானுஷ்டானம், விரதங்கள், உபாஸனை, தபஸ் இவைகளால் நன்கு தப்தமாய், ஸ்புடஞ் செய்யப்பட்ட தங்கம்போல், சுத்தப் படுத்தப்பட்ட சரீரத்துடனும் மனதுடனுமிருப்பவர்கள் தான் உத்தமலோகத்தை அடைவார்களென்று சுருதியில் குறிப்பிடுகிற இடத்தில் "தப்தம்" என்ற பதத்திற்கு உடம்பில் சூடு போட்டுக்கொள்கிறதென்ற அர்த்தத்தைச் செய்து அஜ்ஞானத்தால் வைஷ்ணவ-மாத்துவர்கள் முத்திராதானத்தை ஆசரித்து வருகிறார்கள். வேதத்தையும் ஸ்மிருதியையும் தள்ளிவிட்டுத் தங்களுக்குத்தோன்றியவாறு ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட ஸம்பிரதாயத்தையே பிரமாணமென்றெண்ணுகிறவர்களுக்கு வேதவாக்கியமும் விபரீதமான அர்த்தத்தைத்தான் கொடுக்கும். அவர்களுடைய ஆசரணைகளும் வித்தியாஸமாகத்தானிருக்கும். இவ்வித ஆசரணைகளுக்கும் புராண ஆதாரங்கள் அச்சிடப்பட்டிருக்கின்றன. இக்காலத்திலுள்ள புராணங்களை மாத்திரம் ஆதாரமாகக்கொண்டு அனுஷ்டானத்தை சீர்திருத்த யத்தனித்தால் ஒரு மார்க்கமும் நிச்சயமாகப் பிடிபடக்கூடியதல்ல. வைதிகஸ்மார்த்தர்கள் யாவரும் சுருதி-ஸ்மிருதிகளுக்குத்தான் முக்கியமாய் கட்டுப்பட்டவர்கள். நமக்கு முக்கியப்பிரமாணம் வேதமும் ஸ்மிருதியுந்தான். எந்த மட்டில் இவைகளுக்கு விரோத

மன்னியில் புராணங்கள் உபயோகப்படுகின்றனவோ அம் மட்டில்தான் அவைகளையும் அனுஸரிக்கக் கட்டுப்பட்டிருக் கிறோம். இதுதான் சாஸ்திர-ஸித்தாந்தம்.

16. மேற்சொன்ன மட்டில்தான் சிஷ்டாசாரமும் நமக்குப்பிரமாணம். சுருதி-ஸ்மிருதிகளுக்கு விரோதமான ஆசாரம் சிஷ்டாசாரமே யாகாது. இக்கலியுகத்தில் சிஷ்டா சாரமென்ற பிரமாண விஷயத்தில் வெகு ஜாக்கிரதையாய் ஆலோசித்து அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரவேண்டுமே யொழிய, சிஷ்டர்களென்று பெயர்வாங்கினவர்களின் ஆச ரணைகளை யெல்லாம் கைப்பற்றிவிட்டால் அனர்த்தந்தான் விளையும். வாஸ்தவ சிஷ்டர் யார் என்பதைத் தீர்மானிப் பதே இக்காலத்தில் கஷ்டம். மாஸந்தோறும் ஆயிரக்கணக் காக ரூபாய் வரக்கூடிய பெரும் உத்தியோகத்திலிருந்து கொண்டு நவீன ஆசாரசீர்திறுத்த மயக்கத்தில் ஆழ்ந்து கிடப்பவர் விபூதியையும் பஞ்சகச்சத்தையும் தரித்துக் கொண்டு விட்டால் பெரும் சிஷ்டராகி விடுகிறார். அவரு டைய பிதற்றலெல்லாம் வேத வாக்கியம். அவர் வர்ணு சிரம தர்மங்களை பேதித்துத் தாறுமாறுகச்செய்யும் தப்புக் காரியங்களெல்லாம் ஸர்வோத்தமமான தர்ம காரியங் களாகி விடுகின்றன. இவ்விதமாகவே சிலர்கள் வியாகரணம், தர்க்கம், வேதாந்தம் இவைகளை ஒருவிதமாய் படித்துவிட்டு, தர்ம சாஸ்திரத்தைப்பார்க்காமலே, தாங்களும் சாஸ்திர விருத்தமாய் நடந்து கொண்டு, மற்றவர்களுக்கும் அதர் மோபதேசத்தைச் செய்துவிடுகிறார்கள். இவ்வித வித்வான் களாலும், சூத்திராதிகளின் குருஸ்தானத்தில் இன்னும் பாக்கியிருந்து கொண்டிருக்கிற சில ஆசார்யபுருஷர்களாலும் விதிவறம்பு மீறி நடந்துவருகிற சில ஸன்யாஸிகளாலும் அனேக ஸ்திரீகளுக்கும் சூத்திரர்களுக்கும் உத்கிருஷ்டவேத

த—24

மந்திரங்கள் உபதேசஞ்செய்யப்பட்டு, விபரீதபாவனைகளும் தப்பு ஆசரணைகளும் இந்நாட்டில் விருத்தியடைந்து வருகின்றன. இக்காலத்தில் சிஷ்டர்களென்று எவ்வளவு கியாதி பெற்றிருந்தாலும், சுருதி-ஸ்மிருதிகளுக்கு விரோதமான வார்த்தையாவது நடவடிக்கையாவது அவர்களிடம் காணப்பட்டால் அது தள்ளத்தகுந்ததே.

17. வெகு காலமாய், வெகு பெரியோர்களின் ஏற்பாட்டின் பேரிலும், அனுமதியின் பேரிலும் ஸ்திரீகள் பஞ்சாக்ஷராதி மந்திரஜபங்களைச் செய்து வந்திருக்கிறார்களே என்று இப்பவும் அனேகர்களுக்குப் புத்தி மயக்கமிருக்கலாம். புத்தியை நிதானப்படுத்திக்கொண்டு, நன்றாய் ஆலோசித்து, சுருதி-ஸ்மிருதிகளை அனுஸரிப்பதே முக்கியமென்று தீர்மானித்து நடப்பதுதான் ஆஸ்திகர்களின் லக்ஷணம். சாஸ்திரத்திற்கு விரோதமென்று தெளிவாய் வெளியாகிற காரியம் பெரியோர்களால் நெடு நாளாய் அனுஷ்டிக்கப்பட்டு வந்ததினால் நியாயமான காரியமாகிவிடமாட்டாது. கொங்குநாடு முதலான சில பிரதேசங்களில் ஞாபகத்திற்கெட்டாத காலம் முதல் வெகு தலைமுறையாய் பசுமாடுகளுக்கு மூக்குக்குத்தி அவைகளை நிலங்களை உழுவதற்கும் கபிலைத் தண்ணீர் இறைப்பதற்கும் உபயோகப்படுத்திவருகிறார்கள். பிராஹ்மண-வைதிக-சாஸ்திரஜ்ஞர்களின் நிலங்களிலும் பசுமாடுகளைக்கட்டி உழுது வருகிற கொடும்பாபச் செய்கையை இப்பவும் சாகுபடி காலங்களில் பார்க்கலாம். அவர்களைக் கேட்டால் பெரியோர்கள் காலம் முதல் இப்படி நடந்தேறி வந்திருப்பதால் நாம் என்ன செய்யக்கூடும், அதை நிறுத்துவது எப்படி ஸாத்தியப்படுமென்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். மற்றொரு உதாஹரணமெடுத்துக் கொள்வோம். வேதாகம சாஸ்திரங்களை அனுஸ

ரித்து வேதமந்திரங்களை யுச்சரித்து அதிகாரமுள்ளவரால் பூஜை நடந்தேறிவருகிற ஸாத்துவிக மூர்த்திகளின் ஆலயங் களில் வேதத்தில் அதிகாரமுள்ள பிராம்மணுதிகள் தரிசனஞ் செய்யலாமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. இவ்வித ஆலயங் களில் பிராம்மணுதிகள் உபயோகப்படுத்திவருகிற ஸாத்து விக பதார்த்தங்களைதைவங்களுக்கு நைவேத்தியமாக அர்ப் பணஞ்செய்யலாம். இவ்விதமாகவே, மத்தியம் மாம்ஸம் முதலான தாமஸ பதார்த்தங்களை உபயோகப்படுத்திவருகிற கீழ்ஜாதியார்களும் தாங்கள் உபயோகப்படுத்துவதை தேவதைகளுக்கு அர்ப்பணஞ் செய்யக்கூடிய ஸௌகரியத் தின்பொருட்டு தாமஸ தேவதைகளின் ஆலயங்களேற் பட்டு வேதமந்திரமன்னியில் சூத்திராதிகளால் பூஜை செய் யப்பட்டு வருகிறது. இவ்வித ஆலயங்களில் பிராம்மணன் போய் தரிசனம் முதலானது செய்யக் கூடாதென்று சாஸ் திரத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆகிலும், பல கிராமங் களில் மேற்கண்டபடி சூத்திராதிகளால் பூஜை செய்யப் பட்டும், பிராணிகளைக்கொன்று மாம்ஸம் முதலானதுகள் நைவேத்தியஞ் செய்யப்பட்டும் வருகிற தாமஸ குணம் பொருந்திய துர்தேவதைகளின் ஆலயங்களுக்கும் சில பிராம் மணர்கள் போய் தரிசனஞ் செய்துகொண்டும், சிலர் ஆடு கோழி வாங்கிக்கொடுத்துப் பிரார்த்தனை செலுத்திக்கொண் டும், பூசாரிகையிலிருந்து பிரஸாதத்தைப் பெற்றுக்கொண் டும், பெரியோர்கள் காலம் முதல் வெகுதலைமுறையாய் ஆசரணை நடந்தேறி வருவதாய்த் தெரியவருவதினுல் இந்தப் பெரும் தப்புக்காரியங்கூட தர்மகாரியமாகிவிடக்கூடுமா? பெரியோர்கள் காலம்முதல் அக்கிரமத்தைச் செய்துவந்தால் பிராம்மண்யம் குறைந்தும் பாபம் உறுதிப்பட்டும் வருகிற தென்று மாத்திரமாகுமே யொழிய பாபகாரியம் புண்ணிய

காரியமாய் மாறிவிடமாட்டாது. முன் பெரியோர்களின் சாஸ்திர விருத்தச் செய்கைகளுக்குப்பல காரணங்களிருந் திருக்கலாம். அவை யெல்லாவற்றையும் நாம் கண்டுபிடிப் பது ஸாத்தியப்படாது. அவர்கள் பல விதமாய் மோசமும் போயிருக்கலாம். சரி, தப்பு என்று தெரிந்து கொள் வதற்கு நமக்கு சாஸ்திரந்தான் பிரமாணம். பகவானும் கீதையில்,

"𑌤𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 𑌤𑍇
𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍌"

என்றே சொல்லியிருக்கிறார். முன்னால் பெரியோர்கள் அக் கிரமஞ் செய்தார்கள், அல்லது, மோசம் போனார்களென்ற காரணத்தால் நாமும் கெட்டுப்போகவேண்டுமென்பது அவ சியமில்லை. சாஸ்திரவாக்கியத்திலிருந்த அதிக விசுவாஸத்தி னாலும், மதாந்தரஸ்தர்கள் தங்கள் கொள்கைகளை அனு ஸரித்து சாஸ்திரமென்று புஸ்தகங்களை வெளிப்படுத்தி யிருக்கிற விபரத்தைத் தெரிந்துகொள்ளாமலும், இப்படியே பல மதாந்தரஸ்தர்கள் ஒருவருக்கொருவர் விரோதமாகப் பல விதமாய் பிரஸித்தப்படுத்தி வந்திருக்கிற விஷயத்தை யறியா மலும், தங்களுடைய கண்ணில் பட்ட ஏடே சாஸ்திர மென்றெண்ணி, பெரியோர்கள் சில விஷயங்களில் மோசம் போயிருக்கிறார்கள். இப்போது ஒன்றுக்கொன்று விருத்த மான பலவித ஆசாரணைகளும், கொள்கைகளும், புராணபுஸ்த கங்களுமிருக்கிற விபரம் நமக்கு நன்றாய்த் தெரியும். இவைக ளெல்லாம் வாஸ்தவமாயிருக்க முடியாதென்றும் நமக்குத் தெரியும். சுருதி-ஸ்மிருதிகளில் இவைகளுக்கு விரோதமான வாக்கியங்கள் காணப்படுகிற விஷயமும் தெரியும். விபரீதக் கொள்கைகளுக்குள்ள புஸ்தகங்களை அவரவர்கள் அச்சுப்

போட்டு எல்லாம் வெளி வந்த பின்புதான், எல்லாவற்றை யும் ஒத்துப்பார்க்கையில் பரஸ்பரம் விருத்தமாயிருப்பதால், தப்பாயிருக்கக்கூடு மென்ற ஸந்தேஹம் ஜனிக்கக்காரண மாயிற்று. இப்போது ஒத்துப்பார்ப்பதுகூட அவசியமில்லை யென்று சொல்லலாம். ஒருவர் குறிப்பிடுகிற புராண ஆதா ரத்தை மற்றவர் ஆக்ஷேபித்து, நூதனமதஸ்தர்கள் ஒருவருக் கொருவர் சச்சரவு செய்துகொள்கிறதிலிருந்தே நாம் வெகு ஸங்கதிகளைத் தெரிந்து கொள்ளக்கூடும். புதிதாய் எழுதி யிருக்க கூடுமென்ற ஸந்தேஹமே முன்பெரியோர்களுக்கு உண்டாகக்கூடியதில்லை. ஆகையால், எங்கேயாவது ஒரு வசனமிருப்பதாகக் காணப்பட்டால், அதின் தத்துவத்தை விசாரிக்காமலே நிஷ்கபடிகளான பெரியோர்கள் ஆசரணைக் குக் கொண்டுவந்து விட்டார்கள். ஸ்மார்த்த ஸ்திரீகள் பஞ்சாக்ஷராதி மந்திர ஜபங்களைச்செய்ய ஆரம்பித்தது பெரும்பாலும் இப்படியே. ஸ்காந்தபுராணத்தின் பிரசாரமே அதிகமாய் சைவஸித்தாந்திகளால் செய்யப்பட்டதாகத் தெரியவருகிறது.

18. பஞ்சாக்ஷரத்தாலாவது அஷ்டாக்ஷரத்தாலாவது ஸ்திரீகளுக்கு ஒரு காலத்திலும் சுத்தி ஏற்படக்கூடியதல்ல; வைதிகஸ்மார்த்த ஸம்ஸ்காரத்தால்தான் அவர்களுக்கு சுத்தியேற்படும். சுருதி-ஸ்மிருதிகளுக்கு விருத்தமான காரி யம் எக்காலத்திலும் ஸம்ஸ்காரமாகாது, பாபந்தானாகும். சுருதி-ஸ்மிருதிகளைக் கவனியாமல் தங்களுடைய தனித்தனி ஸம்பிரதாயவிதிகளே பிரமாண மென்று எண்ணியிருக்கிற பின்ன மதஸ்தர்கள் முத்திராதானத்தைச் செய்து கொள்ளட் டும். அவர்களுடைய ஸ்திரீகளும் மந்திரங்களை ஜபிக்கட்டும். அவர்களுடைய செய்கை ஸநாதன ஆர்யமதவைதிகஸ்மார்த் தர்களுக்குப் பிரமாணமாக மாட்டாது. ஆர்யவைதிக மதத்

தை விட்டு வெளியேறினவர்களின் ஆசாரணைகளை அம்மதத்தி லேயேயிருப்பவர்கள் கவனிக்கவுங் கூடாது, அனுஸரிக்கவுங் கூடாது. வீரசைவர்களின் ஸ்திரீகள் பஞ்சாக்ஷரமில்லா விட்டால் அசுத்தர்களாகவேயிருக்கட்டும். வீரவைஷ்ணவ ஸ்திரீகளும் அஷ்டாக்ஷரமில்லாவிடில் அசுத்தர்களாகவே யிருக்கட்டும். உண்மையான ஆர்யர்கள் வீரசைவர்களுமல்ல, வீரவைஷ்ணவர்களுமல்ல. நமக்கு வேதத்தில் குறிப்பிட்ட தைவங்களெல்லாம் வணங்கத்தகுந்தவைதான். நம்மொவ் வொருவருக்கும் முக்கியமாய் ஒரு மூர்த்தியில் அதிக பக்தி ஏற்பட்டிருந்தபோதிலும், மற்ற மூர்த்திகளிலும் நமக்கு பக்தியுண்டு. பகவானுடைய விபூதிகளில் ஒன்றிலும் வாஸ்தவ வைதிகர்களுக்கு த்வேஷமிருக்கலாகாது. இக்காரணம் பற்றியே வைதிகஸ்மார்த்தர்களின் பூஜாக்கிரமத்தில் சாஸ் திரப்படி பஞ்சாயதன பூஜை விதிக்கப்பட்டிருக்கிறது. அவர வர்களின் மனோபாவப்பிரகாரம் அவரவர்களின் முக்கிய உபாஸ்யதேவதைகளுக்கு மத்தியஸ்தானத்தைக் கொடுத்து, மற்ற தேவதைகளுக்கு பக்கஸ்தானங்களைக்கற்பித்திருக் கிறது. வைதிகஸ்மார்த்தர்களான அத்வைதிகளுக்கு எல்லா தைவங்களும் ஒன்றுதான். அமூர்த்தமாயுள்ள பரமவஸ்து வான பிரம்மத்திற்கு எந்த மூர்த்தியும் விபூதியாகும். வியவஹாரரீதியில் எல்லா தைவங்களும் வாஸ்தவந்தான், கொண்டாடத்தகுந்தவைதான். கொண்டாடுகிற ஜீவர்களா கிய நாமும், நம்மைச் சுற்றியுள்ள பிரபஞ்சமும் வாஸ்தவந் தான். உண்மையிலோ, அதாவது, பாரமார்த்திக திருஷ்டி யில், பார்க்கப்பட்டதும், அழியக்கூடியதும் மித்யைதான். ரூபமும் சரீரமுமில்லாத பரம ஆத்மவஸ்துவான பிரம்மத் திற்கு நெற்றியேயில்லாததினால், விபூதியை நெற்றியில் தரிக்கிறவர் பரமாத்மாவா, அல்லது, நாமத்தை தரிக்கிறவர்

பரமாத்மாவா என்ற கேள்வியாவது விசாரமாவது நமக்கு உண்டாவதற்கிடமேயில்லை. உபாஸனைக்காக மூர்த்திகளைக் கொண்டாடுகிறோம். கர்மானுஷ்டானத்தாலும் உபாஸனையாலும் சித்தசுத்தியும் சித்தத்தின் ஐகாக்கிரியமும் ஸித்தித்துவிட்டால், அப்பால் ஞானாப்பியாஸகாலத்தில் மூர்த்தியையும் தள்ளிவிடக்கூடியவர்களா யிருக்கிறோம். ஞானமென்றால் ஜீவப்பிரம்ம-ஏகத்வஜ்ஞானம். இந்த ஜ்ஞானம் சைவ-வைஷ்ணவ-மாத்துவாதிமதாந்தரஸ்தர்கள் யாவருக்குங் கிடையாது, அவர்களுடைய உத்தேசத்திலுமில்லை. இந்த ஏகத்வஜ்ஞானந்தான் மோக்ஷத்திற்கு நேர் ஸாதனம். இந்த ஜ்ஞானத்தை ஸம்பாதிப்பதுதான் நம் வைதிக ஸ்மார்த்த புருஷர்களுடையவும் ஸ்திரீகளுடையவும் முக்கியமான உத்தேசம்.

19. ஆர்யவர்ணாசிரம வியவஸ்தையில் புருஷர்களுக்கும், ஸ்திரீகளுக்கும், இந்தப்படியே அந்தந்த வர்ணத்தார்களுக்கும், ஆசிரமஸ்தர்களுக்கும், நான்கு வர்ணங்களுக்கும் வெளிப்பட்ட ஹிந்துக்களான சண்டாளாதி பஞ்சமர்களுக்கும் தனித்தனியே தர்மங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அவரவர்களுக்குரிய தர்மங்களை அவரவர்கள் கிரமமாய் அனுஷ்டித்து வந்தால், மேன்மேலும் தடையின்றிச் சென்று மேற்கண்ட ஜ்ஞானத்தைக்கைக் கொள்ளலாம். வேதசாஸ்திர விதிகளையனுஸரித்து நடந்துவந்தால்தான் ஷெ ஜ்ஞானம் யாருக்கும் கைகூடும். மீறி நடந்தால், அது கைகூடாதென்பது திண்ணம். வேதசாஸ்திரங்களினால் அதிகாரங் கொடுபடாத மந்திரஜபாதிகாரியங்களில் ஸ்திரீ-சூத்திராதிகள் பிரவேசித்தால் அஜ்ஞானத்திலேயே உழன்று கிடக்கவேண்டியதுதான். ஆதலால், ஜ்ஞானத்திலும் மோக்ஷத்திலும் உத்தேசமிருந்தால் சுருதி-ஸ்மிருதிகளில் சொல்லியபடி ஆசரிப்பதே அவசியம்.

20. ஸ்திரீகளும் சூத்திரர்களும் உத்தமபதவிக்கு வருவது மிகவும் லேசு. இதினாலேயே சில ரிஷிகள் கூட ஸ்திரீ-சூத்திர ஜன்மங்கள் சில விஷயங்களில் சிலாக்கிய மென்று வெளியிட்டிருக்கிறார்கள். சுமங்கலிகளான ஸ்திரீகள் ஜாக்கிரதையாய் பதிவிரதா தர்மத்தைக் காப்பாற்றிக் கொண்டும், பதி சுசுரூஷையைக் குறைவில்லாமல் சிரத்தையுடன் செய்து கொண்டும், எப்போதும் பகவந்நாமாவை மனவலில் உச்சரித்துக்கொண்டும், பதிரூபமாகவே பகவான் இருப்பதாகத் தியானித்துக்கொண்டி மிருந்தால் ஜ்ஞானம் கிரமமாக உதித்துவிடும். சிவபரமாகவும், விஷ்ணுபரமாகவும், தேவீபரமாகவும், மற்றும் பல தேவதா பரங்களாகவும் ஏராளமான திவ்ய நாமாக்களும் நாமாவளிகளும் வேத-சாஸ்திர-புராணங்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவைகளில் மனதுக்குப் பிடித்தமான எதையாவது அவலம்பித்துக்கொண்டு நாமோச் சாரணத்துடன் தியானஞ் செய்து வரலாம். பதிவிரதா தர்மத்திற்கு மேல் உத்தமமாக ஸ்திரீகளுக்கு யாதொரு தர்மமுங்கிடையாது. பதி சுசுரூஷைக்கு மேல் உத்தமமான கர்மாவுங்கிடையாது. பதிவிரதாதர்மத்தைக் கெடுத்துக்கொண்டு வேறு எவ்வளவு தர்மங்களைச் செய்தாலும் நிஷ்பலந்தான். வேதோக்தமான எல்லா நித்திய-நைமித்திக கர்மாக்களையும் கிரமமாய்ச் செய்துவருகிற த்விஜ புருஷனுக்கு எந்த பலன் கிடைக்கக்கூடுமோ அந்த பலன் ஸ்திரீகளுக்கு லேசாய் பதிவிரதாதர்மத்தினாலும் பதிசுசுரூஷையினாலும் கிடைத்துவிடுகிறது. புருஷன் செய்து வருகிற புண்ணியத்திலும் பாதிபாகம் பதிவிரதையான ஸ்திரீக்குக் கிடைத்துவிடுகிறது. அவருடைய பாபத்தில் இவளுக்கு பாகங்கிடையாது. ஸ்திரீயானவள் பாபங்களைச் செய்யாம லிருக்கும்படியாகக் கண்டித்துப் பாதுகாக்கவேண்டிய

பொறுப்பு புருஷனுக்கிருக்கிறபடியால் ஸ்திரீ செய்யும் பாபங்களில் புருஷனுக்கு பாதிபாகமுண்டு. ஸ்திரீயின் புண்ணியத்தில் புருஷனுக்கு பாகங்கிடையாது. இந்தப்படி எவ்விதத்திலும் ஸ்திரீகளுக்கு அநுகூலமாகவே சாஸ்திர நிபந்தனைகள் காணப்படுவதால் ஸ்திரீ உத்தமகதியை அடைய வேண்டுமானால் பதிவிரதையாயிருந்து பர்த்தாவின் சுசுரூஷை யைச் செய்து கொண்டிருந்தால் போதும். சித்த சுத்தியேற் பட்டுவிடும். இத்துடன் மேற்கண்டபடி நாமோச்சாரண ஸஹிதம் தியானமுமிருந்தால் சித்தத்தின் ஐகாக்கிரியமும் உறுதிப்பட்டு ஈசுவரானுக்கிரஹத்தால் ஜ்ஞானப்பிராப்திக் கும் யோக்கியதை யுண்டாகிவிடும். வேறு யாதொரு பிரயத் தினமும் ஸ்திரீகளுக்கு வேண்டியதில்லை. மந்திரஜபம் முத லான அதிக காரியங்களெல்லாம் வீண் டம்பமும் பாபமுந் தான். புருஷனுடைய அனுமதியிருந்தால் தேவதா பூஜை யைச் செய்யலாம், தோஷமில்லை. ஆனால், மந்திரமன்னியில் பூஜையைச் செய்யவேண்டும். ஸ்திரீகள் பாணலிங்கத்தையா வது ஸாளிக்கிராமத்தையாவது தொடக்கூடாது. உண்மை யில், பதிவிரதாதர்மத்திலும் பதிசுசுரூஷையிலும் தீவ்ர சிரத் தையுள்ள உத்தம ஸ்திரீக்குத் தனியான பூஜை அனவசியம். பூஜையில் ஈசுவரனுக்கு எந்த உபசாரங்கள் செய்யப்படுகின் றனவோ அவைகளைக்காட்டிலும் அதிகமாகவும் உண்மை யாகவும் உபசாரங்களைச் செய்து கொண்டாடக் கூடிய பிரத்தியக்ஷ ஈசுவரவடிவமான பர்த்தா இருக்கும்போது அவரை விட்டுவிட்டுக் கல்லிலும் மண்ணிலும் லோஹத்தி லும் ஈசுவரபாவனையைச் செய்துகொண்டு பாவனாரூப உப சாரங்களைச் செய்வதில் என்ன அதிக பலன் கிடைக்கக் கூடும்? உத்தமபத்னிக்கு பர்த்தாவே குருவாகவும் ஈசுவர னாகவுமிருப்பதுந் தவிர, அவளுக்கு சில விசேஷ ஸௌகரி

யங்களும் அதிக அனுகூலங்களும் இயற்கையாகவே ஏற்பட்டிருக்கின்றன. பக்திசாஸ்திரத்தில் குறிப்பிட்ட எல்லாவிதமான பக்தியையும் ஒரு விதத்திலும் குறைவில்லாமல் தன் பர்த்தாவிடம் காட்ட சுமங்கலிகளுக்கு ஸௌகரியமும் அவகாசமும் இருப்பது போல் மற்றவர்களுக்கு விக்கிரஹாதிகளிடத்திலாவது மாதா-பிதாக்களிடத்திலாவது குருவிடத்திலாவது காட்ட இடமில்லை. இவ்விஷயத்தில் சுமங்கலிகள் மிகவும் தன்யைகளென்பதில் ஸந்தேஹமில்லை. எப்போதும் பர்த்தாவை பிரத்தியக்ஷமாக பார்த்துக் கொண்டிருக்கலாம் (உரு-ம் நூ). அவரையே மனவிலும் வெளிப்படையாகவும் ஸ்தோத்திரஞ்செய்து கொண்டிருக்கலாம் (கீர்த்-ம் நூ). நமஸ்காரஞ்செய்யலாம் (வந்த நூ). அவர் பிரத்தியக்ஷமாயில்லாத காலங்களிலும் அவரையே ஸ்மரித்துக் கொண்டிருக்கலாம் (ஸ்மரணம்). அவர் நேரிலிருக்கும்போது அவருடைய சரீரத்திற்கு வேண்டிய அனுகூல காரியங்களைச் செய்யலாம் (பாதஸேவ நூ). ஸ்நானஞ் செய்து வைக்கலாம், உடம்பைத்துடைத்து சுத்தப்படுத்தலாம், சந்தனம் பூசியும், புஷ்பம் ஸமர்ப்பிவித்தும், அலங்கரித்தும், அன்னபானுதிகளை நேரில் கொடுத்தும் உபசரிக்கலாம் (அர்-ம் நூ). எவ்வகையிலும் தன்சரீரத்திஞல் அவருக்கு எவ்வளவு ஊழியஞ் செய்யக்கூடுமோ அவ்வளவையும் கொஞ்சங்கூட தடையின்றிச் செய்யலாம் (தாஸ்யம்). ஸஹதர்மசாரிணியாயிருப்பதாலும், ஸ்திரீ-புருஷர்களுக்குள் ஏகத்வம் முன் 4-வது பாகத்தில் சொல்லியபடி ஸித்தித்திருப்பதாலும், சில ஸமயங்களில் அவருக்கு ஸமானமான ஸ்தானம் தனக்கிருப்பதாகக்காட்டி அவரை தன் ஸ்னேகிதராகவே எண்ணி நடத்தலாம் (ஸக்யம்). மித்ர பாவத்தை முன்னிட்டு அவருக்கு அனுகூலமாக பிரணயகலகரூபமாய் சண்டையும் போட

லாம். பக்தியினால் ஸந்தோஷம் அதிகரித்துவிட்டால் அவரை ஆலிங்கனமே செய்து கொள்ளலாம். தன்னையும் தன் சரீரத்தையும் அவருக்கு அர்ப்பணமாகக் கொடுத்து அவருடைய இஷ்டம்போல் நடத்திக்கொள்ளட்டுமென்று உறுதியாயிருக்கலாம் (ஸூ-ஊ நிவெ-௩௦). பர்த்தாவைத் தவிர மற்ற யாரிடத்திலும் எவ்விடத்திலும் இப்படிக்கெல்லாம் ஸம்பூர்ணமாய் பக்தியைச் செலுத்தமுடியாது. அன்றியும், "ஈஶ்வரம் புத்ரபாவேன பதிம் ஶோகார்த்தம் க்ருபயா" என்று சொல்லியபடி பர்த்தாவின் வார்த்தகதசையில், அதாவது, வயது முதிர்ந்த பருவத்தில், ஈசுவரனை குழந்தையைப் போலிருப்பதாகவும் பாவித்து அவரைக் காப்பாற்றி லாளனை செய்து வரலாம். ஸகலவிதத்திலும் பூர்ணமாய் பக்தியைச் செலுத்தி ஸம்ஸாரக் கடலிலிருந்து கரையேறுவதற்கு மார்க்க மிருக்கும்போது சுமங்கலிகளுக்கு வேறு ஸாதனங்கள் வேண்டியதேயில்லை. ஸாளிக்கிராமம் விகாரமாயிருந்தாலும் கோணலாயிருந்தாலும் அதின் வெளிரூபத்தைப் பாராட்டாமல் அதில் பகவானிருப்பதாகவே எண்ணிக் கண்ணில் ஒத்திக்கொண்டு அது எப்படி பூஜை செய்யப்பட்டு வருகிறதோ, அவ்விதமாகவே பிராரப்த கர்மவசத்தால் தனக்குக் கிடைத்திருக்கிற பர்த்தா குரூபியானாலும், மூடராயிருந்தாலும், துர்க்குணியானாலும், அவருடைய சரீர ரூபத்தையும் வெளிச்செய்கைகளையும் வக்கிராதி தோஷங்களையும் ஒரு பொருட்டாக எண்ணாமல், அவர் ஸாக்ஷாத் ஈசுவரர்தான் என்பதான உறுதி எந்த ஸ்திரீயின் புத்தியிலிருக்கிறதோ, அவளே தன்யை, அவளே உத்தமி, அவளே எல்லோராலும் கொண்டாடிப் பூஜிக்கப்படத்தகுந்தவள். இப்படிப்பட்ட உத்தமிக்கு மரணத்திற்குப் பின்பும் உத்தமகதியே தவிர வேறல்லவென்பது நிச்சயம். உத்தமி

யான பதிவிரதைக்குத்தான் மேற்கண்ட ஸகல விதமான பக்தியும் பொருந்தியிருக்கக்கூடியது. பதிவிரதா தர்மத்தில் குறைவுண்டானால் ஒருவித பக்தியும் நிலைக்காது. இப்படி குறைவுள்ள ஸ்திரீகளுக்கு பூஜையினாலும் ஜபத்தாலும் விரதத்தினாலும் யாதொரு நன்மையும் உண்டாகக்கூடியது மில்லை. அமங்கலிகள், பர்த்தாவின் சுசுரூஷைக்குப் பதிலாக பர்த்தாவின் குடும்பத்திலுள்ளவர்களுக்கு உபகாரமான காரியங்களைச் செய்துவரவேண்டியது தர்மம். இறந்துபோன பர்த்தாவின் ரூபத்தையே ஈசுவர ரூபமாகத்தியானித்தால், பதி உத்தமலோகத்திற்குப் போயிருந்தால் இவளும் அங்கேயே மரணத்திற்குப்பின்பு போய் பதியுடன் சேர்ந்திருப்பாள். பதி வேறு எங்கேயாவது அதம ஸ்தானத்திலிருந்தால் இவளுக்கு உத்தமலோகப்பிராப்தியே கிடைக்கும். பகவானுடைய பூஜையையுஞ் செய்யலாம். மந்திரங்களை உச்சரிக்காமல் சுலோகங்களையும் ஸ்தோத்திரங்களையும் சொல்லலாம். மந்திரங்கள் கலந்த ஸஹஸ்ரநாமம் முதலானதுகளைச் சொல்லக்கூடாது. ஸ்திரீகள் யாவரும் இதிஹாஸ-புராணப் பிரகரண கிரந்தங்களையும் பிராம்மணமுகமாய் கேட்கலாம். தானாக புராணாதிகளைப்படிப்பதைவிட, வேத சாஸ்திரங்களை யறிந்த பிராம்மணனிடம் கேட்டால் ஸந்தேஹமில்லாத ஜ்ஞான முண்டாகும். கேட்டுத்தெரிந்து கொள்வதுபோல் படித்தால் தெரிந்து கொள்ளமுடியாது. சொல்லுகிறவரிடம் தன் ஸந்தேஹங்களை வெளியிட்டு அப்போதைக்கப்போது தெளிவை யேற்படுத்திக்கொண்டு மேன்மேலும் கேட்டுக்கொண்டு போவதே உத்தமம். கேட்பதைத்தான் சாஸ்திரங்களில் முக்கியமாய்ச் சொல்லியிருக்கிறதே யொழிய படிப்பதற்கு முக்கியத்தன்மை கொடுபடவில்லை. உத்தமோத்தமமான ஆத்ம வித்யையிலும்,

“ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:” என்று சொல்லி சிரவணத்திற்குத்தான் பிராதான்யம் கொடுபட்டிருக்கிறது. ஆகையால், மற்றவரிடமிருந்து கேட்பதென்றால் யாதொரு குறைவுமில்லை. கேட்டுத்தெரிந்து கொள்வதே விசேஷம். அன்றியும், இதிஹாஸ-புராணப்பிரகரணங்களிலும் மத்தியில் சிலவிடங்களில் வேதமந்திரங்களையே யெழுதியிருப்பதால், கேட்டுத் தெரிந்து கொள்வதினால் அம்மந்திரங்களை உச்சரிக்கிற தோஷமும் வராது. சொல்லுகிறவரும் மந்திர பாகங்களைப் படிக்காமல் விலக்கி விட்டு, மற்றவைகளைப்படித்துச் சொல்லுவதற்கும் ஸௌகரியமுண்டு. ஸ்திரீகள் தமிழ் முதலான தேசீய பாஷைகளில் சாஸ்திரங்களை யனுஸரித்துத் தருந்த அதிகாரிகளால் எழுதப்பட்டிருக்கிற புஸ்தகங்களையும் தானே படித்து வரலாம். கலியின் பேரில் அதிகாரமில்லாத கண்டவர்கள் விதிகளை மீறி சாஸ்திர விருத்தமாய் எழுதியிருக்கிற புஸ்தகங்களைப் படித்துக்கெட்டுப்போகாமலும் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவேண்டியது அவசியம். இப்படிப்பட்ட புஸ்தகங்கள் இக்காலத்தில் அதிகமாய் அச்சிட்டு வெளிப்படுத்தப்படுகின்றன. சூத்திரர்களுக்கு மற்ற மூன்று ஜாதியார்களின் தர்ம காரியங்களுக்கு தங்களாலியன்றமட்டில் ஒத்தாசை செய்து கொண்டிருப்பதைத் தவிர தங்களுக்கு ஸ்வயமாய் கர்மானுஷ்டானங் கிடையாது.

“ஶூத்ரஸ்ய த்விஜஶுஶ்ரூஷா
பரமோ தர்ம உச்யதே ।
அந்யதா குருதே கிஞ்சித்
தத்பவேத்தஸ்ய நிஷ்பலம் ॥”

இப்படி ஒத்தாசையான கைங்கரியங்களைச் செய்வதே சூத்திரர்களுக்கு ஸ்வதர்மம். இவர்களும் நாமோச்சாரணஞ்

செய்து கொண்டு ஈசுவரனை தியானித்து வரலாம். மேற்கண்ட படி பூஜையையுஞ் செய்யலாம். இதிஹாஸ-புராணப்பிர கரணங்களையும் பிராம்மண முகமாய்க் கேட்கலாம். முன் சொல்லியபடி தேசீய பாஷைகளிலுள்ள புஸ்தகங்களை யும் படிக்கலாம். மேலும், அவர்களுக்கேற்பட்டிருக்கிற தொழில்களையும் கிரமமாய் நடத்திக்கொண்டு வரலாம். இக் காரியங்களே சூத்திரர்களின் நல்ல கதியின்பொருட்டுப் போதுமானவை. இவர்களுக்கு கர்மம் வேறொன்று விதிக்கப் படவில்லை. இப்பொழுது புது ஏற்பாட்டில் அனுஷ்டான மென்று சொல்லிக்கொண்டு செய்யப்படுகிற மந்திரஜபங்க ளெல்லாம் பெரும் புண்ணியம்போன்ற கொடும்பாபமே யல்லாமல் வேறல்ல. இந்த அனுஷ்டானத்தின் உண்மையான பலன் இன்னதென்று அவரவர்களுக்கு மரணத்திற்குப்பின்பு தான் தெரியவரும். இப்பொழுது தெரியாது. கௌரவமாக வே இப்போது தோன்றும். ஸ்திரீ-சூத்திரர்களுக்கு மிகவும் லகுவாயும், ஒருவித லௌகிக ஸௌகரியத்திற்கும் குறை வன்னியிலும் இடைஞ்சலில்லாமலும், இவர்கள் நல்ல கதியை யடையும்பொருட்டு சாஸ்திர விதிகளேற்பட்டிருக்கும் போது, அவைகளை அனுஸரித்துக்கொண்டும், பக்தியையும் வைராக்கியத்தையும் பலப்படுத்திக்கொண்டு மிருந்து சிரமப் படாமல் உத்தம ஸ்தானத்தை அடைவதைவிட்டு, தனக்குத் தகுதியில்லாத மந்திர ஜபம் முதலான அதிக காரியங் களைச் செய்து இந்த லோகத்திலும் சிரமப்பட்டுக்கொண்டு, பின்னும் துர்க்கதியை அடைவதானால் இது ரொம்பவும் வியஸனப்படவேண்டிய விஷயந்தான்.

21. இதுவரையில் சொல்லப்பட்ட ஸங்கதிகள் பூராவையும் நன்கு அறிந்திருந்தும் சில ஆஸ்திகர்களின் மனதுகளில் தெளிவு ஏற்படாமலிருக்கக்கூடும். புராணத்தி

லாவது ஸ்திரீ-சூத்திராதிகளுக்கு மந்திரஜபத்தில் அதிகார முண்டென்று வெளியாகிற விஷயம் வாஸ்தவந்தானே; புராண வாக்கியங்கள் வாஸ்தவமாயிருக்கட்டும்; அல்லது, பின்னால் சேர்க்கப்பட்டவைகளா யிருக்கட்டும்; அந்த விசாரம் நமக்கு ஏதற்காக? நாம் விசாரஞ்செய்து தீர்மானிக்கக் கூடிய விஷயமென்று தோன்ற வில்லையே; பெரியோர்கள் போன வழியில் நாமும் போவதே சரியென்று திரும்பவும் நினைக்கலாம். இவர்களையுத் தேசித்து ஒருவாறு மறுபடியும் சுருக்கமாய்ச் சொல்லி நிறுத்திக்கொள்ளப்படும்.

மேற்கண்ட புராணவாக்கியங்களெல்லாம் வாஸ்தவ புராண வாக்கியங்களில்லையென்றாவது, பின்னால் சேர்க்கப் பட்டவைதானென்றாவது முடிவாய்த் தீர்மானிக்கும்படி நான் சொல்லவில்லை. நமக்கு ஷை வாக்கியங்கள் **எவ்வகை யிலும்** பிரமாணமேயில்லையென்றே வற்புறுத்தி மறுபடியும் சொல்லுகிறேன். இப்படிச்சொல்வதற்கு மூன்று காரணங் கள் தெளிவாயிருக்கின்றன. அவைகளாவன:—

(a) ஷை வாக்கியங்கள் உண்மையான புராணவாக்கி யங்களாகவே யிருக்கட்டும். வாஸ்தவ புராண வாக்கியங் களும் நமக்கேற்பட்டிருக்கிற சுருதி-ஸ்மிருதிகளுக்கு விரோ தமாயிருந்தால் பிரமாணமேயில்லை, தள்ளப்படவேண்டிய வைதானென்பதே சாஸ்திரத்தில் விதித்தாந்தப்படுத்தப்பட்டு எல்லோரும் ஒப்புக்கொண்டு ஆசரித்துவந்திருக்கிறார்கள். ஸ்திரீ-சூத்திரர்களுக்கு மந்திரஜபாதிகளில் அதிகாரமில்லை யென்று சுருதி-ஸ்மிருதிவாயிலாக வியக்தமாய்த் தெரியவரும் போது புராணத்தில் பகவான் வியாஸராலேயே விபரீதமாய் எழுதப்பட்டிருந்தாலும், சாஸ்திரப்படி ஸ்ரீ வியாஸருடைய வாக்கையும் ஒதுக்கித்தள்ளவேண்டியதுதான் தர்மம். வேத சாஸ்திர விருத்தமான வாக்கியத்தை ஸாக்ஷாத் ஈசுவரனே

ரூபமெடுத்து வந்து சொன்னாலும், அதை அநுஸரித்தால் பாபந்தானேற்படும். பாபத்திற்குள்ள தண்டனையைக் கட்டாயம் அநுபவிக்கவேண்டியதுதான். ஈசுவரன் சொல்லித் தானே செய்யப்பட்டதென்று தர்மராஜா மன்னித்து விடமாட்டார். ஸாக்ஷாத் ஈசுவரரும் ஸர்வஜகத்குருவுமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய வார்த்தைக்கு இணங்கி "குஞ்ஜரோ வா ஹத:" என்று யுதிஷ்டிரரால் சொல்லப்பட்ட வாக்கியம் "நாந்ருதம் வதேத், ஸத்யம் வத" முதலான சுருதி வாக்கியங்களுக்கு விருத்தமாகையால் நரகதரிசனரூபமாகிய தண்டனையை யுதிஷ்டிரர் அநுபவிக்கும்படி ஏற்பட்டது. அவர் மனப்பூர்வமாய் பொய்சொல்ல இஷ்டமில்லாதவராகவும், அசுவத்தாமாவென்ற பெயருள்ள யானை யுத்தத்தில் மரணமடைந்ததை நினைத்துக்கொண்டு "குஞ்ஜர:" என்ற பதத்தையுஞ் சேர்த்துச் சொன்னவராகவுமிருந்ததால், பாபத்தின் பலன் நரகதரிசனத்தோடு லேசாய் முடிந்தது. குஞ்சரபதத்தைச்சேர்த்துச் சொல்லாமலிருந்தால் தண்டனை வெகு கடுமையாகவே யிருந்திருக்கக்கூடும். குஞ்சரபதத்தின் சப்தம் துரோணாசாரியாரின் காதில் விழாமலிருக்கும்படி மற்றவர்கள் செய்ததற்கு யுதிஷ்டிரர் ஜவாப்தாரியல்ல. எந்த மட்டில் அவர் ஜவாப்தாரியாருந்தாரோ, அந்த மட்டில் அவர் பாபபலனை அநுபவித்தே தீரவேண்டியதாயிற்று. ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய சொல்லுக்கிணங்கி அவர் குஞ்ஜரோ வா ஹத: என்று சொல்லும்படி நேரிட்டதென்று அவரை மன்னிக்கவில்லை. ஆதலால், சொல்லுகிறவர் யாராயிருந்தாலும், சொல்லப்படுகிற வார்த்தை வேத சாஸ்திரங்களுக்கு ஒற்றிருந்தால் மட்டிலும் அது அநுஸரிக்கப்படத் தகுந்தது. வேத சாஸ்திரங்களுக்கு விரோதமான சில கக்ஷிகளைக் கைக்கொண்ட ஸாக்ஷாத் பிரம்மாவின் அவதாரமாகிய

மண்டனமிச்ரருடைய வார்த்தைகளையும் கொள்கைகளையும் பகவத்பாத ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் நிராகரித்துக் கண்டித்து விட்ட ஸங்கதி எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. முன் 3-வது பாகத்தில் கண்டபடி ஸ்ரீ புத்தர் ஸாக்ஷாத் விஷ்ணுவின் அவதார மென்று பெரும்பாலும் ஹிந்துக்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருந்தும், அவர் வெளியிட்ட வார்த்தைகளும் பிரசாரஞ் செய்த முக்கிய கொள்கைகளும் வேத சாஸ்திரங்களுக்கு எதிரிடையாயிருந்தபடியால், அவைகளை தப்பென்று ஹிந்துக்கள் தள்ளி ஒதுக்கிவிட்டார்கள். பகவானுடைய வாக்கியமே யென்று மோஹித்து ஹிந்துக்கள் அதை அனுஸரித்து நடந்து மோசம் போயிருந்தால் நாமெல்லோரும் இப்போது வீணை பௌத்தர்களாகவேயிருந்து வேத மார்க்கத்தை விட்டுப்பூராவும் விலகிக்கெட்டுப் போயிருப்போம். இப்படி துர்க்கதி வராமலும், இப்பரத கண்டத்தில் ஸ்திரமாய் வேர் ஊன்றி பிரசாரத்தையடைய வொட்டாமல் காலத்தில் தகுந்த முயற்சிகளை யெடுத்து பௌத்த மதத்தை இந்நாட்டைவிட்டு ஓடிப்போகும்படியாகவும், செய்த நம்மாசாரியர்களின் விஷயத்தில் ஹிந்துக்களில் எந்த வகுப்பினரும் நன்றி மறக்கலாகாது. ஸ்ரீ புத்தர் முதலான அவதார புருஷர்களின் வேத-சாஸ்திர விருத்தமான வாக்கியங்களைப்போல் ஸ்ரீ வியாஸருடைய வாக்கியங்களில் எவைகளாவது சுருதி-ஸ்மிருதி விருத்தமென்று காணப்பட்டால் அவ்வாக்கியங்கள் தள்ளத்தகுந்தவைகளே. ஆகையால், மேற்கண்ட விபரீத புராண வாக்கியங்கள் ஸ்ரீ வியாஸரால் சொல்லப்பட்ட உண்மையான புராண வாக்கியங்களாயிருந்தபோதிலும், அவைகளை அனுஸரித்து நடந்தால் பாபமே பலஞ்கி, நடப்பவர்கள் யம தண்டனைக்குட்படுவார்களென்பதில் ஸந்தேஹமில்லை. தவிர

வும், முன் 8-வது பாராவில் சொல்லியபடி யுகாந்தரங்களில் ஸ்திரீகளுக்கும் உபநயனாதி ஸம்ஸ்காரமிருந்திருப்பதால், மந்திரஜபாதிகளிலும் அக்காலங்களில் அவர்களுக்கு அதிகாரமிருந்திருக்கலாம். மஹரிஷி தூர்வாஸஸ்ஸின் புத்திரி இக்கலியுக ஸ்திரீயில்லையென்பது நிச்சயமே. இப்படிப்பட்ட யுகாந்தர ஸ்திரீகளின் கதைகளை ஸ்ரீவியாஸர் புராணங்களில் நிரூபித்திருக்கிறார். யுகாந்தர விஷயமான புராண நிரூபணங்களை இக்கலியுகத்தில் பிரமாணமாக எண்ணி ஆசரிக்கக்கூடாதென்பது நம் வேத-சாஸ்திரங்களின் கொள்கை. ஸ்ரீ வியாஸர் அக்கிரமமாகவே புராணத்தில் எழுதியிருக்கிறாரென்று தீர்மானிக்கவேண்டிய அவசியமில்லை. அவர் நிரூபித்திருக்கிற சில வரலாறுகள் மற்ற யுகங்களுக்குச் சரியாயிருந்தாலும் இக்கலியுகத்திற்கு ஒவ்வாதென்பதை மாத்திரம் நாம் தெரிந்து கொண்டால் போதுமானது.

(2) முன் குறிப்பிட்ட புராண வாக்கியங்கள் வாஸ்தவ புராணவாக்கியங்களில்லாமல் பின்னால் கக்ஷியின் பேரில் சேர்க்கப்பட்டவைகளானால், அவைகள் தள்ளத்தகுந்தவைகள்தானென்பதில் யாருக்கும் ஆக்ஷேபணை யிராது.

(3) வாஸ்தவமோ, பொய்யோ, நமக்குத் தெரியாது, ஸ்காந்தம் முதலான புராணவாக்கியப்படிக்கும் நடக்கவேண்டியதுதான் நியாயமென்று மறுபடியும் சொன்னால், இதையும் ஒப்புக்கொள்கிறேன். புராண வாக்கியப்படியே நடக்கலாம். இதே ஸ்காந்த புராணத்தில், முன் சொல்லியபடி, மந்திரஜபஞ்செய்கிற ஸ்திரீகளுக்கு நரகப்பிராப்தி யுண்டென்று சொல்லும் வாக்கியத்தை அனுஸரித்து ஏன் நடக்கக்கூடாதென்று கேட்கிறேன். அந்த வாக்கியத்திற்கு சுருதி-ஸ்மிருதிகளின் பலமுமிருக்கிறது. அதைத்தான் ஆசரணைக்

குக் கொண்டுவருவது நியாயம். இரண்டு விதமாய் விரோத வாக்கியங்கள் ஒரே புராணத்தில் காணப்பட்டால், அவைகளில் எதை அனுஷ்டிக்கலாமென்று ஸந்தேஹம் வருங்கால் சுருதி-ஸ்மிருதி பலம் எதற்குச் சேர்ந்திருக்கிறதோ அதையே ஆஸ்திகர்கள் கைக்கொள்வார்கள். அதை விலக்கி சுருதி-ஸ்மிருதிகளுக்கு விரோதமான வாக்கியத்தைத்தான் பிடித்துக்கொள்வேனென்று சொல்லுகிறவர் ஆஸ்திகராவரோ? ஸாக்ஷாத் ஈசுவரனே

“ஶ்ருதிஸ்ம்ருதீ மமைவாஜ்ஞே”

“ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ”

என்று சொல்லியிருப்பதால், அப்படி விம்பாகச் சொல்லி விபரீதமாய் நடப்பவர் ஈசுவரத் துரோஹி யென்றே முடிவாகும். துவிஜ ஸ்திரீகளுக்கே யில்லாத அதிகாரம் சூத்திரர்களுக்குக் கிடையாதென்பது ஆதியிலேயே குறிப்பிடப்பட்டது.

22. ஆகையால், மேற் சொல்லிய விபரீத வாக்கியங்கள் உண்மையான புராண வாக்கியங்களாயிருந்தாலும் சரி, அல்லது பொய்யான வாக்கியங்களாயிருந்தாலும் சரி, அல்லது ஸந்தேஹப்படக்கூடிய வாக்கியங்களாயிருந்தாலும் சரி, எப்படியிருந்தாலும், அவைகள் சுருதி-ஸ்மிருதிகளுக்கு விரோதமாயிருப்பதால் அவைகளைத்தள்ள வேண்டியது தான் நியாயமென்று ஏற்படுவதினால், ஸ்திரீ-சூத்திரர்களுக்கு வேதமந்திரஜபங்களில் அதிகாரமில்லையென்பதும், அவர்களுக்கு பஞ்சாக்ஷராதி மந்திரங்களை உபதேசிப்பது அதர்மமென்பதும், ஏற்கனவே உபதேசத்தைப் பெற்றிருந்

தாலும் அவர்கள் அவைகளை ஜபஞ்செய்வது அநுசித மென்பதும், உபதேசிக்கப்பட்ட மந்திரங்களை அவர்கள் பசுமாட்டின் காதில் சொல்லி, விட்டுவிடவேண்டியதுதான் க்ரமமென்பதுமே நிச்சயம்.

ஏழாவது பாகம் முற்றும்.

# தர்ம விமர்சனம்

---

## எட்டாவது பாகம்

## பிரம்மானந்தம்

1. ஆனந்தமே பிரம்மஸ்வரூபம். ஆனந்தத்திலேயே பிரம்மத்தின் ஸத்-சித்ஸ்வரூபங்களும் விளங்குகின்றன. காணப்பட்டதும் காணப்படாததுமான ஸகல வஸ்துக்களிடத்திலும், அதுபோலவே நம் ஒவ்வொரு ஜீவனிடத்திலும் உண்மையாய் எக்காலத்திலும் மாறுதலின்றி ஸ்திரமாயிருக்கிற பொருள் அந்த ஆனந்த ஸ்வரூபியான பிரம்மந்தான். உண்மையில் பிரம்மமாயிருந்தும், அதை விட்டு விலகியது போல் நாமிருப்பதால், ஆனந்தமும் நம்மை விட்டு விலகியது போல் தோன்றுகின்றது. எப்பொழுது இப்படி நாம் விலகியிருப்பதான தோற்றத்திற்குக் காரணமாகிய அவித்யை நம்மை விட்டு நீங்குமோ, அப்பொழுது நம்முடைய ஆனந்த ஸ்வரூபமும் நன்கு விளங்கும். பிரம்மம் ஒன்றுதான் ஸத்தியம், ஜகத்து ஸத்தியமல்ல, ஜீவர்களாகிய நாம் பிரம்மத்தைத் தவிர வேறல்ல, என்ற விஷயங்கள் தெளிவாய் வேதங்களின் முடிவு பாகங்களாகிய உபநிஷத்துக்கள் மூலமாய் ஸர்வேசுவரனால் வெளிப்படுத்தப்பட்டும், நம் ஆசாரியர்களால் அத்புதமான பாஷ்யாதிகிரந்தங்கள் மூலமாய் விசதமாகத் துலக்கி ஸ்தாபிக்கப்பட்டுமிருக்கின்றன.

2. எப்படி, உண்மையான பொருள் பிரம்மத்தைத் தவிர வேறல்லவோ, அப்படியே உண்மையான ஆனந்தமும் பிரம் மானந்தத்தைத் தவிர வேறல்ல. இன்றிருந்து நாளேயில்லாம லிருக்கக்கூடிய தோற்றங்களில் பொருள் என்ற புத்தி எப்படி நமக்கு ஏற்பட்டிருக்கின்றதோ, அப்படியே, க்ஷணிகமா யிருக்கிற விஷயசுகத்தோற்றங்களில் ஆனந்தம் என்ற பிரமை யும் நமக்கேற்பட்டிருக்கிறது. விஷயசுகம் வேறு, ஆனந்தம் வேறு என்பதையும், எப்படி இவ்விரண்டும் வெவ்வேறு என்பதையும் தெரிந்துகொள்ள வேண்டியது முக்கியம். எல்லாவற்றுக்கும் அதிஷ்டானமாகிய பிரம்மம் இல்லா விடில் ஜகத்து இருக்கமாட்டாது. ஜகத்து இல்லாவிடினும் பிரம்மம் இருக்கும். ஜகத்து பிரம்மத்தைக் காட்டிலும் வேறில்லாவிட்டாலும், பிரம்மம் ஜகத்தைவிட வேறுதான். ஆகையால், ஜகத்தும் பிரம்மமும் ஒன்றுதானென்று எப்படிச் சொல்லக்கூடாதோ, அப்படியே, விஷயசுகமும் சாஸ்திரத்தில் சொல்லியபடி பிரம்மானந்தத்தின் க்ஷணிக மான தாத்காலிக பிரதிபலன ரூபமாகவே இருந்தபோதி லும், பிரம்மானந்தமே விஷயசுகமாக மாட்டாது. எவ் விதம், அந்தக்கரணத்தில் பிரதிபலித்திருக்கிற சிதாபாஸ னென்ற ஜீவத்தோற்றமானது பிம்பரூபியான பிரம்ம மென்ற ஆத்மாவைக்காட்டிலும் வேறில்லையானாலும், ஆத் மாவே ஜீவனாகிறதில்லையோ, அவ்விதமாகவே, நித்தியாகண்ட மான பிரம்மானந்தம் வேறுதான், அதின் லேசலேசமான தும், அநித்தியமும், அல்பமும், கேவலப் பிரதிபலனமாத் திரமுமான விஷயசுகம் வேறுதான்.

3. எதுவரையில் ஒருவருக்கு திருக்-திருச்யரூப மான பிரபஞ்சத்தில் தான் ஒரு ஜீவன் என்ற பாவனையிரு ந்து வருகிறதோ, அதுவரையில் அவர் சுக-துக்கங்களுக்குத்

தான் பாத்தியப்படவேண்டுமே யொழிய, அவருக்கு பிரம்மானந்தம் எட்டமாட்டாது. அநித்தியமான ஜீவத்வம் மறைந்து சுத்த-நித்தியபிரம்மத்வம்மாத்திரம் மிஞ்சி நின்ற போதுதான் முன் குறிப்பிட்டபடி பிரம்மானந்தம் விளங்கும். அந்தக்கரணவிசிஷ்டனுகிய வெவ்வேருன பரிமித ஜீவனுல் கால-தேச-நிமித்தங்களுக்குட்பட்டு பரிமிதமானதும், பின்னப்பட்டதுமான போகங்களைத்தான் அனுபவிக்க முடியுமே தவிர அபரிமிதமாயும், அகண்டமாயும், ஏகமாயுமுள்ள ஆனந்தத்தை மனஸினுல் எண்ணுவதற்குக் கூட ஸாத்தியப்படமாட்டாது. வாஸ்தவத்தில் நாம் ஆத்மா என்ற பிரம்மமாக இருந்தும், நம்முடைய ஆத்மத்வம் மறைந்து நின்று நம் ஜீவத்வம்மாத்திரம் கூத்தாடிக் கொண்டிருக்குங்கால் நம்முடைய ஆனந்தரூபமும் மறைந்திருந்து நம் சுக-துக்கங்கள்தான் திரும்பித்திரும்பி வந்துகொண்டிருக்கும்.

4. அபரிமிதமான ஆனந்தம் மறைந்து போய் பரிமிதமான விஷயசுகம் ஏற்பட்டபோதிலும், துக்கம் எப்படி வந்ததென்று ஸந்தேஹிக்கலாம். சுகத்தின் பரிமிதத்தன்மைக்குக் காரணமே துக்கமென்றுதான் வெளியாகிறது. சுகத்திற்கு சுகத்தன்மையே துக்கஸம்பந்தத்தினுல் தான் ஏற்படுகிறது. சுகத்திற்கு முன்பாகவாவது, பின்னுலாவது, ஸமகாலத்திலாவது துக்கமிருந்தால்தான் அதற்கு சுகத்வமிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இப்படி பல காலங்களில் துக்கஸம்பந்தமிருப்பதுபற்றியே சுகங்களை சாஸ்திரத்தில் ஸாத்விக-சுகமென்றும், ராஜஸ-சுகமென்றும், தாமஸ-சுகமென்றும் விபாகப்படுத்தியிருக்கிறது. ஆரம்பத்தில் துக்கமும் முடிவில் சுகமுமாக விருப்பது ஸாத்விக-சுகம். முதலில் சுகமும் கடைசியில் துக்கமுமாகவிருப்பது ராஜஸ-சுகம். எப்போ

தும் துக்கக்கலப்புடனிருந்து பிரமையினால்மாத்திரம் சுக மென்று எண்ணப்படுவது தாமஸ-சுகமாகும். சுகங்கள் யாவும் இம்மூன்று விதங்களுக்குள்ளடங்கியவைகளே. இம் மூன்று விதங்களிலும் துக்கஸம்பந்த மிருப்பதால், துக்கத்தை ஒட்டியே விஷய சுகத்திற்கு சுகத்தன்மை யுண்டென்பதாக அறிந்து கொள்ளவேண்டும். பனியில் கஷ்டப்பட்டவனுக்கு வெய்யில் சுகமாயிருக்கும். வெய்யிலில் போய் கஷ்டப் பட்டவனுக்கு நிழல் சுகமாயிருக்கும். வெய்யில்-சுகம் வேண்டுமானால் பனியில் கஷ்டப்பட்டிருக்கவேண்டும். நிழல்-சுகம் வேண்டுமானால் வெய்யிலில் போய் அடிபட்டிருக்க வேண்டும். இப்படி கஷ்டப்படுவதினால் அந்தந்த சுகங் களில் இச்சையுண்டாகிறது. இவ்விதம் கஷ்டப்படாதவ னுக்கு வெய்யில்-சுகத்திலாவது நிழல்-சுகத்திலாவது இச்சை யுண்டாவதில்லை. இப்படி இச்சையே யில்லாமல் வீட்டில் ஸ்வஸ்தனாக இருப்பவனை சுகியென்று சொல்லுகிறோமே யொழிய, பனியிலாவது வெய்யிலிலாவது கஷ்டப்பட்டு விட்டு வெய்யிலையாவது நிழலையாவது அடைந்து ஸந்தோஷப் படுகிறவனை சுகியென்று நாம் சொல்லுகிறதில்லை. இது போல், ஒருவித துக்கமும், துக்கஸம்பந்தத்துடன் கூடிய சுகமும், இவ்விதசுகத்தில் இச்சையும் இல்லாதவனைத்தான் ஆனந்தியென்று சொல்லலாம். யாதொன்றிலும் இச்சை யில்லாமையே ஆனந்தியின் ஒரு முக்கிய லக்ஷணம்.

5. உண்மையில் நமக்கு எப்போதும் ஸ்வதஸ்ஸித்த மாயிருக்கிற பிரம்மானந்தத்தை நாம் இப்போது அனு பவிக்கவில்லையென்றதோற்றத்தின் காரணமும் முன் சொல்லி யதிலிருந்தே துலங்கும். ஆத்மத்வ நிலையை விட்டு ஜீவத்வ நிலையிலேயே நாமிருந்து வருவதுதான் காரணம். இது பின் னால் கொஞ்சம் விவரிக்கப்படும். ஆனால் சிலர்கள் வேறு கார

ணத்தைக் குறிப்பிடுகிறார்கள். இக்காரணத்தை முதலில் சற்று சோதித்துப்பார்ப்போம். உலகத்தில் ஸாமான்யத்திற்கு அனுபவம் கிடையாது, விசேஷத்திற்குத்தான் அனுபவமுண்டு. ஸாமான்யமாய் எங்கும் வியாபித்திருக்கிற அக்னியாவது மின்சாரமாவது அனுபவிக்கப்படுவதில்லை. அவை, தங்களுடைய வியாபகத்தன்மையை விட்டு, ஏதாவது ஒரு பதார்த்தத்தில் ஸம்பந்தப்பட்டுக் கட்டுக்குள்ளடங்கி நின்றால்தான் அனுபவத்திற்கு யோக்கியமானவையாகும். கட்டையிலாவது திரியிலாவது ஸம்பந்தப்பட்ட அக்னிக்கும், ஒரு யந்திரத்தில் ஸம்பந்தப்பட்ட அல்லது இடிமின்னல் ரூபமாய் பரிமிதத்தன்மையையடைந்த மின்சாரத்திற்குந்தான் அனுபவிக்கப்படக்கூடிய யோக்கியதையுண்டு. இதுபோல், எங்கும் வியாபகமாய், ஏகமாய் நிற்கும் அகண்டப்பொருளான பிரம்மத்தின் ஆனந்தம் அனுபவவிஷயமில்லை யென்றும், அது ஒரு விஷய ஸம்பந்தத்தில் கட்டுப்பட்டால்தான் சுகரூபமாய் அனுபவிக்கப்படுமென்றும், இதினால்தான் நாம் இப்போது பிரம்மானந்தத்தை அனுபவிக்கவில்லை யென்றும் கக்ஷிசொல்லிக்கொண்டு, சுருதிவாக்கியங்களுக்கு நேர்விரோதமாக, கைவல்யமோக்ஷத்தில் ஆனந்தானுபவமே யிராதென்று சில ஆஸ்திக ஜனங்கள்கூட எண்ணும்படி மேற்கண்ட சிலர்கள் செய்து வந்திருக்கிறார்கள். இப்படிச் செய்ததினால் நாளடைவில் பலவிடங்களில் சுருதிவாக்கியங்களில் சிரத்தைக் குறைவும் உண்மையான ஸாயுஜ்யமோக்ஷ விஷயத்தில் இச்சைக் குறைவும் ஏற்பட்டு, சுருதியின் முக்கிய தாத்பரியமான அத்வைதப்பிரம்மஜ்ஞானத்திலும் நிர்க்குண நிஷ்டையிலும் பல ஆஸ்திகர்களுக்கு மனப்பிடிப்பு நீங்கி, இந்நாட்டில் ஹிந்துக்களுக்குள்ளாகவே சுருதி விருத்தமான கொள்கைகளும் அவைகளை ஆதாரமாகக் கொண்ட புது மதாந்தரங்களும் உண்டாகி வந்திருக்கின்றன.

6. இப்பூலோகத்தில் ஹிந்துமதமென்று சொல்லப்படுகிற ஆர்ய-வைதிகமதத்திற்கு ஏற்பட்டிருக்கிற விசேஷ மேன்மைக்குக் காரணம் அதின் உயர்ந்த அத்வைதக் கொள்கையைத் தவிர வேறல்ல. ஜீவன் வேறு, கடவுள் வேறு, ஜகத்து வாஸ்தவம் என்று போதிக்கின்ற மதங்கள் எல்லா தேசங்களிலுமிருக்கின்றன. இப்படி துவைதத்தில் ஸத்திய புத்தியை ஸ்திரப்படுத்துகிற சைவம், வைஷ்ணவம் முதலான மதங்கள்மாத்திரம் இப்பரதகண்டத்திலிருந்திருக்குமானல் உலகத்தில் புதிதாயுண்டாகி வந்திருக்கிற மற்ற மதங்கள் வெகுகாலத்திற்கு முன்பாகவே ஹிந்து மதத்தை விழுங்கி அது இருந்த இடமே தெரியக்கூடாமலடித்திருக்கக்கூடும். இத்தேசத்தில் வேறு எவ்விதமான நூதனமதம் பிரவேசித்தாலும், நம் ஆர்யமதத்திற்கு முன்னல் நிற்பதற்குக்கூட அதற்கு யோக்கியதையில்லையென்று அதற்கே தோன்றும்படிக்கும், அது பயந்தும் வெட்கமடைந்தும் அடங்கியுமிருக்கும்படிக்கும் செய்து வந்திருப்பது அத்வைத தத்வமும் அதை வெளியாக்கிபோதிக்கிற வேதாந்த சாஸ்திரமும் கர்மமும்-கதியையும் புனர்ஜன்ம விஷயத்தையும் துலக்கிக் காட்டுகிற வேதசாஸ்திரமுமேயல்லாமல் வேறல்ல. மற்ற மதங்களுக்கு தத்வசாஸ்திரபலமே கிடையாது. அவைகளுக்கு விரோதமாகவே பெரும்பலும் தத்வசாஸ்திரம் பிரவர்த்தித்து மிருக்கிறது. ஹிந்துமதம் அப்படியல்ல. ஹிந்து மதத்திலிருந்தே தத்வசாஸ்திரம் பிறந்திருக்கிறது. தத்வசாஸ்திரத்திற்குள்ள பூரா விபரங்களும் வேதத்திலேயே வெளியிடப்பட்டிருக்கின்றன.

7. உலகத்தில் ஸாமான்யத்திற்கு அனுபவங் கிடையாது, விசேஷத்திற்குத்தான் அனுபவமுண்டென்ற கொள்கை எம்மட்டில் வாஸ்தவமென்பதும் மேற்கண்ட

சாஸ்திரம் மூலமாகவே வெளியாகும். திருக்-திருச்ய ரூபமான த்வைதமே மேலிட்டிருக்கிற இப்பிரபஞ்சத்தில் அனுபவவிஷயமான சுகஸம்பந்தமாக ஷை கொள்கை வாஸ்தவமென்பதில் ஸந்தேஹமில்லை. திருக்-திருச்ய விபாகத்தினாலேயே, திருக்கைக் காட்டிலும் திருச்யம் வேறு என்றும், ஷை இரண்டிலும் ஒன்று மற்றொன்றினால் கண்டிக்கப்பட்டிருப்பதால் இரண்டுக்கும் அகண்டத்தன்மை கிடையாதென்றும் தெரிந்துகொள்ள வேண்டியதவசியம். அகண்டமான பிரம்மமும் அதற்கு அபின்னமான சக்தியாகிய மாயையும் பரிமிதமாகியதுபோல் முறையே ஜீவ ரூபமாகிய திருக்காகவும் பிரபஞ்ச ரூபமாகிய திருச்யமாகவும் விளங்குவதாகத் தோன்றுங்கால், திருக்குக்கு அனுபவிக்கக்கூடிய யோக்கியதையும் திருச்யத்திற்கு அனுபவிக்கப்படக்கூடிய யோக்கியதையுமுண்டாகின்றன. இவ்விருவித யோக்கியதையும் திருக் விஷயத்திலும் திருச்ய விஷயத்திலும் சில குறிப்பிட்ட நிபந்தனைகளுக்குட்பட்டிருக்கிறது. திருக்குடைய அனுபவ யோக்கியதை, அதாவது போக்தா என்ற தன்மை, மனது-இந்திரியங்கள் வகைறு கூடிய அந்தக்கரணத்தினால் பரிமிதப்பட்டும், திருச்யத்துடைய அனுபவிக்கப்படக்கூடிய யோக்கியதை, அதாவது, போக்கியம் என்ற தன்மை திருச்யத்தின் வியக்தத்தன்மையைப் பொறுத்ததாகப் பரிமிதப்பட்டு மிருக்கிறது. ஐந்து பூதங்களால் அமைக்கப்பட்ட, அதாவது, பாஞ்சபௌதிகமான ஸகல வஸ்துக்களும் திருச்யங்கள்தான். அவைகளில் ஜீவனாகிய போக்தாவுக்கு விஷயமாகக்கூடாத அவ்வியக்த தசையென்றும், விஷயமாகக் கூடிய வியக்த தசையென்றும் இருவகை தசையுண்டு. மனதுடன்கூடிய இந்திரியாதிகளினால் குறுகிக் கட்டுப்பட்டிருக்கிற ஸ்தானத்திலுள்ள போக்தா அவ்வியக்ததசையிலுள்ள

திருச்யத்தை அநுபவிக்கமுடியாது. திருக் போக்தா வாகக் குறுகி நிற்பதுபோல், திருச்யமும் தேச-கால-பதார்த்த ஸம்பந்தத்தால் குறுகி அடங்கி நின்றால்தான் அது போக்கியமாக அநுபவிக்கப்படக்கூடும். அக்னி, மின் சாரம் முதலான திருச்யங்கள் ஸாமான்யமென்ற அவ்யக்த தசையிலிருந்தால் இந்திரியாதிகளுடன் கூடிய அந்தக்கரணத்தின் கட்டுக்கடங்கியிருக்கிற பரிமிதமான யோக்கியதை யுள்ள போக்தாவாகிய ஜீவனுக்கு அநுபவவிஷயமாகா. அவை ஓரிடத்தில் கட்டுக்குட்பட்டு ஒளி ரூபமாகவாவது, ஒளி ரூபமாகவாவது, வேறு எவ்வகையிலாவது விசேஷமென்ற வியக்ததசையை அடைந்திருந்தால்தான் போக்கியங்களாக அநுபவிஷயங்களாகக்கூடியவை. ஆகையால், ஸாமான்யத் திற்கு அநுபவங்கிடையாது, விசேஷத்திற்குத்தான் அநுபவமுண்டு என்று சொல்வதெல்லாம் போக்தாவின் யோக்கியதைக் குறைவையுத்தேசித்தே சொல்லப்படுகிறது. திருக்-திருச்ய பேதமயமான பிரபஞ்சத்தில் அல்ப சக்தியுள்ள போக்தாவுக்கு போகவிஷயமாகக்கூடிய அல்பவியக்த நிலையி லிருக்கிற திருச்யத்திற்குத்தான் போக்யத்வமுண்டு. சுக-துக்க ரூபமான போகங்களெல்லாம் போக்தா என்ற ஸ்தானத்திலிருக்கிற அல்ப ஜீவனுக்கே ஏற்பட்டிருக்கிற படியால், அவைகள் திருச்யத்தின் வியக்தத்தன்மையாகிய விசேஷ தசையை அபேக்ஷிக்கிறதென்பது நியாயந்தான்.

8. பிரம்மனாந்தமோ விஷய சுகம்போலல்ல. அல்ப திருக்காகிய ஜீவனைப்போல் பிரம்மம் பரிமிதப்பட்டது மல்ல. ஆனந்தமே பிரம்ம ஸ்வரூபமாகையால், அது திருச்யமுமல்ல, மற்றொரு திருச்யத்தைச் சார்ந்து நிற்பது மல்ல. திருச்யத்தைப்பொறுத்து அண்டியிருக்கிற சுகத்தின் பொருட்டு எப்படி திருச்யத்தின் விசேஷ வியக்தத்தன்மை

அபேக்ஷிக்கப்படுகிறதோ, அப்படி ஒன்றிலும் அண்டி நிற்காத ஸ்வதந்திரமான அகண்ட பூர்ண பிரம்மானந்தம் யாதொரு அல்பமாகிய விசேஷத்தன்மையை அடைந்த போக்கியத்தையும் அபேக்ஷிக்கவில்லை. பசியே யில்லாமல் ஸ்வரூபத்திலேயே திருப்தியுடனிருப்பது வேறு, பசியின் பேரில் ஆஹாரத்தைச் சாப்பிடுகிற சுகத்தை அனுபவிப்பது வேறு. இப்படியே, ஸ்வரூபமாகவே அனுபவிக்கப்படுவது வேறு, தானல்லாத வேறொன்றுக்கு விஷயமாகி அனுபவிக்கப்படுவது வேறு. பின் சொல்லியதற்குள்ள நிபந்தனைகள் முன்சொல்லியதற்குக் கிடையாது. இந்த விபரத்தை அறியாமலும், விஷயசுகம் போலவே பிரம்மானந்தம் பெரிய சுகமென்று எண்ணியும், திருச்யப்பிரபஞ்சத்தில் சுகப் பிராப்தியின்பொருட்டு ஏற்பட்டிருக்கிற விதி-நிபந்தனைகளைப் பிரபஞ்சத்திற்கு அதீதமான பிரம்மானந்த விஷயத்தில் ஆரோபணஞ்செய்து, தாறுமாறான கக்ஷிகளைச் சொல்லிக் கொண்டு முன்குறிப்பிட்ட பிரகாரம் சிலர்கள் அஜ்ஞானி ஜனங்களின் புத்திகளைக் கலங்கச்செய்து கொண்டும், சுருதி விரோதமான தப்புக்கொள்கைகளைப் பிரசாரஞ்செய்து கொண்டும், தப்பு ஆசாரணைகளைக் கற்பித்துக்கொண்டும் ஹிந்து மதத்தை வேறுபடுத்தி வருகிறார்கள்.

9. பிரம்மானந்தம் விளங்கவேண்டுமானால் பிரம்மமாகவே யிருந்தால் போதும். ஆத்மாவே பிரம்மமென்று சுருதி வெளியிட்டிருப்பதால், ஆத்மஸ்வரூபத்தை நன்றாகக் கிரமப்படி விசாரித்துத் தெரிந்துகொண்டு, ஆத்மாவல்லாததும் அனாதிகாலமாய் சுமக்கப்பட்டு எண்ணத்தொலையாத கஷ்டங்களைக் கொடுத்து வந்திருக்கிறதுமான வீண் அனாத்ம பாரங்களை இறக்கிவைத்துவிட்டு சும்மாயிருந்தால் போதும். ஜீவனுக்கு சும்மாயிருப்பதுதான் கஷ்டமாயிருக்கிறது. கஷ்

டப்படுவதே சுகமென்று எண்ணப்பட்டுவந்திருக்கிறது. விஷயசுகத்தை ஸம்பாதிப்பதற்காகப் பெரும் கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டு, ஆத்மானந்தத்தை விளங்கவொட்டாமலே செய்து வந்திருக்கிறான். ஆனால், ஆத்மானந்தம் வேண்டாமென்று எண்ணமுண்டா? அதுவுமில்லை. எக்காலத்திலும் குறைவில்லாத பேரானந்தம் வேண்டுமென்று இச்சைகொண்டே, அது விளங்கக்கூடாதவிதமாகவே பிரயத்தினங்களைச்செய்து வருகிறான். இதற்குக் காரணம் தத்வத்தைத் தெரிந்து கொள்ளாமைதான். ஒவ்வொரு ஜீவனிடத்திலும் ஸ்திரமாய் நின்று வருகிற உண்மையான ஆத்மத்வமும் மாறிமாறிக் கொண்டேயிருக்கிற வெறும் தோற்றமாகிய ஜீவத்வமுமிருக்கின்றன. ஆத்மத்வஸம்பந்தத்தில் அகண்டமான பிரம்மானந்தம் எப்போதும் ஸ்வதஸ்ஸித்தமாயுள்ளது. ஜீவத்வஸம்பந்தத்தில் முன் சொல்லியபடி அல்பமான சுக-துக்கங்கள்தான் மாறிமாறியேற்பட்டுக் கொண்டேயிருக்கக்கூடியவை. எதுவரையில் ஒருவனுக்குத் தன்னிடத்தில் ஜீவத்வபுத்தியிருக்கிறதோ அதுவரையில் அவனுக்கு திருச்யப்பிரபஞ்சம் வாஸ்தவமென்ற எண்ணமுமிருக்கும். ஜீவத்வ புத்தியினால்தான் தன்னிடம் போக்தா என்ற தப்பு பாவனையும் திருச்யத்தில் போக்யத்வ பாவனையும் கூடவேயிருந்து வரும். எப்பொழுது தன்னிடத்தில் உறுதியான அகண்டாத்மபுத்தி ஏற்படுகிறதோ, அப்பொழுதே தன்னுடைய போக்திருத்வபாவனை நீங்கிப்போவதுடன் அது முதலே திருச்யபதார்த்தங்களிலுள்ள மாறுதலையடையக் கூடிய தோற்றங்களும் தன்னுடைய பார்வையிலிருந்து கிரமமாய் மறைவை யடைந்து, உள்ளும் வெளியும் எங்கும் ஒரே விதமாய், அதாவது, உள்-வெளி என்ற பேதப்பார்வையே அற்றுப்போய், அகண்டமான ஆத்மானந்தானுபவமே முடிவில் ஸித்திக்கும்.

10. ஓர் உதாஹரணமெடுத்துக்கொள்ளலாம். நாடகத்தில் ஒரு தனிகனான புருஷன் பிச்சைக்காரிவேஷம் போட்டுக் கொண்டு கிழட்டு ஸ்திரீயாகவே நடித்துவருகின்றான். இந்த வேஷதாரியிடத்தில் இரண்டு தன்மைகளிருக்கின்றன, ஒன்று பொய்யான வெறும் தோற்றமாகிய கிழட்டுப் பிச்சைக்கார ஸ்திரீத்தன்மை, மற்றொன்று உண்மையானதும், ஸ்திரமாயுள்ளதும், பலம் ஐசுவரியம் இவைகளுடன் கூடியதுமான புருஷத்தன்மை. எதுவரையில் தன்னை இப் பிச்சைக்காரியாகவே பாவித்து நடித்துவருகிறானோ, அதுவரையில் அவனுடைய உண்மையான புருஷபலமும் மனோதைரியமும் ஐசுவரியமும் மறைவடைந்ததாகவே காணப்படுவதுமல்லாமல், பிச்சைக்காரக்கிழவிக்குள்ள அச்சமும், தைன்யமும், நடுக்கமும், மற்றும் பரிதபிக்கப்படக்கூடிய நிலைகளுமே மேலிட்டுக் காணப்படும். கெஞ்சிப் பிச்சையெடுப்பதாக நடித்துவரும் ஸமயத்தில் கண்ணீரைச் சொரிந்துகொண்டே பிச்சை கேட்கவேண்டுமானால், தன்னை உண்மையான பிச்சைக்காரியாகவே எண்ணிக்கொண்டாலொழிய கண்ணீர் வர மாட்டாது, கண்ணில் தீனப்பார்வையும் வாக்கில் தீன ஸ்வரமும் சரியாக இருக்கவும் மாட்டாது. தான் ஸ்திரீதானென்று எண்ணினாலொழிய அடக்கம், லஜ்ஜை முதலான ஸ்திரீதர்மங்களும் வெளியாகமாட்டா. நன்றாக பிச்சைக்காரியாகவே ஆடிவருகிற வேஷதாரி இப்படி ஆடிவருங்காலத்தில் தன்னை உண்மையான பிச்சைக்காரியாகவே பாவித்து ஆடியிருக்கிறானென்பதில் ஸந்தேஹமில்லை. அதாவது, தன்னுடைய சொந்தநிலைமையை மறந்து வேஷத்திற்கு அனுகுணமாகவேயிருந்து வந்திருக்கிறானென்பதே நிச்சயம். இப்படியே அடிக்கடி ஆடிப்பெயர் வாங்கினவனுக்கு எங்கும் நாடகங்களில் பிச்சைக்காரிவேஷமே போட்டுக் கொள்ளும்

படிக்கும் ஏற்படும். வாஸ்தவ பிச்சைக்காரக் கிழவிக்குள்ள நடையுடைபாவனைகளும் நாளுக்கு நாள் இவனிடத்தில் விருத்தியாகி ஸ்திரப்பட்டுக்கொண்டேவரும். இதுபோலவே, உண்மையில் நாம் அளவற்ற ஆனந்தஸ்வரூபியான ஆத்மாவாகவே இருந்தபோதிலும், அநாதிகாலமாக வெகு ஜன்மங்களில் ஜீவத்வபாவனையை பலவாறாக பலப்படுத்திக்கொண்டு கிஞ்சிஜ்ஞனும் சுக-துக்கங்களுக்கு பாத்தியப்பட்டவனுமான ஜீவனாகவே நடந்து வந்திருப்பதால், நம் ஆத்மத்வமும் அதற்குள்ள அகண்ட பிரம்மானந்தமும் மறைவடைந்திருப்பதுபோல் காண்கின்றன. எப்படி நாடகத்தில் ஸத்திய புத்தியை வைத்து ஒரு பிடி அரிசிப் பிச்சை வாங்குவதற்காக தீனஸ்வரத்துடன் கெஞ்சிக் கூத்தாடி கண்ணீர்விட்டுக் கதறும் ஸமயத்தில் நடனுடைய சொந்த ஐசுவரியம், பலம், தைரியம் முதலானது உபயோகப்படாமல் மேற்கண்டபடி மறைந்து நிற்கின்றதோ, அப்படியே உலகத்தில் ஸத்திய புத்தியை வைத்து அல்பமாகிய விஷயசுகத்தைத்தேடுவதிலும், அதற்கு ஸாதனமென்பதாக தனத்தை ஸம்பாதிப்பதிலும் பெரும்பாலும் முயற்சியைச் செய்து வருகிற பாமரன் விஷயத்தில் ஜீவத்வமே மேலிட்டு நின்று ஆத்மத்வம் மறைவடைந்ததாகவே எண்ண வேண்டும். விசேஷ ஐசுவரியம் தனக்கிருப்பதாகத் தெரிந்த தனிகன் பிடி அரிசி கிடைக்கவில்லையே யென்று துக்கப்பட்டுக் கெஞ்சிக்கதறமாட்டான். ஆனந்தஸ்வரூபியான ஆத்மாவாகவே தன்னைத் தெரிந்து கொண்டவன் துச்சமான இப்பூலோக வாழ்க்கையிலும் இந்திரிய சுகத்தைத் தேடுவதிலும் புத்தியைச் செலுத்தி ஓடி ஆடித்திரியமாட்டான். வாஸ்தவத்தில் தனிகனாக இருப்பவன் பிச்சைக்காரிவேஷம் பூண்டுகொள்வதற்குக் காரணம் அறியாமையாலுண்டான மோஹந்தான். அப்படி வேஷம்

போட்டுக்கொண்டு ஆடுவதிலேயே சுகமிருப்பதாக மோஹங் கொண்டு வேஷத்திற்குரிய துக்கங்களை அனுபவிக்கும்படி நேரிடுகிறது. இந்த துக்கங்களையே சுகங்களாக மோஹத்தி னால் நடன் எண்ணிக்கொண்டது போல், உண்மையில் ஆனந்தமில்லாத விஷயசுகங்களில் அவித்யா மோஹத்தி னால் ஜீவன் ஆனந்தமிருப்பது போல் தப்பாக எண்ணிக் கொண்டு வாஸ்தவத்தில் மேன்மேலும் அதிகமாகக் கஷ்டப் பட்டுக் கொண்டே யிருக்கிறான்.

11. மேற்கண்டபடி அஜ்ஞானத்துடனும் மோஹத் துடனுங்கூடிய நடனுக்குத்தான் பிச்சைக்காரித்தன்மை யுண்டேயல்லாது, உண்மையான தனிகஸ்தானத்தில் அத் தன்மை ஒட்டமாட்டாது. தனிகன் எப்போதும் தனிகன் தான். பிச்சைக்காரிவேஷம் போட்டு ஆடியதினால் உண்மை யிலுள்ள தனம் வேறெங்கும் போய்விடவில்லை. தன்னிடத் தில் ஆரோபிக்கப்பட்ட பிச்சைக்காரிஸ்தானத்தில்தான் கஷ்டங்களேற்பட்டன. வாஸ்தவஸ்தானத்தில் தனக்கு யாதொரு கஷ்டமும் வந்துவிடவில்லை. இப்படியே, அவித் யாமோஹத்துடன் கூடிய ஆரோபிதனான ஜீவனுக்குத்தான் பிரம்மானந்தம் தோன்றாமல் மறைபட்டு துக்காதிகள் ஏற் படுகின்றனவே யல்லாது, உண்மையான ஆத்மாவுக்கு ஆனந் தம் நஷ்டமாகிவிடவுமில்லை, கஷ்டம் வந்து விடவுமில்லை. நாம் சுகம் வேண்டுமென்று உலகத்தில் முயற்சி செய்து கஷ்டப்படுவதெல்லாம் நம்முடைய ஜீவத்வஸ்தானத்தில் நடக்கிறதேயல்லாமல், அதற்கு நம் ஆத்மத்வஸ்தானத்தில் யாதொரு ஸம்பந்தமுங் கிடையாது. நாடகத்தில் பிச்சை யில் கிடைக்கக்கூடிய அரிசியையாவது காசையாவது நடன் தன் வீட்டுக்குக் கொண்டுபோவதில்லை. பிச்சைக்காரிஸ்தா னத்தில் அவனுக்கு ஏற்படுகிற வசவுகளும் அவமானங்

களும் அவனுடைய உண்மையான நிலைமைக்கு ஸம்பந்தப் படக் கூடியவையல்ல.

12. ஆகிலும், உண்மையில்லாத ஸ்தானத்திலிருந்து கொண்டு ஏன் கஷ்டப்படவேண்டு மென்று ஆலோசிக்க வேண்டியதுண்டு. நடனுக்கு வாஸ்தவத்தில் தரித்திரதசை வராவிட்டாலும் அவன் தரித்திரதசையைத் தன்பேரில் ஆரோபித்துக்கொண்டு ஏன் கஷ்டப்படவேண்டும்? நாடகத்தில் ஆடும் ஸமயத்தில் வேஷத்திற்குத் தக்கபடி மனவில் துக்கத்தைத் தருவித்துக்கொண்டே நடிக்கவேண்டியதா யிருக்கிறது. தருவித்துக்கொண்ட துக்கமும் துக்கமே தவிர சுகமல்ல. நடன் கொஞ்சம் ஆலோசனை செய்து தனக்குப் பிச்சைக்காரி ஸ்தானத்தில் உண்டாகக்கூடிய கஷ்டங்களையும் கணக்குப் பார்த்து, தான் நன்றாக ஆடுவ தாக ஜனங்கள் சொல்லும் வார்த்தையினால் தனக்குண்டாகக் கூடிய ஸந்தோஷத்தையும் கணக்குப் பார்த்து, இரண்டை யும் ஒத்துப்பார்க்க ஆரம்பித்தால் அவனுக்கு அப்பால் வேஷம் போட்டுக்கொள்வதில் புத்தியுண்டாகமாட்டாது. இப்படி கணக்குப் பார்ப்பவர்களே அபூர்வம். எவராகிலும் கணக்குப்பார்க்க யத்தனித்தாலும் தப்பாகவே கணக்கை முடித்துவிடக்கூடும். வேஷம்போட்டு ஆடும்போது இக் கணக்குப்பார்ப்பது சிரமப்படும். மற்றக்காலங்களில் கணக் குப் பார்த்தால், முன்னால் ஆடியபோதுண்டான துக்கங் களின் வீர்யமெல்லாம் மறைந்து போய், ஸ்வல்ப துக்கந் தான் ஏற்பட்டதாகத்தோன்றும். இப்படிக் கணக்குப் போடுகிற காலத்தில் தன்னுடைய கியாதியே மனதில் மேலிட்டிருக்கக் கூடியதால், கணக்கின் முடிவும் தப்பாகவே யிருக்கும். இந்தப்படியே, உலகத்தில் விஷய சுகத்தை ஸம்பாதிக்க எவ்வளவு கஷ்டப்படவேண்டியதா யிருக்

கிறதோ, அவ்வளவு கஷ்டங்களையும் சரியானபடி கணக்கிட்டு, அவைகளின் பல ரூபமான சுகத்தையும், அந்த சுகத்தை யனுபவிக்கும்போதும் அதற்கப்பாலுமேற்படக்கூடிய பயன் ரூப துக்கங்களையும் அப்படியே கணக்கிட்டால், புத்தி யுள்ளவனுக்கு இந்த சுகமும் வேண்டாம் இந்த கஷ்டங் களும் வேண்டாமென்றே உறுதியாய்த்தோன்றும். எப்படி, பிசகில்லாமல் கணக்குப்போட்டுப் பார்க்கக்கூடிய நடன் கணக்கு முடிவில் தான் வேஷம்போட்டு ஆடுவதினுல் தனக்கு சுகம் மிச்சமில்லையென்றும் துக்கந்தான் அதி கரித்திருக்கிறதென்றும் தெரிந்து கொண்டுவிட்டால், தன் னுடைய வேஷதாரி ஸ்தானத்திலிருந்து தன் நோக்கத் தைத்திருப்பி தன் சொந்த தனிக ஸ்தானத்திலிருந்து கொண்டு ஸந்துஷ்டனுகவே யிருக்கக்கூடுமோ, அப்படியே நாமும் நம்முடைய ஜீவத்வ ஸ்தானத்தில் நமக்குண் டாகக்கூடிய சுக-துக்கங்களை ஒத்துப்பார்த்து பிசகன்னியில் கணக்கை முடித்து கவனித்தால் ஜீவத்வஸ்தானத்தில் நமக்கு விஷய சுகங்களே வேண்டாமென்றே முடிவு செய்துகொண்டு நம் ஆத்மத்வ ஸ்தானத்தில் சுத்தப்பிரம்மானந்திகளாகவே யிருந்து வருவோம். ஆனுல், நமக்குள் சரியானபடி கணக் குப்போட்டுப் பார்ப்பவர்கள் மிகவும் அரிது.

13. ஜீவத்வ நிலையில் பிசகாய் கணக்கைப் பார்த்து முடிவு செய்துகொண்டு ஏதோ சுகமே மிஞ்சிநிற்பது போல் நாம் தீர்மானித்துக்கொண்டபோதிலும், இந்த சுகத்தையும் தள்ளிவிடுவதே நலமென்றுதான் முடிவில் வெளியாகும். ஜீவஸ்தானத்தில் நாம் அனுபவிக்கக்கூடிய சுகம் எவ்வளவு பெரியதாயிருந்தாலும் அது பரிமிதந்தானென்பதில், அதா வது, முடிவுள்ளதாகையால் அளவுக்குட்பட்டதுதானென் பதில் ஸந்தேஹமில்லை. ஆத்மஸ்தானத்திலேற்படக்கூடிய

அபரிமிதமான அகண்டப்பிரம்மானந்தத்துடன் பரிமித மான ஜீவ-சுகத்தை ஒத்துப்பார்க்கக்கூடுமானல், இந்த அல்ப சுகத்திற்கு இருப்பே இருக்க முடியாது. தவிரவும், இந்த அல்ப சுகத்தில் புத்தி சென்றுகொண்டிருக்கிறவரை யில் பிரம்மானந்தம் கிட்டப்போகிறதுமில்லை. பிரம்மானந் தம் வேண்டுமானல் அல்ப சுகத்திலுள்ள இச்சையைத் தொலைக்கவேண்டும். எப்படி ஸ்வல்பமான விதை-தான்யத் தை புஜித்துவிடாமல் பூமியில் வீசி யெறிந்து விட்டால்தான் பின்னல் ஏராளமான தான்யம் கிடைக்குமோ, அப்படியே அல்பமான விஷய சுகங்கள் யாவற்றையும் தியாகஞ்செய் தால்தான் அனந்தமான பிரம்மானந்தம் தானகவே விளங் கும். விதையையும் பக்குவப்படுத்தி புஜித்து விடுவேன், நன்றாய் விளைந்து தான்யமும் கிடைக்கவேண்டுமென்றால் நடக்கமாட்டாது. விஷயசுகங்களையும் அனுபவிப்பேன் பிரம்மானந்தமும் வேண்டுமென்றால் இது ஒருக்காலமும் கிட்டாது. அல்பமான சுகத்தைத் தியாகஞ்செய்துதான் மேலான சுகத்தைக் கைக்கொள்ளக்கூடும். இது எக்காலமும் மாறுத தத்வம். ஆகையால், விஷயசுகத்தில் நன்மை யிருப்ப தாக எண்ணுபவர்களும் அதையும் பிரம்மானந்தப்பிராப்தி யின்பொருட்டு தள்ளிவிடவேண்டியது அவசியமென்பதே ஸித்தம்.

14. இங்கு ஓர் கேள்விக்கிடமுண்டு. ஜீவத்வ ஸ்தானத்தி லிருக்கிறவரையில் பிரம்மானந்தம் இன்னதென்றே தெரியப் போகிறதில்லை. இன்னதென்றே அறியப்படக்கூடாததில் ஜீவனுக்கு எப்படி இச்சை யுண்டாகக்கூடும்? அதை யுத் தேசித்துக் கையிலிருக்கிற சுகத்தையும் தியாகஞ்செய்வது எப்படி ஸாத்தியப்படும்? எந்த பூமியில் விதையைப் போடு கிறமோ அப்பூமியிலேயே பயிருண்டாவதையும் தான்யம்

கிடைப்பதையும் பார்த்திருக்கிறோம். ஆகையால், பின்னால் லாபம் கிடைக்குமென்ற உறுதியுடன் விதையைத் துணிந்து பூமியில் வீசிப்போட்டு விடுகிறோம். இவ்வித நம்பிக்கையும் துணிவும் புத்திக்கே எட்டாத பிரம்மானந்தப்பிராப்தி விஷயத்தில் எப்படி யுண்டாகும்? இப்படி யுண்டானாலொழிய விஷய சுகங்களைத் தள்ளிவிடுவதெப்படி? இது நியாயமான கேள்விதான். நம்பிக்கையில்லாவிடில் பிரவிருத்தி யுண்டாக மாட்டாதென்பது வாஸ்தவம். பிரம்மானந்த ஸ்வரூபத்தை வெளியிட்டிருக்கிற சுருதி வாக்கியங்களிலாவது, அவைகளை அனுஸரித்து நடந்து வந்து மேற்சென்று ஸ்வானுபூதியைப் பெற்றிருக்கிற மஹான்களுடைய வார்த்தைகளிலாவது நம்பிக்கையில்லாத ஜனங்களால் விஷயசுகத்தைத் தியாகஞ் செய்ய முடியாதென்பதும் வாஸ்தவமே. உலகத்தில் பெரும்பாலும் இவ்வித ஜனங்களேயிருந்துவருவதால்தான் விஷய சுகங்களையே கிரமப்படி ஒருவருக்கொருவர் இடைஞ்சலில்லாமலும், பரஸ்பரம் சண்டை சச்சரவு நேரிடாமலும், ஹிதமான மார்க்கத்தில் அனுபவிப்பதற்காக ஸாமான்ய பிரவிருத்தி நீதிகளும், இப்படி ஒவ்வொருவரும் அனுபவித்து வருவதில் அவருடைய ஸ்வபாவத்திலாவது, பரலோக விஷயமாகவாவது, பின்ஜன்மங்கள் ஸம்பந்தமாகவாவது கெடுதலுண்டாகாத விதமாகவும், காலக்கிரமத்திலாவது அவரை நிவிருத்தி மார்க்கத்தில் சேர்ப்பிவிக்கக்கூடிய விதமாகவும் பிரவிருத்தி தர்மங்களும் விதிக்கப்பட்டிருக்கின்றன. இங்கு விஷய சுகங்களைத் தியாகஞ்செய்யவேண்டுமென்று சொல்லப்பட்ட விபரம் முக்கியமாய் நிவிருத்தி தர்ம மார்க்கத்தில் பிரவேசித்திருப்பவர்களையும் பிரவேசிக்க எண்ணங்கொண்டிருப்பவர்களையு முத்தேசித்துச் சொல்லப்பட்டதாக அறிந்து கொள்ளவேண்டும். வேதாந்த குரு வாக்கியங்களில்

உண்மையான சிரத்தையுள்ள சரியான அதிகாரிக்குத்தான் நிவிருத்தி மார்க்கத்தில் பிரவேசிக்கமுடியும். ஒருக்காலமும் விதையைப்போட்டபோது பார்க்காமலும், அவ்விதையி லிருந்துதான் பயிருண்டாயிற்றென்பதை நேரில் தெரிந்து கொள்ளக்கூடாமலுமிருக்கிற சிறுவன், பெரியோரின் வார்த் தையை நம்பி, தானும் தன் கையிலுள்ள தான்யத்தை பூமி யில் விதைத்து வருவது எப்படியோ, அப்படியே வேதாந்த குரு வாக்கியங்களில் நம்பிக்கையை வைத்து விஷய சுகங் களைத்தியாகஞ்செய்து நிவிருத்தி மார்க்கத்தில் துணிவாகப் பிரவேசித்து குறிப்பிட்ட அப்பியாஸங்களைச் செய்பவருக் குக் காலக்கிரமத்தில் பிரம்மானந்தம் கைகூடுமென்பதில் சற்றும் ஸந்தேஹத்திற்கிடமேயில்லை.

15. இப்படி நிவிருத்தி மார்க்கத்தில் பிரவேசிக்கக்கூடி யவர்களுக்கு எவ்விதமான யோக்கியதையிருக்கவேண்டு மென்பதும், அம்மார்க்கத்தில் பிரவேசிக்கவேண்டிய பிரகார மும், பிரவேசத்திற்குப்பின்பு பிரம்மானந்தப்பிராப்தியின் பொருட்டுச் செய்யப்படவேண்டிய அப்பியாஸங்களும் தெளிவாய் சுருதியிலேயே வெளியிடப்பட்டிருக்கின்றன. சுருதியில் குறிப்பிட்ட மார்க்கத்திலேயே சென்று அப்பிய ஸித்தால்தான் பிரம்மானந்தம் ஸித்திக்கும். சுருதியினால் மாத்திரம் வெளியிடப்பட்டிருக்கிறபிரம்மானந்தத்தை சுருதி மார்க்க மன்னியில் வேறு வழியில் விளங்கச்செய்விக்க முடி யாது. சுருதி மார்க்கத்தை விட்டுச் சொந்தமாக ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட குறுக்கு வழியில் நிவிருத்தி தர்மத்தை அப்பியஸிப்பதாகச் சொல்லி வந்தால், இப்படி அப்பிய ஸிக்கப்பட்டது நிவிருத்தி தர்மமே யாகாது. காலக்கொடு மையால் வெகு பெயர்கள் சுருதியில் கண்ட நிவிருத்திக் கிரமத்தை அறிந்துகொள்ளாமலும், அல்லது உதாஸீனஞ்

செய்தும், தங்களுடைய அல்ப புத்திகளுக்குத் தோன்றிய வாறு தப்பு யுக்திகளைக்கைக்கொண்டு விதிவரம்பு மீறி அக்கிரமவழியில் துறவிவேஷம் பூண்டு மஹரிஷி, பரமஹம் ஸர், துரீயாதீதர், அவதூதர், வித்வத்ஸன்யாஸி என்ற பெரும் பெயர்களை வஹித்துக்கொண்டும், பின்னும் அப் பெயர்களால் குறிப்பிடப்பட்ட உண்மையான அப்பியாஸி களுக்கு சுருதியில் விதிக்கப்பட்டிருக்கிற தர்மங்களுக்கு நேர் எதிரிடையாக நடந்துகொண்டும், தாங்கள் விதிவரம்பு களைக்கடந்த மேலோர்களென்று பிதற்றிக்கொண்டும் அந் நியாயமாய் தாங்களும் கெட்டு உலகத்தையும் கெடுத்து வருகிறார்கள். இவர்களுக்கு வெறிபிடித்தால் போல் ஆரம்பத்தில் கொஞ்சகாலம் மும்முறமாக வைராக்கியமேற் பட்டு ஸகல பந்தங்களையும் தியாகஞ்செய்து விட்டதாக மனோபாவனையுண்டானாலும், இது நீடித்து நின்று அப ரோக்ஷஜ்ஞானத்திலாவது பிரம்மானந்தப்பிராப்தியிலாவது முடிவடையக்கூடியதல்ல. இது சிலகாலம் வரையில் தீவ்ர மான ஒழிவை வெளிக்காட்டி கடைசியில் அஜ்ஞானி ஜனங் களை மோஹப்படுத்தக்கூடிய கீழான ஹடயோகப்பிரகடனங் களிலும், மந்திர-தந்திர வியாபாரங்களிலும், கிருஹஸ்தரைப் போல் பணம் ஸம்பாதிப்பதிலும், மடம் கட்டிக் கொள்வதி லும், பாகம் செய்வித்து உண்பதிலும், சுகம் தேடுவதிலுமே முடிவாகும். சுருதிவிதிகளின்படி கிரமமாய் விஷய சுகங்களை யும் பிரவிருத்தி தர்மங்களையும் தியாகஞ்செய்து படிப்படி யாக மேற்சென்றவர் ஒருகாலத்திலும் திரும்பவும் கீழான ஆசரணைகளைக் கைக்கொள்ளமாட்டார். ஆகையால், உண் மையான சித்த பரிபாகத்தினால் நிவிருத்தி தர்மமார்க்கப்பிர வேசத்தில் இச்சைகொண்டவர், அப்படிப்பிரவேசிப்பதற்கு முன்பாகவே நிவிருத்தி தர்மத்திற்குரிய ஸகல சுருதிவிதி

களையும் ஆராய்ச்சிசெய்து தெரிந்துகொண்டும், தான் பின்னல் ஆசரித்து வரக்கூடிய தர்ம விபரங்கள் இன்னவைதானென்று மனவில் நிச்சயப்படுத்திக்கொண்டும், தன்னுடைய யோக்கியதைக்குத் தகுதியுள்ள நிவிருத்தி மார்க்கப் பிரிவில் இறங்கி மெள்ள மெள்ள மேற்சென்று, முடிவில் பிரம்மானந்தத்தை அடைவதின் மூலமாய் தன்னுடைய முக்கிய உத்தேசம் நிறைவேறும்படி செய்து, நடப்பு ஜன்மத்தைப் பயன் படுத்திக்கொள்ளவேண்டும்.

16. உண்மையான ஜ்ஞானமேற்பட்டு ஸமாதி காலத்தில் பிரம்மானந்தமே யாரால் அனுபவிக்கப்பட்டிருக்கிறதோ அந்த மஹானுக்கு விஷய சுகத்தில் மறுபடியும் இச்சையாவது ஷை சுகத்தைக்கொடுக்கக்கூடிய காரியங்களில் பிரவிருத்தியாவது உண்டாகாதென்பது நிச்சயம். பிராரப்த கர்ம சேஷத்தினல் போகானுபவ விஷயமான சில காரியங்கள் இவரிடம் காணப்பட்டாலும், இவர் தானுகவாவது மற்றவர்களைக்கொண்டாவது விசேஷப்பிரயத்தின பூர்வமாக சுகத்தின் அல்லது சுகஸாதனத்தின் ஸம்பாத்தியத்தில் இறங்கி வேலை செய்ய மாட்டார். இது ஸாதாரண ஜ்ஞானி விஷயம். ஜீவன்முக்த தசையை அடைந்த விசேஷ ஜ்ஞானி விஷயத்திலோ, அவருக்கு எப்போதும் இடைவிடாமல் பிரம்மானந்தானுபவம் தொடர்ந்தேயிருந்து பாஹ்யப்பிரதீதியே மிகவும் குறைவு பட்டிருக்குமாகையால், அவரால் மேற்கண்ட விசேஷப் பிரயத்தினங்கள் செய்யப்படுவதற்குக் காரணமேயில்லை. இக்காலத்தில் சிலர்கள் உண்மையில் அஜ்ஞானி ஸ்திதியிலிருந்துகொண்டே தங்களை ஜ்ஞானிகளாக அல்லது ஜீவன்முக்தர்களாகவே பாவித்துக்கொண்டும், பிரம்மானந்தம் தங்களுக்கு அனுபவஸித்தமென்றே காட்டிக்கொண்டும், வெகு விபரீதப் பிரவிருத்திகளைச் செய்து

கொண்டும், இதெல்லாம் லோகஸங்கிரஹத்தின்பொருட்டுச் செய்யப்படுவது போல் சொல்லிக்கொள்கிறார்கள். லோக ஸங்கிரஹ காரியம் இன்னதென்றே தெரிந்து கொள்ளாமல் தங்களுடைய சுருதி விருத்தமான செய்கைகளுக்கெல்லாம் இப்பெயரால் நாமகரணஞ்செய்துவிடுகிறார்கள். லோகஸங் கிரஹ கர்மம் பெரும்பாலும் பிரவிருத்தி-தர்மத்தைச்சேர்ந் தது. அதாவது, அது பிரவிருத்தி-தர்மமார்க்கத்திலிருப்ப வரால் செய்யப்படவேண்டிய ஸாமான்ய தர்மச்செய்கை. வாஸ்தவத்தில் ஜ்ஞான ஸித்தியைப்பெற்றிருப்பவராலும் அது செய்யப்படலாம். சுருதிவிதிகளின் பிரகாரம் யாருக்கு எந்தக்காரியத்தில் அதிகாரமிருக்கின்றதோ அவர் அந்தக்காரி யத்தை லோகஸங்கிரஹத்தை உத்தேசித்துச்செய்தால் நல்ல காரியந்தான். அபரோக்ஷ ஸாக்ஷாத்காரத்தை அடையாத வரும், நிவிருத்தி தர்மமார்க்கத்தில் பிரவேசித்திருப்பவரும், அம்மார்க்க விதி-நிஷேதங்களுக்குக் கட்டுப்பட்டிருப்பவரு மான அஜ்ஞானி-தார்மிகர் தான் செய்யக்கூடாத காரியத் தைச்செய்து கொண்டு, இது லோகோபகாரத்தின்பொருட் டென்றால் என்ன அர்த்தமோ தெரியவில்லை. தகாத காரியத் தைச்செய்தால் பாபமேயாகும். அதாவது, ஜ்ஞானியாவது அல்லது பிரவிருத்தி-தர்ம மார்க்கத்திலிருக்கிற கிருஹஸ்த ராவது செய்யக்கூடிய காரியங்களை நிவிருத்தி-தர்மமார்க்கத்தி லிருப்பவரும் ஜ்ஞானப்பியாஸகராக மாத்திரமிருக்கவேண் டியவருமான ஸன்யாஸீ செய்தால் துர்க்கதிதான் பலனாகும். ஓரே காரியம் ஒருவருக்கு தர்மமாகவும், மற்றொருவருக்கு அதர்மமாகவுமிருக்கலாம். அன்னதானத்தைச் செய்கின்ற கிருஹஸ்தருக்குப் புண்யமும், அதையே செய்கின்ற ஸன் யாஸிக்குப் பாபமும் வேதசாஸ்திரங்களில் சொல்லப்பட் டிருக்கின்றன. இப்படியே, லோக ஸங்கிரஹ காரியங்களை

ஸன்யாஸீ நேரிலாவது மனுஷ்யாளைக் கொண்டாவது செய்ய அல்லது செய்விக்கக்கூடாதென்று சுருதியில் வியக்த மாய் விதிக்கப்பட்டிருக்கின்றது.

லோகஸங்க்³ரஹயத்நாநி
நைவ ஸந்ந்யாஸிநா கார்யேஷு ||

ஒருவர் சுருதிவிதிகளுக்குக் கட்டுப்பட்டு நடந்தால் இவ ரைப்பார்த்து மற்றவர்களும் அவ்விதிகளுக்குக்கட்டுப்பட்டு நடந்து வந்து நல்ல கதியை அடையக்கூடும். இதுவே உண்மையான லோகோபகாரச் செய்கைதான். சுருதிக்கு விரோதமாக தான் நடந்து கொண்டும், தன்னைப்பார்த்து மற்றவர்களும் அப்படியே நடக்கும்படி செய்வித்தும், தன் னுடைய சுருதிவிருத்தமான காரியங்களுக்கு ஜனங்களை திரவ்யாதிகளால் உபகரிக்கும்படி செய்வித்தும் வந்தால், இவர் உலகத்திற்கு அபகாரஞ்செய்பவராகவும், ஜனங்கள் ஒத்தாசை செய்ததற்குப் பிரதி பலனாக பாபத்தையே பிரித் துக் கொடுப்பவராகவும் ஆவர். இது எவ்விதத்திலும் லோகோபகாரச் செய்கையாக மாட்டாது. உண்மையில் ஜ்ஞானத்தை யடைந்தவர் ஜ்ஞான நிஷ்டையிலிருந்து கொண்டிருப்பதே லோகோபகாரச் செய்கையாகும். இவ ரைப்பார்த்த மாத்திரத்தில் ஜனங்களின் ஆஸ்திகத்தன்மை யும் ஜ்ஞானத்தில் இச்சையும் விருத்தியடைந்து அவர்கள் நன்மார்க்கத்தில் விசேஷப்பிரயத்தினங்களைச் செய்யக் கூடும். இப்படியில்லாமல், ஸன்யாஸி-வேஷம் பூண்டவர் தான் ஜ்ஞானியென்று வெளிக்காட்டிக்கொண்டே தன்னு டைய மனுஷியாள் மூலமாய் பணவசூல் செய்வதிலும், மடம் முதலானது கட்டிக்கொள்வதிலும், மற்றும் ஸௌகரி யங்களைத் தேடிச்சேர்த்துக்கொள்வதிலும் முயற்சியுள்ள

வராகக் காணப்பட்டால், ஜ்ஞானமே பிரயோஜனமில்லை யென்றும், ஜ்ஞானத்தினுலேற்படுவதாய்ச் சொல்லப்படுகிற பிரம்மானந்தமென்பதெல்லாம் வெறும் பேச்சென்றும், பணத்தினுலும் நல்ல ஜாகை முதலான ஸௌகரியங்களினு லும் ஏற்படுகின்ற சுகங்களே பெரியதென்றும் பெரும் பாலும் ஜனங்களுக்குத் தோன்றி, அவர்களுடைய ஏற்கன வே பலமாயிருக்கிற அஜ்ஞானம் அதிகமாக உறுதிப்பட்டுப் போகும். இது உலகத்திற்கு அபகாரச்செய்கையைத்தவிர வேறல்ல. வாஸ்தவத்தில் ஜ்ஞானத்திலும் பிரம்மானந்தப் பிராப்தியிலும் உத்தேசமுள்ளவர் தானும் சுருதிவிதிகளை யனுஸரித்து நடந்துகொண்டு தன் நடத்தையினுல் மற்றவர் களையும் அவரவர்களுக்குள்ள விதிப்பிரகாரம் ஒழுங்காக நடந்துவரும்படியாகச் செய்விப்பதே மேற்சொல்லியபடி பெரும் லோகோபகார காரியம். உண்மையில் ஜ்ஞானி யாகவாவது ஜீவன் முக்தராகவாவது இருப்பவர் அஜ்ஞானி ஜனங்களின் புத்திகளில் விபரீத பாவனைகள் உண்டாகும் படி நடந்துவரமாட்டார். இவர் விதி-நிஷேதங்களுக்குக் கட்டுப்பட்டவரில்லையானுலும், மற்ற ஜனங்கள் தன்னைப் பார்த்துவிட்டு சுருதி விரோதமாய் நடந்து கெட்டுப்போகா மலிருக்கும்பொருட்டு தானும்அவ்விதிகளுக்கு அனுஸரணை யாகவே நடந்து வருவார். தான், மற்றவர் என்ற வித்தி யாஸப்பார்வையே யில்லாமல் எங்கும் பிரம்ம திருஷ்டியே உறுதிப்பட்டிருந்து பாஹ்ய விருத்தியில்லாமல் பிரம்மானந் தத்திலேயே பரிபூர்ணமாய் ஆழ்ந்திருக்குங்காலத்திலும் சுருதி விருத்தமான செய்கைக்கு அவகாசமே இராது. ஆகை யால், சுருதி விதிகளை மீறி தன்னுடைய ஸௌகரியாதி களுக்கு அனுகூலமாக நடந்து வருபவர் ஜ்ஞானியல்லவென் பதே நிச்சயம்.

17. பிரம்மானந்தம் பிரகாசிக்க வேண்டுமானால் பிரம்ம மாகவேயிருந்தால் போதுமென்றும், சுருதிவாயிலாக எதெல்லாம் பிரம்மம் அல்லவென்று தெரியவருகிறதோ அதெல்லாவற்றையும் தள்ளி ஒதுக்கிவிட்டு நின்றால் போதுமென்றும் முன்னாலேயே சொல்லப்பட்டது. இப்படித்தள்ளுவதுதான் தியாகம் என்று சொல்லப்படுகிறது. இந்தத்தியாகத்தினால் தான் முக்தி நிலையை ஸம்பாதித்துக்கொண்டு பிரம்மானந்தத்தை அனுபவிக்கலாம். எது பிரம்மம் அல்லவென்று விசாரிக்குங்கால் நமக்கு இப்பொழுது புலப்படாதது போலிருக்கிறதும், இந்திரியங்களுடன் கூடிய மனஸினாலும் புத்தியினாலும் அறியப்படக்கூடாததும், நம்மிடத்திலும் வெளியிலும் எங்கும் அறிகிறவனுக்கும் அறியப்படக்கூடியதற்கும் பொதுவாகவும், ஏகமாகவும், அகண்டமாகவுமிருப்பதாகச் சொல்லப்படுகிற ஸர்வாதாரபூத-அதிஷ்டானப்பொருளாகிய சுத்தாத்மாவைத்தவிர மற்றதெல்லாம் பிரம்மமல்லவென்று தெரியவருவதால், எல்லாவற்றையும் தள்ள வேண்டியதுதானென்று ஏற்படுகிறது. ஆகிலும், ஸகல இந்திரிய-மனோ விஷயங்களையும் அவைகளின் மூலமாயுண்டாவதாக எண்ணப்படுகிற சுகங்கள் யாவற்றையும் தள்ளிவிடவேண்டுமென்று ஸாமான்ய ஜனங்களிடம் சொல்லுவதில் உபயோகமில்லை. ஆனால், இப்படித்தள்ளிவந்தாலொழிய உண்மையான பிரம்மானந்தம் விளங்கப்போகிறதுமில்லை. ஆகையால், எல்லோரிடத்திலும் அளவற்ற கருணையினால் தாய் ஸ்தானத்திலுள்ள சுருதி எல்லா ஜனங்களும் மெள்ள மெள்ள அவரவர்களுக்குத் தக்கவிதங்களில் கொஞ்சங் கொஞ்சமாகத் தியாகத்தைச் செய்து கொண்டு வரட்டுமென்ற உத்தேசத்துடன், நேராகத்தியாகஞ்செய்யவேண்டுமென்று சொல்லாமல், முடிவில் தியாகத்திலேயே அப்பியா

ஸம் எவ்விதம் பலப்படுமோ அவ்விதமாகவே, மறை பொரு ளாக பிரவிருத்தி தர்மங்கள் என்று பெயரிட்டு, பலவாறாக தர்மங்களை விதித்து வந்திருக்கிறது. மனிதனுக்குப் பெரும் பாலும் பிரவிருத்தியிலேயே நோக்கமிருப்பது பற்றி, ஷை பிரவிருத்தி தர்மங்களை யேற்படுத்தியதுடன் ஷை தர்ம காரி யங்களை அவன் உத்ஸாஹத்துடனும் செய்துவரும் பொருட்டு பல ஆசை வார்த்தைகளையும் சுருதியே சொல்லி வந்து மிருக்கிறது. ஆனால், ஆசையே பின்னால் மறைந்து போகும்படியான விதமாகவும் ஷை தர்மங்கள் அத்புதமாக அமைக்கப்பட்டுமிருக்கின்றன. அவரவர்களின் ஸ்தானத்திற் குத் தகுதியுள்ளதும், தனித்தனியே விதிக்கப்பட்டிருப்பது மான உபாஸனையுடன் கலந்த கர்மரூபங்களாகிய தர்மங்கள் கிரமமாய் ஆசரிக்கப்பட்டு வரும்போது கடைசியில் அவை களின் பலனில் இச்சையே யில்லாமலேற்பட்டு, அவைகள் கர்ம-பக்தி-யோக ரூபமாய் முடிவடைந்து, சித்தத்தை சுத்தி செய்தும் நல்வழியில் ஓர்மைப்படுத்தியும், மேலே மனப் பூர்வமாகவே ஸகலத்தியாகத்தையும் செய்து விடக்கூடிய யோக்கியதையையும் கிரமமாய் விருத்திசெய்து விடுகின்றன.

18. இவ்வித யோக்கியதை பூர்ணமாயேற்பட்டு ஸர்வத் தியாகத்தைச் செய்துவிட்டவருக்கு ஒன்றிலும் பற்றுதலா வது விஷய சுகங்களில் ஆசையாவது கொஞ்சமேனுமிருக்க மாட்டாது. இப்படியே, ஞாதிகளென்றும் பந்துக்களென் றும் ஸ்னேகிதர்களென்றுமுள்ள அபிமானங்கள் யாவற்றும் அற்றுப்போய்விடும். ஆனால், இவ்வளவிருந்தும் இவருக்கு பிரம்மானந்தம் விளங்காமலேயிருந்து வரும். ஏன் ? தியாக மே மோக்ஷானந்தத்திற்குக்காரணமென்று சுருதியே சொல் லும்போது, இவ்வளவு பரிபூர்ணமான தியாகத்தைச்செய் தும் இவருக்கு பிரம்மானந்தானுபவமில்லாததற்குக் காரண

மென்ன? ஏற்பட்டிருக்கிற தியாகம் உத்தமத்தியாக மென்பதில் தடையில்லை. ஆனால், அதை பரிபூர்ணத்தியாகமென்று எண்ணினது மாத்திரம் சரியல்ல. தியாகம் பூர்ணமாவதற்கு இனியுஞ் சில பெரும் அப்பியாஸங்கள் செய்யப்பட வேண்டியவைகளாயிருக்கின்றன. இவ்வுலகத்திலும் வேறு உலகங்களிலும் தனக்குண்டாகக்கூடிய சுகங்கள் யாதொன்றும் தேவையில்லையென்று வெறுத்துத்தள்ளினது வாஸ்தவந்தான். ஆனால், தன்னைத் தவிர மற்ற ஜீவ கோடிகளும், பதார்த்தங்களும், இவைகளடங்கிய திருச்யப்பிரபஞ்சமுமிருக்கின்றன வென்ற புத்தி மாறவில்லை. தியாகஞ்செய்வதென்றால் தன்னை விட்டு வெளியில் வீசி யெறிந்து விடுகிறதென்றுமாத்திரம் அர்த்தமல்ல. வீசி யெறியப்பட்டதில் பின்னால் மறுபடியும் விருப்ப முண்டாகலாம். பசியில்லாத காலத்தில் விட்டெறியப்பட்ட பழத்தை மறுபடியும் பசியுண்டானால் தேடக்கூடும். பசியே உண்டாகாமலிருக்குமானால்தான் தேடாமலிருக்கலாம். பிரபஞ்சத்தில் தனக்கு ஒன்றும் வேண்டியதில்லையென்று எண்ணினால் மட்டில் தியாகம் பூர்ணமாகாது. சுருதி முகமாய் உண்மையில் பிரம்மம் ஒன்றுதான் வாஸ்தவமாயுள்ளது, மற்றதெல்லாம் மித்யை, ஜீவனே உண்மையில் அந்த பிரம்மந்தான் என்று வியக்தமாய் தெரியவரும்போது, பிரபஞ்சமே வாஸ்தவமல்ல, தான் ஆசைப்படக்கூடிய விஷயங்களே உண்மையில் கிடையாது, போக்கிய வஸ்துக்களே கிடையாதாகையால் தான் போக்தாவுமல்ல, தன்னைத்தவிர வேறொன்றுக்கும் வாஸ்தவத்தில் இருப்புக்கிடையாது, தானே நித்திய-பூர்ணானந்த ஸ்வரூபி என்பதான உறுதியுள்ள ஜ்ஞானம் ஏற்பட்டு எப்போது தன் ஆத்மாவினாலேயே அனாத்மத் தோற்றங்களடங்கிய ஸர்வப்பிரபஞ்சமும் மூடப்பட்டும் வியாபிக்கப்பட்டும்

அது இருந்த இடமே தெரியாமலும் திரும்பவும் தோன்றாம லும் மறைந்து விடுமோ, அப்போதுதான் தியாகம் பரி பூர்ணத் தியாகமாகும். இந்தத்தியாகத்தின்பொருட்டுள்ள அப்பியாஸத்தில் பிரவேசிப்பதுதான் நிவிருத்தி-தர்ம-மார்க் கப்பிரவேசமென்று சொல்லப்படுகிறது. இவ்வப்பியாஸத் திற்குத்தான் முக்கியமாய் ஜ்ஞானாப்பியாஸமென்றுபெயர். முன் சொல்லப்பட்ட ஸாமான்ய வெளிப்படையானத்தியா கத்தைச் செய்து விட்டு, மேலான நிவிருத்தி-தர்மத்தைக் கைக்கொண்டு சுருதிவிதிகளின்படி சிரவண-மனன-நிதித்தி யாஸனங்களை ஒழுங்காய்ச் செய்து அத்வைதஜ்ஞானத்தை யடைந்து பிரம்மானந்தியாக நிற்பதே உண்மையான ஸர் வோத்தமத்தியாகத்தின் பலனாகும்.

19. மேற்கண்டபடி ஜ்ஞானத்தின்பொருட்டு நிவி ருத்தி-மார்க்கத்தில் பிரவேசிப்பதற்காக ஸாமான்யத்தியாகத் தைச் செய்வதுதான் விவிதிஷா ஸன்யாஸமென்று சொல் லப்படுகிறது. இக்காலத்தில் ஸாக்ஷாத் அபரோக்ஷப்பிரம்ம ஜ்ஞானிகள் மிகவும் அரிதாகையால், உண்மையாய் வித்வத் ஸன்யாஸஞ்செய்துகொள்ளக்கூடிய ஜ்ஞானிகளைக்காண்பது முடியாத காரியம். விவிதிஷா ஸன்யாஸத்தினால் சிரவண- மனன-நிதித்தியாஸன ரூபமாகிய ஜ்ஞானாப்பியாஸத்திற்கு விசேஷ ஸௌகரியங்கள் உண்டாகக்கூடியவை. ஸன்யாஸஞ் செய்தும் மறுபடியும் பிரவிருத்திகளில் புத்தியைச் செலுத்தி னால் ஷை ஸௌகரியங்களில்லாமல் போவதுடன் செய்யப் பட்ட ஸன்யாஸமும் வியர்த்தமாகிவிடும். ஸன்யாஸத்தைச் செய்து சுருதியில் ஸன்யாஸிகளுக்குச் சொல்லப்பட்டிருக் கிற விதிகளின்படி தவறாமல் நடந்துகொண்டு ஜ்ஞானாப் பியாஸத்தைச் செய்தால்தான் மேற்கண்ட ஸாமான்யத் தியாகம் காலக்கிரமத்தில் பரிபூர்ணத்தியாகமாகி பிரம்மானந்

தம் கைகூடும். ஸன்யாஸத்திலேயே மோக்ஷம் ஸித்தித்து விடுமென்று எண்ணுவதெல்லாம் அறியாமைதான். ஜ்ஞானுப்பியாஸத்தைச் செய்ய வேண்டியதே ஸன்யாஸியின் முக்கிய காரியம். ஜ்ஞானத்தைத்தவிர மோக்ஷமென்ற பிரம்மானந்தப்பிராப்திக்கு வேறு அந்தரங்கஸாதனம் கிடையாது. முன் விவரித்தபடி ஜ்ஞானத்தினுல்தான் தியாகம் பரிபூர்ணத்தன்மையை அடைக்கூடும். ஸாமான்யத்தியாகத்தினுல் ஜ்ஞானப்பிராப்தியின்பொருட்டு ஸௌகரியங்களும், ஜ்ஞானத்தினுல் தியாகத்திற்குப் பூர்ணத்தன்மையும் ஏற்படுவதினுல், தியாகமும் ஜ்ஞானமும் பரஸ்பரஸாதனரூபங்களென்றும் சொல்லலாம். ஆகையால், முமுக்ஷுவிஷயத்தில் இவ்விரண்டுமே பிரதானமானவை. இவ்விரண்டும் சேர்ந்தே பிரம்மானந்தப்பிராப்திக்கு அந்தரங்கஸாதன மென்பதாகச் சொல்ல வேண்டும். ஜ்ஞானத்துடன் சேராத வெளிப்படையான தியாகமாவது, பூர்ணத்தியாகத்தில் முடிவடையாத ஜ்ஞானமாவது பிரம்மானந்தத்தை விளங்கச் செய்விக்க முடியாது. இக்காரணத்தினுல், ஸன்யாஸிகள் வெகு ஜாக்கிரதையுடனிருந்து இவ்விரண்டையுஞ் சேர்த்து பலப்படுத்துவதான நோக்கத்திலேயே அப்பியஸித்துவரவேண்டும். தவிரவும், நாளுக்குநாள் மேன்மேலும் விஷயங்களைத் தள்ளிக்கொண்டே போகவேண்டுமே யொழிய, தள்ளின விஷயங்களையாவது அல்லது புதிதான விஷயங்களையாவது ஸ்வீகரிப்பதில் புத்தியைச் செலுத்திவிடக்கூடாது. சுருதியில் உபநிஷத்பாகங்களில் சொல்லப்பட்டிருக்கிற பிரகாரம் ஜாக்கிரதையுடன் நடந்து வந்தால்தான் தடையின்றி சீக்கிரத்தில் மேற்சென்று மோக்ஷானந்தத்தை அடையலாம். சுருதிவிதிகளுக்கு எதிரிடையான ஸம்பிரதாய வழிகளிற் சென்று தன் முக்கிய உத்தேசத்தைக் கெடுத்துக் கொள்ளலாகாது. எவ்

வளவு பெரியோர்களால் ஆசரிக்கப்பட்டு வந்திருந்தபோதி லும் சுருதிவிருத்த ஸம்பிரதாயங்கள் தள்ளத்தகுந்தவை களே. சுருதி ஒன்றே கதியென்று பூர்ணமாய் நம்பி சுருதி மார்க்கத்திலேயே சென்று கொண்டிருப்பவரை வேத புருஷ ஞகிய பரமேசுவரர் கைவிடமாட்டா ரென்பதிலும், எப்படி யாவது பிரம்மானந்த பூர்ணமான தன் ஸ்தானத்திலேயே கொண்டுபோய் சேர்த்து விடுவாரென்பதிலும், கொஞ்சங் கூட ஸந்தேஹமின்றி தைரியத்துடன் உறுதியாயிருக்கலாம்.

20. மோக்ஷத்தில்தான் பிரம்மானந்தானுபவம் பூர்ண மாயிருக்குமென்பதும், பந்தத்திற்குட்பட்டிருக்கிறவரையில் அவ்வானந்தம் இராதென்பதும் எல்லோராலும் நிச்சயமாக ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். ஆனால், முன் பாராக்களில் குறிப்பிட்டபடி தியாகத்துடன் சேர்ந்த ஜ்ஞானந்தான் மோக்ஷஸாதன மென்பதை ஸ்ரீவைஷ்ணவர் முதலான [1] துவை தவாதிகள் ஒப்புக்கொள்ளாமல் பக்தியையே மோக்ஷத் திற்கு அந்தரங்க ஸாதனமாகவும் ஜ்ஞானத்தை பக்திக்கே ஸாதனமாகவும் சொல்லுகிறார்கள். இவ்விஷயத்தில் அத்வை திகளுக்கும் ஷை துவைதவாதிகளுக்குமுள்ள பெரும் அபிப் பிராய பேதத்தைத் தீரவிசாரிக்க ஆரம்பித்தால் உண்மையில் அபிப்பிராயபேதமே இல்லை யென்றே வெளியாகும். துவை தவாதிகள் மோக்ஷஸ்தானமென்று எதைக் குறிப்பிடுகிறார் களோ அந்த ஸ்தானத்தை அடையவும் அதிலேற்படக் கூடிய சுகத்தை அனுபவிக்கவும் வேண்டுமானால் பக்தி ஒன் றே முக்கிய ஸாதனமென்பதை அத்வைதிகள் ஆக்ஷேபிக்க

---

1. ஸாமான்யமாய் விசிஷ்டாத்வைதமென்று சொல்லப் படுவதை நன்ருக நிர்வசனஞ் செய்து பார்த்தால் அது துவைதமாகவே வெளியாகிறபடியால், அதுவும் துவைத மென்றே இப்புஸ்தகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

வில்லை. அன்றியும், முன்பாராக்களில் கண்ட ஏகத்வஸித்தியுடன் கூடிய அபரோக்ஷ ஆத்மஜ்ஞானம் உண்டென்பதாகவே த்வைதவாதிகளுக்குத் தெரியாமல், அல்லது அவர்கள் ஒப்புக்கொள்ளாமல், குருவிடமிருந்தும், சாஸ்திரம் மூலமாகவும், வேறுவிதமாகவும் ஏற்படக்கூடிய பரோக்ஷமான மனோவிருத்திரூபஜ்ஞானத்தையே அவர்கள் ஜ்ஞானமென்று சொல்லிவருவதால், இவ்வித பரோக்ஷ ஜ்ஞானம் பக்தியையுண்டாக்குவதற்கு ஸாதனமாகுமென்றும் இது மோக்ஷத்திற்கு நேர் ஸாதனமாகாதென்றும் அத்வைதிகள் ஒப்புக்கொள்ளவும் தடையில்லை. எம்மட்டில் உயர்ந்தலோகபதவிகளும் மேலான விஷய சுகபோகங்களும் இருப்பதாகவும், அவைகளை அடைய ஸாதனங்கள் இன்னவைதானென்றும் த்வைதவாதிகள் சொல்லுகிறார்களோ அம்மட்டில் அவர்கள் சொல்லுவதற்கும் அத்வைதிகள் சொல்லுவதற்கும் விசேஷ வித்தியாஸமேயில்லையாதலால், அவ்விஷயத்தில் த்வைதவாதிகளுடன் வியவஹாரஞ் செய்வதற்கு யாதொரு முகாந்திரமும் காணப்படவில்லை. ஆனால், த்வைதவாதிகள் போகக்கூடாத ஒரு ஸ்தானமும் அவர்கள் அடையக்கூடாத ஒரு ஆனந்தவிசேஷமும் இருப்பதாக அத்வைதிகள் சொல்லிக்கொண்டு த்வைத ஸ்தானத்தை அடையவும் த்வைத ஆனந்தத்தை அனுபவிக்கவும் ஒரு ஸாதனத்தைக் குறிப்பிடும்போது, த்வைத ஸ்தானத்தையும் அதில் கிடைக்கக்கூடியதையும் வாஸ்தவமென்று த்வைதவாதிகள் ஒப்புக்கொள்ள முடியாததால் அவைகளுக்கு ஸம்பந்தப்பட்ட ஸாதனமாகிய அத்வைத ஜ்ஞானத்தையும் அவர்கள் ஒப்புக்கொள்ளக்கூடவில்லை. இவ்விதமாய், அத்வைதிகளின் உயர்ந்த முக்கியக் கொள்கை த்வைதிகளுக்கு விரோதமாயிருப்பதாக எண்ணப்பட்டபோதிலும், த்வைதிகளின் கீழான கொள்கை அத்வைதத்திற்கு விரோதமில்லை.

21. பிரம்மானந்தப்பிராப்திக்கு எந்த அபரோக்ஷமான ஏகத்வஜ்ஞானத்தை நேர் ஸாதனமாக அத்வைதிகள் சொல்லுகிறார்களோ அந்த ஜ்ஞானத்திற்கு பக்தியே ஒரு ஸாதனம். பக்தி இருவகை, அதாவது அபரபக்தி, பரபக்தி. அபரபக்தியில் உபாஸகர் உபாஸ்யதேவதையை தன்னைக்காட்டிலும் வேறாகவே எண்ணி உபாஸிப்பார். பரபக்தியில் தனக்கு அபேதமாகவே உபாஸிப்பார். இவ்விரண்டுக்குள் பரபக்தி மேற்கண்ட ஜ்ஞானத்திற்கு நேர் ஸாதனமாகும். பரபக்தியினால் ஜ்ஞானமுண்டாவதை யுத்தேசித்து, பரபக்தியையே ஜ்ஞானமென்று வெகு பெயர்கள் எண்ணுகிறார்கள். ஆனால், இவ்விரண்டும் வெவ்வேறுதான். பரபக்தியில் ஏகத்வபாவனை செய்யப்படுகிறதே யொழிய ஏகத்வ அனுபவம் கிடையாது. இவ்வனுபவமுண்டானால் தான் ஜ்ஞான முண்டாயிற்றென்று சொல்லலாம். துவைதத்திலேயே புத்தியுள்ளவர்களுக்கு பரபக்தி யிருக்கக்கூடியதல்ல. துவைத நோக்கமுள்ள சைவ-வைஷ்ணவர்கள் கைலாஸம்-வைகுண்டம் போவதே மோக்ஷமென்று சொல்லுகிறார்கள். இப்பூலோக வாழ்க்கையை உத்தேசித்து அவ்வுத்தம லோக வாழ்க்கை வெகுகாலம் நீடித்திருக்குமாகையால், அது நித்தியமென்று சொல்லப்படுகிறது. ஆகிலும், அவ்வாழ்க்கைக்கும் முடிவுண்டு. அபரபக்திமான்களில் அனேகர்கள் நடப்பு கல்பத்தில் பூலோகத்திற்குத்திரும்பி வந்துவிடக்கூடும். சில மஹான்கள் மாத்திரம் நடப்பு கல்பம் முடிவு வரையில் அங்கிருந்து விட்டு வரப்போகிற கல்பாரம்பத்தில் இங்கு திரும்பி வருவார்கள். பரபக்திமான்களோ வெனில் இப்படி ஒரு காலத்திலும் திரும்பி வரமாட்டார்கள். இவர்களுடைய பரபக்தியின் பலத்தினால் அபரோக்ஷ ஜ்ஞானத்தை யடைந்து அவ்வுத்தம லோகத்தி

விருந்தே கைவல்ய மோக்ஷத்தைப்பெறுவார்கள். பரபக்தி மான்கள் கைலாஸம்-வைகுண்டம் போவதெல்லாம் அங்கு ஏற்படக்கூடிய ஜ்ஞான ஸாதனத்தை யுத்தேசித்தே ஒழிய, அதில் கிடைக்கக்கூடிய உத்தம சுகத்தையுத்தேசித்தாவது, அல்லது அதுவே மோக்ஷஸ்தானமென்று எண்ணங்கொண் டாவதல்ல. கைலாஸமும் வைகுண்டமும் திருச்யப்பிரபஞ் சத்திற்குட்பட்டவைகளே. அவைகளில் கிடைக்கக்கூடிய சுகமும் உத்தமமான விஷய சுகமேயன்றி பிரம்மானந்தமாக மாட்டாது. பரபக்தியைச் செலுத்தி கடைசியில் பிரம் மானந்த பூர்ணமான கைவல்ய மோக்ஷத்தின்பொருட்டு மேற்கண்டபடி ஸாதனமாக எண்ணி கைலாஸம்-வைகுண் டம் போகிறவருக்கு அங்கு போவதே கிரமமுக்தியாகும். கைவல்ய மோக்ஷத்திலேயே உத்தேசமில்லாமல் அபர பக்தி யின் பயன் ரூபமாக ஷை உத்தமலோகங்களுக்குப் போய், அப்பால் முன் சொன்னபடி திரும்பவும் பூலோகத்தில் ஜன் மம் எடுப்பவர்களுக்கு அப்படிப்போவதை மோக்ஷமென்று எக்காரணத்தினாலும் சொல்ல இடமில்லை. ஆகையால், உண் மையான மோக்ஷத்திலும் பிரம்மானந்தத்திலும் துவைத வாதிகளுக்கு உத்தேசமில்லாததினால், அவைகளுக்கு நேர் ஸாதனமாயுள்ள ஏகத்வஜ்ஞானத்திலும் அவர்களுக்குப் புத்தி யுண்டாவதில்லையென்பதும் ஆச்சரியப்படத்தக்க தல்ல.

22. விஷயசுகத்தில் இச்சையும், அதைத்தேடுவதில் பிரயத்தினமும் இருப்பதை பசு-பக்ஷி-மிருகங்களிடத்திலும் காணலாம். இது மனுஷியனுக்கு அஸாதாரண லக்ஷண மல்ல. ஆத்ம-ஸ்வரூபவிசாரஞ் செய்து இனி பிறப்பிறப் பில்லாமல் திருச்யப்பிரபஞ்சத்தை விட்டு வெளியேறி மோக்ஷானந்தத்தை அடைய வழி தேடுவதே மனுஷிய

னுடைய அஸாதாரணச் செய்கையாகும். இப்படி முக்தி பெற வழிதேடாமல், விஷய சுகங்களிலேயே உயர்ந்த சுகங்கள் கிடைக்கக்கூடிய ஸ்தானங்களுக்குப்போய் நீடித்து சுகித்து வாழ்ந்துவரவேண்டுமென்று உத்தேசித்தும், கடவுள் வேறு, தான் வேறு என்று பாவித்தும் அபரபக்தியில் ஈடுபட்டிருப்பவரை பசுவுக்கு ஸாமானமென்று சுருதியே வியக்தமாய்ச் சொல்லுகின்றது.

> அன்யோऽஸாவன்யோऽஹமஸ்மீதி ந ஸ வேத।
> யதா பசுரேவம் ஸ தேவானாம்॥

அபர பக்தியினுல் பக்தருடைய கீழான கோரிக்கை நிறைவேறுமென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனால், மனுஷியன் செய்யவேண்டிய விதத்தில் பக்தி செலுத்தப்படவில்லையென்று மாத்திரம் அர்த்தம். பரபக்திதான் மேலான ஜ்ஞானயோகத்திற்கும் அதின் மூலமாய் பிரம்மானந்தப்பிராப்திக்கும் ஸாதனமான பக்தியோகமாகும். மோக்ஷத்திற்கு ஸாதனமாகக்கூடிய பிரகாரம் பரபக்தியைச் செலுத்துவது தான் மனுஷியன் செய்ய வேண்டிய காரியமென்று தாத்பரியம். ஆனால், பக்திமார்க்கத்தில் பிரவேசிக்கும் காலத்திலேயே பரபக்தியைக்கைக்கொள்வது ஸாத்தியப்படமாட்டாது. ஆரம்பத்தில் அபரபக்திதான் கைக்கொள்ளத்தகுந்தது. அபரபக்தி முதிர்ந்து, ஈசுவரானுக்கிரஹமேற்பட்டு, அப்பால் தான் பரபக்தியில் புத்தியுண்டாகக்கூடும். எக்காலத்திலும் பரபக்தியே கூடாதென்று தீவ்ரமான விபரீத எண்ணங்கொண்டு அபரபக்தியிலேயே யிருந்து வருவது பிசகென்று மாத்திரம் இங்கு காண்பிக்கப்பட்டது.

23. பிரம்மானந்தப் பிராப்தியின்பொருட்டு ஜீவத்வ நிலையை விட்டு ஆத்மத்வ நிலையிலிருக்க வேண்டுமென்று

மூன் பலதடவை சொல்லப்பட்டது. யோகரூபமாகிய பர பக்தியினால்தான் இந்த ஆத்மத்வ நிலையை சீக்கிரத்தில் ஸாதித்துக்கொள்ளலாம். உபாஸகர் தன்னையும் தான் உபா ஸிக்கிற கடவுளையும் எப்படி ஒன்றாக பாவிக்கவேண்டுமென் பதின் பிரகாரமும் வேதசாஸ்திரத்தில் துலக்கப்பட்டிருக்கி றது. அல்பனும், கிஞ்சிஜ்ஜ்ஞனும், துக்கியும், ஜனன-மரணங் களுக்குட்பட்டவனுமான ஜீவனாகிய உபாஸகனும் நித்திய-சுத்த-புத்த-ஆனந்தஸ்வரூபியும் ஸர்வவியாபியுமான ஸர்வே சுவரனும் எப்படி ஒன்றாகக்கூடுமென்று கேட்கலாம். கிஞ்சிஜ்-ஜ்ஞனான உபாஸகனும் ஸர்வஜ்ஞனான ஈசுவரனும் ஒன்று என்று சொல்லக்கூடாதென்பது வாஸ்தவம். பல அல்ப குணங்கள் சேர்ந்து உபாஸகனிடத்தில் ஜீவத்வத்தையும், பல மஹா கல்யாணகுணங்கள் சேர்ந்து உபாஸ்யனிடத் தில் ஈசுவரத்வத்தையும் அமைத்துவைத்திருக்கின்றன. உபா ஸகன் தன்னையும் ஈசுவரனையும் ஒன்றாகவே பாவிக்கும் போது, ஈசுவரனிடமிருந்து தன்னை வேறுபடுத்திய தன்னு டைய அல்பகுணங்களை ஒதுக்கித்தள்ளியும், தன்னிடமி ருந்து ஈசுவரனை வேறுபடுத்திய ஈசவரனுடைய பெரும் கல் யாணகுணகணங்களையும் தள்ளி வைத்தும், இருவர்களிட மும் பொதுவாயும், ஸ்திரமாயும், தள்ளத்தகாததாயு மிருக்கிற ஆத்மப்பொருளை மாத்திரம் கவனித்து அது ஒன்றேயல்லாமல் பலவல்லவென்று உறுதியாய் பாவித்து வருவதே உத்தம பரபக்தியின் லக்ஷணம். இப்படி அடிக்கடி பாவித்து வந்தால், நாளுக்கு நாள் தன்னுடைய அல்ப குணங்கள் மறைந்தும், தன் ஜீவத்வபுத்தி மலினப்பட்டும், ஆத்மத்வபுத்தி பலப்பட்டும் வருவது மல்லாமல் ஈசுவரனு டைய மஹாகுணங்களும் தன் மனதை விட்டு விலகி அவரி டத்திலும் அவரால் வியாபிக்கப்பட்டிருக்கிற வெளிப்பிர

பஞ்சத்திலும் (அதாவது, எங்கும்) ஆத்மத்வபுத்தியே தன்னிடத்தில் உறுதிப்பட்டும் வரும். இப்படியே நாளுக்குநாள் ஆத்மத்வபுத்தி விருத்தியடைந்து அதிகமாய் பலப்பட்டும், ஜீவத்வபுத்தியும் திருச்யத்தின் பார்வையும் குறைந்து மலினப்பட்டும் வந்தால், காலக்கிரமத்தில் குருகடாக்ஷத்தினலும் ஈசுவரானுக்கிரஹத்தினலும் மேலான ஜ்ஞானப்பியாஸங்களும் பூர்த்தியாகி, ஆத்மானுபவம் தெளிவாய் ஏற்பட்டு ஜீவத்வ-திருச்யத்வ புத்திகள் மறுபடியும் தோன்றக்கூடாமலே மறைந்துபோய் பிரம்மானந்தமே நிரந்தரமாக விளங்கக்கூடும்.

24. அபரபக்தியில் மாத்திரமிருப்பவர்களுக்கு இவ்வித ஆத்மத்வஸித்திக்கே இடமிராதாகையால் அவர்களுக்கு பிரம்மானந்தானுபவமும் ஏற்படக்கூடியதல்ல; கைலாஸம்-வைகுண்ட மென்ற ஸகுணப் பிரம்மலோகத்தில் கிடைக்கக்கூடிய போகங்களையும் பகவானுடைய கைங்கரியசுகத்தையுமே பெரியதாயெண்ணிக்கொண்டும், தன் ஜீவத்வத்தையும் வரவர பலப்படுத்திக்கொண்டும், ஜீவனுக்குள்ள கதிகளையே தனக்கு உறுதிப்படுத்திக்கொண்டும் வரலாமேயொழிய உண்மையான பிரம்மானந்தம் கிட்டப் போகிறதேயில்லை. இப்படிச் சொல்வதினல் பகவத்கைங்கரிய சுகத்தை ரொம்ப தாழ்ந்த சுகமென்று சொல்லியதாக எண்ணிவிடக்கூடாது. சுகங்களுக்குள் பகவத்கைங்கரியசுகம் பெரியதே. ஆனல், மற்ற விஷயசுகம்போல் ஷை கைங்கரியசுகமும் அல்பமான ஆனந்தப்பிரதிபலனமேயல்லாமல் ஸாக்ஷாத் பிரம்மானந்தத்திற்கு ஒப்பாகமாட்டாதென்று மாத்திரம் சொன்னதாக அறிந்து கொள்ளவேண்டும். அன்றியும், ஷை கைங்கரியத்திலேயே சுகமிருப்பதினல்தானே அது செய்யப்படுகிறது? அவாப்தஸமஸ்தகாமனகவும் நித்தியதிருப்தராகவுமிருக்கிற

ஈசுவரனுக்கு பக்தர்களின் கைங்கரியத்தினால் ஆகவேண்டியது யாதொன்றுங் கிடையாது. ஷை கைங்கரியம் தங்களுக்கு சுகஸாதனமாகவே அபரபக்தர்களால் செய்யப்படுவதால், இந்தக் கைங்கரியமும் சுகந்தேடுகிற காரியமே யல்லாமல் வேறல்லவென்பதே நிச்சயம். முன் பலவாறாகச் சொல்லியபடி எதுவரையில் திருச்யப்பிரபஞ்சத்தில் கிடைக்கக்கூடிய சுகத்தில் இச்சையும் அதைத்தேடுவதில் பிரயத்தினமும் காணப்படுகிறதோ அதுவரையில் பிரம்மானந்தம் எட்டமாட்டாதென்பதும் நிச்சயம். ஷை இச்சையையும் பிரயத்தினத்தையும் பாக்கியன்னியில் பூராவாகத் தியாகஞ் செய்துவிட்டு சுருதியில் கண்டபடி பரபக்தியுடன் ஜ்ஞானாப்பியாஸத்தைச் செய்தால்தான் ஷை ஆனந்தம் லபித்திக்கக்கூடும். சரியானபடி தியாகத்தைச் செய்யாமலும் உண்மையான ஏகத்வ ஜ்ஞானத்தைத் தேடாமலும் வேறுவிதமான காரியங்களிலேயே புத்தி சென்று கொண்டிருந்தால் திருச்யப் பிரபஞ்சத்திலடங்கிய லோகங்களுக்குள்ளாகவே போக்குவரத்துடன் அலைந்துகொண்டே யிருக்கவேண்டியதுதானென்பதே உண்மை.

25. தியாகமும் ஏகத்வ ஜ்ஞானமும் சேர்ந்தே பிரம்மானந்தத்தை விளங்கச் செய்விக்குமென்று முன்னாலேயே காண்பிக்கப்பட்டது. எவ்விதம் துவைதவாதிகள் ஏகத்வ ஜ்ஞானத்திற்குப்பதிலாக பேதஜ்ஞானத்துடன் சேர்ந்த அபர பக்தியை மோக்ஷஸாதனமென்று எண்ணிக்கொண்டிருக்கிறார்களோ அவ்விதமாகவே ஸர்வத்தியாகத்திற்குப் பதிலாக அவர்களுக்குள் சைவர்கள் சில தீக்ஷைகளையும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒருவித சரணாகதிக்கிரமத்தையும் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். தியாகம் பூர்ணமாகவேண்டுமானால், வெளிப்படையான ஸர்வத்தியாகம் மாத்திரம் போதாதென்

றம், ஆந்தரமாகவும் தியாகம் ஸ்திரப்பட்டுப் பூர்த்தியாகும் படியாகக் குறிப்பிட்ட ஜ்ஞானவழியைத் தேடவேண்டு மென்றும் முன் சொல்லப்பட்டது. வெளித்தியாகத்தைக் கூட செய்யாமல் பகவச்சரணாகதியைச்செய்வதாக பாவனை செய்வதெல்லாம் உபயோகமற்ற காரியமேயாகும். ஸ்ரீ கிருஷ்ணபகவானும் கீதையில் எல்லா தர்மங்களையும் தியாகஞ் செய்துவிட்டுத் தன்னைச் சரணமடையவேண்டுமென்றே தெளிவாய்ச் சொல்லியிருக்கிறார். இப்படிச் சொல்லியதற்கு வைதிக-லௌகிகரூபமான தர்மாதர்மங்கள் யாவற்றையும் பரித்தியாகஞ் செய்தபின்புதான் சரணாகதியைச் செய்ய வேண்டுமென்று வெளியாகிறது. இப்படி யாவற்றையும் பரித்தியாகஞ் செய்யக் கூடியது பிராம்மண புருஷர்கள் விஷயத்தில் ஸன்யாஸகாலத்திலும், மற்ற ஜாதியார்கள் விஷயத்திலும் ஸ்திரீகள் விஷயத்திலும் சாஸ்திரத்தில் குறிப்பிடப்பட்ட வீரமார்க்கப் பிரவேசத்திலுந்தான் நடக் கக்கூடியது. ஸன்யாஸ கல்பத்திலேயே ஸர்வத்தியாகஞ் செய்துவிட்டு அப்பால் பகவச்சரணாகதியைச் செய்வதான பிரயோகங்களும் ஸ்பஷ்டமாய்த்துலங்குகின்றன. இக்காலத் தில் ஸ்ரீவைஷ்ணவர்கள் தர்மாதர்மங்களைத் தியாகஞ்செய்யா மல் பலத்தியாகம்மாத்திரம் செய்தால் போதுமென்று சொல்லிக்கொண்டு கிருஹஸ்தஸ்தானத்திலேயே சரணாகதி யைச் செய்வதாக பாவனை செய்து வருகிறார்கள். கிருஹஸ்த ராகவேயிருந்துகொண்டும், கிருஹஸ்தஸ்தானத்தில் தனக் குள்ள போகங்களை அநுபவித்துக்கொண்டும், தான் செய்து வருகிற லௌகிககாரியங்களினால் தனக்குக் கிடைக்கக் கூடிய வரும்படிகளை ஸ்வீகரித்து உபயோகப்படுத்திக் கொண்டே தான் ஸர்வகர்மபலத்தியாகஞ் செய்வதாய்ச் சொல்லிக்கொண்டும் வாக்கினால் மாத்திரம் சரணாகதியைச்

செய்தால் இதின் பலனும் இதற்கு ஒத்ததாகத்தானிருக்கக் கூடும். இது பகவான் சொன்ன சரணாகதியாகமாட்டாது. பொய்யான தியாகத்திற்கும் பொய்யான சரணாகதிக்கும் பலனாக உண்மையான மோக்ஷானந்தம் ஏற்படாதென்பதே திண்ணம். பகவான் கீதையில் கர்மபலத்தியாகஞ் செய்ய வேண்டுமென்று சொல்லியது வேதோக்தமான கர்மத்தை, அதின் பலத்தியாகத்தினால், கர்மயோகமாக மாற்றி, அது சித்த சுத்தியின்பொருட்டு ஏற்படவேண்டுமென்று உத்தேசித்துச் சொல்லப்பட்ட விஷயம். எதுவரையில் பலத்தில் இச்சை இருக்கிறதோ அதுவரையில் கர்மம் சித்தசுத்தியின் பொருட்டு உபயோகப்படாமல் போய்விடும். சித்தம் சுத்தப் பட்டாலொழிய உபாஸனையில் சித்தம் ஓர்மைப்படுவதற் காவது மேல் ஜ்ஞானப்பிராப்தி ஸாத்தியப் படுவதற்காவது இடமில்லை. அன்றியும், கர்மஸன்யாஸத்தை சாஸ்திரப்படி செய்ய க்ஷத்திரியனான அர்ஜுனனைப்போன்ற அதிகார மில்லாதவர்களால் கர்மத்தியாகம் செய்யப்படக் கூடாத தால் அவர்கள் பலத்தியாகத்தைத்தான் செய்யவேண்டு மென்று வற்புறுத்தி பகவானால் உபதேசிக்கப்பட்டது. இப்படி பலத்தியாகஞ் செய்யவேண்டுமென்று பகவான் சொன்னது வேதவிஹிதமான கர்மங்களுக்குத்தான் பொருந்துமே தவிர லௌகிக கர்மங்களுக்காவது அதர்மச் செய்கைகளுக்காவது பொருந்தக்கூடியதல்ல. லௌகிக காரியங்களையும் அதர்மச்செய்கைகளையும் செய்யாமலே பூராவும் விட்டொழித்துவிட்டுத்தான் சரணாகதியைச் செய்யக்கூடுமென்று தாத்பரியம். உத்தியோகஞ்செய்து, அல்லது வேறு விதமாய், பணம் ஸம்பாதித்துக்கொண்டும், நிலங்களைச் சாகுபடிசெய்து, அல்லது செய்வித்து, அனு பவித்துக்கொண்டும், மற்றும் லௌகிகப் பிரவிருத்திகளை

வைத்துக்கொண்டும், சரணாகதியைச் செய்யலாமென்று சாஸ்திரம் எவ்விதத்திலும் இடங்கொடுக்கவேயில்லை. தவிரவும், சுருதிவிஹிதமான கர்மங்களின் தியாகத்திலேயே சுருதியின் பிரகாரம் அதிகாரியான பிராம்மணன் சரணாகதியைச் செய்யவேண்டுமென்றால், தன்னால் சாஸ்திரப்படி எவ்வளவு தியாகஞ்செய்யக்கூடுமோ அவ்வளவையும் குறையில்லாமல் செய்யவேண்டும். கர்மத்தியாகத்தையே செய்ய அதிகாரமிருக்கும்போது, அதைச்செய்யமாட்டேன், பலத்தியாகத்தைத்தான் செய்வேனென்று பிராம்மணன் சொன்னால், இது ஸர்வதர்மத்தியாகமாக மாட்டாது. ஸர்வதர்மத்தியாகத்தைச் செய்யாதவர் சரணாகதியைச் செய்ய யோக்கியரல்ல வென்பதே பகவானுடைய கொள்கை. சாஸ்திரப்படிக்குள்ள சரணாகதியானது கர்மமார்க்கத்தைப் பூராவும் விட்டு வெளியேறுகிற பரமஹம்ஸஸன்யாஸியால்தான் செய்யப்பட்டு வருகிறதென்று சொல்லவேண்டும். இக்காலத்திலோ வீரமார்க்கப்பிரவேசம் ஸாத்தியப்படக்கூடியதல்ல. வீரமார்க்கம் இன்னதென்று பின்னால் ஒன்பதாவது பாகத்தில் துலங்கும். பரமஹம்ஸர் ஸன்யாஸகாலத்திலேயே பகவச்சரணாகதியைச் செய்து விட்டு, மேலான அபரோக்ஷஜ்ஞானப்பிராப்தியின்பொருட்டு சுருதியில் குறிப்பிட்ட பகவதாஜ்ஞைப்பிரகாரம் ஜ்ஞானாப்பியாஸத்தில் பிரவேசிக்கிறார். இவ்வித ஜ்ஞானத்திலும் அதின் மூலமாக ஏற்படக்கூடிய கைவல்யமோக்ஷத்திலும், த்வைதவாதிகளுக்கு உத்தேசமில்லாததாலும், ஸாமான்ய அபரபக்தியினால் கிடைக்கக்கூடிய லோகத்திற்கு மேற்பட்ட மோக்ஷ ஸ்தானமாவது அதற்குரிய விசேஷ ஸாதனமாவது இல்லையென்று எண்ணியிருப்பதாலும், அவர்கள் ஒருவித பகவச்சரணாகதியுடன் நின்று விடுகிறார்கள். அத்வைதிகளுக்கு உண்மையான

பகவச்சரணுகதியே பூர்வாங்கமாக ஏற்பட்டு அப்போது நிவிருத்திமார்க்கத்திலிறங்கி உத்தம ஜ்ஞாஞப்பியாஸம் ஆரம் பிக்கப்படுகிறது. இதஞல்தான் ஸ்ரீ வைஷ்ணவர்களால் சரணுகதிக்கு முக்கியத்தன்மையும், அத்வைதிகளால் ஜ்ஞாஞப்பியாஸத்திற்கு முக்கியத்தன்மையும் கொடுக்கப் பட்டிருக்கிறது. சரணுகதிக்குப் பின்ஞல் ஸ்ரீ வைஷ்ணவர் கள் செய்துவருகிற வேதாந்த விசாரம் காலக்ஷேபார்த்த மாகவே நடப்பதாக அவர்களே ஒப்புக் கொள்கிருர்கள். சரணுகதிக்குமேல் செய்யவேண்டிய காரியம் ஒன்றுமே யில்லை யென்பதே அவர்களுடைய கொள்கை. அத்வைதி களின் சரணுகதி பிரவிருத்திகாரியங்களின் முடிவையும் நிவிருத்தியில் பிரவேசத்தையும் குறிப்பிடுகின்றது.

26. முக்குணங்களுமற்ற ஆத்மஸ்தானம் நிர்க்குண ஸ்தானம். இதுதான் முக்காலத்திலும் அழியாத உண்மை யான ஸ்தானம். இந்த ஸ்தானத்தில்தான் வாஸ்தவ ஆனந் தம் விளங்கக்கூடியது. இதைத்தவிர மற்ற, அதாவது, அஞத் மஸ்தானங்கள் யாவும் ஸகுண ஸ்தானங்கள். இந்த ஸகுண ஸ்தானங்களுக்குள்ளாக கைலாஸம்-வைகுண்டம் என்பது உத்தமோத்தமஸ்தானங்கள். குணவத்தான ஸகல பிரபஞ் சத்தையும் உண்டாக்கியும், பரிபாலித்தும், லயப்படுத்தியும் வருகிற ஸகுணப் பிரம்மமாகிய ஸர்வேசுவரனே ரூபவாஞக, முன் 6-வது பாகத்தில் விவரித்த பிரகாரம், இவ்வுத்தம ஸ்தானங்களில் பிரகாசிக்கிருர். இதிஞல் ஷெ ஸ்தானங்க ளடங்கிய லோகத்திற்கு ஸகுணபிரம்மலோகமென்று பெயர் வந்தது. இதுவே திருச்யப் பிரபஞ்சத்தில் உத்தமோத்தம லோகம். ஈசுவரஞகிய ஸகுணப்பிரம்மமே பரதத்வமென்று எண்ணியும், அவர் வேறு, தான் வேறு என்று பாவித்தும், உபாஸித்துவருகிற தீவ்ர அபர பக்திமான்கள் அடையக்

கூடிய உயர்ந்த ஸ்தானம் இதுவே. அவர்களுடைய உபா ஸனுபலத்திற்குத் தக்கபடி அந்த லோகத்தில் அவர்கள் வாஸஞ் செய்யக்கூடிய காலமும் வேறுபடும். இதே ஸகுணப் பிரம்மமாகிய ஈசுவரனையே பரதத்வமென்று எண்ணி பரபக்திமான்களும் உபாஸிக்கிறார்கள். ஆனல், குணத் துடன் கூடியிருப்பதை பரதத்வ லக்ஷணமாக எண்ணமலும், ஈசுவரனுடைய மஹாகுணங்களையும் தன்னிடமிருக்கிற அல்பகுணங்களையும் ஒரு பொருட்டாக எண்ணமலும், இருவகை குணங்களையும் தள்ளிவிட்டு மிஞ்சி நிற்கிற ஏகமான ஆத்மவஸ்துவை மாத்திரம் பரதத்வமாக எண்ணி யும், தனக்கு அபேதமாகவே பாவித்து ஈசுவரனை உபா ஸித்து வருகிறார்கள். இப்படி தன்னிடத்திலும் உபாஸ்ய மூர்த்தியிடத்திலுமுள்ள குணங்கள் யாவற்றையும் தள்ளி ஒதுக்கியே உபாஸித்து வருவதால், இவ்வித உபாஸனை சீக்கிரத்தில் நிர்க்குணப் பிரம்மநிஷ்டாரூபமாகிய அபரோக்ஷ ஜ்ஞானத்தில் பூர்த்தியடைந்து பிரம்மானந்தானுபவத் துடன்கூடிய கைவல்ய முக்தியில் முடிவடையக்கூடும். ஒருக் கால் இப்பூலோகத்தில் ஷை நிஷ்டை பூர்ணமாகாவிட்டால், அதுமேல் ஜ்ஞானப்பியாஸத்தினல் பூர்ணமாகும்பொருட்டு ஷை உபாஸகர் ஸகுணப்பிரம்ம லோகத்திற்குப் போய்ச் சேர்ந்து அங்கு ஸகுணப்பிரம்ம ஸன்னிதியிலேயே ஜ்ஞான ஸித்தியைப்பெற்று குணக்கட்டிலிருந்து விடுபட்டு நிர்க் குணத்மகமான கைவல்ய மோக்ஷத்தை அடைவார்.

27. மேற்கண்ட இருவகை பக்தர்களுக்கும், அவரவ ரின் பக்தி ஸ்திரப்பட்டு நிலைக்கும்பொருட்டு, மனது சுத்த மாயிருப்பது மிகவும் அவசியம். மனது அசுத்தமாயிருக் கும் வரையில் அது ஓர்மைப்படுவது ஸாத்தியமில்லை. ஓர்மைப்படாத மனதில் பூர்ணபக்தி க்ஷணங்கூட தங்கிநிற்க

முடியாது. ஆகையால், பக்தி ஸித்திப்பதற்காகவும் சித்த சுத்தியின்பொருட்டும் கர்மயோகம் அவசியமாயுள்ளது. இந்த கர்மயோகம் கர்மபலனில் இச்சையுள்ளவரையில் ஸித்திக்கமாட்டாது. ஆகையால், எல்லோருக்கும் முதலில் கர்மயோகம் ஸித்திக்கும்பொருட்டு பலத்தியாகமே முக்கியமென்று வற்புறுத்தி சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, பலத்தியாகமில்லாவிடில் கர்மயோகம் ஏற்படாது. கர்மயோகமில்லாவிடில் சித்தசுத்தி யுண்டாகாது. சித்தசுத்தியன்னியில் பக்தியே நிலைக்கமாட்டாது. ஸாமான்ய அபரபக்தியே உண்டாகக்கூடாத நிலைமையில் உத்தம பரபக்தியும் அதற்குமேல் அபரோக்ஷ ஜ்ஞானமும் உண்டாகமுடியா தென்பதும் நிச்சயமே. ஸாமான்ய அபரபக்தராகிய த்வைதியானாலும், உத்தம பரபக்தராகிய அத்வைதியானாலும், எல்லோராலும் பலத்தியாகஞ் செய்யப்படவேண்டியது அவசியமாயிருந்தபோதிலும், இவ்வித பலத்தியாகம் ஒருவருக்குத் தன்னிடத்தில் ஜீவத்வபுத்தியிருக்கும்வரையில் ஸம்பூர்ணமாக ஏற்படாது. ஜீவத்வபுத்தியினால்தான் தான் போக்தா என்ற பாவனையும் ஸ்திரப்பட்டிருக்கும். தன்னை போக்தா என்றும் நினைத்துக்கொண்டு பலரூபமான போகம்மாத்திரம் தனக்குக்கூடாதென்று எண்ணுவது ஸாத்தியப்படமாட்டாது. இது இயற்கைக்கு விரோதப்படும். ஆகையால், ஸம்பூர்ணமான கர்ம பலத்தியாகமும் உத்தம பரபக்திமானிடத்தில்தான் காணப்படுமென்பதையும் தெரிந்து கொள்ளவேண்டியது முக்கியம். கர்மம், பக்தி, ஜ்ஞானம் இவையெல்லாம் பரம்பரையாக உண்மையான மோக்ஷானந்தத்திற்கே ஸாதனங்களாகயிருப்பதால், எவ்வித கர்மம், எவ்வித பக்தி, எவ்வித ஜ்ஞானம் அப்படி ஸாதனங்களாக இருக்கக்கூடியவைகளோ அவைகள்

தான் உண்மையான கர்ம-பக்தி-ஜ்ஞானங்களாகும். ஆதலால், பலத்தியாகத்துடன் செய்யப்பட்ட கர்மமே கர்மமாகும், பரபக்தியே பக்தியாகும், அபரோக்ஷமான ஏகத்வஜ்ஞானமே ஜ்ஞானமாகும். மற்றதெல்லாம் வியாபாரமும், தைன்யமும், ஆடம்பரமுந்தான்.

28. பிரம்மானந்தத்தை விளங்கச் செய்விக்கக்கூடிய மார்க்கத்தின் கிரமம் இன்னதென்று இங்கு ஒருவாறு சுருக்கிச் சொல்லப்படுகிறது:—

(1) **கர்மயோகம்** :—ஒவ்வொருவரும் அவரவருக்கு சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கிற கர்மங்களை, அவைகளின் பலத்தில் இச்சை யன்னியில், செய்து வரவேண்டியது. பலனில் இச்சையில்லாவிட்டால் செய்வதற்கே மனதில் தூண்டுதல் உண்டாகாதே யென்று நினைத்தால், வேத-சாஸ்திரங்களில் குறிப்பிட்ட கர்மங்களைச் செய்யவேண்டுமென்று ஈசுவரனே கட்டளையிட்டிருப்பதால், அவருடைய கட்டளைக்கு உட்பட்டுச் செய்ய வேண்டியதாயிருக்கிறதென்று மாத்திரம் எண்ணிச் செய்தால் போதுமென்று தீர்மானித்துக்கொள்ளவேண்டும். இப்படி கர்மத்தைச் செய்யும்போதும் தன்னை கர்த்தா ஸ்தானத்திலிருந்து விலக்கி, தான் ஸாக்ஷிமாத்திரனாக இருப்பதாகவே பாவித்து வரவேண்டும். ஜீவனிடத்திலிருக்கிற ஆதமாவும் ஈசுவரனிடத்திலிருக்கிற ஆத்மாவும் ஒன்றேயானாலும் சிதாபாஸத் தன்மையான ஜீவத்வமும் ஈசுவரத்வமும் ஒன்றாகமாட்டாதாகையால், பிரபஞ்சம் பூராவுக்கும் பொதுவாயுள்ள ஸமஷ்டி சிதாபாஸனாகிய ஈசுவரன் சாஸ்திரம் மூலமாய் கட்டளையிட்டிருக்கிற யஜமானனாகவும், வியஷ்டி சிதாபாஸனாகிய ஜீவன் அக்கட்டளையை அனுஸரித்து நடந்துவருகிற தாஸ

னாகவும் இருப்பதில், கேவல ஸாக்ஷியாக இருவரிடத்திலும் ஆத்ம ஸ்வரூபியாயிருக்கிற தனக்கு யாதொரு கர்மஸம்பந்தமுமில்லை யென்ற உறுதியான பாவனை இருந்து கொண்டிருக்கவேண்டும்.

(2) **பக்தியோகம்** :—மேற்கண்டபடி ஸாக்ஷிமாத்திரனாக நின்று கர்மம் நடத்தப்படுவதைப் பார்த்துக்கொண்டிருக்கிறதான பாவனை பலப்பட்டுவிட்டால், உபாஸனையைச் செய்வதிலும் தன்னையும் உபாஸ்யமான ஸகுண மூர்த்தியையும் ஆத்மத்வஸ்தானத்தில் ஒன்றாகவே பாவித்து பரபக்தியைச் செலுத்துவதும் ஸாத்தியப்பட்டுவிடும். பரபக்தியினால் செய்யப்படுகின்ற உபாஸனையில், பாஹ்ய (வெளி) பூஜை நடந்தாலும் அல்லது ஆந்தரமான ஹிருதயஸ்தானத்திலேயே பூஜை நடந்தாலும், வியஷ்டி சிதாபாஸனாகிய ஜீவன் அம்சஸ்தானத்திலிருந்து கொண்டு ஸமஷ்டி சிதாபாஸனாகிய ஈசுவரனை அம்சிஸ்தானத்தில் பூஜைசெய்து வருவதாகவும், தான் மேஷ இருவர்களுக்கும் ஆத்மாவாக இருந்து பூஜை நடப்பதைப் பார்த்துக்கொண்டிருக்கிற ஸாக்ஷியாக இருப்பதாகவும் மாத்திரம் பாவனை செய்து வரவேண்டும்.

(3) **ஸர்வத்தியாகமும் ஜ்ஞானயோகமும்**:—மேற்சொல்லிய இருவகை ஸாதனங்களிலும், அதாவது கர்மயோகத்திலும் பக்தியோகத்திலும், ஆத்மத்வபாவனைமாத்திரம் செய்யப்பட்டு வந்திருக்கிறதே யொழிய ஆத்மத்வ ஸித்தி ஏற்படவில்லை. இந்த ஸித்திக்காக உத்தம குருவை அடைந்து சிரவணாதி ஜ்ஞானப்பியாஸத்தைச் செய்யவேண்டியதவசியம். முதலில் ஜ்ஞானப்பியாஸத்திற்குள்ள ஸௌகரியத்தை யேற்படுத்திக் கொள்ளவேண்டும். இவ்வித ஸௌகரியம் பெரும்பாலும் நிவிருத்தியினால்தான் ஸாத்தியப்படக்கூடியதேயல்லாமல், பிரவிருத்தியினால் சேகரித்துக்கொள்ளப்பட

கூடியதல்ல. சாஸ்திரப்படி ஸன்யாஸத்தில் அதிகாரமில் லாத கிருஹஸ்தர்கள் தங்களுடைய வர்ணாசிரம விதிகளின்படி தங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிற நித்திய-நைமித்திக கர்மங் களைமாத்திரம் முன்சொல்லியபடி பலத்தில் இச்சையில்லா மல் நடத்திக்கொண்டும், வேறு எல்லா வைதிக-காம்மியகர் மங்களையும் லௌகிகப் பிரவிருத்திகளையும் பூர்ணமாய் விலக்கி ஒழித்து விட்டும், தங்களுக்குள்ள சொத்துக்கள் முழுவதையும் புத்திராதிகளுக்கும் தர்மகாரியங்களுக்குமாக கிரமப்படி பாகித்துக் கொடுத்து விட்டும், தங்களுக்கென்று யாதொரு ஸ்வான்பாத்தியமும் வைத்துக்கொள்ளாமல் தங்க ளுடைய அவசியமாயுள்ள ஆஹாராதிகளுக்கு மத்திரம் கிலுப்தமான ஏற்பாட்டைச் செய்து கொண்டும், அல்லது, பிரதிதினமும் உபாதானத்திலும் பக்தஜனங்கள் வலுவில் செய்துவருகிற உபகாரத்திலும் கிடைப்பதைக்கொண்டு மாத் திரம் காலக்ஷேபஞ்செய்துகொண்டும், பிரம்மநிஷ்டரா யிருக்கக்கூடிய சரியான குருவைத்தேடி ஸாமான்யமாக சரண மடைந்து சாஸ்திர்விதிப்படி தத்வவிஷயசிரவணாதிகளைச் செய்யவேண்டும். இப்படி ஒழுங்காக சிரவண-மனன-நிதித்தி யாஸனங்களை அந்தந்தக்காலங்களில் செய்து வந்தால் காலக் கிரமத்தில் ஜ்ஞானநிஷ்டை ஏற்படக்கூடும். சொத்துக்கள் முதலான விசேஷ லௌகிக ஸௌகரியங்களைத் தியாகஞ் செய்துவிட தைரியமன்னியில் அவைகளில் பற்றுதலைமாத் திரம் குறைத்துக்கொண்டு ஸௌகரியப்பட்டமட்டில் குரு விடம் தத்வவிசாரத்தைச் செய்து கொண்டிருப்பவர்களுக் கும் பலனில்லாமல் போகாது. ஆனால், இவர்களுக்குப் பூர்ண மான ஜ்ஞானஸித்தியுண்டாவது சிரமப்படும். கிருஹஸ்தர் களைக் காட்டிலும் நைஷ்டிகப்பிரம்மசாரிகளுக்கும் வானப் பிரஸ்தர்களுக்கும் ஆத்மவிசார விஷயத்தில் அதிக ஸௌகரிய

முண்டு. ஆனால், இவ்விருவர்களையும் இக்காலத்தில் காண்ப தரிது. ஷை மூவர்களையும் அபேக்ஷித்து ஸன்யாஸிகளுக்கு வெகு ஜாஸ்தியாகவே ஜ்ஞானுப்பியாஸ ஸௌகரியங்க ளுண்டு. இவ்வித விசேஷ ஸௌகரியங்களை சுருதியில் குறிப் பிட்ட விதிகளின்படி உபயோகப்படுத்திவந்தால் ஜ்ஞான ஸித்தி வெகு சீக்கிரத்தில் ஸன்யாஸிகளுக்கு ஏற்பட்டுவிடும்.

(4) **ஜ்ஞானிஸ்தானம்:**—ஜ்ஞான ஸித்தியைப் பெற் றவர் **பிரம்மவித்** என்றும் **ஜ்ஞானீ** என்றும் கூறப்படுகிறார். இவருக்கு மரணத்திற்குப் பின்பு கைவல்ய மோக்ஷமேயுண்டு. இவருக்கு இவ்வுலகத்திலும் ஸமாதிகாலத்தில் உண்மையான பிரம்மானந்தானுபவமுண்டு. ஸமாதி கலைந்து வெளிப் பார்வை யேற்பட்ட காலத்திலும், அதாவது, வ்யுத்தான காலத்திலும் அந்த அனுபவத்தின் ஞாபகமிருக்கும். பிரம் மானந்தமே அனுபவிக்கப்பட்டு விட்டதால், இவருக்கு வ்யுத் தான தசையில் இவ்வுலக விஷயங்கள் யாதொன்றிலும் பற்றுதலாவது இச்சையாவது இருக்கமாட்டாது. இவை யெல்லாம் துச்சமாகவே தோன்றும். வ்யுத்தான காலத்தி லும் பிரம்மானந்தம் ஸாக்ஷாத்தாக அனுபவிக்கப்படாமல் அதின் ஞாபகந்தானேயிருக்கிறதென்ற காரணத்தினால், ஷை ஆனந்தமே எப்போது மிருக்கக்கூடிய மார்க்கத்தைத் தேடு வதிலும் இவருக்கு புத்தி யேற்படலாம். இம்மார்க்கமும் சாஸ்திரத்தில் துலங்குகிறது. இந்த பிரம்மவித்துக்கு ஜ்ஞானஸித்தி யுண்டாயிருந்த போதிலும் இவருக்கு பூர்வ வாஸனைகள் பாக்கியிருந்தும் மனது நாசமடையாம லிருந் தும் வருவதால் வ்யுத்தான தசையில் பிரம்மானந்தம் விளங்க வில்லை.

(5) **ஜீவன்முக்த ஸ்தானங்கள்:**—வாஸனக்ஷயமும் மனோநாசமும் ஏற்பட்டுவிட்டால் அவ்வானந்தம் தானகவே

பிரகாசிக்கும். அப்போது இந்த ஜ்ஞானீ **ஜீவன்முக்தர்** என்று சொல்லப்படுவார். ஜீவன்முக்தருக்கு வ்யுத்தான காலத்தில் ஸ்வல்ப வெளிப்பார்வையுடன் பிரம்மானந்தானுபவமேயிருக்கும், ஸமாதிகாலத்தில் பிரம்மானந்தானுபவம் மாத்திரமிருக்கும். எக்காலத்திலும் இவருக்கு பிரம்மானந்தானுபவம் விட்டுப்போகாது. ஜீவன்முக்தியில் மூன்று தசைகளுண்டு. முதலாவது தசையில் ஜீவன்முக்தர் **பிரம்ம வித்வரன்** என்று கூறப்படுகிறார். இவர் ஸமாதியிலிருந்து தானாகவே வ்யுத்தான தசைக்கு வரக்கூடும். இவருக்கு அடுத்த மேல் ஸ்தானத்திலிருப்பவர் **பிரம்மவித்வரீயான்.** இவர் ஸமாதியை விட்டுத் தானாக வ்யுத்தானதசைக்கு வருகிறதில்லை. யாராகிலும் தொந்திரவு செய்து ஸமாதியைக் கலைத்துவிட்டால் வ்யுத்தான தசைக்கு வந்துவிடுவார். இவரையும் விட உயர்ந்த ஸர்வோத்தம ஸ்தானத்திலிருப்பவர் **பிரம்மவித்வரிஷ்டர்.** பிராரப்த நாசபரியந்தம் இவருடைய சரீரம் மாத்திரம் இவ்வுலகில் காணப்படுமே யல்லாமல் இவர் எவ்வகையிலும் ஸமாதியைவிட்டு வெளியில் வரமாட்டார். யார் எவ்வளவு தொந்திரவு செய்தாலும் இவருடைய ஸமாதி கலையக்கூடிய தல்ல. இவரே உத்தமோத்தம ஜீவன்முக்தர். முன் குறிப்பிடப்பட்ட இரண்டு ஜீவன் முக்தர்களுக்கும் வ்யுத்தானதசையில் கொஞ்சமாவது வெளிதிருஷ்டியுடன் கலந்ததாகவே பிரம்மானந்தானுபவமிருக்கும். பிரம்மவித்வரிஷ்டருடைய பிரம்மானந்தத்திற்கு யாதொரு ஸம்பந்தமும் கலப்புமிருக்க மாட்டாது. விதேஹ கைவல்ய மோக்ஷஸ்திதிக்கும் இவருடைய ஸ்திதிக்கும் எவ்வகையிலும் அணுவளவும் வித்தியாஸங்கிடையாது. சுருதியில் காண்பிக்கப்பட்ட மார்க்கத்திலேயே அக்கம் பக்கம் சலிக்காமல் ஜாக்கிரதையுடன் சென்று கொண்டிருந்

தால் கடைசியில் இப்படிப்பட்ட மஹோன்னத ஸ்திதியும் ஸ்வச்சமான பிரம்மானந்தமும் யாருக்கும் கைகூடலாம்.

29. பிரம்மவித் முதலுள்ள மேற்கண்ட ஜ்ஞானிகள் தான் வாஸ்தவ ஆத்மாவாகவே, அதாவது ஸ்வஸ்தானத்தி லேயே, இருக்கிறார்களென்று சொல்லவேண்டும். ஆத்மா என்ற ஸ்வம் ஆக இருப்பதுதான் தமிழில் சும்மா இருப்ப தென்று சொல்லப்படுகிறது. இதினால்தான் பிரம்மானந் தம் விளங்கவேண்டுமானால் சும்மாயிருந்தால் போதுமென்று முன் கூறப்பட்டது. தான் அல்லாத வீண் சுமைகளாகிய அநாத்மபாரங்கள் யாவற்றையும் ஒதுக்கித் தள்ளிவிட்டுத் தானாகமாத்திரம் மிஞ்சி நிற்கிற உண்மையான ஆத்மா என்ற பரமான பிரம்மவஸ்துவிடத்தில் பிரம்மானந்தம் தானாகவே பூர்ணமாய் விளங்கும். ஸ்வரூபானந்தானுபவத்திலேயே பிரம்மத்தின் பரிபூர்ண ஜ்ஞானஸ்வரூபமும் ஸத்ஸ்வரூப மும் பிரகாசிக்கின்றன. உண்மையில்லாததும் அல்பமு மான அநாத்மஸம்பந்தத்தில் உண்மையான பூர்ணஸச்சிதா னந்தானுபவம் விளங்க இடமேயில்லை. விஷயசுகம் எவ்வளவு அனுபவிக்கப்பட்டாலும், அனுபவிக்க முடியாத சுகங்கள் தான் அனந்தமாய் பாக்கியிருக்கும். பிரபஞ்சத்தில் கிடைக் கக்கூடிய சுகங்கள் பூராவையும் அனுபவிப்பது ஜீவனுக்கு ஸாத்தியமேயில்லை. ஏராளமாயிருக்கிற பாக்கி சுகங்களை அனுபவிக்க முடியவில்லை யென்பதே துக்கரூபந்தான். மேலும், முன்சொல்லியபடி, அனுபவிக்கப்பட்ட ஸ்வல்ப சுகத்திலும் ஏராளமான துக்க ஸம்பந்தமு மிருந்தே வந் திருக்கும். ஆகையால், ஜீவத்வ நிலையிலிருந்து அநாத்மப் பிரபஞ்சத்தில் பூர்ண சுகத்தைத் தேடுவதெல்லாம் முட் டாள்தனமே தவிர வேறல்ல. இப்படியே, அநாத்மவிஷய மான மனோவிருத்திரூப ஜ்ஞானத்தை அதிகப்படுத்திக்

கொண்டேயிருந்து தன்னை ஸர்வஜ்ஞனுக எண்ணிக்கொண் டிருப்பதும் மூடத்தனந்தாஞகும். நூதன லௌகிகப் படிப்புகளில் மற்ற எல்லோரையும்விட உயர்ந்த ஸ்தானத் தில் தானிருப்பதாக எண்ணிக்கொண் டிருப்பவரை பரீக்ஷை செய்ய ஆரம்பித்தால், இவருக்குத் தெரியாத விஷயங்கள் தான் ஏராளமாயிருப்பதாகவும், தெரிந்தவிஷயம் ஸ்வல்ப மென்பதாகவும் உடனே வெளியாகும். இவருடைய கால டிக்குக்கீழே பூமியில் என்ன இருக்கிறதென்று கேட்டாலும் இவரால் பதில் சொல்ல முடியாது. இவர் இறக்கை கட் டிக்கொண்டு உயரப் பறந்துபோய்ச் சந்திரனை எட்டிப்பிடித் தாலும், சந்திரனுக்கு மேலுள்ள அனந்தமான வெளியில் எதெல்லாமிருக்கிறதென்று கேட்டாலும் இவர் பதில் சொல் லக்கூடியவரில்லை. இந்த க்ஷணத்தில் பிரபஞ்சத்திலுள்ள ஸகல விஷயங்களையும் தான் அறிந்து கொண்டு விட்டதாகப் பிரமை கொண்டிருந்தாலும், அநாதியான முன்காலங்களில் நடந்ததையும் அனந்தமான பின்காலங்களில் நடக்கப்போகி றதையும் பற்றிக் கேட்டால், இவர் தனக்குத் தெரியாதென்று தான் சொல்லுவார். ஆகையால், ஜீவத்வ நிலையில் பூர்ண ஜ்ஞான மேற்படுவது ஸாத்தியமில்லை யென்பதே நிச்சயம். இவ்விதமாகவே, ஜீவனுக்கு ஸம்பூர்ண ஸத்லக்ஷணமுமிருக்க முடியாது. உத்பத்தி-விநாசங்களுடன் கூடிய அல்பமான சரீர ஸம்பந்தத்தினுலேயே ஜீவனுடைய இருப்பைத் தீர் மானிக்கவேண்டியதா யிருப்பதால், ஜீவத்வ நிலையில் பூர்ண மும் அனந்தமுமான ஸத்துவமுங் கிடையாது. உண்மை யான ஸச்-சித்-ஆனந்த ஸ்வரூபத்தை அனுபவிக்கவேண்டு மென்ருல் தன் ஜீவத்வ நிலையை விட்டொழித்து திருச்யப் பிரபஞ்சத்தையும் ஆத்மாவிடத்தில் லயப்படுத்திக் கொள்ள வேண்டும். அதாவது, மித்தியாபூதமானதும் தோன்றியும்

மறைந்துகொண்டிருக்கிற தன் சரீர முள்பட ஸ்தூலப் பிரபஞ்சம் பூராவையும் அதற்குக் காரணமான ஸூக்ஷ்மப் பிரபஞ்சத்தில் லயப்படுத்தியும், அப்பால் ஸூக்ஷ்மத்தையும் அதின் மூலகாரணமாகிய மாயையில் லயப்படுத்தியும், இந்த மாயைக்கும் ஆத்மாவைக் காட்டிலும் தனிமையான இருப்பே கிடையாதாகையால் இதையும் முடிவில் ஆத்மா விடத்தில் லயப்படுத்தியும், இவ்விதமாக ஜீவத்வத்தையும் திருச்யப் பிரபஞ்சம் பூராவையும் இருந்த இடமே தெரியா மல் செய்துவிட்டு, ஏகமும் அண்டமுமான ஆத்மாகவே நின்றால்தான் பரிபூர்ணமான ஸச்சிதானந்த ஸ்வரூபம் நன்கு விளங்குமென்பதே பரமஸித்தாந்தம். இந்தப்படி எல்லோ ரிடத்திலும் நிஜமாயுள்ள ஆத்மஸ்வரூபம் ஸச்-சித்-ஆனந்த ஸ்வரூபமென்பது ஒவ்வொருவருக்கும் பின் சொல்லப் போகிறபடி ஒருவிதத்தில் கொஞ்சம் அனுபவஸித்த மாகவுமிருக்கின்றது. இப்படிப்பட்ட நிஜஸ்வரூபத்துடன் கூட **நாம-ரூப-துக்கங்கள்** மூன்றும் சேர்ந்திருப்பதான அநாத்மஜகத்தும் விளங்கிக் கொண்டிருக்கின்றது. சற்று கவனித்து சோதித்துப் பார்த்தால் நாமம், ரூபம், துக்கம் இம்மூன்றும் உண்மையில்லாத அநித்தியத் தோற்றங்க ளென்றும், ஸத்-சித்-ஆனந்தம் இம்மூன்றுந்தான் ஸத்திய மான சாசுவத ஆத்மஸ்வரூபங்களென்றும் உடனே வெளி யாகும். மனிதனை எடுத்துக் கொள்வோம். இவனுக்கு ஜாக்கிரத், ஸ்வப்நம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தை களிருந்து வருவதில், ஜாக்கிரத்காலத்தில் ஸ்தூல சரீரத்தை அபிமானித்து அதில் நாம-ரூபஸஹிதனாகவே இருந்து கொண்டும், வெளி இந்திரியங்களுடன் கலந்த மனதினால் விஷயங்களை அறிந்துகொண்டும், துக்கங்களையும் ஆனந்தப் பிரதிபலன ரூபங்களான **ஸுகங்களையும்** அனுபவித்துக்

கொண்டுமிருக்கின்றான். **ஸ்வப்நகாலத்தில்** ஸூக்ஷ்ம சரீரத்தை அபிமானித்து அதிலும் நாம-ரூப-ஸஹிதனுக்வே இருந்து கொண்டும், மனதினால் மாத்திரம் விஷயங்களை அறிந்து கொண்டும், மேற் சொல்லியபடி துக்கங்களையும் **ஸுகங்களையும்** அனுபவித்துக்கொண்டு மிருக்கின்றான். **ஸுஷுப்திகாலத்தில்** நாம-ரூபங்களில்லாமல் காரணசரீரமென்ற அவித்யையில் இருந்து கொண்டும், அப்போது மனதும் லயப்பட்டிருப்பதால் கேவல ஆத்ம தேஜஸினால் அவித்யை மாத்திரமிருப்பதை (ஒன்றும் தெரியாமை என்பதின் மூலமாய்) அறிந்து கொண்டும், அபரிமித **ஸுக**மாகிய பேரானந்தத்தை அனுபவித்துக் கொண்டு மிருக்கின்றான். எவை மனிதனுக்குத் தன்னுடைய சொந்த ஸ்வரூபங்களாயிருக்கக் கூடியவைகளோ அவைதான் மேற்கண்ட முக்காலங்களிலும், அதாவது மூன்று அவஸ்தைகளிலும் தொடர்ந்திருந்துவரும். ஒரு அவஸ்தையில் இருந்தும் மற்றொரு அவஸ்தையில் இல்லாமலுமிருப்பவை ஆத்மஸ்வரூபத்தைச் சேர்ந்தவையாக மாட்டா. மேலே குறிப்பிட்ட முக்கால விபரங்களையும் ஒன்றோடொன்று ஒற்றுப்பார்த்தால் அடியிற்கண்ட விஷயங்கள் வெளியாகின்றன. நாமமும் ரூபமும் ஜாக்கிரத்-ஸ்வப்ந காலங்கள் இரண்டிலு மிருக்கின்றன, ஸுஷுப்தி காலத்தில் இல்லை. ஸ்தூலத்வம், ஸூக்ஷ்மத்வம், கேவலகாரணத்வம் இவைகளும் அந்தந்த காலத்திற்குத் தகுந்தபடி வேறுபடுகின்றன. ஆனால், ஷை மூன்று அவஸ்தைகளிலும் எவ்விதமான இருப்பு என்பதில் பேதங்கள் காணப்பட்ட போதிலும், இருப்பு என்பது பொதுவாகவே (as common factor) இருந்து வருகின்றது. இப்படியே, அறியப்பட்ட விஷயங்களில் பேதங்களிருந்த போதிலும், அறிவு என்பது எல்லா அவஸ்தைகளிலும் பொதுவாகவே

தொடர்ந்திருக்கின்றது. இது போலவே, அனுபவிக்கப் பட்ட **ஸுகம்** ஆனந்தப்பிரதிபலன மாத்திரமான அல்ப ஸுகமாகவாவது அல்லது பேரானந்த ரூபமான மஹா ஸுகமாகவாவது மூன்று அவஸ்தைகளிலும் காணப்படுகின்றது, துக்கமோவெனில் இப்படிக் காணப்படவில்லை. அதாவது, ஜாக்கிரத்-ஸ்வப்ந காலங்கள் இரண்டிலும் ஸுகம், துக்கம் இரண்டும் அனுபவிக்கப்படுகின்றன; ஸுஷுப்தியில் துக்கமில்லை, ஸுகம் மாத்திரம் அனுபவிக்கப்படுகின்றது. இவ்விதமாக சில அவஸ்தைகளில் காணப்பட்டும் சில அவஸ்தைகளில் காணப்படாமலு மிருக்கின்ற நாம-ரூப-துக்கங்களும் ஸ்தூல-ஸூக்ஷ்மாதி பேதங்களும் மனிதனுடைய நிஜஸ்வரூபத்தைச் சேர்ந்தவையல்லவென்றும்; எல்லா அவஸ்தைகளிலும் காணப்படுகின்ற **இருப்பு-அறிவு-ஸுகம்** என்ற **ஸத்-சித்-ஆனந்த** லக்ஷணமே அவனுடைய உண்மையான ஆத்மஸ்வரூபலக்ஷணமென்றும் ஒவ்வொருவருடைய அனுபவத்திலேயே துலங்குகின்றது.

30. மேற்கண்டபடி ஆத்மா என்ற பிரம்மம் ஸச்-சித்-ஆனந்த ஸ்வரூபீ என்பது வாஸ்தவமானாலும், அந்தப்படியே அது அநேகமாய் நிரூபிக்கப்பட்டிருந்தாலும், அது கேவல ஆனந்த ஸ்வரூபீ என்று மாத்திரம் சொன்னாலே போதுமானது. முன் குறிப்பிட்டபடி, ஆனந்தத்திலேயே ஸத் ஸ்வரூபமும் சித் ஸ்வரூபமும் பிரகாசிக்கின்றன. அதாவது, ஆனந்தம் **இருக்கிறது** என்பதினால் அதின் **ஸத்** லக்ஷணமும் ஆனந்தம் **விளங்குகிறது** என்பதினால் அதின் **சித்** லக்ஷணமும் அதில் ஸ்வதஸ்ஸித்தமா யிருக்கின்றன. இவ்வித இருப்பும் விளங்குதலுமில்லாமல் ஆனந்த மிருக்கக் கூடாததால் ஸத், சித் இரண்டும் ஆனந்தத்தில் அடக்கமென்று சொல்லவேண்டும். ஆகையால், பிரம்மத்தின் ஸ்வரூபலக்ஷ

ணத்தைக் குறிப்பிடும்போது, அனுவசியமாக விரிக்காமல், அது ஆனந்த ஸ்வரூபி என்று குறிப்பிடுவதுதான் சரியாகும். தத்வதிருஷ்டியில் சுத்தாத்விதீய ஆனந்த ஸ்வரூபியான பிரம்மத்தை அணுவென்றாவது மஹத்தென்றாவது சொல்லுவதற்கில்லை. சிறிது-பெரிது என்பதெல்லாம் துவைதத்திற் குட்பட்டிருக்கிற அனாத்மப் பிரபஞ்ச வியவஹாரத்தைச் சேர்ந்தது. ஏகமும் அகண்டமுமான பிரம்மத்தை மற்றொன்றுடன் ஒப்பிடுவதற்கு இரண்டாவது உண்மைப் பொருளே கிடையாதாகையால், அது சிறிதுமல்ல, பெரிது மல்ல. ஆகிலும், துவைதப் பிரபஞ்சத்தில் உழன்று வருகின்ற ஜீவனுடைய பார்வையில் ஆகாசம் முதலான அதிநுட்பமான பூதங்களிலும் ஊடுருவியிருப்பதாகத் தெரியவருகின்ற பிரம்மவஸ்து வெகு நுட்பமாகவே, அதாவது அணுவுக்கும் அணுவாகவே யிருக்கவேண்டுமென்றும், ஸகல பிரபஞ்சமும் அடங்கிய இம்மஹத்தான பிரம்மாண்டமே பிரம்மத்தின் லேசலேசமான அல்பப் பிரதிபிம்பத் தோற்றமென்று வெளியாவதால் அதே பிரம்மம் மஹத்துக்கும் மஹத்தாகவும் இருக்கவேண்டுமென்றும் இருவிதமாகவும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இவ்வித மஹத்வபாவனையில் முன் சொல்லியபடி கேவல ஆனந்தமாத்திர ஸ்வரூபியான பிரம்மத்தை ஆனந்தஸாகரமென்று வர்ணிப்பது உசிதமாகும். இந்த ஆனந்த ஸாகரம் விசித்திரமாயுள்ளது. இது உலகத்தில் காணப்படுகின்ற ஸமுத்திரத்தைப்போல் எல்லைக்கரைக்குட்பட்ட தல்ல. கீழ்த்தளமாவது மேல் மட்டமாவது இல்லாத பிரம்மானந்த ஸமுத்திரம் அளவுக்கடங்கியதான எவ்வித பரிமிதத்தன்மைக்கும் கட்டுப்பட்டதல்ல. அதின் விஸ்தீர்ணம், அகழம், உயரம் ஸகலமும் அனந்தம். உண்மையில் பத்து திக்குகளிலும் அளவுக்குட்படாததற்கு

விஸ்தீர்ணம் யாது, அகழம் யாது, உயரம் யாது, மேல்-கீழ் யாவை, திக்கென்பதுதான் யாது? இம்மஹாஸமுத்திரம் உலகஸாகரத்தைப்போல் உத்பத்தி-விநாசங்களுக்குட்பட்டதுமல்ல. அதாவது, தேசத்தில் போல் காலத்திலும் ஆனந்த-ஸாகரம் அனந்தமே. இதைத்தவிர இரண்டாவதுக்கே அவகாசமில்லாததால், இது ஸம்பந்தமாய் ஸஜாதீய-விஜாதீய பேதங்களுக்குப் பிரஸக்தியேயில்லை. இப்படி ஒரு திக்கிலும் எல்லையில்லாததும், மேலே யென்று சொல்லக்கூடியதாக ஆகாசம் முதலான வேறொன்றிலாவது, கீழேயென்று சொல்லக்கூடியதாக தளத்திலாவது பரிமிதப் படாததுமான பிரம்ம ஸாகரத்தை ஸகல விதத்திலும் அனந்த பரிபூர்ணானந்த வெள்ளமாக மனஸில் பாவித்துக் கொள்ளலாம். அன்றியும், ஸாமான்ய ஸமுத்திரத்தில் அலைகளும், ஜலத்திற்கு வேறுபட்டுள்ள மகர-மத்ஸ்யாதி ஜந்துக்களும் பவழங்கள்-முத்துக்கள்-ரத்னங்கள் வகையறா நிதிகளும் இருப்பதினால் அவாந்தரபேதங்கள் காணப்படுவது போல், பிரம்மானந்த ஸாகரத்தில் அவாந்தர பேதங்களையுண்டுபண்ணக்கூடிய துவைதத்திற்கே இடமில்லாததால் ஸ்வகதபேதங்களும் கிடையாது. அதாவது, இந்த ஸாகரத்தில் பிரம்மானந்தாமிருதத்தைத் தவிர இரண்டாவதேயில்லை யென்பது தாத்பரியம். இந்தப்படி, இவ்வானந்த ஸாகரத்திற்கு வெளிப்பட்டதும் யாதொன்றுமில்லையென்பதும், இதற்குள்ளாகவும் வேறொன்றுமில்லை யென்பதும் வாஸ்தவமானாலும் நாநாவிதப் பிரபஞ்சம் நம்முடைய பார்வையில் தோன்றிக் கொண்டிருக்கின்றது. பிரம்மத்திற்கு வெளிப்பட்டதே ஒன்றுங் கிடையாதாகையால், இப்பிரபஞ்சம் பிரம்மத்திலேயே தோன்றுகின்றது என்றுதான் சொல்ல வேண்டியதாயிருக்கிறது. பிரம்மானந்த ஸாகரத்தில் பிரம்மத்தைத்

தவிர வேறொன்றுமில்லை யாதலால், இப்பிரபஞ்சத்தோற்றத் திற்கும் உபாதானகாரணம் பிரம்மந்தானென்றும் சொல்ல வேண்டியதா யிருக்கிறது. பிரபஞ்ச-ஜகத்தன்மை எப்படி வந்ததென்று விசாரிக்கையில், முன் பாராவில் குறிப்பிட்ட நாமம், ரூபம் இவ்விரண்டினால்தான் அது ஏற்பட்டிருப்ப தாகவும் வெளியாகின்றது. அதாவது, சத்தானந்த ஸ்வ ரூபியான பிரம்மத்தில் நாம-ரூபகல்பனை செய்யப்படுவதி னால் அதுவே ஜகத்தென்று வியவஹரிக்கப்படுகிறது. ஆனால், நாம-ரூபங்கள் அநித்தியமானதாலும், இவை பிரம்ம ஸ்வரூபத்தில் சேராததாலும், பிரம்மமே ஜகத்தாகிவிட்ட தாகச் சொல்லக்கூடாது. ஜகத்தில் நாமம், ரூபம் இவ் விரண்டும் அதிகமாகக் காணப்பட்டாலும், ஜகத்து பிரம்மத் தைத்தவிர வேறில்லை யென்றுமாத்திரம் அறிந்துகொள்ள வேண்டும். ஜலத்திற்கு சைத்யம் (குளிர்ச்சி) என்பது இயற் கையாயுள்ளது. இந்த சைத்ய சக்தி அதிகமாக வெளிப் பட்டால், ஜலத்திலேயே பனிக்கட்டிகள் உண்டாகி விடக் கூடும். இப்பனிக்கட்டிகள் ஒன்றுக்கொன்று வேறுபட் டுள்ள பலவித ஆகாரபேதங்களுட னிருக்கலாம். ரூபவித்தி யாஸங்களினால் ஒவ்வொன்றுக்கும் தனித்தனிப்பெயரும் வாய்ந்திருக்கக்கூடும். பனிக்கட்டிகள் ஜலத்தைக்காட்டிலும் வேறல்ல. ஆகிலும், அவைகளையே ஜலமென்று சொல்லு கிறதில்லை. ஜலத்திற்கு ஸ்வதஸ்ஸித்தமாயிருக்கிற திரவத் வம் அடங்கி நின்று அதற்கு விரோதமான கடினத்வம் பனிக்கட்டியில் காணப்படுகின்றது. ஜலசைத்யசக்தியின் பலவிதப் பிரகடனத்தினால் பனிக்கட்டிகளிருக்கு மிடத்தில் அசைவுதலேற்பட்டு அவைகள் ஒன்றுக்கொன்று விபரீத மாய் மோதிக்கொண்டால் பரஸ்பரம் கெடுதல்களும் அவை களுக்குண்டாகலாம். ஆயினும், இக்கெடுதல்கள் ரூப-நாம

ஸம்பந்தமாக நேரிடக்கூடுமே யல்லாது அவைகளால் பனிக் கட்டிகளின் உபாதானகாரணபூதமான ஜலத்திற்கு யாதொரு ஹானியுங்கிடையாது. ஷை ரூப-நாமங்களுக்கு ஹேது வான விசேஷக் குளிர்ச்சி உபஸம்ஹாரஞ் செய்யப்பட்டு விட்டால், "பனிக்கட்டிகள்" என்ற தோற்றங்களே மறைந்துபோய் அவை ஜலமாகவே மிஞ்சி நின்றுவிடுகின் றன. இவ்விஷயங்களை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, துவைதப்பிரதீதியுடனும் கொஞ்சம் ஸ்தூலபுத்தியுடனும் கூடிய ஒவ்வொரு முமுக்ஷுவும் அடியிற்கண்டபடி எப் போதும் பாவனை செய்துவருவது நலமாகும். அதாவது, "நானே அகண்ட பிரம்மானந்த ஸாகரம். என்னைத்தவிர ஸஜாதீயமாகவாவது விஜாதீயமாகவாவது இரண்டாவது வஸ்துவே கிடையாது. உண்மையில் என்னிடம் ஸ்வகத பேதங்களும் இல்லையானலும், சைத்ய சக்தியினுல் பனிக்கட் டிகள் ஜலத்தில் உண்டாகித் தோன்றுவது போல், மாயா சக்தி விஜிரும்பணத்தினுல் இந்த சரீரமுள்பட பல சரீர-பதார்த்தங்களடங்கிய ஜகத்து எனக்குள்ளிருப்பதுபோல் தோன்றுகிறது. இப்படித்தோன்றுவதே மாயாகாரியந்தான். இந்த சரீரம் என்று சொல்லுவதினுலேயே துவனிக்கின்ற விசேஷ அபிமானத்தைப் பாராட்டுவதே மற்ற சரீரங்களும் ஜகத்தும் இருப்பதாகத்தோன்றுவதற்குக் காரணம். அதா வது, ஒரு சரீரத்தை அபிமானித்து அதில் ஸம்பந்தப்பட் டிருக்கின்ற பாஹ்ய-ஆந்தர இந்திரியங்கள் மூலமாய் அறிவுப் பார்வையைச் செலுத்துவதினுலேயே தனக்கு வெளிப்பட்ட ஜகத்து இருப்பதாகத் தோன்றுவதற்குக் காரணமாகின்றது. இவ்விதமாக ஜீவசிதாபாஸனுடைய பரிமித திருஷ்டியினுல் அவனுக்கு ஜகத்துத் தோன்றிக்கொண்டிருப்பதை ஸாக்ஷி சைதன்ய ஸ்தானத்திலிருக்கின்ற நான் பிரத்தியக்ஷீகரிக்கின்

றேன். மேலும், எப்படி ஜலத்தின் ஸ்வரூபபூதமான திர வத்தன்மைக்கு நேர் விரோதமாக கடினத்தன்மை பனிக்கட் டிகளில் காணப்படுகின்றதோ, அப்படியே ஆத்மாவின் ஆனந்தஸ்வரூபம் மறைந்து நின்று ஜகத்தில் பெரும்பாலும் ஆபாஸரூபமான ஸுகமும் விபரீதமான துக்கமும் விசேஷ மாய்க் காணப்படுகின்றன. சரீராதிகள் யாவும் நாம-ரூபாத் மகமேயல்லாமல் வேறொன்றுமில்லை. திருச்யப்பிரபஞ்சத்தி லிருந்து ரூபத்தையும் நாமத்தையும் விலக்கிவிட்டு அதின் இருப்பைத் தெரிந்து கொள்ள யத்தனித்தால் அது இருந்த இடமே தெரியக்கூடியதல்ல. அதாவது, தான்-மற்றவ ரென்றும், ஆண்-பெண்ணென்றும், தேவர்கள்-மனிதர்க ளென்றும், மனிதர்களுக்குள் ஜாதி-வகுப்பு-ஆசிரமங்க ளென்றும், மிருகம்-பறவைகளென்றும், ஊர்வன-ஜந்துக்க ளென்றும்; பலவித ஜல சரங்களென்றும், மரம்-செடி-புல் பூண்டுகளென்றும், சூரிய-சந்திர-நக்ஷத்திர-பூமிகளென்றும், கீழ்-மேல்-கிழக்கு-மேற்கு முதலான திக்குகளென்றும் நாநா விதங்களாக வியவஹரிக்கப்படுகிறவைகளிலிருந்து இந்திரி யங்கள் மூலமாய் கிரஹிக்கப்படுகின்ற வெறும் தோற்றங் கள் யாவற்றையும் பொருட்டாகவே பாவிக்காமல் தள்ளி ஒதுக்கிவிட்டால் மிஞ்சி நிற்பது நானே யல்லாமல் மற்ற யாதொன்றுமில்லை. ஸுக-துக்கங்கள் அத் தோற்றங்க ளுக்கே ஸம்பந்தப்பட்டவைகள். அவைகள் யாதொன்றி லும் எனக்கு ஸம்பந்தங்கிடையாது. எப்படி மஹா ஸமுத்திர-ஜலத்தில் பனிக்கட்டிகள் தோன்றி மறைந்து கொண்டிருக்குமோ, அப்படியே என்னிடத்தில் திருச்யப் பிரபஞ்சத்தின் உத்பத்தி-ஸ்திதி-நாசங்கள் காணப்படுகின் றன. பனிக்கட்டிகளின் மாறுதலினால் ஜலத்திற்கு எவ் விதம் ஹானி கிடையாதோ, அவ்விதமாகவே பிரபஞ்சத்தில்

ஜீவத்தோற்றங்களாகிய சிதாபாஸங்களின் ஸுக-துக்கானு பவங்களினால் கேவல அதிஷ்டானாத்மாவும் ஆனந்தஸ்வரூபி யுமான எனக்கு யாதொரு கெடுதலுங்கிடையாது. மிகவும் அல்பமும் உண்மையில்லாத தோற்றமாத்திரமுமான பிர பஞ்சத்தின் லேசலேச பாகமாகிய இவ்வுலகத்தில் எது எப்படியிருந்தாலும், எது நேரிட்டாலும் எனக்கென்ன? எந்தப் பனிக்கட்டியின் எந்த மூலை முறிந்தாலென்ன, எந் தப்புரம் அதிகரித்தாலென்ன? ஆனந்தாமிருத ஸ்வரூபி யான எனக்கு நஷ்டம் ஏது, லாபம் ஏது? கற்கண்டுக் கட்டி உடைந்து போனாலென்ன, அல்லது மற்றக்கட்டிக ளுடன் சேர்ந்து பெருத்துவிட்டா லென்ன? அதின் ஸ்வ ரூபபூதமான தித்திப்புக்குக் குறைவுமில்லை, விருத்தியுமில்லை. நன்மை-தீமை, உயர்வு-தாழ்வு, சுத்தம்-அசுத்தம், ஸுகம்-துக்கம், புண்யம்-பாபம், தர்மம்-அதர்மம், பந்தம்-மோக்ஷம் முதலிய த்வைதங்கள் யாதொன்றும் எனக்குக் கிடையாது. கொடிய தாரித்திரிய கஷ்டங்களை அனுபவிப்பதாக (முன் 5-வது பாகத்தில் சொல்லியபடி) துஸ்ஸ்வப்நத்தைக்கண்டு விழித்துக்கொண்டுவிட்ட மஹாராஜாவுக்கு ஷை கஷ்டங் களின் ஸம்பந்தம் தனக்கில்லையென்று தெரியவருவதுபோல், மித்தியாபூதமான பிரபஞ்ச-துக்கங்கள் எனக்கு எக்காலத் திலும் உண்மையில் கிடையாதென்பதே ஸத்தியம். மேற் கண்ட ஸவப்நகாலத்திலேயே தான் பார்ப்பதெல்லாம் ஸ்வப் நந்தான் உண்மையல்லவென்று தெரிந்து கொண்டே யிருந் தால் எப்படி ஷை மஹாராஜாவுக்கு ஸ்வப்ந-தாரித்திரிய கஷ்டங்களினால் தனக்கு யாதொரு கெடுதலுமில்லையென்று உதாஸீன புத்தியே அக்காலத்திலு மிருந்துவருமோ, அவ் விதமாகவே என் முன்பாக பிரபஞ்சத்தின் த்வைத வைசித் திரியங்கள் நாநாவாகத் தோன்றினாலும், அவைகளிலிருந்து

ஸுக-துக்கங்கள் உண்டாவதாகக்காணப்பட்டாலும், அவை யெல்லாம் துச்சமென்றே தெரிந்துகொண்டு உதாஸீன ஞகவே யிருப்பது மல்லாமல் ஸ்வானந்தானுபவத்திலேயே ஸ்திரமாயிருந்தும் வருகின்றேன்.'' பூராவும் பொய்த் தோற்றங்களாயிருக்கிற மித்யா-திருச்ய காட்சிகளில் நல்ல பொய் கெட்டபொய், அழகான பொய் குரூபமான பொய், சிறிய பொய் பெரும் பொய், உண்மையான பொய் பொய் யான பொய் முதலான ஸகல வித்தியாஸ வியவஹாரங்களும் வீண் என்றே சொல்லவேண்டும். இவ்வித வியவஹாரங்க ளில்லாமையே நிஜமான மௌனஸித்தியாகும். வாயை மூடிக்கொண்டு ஷை வியவஹாரங்களில் அடிக்கடி புத்தியைச் செலுத்தி மனதினுலும் எழுத்து முதலான வெளிவியா பாரங்களாலும் துவைத பாவனைகளைப் பல்படுத்திக்கொண் டிருப்பது மௌனமேயாகாது. உண்மையில் அத்வைத நிலைமை ஸித்தித்திருப்பவரிடம் வாஸ்தவமான மௌன மிருக்குமே யல்லாமல் மேற் சொல்லிய வியவஹாரங்கள் யாதொன்று மிருக்கக்கூடியவையல்ல. ஷை நிலைமை ஸித்திக் காதவரிடம் அம்மௌனம் இருக்கக் கூடியது மல்ல.

எட்டாவது பாகம் முற்றும்.

# தர்ம விமர்சனம்

## ஒன்பதாவது பாகம்

## ஸந்யாஸிகளின் முக்கிய பேதங்கள்

### முதலாவது கண்டம்

### சில முன் மொழிகள்

1. வித்தியாஸப் பார்வையால் உண்டாகின்ற வியவ ஹாரங்கள் பூராவும் வீண் என்றும், இவ்விதப் பார்வையும் வியவஹாரங்களும் உண்மையில் அத்வைத நிலைமை ஸித்தித் திருப்பவரிடம் இருக்கமாட்டாவென்றும் முன் பாகத்தின் முடிவில் கூறப்பட்டது. இப்படியே, ஆத்ம ஜ்ஞானிதான் உண்மையான ஸமதர்சி யென்பதாகவும், ஸமதர்சனுப்பி யாஸமே உத்தம ராஜயோகாப்பியாஸ மென்பதாகவும் முத லாவது பாகத்தில் சொல்லப்பட்டுமிருக்கிறது. இந்தப்படி பேதங்கள் யாவும் அற்றுப்போய் அகண்டைகத்வ நிலையி லிருப்பதே முக்கியமாயிருந்த போதிலும், நாநாவித அதி காரி-தாரதம்மியத்தை நிமித்தமாகக் கொண்டு வேதசாஸ்தி ரங்களில் விதி-நிஷேத நிபந்தனைகள் பலவிதங்களாகக் காணப் படுகின்றன. ஜகத்தில் தோன்றுகின்ற நாநாத்வம் ஷை நிபந்தனைகளின் மூலமாய் வேதசாஸ்திரங்களாலேயே உறு திப்படுத்தப்பட்டிருப்பது போலவும் ஸாமான்ய ஸ்தூல

திருஷ்டியுள்ளவர்களால் எண்ணப்படக் கூடியதாயுமிருக்கிறது. வேத-சாஸ்திரங்கள் எவர்களால் எவ்விதமாகத் தெரிந்து கொள்ளப்பட வேண்டுமென்று அவைகளிலேயே வியவஸ்தை குறிப்பிடப்பட்டிருக்கின்றதோ அதற்கு நேர் விரோதமாக இக்காலத்தில் அவைகளைத் தெரிந்துகொள்வதாகவும் தெரிந்துகொண்டுவிட்டதாகவும் பாவித்துக் கொண்டிருக்கின்ற அனதிகாரிகளான சிலர்களின் அபிப்பிராயத்தை அனுஸரித்து சில நாஸ்திகர்கள் வேத-சாஸ்திரங்களிலேயே முன் பின் விருத்தமான நிபந்தனைகள் காணப்படுவதாகவும் அவை முற்றிலும் பிசகுதானென்பதாகவும் புலம்பிக்கொண்டு, தங்களை அதார்மிக ஸ்தானத்தில் ஸ்திரப்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். மற்றும் சிலர்கள் நாநாவிதமான வேத-சாஸ்திரநிபந்தனைகளையும் அதிகாரி-தாரதம்மியக்கோட்பாடுகளையும் தப்பென்று சொல்லாமல், தங்களை ஸகலவிதத்திலும் உத்தம அதிகாரிகளாகவே தீர்மானித்துக்கொண்டு, வாஸ்தவத்தில் தங்களுக்குத் தகுதியில்லாத மார்க்கங்களில் இறங்கி நற்கதியின்பொருட்டு யத்தனித்து வருவதாகச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். வேறு சிலர்கள் வேத-சாஸ்திரங்களால் எந்த அத்வைத தத்வம் உத்தமோத்தமமென்று வெளியிடப்பட்டிருக்கின்றதோ அது மாத்திரம் சரியென்றும், அவைகளில் காணப்பட்ட மற்ற விஷயங்கள் யாதொன்றையும் கவனிக்க வேண்டியதே யில்லை யென்றும், எவ்விதத்திலும் உலகத்தில் யாதொரு வித்தியாஸங்களையும் பாராட்டாமலே எல்லாக் காரியங்களிலும் நடந்துவருவதே மனிதனுடைய உத்தமச் செய்கை யென்றும் பிதற்றிக்கொண்டு ஸ்வதர்மப்பிரஷ்டர்களாகவும் வெறும் வாய்ப்பேச்சு-வேதாந்திகளாகவு மிருந்துவருகின்றார்கள். இப்படிப்பட்டவர்கள் மேற்கண்டபடி முன் 8-வது

பாகக்கடைசியில் எவ்வித வித்தியாஸப் பார்வையும் வியவஹாரங்களும் கூடாதென்று வெளியிடப்பட்டிருக்கிற முடிவான கொள்கை தங்களுடைய விபரீதமான அபிப்பிராயத்திற்கு அனுகூலமாயிருப்பதாக ஒருக்கால் எண்ணிவிடக்கூடும். அங்கு சொல்லப்பட்ட விஷயம் பல(ஃபல)ரூபமென்பதாகவும், அது ஸாதன ரூபமல்லவென்பதாகவும், அவர்கள் தெரிந்து கொள்ளவேண்டும்.

2. திருச்யப் பிரபஞ்சத்தில் காணப்படுகின்ற கணக்கிலடங்காத வேறுபாடுகளெல்லாம் மறைவை அடைந்து ஏகமான உண்மைப்பொருளின் அனுபூதி முமுக்ஷுக்களுக்கு விளங்குவதற்காகவே வேத-சாஸ்திரங்கள் மூலமாய் அவரவர்களுடைய தனித்தனியான நிலைமைகளுக்குத் தகுந்த விதங்களில் பலவாறாக ஸாதனமார்க்கங்கள் துலக்கிக் காட்டப்பட்டிருக்கின்றன. அதாவது, பஹுப்பிரகாரங்களான வித்தியாஸப் பார்வை முடிவில் இல்லாமல் போவதற்காகவே பஹுப்பிரகாரங்களான ஸாதனவித்தியாஸங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஸாதனங்களிலேயே வித்தியாஸங்களிருக்கக் கூடுமானால், ஸகல வித்தியாஸங்களுக்கும் அதீதமாயிருக்கின்ற ஏகமான ஸத்தியவஸ்து கைகூடுமாவென்று ஸந்தேஹப்படவேண்டாம். வித்தியாஸப்பார்வையாகிய கெடுதலை நீக்கும்பொருட்டு வித்தியாஸ ஸஹிதமான ஸாதனத்தையே கைக்கொள்ளவேண்டியது அவசியமாயிருக்கிறது. அழுக்கடைந்த பாத்திரத்திலுள்ள அழுக்குப்போகவேண்டுமானால், மண் முதலான அழுக்குடன் சேர்ந்த பதார்த்தங்களினால் அதைத் தேய்த்து சுத்தி செய்தால்தான் அவ்வழுக்குப்போகும். அழுக்கைப் போக்கடிப்பதற்காக ஸாதனத்தில் ஸம்பந்தப்பட்டிருக்கிற அழுக்கு அனுகூலமான அழுக்கேயாகும். ஜலத்தில் கலக்கப்பட்ட தேத்தாங்கொட்

டைப் பொடியைப் போல், இந்த அனுகூல அழுக்கு விபரீத அழுக்கைப் போக்கடித்துவிட்டுத் தானும் பின்னால் மறைந்து போய்விடும். ஆகையால், முடிவான அத்வைத தத்வத்தைக் குறிப்பிடுகின்ற வேதவாக்கியங்களைமாத்திரம் வாக்கினால் சொல்லிக்கொண்டு, அவ்வித தத்வம் ஸ்வானுபூதியில் ஸித்திக்கும்பொருட்டாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்ற அப்பியாஸங்களுக்கு ஸம்பந்தப்பட்ட நானாவித வித்தியாஸங்களை ஆக்ஷேபிப்பது அறியாமையே தவிர வேறல்ல. ஸாதனங்களில் ஸம்பந்தப்பட்டிருக்கின்ற வித்தியாஸங்களைக் கைக்கொள்வதினால், முடிவில் நிவிருத்தியாக வேண்டிய வித்தியாஸப்பார்வையும் வியவஹாரங்களும் பலப்பட்டுவிடமாட்டா. சரீரத்தில் ஸம்பந்தப்பட்டிருக்கிற தூர்லேபனங்களையும் உஷ்ணத்தையும் விலக்குவதற்காகவே லேபனரூபமாகவும் உஷ்ணவத்தாகவு மிருக்கின்ற தைலத்தைத்தேய்த்துக்கொண்டு, அப்பால் அதுவும் அலம்பி வெளியேற்றப்படுகின்றது. எப்படி எண்ணெய்த்தலையுடன் எப்போதுமிருப்பதற்காக எண்ணெய் தேய்த்துக்கொள்ளப்படுகிறதில்லையோ, அப்படியே வித்தியாஸப்பார்வையிலும் வியவஹாரங்களிலுமே எப்போதுமிருப்பதற்காக ஸாதன வித்தியாஸங்கள் கைக்கொள்ளப்படவில்லை. பையன்கள் பள்ளிக்கூடக்கட்டுப்பாடுகளுக்கும் நிர்ப்பந்தங்களுக்கும் உட்பட்டுக்கொண்டு, அவைகளுக்கு அனுஸரணையாகவே நடந்துவருவது கடைசியில் வித்வானாகி பள்ளிக்கூடத்தை விட்டு வெளியேறி நிர்ப்பந்தமேயில்லாத சாசுவதமான ஸ்வாதந்திரிய ஸுகத்தை அடையும்பொருட்டேயல்லாமல், எப்போதும் நிர்ப்பந்தத்திற்கு உட்பட்டிருப்பதற்காக அல்ல. எப்படியும் பின்னால் ஸ்வாதந்திரியந்தானே உத்தேசமென்று சொல்லிக்கொண்டு பள்ளிக்கூடத்தில் சேராமலிருந்தாலும் அல்லது

வித்யை பூர்த்தியாகாமலே பள்ளிக்கூடத்தை விட்டுவிட்டா லும், உண்மையான ஸ்வாதந்திரிய ஸுகம் ஏற்படாது; படிப்பில்லாதவனுக்குள்ள அஸௌகரியங்களுக்கும் கஷ்டங் களுக்கும் உட்பட்டுக்கொண்டே எந்நாளுமிருக்கும்படி நேரிடும். இப்படிப்போல், வர்ணாசிரமாதி விசேஷ தர்மா சரணைகளை அதததற்குள்ள விதி-நிஷேதநிபந்தனைகளுக்கு உட்பட்டுக்கொண்டே ஒழுங்காக நடத்திக்கொண்டு வரா மல் அவைகளை உதாஸீனஞ் செய்துவிட்டுத் தனக்குத் தோன்றியவாறு நடந்துவருபவர் ஆத்ம-நிஷ்டமான வாஸ் தவ ஸ்வாதந்திரியத்தையும் பேரானந்தத்தையும் ஒருநாளும் அனுபவிக்கப்போகிறதில்லை. **வர்ணாசிரமதர்மாசரணைகளின் மூலமாகவே வர்ணாசிரமங்களைக் கடந்து மேற்செல்ல வேண்டியதாயிருக்கின்றது.** கரையிலிருப்பவர் ஜலத்தில் நீந்தவில்லையே யென்ற காரணத்தினால், கரைக்கு வெகு தூரத்தில் பிரவாஹத்தின் மத்தியில் அகப்பட்டுக்கொண் டிருப்பவர் தானும் நீந்தவேண்டிய தில்லை யென்று எண் ணிக்கொண்டிருந்தால், இவர் ஜலத்திலேயே யிருந்து கஷ்டப் படவேண்டியதுதான், கரையை அடைய முடியாது. ஒருக் கால் இவர் புத்திப்பிரமையால் தானும் கரையிலேயே யிருப்பதாக பாவித்துக்கொண்டு சும்மாயிருந்தால், பிர வாஹவேகம் இவரை இழுத்துக்கொண்டுபோய் சுழல்களில் தள்ளிக் கெடுத்துவிடு மென்பதில் ஸந்தேஹமில்லை. இவ் விதமாகவே, தன்னை ஜ்ஞானியென்று தப்பாக எண்ணிக் கொண்டு வர்ணாசிரமதர்மங்களைக் கைவிட்டுவிட்டு தான் ஸ்வாதந்திரியத்துடனிருப்பதாக பிரமைகொண்டிருப்பவ ருக்கு துர்க்கதியே ஏற்படுமென்பதாக உறுதியாய் அறிந்து கொள்ளவேண்டும். ஹை ஸ்கூலில் சேர்ந்து படித்துவரா வேண்டிய பையன் தன்னை பி. ஏ. என்று எண்ணிக்

கொண்டுவிட்டதினால் அவன் பி. ஏ. ஆகிவிடமாட்டான். அவனுடைய ஸ்திதி பித்துப்பிடித்தவனுடைய ஸ்திதியே யாகும். ஆகையால், எப்படி பிரவாஹ கஷ்டத்திலிருந்து தப்பித்துக்கொள்ள வேண்டுமென்ற ஆவலுடனிருப் போருக்கு கரைபோய்ச்சேரும் வரையில் அதை நோக்கி நீந்திபோவது அவசியமோ, அப்படியே முமுக்ஷுவும் தனக்கு அபரோக்ஷஜ்ஞானஸித்தி ஏற்படுகிறவரையில் வர்ணாசிரம-விசேஷ தர்மங்களைக் கைவிடாமல் ஒழுங்காக ஆசரித்து வரவேண்டியதவசியம்.

3. இவ்விடத்தில் ஓர் பெரும் ஸந்தேஹம் மனதில் உதிக்கக்கூடும். அபரோக்ஷ ஸாக்ஷாத்கார ஜ்ஞானம் ஸித்திக்கும்வரையில் வர்ணாசிரம-விசேஷ தர்மங்களை ஆசரித்தே வரவேண்டுமென்பது உண்மையானால், ஸர்வதர்மங்களையும் பரித்தியாகஞ்செய்து விட்டுத்தான் தன்னை சரணமடையவேண்டு மென்று பகவான் சொல்லியிருக்கிற வசனம் ஜ்ஞானிக்கே ஸம்பந்தப்பட்ட வசனமென்றும், அஜ்ஞானிகளொருவரும் பகவச்-சரணாகதியைச் செய்யக் கூடாதென்றும் தாத்பரியமா? ஜ்ஞானமே கைவல்ய மோக்ஷத்திற்கு நேர் அந்தரங்க ஸாதனமென்று வேதத்தினால் தெரியவரும்போது, அது ஏற்பட்டபிறகு சரணாகதி எதற்காகச் செய்யப்பட வேண்டும்? அன்றியும், ஏகத்வ விஜ்ஞானரூபமாகிய அறிவுடன்கூடிய அபரோக்ஷஜ்ஞானியின் திருஷ்டியில் இரண்டாவது தத்வத்திற்கே இருப்பு இருக்கக்கூடிய தில்லையாகையால், அதாவது, அத்விதீயமான சுத்தாத்மாவாகிய தன்னைத்தவிர பகவான் என்பதாகத் தனியான பரமாத்மாவே கிடையாதாகையால், ஜ்ஞானி யாரை சரணமடையக் கூடும்? அல்லது, அஜ்ஞானிதான் பகவச்-சரணாகதியைச் செய்யக்கூடுமென்று ஒப்புக்கொள்ளும்

பக்ஷத்தில், ஜ்ஞானமுண்டாவதற்கு முன்பாகவே, அதாவது அஜ்ஞானிதசையிலிருக்கும்போதே சரணாகதிக்குப் பூர்வாங்கமாக ஸர்வதர்மங்களேயும் தியாகஞ்செய்துவிடவேண்டுமென்பதாகவே ஏற்படுவதால், ஜ்ஞானஸித்திவரையில் வர்ணாசிரம-விசேஷ தர்மங்களைக் கைவிடக் கூடாதென்று முன் சொல்லியது எப்படிச் சரியாகுமென்று ஆக்ஷேபிக்கலாம். இதற்கு ஸமாதானம் இனிச் சொல்லப்போகிற விபரங்களினால் ஸித்தித்துவிடக்கூடும். முன் பாகத்தில் கண்டபடி சிரவணாதி ஜ்ஞானாப்பியாஸங்களுக்குப் பூர்வாங்கமாக உண்மையான பகவச்-சரணாகதி பரமஹம்ஸ-ஸன்யாஸ காலத்தில்தான் செய்யப்படுகின்றது. வேதாந்த சாஸ்திரத்தில் குறிப்பிட்ட பிரகாரம் விவேக-வைராக்கிய-சமாதிஷட்க-முமுக்ஷுத்வரூபமாகிய ஸாதனசதுஷ்டய ஸம்பத்துடன் கூடியவரே சிரவணாதிகளுக்கு முக்கிய அதிகாரி. இந்த சதுஷ்டயத்தில் அடங்கிய வைராக்கியம் ஸம்பூர்ணமாகவும், முமுக்ஷுத்வம் வெகு உறுதியாகவும் இருந்தாலொழிய பரமஹம்ஸாசிரமத்தைக் கைக்கொள்ள யாருக்கும் அதிகாரமில்லை. மேலும், நித்தியாநித்திய வஸ்து விவேகம் பலப்பட்டிருந்தாலன்றி அநித்தியவஸ்துக்களடங்கிய மித்யா ஜகத்தின் விஷயத்தில் ஸம்பூர்ண வைராக்கியம் உண்டாகமாட்டாது. விவேக-வைராக்கிய-முமுக்ஷுத்வங்கள் இம்மூன்று ஸாதனங்களும் பலப்பட வேண்டுமானால் சமாதிஷட்கத்தின் அப்பியாஸங்கள் நன்கு உறுதியடைந்திருக்க வேண்டியதும் அவசியம். இவ்விதமாக, ஸாதன சதுஷ்டயம் முழுவதும் யாருக்கு நன்றாக ஸித்தித்திருக்குமோ அவர்தான் மற்ற விஷயங்களிலும் வேத சாஸ்திரப்படிக்குள்ள அதிகாரியாயிருந்தால் பரமஹம்ஸாசிரமத்தை ஸ்வீகரிக்கக்கூடும். இவ்வளவு உத்தமாதிகாரியாயிருப்பவர் முன்னாலேயே வெகு

தூரம் நீந்திப்போய் ஸம்ஸாரமத்தியப்பிரவாஹ வேகத்தி லிருந்து விடுபட்டும், கரைக்கு ஸமீபத்தில் ஓட்டமேயில்லா மல் தேக்கமாயிருக்கிற, ஆனால் அகழமுள்ள, ஸம்ஸார ஜலத்திலிருந்து கொண்டும், அங்கு மிதந்திருப்பதற்குள்ள பிரயத்தினத்தைமாத்திரம் செய்துகொண்டும், பக்கத்தில் வெகு உயரமாயிருக்கின்ற கரையில் ஏறவேண்டிய துறை தெரியாமல் தத்தளித்துக்கொண்டிருப்பவராகச் சொல் லப்படலாம். எவ்விதம் ஜலத்தில் தத்தளித்துக்கொண் டிருப்பவரைச் சரியான ஏறுந்துறையில் நின்றுகொண் டிருக்கின்ற ஓர் நண்பர் சப்தங்கொடுத்து அழைத்தால் இவர் உடனே அத்துறையை நோக்கி நீந்திச்சென்று தாமஸமில்லாமல் கரையேறி விடுவாரோ, அவ்விதமாகவே உத்தமாதிகாரியாயிருந்து பரமஹம்ஸாசிரமத்தைக் கைக் கொண்டும், மோக்ஷஸாதனபூதமான ஏகத்வவிஜ்ஞான ஸித்திமாத்திர மில்லாததினால் நிருச்யப் பிரபஞ்சரூபஸம் ஸாரத்தில் தத்தளித்துக்கொண்டிருக்கிற முமுக்ஷுவும் மஹா ஆப்தரான குருநாதருடைய முகத்திலிருந்து வெளிப் பட்ட பிரணவ-மஹாவாக்கியங்களின் சிரவணமஹிமையி னால் இழுக்கப்பட்டு விசேஷ மனன-நிதித்தியாஸனரூபங்க ளாகிய யத்தினங்களால் குருநாதர் இருக்கிற அத்விதீய-ஸ்வ ரூப-ஸாக்ஷாத்காரத் துறையை அடைந்து துவைத ஸம் ஸார துக்கத்திலிருந்து சாச்வதமாய்க் கரையேறி விடக்கூடும். உத்தமாதிகாரியான பரமஹம்ஸருக்கு ஒரு தடவை சிரவ ணத்தினாலேயே உடனே மனன-நிதித்தியாஸனங்கள், ஏற் பட்டுப் பூர்த்தியாகி, ஸமாதி நிலைத்து, ஜ்ஞானஸித்தி யுண் டாகிவிடலாம். இப்படியில்லாமல் ஸாமான்ய அதிகாரிகளாக வேயிருந்து பெரும்பாலும் முமுக்ஷுக்கள் திரும்பத்திரும்ப வும் நெடுநாள் சிரவணாதிகளைச் செய்யும்படி ஏற்படலாம்.

4. எப்படியும், சிரவணகாலத்திற்கு முன்பாகவே ஸன்யாஸ காலத்தில் பரமஹம்ஸர் பிரவிருத்திரூபமான ஸகல தர்மங்களையும் தியாகஞ் செய்துவிடுகின்றார். அஜ்ஞானியாகவே யிருக்குங்காலத்தில் தனக்கு விஹிதமாயுள்ள ஸ்வதர்மங்களைத் தியாகஞ் செய்யலாமாவென்று கேட்டால், அது விஷயமாக வேத-சாஸ்திரங்களில் அனுமதி கொடுக்கப்பட்டிருந்தால் அவ்வனுமதியை அனுஸரித்துச் செய்யலாமென்றே சொல்ல வேண்டியதாயிருக்கிறது. அதாவது, தனக்கு விஹிதமான தர்மங்களைத்தியாகஞ் செய்யக் கூடாதென்று எந்த வேதத்தினால் விதிக்கப்பட்டிருக்கிறதோ, அதிலேயே தியாகஞ் செய்வதற்குள்ள ஸந்தர்ப்பங்களும் காரணங்களும் தனக்கு ஸம்பந்தப்படக் கூடியதாகக் குறிப்பிடப்பட்டிருக்கும் பக்ஷத்தில் அந்தப்படி தியாகத்தைச் செய்யக் கூடும். அதாவது, ஸன்யாஸத்தில் அதிகாரியா யிருக்கிற பிராம்மணன் சுருதிவிதிகளை அனுஸரித்து ஸன்யாஸத்தினால் ஸ்வவர்ணாசிரமகர்மங்களுள்பட ஸர்வகர்மங்களுடையவும் தியாகத்தைச் செய்துவிடலாம். இந்தப்படி சுருதிப் பிரகாரம் தியாகஞ் செய்யப்படுகிறவரையில் தனக்குள்ள விஹித-கர்மானுஷ்டானத்தை நிறுத்தவே கூடாது. இந்த விஷயம் முன்னாலேயே 5-வது பாகத்தின் கடைசியில் வற்புறுத்தப்பட்டு மிருக்கிறது. எப்படி அக்னிஹோத்திரியாக இருப்பவர் அவருடைய ஜீவகாலம் பூராவும் அக்னிஹோத்திரத்தைச் செய்யவேண்டும் (யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம் ஜுஹுயாத்) என்று சொல்லப்பட்டிருக்கிற வேதவிதி ஸன்யாஸ ஸம்பந்தமான விலக்குக்கு உட்பட்ட விதியே தவிர வேறல்லவோ, அதாவது, ஸன்யாஸம் ஏற்பட்டுவிட்டால் அக்னிஹோத்திரம் நின்று போய்விடவேண்டுமென்றே தாத்பரியமோ, அப்படியே முன்னால் சொல்லியபடி ஜ்ஞானவஸித்தி

ஏற்படுகிறவரையில் ஸ்வதர்மங்களை விட்டுவிடக்கூடாது என்று சொல்லப்பட்ட விஷயமும் சுருதிப்படிக்குள்ள ஸன்யாஸத்தினுல் ஏற்படக்கூடிய விலக்குக்கு உட்பட்டதாகவே அறிந்துகொள்ளவேண்டும். அதாவது, ஸன்யாஸமில்லாமல் வேறுவிதமாக விஹிதகர்மத்தியாகத்தை யாரும் செய்யக்கூடாதென்று அர்த்தம். ஸன்யாஸ காலத்திலேயே ஸகல தர்மங்களையும் தியாகஞ் செய்துவிடவேண்டுமாளுல், அப்பால் சிரவணுதி தர்மங்களை எப்படிக் கைக்கொள்வது நியாயமாகுமென்று கேட்கலாம். பிரவிருத்திரூப தர்மங்கள் தான் தியாகத்திற்கு நேராக விஷயமாகக் கூடியவை. வர்ணுசிரம தர்மங்கள் பெரும்பாலும் பிரவிருத்தி ரூபங்கள். தியாகமென்பதே நிவிருத்திரூப மாகையால், நைஷ்கர்ம்ய ஸித்தியில் பரிணமிக்கக்கூடியவைகளும் நிவிருத்தி தர்மங்களென்று கூறப்பட்டவைகளுமான சிரவணுதிகள் தியாகஞ் செய்யப்படவேண்டியவையல்ல. முன் 8-வது பாகத்தில் விவரித்தபடி சிரவணுதி ஜ்ஞாளுப்பியாஸங்களாலேயே ஸாமான்யத்தியாகம் பரிபூர்ணத் தியாகமாகிவிட வேண்டியதா யிருப்பதால், சிரவணுதிகள் தியாகியாயிருப்பவருக்கு அனுகூலங்களே யல்லாமல் விரோதங்களல்ல. நியாயமாய், சிரவண-மனன-நிதித்தியாஸனங்களை வர்ணுசிரம தர்மங்களென்று சொல்லவுங் கூடாது. அவைகள் ஸூக்ஷ்மசரீரமென்ற அந்தக்கரணத்துக்குமாத்திரம் ஸம்பந்தப்பட்டவைகள். வர்ணம் (ஜாதி), ஆசிரமம் இவ்விரண்டும் ஸ்தூல சரீரத்திற்குமாத்திரம் ஸம்பந்தப்பட்டவைகள். பொதுவாகவே ஜகத்திலுள்ள எவ்விதமான வித்யை ஸித்திக்க வேண்டியதா யிருந்தாலும், அந்தந்த வித்யைக்குத் தகுந்த விதங்களில் அப்பியாஸகர்களால் சிரவண-மனன-தியானங்கள் செய்யப்படவேண்டியவைதான். எப்படி,

தாழ்ந்ததானாலும் உயர்ந்ததானாலும், ஐஹிகமானாலும் பாரலௌகிகமானாலும், அந்தந்த வித்யைக்குரிய அப்பியாஸகர்களின் யோக்கியதைகளும் சிரவணாதி அப்பியாஸப் பிரகாரங்களும் இன்னவை யென்று தனித்தனியாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றனவோ, அப்படியே ஸர்வோத் கிருஷ்டமான பிரம்மவித்யாவஸித்தியின் பொருட்டுச் செய்யப்படவேண்டிய வேதாந்த சிரவணாதிகளுக்கு உத்த மாதிகாரி உண்மையான ஸன்யாவஸிதானென்றும், மத்தியம அல்லது அதம அதிகாரிகள் முன்பாகத்தில் குறிப் பிட்டபடி மற்ற ஆசிரமிகளான பிரவிருத்தி தர்ம மார்க்கஸ்தர்களுக்குள்ளிருக்கலாமென்றும் வெளியிடப்பட் டிருக்கிறது. வேதாந்த சிரவணாதிகள் விசேஷ தர்மச் செய்கைகளா யிருந்தபோதிலும், அவை முன் சொல் லியபடி பிரவிருத்திரூபமான வர்ணாசிரம தர்மங்களுக்குள் சேராத விசேஷ நிவிருத்தி தர்மச்செய்கைகளே. இவ்விசேஷ நிவிருத்தி தர்மங்கள் மேற்கண்டபடி தியாகவிஷயமாகக் கூடாததால், இவை ஸன்யாஸத்திற்கும் சரணாகதிக்கும் பிற்பாடுகூட முமுக்ஷுக்களிடம் அவசியம் காணப்படக் கூடியவைதான். அபரோக்ஷ ஜ்ஞானமுண்டாகும்வரை யில் சிரவணாதிரூபஜ்ஞானாப்பியாஸங்கள் செய்யப்பட வேண் டியவைகளே. இவ்விதமாக ஸன்யாஸத்திற்கும் சரணாகதிக் கும் பிறகுகூட ஜ்ஞானாப்பியாஸகஸ்தானமாகிய அஜ் ஞானிஸ்தானத்தில் முமுக்ஷு இருந்துவரக்கூடியதால், சரணாகதி விஷயமாக கீதையில்கண்ட பகவத்-வாக்கியம் ஜ்ஞானிக்கே ஸம்பந்தப்பட்ட வாக்கியமாவென்று முன் கேட்ட கேள்வி சரியல்லவென்பதும், சரணாகதியைச் செய்பவர் அஜ்ஞானியே யென்பதும் நிச்சயம். ஜ்ஞான மேற்படுவதற்கு முன்பாக, அதாவது ஜ்ஞானியின் நிலைமை

ஸித்திக்கும்வரையில், ஒருவரும் விஹித-தர்மத்தியாகத்தைச் செய்யக்கூடாதென்று முன் சொல்லப்பட்டது. ஜ்ஞானிக்கு அவருடைய ஸமாதிகாலத்தில் பாஹ்யப்பிரதீதியே யில்லாமலும், தான் தனி ஜீவன் அல்லது கர்த்தா என்ற மனோவிருத்தியே உண்டாகாமலும், தர்மானுஷ்டானத்திற்கு இடமில்லாமலுமே யிருக்கும். வ்யுத்தான காலங்களில் ஸன்யாஸியாயில்லாத ஜ்ஞானியும் லோக ஸங்கிரஹத்தை உத்தேசித்து தர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டே யிருப்பார். எப்படியும், ஜ்ஞானஸித்தி வரையில் வர்ணாசிரம விசேஷ தர்மங்களைக் கைவிடக்கூடாதென்று முன் சொல்லப்பட்ட விஷயம் நியாயந்தானென்பதும், அதாவது, ஸன்யாஸத்தைச் செய்து கொள்ளாமல் ஒருவரும் தனக்கு விஹிதமான பிரவிருத்தி தர்மங்களைத் தியாகஞ்செய்யவே கூடாதென்பதும், உண்மையான ஸன்யாஸிகள் ஆசரிக்க வேண்டிய தர்மங்கள் சிரவண-மனன-நிதித்தியாஸனங்களாகிய நிவிருத்தி-தர்மங்களைத் தவிர வேறல்லவென்பதும் ஸித்தம். இந்த நிவிருத்தி தர்மங்களை ஆசிரமதர்மங்களென்று சொல்வதற்கில்லையானாலும் ஒருவிதத்தில் இவைகளையே நிவிருத்திபரர்களான ஸன்யாஸிகளின் ஸ்வதர்மங்களென்று சொல்லலாம். ஜ்ஞானஸித்தி ஏற்படும் வரையில் ஸ்வதர்மங்களைக் கைவிடக்கூடாதென்று முன் சொல்லப்பட்ட விஷயம் ஸன்யாஸிகள் ஸம்பந்தப்பட்டமட்டில் சிரவணாதிகளுக்கும் பொருந்தக்கூடியதென்றே எண்ணவேண்டும்.

5. சிரவணாதி நிவிருத்தி-தர்மங்களைத் தவிர வேறு எவ்வித தர்மங்களும் ஸம்பந்தப்படாத பரமஹம்ஸ ஸன்யாஸமே உண்மையான ஸர்வாரம்ப-ஸர்வஸங்க-பரித்தியாக ரூப-ஸன்யாஸம். வாஸ்தவத்தில் ஸன்யாஸம் பலவிதமல்ல. அது ஒரேவிதமென்று சுருதியிலேயே வியக்தமாய்ச்சொல்லப்

பட்டுமிருக்கிறது. அனேக முமுக்ஷுக்களிடம் அஜ்ஞானம் மிகவும் அதிகமாகவே பாக்கியிருக்கக்கூடியதாலும், சரீர-மனோ-புத்தி சக்திகள் மிகவும் குறைவுபட்டிருக்கக் கூடிய தாலும், அனேகர்கள் வேதசாஸ்திரப்படிக்குள்ள ஸன்யாஸ கர்மகலாபங்களை முற்றிலும் ஒழுங்காக அனுஷ்டிக்க முடியாத ஸ்திதியிலிருந்துவரக்கூடியதாலும், அவரவர்களின் தாரதம்மியத்துடன் கூடிய நிலைமைகளுக்குத் தக்கபடி பலவிதமான ஸாதனரூப (preliminary or preparatory) ஸன்யாஸங்களும் வேதசாஸ்திரங்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

> தகுதவஸ்து, வனக வனவ ஸம்ந்யாஸ: ।
> கஜஷ்ராெந்நாஸக்தவஸாக கஜொவதஸ்து
> ஸம்ந்யாஸெஷெவ்வி யுஜெதூ............ ॥

ஸன்யாஸத்தின் முதல் உத்தேசம் நிவிருத்தி-தர்ம-மார்க்கப் பிரவேசமா யிருந்த போதிலும், வெகு முமுக்ஷுக்கள் தீவ்ரவைராக்கிய முள்ளவர்களாயும், ஆனால் பிரவிருத்தி ரூபதர்மங்களைப் பூராவும் விட்டொழித்துவிட முடியாதவர்களாகவு மிருந்துகொண்டே நிவிருத்தி-தர்மாப்பியாஸங்களைச் செய்துவரவேண்டிய ஸ்திதியிலிருந்துவருபவர்களாயு மிருப்பதால், அவர்களுடைய பிரவிருத்தி நோக்கங்களுக்குக் கொஞ்சம் போக்கு விட்டுக்கொடுத்து அவர்களை நிவிருத்தி தர்மங்களை ஆசரித்து வரும்படி செய்வதற்காகவே சுருதி குடீசக-பஹூதக-ஹம்ஸங்களாகிய முன் குறிப்பிட்ட ஸாதனரூப ஸன்யாஸங்களையும் அந்தந்த அதிகாரிகளுக்கு விதித்திருக்கின்றது. அனேகர்கள் முமுக்ஷுக்களாகவே யிருந்தும் தீவ்ரவைராக்கிய மில்லாதவர்களாயிருப்பதாலும், அல்லது தீவ்ரவைராக்கிய முள்ளவர்களாயினும் சுருதி

விதிப்படி ஸன்யாஸத்திற்கு யோக்கியர்களாயில்லாததாலும் அவர்கள் கிருஹஸ்தாதி ஸ்தானங்களில் இருந்துகொண்டே ஒருவிதமாய் சிரவணுதிகளைச் செய்யவும் அனுமதிகொடுக்கப் பட்டிருக்கிறது. ஆனல், இந்த சிரவணுதிகளுக்குத் தியாகத் திஞலும் உண்மையான சரணுகதியினுலும் ஏற்படக்கூடிய நன்மைகளின் பலம் உண்டாகக்கூடாமலிருக்கின்றது. இவ் வித சிரவணுதிகளைப்பற்றி முன் 8-வது பாகத்தில் கொஞ்சம் சொல்லப்பட்டிருக்கிறது. குடீசகாதிகளுடைய பிரவிருத்தி நோக்கங்களுக்கு அனுஸரணையாக அவர்களுக்கு சில பாஹ்ய (காயிக)மான தர்மங்களையும் சுருதியே விதித் திருப்பதால் கர்மாங்க பூதங்களாகிய சிகா-யஜ்ஞோபவீதங் களை அவர்கள் விஸர்ஜனஞ் செய்யக்கூடாமலிருக்கிருர்கள். அவர்களுடைய ஸன்யாஸங்களிஞல் அவரவர்களின் கிரு ஹஸ்தாதி பூர்வாசிரமங்களுக்குரிய நித்திய-நைமித்திகாதி கர்மங்கள் தியாகஞ் செய்யப்படுகின்றனவே யல்லாது பிர விருத்திரூப கர்மங்கள் யாவற்றும் விலக்கப்படுகிறதில்லை. இவ்விதமாகவே குருவிடமிருந்துகொண்டு சிரவணுதிகளை அப்பியஸிக்கவேண்டிய பரமஹம்ஸருக்கும் பரோக்ஷ ஜ்ஞானங்கூட ஏற்படாமலிருப்பதாலும், அவருக்கு ஜ்ஞானக் குறைவிஞல் தன்னிடத்தில் கர்த்ருத்வபுத்தி பாக்கியிருந்தே வருமாகையாலும் அவரும் சிரவண-மனனங்கள் பூர்த்தி யாகிற வரையில் ஹம்ஸரைப்போலவே ஏகதண்டதாரணுதி சில பாஹ்ய தர்மங்களை அனுஷ்டித்து வரவேண்டுமென்றும், பரோக்ஷாத்மஜ்ஞானமும் நிதித்தியாஸன யோக்கியதையும் பூர்ணமாக ஏற்பட்ட பிறகுதான் அவர் உண்மையான (முக் கியபக்ஷ) பரமஹம்ஸராக இருந்துவரக்கூடுமென்றும் சுருதி யிலேயே வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றது. இவ்வித முக் கியபக்ஷ-பரமஹம்ஸஸ்தானத்தி லிருப்பவர்களுக்குள்ளும்

முக்கிய பரமஹம்ஸர், துரீயாதீதர், அவதூதர் என்பதான அவாந்தர பேதங்களும், பொதுவாகவே ஸன்யாஸிகளின் வேறு சில காரணார்த்தபேதங்களும் சுருதியில் சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்விதமாகப் பலவாயிருக்கின்ற ஸன்யாஸி பேதங்களின் ஜ்ஞானம் கிருஹஸ்தாதிகளுக்கும் இருக்க வேண்டிய தவசியமாயிருக்கிறது. இக்காலத்தில் கிருஹஸ்தாதிகளில் அனேகர்கள் தங்களுடைய கிருஹஸ்தாதி தர்மங்களையே இன்னவை யென்று நன்றாகத்தெரிந்து கொள்ளாத ஸ்திதியிலிருந்து வருவதால், இவர்களுக்கு ஸன்யாஸிப் பிரபேதங்களுடையவும் ஸன்யாஸி தர்மங்களுடையவும் ஜ்ஞானமே யில்லாமலிருப்பது ஆச்சரியமல்ல. இந்தப்படி ஜ்ஞான மில்லாமையால், இவர்கள் வாஸ்தவ ஸன்யாஸிகளையும் போலி ஸன்யாஸிகளையும் பிரித்துத் தெரிந்து கொள்ள முடியாமலிருக்கின்றார்கள். சில போலி ஸன்யாஸிகளின் நடத்தையினால் வாஸ்தவ ஸன்யாஸிகளிடத்தில் கூட வெகு ஜனங்களுக்கு மதிப்புக் குறைந்து போய் அபசாரங்கள் நேர்ந்து கொண்டும் ஸன்யாஸிகளுக்கு அஸௌகரியங்கள் விருத்தியடைந்துகொண்டும் வருகின்றது. ஸன்யாஸாசிரமத்திற்குரிய நாநாவித வெளிப்படையான லக்ஷணங்களையாவது ஜனங்கள் தெரிந்துகொண்டிருந்தால்தான் மேற்கண்ட அபசாரங்களும் அஸௌகரியங்களும் அதிகமாய் நேரிடாமலிருக்கக்கூடும். உண்மையான ஸன்யாஸிகளுக்குள்ளும் யதி-தர்ம சாஸ்திர ஆராய்ச்சியைச் செய்யாத சிலர்கள் அறியாமையால் தங்களுக்குத் தோன்றியவாறு நடந்துகொண்டும் ஜனங்களுக்குத் தப்பான விபரங்களைச் சொல்லி போதித்துக்கொண்டும் விபரீதபாவனைகளைப் பெருகச் செய்து வருகிறார்கள். கிருஹஸ்தாதிகளே யதி-தர்மங்களையும் யதி-

லக்ஷணங்களேயும் உள்ளபடி தெரிந்துகொண்டிருந்தால் தான் யதார்த்தஸன்யாஸிகளெல்லோரும் ஒழுங்காகவே யிருந்து வருவார்கள், போலி ஸன்யாஸிகளும் கிட்ட அணு கார்கள். இதெல்லாவற்றையு முத்தேசித்தும், சுருதி முத லான மூலக்கிரந்தங்களேப் பார்த்துச் சரியானபடி விஷய விபாகங்களேச் செய்ய முடியாத ஸ்திதியிலிருப்பவர்களின் பார்வைக்காகவும், இதற்குப் பின்னுல் பலவித ஸன்யாஸி களின் லக்ஷணங்கள் சுருக்கமாய் காட்டப்பட்டிருக்கின்றன. இத்தென்தேசத்திலுள்ள பிராம்மணர்கள் அனேகமாய் பரமஹம்ஸாசிரம ஸ்வீகார விதிப்படியே ஸன்யாஸத்தைச் செய்துகொண்டு வருவதால், பரமஹம்ஸர் முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய சில வெளிப்படையான விபரங்களும் கடைசியில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

---

# இரண்டாவது கண்டம்

## பிரதான வகுப்புகள்

ஸன்யாஸிகள் நான்கு பெரும் வகுப்பினர்கள்:—

- ஸன்யாஸிகள்
  - குடீசகர் I
  - பஹூதகர் II
  - ஹம்ஸர் III
  - பரமஹம்ஸர் IV
    - அமுக்கியபக்ஷ பரமஹம்ஸர் 1
    - முக்கியபக்ஷ பரமஹம்ஸர் 2
      - முக்கிய பரமஹம்ஸர் (1)
      - துரீயாதீதர் (2)
      - அவதூதர் (3)

1. நடப்பு ஜன்மத்தில் இஹலோக ஸுகங்கள் யாதொன்றும் வேண்டியதில்லை யென்ற தீவ்ரமான வைராக்கியத்துடன் கூடிய பிராம்மணன் I-வதான குடீசக ஆசிரமத்தைக் கைக்கொள்ளத் தகுதியுள்ளவர்.

2. ஷை தீவ்ரமான வைராக்கியத்துடனும் சரீர சக்தியுடனும் கூடிய பிராம்மணன் II-வதான பஹூதக ஆசிரமத்தைக் கைக்கொள்ளத் தகுதியுள்ளவர்.

3. பூலோகம் முதல் ஸத்யலோகம் வரையுள்ள லோகங்கள் யாவற்றிலும் ஏற்படக்கூடிய ஸுகங்கள் யாதொன்றும் வேண்டியதில்லை யென்பதுடன் இனி புனர்ஜன்மமே கூடாதென்ற தீவ்ரதரமான வைராக்கியத்துடன் கூடிய

பிராம்மணன் III-வதான ஹம்ஸ ஆசிரமத்தைக் கைக்கொள்ளத்தகுதியுள்ளவர்.

4. ஷை தீவ்ரதரமான வைராக்கியத் துடனும், ஸாக்ஷாத் கைவல்ய மோக்ஷத்தில் முக்கிய உத்தேசத்துடனும், சரீர சக்தியுடனும் கூடிய பிராம்மணன் IV-வதான பரமஹம்ஸ ஆசிரமத்தைக் கைக்கொள்ளத்தகுதியுள்ளவர்.

[குறிப்பு:—மேலே காட்டியபடி ஸன்யாஸாசிரமத்தில் அதிகாரியாயிருப்பவர் பிராம்மணனைத் தவிர மற்றவரில்லை. இந்த விஷய ஸம்பந்தமான வேத-சாஸ்திர நிபந்தனைகளிற் சிலவை முன்பாகங்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இவ் வேத-சாஸ்திர நிபந்தனைகளை மீறியே இக்காலத்தில் நடந்து வருபவர்கள் ஷை நிபந்தனைகளுக்குரிய வாக்கியங்கள் பிராம்மணனால் ஏற்படுத்தப்பட்ட கட்டுவாக்கியங்களா யிருக்கலா மென்று சொல்லத்துணிந்துவிட்டார்கள். ஏதோ சில மேற்கு தேசங்களில் ராஜகீய அதிகாரமுள்ள வகுப்பினர்கள் (Political classes) தங்களுக்கு அனுகூலமாகவும் வியாபாரிகள் வியவஸாயிகள் முதலானவர்களுக்கு எதிரிடையாகவும் சில காலங்களில் சட்டவிதிகளை யேற்படுத்திக்கொண்டது போல், பிராம்மணனும் சாஸ்திரங்களில் தனக்கு வேண்டிய விதமெல்லாம் நிபந்தனைகளை எழுதி வைத்திருக்கக்கூடு மென்று எண்ணுகிறார்கள். பிராம்மணன் தன்னுடைய லாபத்தைக்கருதி கட்டு வாக்கியங்களை வேத-சாஸ்திரங்களில் புகவிடச் செய்திருப்பானேயாகில், சாஸ்திர நிபந்தனைகளெல்லாம் பிராம்மணனுக்கு அனுகூலமாகவேயிருக்க வேண்டுமென்பதையும் அவைகள் பெரும்பாலும் பிராம்மணனுடைய இவ்வுலக வாழ்நாள்களை ஸுகமேயில்லாத வாழ்நாள்களாகச் செய்திருக்கமாட்டா வென்பதையும் மேற்கண்ட ஆக்ஷேபகர்கள் தெரிந்துகொள்ளவில்லை. இவ்வுல

கத்தில் "நன்மை" என்று சொல்லப்படுவதெல்லாம் இந்திரிய ஸுகங்களிலும் ஐசுவரியத்திலும் ராஜகீய அதிகாரத்திலும் அடங்கியதாகவே யிருக்கின்றது. இம்மூன்று விஷயங்களிலும் பிராம்மணனுக்கு ஸம்பந்தமில்லாம லிருக்கும்படியாகவே வேத-சாஸ்திர வாக்கியங்கள் பிரவர்த்தித்திருக்கின்றன. இஷ்டப்படிக்கெல்லாம் இந்திரிய ஸுகங்களை (காமனைகளை) தேடிக்கொள்வதற்குள்ள ஸௌகரியத்தை சூத்திரனுக்கும், ஐசுவரியத்தைச் சேகரிக்கும் தன்மையை வைசியனுக்கும், ராஜகீய அதிகாரத்தை க்ஷத்திரியனுக்கும் ஏற்படுத்திக்கொடுத்து, பிராம்மண ஜீவனத்தைப் பிறவிமுதல் மரணம் வரையில் கஷ்ட ஜீவனமாகவே வேத-சாஸ்திரங்கள் செய்திருக்கின்றன. இவ்வுண்மையை அறியாமலே இக்காலத்திய தூர்க்கக்ஷிகள் செய்யப்பட்டு வருகின்றன.

𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌦𑍇𑌹𑍋𑌽𑌯𑌂
𑌨𑍋𑌪𑌭𑍋𑌗𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 ।
𑌇𑌹 𑌕𑍍𑌲𑍇𑌶𑌾𑌯 𑌤𑌪𑌸𑍇
𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌤𑌸𑍁𑌖𑌾𑌯 𑌚 ॥

பரலோக விஷயமான ஸுகந்தான் பிராம்மணனுக்கு உண்டேயல்லாமல் இவ்வுலகில் ஸுகமேயில்லை யென்பதற்கு ஒற்றுமையாகவே எவ்வித உலக இன்பங்களுக்கும் இச்சைகளுக்கும் கொஞ்சமேனும் இடங்கொடாத ஸன்யாஸாசிரமம் பிராம்மணனுக்கு மாத்திரம் விதிக்கப்பட்டிருக்கிறதென்று எல்லோரும் தெரிந்து கொள்ளவேண்டும்.]

## மூன்றாவது கண்டம்

### I. குடீசகரின் லக்ஷணங்கள்

1. இவருக்கு சிகையும் யஜ்ஞோபவீதமும் உண்டு.

2. இவர் ஸ்திரமாய் ஓரே குடிசையில் அல்லது மடத்தில் வஸித்து வரலாம். தன் புத்திரனுடைய அல்லது பந்து முதலானவருடைய கிருஹத்திலும் ஏகாந்தமான இடத்தில் தனிமையாய் வஸிக்கலாம்.

3. இவர் காலையிலும் மத்தியான்ஹத்திலும் ஸாயங் காலத்திலும், அதாவது, மூன்று காலங்களிலும் (திரிஷவண) ஸ்நானஞ் செய்யவேண்டியது.

4. இவர் இரண்டு மாஸங்களுக்கு ஒரு தடவை (ருது) க்ஷௌரம் செய்துகொள்ளவேண்டும்.

5. இவருக்கு இடுப்பில் கட்டிக்கொள்ள ஒருவஸ்திரமும் மேலுக்கு ஒரு வஸ்திரமும், ஆக இரண்டு காஷாய வஸ்திரங்களுண்டு.

6. மூன்று தண்டங்களைச் சேர்த்துக் கட்டிய திரிதண்டத்தை இவர் தரிக்கவேண்டும்.

7. இவருக்குப் புண்ட்ரம் வெள்ளை கோபீ-சந்தனத்தினால் ஊர்த்வபுண்ட்ரம், அதாவது, கோபீ நாமத்தைப் போட்டுக்கொண்டு அதின் பேரில் பஸ்மோத்தூளனத்தைச் செய்து கொள்ளவேண்டும்.

8. வெளிப்படையான அனுஷ்டானங்களும், மந்திர ஜபங்களும், விக்கிரஹாராதனம் முதலான பாஹ்ய பூஜையும் இவருக்குண்டு.

9. ஸன்யாஸிகள் எல்லோருக்கும் பிரணவோபாஸனம் ஏற்பட்டிருப்பதில், குடீசகராகிய இவர் உபாஸிக்க வேண்டிய பிரணவம் மானுஷப் பிரணவம்.

10. இவர் தன்னுடைய மாதா, பிதா, குரு இவர்களுடைய ஆராதனைகளையும் செய்துவர வேண்டும்.

11. இவருக்கு மண்வெட்டி, கூடை, உரி முதலான சில சாமான்களும், மரத்தினுலாவது மண்ணினுலாவது சுரை-தேங்காய்-மூங்கில் இவைகளாலாவது செய்யப்பட்ட கமண்டலுவுமுண்டு. (பொதுவாகவே, ஒருவித ஸன்யாஸி யும் லோஹங்களினுல் செய்யப்பட்ட பாத்திரங்களை வைத்துக்கொள்ளக்கூடாது.)

12. இவர் குரு இருக்கிற இடத்திலேயே இருந்து கொண்டு எப்போதும் வேதாந்த சிரவணத்தைச் செய்துவர வேண்டும்.

13. இவர் ஒரே கிருஹத்தில் பிக்ஷை புஜிக்கவேண்டியது. புத்திரன், பந்து வகையறுவின் கிருஹத்திலும் புஜிக்கலாம்.

14. ஸித்தியான பின்பு இவருடைய சரீரத்தை அக்னியினுல் தஹனம் செய்யவேண்டும். பூமியில் புதைப்பது முதலானது கூடாது.

15. அபரோக்ஷஜ்ஞான முண்டாகாமல் ஸித்தியடைந்து விட்டால் இவர் புவர்லோகம் போய் ஸுகித்திருப்பார்.

[குறிப்பு:—குடீசக ஸன்யாஸம் சுருதியில் சொல்லப்பட்டிருந்தும், இத்தென்தேசத்தில் ஸ்மார்த்தர்கள் குடீசக ஆசிரமத்தைக் கைக்கொள்கிறதில்லை. ஸ்ரீவைஷ்ணவர்களுக்குள் குடீசக ஸன்யாஸம் செய்யப்பட்டு வருகிறது; ஆனுல், இவர்கள் சுருத்யுக்தமான புண்ட்ரத்தைத் தரிக்கிறதில்லை, மற்றும் சுருதிப்படிக்குள்ள ஆசாரணைகளையும் மாற்றிக் கொண்டு விட்டார்கள்.]

## நான்காவது கண்டம்

### II. பஹூதகரின் லக்ஷணங்கள்

1. இவருக்கும் சிகையும் யஜ்ஞோபவீதமும் உண்டு.

2. இவர், பின் சொல்லப்படுகிற சிரவணகாலமும் சாதுர்மாஸ்யகாலமுந்தவிர மற்றக் காலங்களில், சரீரத்தில் சக்தியுள்ளவரையில், ஸஞ்சாரஞ்செய்து கொண்டே யிருக்க வேண்டும். ஸ்திரமாய் ஒரே மடத்தில் வஸித்து வரக் கூடாது. தன்னுடைய பூர்வாசிரம கிராமத்திற்குப் போகக் கூடாது.

3. தினந்தோறும் இவர் இரண்டு காலம் ஸ்நானஞ் செய்யவேண்டும்.

4. இவர் நான்கு மாஸங்களுக்கு ஒரு தடவை க்ஷௌரஞ் செய்து கொள்ளவேண்டியது.

5. இவருக்கு ஒரு காஷாய வஸ்திரந்தானுண்டு.

6. குடீசகரைப்போல் திரிதண்டத்தையும் இவர் தரிக்கவேண்டும்.

7. இவருக்கு புண்ட்ரம் விபூதி-திரிபுண்ட்ரம்.

8. இவருக்கும் வெளிப்படையான அனுஷ்டானங் களும் மந்திரஜபங்களும் விக்கிரஹாராதனம் முதலான பாஹ்ய பூஜையும் உண்டு.

9. இவர் உபாஸிக்கவேண்டிய பிரணவமும் மானுஷப் பிரணவந்தான்.

10. இவரும் எப்போதும் வேதாந்த சிரவணத்தைச் செய்து வரவேண்டியது. குரு ஸஞ்சாரத்திலிருந்தால் இவரும் கூடவே ஸஞ்சாரஞ் செய்துகொண்டு சிரவணத்தை

அனுஷ்டிக்கவேண்டும். குரு ஓரே இடத்திலிருந்தால் இவரும் சிரவணத்தின் பொருட்டு அவ்விடத்திலேயே யிருக்கலாம்.

11. இவருக்கு குடை, பாதுகை, உரி, ஜலபவித்திரம், ஆஸனம் முதலான சில சாமான்களும் முன் குறிப்பிட்ட கமண்டலுவும் உண்டு.

12. இவர் எட்டுக் கிருஹங்களில் எட்டுக் கபளம் மாதுகர பிக்ஷையைவாங்கி ஆஹாரஞ்செய்ய வேண்டும்.

13. ஸித்தியான பின்பு இவருடைய சரீரத்தை பூமியில் புதைக்கலாம் (கனனம்), அல்லது, அகழமுள்ள ஜலத்தில் கல்லைக்கட்டிப் போட்டுவிடலாம்; தஹனமில்லை.

14. அபரோக்ஷஜ்ஞான முண்டாகாமல் ஸித்தியடைந்துவிட்டால் இவர் ஸ்வர்க்கலோகம் போய் ஸுகித்திருப்பார்.

[குறிப்பு:—இத்தென்தேசத்தில் பஹூதக ஸன்யாஸிகள் காணப்படவில்லை. இங்கு ஸன்யாஸஞ் செய்துகொள்கிற ஸ்மார்த்தர்கள் எல்லோரும் பரமஹம்ஸாசிரமத்திற்குரிய விதிப்படி ஸன்யாஸஞ்செய்து கொண்டாலும், அனேக விஷயங்களில் அவர்கள் குடீசக-பஹூதக ஸன்யாஸிகளின் ஆசரணைகளையே கைக்கொண்டிருக்கிறார்கள். நடப்பு ஜன்மத்தில்இஹலோகத்தில் ஏற்படக் கூடிய ஸுகங்கள் தேவையில்லை யென்ற தீவ்ரமான வைராக்கியம் வந்தும், ஸ்வர்க்கம்-வைகுண்டம்-கைலாஸம் முதலான உத்தமலோகங்களில் கிடைக்கக்கூடிய ஸுகங்களில் மனப்பற்றுதல் ஏற்பட்டும், வெளிப்படையான அனுஷ்டான பூஜாதிகளிலும் மந்திரஜபாதிகளிலும் மனப்பிரவிருத்தியுடன் கூடியும் இருப்பவர் தன் சக்திக்குத் தக்கபடி குடீசக-பஹூதக ஆசிரமங்களையே கைக்கொள்ள வேண்டியது. ஸஞ்சாரஞ் செய்ய

தைரியமில்லாமலும், தன் சரீரஸௌகரியங்களை விசேஷ மாய்க் கவனித்துக்கொண்டிருப்பவர் குடீசக ஸன்யாஸத் தைத்தான் அவலம்பிக்கக்கூடும். மேற்கண்டவர்கள் பரம ஹம்ஸாசிரமத்தைக் கைக்கொள்வது சாஸ்திர விருத்தம்.]

---

## ஐந்தாவது கண்டம்

### III. ஹம்ஸரின் லக்ஷணங்கள்

1. இவர் சிகையை எடுக்காமல் அத்துடன் சேர்த்து ஜடையை வளர்த்துவரவேண்டியது; இவருக்கும் யஜ்ஞோப வீதமுண்டு.

2. சரீரத்தில் சக்தியுள்ளவரையில் சாதுர்மாஸ்ய காலந்தவிர மற்றக்காலங்களில் இவர் ஸஞ்சாரஞ்செய்து கொண்டே யிருக்கவேண்டும். ஸ்திரமாய் ஒரே மடத்தில் வஸித்து வரக்கூடாது. தன்னுடைய பூர்வாசிரம கிராமத் திற்குப் போகக்கூடாது.

3. தினந்தோறும் இவர் பிராதஸ்ஸ்நானம், அதாவது, ஒருவேளை ஸ்நானஞ் செய்துவர வேண்டும்.

4. இவருக்கு க்ஷௌரங் கிடையாது.

5. இவர் தரித்துக்கொள்ள வேண்டிய வஸ்திரம் ஒரு துண்டு காஷாய வஸ்திரந்தான். அஜினத்தையும் (மான் தோல் முதலானதையும்) உபயோகிக்கலாம்.

6. இவர் ஏகதண்டத்தை, அதாவது, ஒரே தண் டத்தை தரிக்கவேண்டும். இவர் கமண்டலுவையும் வைத் துக்கொள்ளலாம்.

7. இவருக்கு புண்ட்ரம் விபூதி திரிபுண்ட்ரமாவது இருக்கலாம், அல்லது, கோபீசந்தன ஊர்த்வபுண்ட்ரமாவது இருக்கலாம்.

8. இவருக்கு வெளிப்படையான அனுஷ்டானங்களாவது மந்திரஜபங்களாவது பூஜையாவது கிடையாது, மானஸ பூஜையுண்டு.

9. இவர் உபாஸிக்கவேண்டிய பிரணவம் ஆந்தரப் பிரணவம்.

10. இவர் செய்யவேண்டிய காரியம் முக்கியமாய் மனனமும் தியானமுந்தான். முன் குறிப்பிடப்பட்ட குடீசக-பஹூதக ஸ்தானங்கள் ஏற்படாமலும் சிரவணமில்லாமலும் ஹம்ஸாசிரமத்தைக் கைக்கொள்பவர் பஹூதகரைப் போல் சிரவண விதியை அனுஷ்டிக்கவேண்டும்.

11. இவர் அஸங்கிலுப்தமான (முன்னுலேயே ஸங்கல்பிக்கப்படாத) 3, 5 அல்லது 7 கிருஹங்களில் மாதூகர பிக்ஷையை வாங்கி புஜிக்கவேண்டும்.

12. ஸித்தியான பின்பு இவருடைய சரீரத்தை அகழமுள்ள ஜலத்திலேயே கல்லைக்கட்டிப் போட்டுவிட வேண்டும். பூமியில் புதைப்பது, தஹனம் முதலானது கூடாது.

13. அபரோக்ஷஜ்ஞானம் உண்டாகாமல் ஸித்தியடைந்துவிட்டால் இவர் தபோலோகம்போய் திருப்தராக இருப்பார். ஸத்யலோக ஸுகத்தில்கூட இச்சையில்லாதவரும் கைவல்யமோக்ஷத்தில் இச்சையில்லாதவருமான இவருக்கு ஸத்யலோகத்தில் மோக்ஷத்தின்பொருட்டு ஏற்படக்கூடிய உத்தம ஜ்ஞானுப்பியாஸத்தில் அதிகாரமில்லாததினுல், இவர் தபோலோகத்தில் உத்தம விரக்தர்களுக்குக் கிடைக்கக்கூடிய ஸ்தானத்திலேயே திருப்தராக இருக்கிறுர்.

[குறிப்பு:—ஹம்ஸ ஸன்யாஸிகளும் இத்தென்தேசத்தில் காணப்படவில்லை. சாஸ்திர விதிகளின்படி நியாயமாய் தனித்தனியே குடீசக-பஹூதக-ஹம்ஸ ஸ்தானங்களுக்கு

மாத்திரம் தகுதியுள்ள வெகு பெயர்கள் முன் குறிப்பிட்ட படி தங்களுடைய யோக்கியதையைக் கவனிக்காமலே பரம ஹம்ஸ விதிப்படி ஸன்யாஸஞ் செய்துகொள்கிறார்கள்.]

---

## ஆறாவது கண்டம்

### IV. 1. அமுக்கியபக்ஷத்தில் பரமஹம்ஸரின் லக்ஷணங்கள்

1. இவர் ஸன்யாஸ காலத்தில் பரமஹம்ஸாசிரமத் திற்குரிய விதானப்பிரகாரம் சிகையையும் யஜ்ஞோபவீதத் தையும் எடுத்து விஸர்ஜனஞ் செய்துவிடுவதால் மேற்படி இரண் டும் இவருக்குக்கிடையாது.

2. தினந்தோறும் இவர் ஹம்ஸரைப்போல் ஒரு வேளை ஸ்நானஞ் செய்துவர வேண்டும். சிரவணகாலத்தில் திரிகால ஸ்நானஞ்செய்துவர வேண்டுமென்றும் பக்ஷாந்தர மாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

3. இவர் ஆறு மாஸங்களுக்கு ஒரு தடவை (அயன) க்ஷௌரஞ் செய்துகொள்ள வேண்டியது.

4. இவர் தரிக்கவேண்டிய வஸ்திரம் ஒரே கந்தை காஷாய வஸ்திரந்தான், இரண்டாவது கூடாது. இரண்டு காஷாய ஜீர்ண கௌபீனங்களை வைத்துக்கொள்ளலாம்; அஜினத்தையும் உபயோகிக்கலாம். புது வஸ்திரத்தையா வது கௌபீனத்தையாவது கிரஹிக்கவுங் கூடாது, தரிக்க வுங்கூடாது.

5. இவர் ஒரு வைணவ (கல் மூங்கிலால் செய்யப் பட்ட) ஏகதண்டத்தைத் தரிக்கவேண்டும். இவர் கமண்ட லுவையும் வைத்துக்கொள்ளலாம்.

6. பஹூதகரைப்போல் இவருக்குப் பாதுகையு மிருக்கலாமென்று பக்ஷாந்தரமுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், ஸன்யாஸிகள் தோலினால் செய்யப்பட்ட (சர்ம) பாதுகையை உபயோகப்படுத்தக் கூடாது. தவிரவும், யதி தர்ம நிர்ணய கிரந்தத்தில் மரத்தினால் செய்யப்பட்ட (காஷ்ட) பாதுகையையும் அவர்கள் தரிக்கக்கூடா தென்று கண்டிப்பாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால், ஸன் யாஸிகள் தரிக்கக்கூடிய பாதுகை திருணமயமான, அதாவது புல்லினால் செய்யப்பட்ட (தார்ண) பாதுகைதானென்று தெரியவருகிறது. நிஷித்தமான காஷ்ட பாதுகையை உப யோகப்படுத்துவதைவிட பாதுகையே யில்லாமலிருப்பதே பரமஹம்ஸருக்கு உத்தமமென்று வெளியாகின்றது. பிக்ஷா டனகாலத்தில் பாதுகை அவசியமென்று சொல்லப்பட்ட சாஸ்திரவாக்கியம் பஹூதகபரமென்றும் பரமஹம்ஸருக்கு ஸம்பந்தப்பட்டதல்லவென்றும் தெரிந்துகொள்ளவேண்டும்.

7. இவருக்கு புண்ட்ரம் பஸ்மோத்தூளனம் மாத்திரம்.

8. இவருக்கு வெளிப்படையான அனுஷ்டானங்க ளாவது மந்திரஜபங்களாவது பூஜையாவது கிடையாது, மானஸபூஜை யுண்டு.

9. இவர் உபாஸிக்கவேண்டிய பிரணவமும் ஆந்தரப் பிரணவந்தான்.

10. மற்றவர்களுக்கு மஹாவாக்யோபதேசத்தைச் செய்ய இவருக்கு அதிகாரமுண்டு.

11. குடீசகாதி ஸ்தானங்களை அடையாமலும் சிரவ ணஞ்செய்யாமலும் பரமஹம்ஸராகிவிட எண்ணங்கொண் டும், சிரவணத்தை உத்தேசித்தும், இந்த அமுக்கிய பரம ஹம்ஸ பக்ஷத்தைக் கைக்கொண்டிருப்பதால், இவர் முக்கிய

மாய்ச் செய்யவேண்டிய காரியமெல்லாம் சிரவணமும், மனனமும், தியானமுந்தான். குரு ஸ்திரமாய் ஓரே இடத்திலிருந்தாலும், அல்லது ஸஞ்சாரத்திலிருந்தாலும், இவர் குருவுடன் கூடவேயிருந்துகொண்டு சிரவணஞ்செய்ய வேண்டும்.

12. சிரவணமில்லாத காலங்களில் சரீரத்தில் சக்தியுள்ளவரையில், சாதுர்மாஸ்யம் தவிர மற்ற காலங்களில், ஸஞ்சாரஞ் செய்யவேண்டியது. பூர்வாசிரம-ஜ்ஞாதி-பந்து-ஸ்னேஹித ஜனங்களிருக்கிற இடங்களுக்காவது, தன்னுடைய முன் சொந்த தேசத்திற்காவது, முன் பரிசயமுள்ள தேசத்திற்காவது போகக்கூடாது. ஸ்திரமாய் ஓரே மடத்தில் வஸித்துவரக்கூடாது.

13. இவரும் ஹம்ஸரைப்போல் மூன்று, ஐந்து, அல்லது ஏழு கிருஹங்களில் அஸங்கிலுப்த-மாதூகர பிக்ஷையை வாங்கி புஜிக்கவேண்டும்.

14. ஸித்தியான பின்பு இவருடைய சரீரத்தை விகிரணம் செய்யலாம், அதாவது, சரீரத்தைத் துண்டு துண்டாகச் சேதித்து கிராமத்திற்கு வெளியில் நான்கு திக்குகளிலும் அந்த துண்டு மாம்ஸங்களை பிராணிகள் தின்னும்படியாகப் போட்டுவிடலாம்; அல்லது, சரீரத்தை பூமியில் புதைக்க கனனம் செய்யலாம்; அல்லது, அகழமுள்ள ஜலத்தில் கல்லைக்கட்டிப் போட்டுவிடலாம். ஒருக்காலமும் பரமஹம்ஸரின் சரீரத்திற்கு அக்னிதஹனம் கூடாது.

15. அபரோக்ஷஜ்ஞான முண்டாகாமல் ஸித்தியடைந்து விட்டால் இவர் கிரமமுக்தியைப் பெறுவார், அதாவது, ஸத்ய லோகம்போய் அங்கிருந்து கைவல்ய மோக்ஷத்தை யடைவார். பரமஹம்ஸருக்கு ஸத்யலோக ஸுகத்தில் இச்சையில்லாமலிருந்தபோதிலும், இவருக்குக்

கைவல்ய மோக்ஷத்தில் உத்தேசமிருந்து கொண்டிருப்பதாலும், இவருக்கு அரைகுறையாக இருக்கிற ஜ்ஞாநாப்பியாஸத்திற்குப் பூர்த்தி ஸத்யலோகத்திலேயே ஏற்படக்கூடியதாலும், முக்கியமாய் மோக்ஷார்த்தமாக அபரோக்ஷ ஜ்ஞானப்பிராப்தியின்பொருட்டே இவர் ஸத்யலோகம் போகும்படி ஏற்படுகிறது. ஸத்யலோகம் என்பதே ஸகுணப்பிரம்மலோகம். இதுவே முன் 6-வது பாகத்தில் விவரித்தபடி சதுர்முக பிரம்மோபாஸகர்களுக்கு பிரம்மலோகமாகவும் (ஸத்தியலோக மென்றே சொல்லுகிறதுமுண்டு), விஷ்ணுபக்தர்களுக்கு வைகுண்டமாகவும், சிவபக்தர்களுக்கு கைலாஸமாகவும் முக்கியமாய் விளங்குகின்றது.

[**குறிப்பு:**—*அமுக்கிய பக்ஷத்தில் பரமஹம்ஸராக இருந்து தண்டவஸ்திரங்களைத் தரிப்பவர் தன் குருவுடன் கூடவேயிருந்து சிரவண-மன்னங்களைச்செய்துவரவேண்டும். அவை பூர்த்தியாகி உறுதியான பரோக்ஷ ஆத்மஜ்ஞானம் ஏற்படுவதற்கு முன்பாக குருவைவிட்டு விலகக்கூடாது. அப்படி விலகிவிட்டால் இவருடைய ஸன்யாஸத்தின் முக்கிய உத்தேசமாகிய ஜ்ஞானப்பிராப்திக்கு இடமில்லாமல் போய் விடும். இப்படி குருவைவிட்டு வெளியேறித் தானாகவே மனனஞ் செய்து வரலாமென்று சொன்னால் அது சரியன்று. மனன காலத்தில் மனஸில் உதிக்கக்கூடிய ஸந்தேஹங்களை அப்போதைக்கப்போது நிவிருத்தி செய்துகொள்ள குரு ஸமீபத்தில் இல்லையானால் மனனம் பிரயோஜனப்படாது. ஆகையால், நிதித்தியாஸன யோக்கியதை பூர்ணமாக ஏற்படும்வரையில் குருவிடமிருந்துகொண்டே திருப்பித்திருப்பி சிரவண-மனனங்களைச் செய்து வரவேண்டிய தவசியம்.*]

---

## ஏழாவது கண்டம்

### IV. 2 (1). முக்கிய பரமஹம்ஸரின் லக்ஷணங்கள்

ஸன்யாஸத்திற்கு முன்பாகவே அபரோக்ஷஜ்ஞானி யாக இருப்பவர் ஸன்யாஸஞ் செய்துகொண்டால் அக் காலம் முதலே அவர் முக்கியபக்ஷ-பரமஹம்ஸராக இருந்து வந்து, முக்கிய-பரமஹம்ஸ-தர்மங்களையாவது துரீயாதீத-தர்மங்களையாவது அவதூத-தர்மங்களையாவது ஆசரித்து வரலாம். அப்படி ஜ்ஞானியாக இல்லாமல் ஜ்ஞானப்பிராப் தியின்பொருட்டு சிரவணாதிகளை உத்தேசித்தும் முன் சொல்லிய பிரகாரம் அமுக்கிய பரமஹம்ஸராக இருப்பவர் குருவிடமிருந்துகொண்டு சிரவண-மனனங்களைச் செய்து, உறுதியான சாஸ்திர-ஜன்ய (பரோக்ஷ) ஜ்ஞானம் ஏற்பட்ட பின்பு, மேல் நிதித்தியாஸனத்தை அப்பியஸிக்க வேண்டிய தற்காக குருவின் அனுமதியைப்பெற்றுக்கொண்டு அவரை விட்டு வெளியேறி, அப்பால் நதி முதலான புண்ய தீர்த்தத் தில் தன்னுடைய தண்டம், வஸ்திரம், கமண்டலு முதலான ஸகல சாமான்களையும் சுருதி விதிப்படி விஸர்ஜனஞ்செய்து விட்டு, முக்கியபக்ஷத்தில் பரமஹம்ஸராகி, முக்கிய-பரம ஹம்ஸ-தர்மங்களையாவது துரீயாதீத-தர்மங்களையாவது அவதூத-தர்மங்களையாவது கைக்கொள்ளலாம். ஸன்யாஸ காலத்திலேயே பரோக்ஷமான ஆத்மஜ்ஞானம் ஏற்பட்டிருக் கக்கூடியவரின் விஷயத்திலுங்கூட அனுபூதிரூபமாயில்லாத அவ்வித ஜ்ஞானத்திற்குப் பலவித காரணங்களால் மாலின்ய முண்டாகக் கூடியதாலும், பெரும்பாலும் ஸன்யாஸத்திற் குப்பின்பு செய்யப்படுகின்ற சிரவண-மனனங்களே பூர்ணபல வத்துக்களா யிருக்கக்கூடியதாலும், ஷை பரோக்ஷ ஜ்ஞானி யும் அமுக்கியபக்ஷ-பரமஹம்ஸராகிப் பிற்பாடு குறைந்த பக்ஷம் ஒரு வருஷகாலமாவது குருவிடமிருந்துகொண்டு

மறுபடியும் சிரவண-மனனங்களைச் செய்துவந்து தன்னுடைய பரோக்ஷஜ்ஞானத்தை நன்கு உறுதிப்படுத்திக் கொண்டு அப்பால்தான் குருவைவிட்டு வெளியேறி மேற் கண்ட கிரமப்படி தண்ட-வஸ்திராதிகளின் விஸர்ஜனத்தைச் செய்து முக்கியபக்ஷ-பரமஹம்ஸராகக்கூடும்.

1. முக்கிய பர்மஹம்ஸர் திகம்பரராகவு மிருக்கலாம், அல்லது ஒரு கௌபீனத்துடன்மாத்திரமு மிருக்கலாம். இவருக்கு வஸ்திரதாரணம் கூடாது.

2. இவருக்கு சிகையாவது யஜ்ஞோபவீதமாவது கிடையாது.

3. தினந்தோறும் இவர் ஒருவேளை ஸ்நானஞ்செய்ய லாம், அல்லது அதுவுமில்லாமல் மானஸ-ஸ்நானமே செய் யலாம்.

4. இவருக்கு க்ஷௌரங்கிடையாது; செய்துகொள் ளுகிறதாயிருந்தால் ஆறுமாஸங்களுக்கு ஒருதடவை அயன க்ஷௌரஞ் செய்துகொள்ளலாம்.

5. இவருக்கு புண்ட்ரம் பஸ்மோத்தூளனம் மாத் திரம்.

6. இவருக்கு வெளிப்படையான அனுஷ்டானங்க ளாவது மந்திரஜபங்களாவது பூஜையாவது கிடையாது. இவர் மானஸ பூஜையைச் செய்யலாம்.

7. இவர் உபாஸிக்கவேண்டிய பிரணவம் பிரம்மப் பிரணவம்.

8. மற்றவர்களுக்கு மஹாவாக்கியோபதேசத்தைச் செய்ய இவருக்கும் அதிகாரமுண்டு.

9. இவர் செய்யவேண்டிய காரியம் நிதித்தியாஸன மென்கிற இடைவிடாத தியானமொன்றுதான், வேறில்லை.

10. சரீரத்தில் சக்தியுள்ளவரையில் சாதுர்மாஸ்ய காலந்தவிர மற்ற காலங்களில் இவர் ஸஞ்சாரஞ்செய்து கொண்டே யிருக்கவேண்டும். பூர்வாசிரம ஜ்ஞாதி-பந்து-ஸ்னேஹித ஜனங்களிருக்கிற இடங்களுக்காவது, தன்னுடையமுன் சொந்த தேசத்திற்காவது, முன் பரிசயமுள்ள தேசத்திற்காவது போகக்கூடாது. ஸ்திரமாய் ஒரே மடத்தில் வஸித்துவரக்கூடாது.

11. ஸஞ்சாரஞ்செய்ய முடியாமல் சரீரத்தில் சக்தி குறைந்துபோய்விட்டால் கிரி, பர்வதம், குஹை, வனம், தேவாலயம், கிராமத்தின்கோடி, மரத்தடி முதலான ஏகாந்த ஸ்தலத்தில் ஸ்திரமாய் வஸித்து வரலாம்.

12. இவர் கிராமத்தில் பிரவேசித்து ஐந்து கிருஹங்களில் கரதலபிக்ஷையை வாங்கி அந்தந்த கிருஹத்திலேயே நின்று கொண்டே புஜிக்கவேண்டும், அல்லது நடந்து கொண்டே புஜிக்கலாம்; மத்தியில் ஆசமனம் கிடையாது. இவருக்கு ஜலஸ்தலந்தான் கமண்டலு. தன் கரதலம், அதாவது உள்ளங்கைதான் பிக்ஷாபாத்திரம். ஸ்திரமாய் ஏகாந்தவாஸஞ் செய்யும்போது ஸமீபத்தில் கிராமங்களில்லாவிட்டால், அயாசிதமாக யதிருச்சையாய் கிடைத்ததை புஜித்துக்கொண்டு திருப்தராக இருக்கவேண்டும்.

13. ஸித்தியான பின்பு இவருடைய சரீரத்தை முன் சொல்லியபடி கிரணம், கனனம் அல்லது ஜலத்தில் போடுவது இம்மூன்றில் ஒன்றைச் செய்யவேண்டும்.

14. இந்த முக்கிய பரமஹம்ஸருக்கு அபரோக்ஷஜ்ஞான மேற்படக்கூடியதால் இவருக்கு கைவல்யமோக்ஷமேயுண்டு. ஒருக்கால் ஷை ஜ்ஞானமேற்படாமல் ஸித்தியாகிவிட்டால் இவர் முன்சொல்லியபடி கிரமமுக்தியின்பொருட்டு ஸத்ய லோகம்போய் அங்கிருந்து கைவல்யமோக்ஷத்தை யடைவார்.

[குறிப்பு:—இக்காலத்தில் முக்கியபக்ஷ பரமஹம்ஸ-தர்மத்தைக் கைக்கொள்பவர்கள் அபூர்வமாயிருக்கிறார்கள். காலரீதியை அனுஸரித்து, கிரமமாய் சாஸ்திரவிதிகளின்படி ஸன்யாஸஞ்செய்து கொள்கிறவர்களே ஸ்வல்பமாயிருப்பது போல், அப்பால் முக்கியபக்ஷ விதிகளைக் கைக்கொண்டு ஆசரிப்பவர்களும் மிகவும் அரிது என்பது நியாயந்தான். உறுதியான பரோக்ஷஜ்ஞானமேற்பட்டு குருவின் அனுமதியைப் பெற்றுக்கொண்டு வெளியேறிய பின்பு சுருதியில் சொல்லப்பட்ட விதிப்படி தண்ட-வஸ்திராதிகளைத் தியாகஞ் செய்துவிட்டு திகம்பரராக அல்லது ஒரு கௌபீனத்துடன் மாத்திரமிருந்து வருவதற்கு சரீரசக்தியும் மனோதைரியமும் இல்லாதவர் அமுக்கியபக்ஷத்திலேயே யிருந்து கொண்டு நிதித்தியாஸனத்தைச் செய்து வரலாம். சிரவண-மனனங்களைப் பூர்த்தி செய்து கொண்ட அமுக்கிய பரமஹம்ஸர்களெல்லோரும் முக்கியபக்ஷத்தை அவலம்பிக்க வேண்டுமென்பதாகக் கட்டாயமில்லை. சரீரசக்தியும் மனோதைரியமு முள்ளவருக்குத்தான் முக்கியபக்ஷ விதிகள் ஏற்பட்டிருக்கின்றன. சக்தியுள்ளவர் அமுக்கியபக்ஷத்தையே ஆசரித்து வருவது கிரமமில்லை. முக்கியபக்ஷவிதிகளை அனுஸரிப்பவருக்கு நிதித்தியாஸன அப்பியாஸத்தில் விசேஷ ஸௌகரியங்களுண்டென்பது சுருதியின் கருத்தாகையால், சக்தியுள்ளவருக்கு சீக்கிரத்தில் தன்னுடைய பரோக்ஷ ஜ்ஞானம் அபரோக்ஷ ஸாக்ஷாத்காரஜ்ஞானத்தில் முடிவாக வேண்டுமென்ற உத்தேச மிருக்கும்பக்ஷத்தில் முக்கியபக்ஷத்தைக் கைக்கொள்வது மிக்க அவசியம்.]

## எட்டாவது கண்டம்

### IV. 2 (2). துரீயாதீதரின் லக்ஷணங்கள்

1. இவருக்கும் சிகையாவது யஜ்ஞோபவீதமாவது கிடையாது.

2. இவர் திகம்பரராகவே யிருக்கவேண்டும்.

3. இவருக்கும் நியதமாய் ஜலத்தில் ஸ்நானம் அவசியமில்லை. இவருக்கு பஸ்மஸ்நானம் விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

4. இவருக்கு க்ஷௌரங்கிடையாது.

5. இவருக்கு புண்ட்ரம் திலகம் என்கிற பொட்டு மாத்திரந்தான்.

6. இவருக்கும் வெளிப்படையான அநுஷ்டானமாவது மந்திரஜபமாவது பூஜையாவது கிடையாது.

7. இவர் உபாஸிக்கவேண்டிய பிரணவமும் பிரம்மப் பிரணவந்தான்.

8. மற்றவர்களுக்கு மஹாவாக்கியோபதேசத்தைச் செய்ய இவருக்கும் அதிகாரமுண்டு.

9. இவர் செய்யவேண்டிய காரியமும் நிதித்தியாஸனம் என்கிற இடைவிடாத தியான மொன்றுதான், வேறில்லை.

10. இவர் சரீரத்தில் சக்தியுள்ளவரையில் ஸஞ்சாரஞ் செய்துகொண்டே யிருக்கவேண்டும். பூர்வாசிரம ஜ்ஞாதி-பந்து-ஸ்னேஹித ஜனங்களிருக்கிற இடங்களுக்காவது, தன்னுடைய முன் சொந்த தேசத்திற்காவது, முன் பரிசயமுள்ள தேசத்திற்காவது போகக்கூடாது. ஸ்திரமாய் ஒரே மடத்தில் வஸித்து வரக்கூடாது.

11. ஸஞ்சாரஞ் செய்ய முடியாமல் சரீரத்தில் சக்தி குறைந்து போய்விட்டால் கிரி, பர்வதம், குஹை, வனம், தேவாலயம், கிராமத்தின் கோடி, மரத்தின் அடி முதலான ஏகாந்த ஸ்தலங்களில் ஸ்திரமாய் வஸித்துவரலாம்.

12. இவர் பழத்தை புஜிப்பார், அல்லது இவர் கிராமத்தில் பிரவேசித்து மூன்று கிருஹங்களில் கோமுக விதிப்படி (வாயினுலேயே), அதாவது கையை உபயோகப்படுத்தாமல், அன்னபிக்ஷையை புஜிக்கலாம். இவருக்கும் ஜலஸ்தலந்தான் கமண்டலு. தன் வாய்தான் இவருக்கு பிக்ஷா பாத்திரம். ஸ்திரமாய் ஏகாந்தவாஸஞ் செய்யும்போது ஸமீபத்தில் கிராமங்கள் இல்லாமலிருந்தால் அயாசிதமாக யதிருச்சையாய் கிடைத்த பலாதிகளை புஜித்துக்கொண்டிருப்பதாக இருக்கவேண்டும்.

13. ஸித்தியான பின்பு முக்கிய பரமஹம்ஸருக்கொப்பந்தம் இவருடைய சரீரத்தை ஸம்ஸ்காரஞ்செய்ய வேண்டும்.

14. முக்கிய பரமஹம்ஸரைப்போலவே இவருக்கும் நேர் கைவல்ய முக்தியாவது கிரமமுக்தியாவது ஏற்படும்.

[குறிப்பு:—எக்காலத்திலும் துரீயாதீத ஸன்யாஸிகளைக் காண்பது அரிது. இவர்களுக்கு திகம்பரமே விதியாயிருப்பது மன்னியில் ஆஹார நியமமும் அஸாதாரணமாயிருக்கிறது. இக்காலத்திலும் இவர்களிருக்கக்கூடுமானால், பெரும் வனாந்தரங்களிலும் மலைகளிலுமிருந்துகொண்டு பழங்களை புஜித்துக் காலங்கழித்து வரக்கூடும். பட்டணவாஸங்களிலும் கிராமாதிகளிலும் அபூர்வமாகக்கூட இவர்கள் இத்தென்தேசத்தில் காணப்படவில்லை.]

## ஒன்பதாவது கண்டம்

### IV. 2 (3). அவதூதரின் லக்ஷணங்கள்

1. இவருக்கும் சிகையாவது யஜ்ஞோபவீதமாவது கிடையாது.

2. இவர் திகம்பரராகவே யிருப்பார். ஒருக்கால் காஷாய வஸ்திரத்தைத் தரித்தாலும் தரிப்பார். இவருக்கு நியமமில்லை.

3. இவருக்கும் ஜலத்தில் ஸ்நானம் அவசியமில்லை. இவருக்கு வாயவ்ய ஸ்நானம் விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

4. இவருக்கும் க்ஷௌரங்கிடையாது.

5. இவருக்கு யாதொரு புண்ட்ரமுங் கிடையாது.

6. வெளிப்படையான அனுஷ்டானமாவது மந்திர ஜபமாவது பூஜையாவது இவருக்குங்கிடையாது.

7. இவர் உபாஸிக்கவேண்டிய பிரணவமும் பிரம்மப் பிரணவந்தான்.

8. மற்றவர்களுக்கு மஹாவாக்கியோபதேசத்தைச் செய்ய இவருக்கும் அதிகாரமுண்டு.

9. இவர் செய்யவேண்டிய காரியமும் நிதித்தியாஸனம் என்கிற இடைவிடாத தியானமொன்றுதான், வேறில்லை.

10. இவர் அஜகர (மலைப்பாம்பு) விருத்தியைக்கைக் கொண்டு தானிருக்குமிடத்தில் யாராவது கொண்டுவந்து கொடுத்த ஆஹாரத்தை வாயினால் கிரஹித்து புஜிக்க வேண்டும். வேறுவிதமான பிக்ஷை கூடாது. இவருக்கும் ஜலஸ்தலந்தான் கமண்டலு, தன் வாய்தான் பிக்ஷாபாத்திரம்.

11. ஸித்தியான பின்பு முக்கிய பரமஹம்ஸருக்கொப் பந்தம் இவருடைய சரீரத்தை ஸம்ஸ்காரஞ்செய்ய வேண்டும்.

12. முக்கிய பரமஹம்ஸரைப்போலவே இவருக்கும் நேர் கைவல்யமுக்தியாவது கிரமமுக்தியாவது ஏற்படும்.

[குறிப்பு:—துரீயாதீதரைப்போல் அவதூத ஸன்யாஸி யையும் இக்காலத்தில் பார்ப்பது மிகவும் அரிது. இத்தென் தேசத்தில் கிராமாதிகளிலாவது பட்டண நகரங்களிலா வது அவதூதர் இல்லை யென்றே சொல்லலாம். அவ தூதரின் லக்ஷணங்கள் இன்னவையென்றே ஸாமான்ய ஜனங் களுக்குத் தெரியாததினால், திகம்பரராக இருக்கிற அல்லது கௌபீனத்துடன் மாத்திரமிருக்கிற ஸன்யாஸியை அவ தூதரென்று எண்ணிவிடுகிறார்கள். திகம்பரம் அவதூத ருக்கு முக்கிய லக்ஷணமில்லை. பரமஹம்ஸரும் திகம்பரரா யிருக்கலாம். துரீயாதீதர் திகம்பரராகவே யிருக்கவேண்டும். ஒரு கௌபீனத்துடன் மாத்திரமிருப்பது பரமஹம்ஸ ருக்கே லக்ஷணம். அவதூதர் அனேகமாய் திகம்பரராக இருக்கக்கூடுமானாலும், அவர் முன் குறிப்பிட்டபடி ஒருக் கால் வஸ்திரத்தை தரிக்கவுங் கூடும். அவதூதருக்கு முக்கிய வெளிப்படையான அஸாதாரண அடையாளங்கள் விபூதி முதலானதை தரிக்காமல் புண்ட்ரமே யில்லாமலிருப்பதும் அஜகர விருத்தியினால் ஆஹாரஞ் செய்வதுந்தான். இவ் விரண்டு அடையாளங்களு மில்லாதவர் அவதூதரில்லை. பஸ்மோத்தூளனத்தையாவது வேறு புண்ட்ரத்தையாவது தரிப்பவரும், அஜகர விருத்தி யன்னியில் வேறுவிதமாய் ஆஹாரத்தைக் கிரஹித்து அல்லது ஏற்படுத்திக்கொண்டு உண்பவரும் கீழான ஸன்யாஸியாகவாவது அல்லது கிரு ஹஸ்தருக்கு ஸமானமாகவாவது ஆவரேயல்லாது அவதூத

ராகமாட்டார். பொதுவாக, மற்ற ஸன்யாஸிகளை அபே க்ஷித்து அவதூதருக்கு நியமமில்லையென்று சொல்லப்பட் டிருந்தாலும், அவதூதரின் முக்கிய அஸாதாரண லக்ஷணங் களில் கூட குறைவு இருக்கலாமென்று நினைக்கக்கூடாது. ஷை முக்கிய லக்ஷணங்க ளிருப்பதினால் அவதூதராக ஏற் பட்டிருக்கிறவர் ஸஞ்சாரம் முதலான இதர சில விஷயங் களில் மற்ற ஸன்யாஸிகளைப்போல் நியமங்களுக்குக் கட்டுப் பட்டவரில்லையென்று மாத்திரம் தாத்பரியம். அவதூதர் பின் சொல்லப்படப்போகிற அதிவர்ணாசிரமியைப்போல் எல்லா விஷயங்களிலும் நியமங்களைக்கடந்தவராகமாட்டார். அதிவர்ணாசிரமீ வர்ணாசிரம விதிகளைப் பூராவும் கடந்து மேல் போனவர். அவதூதரோவெனில் வர்ணாசிரம தர்மங் களுக்குட்பட்ட ஸன்யாஸாசிரமத்திலுள்ளவர். விதி-நிஷே தங்களுக்குப் பூராவும் இவர் வெளிப்பட்டவரில்லை. மேற் குறிப்பிட்ட அஸாதாரண அடையாளங்களைத்தவிர, இவருக் கும் மற்ற ஸன்யாஸிகளுக்கும் பொதுவாயுள்ள யதி-தர்மங் களையும் இவர் மீறி நடக்கக்கூடாது.]

---

## பத்தாவது கண்டம்

### வேறு சில வகுப்புகள்

இதுவரையில் விவரிக்கப்பட்டவைகள்தான் ஸன்யாஸி களுக்குள் முக்கிய பேதங்கள். இவைகளுக்குள்ளடங்கிய வைகளாகவே வேறு சில காரணார்த்தபேதங்களும் வேத-சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

1. கிரமமாய் ஸன்யாஸ விதிகளின்படி பிரயோகங் கள் பூராவையும் நடத்த இடமன்னியில் மரணம் ஸமீபித்து விட்டால் பிரேஷோச்சாரணம் முதலான சில முக்கிய கர்

மங்களமாத்திரம் ஆசரித்துச் செய்யப்படுகின்ற ஸன்யாஸம் ஆதுர அல்லது நிமித்த ஸன்யாஸமென்றும், கர்ம கலாபங்களுடன் வேத-சாஸ்திரங்களில் சொல்லிய கிரமப் படி விஸ்தாரமாய்ச் செய்யப்படுகின்ற ஸன்யாஸம் கிரம அல்லது அநிமித்த ஸன்யாஸ மென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதுர ஸன்யாஸமே ஆபத்ஸன்யாஸ மென்றும் கூறப்படுகிறது. இந்தப்படி ஸன்யாஸிகளுக்குள் **ஆதுர-ஸன்யாஸிகள்** என்றும் **கிரம-ஸன்யாஸிகள்** என்றும் இருவகையுண்டு. ஆதுர ஸன்யாஸி பிரணவ-மஹாவாக்கியோபதேசங்களைப் பெருமலும் அபரோக்ஷ ஜ்ஞானமில்லாமலும் ஸித்தியடைந்து விட்டால், உடனே பூலோகத்தில் மறுபடியும் பிராம்மண ஜன்மமெடுத்து அந்த ஜன்மத்தில் கிரம-ஸன்யாஸத்தை அடைவார். [குறிப்பு:—சாஸ்திரப்பிரகாரமுள்ள ஸன்யாஸம் ஆதுரவிதிப்படியாவது அல்லது கிரம விதிப்படியாவது நடத்தப்படவேண்டிய தவசியம். இவ்விரு வகையிலும் ஏற்படாதது ஸன்யாஸமே ஆகமாட்டாது. இக்கலிகாலத்தில் இவ்விருவகையிலும் அகப்படாத மூன்ருவது விதமான ஸம்பிரதாய ஸன்யாஸம் பெரும்பாலும் நடத்தப்பட்டு வருகிறது. ஆனால், இதையும் கிரம-ஸன்யாஸமென்றே ஜனங்கள் அறியாமையால் சொல்லிக்கொள்கிருர்கள். கிரம-ஸன்யாஸம் நடத்தப்பட வேண்டுமானல், அதம-பக்ஷத்தில் இரண்டுநாள் கிரியையினல்தான் அது பூர்த்தியாகக் கூடும். முதல் நாளில் அபரான்ஹ காலத்தில் (18 நாழிகைக்கப்பால்) ஆரம்பித்து அஷ்டசிராத்த-க்ஷௌராதி பூர்வாங்கக்கிரியைகளை "ஸ்ரூஹாநாயாஞ" பூர்த்தி பர்யந்தம் செய்து முடித்து அன்று வேத-சாஸ்திரங்களில் சொல்லியபடி உபவாஸமிருந்து கொண்டும், ராத்திரியில் அக்னி ஸம்ரக்ஷணம், பாராயணம், ஜபம், தியானம் முத

லானதுகளுடன் விதிப்படி ஜாகரணம் (கண்விழிப்பு) செய்து கொண்டு மிருந்து, இரண்டாவது தினத்தில் கிரமப் படி நடத்தவேண்டிய மேல் கிரியைகளேயும் செய்தபிறகு தான் கிரம-ஸன்யாஸத்தைப் பூர்த்தி செய்துகொள்ள முடி யும். அஷ்ட சிராத்தங்களே அபரான்ஹத்திலேயே செய்ய வேண்டு மென்பதும், மேற்கண்ட முதல்நாள் உபவாஸமும் ராத்திரியில் ஜாகரணமும் கிரம-ஸன்யாஸத்தின் முக்கிய அங்கங்களென்பதும் வேத-சாஸ்திரங்களில் தெளிவாய்த் துலங்குகின்றன. இப்படியிருக்க, இக்காலத்தில் காலேயி லேயே சிராத்தங்களே நடத்தியும், ஷை உபவாஸம் ஜாகர ணம் முதலானதுகளுக்கு இடமே யில்லாமற் செய்தும், ஸம்பிரதாய மென்று சொல்லிக்கொண்டு இரண்டு நாள் கிரியைகளே ஒரே பகலில் ஆஹாராதி சரீர ஸௌகரியங்க ளுக்கு இடைஞ்சலன்னியில் நடத்தி முடித்துவிடுகிறார்கள். விதி தப்பி நடத்தப்படுகிற கிரியை கிரியையே ஆகமாட்டா தென்று சொல்லுகிற சாஸ்திர வசனப்படி மேற்கண்டது கிரம-ஸன்யாஸமாக மாட்டாதென்றே எண்ணவேண்டியதா யிருக்கிறது. ஸன்யாஸத்திற்கே தகுதியில்லாதவர்கள் எப் படி நடத்திக்கொண்டபோதிலும் நடத்திக்கொள்ளட்டும்; அது விசாரவிஷயமேயல்ல. உறுதியான வைராக்கியத்தினுல் நியாயமாய் ஸன்யாஸத்தில் புத்தியேற்பட்டும், வேத-சாஸ்தி ரங்களில் மிக்க சிரத்தையுடன் கூடியும், மோக்ஷத்தில் இச்சை பலப்பட்டும், இருப்பவர்கள் விதிப்படிக்குள்ள கிரம ஸன்யாஸத்தை ஒழுங்காய்ச் செய்துகொள்ளாமல் ஏன் வழிதப்பிப்போய் தங்களுடைய முக்கிய உத்தேசத்தைக் கெடுத்துக்கொள்ளவேண்டும்? இப்படிச்செய்வதற்குக் கார ணம் ஸன்யாஸத்திற்கு முன்பாகவே அது ஸம்பந்தமான வேத-சாஸ்திரவிதிகளே நன்முகத் தெரிந்து கொள்ளாததுதா

னென்று சொல்லவேண்டும். எப்படிக் காலக்கொடுமையால் பிராம்மண்ய பலத்திற்கு முக்கியமான ஸம்ஸ்காரமாகிய உப நயனத்தையும், ஸ்திரீகளுக்கு ஏற்பட்டிருக்கிற ஒரே வைதிக ஸம்ஸ்காரமும் தர்மபரம்பரைக்கு முக்கிய காரணமுமான விவாஹத்தையும், அவைகள் விஷயமாய் சாஸ்திரத்தில் குறிப்பிட்டபடி நான்கு தின காரியங்களை நடத்தாமல், ஒரே தினத்தில் செய்துவிடுவதாகச் சிலர்கள் பாவனை செய்து ப்ர விருத்திதர்மத்தைக் கெடுத்து வீண்படுத்துகிறார்களோ, அப் படியே மோக்ஷத்திற்கு முக்கிய ஸாதனமாகிய ஸன்யாஸத் தையும் பாவனையாக ஒரு பகலில் நடத்துவதாகக்காட்டி நிவிருத்தி தர்மத்தையும் கெடுத்துக்கொண்டு வருகிறார்கள். இப்படி பாவனையாகச் செய்யப்படுகிற காரியங்களின் உண் மையான பலன்கள் இன்னவையென்று ஈசுவரனுக்குத்தான் தெரியக்கூடியது. ஸன்யாஸத்தில் ஸங்கல்பம், பிரேஷோச் சாரணம், அபயப்பிரதானம் இவைகள்தான் முக்கியமென் றும், மற்றதெல்லாம் அங்கமாகையால் முக்கியமில்லை யென் றும் கக்ஷி சொல்லப்பட்டால் அது சரியன்று. மரணம் ஸமீபித்த காலத்தில் செய்யப்படுகிற ஆதுர-ஸன்யாஸத்தில் தான் அங்கங்களுக்கு முக்கியத்தன்மை யில்லை யென்பது சாஸ்திரத்தின் கருத்து. கிரம-ஸன்யாஸத்தில் அங்கத்திற்கே முக்கியத்தன்மையுண்டு. இந்த முக்கியத்தன்மையால்தான் அந்த ஸன்யாஸத்திற்கு கிரமத்வம் ஏற்படுகிறது. அன்றியும், அங்கமில்லாமல் செய்யப்படுகிற ஆதுர-ஸன்யாஸத்தின் பலனும் அங்கங்களுடன் செய்யப்படுகிற கிரம-ஸன்யாஸத் தின் பலனும் ஒன்றாகமாட்டா. அவை வெவ்வேறு தானென்றே சுருதியிலேயே வெளியாகிறது. முன் குறிப் பிட்டபடி மறுபடியும் இப்பூமியில் பிறப்பு ஆதுர-ஸன்யா ஸிக்குத்தான் சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறதேயொழிய

கிரம-ஸன்யாஸிக்குச் சொல்லப்படவில்லை. ஆகையால், கிரம-ஸன்யாஸத்திற்குள்ள உத்தம நன்மையை அடைய வேண்டுமானால் இரண்டுநாள்களில் அதை விதிப்படி செய்து கொண்டால்தான் அது பயன்படுமென்பதே ஸித்தம்.]

2. முன்னாலேயே அபரோக்ஷ ஜ்ஞானியாயிருந்து ஸன்யாஸஞ் செய்துகொள்பவர் **வித்வத் ஸன்யாஸீ** என்றும், ஷை ஜ்ஞானத்தை ஸம்பாதிக்கும்பொருட்டும் ஸன்யாஸஞ் செய்துகொள்பவர் **விவிதிஷா ஸன்யாஸீ** என்றும் இரண்டு பேதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

3. ஷை இருவர்களுக்குள் வித்வான் ஜீவன்முக்த-ஸ்தானத்தை உத்தேசித்து வாஸனாக்ஷய-மனோநாசத்தின் பொருட்டு விசேஷ யோகத்தையும் அவித்வான் நிதித்தியாஸன ரூபமான யோகத்தையும் அப்பியஸிக்கக்கூடியதாலும், இவ்வித அப்பியாஸங்களில்லாமலே அனேகமாய் ஸன்யாஸிகள் இருக்கக் கூடியதாலும், **யோகி ஸன்யாஸீ** என்றும் **அயோகி ஸன்யாஸீ** என்றும் இருவகை பேதங்களும் சாஸ்திரத்தில் துலங்குகின்றன. ஆதியில் குறிப்பிட்ட நான்கு வித பேதங்களில் குடீசக-பஹூதக-ஹம்ஸர்களுக்குள் நிதித்தியாஸனரூப யோகாப்பியாஸத்திற்கு ஸாமான்யமாய் இடமில்லாததினால், பரமஹம்ஸர்களுக்குள்ளாகவே **யோகி பரமஹம்ஸர்** என்றும் **அயோகி பரமஹம்ஸர்** என்றும் விபாகம் விசேஷமாய் வெளியாகிறது.

4. தவிரவும், உறுதியான வைராக்கியத்தை முன்னிட்டோ, அல்லது ஜ்ஞானத்தை முன்னிட்டோ, அல்லது இரண்டையும் முன்னிட்டோ, அல்லது இரண்டும் பலப்படாமல் ஆசிரமக்கிரமப்படி செய்யவேண்டுமென்று எண்ணியோ, அல்லது எப்போதும் வேதத்தில் முக்கியதமமான பிரணவத்தையே உபாஸிக்கவேண்டுமென்று உத்தேசித்தோ

ஸன்யாஸஞ் செய்துகொள்பவர்களை சாஸ்திரத்தில் முறையே **வைராக்கிய ஸன்யாஸீ** என்றும், **ஜ்ஞான ஸன்யாஸீ** என்றும், **ஜ்ஞான வைராக்கிய ஸன்யாஸீ** என்றும், **கர்ம ஸன்யாஸீ** என்றும், **வேத ஸன்யாஸீ** என்றும் பலவிதமாய் விபாகப்படுத்தியிருக்கிறது. இந்த பேதங்களெல்லாம் பலவா யிருந்த போதிலும் இங்கு முன் பக்கங்களில் விவரித்திருக்கிற முக்கிய பேதங்களுக்குள் அடங்கியவைகளே.

5. அன்றியும், **லிங்க ஸன்யாஸீ** என்றும் **அலிங்க ஸன்யாஸீ** என்றும் ஒருவித விபாகமும் சொல்லப்பட்டிருக்கிறது. சுருதிப்படி நான்காவது ஆசிரமமாகிய ஸன்யாஸாசிரமத்தில் அதிகாரம் பெற்றிருக்கிற பிராம்மணர்களுக்குள் காஷாயகௌபீன-வஸ்திர-தண்ட-கமண்டலு முதலான லிங்கங்களுடன், அதாவது அடையாளங்களுடன் கூடிய ஸன்யாஸி லிங்க ஸன்யாஸி என்று சொல்லப்படுகிறார். அலிங்க ஸன்யாஸிகள் இருவகை. ஷை லிங்க ஸன்யாஸியே சிரவண-மனனத்திற்குப் பின்பு முன் சொல்லியபடி நிதித்தியாஸன அப்பியாஸத்தின்பொருட்டு வஸ்திரம், தண்டம், கமண்டலு முதலானதுகளை சுருதிவிதிப்படி விஸர்ஜனஞ் செய்துவிட்டு லிங்கமில்லாமல் அலிங்க ஸன்யாஸீயாக இருக்கக்கூடும். இவ்வித அலிங்க ஸன்யாஸிகளும் மேற்கண்ட லிங்க ஸன்யாஸிகளும் முன் விவரிக்கப்பட்ட முக்கிய ஸன்யாஸி பேதங்களுக்குள் ளடங்கியவர்கள். ஸன்யாஸாசிரமத்தில் அதிகாரமில்லாத க்ஷத்திரிய-வைசிய-சூத்திரர்களும் ஸ்திரீகளும் ஷை காஷாயம் முதலான லிங்கங்களில்லாமல், உத்தம வைராக்கியத்தை முன்னிட்டு, சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட **வீரமார்க்கத்தில்** பிரவேசித்து சரீரத்தியாகத்தைச் செய்யலாம். இப்படிப்பட்ட வீரமார்க்ககா(மா)மிகளும் கௌரவமாக அலிங்க ஸன்யாஸிகள்

என்றே கூறப்பட்டு மரியாதை செய்யப்படுகிறார்கள். கொஞ்சமேனும் பலத்தில் இச்சையில்லாமல் நிஷ்காம கர்மங்களைச் செய்துவருகிற கர்மயோகிகள் ஆசிரமக்கிரமத்தில் ஸன்யாஸிகளாக இல்லாமலும் ஸன்யாஸிகளென்ற ஸ்தானத்தில் வந்தனுதிகளுக்கு யோக்கியர்களாக இல்லாமலுமிருந்தபோதிலும், அவர்கள் ஸன்யாஸிகளுக்கு ஸமானமென்றே எப்படி பகவானால் கீதையில் சொல்லப்பட்டிருக்கின்றதோ, அப்படியே வீரமார்க்கத்தில் செல்பவர்களையும் ஸன்யாஸிகளுக்கு துல்யர்களாகவே மனஸில் எண்ணி கௌரவப்படுத்தவேண்டும். இக்கலியுகத்தில் வீரமார்க்கத்தில் செல்வது கிரமமில்லை யென்று சிலர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள். ஆனால், இக்கலியின் ஆரம்பகாலத்தில் முன் பாகங்களில் கண்டபடி பாண்டவ-திருதராஷ்டிராதிகளால் கடைசியில் வீரமார்க்கப் பிரவேசஞ்செய்யப் பட்டிருப்பதாகவே தெரியவருகிறது. இந்த யுகத்தில் ஸன்யாஸமே கூடாதென்று ஓரிடத்தில் காணப்படுகிற புராண வாக்கியத்திலேயே எந்தக்காலம் வரையில் ஜாதிப்பிரிவுகளும் வேதப் பிரவிருத்தியும் தேசத்தில் காணப்படுகின்றனவோ அது வரையில் ஸன்யாஸஞ் செய்து கொள்ளப்பட வேண்டியது தானென்று விதிக்கப்பட்டிருப்பது போல், ஷை காலம் வரையில் வீரமார்க்கப் பிரவேசமும் சாஸ்திரப்படி செய்யப்படலாமென்றுதான் சொல்லவேண்டியதா யிருக்கிறது. ஆனால், ஷை பிரவேசத்திற்குரிய உத்கிருஷ்ட வைராக்கியமாவது, தன் சரீரத்தையும் அதின் மூலமாய் ஷை பிரவேசத்திலேற்படக்கூடிய மஹத்தான மரணாந்த கஷ்டங்களையும் ஒரு பொருட்டாகவே எண்ணுமலிருப்பதாவது இக்காலத்திய மனிதர்களுக்கு ஸாத்தியப்படக்கூடியதல்ல. உலகவாழ்க்கையிலும் ஸுகங்களிலும் தீவ்ரமான வெறுப்பு உண்

டாகியும், தன் சரீரத்தில் தான், தனது என்ற புத்தி முழுவதும் நீங்கிப்போயும், அதின்பேரில் சரீரத்தை விஸர்ஜனஞ் செய்து உத்தம பதவியை அடையவேண்டுமென்ற முடிவான உத்தேசத்துடனும், ஆஹாரமில்லாமலே ஒரே திக்கை நோக்கி நடந்து போய்க்கொண்டேயிருந்து, எதிரில் அக்னியிருந்தாலும், ஜலமிருந்தாலும், துஷ்டமிருக மிருந்தாலும், உன்னத மலை யிருந்தாலும் அக்கம்பக்கஞ் சலிக்காமல் நேராகவே சென்று பிராணத்தியாகத்தைச் செய்வது முதலானது **வீரமார்க்க** கமனமாகும்.

---

## பதினொன்றாவது கண்டம்

### அதிவர்ணாசிரமியின் லக்ஷணங்கள்

வேத-சாஸ்திர கிரந்தங்களிலும் லோகத்திலும் சில மஹான்கள் **அதிவர்ணாசிரமீ** என்ற பெயரால் குறிப்பிடப் பட்டிருக்கிறார்கள். அதிவர்ணாசிரமீ என்பவர் வர்ண தர்மத்தையும், அதாவது ஜாதிவியவஸ்தையையும், ஆசிரம தர்மத்தையும் அதிக்கிரமித்து மேற்சென்றவர். வாஸ்தவமான அதிவர்ணாசிரமீ ஸன்யாஸிகளைக் காட்டிலும் ரொம்பவும் மேலானவர். நியாயமாய் அதிவர்ணாசிரமியை ஸர்வோத்தம ஸன்யாஸியே என்றும் ஸன்யாஸி-மண்டலமாகிய மஹா விருக்ஷத்தின் கொம்பிலேயே நன்கு பழுத்து உதிர்ந்த பழமென்றும் சொல்லவேண்டும். பிராம்மணனாக இருந்து கிரமமாய் சாஸ்திரவிதிப்படி ஸன்யாஸஞ் செய்துகொண்டு, ஸன்யாஸி-தர்மங்களை நன்றாய் ஆசரித்துவந்து, சிரவண-மனன-நிதித்தியாஸனங்களின் பூர்த்தியின்பேரில் ஸமாதி நிலைத்து ஸாக்ஷாத் அபரோக்ஷமான ஆத்மஜ்ஞானத்தை அடைந்து, அப்பாலும் பாக்கியிருக்கக்கூடிய மனோவாஸனைகளைப் பூரா

வும் போக்கடித்து, மனோவிருத்திகளையும் நான்கு அடக்கி, ஸர்வோத்தமமான ஜீவன்முக்த ஸ்தானத்தை அடைந்திருப்பவர் எவரோ அவரே அதிவர்ணாச்ரமீ என்று கூறப்படுகிறார். இப்படிப்பட்ட மஹானுடைய புத்தியில் ஜாதியென்றும் ஆச்ரமமென்றும் வித்தியாஸ திருஷ்டியே யிருக்கமாட்டாது. இவர் யாரைப்பார்த்தாலும், எதைப்பார்த்தாலும், பிரம்மத்தின் வடிவமாகவே பார்ப்பாரேயொழிய பேதப்பார்வையே இவருக்கு ஏற்படாது. இப்படியே இவர் தன்னுடைய சரீரத்தைப் பார்க்கும்போதும், எப்பொழுதாவது தன்னைப்பற்றி நினைக்கும்போதும் இவரிடம் பிரம்மத்வபுத்தியே பிரதானமாக இருக்குமேயன்றி தான் பிராம்மணன் என்றாவது, ஸன்யாஸி என்றாவது மனோபாவனையுண்டாகாது. வர்ணம், ஆச்ரமம் இவ்விரண்டின் எண்ணமே இவருக்கு இராதாகையால், தான் அவ்விரண்டையும் கடந்தவர் என்ற எண்ணமும் இவருக்கிராது. வாஸ்தவமான அதிவர்ணாச்ரமீ தான் அதிவர்ணாச்ரமீ என்று ஒரு பொழுதும் சொல்லிக்கொள்ளமாட்டார். வர்ணாச்ரமவிதிகளைமீறி தான் நடந்துவருவதாகவும் அவருக்குத் தோன்றாது. அவருடைய செய்கைகளைப்பார்த்து வருகிற மற்றவர்கள் அவரை வர்ணாச்ரமங்களைக்கடந்த அதிவர்ணாச்ரமீ என்று ஊஹித்துச் சொல்லக் கூடுமேயல்லாமல், மனப்பூர்வமாய் தான் அவ்விதிகளை மீறி நடக்கக்கூடியவரென்ற விருத்தி அவருடைய மனஸில் உதிக்காது. எந்தக்காலம் வரையில் ஒருவருக்குத் தன்னிடத்திலும் மற்றவர்களிடத்திலும் பேதபுத்தியும் தான் அதிவர்ணாச்ரமீ என்ற எண்ணமும் இருந்துவருகிறதோ, அது வரையில் தன்னுடையவும் மற்றவர்களுடையவும் வர்ணாச்ரம ஸம்பந்தமான பேதங்களும் அவருடைய மனஸை விட்டுப்போகக் கூடியதில்லை. இவ்வித

பேதங்கள் பூராவும் அற்றுப்போய் எங்கும் பிரம்மப்பார் வையே உறுதிப்பட்டிருப்பவரே உண்மையான அதிவர்ணா சிரமியாவர். ஆகையால், லோகத்தில் ஜாதியென்றும் ஆசிர மமென்றும் பேதங்கள் மற்றவர்களால் பாராட்டப்பட்டா லும் தான் பாராட்டுகிறதில்லை யென்றும், தான் அப்பேதங் களைக் கடந்த அதிவர்ணாசிரமீ என்றும் சொல்லிக்கொண்டு எவர் மனப்பூர்வமாக வர்ணாசிரம விதிகளை மீறி நடந்துவரு கிருரோ அவர் அதிவர்ணாசிரமீ இல்லையென்பது நிச்சயம். இப்படிப்பட்ட போலி அதிவர்ணாசிரமிகள், தாங்களும் கெட்டு லோகத்திலும் தர்மத்தைக் கெடுத்துக்கொண்டு, இக் கலிகாலத்தில் அதிகரித்து வருகிருர்கள். இக்காலத்தில் **ஸ்ரீஸதாசிவ பிரம்மேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமி**களுக்கொப் பான வாஸ்தவ அதிவர்ணாசிரமிகளைப் பார்ப்பது மிகவும் துர்லபம்.

ஜீவன் முக்தருக்கும் வ்யுத்தான தசையுண்டென்றும் அவருக்கு பாஹ்ய திருச்யப்பிரதீதி யிருக்கலாமென்றும் கிரந் தங்கள் மூலமாய் வெளியாவதால், ஏன் அதிவர்ணாசிரமியின் புத்தியிலும் வர்ணாசிரம வித்தியாஸப்பார்வை யிருக்கக்கூடா தென்று கேட்கலாம். நன்ருய் விசாரித்து சோதித்துப் பார்த்தால் இந்த ஸந்தேஹத்திற்காவது கேள்விக்காவது இடமுண்டாகாது. அபரோக்ஷ ஜ்ஞானம் மாத்திரம் ஏற் பட்டு ஜீவன்முக்தஸ்தானத்தை அடையாதவரை ஸாமான்ய ஜ்ஞானீ என்றும் பிரம்மவித் என்றும் சொல்லுகிறதுண்டு. இப்படிப்பட்ட பிரம்மவித்துக்குத்தான் வ்யுத்தானதசை யில் மேற்கண்ட திருச்யப் பிரதீதி பூர்ணமாயிருக்கக் கூடியது. முன் பாகங்களில் கண்டபடி இவருக்கு ஸமாதி-காலத்தில் மாத்திரம் ஆத்மானுபவ மிருக்குமே யல்லாது வ்யுத்தான காலத்திலிராது. வ்யுத்தானகாலத்தில் ஸமாதி-அனுபவத்

தின் ஜ்ஞாபகம் மாத்திரமிருக்கும். ஜீவன் முக்தராகிய அதிவர்ணாசிரமிக்கு இப்படியல்ல. இவருக்கு எப்பொழு தும் ஆத்மானுபவம் தொடர்ந்தே யிருக்கும். இதற்கு விச்சித்தியே யிராது. ஆனால், இவருக்கும் ஸமாதிகாலம் வ்யுத்தான காலமென்கிற காலபேதமுண்டு. முன் 8-வது பாகத்தில் குறிப்பிட்டபடி ஸமாதிகாலத்தில் ஆத்மானுபவம் மாத்திரமிருக்கும், வ்யுத்தானகாலத்தில் பாஹ்யப்பிரதீதி யுடன் கூடியதாகவே ஆத்மானுபவமிருக்கும். இதெப்படி யிருக்கலாமென்று ஸந்தேஹப்படவேண்டாம். ஜீவன்முக் தருக்கு பிராரப்த சேஷத்தாலுண்டாகிற த்வைத பிரதீதிகளை உயிரில்லாத பிரதீதிகளென்றே சொல்லவேண்டும். அவை களுக்கு ஆத்மானுபவத்தைக் கெடுக்கக்கூடிய யோக்கியதை (சக்தி) கிடையாது. இவ்வித உயிரில்லாத பாஹ்யப்பிரதீதி களும் கீழ்ப்படிகளிலுள்ள ஜீவன்முக்தர்களாகிய பிரம்ம வித்வரன்-பிரம்மவித்வரீயான் இவ்விருவர்களுக்குமிருக்குமே யொழிய ஸர்வோத்கிருஷ்ட ஜீவன்முக்தராகிய பிரம்ம வித்வரிஷ்டருக்குக் கொஞ்சங்கூட ஏற்படமாட்டா. முன் பாகத்தில் சொல்லிய பிரகாரம் இவர் தானாகவாவது மற்ற வர்களின் தொந்திரவினாலாவது ஸமாதியைவிட்டு வெளியில் வரவேமாட்டார். ஸமாதியை விட்டு வெளியே வந்து பிரா ரப்தபோகத்தை பிரம்மவித்வரனும் பிரம்மவித்வரீயானும் அனுபவிப்பதுபோல் பிரம்மவித்வரிஷ்டனுக்குப் பிராரப்த போகத்தில் அனுபவம் ஏற்படுவதில்லை. தூங்குகின்ற குழந் தைக்குப் பாலைப்போட்டினால் அது எப்படி அறியாமலே பாலை உட்கொள்கிறதோ அப்படியே பிரம்மவித்வரிஷ்ட னுடைய பிராரப்தானுபவம் நடந்துவரும். இவருடைய உன்னத ஸ்தானத்திலிருந்து கவனிக்கக்கூடுமானால் பிராரப் தானுபவமே கிடையாதென்றுதான் சொல்ல வேண்டும்.

மேற்கண்ட மற்ற இரண்டு ஜீவன்முக்தர்களுக்கும் பிராரப்தானுபவமிருந்தபோதிலும், ஷை அனுபவம் அவர்களுடைய ஸாக்ஷாத் ஆத்மானுபவத்தால் ஆழ்த்தப்பட்டதாகப் போய்விட்டபடியால், ஷை பிராரப்தானுபவகாலத்தில்கூட திருச்யப் பிரதீதி பூர்ணமாயில்லாமலே அவர்கள் ஆனந்திகளாகவே யிருப்பார்கள். வ்யுத்தான காலத்தில் பூர்ணமான பாஹ்யப் பிரதீதியையுடைய பிரம்மவித்தாகிய ஸாமான்ய ஜ்ஞானியே ஷை பிரதீதியினுல் ஏமாந்து போகாமல் தன் ஸமாதிகால-ஆத்மானுபவ-ஜ்ஞாபக-பலத்தினுல் ஜகத்தை ஸ்வப்னம்போல் எண்ணி அலக்ஷியஞ்செய்து எங்கும் பேதப்பார்வையன்னியில் ஆத்ம திருஷ்டியைச் செலுத்திவர சக்தராயிருக்கையில், உயிரில்லாததும் ஸாக்ஷாத் ஆத்மானுபவத்தால் நன்கு அடக்கப்பட்டதுமான பாஹ்யப் பிரதீதியையுடைய உத்தமோத்தம ஜ்ஞானியாகிய ஜீவன்முக்தரென்ற அதிவர்ணுசிரமியின் புத்தியில் வர்ணுசிரமாதி பேதப்பார்வை கொஞ்சமேனு மிருக்கமாட்டாதென்பதே உண்மை.

---

## பன்னிரண்டாவது கண்டம்

### பரமஹம்ஸர் கவனிக்கவேண்டிய சில வெளிப்படையான விபரங்கள்

அடியிற்கண்ட பாஹ்ய விஷயங்கள் பரமஹம்ஸரால் முக்கியமாய் கவனிக்கப்படத் தக்கவைகள் :—

(1) 1. ஒரே தனி ஜாகையில் அல்லது மடத்தில் ஸ்திரமாய் வஸிப்பது,

2. ஒரு கிருஹத்தில் பிக்ஷையை புஜிப்பது,

3. ஜ்ஞாதி-பந்து-மித்திர கிருஹங்களில் பிக்ஷையை கிரஹிப்பது,

4. இரண்டு மாஸங்களுக்கு ஒருதடவை க்ஷௌரம் செய்து கொள்வது,

5. இரண்டு வஸ்திரங்களை தரிப்பது,

6. மாதா, பிதா, குரு இவர்களுடைய ஆராதனைகளைச்செய்வது,

(1) இவைகளில் எது இருந்தாலும் இத்துடன்கூடிய ஸன்யாஸீ **குடீசகரே** ஆவர்.

(2) வெளிப்படையான பூஜை, அனுஷ்டானம், மந்திரஜபம், இவைகளைச்செய்தால் இவர் **குடீசகர்** அல்லது **பஹூதகரே** ஆவர்.

(3) திரிபுண்ட்ரத்தை தரித்தால் **பஹூதகர்** அல்லது **ஹம்ஸரே** ஆவர்.

(4) இனிச்சொல்லப்படுகிற விபரங்களில் இவரிடம் எது காணப்பட்டாலும் இவர் **கிருஹஸ்தருக்கு** ஸமானர் தான் ஆவர்:—

1. இரண்டுக்குமேல் அதிக வஸ்திரங்களை வைத்துக் கொள்வது (கிலுப்தமாய் ஒவ்வொரு சாதுர்மாஸ்யகாலத்திலும் அதிகமாய் நூதன வஸ்திரங்களைச் சேகரித்துக்கொள்வது பெரும் தோஷமேயாகும்),

2. பித்தளை, வெண்கலம், தாம்ரம், வெள்ளி, தங்கம் முதலான லோஹங்களால் செய்யப்பட்ட பாத்திரங்களை வைத்துக்கொள்வது (மற்றவர்களுக்குச் சொந்தமான ஷெ பாத்திரங்களை தாத்காலிகமாக உபயோகப்படுத்துவதில் தோஷமில்லை),

3. உட்காருவதற்கு நாற்காலி முதலானதையாவது, படுக்கைக்காக கட்டில், பெஞ்சு முதலானதையாவது உபயோகப்படுத்துவது,

4. தூரதேசயாத்திரை, தீர்த்தயாத்திரை, க்ஷேத்திர யாத்திரை செய்வது,

5. மாட்டு வண்டி, குதிரை வண்டி, பல்லக்கு, யானை, குதிரை இவைகளில் ஏறிப்போவது,

6. பிரயத்னபூர்வமாய் உத்ஸவ தர்சனஞ் செய்வது,

7. தேவதாப்பிரஸாதத்தை கிரஹிப்பது (பிக்ஷாரூபமாக விஷ்ணு-நைவேத்யத்தை கிரஹித்து புஜிப்பதில் தோஷமில்லை),

8. ஸங்கீதம், பஜனை, நாமஸங்கீர்த்தனஞ் செய்வது,

9. விரதங்களையும் மற்றும் கிருஹஸ்தாதிகளுக்கு விஹிதமான நைமித்திகாதி கர்மாக்களையும் அனுஷ்டிப்பது,

[குறிப்பு:—"நாவ்ரதம் விதர்காயம் ச தீர்த்தயாத்ரா வ்ரதானி ச" என்ற சுருதிவிதிப்படி பரமஹம்ஸருக்கு விரதாதிகள் யாதொன்றும் கிடையாது. ஆகிலும், இக்காலத்திய பலவித ஸம்பிரதாயங்களையும் பெரும்பாலும் அனுஸரித்துக் கொண்டே ஸ்ரீ விசுவேசுவர ஸரஸ்வதீ ஸ்வாமிகளால் யதி-தர்மங்களை ஸங்கிரஹித்து வெளியிடுவதாக எழுதப்பட்டிருக்கிறதும் வெகுஜனங்களால் விசுவேசுவரஸ்ம்ருதியென்று கூறப்பட்டிருப்பதுமான யதிதர்மஸங்கிரஹ கிரந்தத்தில் ஏகாதசீ-உபவாஸ மிருப்பதினால் ஸன்யாஸிகளுக்கு தோஷமில்லையென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஏகாதசீ-விரதத்தை ஸன்யாஸீ அனுஷ்டிக்கவேண்டுமென்று சொல்லப்பட்டால் அது சுருதிவிருத்தமாகுமென்று எண்ணியே உபவாஸத்தினால் தோஷம் வராதென்று மாத்திரம் வெகு ஜாக்கிரதையாய் எழுதப்பட்டிருப்பதாகத்தோன்றுகின்றது. உபவாஸ மிருப்பதினால் எக்காலமும் தோஷமில்லை யென்பது உண்மையே. ஸன்யாஸீ ஆஹாரத்தை புஜிக்கவேண்டு

மென்பதாகக் கட்டாயவிதி கிடையாது. ஆஹாரம் தேவை யாயிருந்தால் சுருதியில் குறிப்பிட்ட பிக்ஷாக்கிரமங்களின் படி ஆஹாரத்தை வாங்கி புஜிக்கவேண்டு மென்பதற்குத் தான் ஸங்கோசம் விதிக்கப்பட்டிருக்கிறது. என்றைக்கு உபவாஸமிருந்தாலும் தோஷம் ஏற்படாதென்பது போல் ஏகாதசீ தினத்தில் உபவாஸமிருந்தாலும் தோஷமுண்டாகா தென்பது வாஸ்தவந்தான். ஆனால், **விரதானுஷ்டான உத் தேசத்தின் பேரில் ஸன்யாஸீ ஏகாதசீ தினத்தில் உபவாஸ மிருந்தால் தோஷமுண்டாகுமென்பதே சாஸ்திரக்கோள்கை.** இவ்வித விரதானுஷ்டானம் கர்மமே யாகும். நித்திய-நைமித்திக-காம்மிய கர்மங்கள் யாவற்றையும் பிராமணபுரஸ் ஸரமாக ஸன்யாஸ காலத்தில் விஸர்ஜனஞ் செய்திருக்கும் பரமஹம்ஸர் மறுபடியும் ஏகாதசீ-விரதானுஷ்டான ரூப கர்மத்தைக் கைக்கொள்வது எவ்விதத்திலும் நியாயமாகாது. கிருஹஸ்தாதிகளே எப்போதும்போல் ஆஹாரத்தை புஜிக் காமல் ஒருவிதமாய் விரதமிருந்துவருகிற ஏகாதசீ தினத்தில் ஸன்யாஸீ அன்னபிக்ஷையை வாங்கி புஜிப்பது அவருடைய கௌரவத்திற்குக் குறைவாகுமென்று தப்பாக எண்ணிக் கொண்டே அவரும் ஏகாதசீ-விரதத்தை யனுஷ்டிப்பதாக வெளிக்காட்டி வருவதான ஸம்பிரதாயம் அநேக ஸன்யாஸி களிடம் காணப்படுகின்றதேயல்லாமல், அது உண்மையான விரதானுஷ்டானமாகமாட்டாது. கிருஹஸ்தாதிகளுக்கு அதிருப்தி ஏற்படாமலிருக்கும்பொருட்டே ஷை ஸம்பிர தாயம் அவ்வித ஸன்யாஸிகளால் அவலம்பிக்கப்பட்டிருக் கிறது. இந்தப்படி கிருஹஸ்தாதிகளின் திருப்தியை உத் தேசித்தே கிரஹணஸ்நானுதி நைமித்திக கர்மங்களும் பெரும்பாலும் ஸன்யாஸிகளால் அனுஷ்டிக்கப்பட்டுவருகின் றன. இதெல்லாம் நியாயமான அனுஷ்டானங்களல்ல.

கிருஹஸ்தாதிகளின் திருப்தியிலாவது பிரீதியிலாவது உத்தேசமிருப்பதே சுருதிவிருத்தமென்று, அதாவது சுருதிப்படி தோஷமேயாகு மென்று ஸன்யாஸிகள் தெரிந்துகொண்டிருக்கவேண்டியதுண்டு. மேற்கண்ட அநுஷ்டானாதிகளைப் பற்றி ஸாமான்ய ஸன்யாஸிகளைக் கேட்டால், ஜகத்குரு முதலான பெரும் ஸ்தானங்களி லிருப்பவர்களாலேயே எப்படி ஆசரிக்கப்பட்டு வருகிறதோ அப்படியே தாங்கள் ஆசரித்து வருவதாகச் சொல்லுகிறார்களே யல்லாமல், தங்களுடைய ஆசரணைகளுக்கு சாஸ்திரப்படிக்குள்ள ஆதாரமிருப்பதாக அவர்களால் சொல்ல முடியவில்லை. ஷை பெரும் லோகாசாரியஸ்தானங்களி லிருப்பவர்களோவெனில் அவர்களுடைய பூர்வாசாரியர்கள் நடந்துவந்தபடியே தாங்கள் நடந்துவரவேண்டியதுதான் நியாய மென்று உறுதியுடனிருந்து வருகிறார்கள். பூர்வாசாரியர்கள் சுருதியை அநுஸரித்து நடந்துவந்த விஷயங்களில் மாத்திரம் அவர்களை அநுஸரித்துத் தாங்கள் நடந்துவந்தால் போதுமென்ற விபரத்தைக் காலவேற்றுமையால் அம்மஹான்கள்கூட தெரிந்துகொள்ளாமலிருப்பவர்களைப்போல் நடந்து வருகிறார்கள். இவ்விதமாக அந்தபரம்பராக்கிரமமாகவே வெகு பரமஹம்ஸ-ஸன்யாஸிகளால் பரமஹம்ஸ-தர்மங்களுக்கு எதிரிடையாக விரதங்களும் கர்மங்களும் இக்காலத்தில் ஆசரித்து வரப்படுகின்றன.]

10. மாதா, பிதா வகையறுக்களின் மாஸ்ய ஆப்திகாதி மரண தினத்தில் அவர்களை உத்தேசித்து தண்டஸ்நான-தர்ப்பணாதி விசேஷ கர்மங்களைச்செய்வது,

11. மற்றவர்களுக்கு வேதாந்தகிரந்தங்களைத் தவிர வேறு புராணாதி கிரந்தப்பிரவசனஞ்செய்வது (கீழ்ஸ்தானங்

களிலுள்ள ஸன்யாஸீ தானே புராணாதிபடனம் அல்லது சிரவணம் செய்வதில் தோஷமில்லை),

12. தேசீயாதி லௌகிக வியவஹாரங்களில் ஸம்பந்தம் வைத்துக்கொள்வது,

13. ஜனங்களுடன் நெருங்கிப் புழங்குவது, அவர்களுக்குள் ஸந்தி முதலானதைச் செய்வது,

14. லோகஸங்கிரஹ காரியங்களைச்செய்வது, அல்லது மற்றவர் மூலமாய்ச் செய்விப்பது,

15. ஜனங்களுக்கு மந்திர-தந்திரங்களை உபதேசிப்பது (சிஷ்ய ஸன்யாஸிக்கு பிரணவ-மஹாவாக்கியங்களை உபதேசிப்பதில் தோஷமில்லை. இது ஸ்வதர்மமேயாகும்),

16. நிக்கிரஹானுக்கிரஹம் செய்வது,

17. ஜோஸ்யம், மாந்திரிகம், ரக்ஷாபந்தனம், வைத்தியம் முதலானதுகளை ஆசரிப்பது,

18. ஆத்மஜ்ஞானப் பிராப்திக்கு ஸாதனமில்லாத சாஸ்திரங்களையும் கலைகளையும் அப்பியஸிப்பது,

19. ஜ்ஞாதி, பந்து, மித்திர ஜனங்களிருக்கிற இடங்களுக்குப்போவது,

20. தன்னுடைய உபயோகத்திற்காக அதிக சாமான்களையாவது புஸ்தகங்களையாவது சேகரிப்பது,

21. அன்னதானம் அல்லது வேறுதானம் செய்வது அல்லது மற்றவர் மூலமாய் செய்விப்பது (தனக்குக்கிடைத்த பிக்ஷையில் பூதங்களுக்கு ஸம்விபாகஞ்செய்து கொடுப்பதில் தோஷமில்லை; இது ஸ்வதர்மமேயாகும்),

22. ஜலத்தில் நீந்தி நதியைத் தாண்டுவது,

23. மரத்தில் ஏறுவது,

24. இலை, புஷ்பம், காய், பழம் இவைகளைப்பறிப்பது, மூலிகைகளைப் பிடுங்கி யெடுப்பது,

25. பாகம் செய்து, அல்லது பரிசாரகர் முதலான மற்றவரைக்கொண்டு பாகம் செய்வித்து உண்பது,

26. சந்தனம், புஷ்பம் இவைகளை தரிப்பது, வாஸனை வஸ்துக்களை உபயோகிப்பது,

27. தாம்பூலம் முதலானது போட்டுக்கொள்வது,

28. தங்கம் முதலானதுடனும் ரத்னங்களுடனும் செய்யப்பட்ட ருத்திராக்ஷ கண்டி முதலான ஆபரணங்களை தரிப்பது,

29. பட்டு, கம்பளம், ஜரிகை இவைகளை தரிப்பது, அல்லது ஆஸனத்திலாவது படுக்கையிலாவது போர்வையாக வாவது உபயோகிப்பது,

30. சாஸ்திர-நிஷித்தமான பாதுகைகளை உபயோகிப்பது,

31. முத்திரிதமான திரவ்யத்தை, அதாவது, காசு, பணம், ரூபாய், பௌன், நோட்டு முதலானதைத்தொடுவது, நேரில் அல்லது மற்றவர் மூலமாய் கிரஹிப்பது அல்லது உபயோகிப்பது,

32. தனக்கு மடம், ஸமாதிஸ்தலம், ஆலயம் கட்டிக்கொள்வது,

33. தான்யம், மடம், பூமி வகையறு சொத்துக்களை கிரஹிப்பது, அல்லது அவைகளில் ஸ்வான்பாத்தியம் வைத்துக்கொள்வது,

34. நந்தவனம் அல்லது தோட்டம் வைத்துப்பரிபாலிப்பது,

35. கிரய-விக்கிரயாதிகளைச் செய்வது,

36. தன்னுடைய ஸௌகரியத்தையாவது யசஸ்ஸை யாவது உத்தேசித்து, அல்லது தன் மடத்தின் அபிவிருத்தியைக் கருதி சிஷ்யர்களை அதிகரித்துச் சேர்ப்பது,

37. பல ஜனங்கள் கூட்டங்கூடியிருக்கிற ஸபா ஸ்தலத்திற்குப் போய் உபந்நியாஸஞ் செய்வது,

38. கர்மகாண்ட ஸம்பந்தமான தர்மாதர்ம விஷயத்தில் விதாயகஞ் செய்வது,

39. தன்னுடைய ஆசிரமத்திற்குரிய தர்மங்களைவிட வேறு காரியங்களில் அதிகப் பிரவிருத்தியுடனிருப்பது,

40. லௌகிக குசலப்பிரச்ஞாதிகளைச் செய்வது,

41. தன்னிடத்தில் வருகிற கிருஹஸ்தாதிகளுக்கு அதிதிஸத்காரஞ் செய்வது, அல்லது மற்றவர் மூலமாய் செய்விப்பது.

[குறிப்பு:—மேற்கண்ட விபரங்களை கவனித்தால், இக்காலத்தில் காணப்படுகின்ற ஸன்யாஸிகளில் அனேகர்களின் ஸ்திதி இன்னதென்றே சொல்லக்கூடியதாயில்லை. முக்கியமாய் இத்தென்தேசத்தில் ஸ்மார்த்த பிராம்மணர்கள் செய்து கொள்கிற ஸன்யாஸத்தில் சிகையையும் யஜ்ஞோபவீதத்தையும் விஸர்ஜனஞ்செய்து விடுவதால், அவர்களுடைய உத்தேசம் பரமஹம்ஸாசிரமத்தில் பிரவேசிப்பதாகவே யிருந்த போதிலும், அவர்களின் பின் ஆசரணைகள் பெரும்பாலும் பரமஹம்ஸதர்மங்களுக்கு எதிரிடையாகவே யிருக்கின்றன. (1) சுருதிப்படி பரமஹம்ஸர் ஆறு மாஸங்களுக்கு ஒருதடவை செய்து கொள்ளக்கூடிய அயனக்ஷௌரத்தைச்செய்து கொள்கிறதில்லை. இரண்டு மாஸங்களுக்கு ஒரு தடவை குடீசகர் செய்துகொள்ளவேண்டிய ருது க்ஷௌரத்

தையே ஆசரித்து வருகிறார்கள். (2) பரமஹம்ஸ ஸ்தானத்தில் ஒரு கந்தையை மாத்திரம் தரித்துக்கொள்ள வேண்டியிருக்க, குடீசகரைப்போல் இரண்டு வஸ்திரங்களை தரித்து வருகிறார்கள். (3) பரமஹம்ஸருக்கு பஸ்மோத்தூளனம் மாத்திரம் சுருதியில் ஸ்பஷ்டமாக விதிக்கப்பட்டிருந்தும், சுருதிவிருத்தமான சில புராணாதி மதக்கிரந்த வாக்கியத்தைப் பிரமாணமாகக் கொண்டு பஹூதக-ஹம்ஸர்களைப் போல் திரிபுண்ட்ரத்தையும் தரித்துவருகிறார்கள். (4) அநேகர்கள் குடீசக-பஹூதகர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிற பாஹ்யமான பாணலிங்க-ஸாளக்கிராம-விக்கிரஹாதி பூஜைகளையும், வெளிப்படையான அனுஷ்டானங்களையும், மந்திரஜபாதிகளையும் செய்துவருகிறார்கள். ஏன் இப்படிச் செய்யவேண்டுமென்று அவர்களைக் கேட்டால் பாணலிங்க-ஸாளக்கிராமங்களின் பேரில் ஒரு உத்தரணி தீர்த்தத்தினால் அபிஷேகஞ் செய்து விட்டால் மோக்ஷம் ஏற்படாமல் நின்றுபோய்விடுமோவென்று விளையாட்டாக பதில் கேட்கிறார்கள். மோக்ஷம் கிடைக்காதென்றும், புண்ணிய லோகவாஸம் மாத்திரம் கிடைத்து மறுபடியும் புனர்ஜன்மமே இங்கு உண்டாகுமென்றும் சுருதி வாயிலாக வியக்தமாய்த் தெரியவருகிறதென்பதாகவே அவர்களுக்குப்பதில் சொல்லவேண்டியதாயிருக்கிறது.

"பாஷாணலோஹமணிம்ருண்மயவிக்ரஹேஷு
பூஜா புநர்ஜநநபோககரீ முமுக்ஷோ:।
தஸ்மாத்யதி: ஸ்வஹ்ருதயார்சநமேவ குர்யாத்
பாஹ்யார்சநம் பரிஹரேதபுநர்பவாய ॥

இங்கு யதி: என்று மைத்திரேயோபநிஷத்தில் சொல்லப்பட்டிருப்பது வாஸ்தவ யதியும் முமுக்ஷுவுமான பரம

ஹம்ஸர் என்று தாத்பரியம். ஆகையால், பரமஹம்ஸர் ஒருக்காலமும் பாஹ்யபூஜையைச் செய்யக்கூடாதென்பதே ஸித்தம் (இது தைனந்தின பூஜையாயிருந்தாலும் சரி, வார்ஷிகமான வியாஸபூஜையாயிருந்தாலும் சரி). எக்காலத்திலும் பரமஹம்ஸர் செய்யக்கூடிய பூஜை மானஸபூஜையைத் தவிர வேறல்ல. (5) அன்றியும், சிலர்கள் குருவை விட்டு வெளியேறியபின்பு விதிப்படி ஸஞ்சாரஞ்செய்ய சக்தியுள்ளவர்களாயிருந்தும் அதைச்செய்யாமல் குடீசகரைப் போல் ஸ்திரமாய் ஓரே ஜாகையில் அல்லது மடத்தில் வஸித்து வருகிறார்கள். (6) மேலும், ஓரே கிருஹத்தில் புஜித்தும் பந்து முதலானவர்களின் கிருஹங்களிலும் பிக்ஷையை கிரஹித்தும் வருகிறார்கள் சிலர்கள். அஸங்க்லுப்த மாதூகர பிக்ஷயில் உத்தேசமுள்ள சிலர்கள் கூட அதை சுருதிவிதிப்படி கிரஹிக்காமல் சாஸ்திரவிரோதமான அஸத்ஸம்பிரதாய மார்க்கத்தில் ஸ்வீகரித்து வருகிறார்கள். சில கிருஹங்களில் மாதூகர (யாசித) பிக்ஷையை வாங்கிக் கொண்டும் அதை முன்னாலேயே ஸமாப்திக்காக தான் வரிக்கப்பட்டு ஒப்புக்கொண்டதின்பேரில் திட்டப்படுத்தப்பட்டிருக்கிற (ஸங்க்லுப்தமான) மற்றொரு கிருஹத்திற்குப் போய் அவ்விடத்தில் கிடைக்கிற (அயாசித) பிக்ஷயுடன் கலந்துகொண்டும் புஜித்துவருகின்றார்கள். இது சுருதி விருத்தம். அன்றியும், சிலர்கள் திகம்பரர்களாக இல்லாமலும், மற்ற விஷயங்களிலும் துரீயாதீதர்களாக இல்லாமலுமே வினோத புத்தியினாலும் ஸாமான்ய ஜனங்களை பிரமிக்கச் செய்துகொண்டும் துரீயாதீதருக்குரிய கோமுக விதிப்படி ஆஹாரத்தை புஜிக்கின்றார்கள். (7) சிலர்கள், அதிலும் விசேஷமாய் மடாதிபதிகள், குடீசகரைப்போலவே மாதா, பிதா, குரு இவர்களுடைய ஆராதனைகளையும் நடத்தி

வருகிறார்கள். மடங்களுக்கு ஸம்பந்தப்பட்ட சிஷ்யகோடி களின் பக்தியினாலும் அவர்களுடைய சிரேயஸ்ஸைக்கருதி யும் ஷை ஆராதனைகள் மடங்களில் நடத்தப்பட்டு வருவதில் தோஷமில்லையானாலும், ஷை ஆராதனைகளில் பரமஹம்ஸர் நேர் ஸம்பந்தத்தை வைத்துக்கொள்வதும் அவைகளில் செய்யப்படுகிற அன்னதான விஷயமாக பரமஹம்ஸரே தத் தம் (உதூழ்) முதலானதைச் செய்வதும் பிசகென்றுமாத் திரம் இங்கு சொல்லப்பட்டதாக அறிந்துகொள்ளவேண்டும். (8) இப்படியே சிஷ்ய கோடிகளின் நன்மையின்பொருட்டு மடங்களில் பரார்த்த பூஜை நடந்துவருவதிலும் குற்றமில்லை யானாலும், ஷை பூஜையைச் செய்யக்கூடிய கிருஹஸ்தர்கள் மூலமாய் ஷை பூஜை நடந்துவரலாமே யொழிய அதை பரமஹம்ஸ குருவே நடத்திவருவது சரியன்று. பரார்த்த பூஜை கிருஹஸ்தருக்கே நிகிருஷ்டமான காரியம். வெளிப் பூஜையே கூடாதென்ற ஸ்திதியிலிருந்து வருகிற பரமஹம் ஸர் அப்பூஜையைக் கைக்கொண்டு அதையும் பரார்த்தமாகச் செய்து வருவது மிகவும் அனுசிதம். ஆத்மார்த்தமாகவே பூஜையைச் செய்ய விரும்புவோர் குடீசக ஸன்யாஸத்தைச் செய்து கொண்டு மடத்தில் ஸ்திரமாயிருந்து பூஜையைச் செய்து வருவதுதான் உசிதமாகும். (9) சுருதியில் ஸன் யாஸத்தை நான்கு விதங்களாக விபாகப்படுத்தி அந்தந்த குறிப்பிட்ட யோக்கியதை யுள்ளவர் அந்தந்தவித ஸன்யா ஸத்தைச் செய்துகொள்ள வேண்டுமென்று விதிக்கப்பட் டிருக்கிறதே தவிர, நான்கு விதங்களையும் ஒன்றோடொன்று கலந்து கொண்டு அவரவர்களுக்குத் தோன்றியவாறு நடந்து வருவதற்கு சுருதி இடங்கொடுக்கவேயில்லை. பரமஹம்ஸ ராக இருந்துவர உத்தேசத்துடன் ஸன்யாஸ காலத்தில் முண்டனத்தைச் செய்துகொண்டு கர்மாங்க பூதங்களான

சிகாசேஷத்தையும் யஜ்ஞோபவீதத்தையும் விஸர்ஜனஞ் செய்துவிட்டவர் அப்பால் சிகா-யஜ்ஞோபவீதங்களுடன் கூடிய கீழான குடீசகாதிகள் செய்துவரவேண்டிய அனுஷ்டான-ஜப-பூஜாதி கர்மாக்களையும் அவர்களுடைய மற்றும் சில ஆசரணைகளையும் கைக்கொள்வதும் ஷிஷ்யார்களுக்கு அனுமதிக்கப்பட்டிருக்கிற விசேஷ ஸௌகரியங்களில் புத்தியைச் செலுத்தி அவைகளைத் தேடிக்கொள்வதும் முழுவதும் தகாத காரியம். இது ஸத்ஸம்பிரதாயமே ஆகமாட்டாது. வர்ண-விதிகள் எப்படியோ அப்படியே ஆசிரம-விதிகள் ஸம்பந்தமாகவும் அவரவர்களுக்கு சுருதியில் குறிப்பிடப்பட்ட ஸ்வதர்மங்கள்தான் ஆசரிக்கப்பட வேண்டியவைகளேயல்லாமல் பரதர்மங்களை ஆசரிப்பது நன்மையின் பொருட்டாகாது. எவ்விதம் ஸன்யாஸத்திற்குத் தகுதியில்லாதவர்களும் ஸன்யாஸாசிரம தர்மங்களை அனுஷ்டித்துவர சக்தியில்லாதவர்களும் அவ்வாசிரமத்தில் பிரவேசிக்கக் கூடாதென்று கண்டிப்பாக விதிக்கப்பட்டிருக்கிறதோ, அவ்விதமாகவே பரமஹம்ஸ தர்மங்களை ஆசரித்துவர சக்தியும் யோக்கியதையும் இல்லாதவர் பரமஹம்ஸாசிரமத்தில் பிரவேசிப்பதும் அக்கிரம காரியமேயாகும். முன் ஆராய்ச்சியன்னியில் தப்பாகப் பிரவேசித்துவிட்டு பரமஹம்ஸாசிரமத்திற்கு விரோதமான ஆசரணைகளை நடத்திக்கொண்டிருந்தால், ஷிஷ பிரவேசத்தின் முக்கிய உத்தேசம் நிறைவேற மாட்டாதென்பதே திண்ணம். சக்திக்குறைவினால் பரமஹம்ஸர் குடீசகாதிகளின் ஆசரணைகளைக் கைக்கொள்வது நியாயமேயாகாது. கிருஹஸ்தராயிருப்பவர் தனக்கு தண்டுலாதி ஸௌகரியமில்லாததினால் ஔபாஸனஞ்செய்ய முடியவில்லையென்று சொல்லிக்கொண்டு பிரம்மசர்யாசிரமத்திற்குரிய ஸமிதாதானத்தை அவர் செய்துவரக்கூடுமா, அல்லது

தனக்கு சமையல் செய்ய அல்லது செய்விக்க சக்தியில்லை யென்று சொல்லிக்கொண்டு மாதூகரவிருத்தியால் அன்ன பிக்ஷையை வாங்கி உண்பது தர்மமாகுமா? இந்தப்படியே பரமஹம்ஸரின் விபரீத ஆசாரணைகளும் அதர்மங்களென் பதே நிச்சயம். ஆகையால், இப்போதுள்ள ஸன்யாஸிகளில் அனேகர்கள் தங்களுடைய சாசுவதமான நன்மையைக்கருதி தங்கள் தங்களுடைய ஆசாரணைகளை சுருதிக்கு அனுகுண மாக மாற்றிக்கொண்டுவிட வேண்டியது மிக்க அவசியம். இனிமேல் ஸன்யாஸஞ் செய்துகொள்ள உத்தேசிப்பவர்க ளும் முன்னாலேயே சுருதிப்படிக்குள்ள ஸகல ஸன்யாஸி விதிகளையும் நன்றாகக் கிரமப்படி தெரிந்துகொண்டு இதின் 8-வது பாகம் 15-வது பாராவில் கண்டபடி அவரவர்களுக் குத் தகுதியுள்ள **ஸன்யாஸி மார்க்கப் பிரிவில் மாத்திரம்** பிர வேசித்து நற்கதியைத் தேடிக்கொள்ளவேண்டியதும் முக்கி யம். இப்படி முன் ஆராய்ச்சி செய்யும்போது தனக்கு எவ் வித ஸன்யாஸமும் செய்துகொள்ள யோக்கியதை யில்லை யென்று யாருக்காவது வெளியாகும் பக்ஷத்தில் அவர் ஸன் யாஸத்தைச் செய்துகொள்ளாமலிருப்பதே நியாயமும், அவ சியமும், நன்மையுமாகும். (10) மேலும், மேற்சொல்லியபடி பலவித ஸன்யாஸ தர்மங்கள் தாறுமாறாகக் கலந்து காணப் படுவதுந்தவிர, கிருஹஸ்தர் செய்யக்கூடியதும் எவ்வித ஸன்யாஸியும் எக்காலத்திலும் செய்யக்கூடாததுமான முன் குறிப்பிடப்பட்ட காரியங்கள்கூட இக்கலிகாலத்தில் சில ஸன்யாஸிகளிடம் காணப்படுகின்றன. முக்கியமாய் இவ்விஷயத்தை ஸன்யாஸிகளாயிருக்கிற மடாதிபதிகள் கவ னித்துத் தங்களுடைய ஆசாரணைகளைச் சீர்திருத்திக்கொள்ள வேண்டியதுண்டு. மடாதிபதிகளான ஸன்யாஸிகளும் சுரு தியில் குறிப்பிட்ட யதி-தர்மவிதிகளுக்குக் கட்டுப்பட்டவர்

களேயல்லாமல் அவர்களுக்குத் தனியாக ஆசரணை-விதிகள் ஏற்படவில்லை. மடாம்நாய கிரந்தத்தில்கூட ஒவ்வொரு பிரதான மடத்திற்கும் தனித்தனியாக வேதசாகையும், தேவதாவிசேஷங்களும், மடஸம்பிரதாயங்களும் சொல்லப்பட்டிருக்கின்றனவே தவிர மடாதிபதிகளான ஸன்யாஸிகளின் ஆசிரமதர்மாசரணை விஷயமாகத் தனிவிதிகள் சொல்லபடவுமில்லை, சுருதி விருத்தமாகச் சொல்லப்படக்கூடியதுமல்ல.

மேற்கண்ட விப்ரப்படிக்கெல்லாம் ஸன்யாஸிகளிடம் ஆசரணைகள் மாறுபட்டுப்போயிருப்பதற்கு முக்கியகாரணம் அவர்களில் சிலர்களுடைய உத்தேசம் மோக்ஷமாகிய பரமபுருஷார்த்தத்திலிருந்து நழுவிப்போயிருப்பதும் மற்றவர்கள் விஷயத்தில் சுருதிவிதிகளை நன்கு பரிசீலனஞ்செய்து பாராமலிருப்பதுமே தவிர வேறல்ல. எப்படி முன் 7-வது பாகம் 17-வது பாராவில் சொல்லியபடி உத்தம வர்ணத்தார்களிற் சிலர் பிராம்மண நிலையிலிருந்து நழுவி விழுந்து, தாங்கள் ஆராதித்து வரவேண்டியவரும் தங்கள் நிஜாத்மஸ்வரூபியுமான ஸர்வகாரண மூர்த்தியாகிய பரமாத்மாவிடமே உறுதியாய் அனந்நிய பக்திமைச் செலுத்தாமல், அல்பப்பட்டுப்போயிருக்கிற தங்களுடைய புத்திகளில் பெரியதாய்க் காணப்படுகின்ற க்ஷுத்திர தேவதைகளை உபாஸித்து வருகிறார்களோ, அப்படியே உத்தம ஆசிரமிகளும் தீவ்ரதம முமுக்ஷுக்களாயிருக்கவேண்டியவர்களுமான பரமஹம்ஸர்களில் சிலர்கள் தங்களுடைய உண்மையான நிலைமையைத் தெரிந்து கொள்ளாமலே முமுக்ஷுஸ்தானத்திற்குக் கீழ்ப்பட்ட ஸ்தானங்களிலுள்ளோர்கள் கைக்கொள்ளக்கூடிய ஆசரணைகளையே அனுஷ்டித்துவருகிறார்கள். வாஸ்தவத்தில் மஹாராஜாவின் பிரீதிக்கும் மரியாதைக்கும் நேர் பாத்திர

ஞகயிருக்கவேண்டிய வித்வான் புத்திப்பிரமையினுல் தன்னுடைய யோக்கியதையை அறிந்து கொள்ளாமலும், மஹாராஜாவே தனக்கு ஆப்தரென்பதை மறந்து போயும், கீழ் ஸ்திதியிலுள்ள ஸாமான்ய பாமரனைப்போலாகவே தன்னைப் பாவித்து அல்பஞகிய ஒரு ராஜஸேவகனை (கான்ஸ்டபிலை) ஆசிரயித்து அவனுடைய ஸ்நேஹிதத்தை ஸம்பாதித்துக் கொண்டும், அந்த ஸேவகனுடைய தாழ்ந்த நோக்கங்களுக்கெல்லாம் இணங்கி நடந்து கொண்டும் வந்து அதிஞலேற்படக்கூடிய அஸௌகரியங்களையும் கஷ்டங்களையும் அனுபவித்துக்கொண்டிருப்பது போல், க்ஷுத்திர-தேவதோபாஸகஞகிய பிராம்மணனும் கர்மோபாஸஞமார்க்க நிரதராகிய பரமஹம்ஸரும் தாழ்ந்த நிலமையிலிருந்து வருகிருர்கள். எவ்விதம் மஹாராஜாவையே மித்திரஞக அடைந்தவருக்கு ராஜ்யத்திலுள்ள ஸகல உத்தியோகஸ்தர்களும் ஸேவகர்களும் உண்மையில் வசப்பட்டவர்களாகவே யிருக்கக்கூடுமோ, அவ்விதமாகவே பரமாத்ம பக்தனுக்கு ஸகல தைவங்களும் அனுஸரணையாகவே யிருப்பார்களென்பதும், ஸர்வோத்தம பரமஹம்ஸ-தர்மாசரணைகளின் பயன் ரூபமான நி:ச்ரேயஸ மென்ற மோக்ஷானந்தத்தில் ஸகல கர்மோபாஸஞ பலன்களும்அடங்கியிருக்கின்றனவென்பதுமே ஸத்தியம். மேலான ஸ்திதியிலிருந்துகொண்டே உயர்ந்த மார்க்கத்தைமாத்திரம் கைக்கொண்டு ஸர்வோத்தம பதவியை அடைய வேண்டியவர் அம்மார்க்கத்தை விட்டுக் கீழே இறங்கி வந்து மற்றவர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கின்ற ஆசரணைகளைக் கைக்கொள்வது நியாயமில்லை. ராஜப்பிரீதியை ஸம்பாதிப்பது சிரமமாயிருந்தபோதிலும், ஸேவகனுடைய பிரீதியை ஸம்பாதிப்பது லகுவாயிருந்தபோதிலும், முடிவான உயர்ந்த பலனை உத்தேசித்து எப்படி லௌகிக வித்

வாஞல் சிரமம் பாராட்டப்படமாட்டாதோ, எப்படி உத்த மோபாஸனு மார்க்கத்திலிருக்கின்ற பிரவிருத்தி-தார்மிகர் க்ஷுத்திர தேவதைகளை லக்ஷியஞ் செய்யாமலே விசேஷ சிரம மெடுத்து ஸாக்ஷாத் ஸகுணப்பிரம்மத்தையே நிரந்தர மாக உபாஸித்து வருவாரோ, அப்படியே ஸர்வோத்தம ராஜயோகியாகிய உண்மையான பரமஹம்ஸர் கர்மோ பாஸனுமார்க்கங்கள் யாதொன்றையும் லக்ஷியஞ்செய்யா மலே விலகிநின்றும் சுருதியிஞல் நிர்திஷ்டமான தன் னுடைய மேலான ஜ்ஞாஞப்பியாஸத்திலேயே உறுதியா யிருந்தும் வரவேண்டுமென்பதே ஸித்தம்.]

# தர்ம விமர்சனம்

## முதலாவது அனுபந்தம்

உ

*முதலாவது*

## சென்னை மாகாண வர்ணாசிரமதர்ம மஹாஸங்கம், திருநெல்வேலி

## 1920

### உபசரணைக் கமிட்டி அக்கிராஸனாதிபதி நல்வரவு கூறுதல்

ஸ்ரீரஸ்து

ஸத்யமேவ ஜயதே

ஸ்ரீ ஸத்குருபாதாரவிந்தாப்யாம் நம:

ஸர்வேப்யோ தேவதாப்யோ நமோ நம:

நம: பரமர்ஷிப்ய:

ஆஸ்திகமதாபிமானிகளே! ஸநாதன-தர்மோத்தாரக சிகாமணிகளே!

*தங்கள் வரவு நல்வரவு*

1. *இந்த ஸ்ரீ தக்ஷிண-கங்கா தாம்ரபர்ணீ தீரத்தில் இருகரையிலும் அடுத்தடுத்துள்ள சைவ-வைஷ்ணவ திவ்ய க்ஷேத்ரப் பிரதேசங்களுக்குள் மத்யப்பிரதேசமானதும், இம்மஹாநதீ உத்தரவாஹினீயாய் பிரவஹிக்குமிடத்து அதற்கு மேல் பக்கமாயுள்ளதும், ஸகல விதத்திலும் ஸ்ரீ காசீ துல்யமுமான திருநெல்வேலியென்ற இந்த ஸ்ரீ சாலிவாட புரத்தில் ஜகத்காரண பரம்பொருளே இருரூபமெடுத்து*

ஈசான்யத்தில் ஸ்ரீ கைலாஸநாதராக விளங்கியும், நிர்ருதியில் ஸ்ரீ வரதராஜப் பெருமாளாகக் கோலங்கொண்டும் நமக்கிரு புரமுமிருந்து நமது ஸநாதன-வர்ணாசிரம-தர்ம-பரிபாலன விஷயத்தில் சிறிதும் ஊனம் நேரிடாது பாதுகாத்து வரப் பட்டதும், ஸ்ரீ பகவத் திவ்ய கருணாகடாக்ஷத்திற்குப்பாத்தி யப்பட்டதாக தர்ம மூர்த்திகளான தங்கள் வரவினாலேயும் நாங்கள் ஊஹித்துப் பெருமையுடன் கொண்டாடி வரப் பட்டதுமான இந்த ஆர்யதர்மசாலையில் ஆர்யோத்தமர் களாகிய தங்களுக்கு இவ்வுபசரணைக்கமிட்டியார்கள் ஸ்வா கதமென்று ஆவலோடு சொல்வதும், தங்கள் வரவைக்கண்டு மகிழ்வதும், அச்சொல்லையும் அம்மகிழ்ச்சியையும் ஆதர வுடனும் அன்புடனும் தாங்கள் அங்கீகரிப்பதும் கிரமமே யாகும். தான் பெரியோராகிலும், தன் வீடு சென்றாலும், அங்கு தனக்கடங்கிய ஒரு சிறு பாலகன் ஸந்தோஷத்துடன் வாருங்களென்று சொல்வதினால் தனக்குத் திருப்தியுண்டா வது முண்டல்லவா? ஸ்ரீ ஜகதீசன் நமக்களித்திருக்கும் பதார்த்தங்களில் சிலதை யெடுத்து நாம் அவருக்கே ஆஸ னாதிகளைக் கொடுத்தும், நிவேதனஞ்செய்தும் வருவதினால் அவருக்கு நம்மிடத்தில் முகோல்லாஸமும் கிருபாவிலாஸமு முண்டாவதாக நாமெண்ணவில்லையா? இந்த நியாயங்களைக் கைக்கொண்டு அதிமஹனீயர்களாகிய தங்களுடைய ஸ்வ ஸ்தானமாகவேயிருக்கிற இந்த தர்மநாட்டில் தங்கள் வருதிக் குட்பட்டு அடங்கியிருக்கிற இந்த உபசரணைக்கமிட்டி-அங் கத்தினர்களுக்காக பிரதிநிதி ஸ்தானத்தில் நான் அவர்களின் ஆஜ்ஞைக்கிணங்கி தங்களுக்கு நல்வரவுபசரணை வாக்குக்கூறு வதும் யுக்தமேயாகுமென்று தைரியங்கொண்டு ஸ்வாகத மென்று சொல்லத்துணிந்தேன். தாங்களெல்லோரும் இந் நாட்டு ஹிந்து மதாபிமானிகள் பேரில் தயவு புரிந்து இந்த

முதலாவது மாகாண ஸநாதன வர்ணாசிரமதர்ம மஹாஸங்கத்தை யதோசிதமாய் நடத்திக் கொடுத்தும், சுமார் மூவாயிரம் பிரதிநிதிகளடங்கிய இந்த மஹாஸங்கத்தினால் நம் தேசத்திற்கு நன்மையும் அனுதியாயுள்ள ஆஸ்திகமத-வைதிக-தர்ம விஷயங்களில் நம் ஹிந்துக்களெல்லோருக்கும் சிரத்தா-பக்தி அதிகரித்தும், நவீன விபரீதக்கொள்கைகளில் எவருக்கும் புத்திசென்று கெட்டுப்போகாமலும், இம்மாகாணமெங்கும் முன்போல் ஸத்கர்மானுஷ்டானேபாஸன ஜ்ஞான மார்க்கங்களில் நம் பிரம்ம-க்ஷத்திரிய-வைசிய-சூத்திர ஸகல வர்ணத்தார்களும் கலப்பு (ஸங்கர) ஜாதியார்களும் ஒழுங்குதவருது நடந்து வந்து ஐகமத்யத்துடன் திருப்தர்களாயுமிருக்கும்படி செய்து கொடுத்தும், மற்றும் தங்கள் ஆலோசனைகளில் எங்தெந்த உபாயங்களை அவலம்பித்து ஜனங்களை நல்வழிகளில் ஸ்தாபிக்கவேண்டுமென்று தோன்றுகின்றதோ அந்தப்படிக்கெல்லா மேற்படுத்திக் கொடுத்தும் அனுக்கிரஹிக்கவேணுமென்பதாய்த் தாழ்மையுடன் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்கிறேன்.

2. நம் ஹிந்துக்களின் தத்கால ஆசாரணைகளில் சில சீர்திருத்தங்கள் அவசியமாய்ச் செய்யப்படவேண்டியவையென்பது ஸகலர்களாலு மொப்புக்கொள்ளப்பட்ட விஷயம். ஆனல், **எதை எவ்வகையில்** சீர்திருத்த வேண்டியதென்பதில் அபிப்பிராயபேதங்களேற்பட்டிருக்கின்றன. லௌகிக ஸாமர்த்தியமும், ஆங்கிலேய வித்தியாப்பியாஸமும், ராஜாங்க ஊழியத்தில் அல்லது வேறு அர்த்தார்ஜனத் தொழில்களில் உயர்ந்த ஸ்தானமுமுள்ள சிலர்கள் நம்முடைய வர்ணாசிரம தர்மங்களின் கொள்கைகளினாலும் ஆசாரணைகளினாலும் ஹிந்துக்களின் நிலைமை கெட்டுப்போய் விட்டதென்றும்,வர்ணாசிரமபேதங்களை அடியோடு தொலைத்

தாலொழிய ஹிந்துக்களுக்கு நன்மை யேற்படாதென்றும், நாநா ஜாதிகளில் பிறந்திருக்கிற நாமெல்லோரும் ஒருவருக்கொருவர் நடந்து கொள்ளவேண்டிய வியவஸ்தையிலும், நாம் நடத்திவருகிற விவாஹாதி ஸம்ஸ்கார விஷயங்களிலும், மற்றுமுள்ள நமது தர்மாசரணைகளிலும் ஸம்பந்தப்பட்டிருக்கிற சாஸ்திரீயமான விதி-நிஷேத நிபந்தனைகளை நாம் விலக்கிக்கொண்டும், தத்கால ஸௌகரியங்களுக்கேற்றபடி நம் சாஸ்திரங்களை நாமே மாற்றிக்கொண்டும், மேல் நாட்டு நாகரிகங்களை யனுஸரித்து ஸ்வாதந்திரியத்துடன் நாம் நடந்து வரவேண்டுமென்றும் பலவாறாகப்பிதற்றியும் தர்மப்பிரஷ்டர்களாய் ஆசரித்தும் வருகிறார்கள். மற்றும் சிலர்களும் தங்களுக்கு விபரந்தெரியாமலே தங்கள் ஹிதத்திற்கு விரோதமாய், ஷை தர்மப்பிரஷ்டர்களின் சில வெளிப்படையான பாவனைகளினால் மயங்கி, மேற்கண்டபடியே சொல்லிவர இப்பால் கற்றுக்கொண்டிருக்கிறார்கள். ஷை இருவகையார்களைத் தவிர மற்ற யாவத்து ஹிந்துக்களுக்கும் வேத சாஸ்திரங்களிலும் வர்ணாசிரமதர்மங்களிலும் சிரத்தை பூராவும் குன்றிப்போகாமலிருந்து வருவதில் இவர்களின் அபிப்பிராயப்படியே, நம்முடைய சாஸ்திர முறைக்கிணங்கிய ஆசார-ஒழுக்கங்களே லோகோத்தரமானவையென்றும், இக்காலத்தில் ஹிந்துஜனங்களுக்குள் காணப்படுகின்ற மாறுபாடுகளும் கெடுதல்களும் ஆர்ய தர்மாசரணையிலிருந்து ஜனங்கள் நழுவிப்போனதாலேற்பட்டவைகளென்றும், அக்கெடுதல்களைப்போக்கடித்து நம் ஜனங்கள் நல்ல ஸ்திதிக்கு வரவேண்டுமானால் வேத சாஸ்திரங்களிலும் அவைகளைப் போதிப்பிவிக்கும் ஆசார்யர்களிடத்திலும் விசுவாஸம் அதிகரிக்கும்படிசெய்து சாஸ்திரோக்தமான ஸதாசார-தர்மானுஷ்டான நடைகளில் தங்களைத் திருப்பிக்கொள்வதன்றி

யில் வேறு மார்க்கமில்லையென்றும், சுமார் 50, 60 வருஷங்களுக்கு மேற்பட்டகாலமாய் வைதிக சிரத்தையும் சாஸ்திர ஆராய்ச்சியுமில்லாதவர்களும், ஸதாசார கர்மானுஷ்டானங்களைப்பெரும்பாலும் கைவிட்டவர்களும், பிரதான லௌகிக ஸ்தானங்களை யடைந்தவர்களுமான ஜனங்களின் வருதிக்குட்பட்டு நம் நாட்டில் அனேகர்கள் நடந்து வந்திருப்பதே நமக்குள் காணப்படுகின்ற கேடுகளுக்கு விசேஷகாரணமென்றும் ஸ்பஷ்டமாய் வெளியாகின்றது.

3. வர்ணாசிரம-தர்ம-ஸம்ரக்ஷண விஷயமாய்க் கவனிக்கப்படவேண்டியவைகள் அநேகங்களுண்டு. ஆங்கிலேய வித்தியாப்பியாஸமுள்ளவர்களுடைய மனதுகளில் படக்கூடிய சங்கைகளை யுத்தேசித்துச் சில விபரங்களைக் குறிப்பிட்டு ஆங்கிலேய பாஷையில் இன்று நான் கொஞ்சம் விரிவாய் வெளியிட நேரிடும். ஷை சங்கைகளேற்படாதவர்கள் முன்பாக ஷை விபரங்களைத் தமிழில் சொல்லக்காரணமாவது அவசியமாவதில்லாததால் அவைகளை நிறுத்திக்கொண்டு இரண்டொரு முக்கிய ஸங்கதிகளைச்சுருக்கமாய்த் தொட்டுக்காட்டி அவைகளையும் மஹாதார்மிகர்களான தங்களுடைய ஆலோசனை விஷயங்களாக விட்டு நான் சீக்கிரத்தில் முடித்துக்கொள்கிறேன்.

(1) நமது வர்ணாசிரம தர்மம் ஸநாதனமாயுள்ளது. நமது பிரமாணோத்தமமான வேதமும் அனாதி. அதினால் உபபாதிக்கப்படும் பரமாத்மப்பொருளும் அனாதி. அப்பொருளை அடைவதற்குள்ள தர்மோபாய மார்க்கங்களும் அனாதிகள். ஷை மார்க்கங்கள் முடியுமிடத்துள்ள ஜ்ஞான நிலையில் ஸாக்ஷாத்கரிக்கப்படுகின்ற சாசுவதாகண்ட ஸச்சிதானந்தாத்ம ஸ்வரூப ஜ்யோதிஸ்ஸே அப்பொருளின் விளக்கம். தர்மோபாயமார்க்கங்கள் அனாதியாயிருந்தும் அவை

களின் வழியாய்ச் செல்வோரை, அதிலும் அறிந்து செல்வோரை, இக்காலத்தில் காண்பது அரிதாய்ப் போய் விட்டது. இக்காலத்தில் அனேகமாய் ஸாத்திய ஸம்பந்தமான சிந்தையேயில்லாததினால் ஸாதனதர்மஜ்ஞானத்தைத்தேடுவாரில்லை. தர்மஸ்வரூபந்தெரிந்தாலல்லவோ அதில் மனதுக்குப் பற்றுதலேற்படும்? பெரும்பாலும் ஜனங்களுக்கு தர்மஸ்வரூபஜ்ஞானமில்லாததைவிட்டு அதர்ம-துஷ்டமான அர்த்தகாமங்களுக்கு வசப்பட்டு யாதாயாதமாய் அலைந்து கஷ்டப்படுகிறார்கள். ஆகையால், தர்மாதர்மவிவேசனம் ஜனங்களுக்குண்டாகும்படி உபாயங்களை யாலோசித்து எல்லோரையும் நல்வழிப்படுத்துங்கள்.

(2) காலத்தின் கொடுமையோ, அல்லது நம் ஜனங்களின் அத்யுத்கடமான பாபத்தின் பயனோ, எதுகாரணம் பற்றியோ, நம்முடைய இம்மாகாண தர்மநாட்டில் சில வர்ணத்தார்களுக்குள், அதிலும் விசேஷமாய் பிராம்மண வர்ணத்தாருக் கேதிரிடையாக, துர்க்கக்ஷிகளேற்பட்டு ஒருவருக்கும் ஸுகமன்னியில், எல்லோருடைய தர்மமுங்கெட்டு, ஹிதமின்னது அஹிதமின்னதென்றறியாமல், மூடத்தனமாய் ஒருவர் பிதற்றியதை மற்றவரும் பின்பற்றிச் சொல்லிக்கொண்டு, நற்கதிக்கிடமின்றி மோஹத்திலாழ்ந்து கிடக்கிறார்கள் பலர். அவர்களையும் ஸன்மார்க்கத்தில் கரையேற்றி அவர்களும் நற்கதியடையும்படியான காரியங்களையும் தாங்கள் செய்யக் கடமைப்பட்டிருக்கிறீர்கள்.

(3) இதுவுந்தவிர, முன் குறிப்பிட்ட தர்மப்பிரஷ்டர்களின் கொள்கைகள் நமது சாஸ்திரவிதிகளுக்கு நேர்விரோதமாயிருப்பதில், இங்குக் கூடியிருக்கிற பெரியோர்கள் அவகாசத்திற்குத் தக்கபடி ஷை தப்புக்கொள்கைகளோவ்

வொன்றையுமெடுத்துப் பரிசோதித்து, அலசி, அவைகளின் மேல் பூச்சுகளை விலக்கி, உள்ளிருக்கும் தத்வாபாஸங்களை நன்கு விரித்துக்காட்டி, இனியாவது நமது ஹிந்துக்கள் ஷியார்களின் மோஹகரமான சொற்களுக்குக் காது கொடாமலும், ஷியார்கள் இனி யெவ்விடத்திலுஞ்சென்று நம் ஜனங்களைக் கெடுக்க இடங்கொடாமலுஞ் செய்யத்தக்க ஏற்பாடுகளையும் தாங்கள் யோஜித்து கல்பிக்கவேண்டியதாயிருக்கிறது. ஷி தப்புக்கொள்கைகள் இன்னவையென்று வெகு ஜனங்களுக்கு ஏற்கனவே தெரியவருமாகையால் அவைகளைத் தனித்தனிதாய்க் குறிப்பிட்டு நான் சொல்லித் தங்களுடைய அருமையான காலத்தை வியர்த்தப்படுத்துவதிலிஷ்டமில்லை. தாங்கள் செய்யவேண்டிய உபகார காரியங்களைப் பற்றிப் பொதுவாகத் தங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேனே தவிர வேறில்லை.

(4) மஹாத்மாக்களான தங்களுக்கு மேற்கண்ட காரியங்கள் பெரியவையல்ல. தாங்களும் தங்களைப்போலொத்த மஹான்களும் அந்தந்தக் காலங்களில் கொஞ்சம் சிரமமெடுத்து கவனித்து தர்மலோபம் நேரிடாமல் ஜாக்கிரதையுடன் பாதுகாத்திருந்திருக்கும் பக்ஷத்தில் இப்போதுள்ள இவ்வளவு கெடுதல்கள் தென்படமாட்டா. அவரவர்களின் குடும்பத்திலுள்ள சிறுபையன்களையும் பெண்களையும் அன்பு கலந்த கண்டிப்புடன் நல்வழி தவறுது நடக்கும்படி செய்தும், நூதனப்படிப்பு ஸம்பந்தமாய் பையன்களுக்குத் தங்களுக்குத் தெரியாமலே சேர்க்கை தோஷத்தினுலும், அத்தியாவசியகத்தினுலும், தற்செயலாலும் நேரிடுகின்ற சில துராசாரங்களை அப்போதைக்கப்போது போக்கடித்தும், சிறுகச்சிறுக தர்மோபதேசங்களைச் செய்தும், தர்மானுஷ்டானங்களை இயன்றவாறு அவர்களின் பார்வையில் செய்து காட்டி

யும் வர வேண்டியது பெரியோர்களுக்கு அவசியமென்பது தங்களுக்குத் தெரிந்த விஷயமே.

(5) நமது புண்ய பூமியில் ஏற்கனவே அநாதிகாலமாய் வேரூன்றி ஓங்கிவளர்ந்திருக்கிற ஆர்யவர்ணாசிரம-தருவானது தத்காலத்தில் ஸர்வ-சோஷகரமான அவித்யாமாருத-விஜிரும்பணத்தாலும் தாபத்திரயாதிக்யத்தாலும் சோர்ந்து போயிருக்கும் நிலையிலிருந்து தங்களுடைய குளிர்ந்த அன்பு மிகுந்த தர்ம-முயற்சிப்பெருக்கால் மீண்டும் தழைத்தும் சாகோபசாகையாய் விருத்தியடைந்தும் ஸகலர்களுக்கும் தர்ம புருஷார்த்தபலனும் அதன் மூலமாய் பரமபுருஷார்த்தமான மோக்ஷ ஸாம்ராஜ்யானந்தமு மேற்படும்படி ஸ்ரீ பகவத் ஸங்கல்பமுண்டாகக்கருதி நாமெல்லோரும் ஏகோபித்து அவருடைய திருவடிகளில் மனதைச்செலுத்தி முறையிட்டுப் பிரார்த்திப்போம். நம்முடைய நித்தியமான வைதிக மதமும் ஸநாதனமான வர்ணாசிரம தர்மமும் அவருடைய ஸாக்ஷாத் பார்வையிலும் ஆதரவிலுமிருப்பதால், தைரியத்துடனும் நம்பிக்கையுடனும் அவர்மீது பொறுப்பைவைத்து அவருடைய ஆஜ்ஞாரூபங்களாகிய சுருதி-ஸ்மிருதிகளின் வழியாய் அவர் நமக்குக் காட்டியிருக்கிற தர்மமார்க்கங்களில் தவறாமல் நாம் நடந்தும் மற்றவர்களை நடக்கும்படி செய்தும் முயற்சிக்கவேண்டியதான் நமது முக்கிய கடமையை நம்மால் கூடியவரையில் இந்த மஹாஸங்க காரியத்தை முன்னிட்டுஞ் செலுத்துவோம். கருணாநிதியாகிய ஸ்ரீ ஜகதீசன் நம்முயற்சிகளுக்கு நல்வழிகாட்டி நம்மெல்லோரையும் கிருதார்த்தர்களாயும் தன்யர்களாயுஞ் செய்வாராக!

ஸ்ரீ ஹரிஃ

---

# தர்ம விமர்சனம்

## இரண்டாவது அனுபந்தம்

உ

ஸ்ரீராம:

யதோ ர்ம விஜயதே

இரண்டாவது

## சென்னை மாகாண வர்ணாசிரமதர்ம மஹாஸங்கம்

1921-ம் வருஷத்தில் தஞ்சாவூரில் கூடியது

அக்கிராஸனாதிபதியின்

## முதல் பிரஸங்கம்

ஸ்ரீ ஸத்குருபாதாரவிந்தாப்யாம் நம:
ஸர்வேப்யோ தேவதாப்யோ நமோ நம:

நம: பரமர்ஷிப்ய:

ஆர்யமதாபிமானிகளே! பெரியோர்களே! ஸ்நேஹிதர்களே!

1. இக்கலிமுழக்கத்தின் மத்தியிலகப்பட்டு விழித்துத் தத்தளித்துவருகின்ற வைதிகமதாபிமானிகள் ஒருங்கு சேர்ந்து மஹாஸபையை ஏற்படுத்தி வர்ணாசிரமதர்மம் நீடூழி வாழ்ந்து ஸகலர்களையும் நற்கதியிற் சேர்ப்பிவிக்கக்கூடிய மார்க்கங்களைப் பர்யாலோசனை செய்யும்படியான புத்தி யோகத்தைக் கொடுத்தனுக்கிரஹித்த ஸ்ரீபரமாத்மாவை

ஏகோபித்து நாம் அந்தரங்கசுத்தியாய் ஸ்துதித்து வர வேண்டியதும், நம் தர்ம வழிபாடுகளுக்குக் கேடின்றியல் எக்காலமும் ஜாகரூகர்களாய் பாதுகாத்துவந்திருக்கிற நமது ஆசார்யசிரேஷ்டர்களுக்கு நாமெப்போதும் பணிவுடன் வந்தனமளித்துவரவேண்டியதும் நமது கடமையென்பது வியக்தமே. இந்த மஹாஸங்கம் கூடுவதற்கு ஈசுவரானுக்கிரஹமும் ஸத்குருக்களின் ஸங்கல்பமுமே எப்படிக் காரணங்களோ அப்படியே இந்த மஹாஸபையின் காரியங்கள் பூராவும் ஸரியாய் நடந்தேறிவருவதற்கும் அவைகளையே நம்பியிருக்கிறோம்.

2. தாங்கள் மிக்க அபிமானத்துடனும் ஆதரவுடனும் எனக்கேற்படுத்தியிருக்கிற இந்தப் பெரும் ஸ்தானத்திலும் வீற்றிருக்க ஒரு நம்பிக்கையின் தைரியத்தைக்கொண்டே மனந்துணிந்து ஒப்புக்கொண்டேன். தைவானுகூலமும், மஹத்ஸங்கல்பமும், ஆர்யோத்தமர்களுடைய தர்ம-மார்க்க முயற்சிகளுமொன்று சேர்ந்தால் எந்த ஸத்காரியம் நிறைவேறாது? ஸாமான்ய லௌகிகனாகவும் விசேஷப்பிரஜ்ஞை யில்லாதவனாகவுமிருக்கிற என்னுடைய குறைகள் இந்த மஹாஸங்க காரியங்களில் ஸம்பந்தப்படமாட்டாவென்று உறுதிகொண்டு, எந்த ஸ்தானத்திலிருந்தாவது ஸத்ஸங்க நன்மையை அடையவேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் நான் தங்கள் கட்டளைக்கிணங்கி தங்களுடன் சேர்ந்து நானுமிந்த மஹாஸபையை நடத்துவதாய் பாவனை செய்துகொள்ளத்துணிவுகொண்டேன். ஈசுவரனிடத்திலும் ஸத்குருக்களிடத்திலும் பொறுப்பை வைத்து இங்கிருக்கும் பெரியோர்களே தீர்காலோசனையின்பேரில் நிதானமாய் இந்த ஸபா காரியாதிகளை நடத்திக்கொண்டு இந்த ஸ்தானகௌரவத்தைக் காப்பாற்றிக்கொடுப்பதுடன் என்னுடைய ஸொந்தக்

குறைகள் ஏதாவது தட்டுப்பட்டால் அவைகளையும் நீக்கி என்னையும் பாவனப்படுத்தி உத்தாரணஞ்செய்யவேண்டு மென்றும் தாழ்மையாய் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள் கிறேன்.

3. தத்காலத்தில் நம் வர்ணாசிரம தர்மானுஷ்டானத் திற்கு உண்டாயிருக்கிற இடையூறெல்லாம் நவீன ஆங்கி லேயப்படிப்பினாலேயே பெரும்பாலுமேற்பட்டிருக்கிறது. ஆங்கிலேயப்படிப்பிலகப்படாத நம்மவர்கள் ஷை தர்மத்தி லிருந்து அதிகமாய் நழுவிப்போகவில்லை. அவர்களுக்குள் காணப்படுகின்ற கெடுதல்கள் ஸ்வல்பம். அவைகளிலும் அநேகங்கள் ஆங்கிலேயப்படிப்பினர்களுடைய ஸஹவாஸத் தாலேற்பட்டவையல்லாது வேறல்ல. ஆங்கிலேயப்படிப்பி லாழ்ந்துள்ள நான் அப்படிப்பில்லாத சுத்த ஸன்மார்க்க ஸ்தர்களுக்கு விசேஷமாய்ச் சொல்லும்படியான ஸ்திதியி லில்லை. ஆங்கிலேய வித்யையின் கோணல்களினாலுண்டா யிருக்கிற கேடுகளை நான் அனுபவத்துடன் அறிந்தவனாகை யால் அவைகளை யெடுத்துக்காட்டிக்கண்டித்து அவ்வித்யை யுள்ளவர்களுக்குமாத்திரம் கொஞ்சம் சொல்லவேண்டிய துண்டு. இதற்கப்பால் நான் ஆங்கிலேய பாஷையில் தெரிவிக் கும் ஸமயத்தில் அவர்களுக்கு அவகாசப்பட்டமட்டில் அந்தப்படி சொல்லிக்கொள்கிறேன். தங்களில் ஆங்கிலேயப் படிப்பில்லாத சிலர்களை யுத்தேசித்துமாத்திரமிப்போது தமிழில் சிற்சில விஷயங்களைக் குறிப்பிட்டுச் சொல்லி நிறுத் திக்கொள்கிறேன். தங்களுக்குண்டாகாத வீண் ஸந்தேஹங் களை உண்டாகும்படிசெய்து அவைகளுக்கு ஸமாதானங் களைத் தேடியெடுத்துக்காட்டுவது வீண்சிரமமேயாகும். ஆங்கிலேயப்படிப்புள்ள எங்களையபேக்ஷித்துத் தாங்கள் மிக்க தன்யர்கள். ஆனால், தாங்களே தன்யர்களென்று நாங்க

ளெடுத்துச் சொல்லித்தெரிந்துகொள்ளவேண்டிய ஸ்திதியில் தங்களிலும் சிலர்களிருக்கிறார்கள். இதுவும் காலவேற்றுமை தான்.

4. எவ்வளவு ஜாக்கிரதையுடனிருந்தாலும் ஆங்கிலேய கலாசாலைகளில் படிப்போர்களுக்குத் தங்களுக்குத் தெரியாமலே துராசாரமும், துஷ்ட ஸஹவாஸமும், தப்புக் கொள்கைகளும் சிறுகச்சிறுக அமைந்துவிடும். இவைகளா லுண்டாகும் கேடுகள் பலவை. இக்கேடுகள் மற்றவர்களை இவ்வளவு லெகுவாய் அணுகமாட்டா. துராசாரப் பழக்கத்தினால் ஸதாசாரத்தில் அசிரத்தையும் ஸதாசார-நிஷ்டர் களிடத்தில் மதிப்புக்குறைவும் அலக்ஷியமும் லௌகிகர் களில் அனேகர்களுக்கு விருத்தியடைந்து வருவதைக் காண் கிறோம். துஷ்ட ஸஹவாஸத்தினால் நல்வழிப்பிடிப்பு நீங்கி, தர்மமார்க்கப்பிரஷ்டர்களாயும், இந்திரிய வசங்கதர்களாயும் காணப்படுகிறார் பலர். இவ்விருவகைத் தோஷங்களுடன் தப்புக் கொள்கைகளுஞ் சேர்ந்தவிடத்தில் கலிபுருஷதூதர் களாகவே விளங்குகிறார் சிலர். ஷை மூவகை தோஷங்களு மிருக்குமிடத்து உயர்ந்த லௌகிகஸ்தானமும், அதாவது, பெரும் உத்தியோக நிலையும், அபரிமித பணக்கொழுப்பும், வெளிச்செல்வாக்கும், வாக்விஜ்ரும்பணமுஞ்சேர்ந்து ஒத் திருந்து விட்டால் ஸாக்ஷாத் கலிபுருஷாவதாரமே நிதர்சன மாகத் துலங்கும். இக்கலிபுருஷாவதாரத்தின் மஹிமை தனி. ஸர்வசக்தனான ஸ்ரீ லக்ஷ்மீகாந்தனாகிய பகவானுங் கூட ஒவ்வொரு சரீரமெடுத்தே அப்போதைக்கப்போது அவதாரஞ்செய்தார். சிற்சில லீலைகளில் மாத்திரம் பகவான் ஒரே காலத்தில் நாநாசரீரக்கிரஹணத்தைச் செய்ததாகத் துலங்குகிறதேயொழிய, அவதார முக்கிய காரியங்களையெல் லாம் ஒரே சரீரத்துடனிருந்துதான் அவர் நடத்தியிருக்

கிறார். கலிபுருஷனோவெனில் பற்பல சரீரங்களெடுத்து இடம் தவருது, தான் நேராகவும் தன் தூதர்களைக்கொண்டும், பட்டணம் பட்டணமாய், கிராமம் கிராமமாயிருந்து தினந்தோறும் தன் கலிதர்மப்பிரசாரத்தை நடத்திவருகிறான். அஹோ ஆச்சரியம்!

5. நமது ஸர்வோத்கிருஷ்ட ஆர்ய நிவாஸப்பிரதேசமான இப்பரதகண்டமெங்கும் மனுஷ்யக்லிஷ்ட கல்பனையாலேற்பட்ட மதாந்தரங்களும், ஆர்யமத-வேஷம் பூண்ட அனார்யஜுஷ்டமான அவாந்தர போலி மதஸித்தாந்தங்களும், இவைகளைக் கைக்கொண்டு பரவச்செய்கிற ஸமாஜங்களும் ஸபைகளுமாகச் சேர்ந்து வியாபித்துக்கொண்டு, அனாதியாயுள்ளதும், ஸாக்ஷாத் ஈசுவரப்ரோக்தமானதும், ஸகல ஜீவர்களுக்கும் ஸாயுஜ்யமோக்ஷபர்யந்தம் ஸ்தாயியாய் நிலைநின்று கைதூக்கிவிடக்கூடியதுமான நம் ஸநாதன வைதிகமதமும் காப்பாற்றப்பட வேண்டியது போல் நினைக்கும்படியான ஸ்திதியில் நம்மைக் கொண்டுவந்து விட்டிருக்கின்றன. ஆனால், நம்மதமும் அதைச் சார்ந்த வர்ணாசிரம-தர்மமார்க்கங்களும் அடியோடு கெட்டு திரோதானத்தை அடைந்துவிடுமென்ற பயத்திற்குக் கொஞ்சமேனு மிடமில்லை. ஈசுவராஜ்ஞாரூபங்களும் நித்தியமுமான வேதசாஸ்திரங்களினால் வெளியிடப்பட்ட த்ரைகாலிக (த்ரைகாலிக) உண்மைகளும் பொய்யானாலொழிய, ஷை உண்மைகளின் காரணத்தைக்கொண்டே ஈசுவரனால் நடத்திவரப்பட்ட ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹார காரியங்களினால் மாறிமாறித் தோன்றியும் மறைபட்டுமுள்ள இப்பிரபஞ்சத்திற்கே மறு தோன்றுதலன்னியில் ஸர்வநாச மேற்பட்டாலொழிய, (கிம்வஹுனா) அழிவற்ற ஈசுவரனுக்கே ஹானியேற்பட்டாலொழிய நம் வைதிகமத-வர்ணாசிரம-தர்ம-மார்க்கங்களுக்குக் கேடுண்டா

காது. இவைகளின் ஸம்ரக்ஷணைப்பொறுப்பெல்லாம் ஈசுவரருடையது. அவரோ நித்யர், ஸர்வஜ்ஞர், ஸர்வசக்தர். நாம் இப்போதும், எப்போதும் முயற்சிக்கவேண்டியதெல்லாம் நமக்கும் அந்த உத்தமமான தர்ம-மார்க்கங்களுக்குமுள்ள ஸம்பந்தம் நம்முடைய நடத்தையால் நீங்கிப்போகாமலும், அவைகளின் நன்மையை நாம் அடைவதில் நம் தவறுதல்களினால் இடையூறுண்டாகாமலும் மாத்திரம் பாதுகாத்துக் கொள்வதற்கே யல்லாமல் வேறொன்றுக்குமல்ல.

6. நம்மவர்கள் யாவருக்கும் நம்மதத்தில் அந்தரங்கமான அபிமானத்தையும், வர்ணாசிரம-தர்ம-மார்க்கங்களில் ஊக்கத்துடன் பிரவிருத்தியையும், வைதிக சிரேஷ்டர்களிடத்தில் நிஜமான கௌரவ புத்தியையும் விருத்திசெய்து கொடுக்கவேண்டியதவசியம். நம்மதத்தின் உத்கிருஷ்டத் தன்மையையும் கொள்கைகளையும் ஸரியாயறிந்த பெரியோர்கள் அவைகளை மற்றவர்களுக்கு மனதில் படும்படி யெடுத்துக்காட்டி உபதேசிப்பதால் மேஷ் அபிமானம் விருத்தியடையும். இதனால் இம்மதக்கொள்கைகளின் முடிவான உத்தேசமும் இந்த உத்தேசம் நிறைவேறும் பொருட்டு அவரவர்களின் பிரகிருதிக்குத் தக்கபடி நம் சாஸ்திரங்களில் குறிப்பிடப்பட்டிருக்கிற ஸாதனானுஷ்டானத்தில் ஆவலும் நாளடைவில் தெளிவாய் புத்தியிலேற்பட்டு மேஷ் தர்மப்பிரவிருத்திக்கு ஆதிக்கியமும், அந்தப்படி ஏற்கனவே விசேஷப் பிரவிருத்திசெய்து வந்திருப்பவர்களிடத்தில் அதிக மதிப்பும் தானாகவே யுண்டாகக்கூடியவை. நம்மதத்தின் உத்கிருஷ்டதையை நன்கு சொல்ல ஆரம்பித்தால் விரியும். கூடியவரையில் சுறுக்கிச்சொல்லுகிறேன். இம்மதம் இன்று நேற்று வந்ததல்ல, இப்பூலோக-ஸ்ருஷ்டிக்கப்பால் வந்ததுமல்ல. இப்பிரபஞ்ச-ஸ்ருஷ்டி-ஸ்திதி-லய காரியங்களே இம்

மத முக்கியப்பிரமாணமான வேதத்தின் ஸத்யப்பொருளைக் கொண்டே ஜநதீசனுல் நடத்திவரப்படுகின்றன. அநாதியா யுள்ள இம்மதத்தின் ஆதியைக்குறிப்பிட்டு B. C. கிருஸ்துவ வருஷக்கணக்கில் சொல்லிவிடுவதாகப் பிரயத்தினஞ்செய் யும் நவீனப்படிப்பு நிபுணர்களின் மௌட்டியமொன்றே வெளியாவதைத்தவிர ஷை பிரயத்தினத்திற்கு வேறு பலன் கிடையாது. ஷை கணக்குப்படிக்குங்கூட நம் தேச ஆர்யர் களைத் தவிர மற்ற இப்பூலோகவாஸிகள் (அதிலும் இப் போது வெகு நாகரிகஸ்தர்களென்று சொல்லிக்கொள்பவ ரெல்லாம்) உடுக்கத்துணியில்லாமலும், இரைப்பண்டமின்ன தென்றறியாமல் கண்டதைத்தின்று வயிறு வளர்த்து வந்தும், விருக்ஷ-குஹை-பூக்கிருஹங்களைத் தவிர நிற்க நிழலின்றி யும் வளையவந்த காலத்திலேயே வேதமும் வைதிகமதானுஷ் டானமும் விசேஷ நாகரிகமும் நமக்கிருந்திருப்பதாக வெளி யாகிறது.

7. அன்றியும், ஸநாதனமான நம்மதமொன்றுதான் மனுஷியனுலேற்படுத்தப்படாத மதம். நம் வேதமொன்று தான் மனுஷியப்ரோக்தமில்லாத, அதாவது, அமானுஷமான வாக்கு. இப்பூலோகத்தில் பிரசாரத்தையடைந்துவரும் மற்ற ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு மனுஷிய மஹானைச் சார்ந்து நிற்கின்றது. அந்தப்படியே அம்மதங்களின் ஒவ் வொரு மூலகிரந்தமும் மனுஷியப்ரோக்தமாகவே ஒப்புக் கொள்ளப்பட்டுமிருக்கிறது. அநாதியாயும் அமானுஷப்ரோ க்தமாயுமிருக்கிற நம் ஆர்ய-வைதிகமதமொன்றே ஸத்ய மாயுள்ளது. முக்காலத்திலும் ஸத்யத்வம் மதாந்தரங்களுக் குக்கிடையாது. மதாந்தரக்கொள்கைகள் ஸத்யங்களாயிருக் கும் பக்ஷத்திலும், அவைகள் ஈசுவர ஸம்மதங்களாயிருக் கும் பக்ஷத்திலும் அம்மதங்கள் முன்னில்லாமலிருந்து இப்

பால் வந்து தோன்றுவதற்கு நியாயமில்லை. இப்படித்தோன்றும் காலத்திற்கு முந்திய காலங்களிலுள்ள ஜீவர்களை ஈசுவரன் கவனிக்கவில்லையென்ற தோஷம் அவரை வந்தணுகும். இப்போது பூலோகத்தில் பலவிடங்களில் பிரசாரத்தையடைந்துவருகிற நவீன மதங்களேற்படுவதற்கு முன்பாக இவைபோன்ற வேறு அனேக மதங்களிருந்ததாகவும் அவைகள் லோபமடைந்து விட்டதாகவும் துலங்குகிறது. லோபமடையக்கூடிய மதங்களும் இன்று குதித்து நாளைக்குச் சாகும் மதங்களுமெப்படி ஈசுவர-ஸம்மதங்களாகக்கூடும்? நம் வைதிக மதமொன்றே இத்தோஷங்களன்னியில் நிஷ்களங்கமாய், ஆதிமத்தியாந்தரஹிதமாய், நித்யஸத்யமாய் விளங்கி வரும் மதம். இதுவே ஸர்வோத்கிருஷ்டமான மதமென்பதில் ஸந்தேஹமுமேற்படுமோ?

8. தவிரவும், ஈசுவர-ஸம்மதமான மதம் ஈசுவர-ஸ்ருஷ்டிக்குட்பட்டிருக்கிற அகில லோகங்களுக்கும் உரித்தானதாயும், இப்பிரபஞ்சத்திலுள்ள ஸகல ஜீவகோடிகளுடைய முன்பின் கதாகதிகளை பரிஷ்காரமாய்க் காண்பிவிக்கத் தக்கதாயுமிருக்கவேண்டிய தவசியம். நம்மதத்தைத் தவிர வெறொரு மதத்திற்கும் இந்த லக்ஷணம் பொருந்தாது. வைதிக மதமொன்றுதான் ஸகலலோகங்களுக்கு மொத்தது. அதில் கண்ட உபாஸனு மார்க்கங்களை யவலிம்பித்தே மேல் லோகங்களிலிருப்போர்கள் பெரும் நற்கதியையடைய முயற்சிக்கின்றூர்கள். அதில்கண்ட மேலான ஞானமார்க்கத்தையே ஸத்யலோகத்தில் ஸாக்ஷாத் ஸகுணப்பிரம்மமே உத்தம ஸத்யலோகவாஸிகளுக்கு உபதேசஞ்செய்து வருவதாய்த் தெரியவருகிறது. நம் பூலோகத்திற்கு மேலாகவும் கீழாகவும், அதாவது, உத்கிருஷ்டமாகவும் நிகிருஷ்டமாகவும் எவ்வளவு லோகங்களுண்டு, எங்கெந்த கதியுள்ள ஜீவர்கள்

என்னென்ன காரணங்களுக்காக அங்கு போகிறார்கள், அங்கிருந்து வருகிறார்கள்? இதுபோலொத்த விஷயங்கள் யாவும் நம்மதக்கிரந்தங்களினால் மாத்திரம் வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன. இப்பூலோகத்திலுள்ள மனுஷியாளுள்பட ஸகல ஜீவர்களுடைய தத்கால நிலைமையையும், இந்த நிலைமை யேற்படுவதற்குக்காரணங்களையும், கெடுதலான நிலைமையைவிட்டு நீங்குவதற்கும் நற்கதியின் பிராப்தியின் பொருட்டுச் செல்வதற்கு முள்ள பாதைகளையும் நம்மதக்கிரந்தங்கள்தான் கர்மகதி-புனர்ஜன்ம விஷயங்களான நிருபணங்களினால் துலக்கிக்காட்டுகின்றன. மற்ற மதங்களின் பிரவர்த்தகர்களுக்கே இவ்விபரங்கள் தெரிந்ததாகக் காணப்படவில்லை. மனுஷியன் எதற்காகப் பிறந்திருக்கிறான்? அவன் எந்த ஸ்தானத்தை நோக்கிச் செல்லவேண்டியவன்? அப்படிச் செல்லும் மார்க்கங்களின் லக்ஷணங்கள் யாவை? இப்பூலோகத்தில் மனுஷியர்களுக்குள் சிலர் பிறவி முதல் ஸந்துஷ்டர்களாயும் சிலர் துக்கிதர்களாயும், சிலர் ஸம்பன்னர்களாயும் சிலர் தரித்திரர்களாயும் பலவிதமாய்க் காணப்படுவதற்குக் காரணம் யாது? மனுஷியனைத் தவிர இதர பிராணிகளிடத்தும் ஸுக-துக்கதாரதம்யம் இவ்விதமே காணப்படுகிறதே, இது ஏன்? இவை முதலான கேள்விகளுக்குத் திருப்திகரமாய் ஸமாதானஞ் சொல்லக்கூடிய மதம் நமதொன்றே. இந்தப்படி நம் வைதிக-மதத்தின் ஸர்வோத்கிருஷ்டத்தன்மையை யெடுத்து ஒவ்வொரு விஷய ஸம்பந்தமாய்க் காட்டுவதானால் மிக்க விரியும். உத்தமோத்தமமான மதத்தின் பிரயோஜனம் பூராவையுமடையக்கூடிய ஜன்மாவையெடுத்திருக்கும் தன்யர்களான நமக்கு நம்மதத்தின் மீது அபிமானமில்லாமலிருந்தால்தான் ஆச்சரியப்படக்கூடியது.

9. மேலும், வெறும் மதாபிமானம் போதாது. மத நூல்களில் சொல்லப்பட்டிருக்கிற விதி-நிஷேதங்களை உல்லங் கனஞ்செய்து தனக்குத் தோன்றியவாறு நடந்துகொண்டே நம் மதமே சிலாக்கியமென்று வாயினால்மாத்திரம் சொல்லி அபிமானித்துவரும் ஜனங்கள் நமக்குள் இப்போது வெகு பெயர்களுண்டு. இந்த அபிமானம் நிஷ்பலமானது. அபி மானம் வைத்தும் தார்மவிரோதமாய் நடப்போர் கொடும் பாபியாவர். இந்த விபரந்தெரிந்தோ, அல்லது வேறு கார ணங்களாலோ, சிலர்கள் தங்கள் மதாபிமானத்தை வெளிக் காட்டி, தாங்கள் தங்களுடைய இந்திரிய வசப்பட்ட மனது போகும் போக்கெல்லாம் நடந்து வருகிற மார்க்கங்களையே நம்மதமார்க்கங்களென்றும், சாஸ்திர ஆராய்ச்சியுள்ள வித் வான்களான நம் பூர்விகர்கள் அனுஷ்டித்துவந்த மார்க்கங் கள் ஸரியல்லவென்றும் சொல்லிக்கொண்டு இப்பால் சில காலமாய் துர்க்கக்ஷிகளைச் செய்துவருகிறார்கள். இவ்வித துர்க்கக்ஷிகளைச் செய்ய ஆரம்பித்த காலத்திலேயே நம்மவர் களில் விஷயமறிந்த பெரியோர்கள் ஜாக்கிரதையாயிருந்து பஹிரங்கமாய்க் கண்டித்திருந்தால் இந்நாளில் ஏற்பட்டிருக் கும் தர்மக்கேடு இவ்வளவு கொடுமையாயிராது. இதை இப் பொழுது சொல்லுவதில் விசேஷப் பயனில்லை. சொல்லியு மாகவேண்டியதாயிருக்கிறது, இனியும் அதிகக் கெடுதலேற் படாமலிருக்கும் பொருட்டு. ஆசார-சீர்திருத்தக்காரர்கள் (Social Reformers) என்று பெயர் வைத்துக்கொண்டு நம்முடைய பிராசீனமாயுள்ள ஸதாசார-சீர் யாவத்தையும் திருத்திக்கெடுத்துவிட யத்தனிக்கிறார்கள். இப்போது நம் மதத்திற்கு வந்திருக்கும் அனர்த்தமெல்லாம் இவர்களா லேயே உண்டாயிருக்கிறது. இதர மதஸ்தர்களாலேற்படும் கெடுதல் அதிகமில்லை. இந்த ஆசார-சீர்திருத்தக்காரர்கள்

நம்மவர்களுக்குள்ளேயே யிருந்துகொண்டு, உடம்பில் புகுந்திருக்கிற கொடிய விஷம்போல், உள்ளிருந்தே மேன்மேலும் அனர்த்தத்தை விளைவிக்கிறார்கள். இவர்கள் விஷயத்தில் நாம் வெகு ஜாக்கிரதையாயிருக்கவேண்டியதவசியம். இவர்களின் விஷமச் செய்கைகளுக்கு இடங்கொடுக்கலாகாது. தாக்ஷிண்யத்தைக் கொஞ்சமேனும் பாராட்டாமல் இவர்களின் தப்புக் கொள்கைகளை யெடுத்துக் கண்டித்துக் காட்ட வேண்டியது நமது இன்றியமையாத கடமை. இவர்கள் சில காலமாய்த் தனி கோஷ்டியாயிருந்து, தனி ஸபையை யேற்படுத்திக் கொண்டு நம் வர்ணாசிரம-தர்மங்களுக்கெல்லாம் எதிரிடையான கொள்கைகளையே தங்களாலியன்றமட்டிலும் பிரசுரப் படுத்திவந்திருக்கிறார்கள். ஆனால், பெரும்பாலும் நம் ஜனங்கள் அவைகளை ஒப்புக்கொள்ளாமல் நாளதுவரையில் நிராகரித்துவந்திருக்கிறார்கள்.

10. இப்படியிருக்க, இத்தேசத்திலுள்ள ஜனங்கள் யாவருக்கும், அதாவது, எல்லா ஜாதியார்களுக்கும், வகுப்பினர்களுக்கும், மதஸ்தர்களுக்கும் பொதுவான ராஜாங்க (Political) ஸம்பந்தமாயுள்ள ஸங்கதிகளை ஆலோசித்துவர வேண்டியதற்காக ஏற்பட்ட காங்கிரஸ் முதலான பெரும் ஸபாக் கூட்டங்களில் கலந்திருக்கும் ஆசார-சீர்திருத்தக் காரர்கள் துர்யுக்தியினால் தூண்டப்பட்டு இப்பால் சில காலமாய் மெள்ளமெள்ள தங்கள் கொள்கைகளையும் ஷை ராஜாங்க ஸபா காரியங்களுடன் கலந்துவிடுவதற்கு யத்தனித்து வருகிறார்கள். ஷை ராஜாங்க காரியாதிகளை நடத்திவருகின்ற பிரமுகர்களில் அனேகர் ஷை திருத்தக்காரர்களாகவேயிருப்பதினால், இந்த துர்யுக்தி பலித்துப்போகக்கூடியதாயுமிருக்கிறது. இவ்விஷயத்திலும் தாங்களெல்லோரும் வெகு கவனத்துடனிருக்கவேண்டியது முக்கியம். எந்நாளும் நடந்

ததுபோல் பொது ஸபைகளில் பொதுக் காரியங்கள்தான் இனி மேலும் நடந்துவருமென்றெண்ணுவதற்கிடமில்லை. ஆசார-சீர்திருத்தக்காரர்களின் கொள்கைகளில் சிலவைகள் ஏற்கனவே ராஜாங்கத் தீர்மானங்களுக்குள் புகுந்துவிட்டன. நமது ஸ்திரீ-தர்ம சாஸ்திர விதிகளுக்கும், நம் பஞ்சம ஜாதியார்களுக்கும் மற்ற ஹிந்துக்களுக்கும் சாஸ்திரப்படிக்குள்ள ஸம்பந்தாஸம்பந்த வியவஸ்தைகளுக்கும் நேர் எதிரிடையான தீர்மானங்கள் பஹிரங்கமாய்ச்செய்யப்பட்டுவருகின்றன. சென்ற ஸம்வத்ஸரத்தில் நாகபுரத்தில் நடந்த காங்கிரஸ்ஸில் 20,000த்திற்கு மேற்பட்ட பிரதிநிதிகள் ஆஜரிலிருந்ததாய்த் தெரியவருகிறது. ஷை 20,000 பெயர்களுமா அவ்விதத்தீர்மானங்களுக்கு உடன்பட்டிருந்தாகள்? இவ்வளவு கெட்டா போய்விட்டது நம்மவர்களின் நிலைமை? அப்பெரும் ஸபையில் நமது ஆர்ய மதத்திலும் வர்ணாசிரம-தர்மத்திலும் சிரத்தையுள்ளவர் யாருமிருந்திருப்பதில்லையா? மேற்கண்ட தீர்மானங்கள் ஒப்பேறுவதற்கு நம்மவர்களின் அஜாக்கிரதையே காரணம், அல்லது, மனோதைரியமில்லாமை. ராஜாங்க விஷயங்களுக்கு ஸம்பந்தமில்லாததும் தர்ம-விரோதமானதுமான தீர்மானங்களை நான்கு மதஸ்தர்களுங் கலந்த பொது ஸபைக்குக் கொண்டுவரும்போது எழுந்திருந்து உடனே ஆக்ஷேபிக்காதவர்கள் எப்படி தேசப் பிரதிநிதியாவர்களோ தெரியவில்லை. இதுவரையில் போனது போகட்டும். இனியாவது வைதிகமதாபிமானமுள்ள லௌகிகப் பெரியோர்களெல்லோரும் கவனத்துடனிருந்து பொது ராஜாங்க விஷயத்தீர்மானங்களை யாலோசிக்கும் ஸபைகளில் மேற்கண்டபடி தர்ம விருத்தமான தீர்மானங்களைப் புகவிட யத்தனிக்கும் ஸமயங்களில் உடனே ஆக்ஷேபித்துத் தடுத்துவிடுவார்களென்று நம்புகிறேன். தர்மத்தை

நிலைநிற்கச்செய்வது பெரிய காரியம். இது பெரியோர்களுக்கே ஸாத்தியமான காரியம். தர்மத்தைக் கெடுப்பது பெரிய காரியமில்லை. இது எந்த அல்பராலுஞ் செய்யப்படக்கூடியது.

11. நம்முடைய ஆர்ய-தர்மம் அன்யாதிருசம். ஏனென்றால், நம் முக்கிய புருஷார்த்தம் அன்யாதிருசம். அது மோக்ஷ புருஷார்த்தமே. அதற்கு ஸாதனமாயுள்ளது தர்மம். இப்பூலோகத்தில் மோக்ஷபுருஷார்த்தத்தையும் அதின் ஸ்வரூபத்தையும் நன்கு வெளியிட்டு, அதன் ஸாக்ஷாத்கார-ஸாதனங்களாகிய விசேஷ-தர்ம-மார்க்கங்கள் யாவற்றையும் விசதமாய்க் குறிப்பிட்டுக்காட்டி, மனுஷ்ய ஸாமான்யத்திற்குள்ள அர்த்த-காம புருஷார்த்தங்களையும் தர்மாங்கங்களாகச்செய்துகொடுத்திருக்கும் மஹத்தமமான மதம் நம் மதம். மோக்ஷஸ்வரூப மின்னதென்றறியக்கூடாத அவைதிகப் பிரவர்த்தகர்களுக்கு விசேஷ-தர்ம-மார்க்கங்கள் துலங்க நியாயமில்லை; ஸாமான்ய தர்மங்கள்தான் தெரியக்கூடியவை, அதாவது, நன்றியறிதல் வேண்டும், பொய் சொல்லக்கூடாது, திருடலாகாது முதலானவைகள். ஸாமான்ய தர்மங்கள் மானிட ஜன்மமெடுத்த இப்பூலோகத்திலுள்ள ஸகலர்களுக்கும் பொதுவே. இந்த ஸாமான்ய தர்மங்களை யனுஷ்டிப்பவன்தான் மனுஷ்யனாவன். இவைகளைக்கூட கைவிட்டவன் மிருகப்பிராயனேயொழிய வேறல்ல. ஆகையால், ஸாமான்ய தர்மங்களைக்கைவிடாது அனுஷ்டிக்கவேண்டியது எல்லோருக்குமவசிமாயுள்ளது. ஆனால், இவை மாத்திரம் நம் வைதிக மதஸ்தர்களுக்குப் போதாது. இந்த ஜன்மாவில் ஸரியானபடி மனுஷ்யர்களாக இருப்பதுமட்டும் நம் உத்தேசமல்ல. நமதாசை பேராசை. நம்முடைய விசாரம் பெரும் விசாரம். மனுஷ்ய ஜன்மாவின் ஸாகமின்னதென்று

அறிவோம். துக்கத்தையே ஸுகமாகப் பாராட்டுவோரையும் காண்கிறோம். இந்த ஜன்மம் எதற்காக நமக்கேற்பட்டிருக்கிறதென்பதை நம் சாஸ்திரங்களின் வாயிலாகத் தெரிந்து கொண்டிருக்கிறோம். நரகப் பிராயமாயும் மல-மூத்திர-கிரிமி-மாம்ஸபூயிஷ்டமாயும் ஸதா-ரோகக்கிரஸ்தமாயுமிருக்கிற இவ்வுடலைச் சுமந்து ஆஹார-நித்திராதிகளினால் காலங் கழிப்பதுமாத்திரம் நமதெண்ணமல்ல. மோக்ஷ நிலையை அடையும்பொருட்டு இவ்வுடலையும் சுமக்கிறோம். இம் மானிட சரீரமெடுத்து விசேஷ-தர்மப்பயிற்சிக்காக இப் பரதகண்டத்திலேற்பட்டுள்ள சாதுர்வர்ண்ய-மஹா-தர்ம-வித்யாசாலையில் வந்து சேர்ந்திருக்கிறோம். விசேஷ-தர்மத்தைத்தான் நமது ஆர்ய-தர்மமென்று சொல்லுகிறோம். ஸாமான்யப் தர்மத்தின் ஆசரணையைப் போதிப்பிக்கும்படியான ஸாமான்ய பள்ளிக்கூடங்கள் இப்பூலோகத்திலெங்குமுண்டு. நித்ய-நிரதிசயானந்தஸ்வரூபமான மோக்ஷஸாம்ராஜ்யத்தின் இச்சையிருப்போருக்கும் இச்சை யேற்படக் கூடியவருக்கும் நமது சாதுர்வர்ண்ய மஹாவித்யாசாலை ஒன்றுதான் இப்பூலோகத்திலுள்ளது. ஈசுவரப்பிரேரிதர்களாயிருந்துகொண்டு மானிட ஜன்மாக்களை யடையும் ஜீவர்களில் எவர்களுக்கு பூர்வ ஜன்ம ஸம்ஸ்காராதிகளினால் மேற்கண்ட மோக்ஷேச்சை யுண்டாகக்கூடியதோ, அல்லது, எந்த ஜீவர்களுக்கு மோக்ஷத்தின்பொருட்டு பரம்பரா ஸாதனங்களாயுள்ள அவாந்தர விசேஷ-தர்மப் பிரவிருத்திகளும் ஸித்திகளுமுண்டாகக்கூடியவைகளோ, அவர்களெல்லோரையும் நம் வர்ணாதிகளுக்குள்ளமைத்து அவரவர்களுக்குத்தக்கதாயுள்ள, அதாவது, அந்தந்த ஜாதிக்குரிய விசேஷ தர்மாசரணைகளை நடத்தும்படியான பிறப்புகளை ஈசுவரன் கொடுத்தனுக்கிரஹிக்கிறார். நம் விசேஷ-தர்ம நாடாகிய

இப்பரதக்ண்டத்தில் மாத்திரந்தான் சாதுர்வர்ண்யமிருக்கக் கூடியது. மற்ற தேசங்களில் இல்லையென்பதினால் நமக்குள்ளேற்பட்டிருக்கிற ஜாதி வியவஸ்தைகளுக்குக் குறைவுண்டாகுமா? அது நம் தர்ம மார்க்கங்களின் உத்கிருஷ்டத் தன்மையைத்தான் காட்டும். குக்கிராமங்களெங்கும் வகுப்பு வியவஸ்தையில்லாத திண்ணைப் பள்ளிக்கூடங்கள்தான் உண்டென்ற காரணத்தினால், பிரதான நகரத்தில்மாத்திரமுள்ள முதல் கிரேட் காலேஜுக்கும் அதில் படிப்போர்களுக்குங் குறைவுண்டா?

12. இத்தேசத்தில்மட்டும் வர்ணாசிரம பேதங்களிருப்பதற்குப் பல காரணங்களுண்டு. நடப்பு கல்பத்தில் மானவ ஸ்ருஷ்டியில் விசேஷ-தர்ம-மார்க்க நிஷ்டர்களும் பிரவர்த்தகர்களுமாகிய மஹான்களான ஆர்யோத்தமர்கள் இப்பூலோகத்தில் முதலில் ஆவிர்ப்பாவமடைந்த விடத்திற்கு ஆர்யாவர்த்தமென்று பெயர். ஆர்யர்களின் தர்மநிஷ்டா ஸௌகரியங்களின்பொருட்டே யேற்பட்டிருக்கிற ஸ்தலம் இப்பரத கண்டம். தர்ம-கர்ம-ஸாதனமான சரீரத்தின் ஸௌக்கியத்திற்குத்தக்க சீதோஷ்ண ஸௌகரியங்களும், ஸ்நான-தர்ப்பண-பானாதிகளுக்காக அடுத்தடுத்துப் பிரவஹிக்கும் திவ்ய மஹா நதிகளும், ஏகாந்தத்தியானாதி தபஸ்களுக்கு உசிதமான ரமணீய வன-கிரிப்பிரதேசங்களும், தேஹபோஷணைக்கும் சாஸ்திரங்களினால் விதிக்கப்பட்டிருக்கும் ஸகலவித கர்மாக்களுக்கும் தேவையாயுள்ள எவ்வகை பதார்த்தங்களையும் உத்பத்திசெய்து கொடுக்கும்படியான அத்புத ஸாரக்ஷேத்திரங்களுமொன்று சேர்ந்து ஈச்வராஜ்ஞையினாலேற்பட்டிருக்கும் கர்மபூமி இப்பரதகண்டம். இது மற்ற பூபாகங்களுடன் சேர்ந்து ஒரு காலத்திலும் கலந்து விடாமலிருக்கும்படியாக மூன்று புறங்களில் ஸமுத்திரத்தையும்

வடபுறத்தில் இப்பூலோகத்திலேயே உன்னததமமும், ஸகல விதத்திலும் உத்தமமும், அலங்கனீயமுமான ஹிமவத் பர் வதத்தையும் அதற்கு மேல் பக்கமிருந்தும் கீழ்ப்பக்கமிருந் தும் தெற்கேயுள்ள ஸமுத்திரம் வரையில் கர்மபூமியெல்லே யைக்குறிப்பிட்டுக் காட்டும்படி பெரும் நதிகளேயும் ஈசுவரர் அமைத்து வைத்திருக்கிருர். இப்பூலோகம் தோன்றிய காலம் முதல், மானிட ஜன்மம் இப்பூலோகத்திலேற்பட் டது முதல் இப்பாரதகண்டம் நம் ஆர்ய-கர்மபூமியாகவே யிருந்து வந்திருக்கிறது. ஏதோ ஆர்யர்கள் வடக்கே யிருந் தோ வடமேற்கேயிருந்தோ இக்கண்டத்திற்குச் சில காலத் திற்கு முன்பு வந்ததாகப் புதுப்படிப்புள்ளோர் சொல்லுங் கதைகள் பொய். இப்பூலோகத்தில் முதலில் வந்தவதரித்த மனிதர்கள் வேதத்தை யடைந்து அதில் கண்ட தர்மமார்க் கங்களே யவலம்பித்தார்கள். இவர்கள் உத்தமர்களாகையால் ஆர்யர்களென்ற பெயரை வஹித்தார்கள். அவ்வவதாரம் ஆதியிலேற்பட்டவிடம் இத்தேசமென்பதில் ஸந்தேஹம் வேண்டாம். எந்த இடத்தில் முதல்முதலில் மனிதன் வஸித்திருக்கக்கூடியதென்று யுக்தியினுல் கண்டுபிடிக்க இப் போது மேற்கு தேசத்திய தத்வாலோசனே செய்பவர்களில் சில முக்கியஸ்தர்கள் முயலுவதில் நம் தேசமிருக்குமிடத்தை யே குறிப்பிடுவதாய்த் தெரியவருகிறது. இவர்கள் சொல் வதையுமொரு ஆதாரமாகக்காட்டும்படியான காலமிதுவான தால் சொன்னேன், வேறல்ல. ஸநாதனமான விசேஷ-தர்ம மார்க்கங்களே விட்டு விலகாமல் நமதார்ய சிரேஷ்டர்களெல் லோரும் நடந்துவந்திருக்கிருர்கள். இப்போதும் வெகு மஹான்கள் அந்தப்படியே நடந்துவருகிருர்கள். இப்படி நடப்போர் ஒருவராயிருந்தாலும் பலராயிருந்தாலும் இதற் கேற்பட்ட தேசம் இத்தேசமே. மற்ற எத்தேசமும் கர்ம

பூமியல்ல, போகபூமியேயாகும். 'கர்ம' என்பதினுல் விசேஷ-கர்மாவைத்தான் குறிப்பிடுகிறோம். ஸாமான்ய கர்மாக்கள், அதாவது, செய்கைகள் எத்தேசங்களிலும் நடந்தேறிவரலாம். நமது தேசம் கர்மபூமியென்றும் மற்றவை போகபூமிகளென்றும் சொன்னதினுல் ஸாமான்ய கர்மாக்கள் இங்கில்லையென்ருவது போகானுபவமிங்கில்லையென்ருவது அர்த்தமல்ல. இத்தேசத்திற்கும் மற்ற தேசங்களுக்குமுள்ள வித்தியாஸம் இத்தேசத்தில விசேஷ-தர்ம-மார்க்கங்களை யவலம்பித்து, விசேஷ கர்மாக்களைச்செய்து, விசேஷ நற்கதியை யடைய இடமுண்டென்பதுதான். இந்த ஸௌகரியம் மற்ற தேசங்களில் கிடையாது. அன்றியும், சாஸ்திரங்களில் காணப்பட்ட விசேஷ-கர்மாக்கள் யாவற்றையும் எல்லோரும் அனுஷ்டிக்கவேண்டியதாக நம்மதக்கொள்கையல்ல. அந்தப்படி அனுஷ்டிப்பது ஸாத்தியமுமல்ல. எந்த எந்த கர்மாக்களை யார் யார் அனுஷ்டிக்கவேண்டியதென்பதற்கு வியவஸ்தை விதிக்கப்பட்டிருக்கிறது. இவ்வியவஸ்தைக்காகவே ஈசுவரனுல் வர்ணுசிரம பேதங்களேற்படுத்தப்டிருக்கின்றன. மற்ற எத்தேசத்திலுமில்லாத கர்மானுஷ்டான-விசேஷம் இப்பரதகண்டத்தில் மாத்திரமிருப்பது பற்றி இத்தேசத்தில்மாத்திரம் வர்ணுசிரம பேதங்களும் தனிமையாகவே காணப்படுகின்றனவென்பது நியாயமே.

13. மேற்கண்ட விபரங்களினுல் நமது ஆர்யமத-தர்மாசரணைகளுக்கும் மற்றவர்களுடைய ஆசரணைகளுக்கும் வித்தியாஸமிருக்கவேண்டியதே ஸரியென்பது வெளியாகிறது. இந்த ஸ்திதியில், இதர தேசங்களிலுள்ள நம்-தர்ம-விருத்தமான ஆசரணைகளை இங்கு நாமனுஷ்டித்து வரவேண்டியதென்றும், நமக்குள்ள விசேஷ-ஸதாசாரங்களை நாம் விட்டுவிடவேண்டுமென்றும் அக்கிரமமாயும் அறியாமையாலும்

சிலர்கள் பிதற்றிவருகிறார்கள். இவர்களின் வார்த்தைகளைக் கவனியாமல் தள்ளிவிடும்படி நம்மவர்களுக்கு, அதிலும் முக்கியமாய் நம் சிறுவர்களுக்கு அடிக்கடி உபதேசித்துவரு வது நம் பெரியோர்களின் கடமை. முதலில் நான் தெரி வித்துக்கொண்டபடி இந்நாட்டிலேற்பட்டிருக்கிற ஆங்கிலே யப்படிப்பே அனேக அனர்த்தங்களுக்குக் காரணமாயிருப்ப தால் நம் சிறுவர்களுக்கு அப்படிப்பை நிறுத்தி பிராசீனமா யுள்ளதும் வாஸ்தவ பிரம்மசர்யத்துடன் சேர்ந்ததுமான நம் வேதசாஸ்திர-ஆராய்ச்சிகளையும் தேஹயாத்திரைக்கு அவசியமாயுள்ளதும் அவரவர்களுக்குத் தகுந்ததுமான, அதாவது, அந்தந்த ஜாதி முறைப்படிக்குள்ள லௌகிகப்பிர விருத்தி யோக்கியதைகளையு முண்டாக்கக்கூடியதான தனித் தனி வித்தியாசாலைகளை யேற்படுத்திவைக்க வேண்டிய தவசியம். ஆங்கிலேய பாஷாஜ்ஞானமே கெடுதலென்று நான் சொன்னதாக எண்ணக்கூடாது. சில லௌகிகப் பிரவிருத்தி களுக்கு உபயுக்தமானதும் தத்காலத்தில் பௌதிக சாஸ் திராப்பியாஸத்திற்கு அவசியமாயுள்ளதுமான ஆங்கிலேய பாஷாஜ்ஞானத்தையும் வேண்டுவோர்கள் ஸம்பாதித்துக் கொள்ளலாம். ஆனால், அப்படி ஸம்பாதித்துக்கொள் ளும் மார்க்கம் நம் தர்மமார்க்கங்களுக்கு விபரீதமாயில்லாம லிருக்கும்படி நாம் உத்தேசிக்கிற வித்யாசாலைகளிலேயே அதையும் அமைத்து வைத்துவிடவேண்டியது. இப்படி யெங்கும் வித்தியாசாலைகளை யேற்படுத்துவதில் பற்பல ஆலோசனைகள் பலர்களுக்குண்டாகும். அவை யெல்லாவற் றையும் நன்கு ஆராய்ந்து பார்த்து நம் தேசநன்மைக்கும் ஆர்யதர்மத்திற்கும் ஒற்றுமையாயிருக்கும்படி கூடியசீக்கிரத் தில் ஏற்படுத்திக்கொடுக்கவேண்டியதாயுமிருக்கிறது. இனி தாமதிக்க இடமில்லை. தாமதிக்கத் தாமதிக்கக் கெடுதல்

வெகு வேகமாய் விளையும். விஷயமறிந்த பெரியோர்கள் நாளடைவில் குறைந்துபோய்விடுகிறார்கள். கலி மாஹாத்மியத்தால் விஷயமறியாத மூடர்கள் விருத்தியடைகிறார்கள். இவர்கள் துர்யுக்திகளைச் சொல்லிக்கொண்டு தர்மத்தை அதிகமாய்க்கெடுக்க முயலுகிறார்கள். சாஸ்திர-ஆராய்ச்சி கந்தங்கூட இல்லாதவர்களும் ஆங்கிலேயப் படிப்பினால் தங்களை ஸர்வஜ்ஞர்களாக பாவித்துக்கொண்டவர்களுமான சிலர்கள் இப்போது பெரும் லௌகிகஸ்தானங்களையடைந்த பெரியோர்களாகிவிட்டபடியால் இவர்களின் வார்த்தைகளே நம் சிறுவர்களுள்பட ஸாமான்ய ஜனங்களின் பார்வையில் மதிப்புள்ளவைகளாக விளங்குகின்றன. இதுவே நமது தேசத்திற்கும் தர்மத்திற்கு மேற்பட்ட பெரும் அனர்த்த ஹேது. ஆகையால், மேற்சொல்லியபடி நம் சாஸ்திர விஜ்ஞானத்தையும் தர்மாசரணைகளையும் நன்றாய்ப் பரவச்செய்யத் தக்கதாயும் மற்றும் லௌகிக விருத்திகளுக்கு உபயுக்தமானதுமான தேசீய வித்தியாசாலைகள் உடனே யெங்குமுண்டானா லொழிய வேறுகதியில்லை. தாங்கள் தயைசெய்து இனி தாமதத்திற்கு இடங்கோடாமல் ஒற்றுமையுடன் முயற்சி செய்து ஒவ்வொரு கிராமத்திலும் ஒவ்வொரு பட்டணத்திலும் நம் வர்ணாசிரம தர்மங்களுக்கு அபிவிருத்திகரங்களான வேதசாஸ்திர வித்தியாசாலைகளையும் ஷை தர்மங்களுக்கு அவிரோதிகளான லௌகிக கலாசாலைகளையும் ஸ்தாபித்துக்கோடுங்கள். இதுவே தாங்களிப்போது முதலில் செய்யவேண்டிய காரியம்.

14. வித்தியாபிவிருத்தி ஸம்பந்தமாயும் தர்மரக்ஷணையை உத்தேசித்தும் நமது ஸ்திரீ ஜனங்களின் விஷயத்தில் ஜாக்கிரதையாய் நாம் கவனஞ்செலுத்த வேண்டியதுண்டு. புருஷார்த்தங்கள் நான்கும் புருஷர்களுக்கும் ஸ்திரீகளுக்கும்

பொதுவென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனால், ஸ்திரீகளுக்கு இயற்கையாய்ச் சில முக்கிய வேறுபாடுகள் ஈசுவரனால் அவர்களின் ஸ்வபாவங்களிலும், சக்தி-ஸாமர்த்தியங்களிலும், சரீரங்களிலும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இக்காரணம் பற்றி ஷெ புருஷார்த்தங்களைத் தேடும் மார்க்கங்களில் ஸ்திரீ-புருஷர்களுக்குள் பேதமுண்டு. ஒரு விஷயத்திலும் ஸ்திரீ-புருஷர்களுக்குள் வித்தியாஸம் பாராட்டக்கூடாதென்றும், இருவர்களுக்கும் கல்விப்பயிற்சி ஒரேவிதமாயிருக்கவேண்டுமென்றும், புருஷர்களுக்குள்ள வெளி-ஸ்வாதந்திரியம் பூராவும் ஸ்திரீகளுக்குமுண்டென்றும், புருஷர்கள் கைக்கொள்ளும் தொழில்-விருத்திகள் யாவற்றையும் ஸ்திரீகளும் கைக்கொள்ளலாமென்றும் அடிக்கடி சொல்லிவருகிறார்கள் பலர்கள். இதைக்கேட்டு ஸரியென்று ஆமோதித்து வருபவர்களும் அனேகர்களுண்டு. ஆனால், இவர்களெல்லோரும் ஒன்று சேர்ந்து ஈசுவரனிடத்தில் முறையிட்டு ஸ்திரீ-ஜன்மாவுக்குள்ள அவயவ விசேஷங்களையும் சக்தி-ஸ்வபாவங்களையும் முதலில் மாற்றிக்கொடுக்கும்படிச் செய்தாலொழிய அவர்களின் மனோரதம் நிறைவேறத் தக்கதில்லை. அதாவது, ஸ்திரீகளின் ஸ்திரீத்தன்மை தொலைந்தாலொழிய அவர்கள் தங்களுக்கேற்பட்டிருக்கும் விசேஷ விதிகளை உல்லங்கனஞ்செய்ய இடமில்லை. மீறி நடந்தால் அதினாலேற்படும் பலன் அவர்களையடையாமலிருக்கும்படி தடுக்க மார்க்கமில்லை. இதை ஸ்திரீகளுள்பட நம்மவர்கள் யாவரும் அறிந்துகொள்ள வேண்டியது. ஸ்திரீ-தர்மங்கள் பூராவையுமெடுத்துச் சொல்வதானால் விரியுமாகையால் சில முக்கிய ஸங்கதிகளைமாத்திரம் சுருங்கிச்சொல்லி முடித்துக்கொள்கிறேன். இவைகளின் தனித்தனியாயுள்ள முகாந்திரங்களையெடுத்துச்சொல்ல அவகாசமில்லை. **ஸ்திரீகளுக்கு ஒரு காலத்**

திலும் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து வாசிப்பதேன்பது கூடாது. விவாஹமாகும் வரையில் மாதா-பிதாக்களே வீட்டில் வைத்துப்பெண்களுக்கு வித்தியாப்பியாஸத்தைச்செய்து வைக்க வேண்டும். விவாஹமான பின்பு புருஷன் மூலமாய் வித்தியாபிவிருத்தியையும் தர்மாப்பியாஸத்தையுஞ் செய்துகொள்ள வேண்டியது. பணம் ஸம்பாதிக்கும்படியான வேலி விருத்திகளில் ஸ்திரீகளை விடுவது அதர்மமே யாகும். ராஜாங்கக்காரியங்களிலும் தேசீயப்பொதுக் காரியங்களிலும் ஸ்திரீகளின் ஸம்பந்தமிருக்கலாகாது. நம் சாஸ்திரரீதியாய் வீட்டிற்கு வெளியிலுள்ள வியவஹாரங்களில் புருஷனுக்கு மற்றப் புருஷர்களுக்கோப்பந்தம் ஸமமான ஸ்வாதந்திரியத்தையும் வீட்டுக்குள்ளடங்கிய ஸங்கதிகளில் ஸ்திரீக்கு தன் புருஷனுக்கோப்பந்தம் ஸமமான ஸ்வாதந்திரியத்தையும் வைத்து நம தாசரணைகள் உள்ளும் வெளியும் ஒழுங்காய் நடந்தேறிவரும் பொருட்டு விதிகளேற்பட்டிருக்கின்றன. இந்த விபரம் நம் வாஸ்தவ தர்ம பத்னீகள் எல்லோருக்கும் ஸ்பஷ்டமாய்த் தெரியும். வீட்டுக்கு வெளியில் அவர்களுக்கு ஸ்வாதந்திரியமிருக்கலாகாதென்பதையும் அப்படி ஸ்வாதந்திரியம் பாராட்டினாலும் நிலைநிற்காதென்பதையும் நன்றாய் அறிவார்கள். வெளியில் ஸ்வாதந்திரியம் வேண்டுமென்று இந்த தர்ம நாட்டில் நாளதுவரையில் ஒரு தர்ம-பத்னீயும் உத்தேசித்திருப்பதில்லை. தர்ம-பத்னீ-நிலையை விட்டு நழுவினவர்களும், பதியையே விட்டு விலகினவர்களும், தர்மாதர்மவிவேசனமேயில்லாதவர்களும், தர்மப் பிரஷ்டர்களாயிருக்கிற பதிகளால் உபதேசிக்கப்பட்டவர்களும், நம் சாஸ்திரவிதிகளுக்கு நேர் விரோதமாய் பிரதிலோமாதி ஸம்பந்தங்களைச் செய்தவர்களுமான ஸ்திரீகளுக்கும் இவர்களுடன் நெருங்கிய துஸ்ஸஹவாஸ மேற்பட்ட ஸ்திரீகளுக்கும் மாத்திரம் ஷை வெளி

ஸ்வாதந்திரியத்தில் இச்சை ஏற்படுமே ஒழிய, நம் ஹிந்து ஆர்ய ஸ்திரீகளில் மற்றவர்களுக்குண்டாகாது. இந்த மற்ற யாவத்து ஸ்திரீகளின் தர்மத்தையும் காப்பாற்றிக்கொடுக்க வேண்டியது நம்மவர்களின் கடமை. தாங்களெல்லோரும் ஜாக்கிரதையாயிருந்து ஷை ஸ்வாதந்திரியத்திற்காக வெளியில் வந்து பேசிவரும் ஸ்திரீகளுடன் மற்ற ஸ்திரீகளுக்குப் பழக்கமேற்படாமல் பாதுகாத்துக் கொடுப்பதுடன், தாங்களும் மேற்கண்டபடி ஸ்வாதந்திரியம் பாராட்டிக் குதிக்கும் ஸ்திரீகளின் வார்த்தைகளைக் காதுகொடுத்துக் கேட்காமல் விலகி நிற்பதும், ஸாத்தியப்பட்டால் ஷை வார்த்தைகளை அவர்கள் பஹிரங்கமாய்ச் சொல்லுவதற்கே இடங்கொடாமல் சட்டத்திற்கிணங்கிச் செய்வதும் அவசியமென்று தோன்றுகிறது. சாஸ்திர முறைப்படி ஸ்திரீ-தர்மம் காப்பாற்றப்பட்டடால்தான் பெரும்பாலும் மற்ற தர்மங்கள் கைகூடும். ஸ்திரீகளின் தர்மம் காப்பாற்றப்படவேண்டுமானல் புருஷர்கள் அபிஜ்ஞர்களாயிருந்து ஸ்திரீகளுக்கு ஞான விருத்தியைச்செய்துவைத்து அவர்கள் தர்மத்தைவிட்டு விலகாமலிருக்கும்படி காத்து வரவேண்டியது. இந்தப்பிரகாரம் ஸ்திரீ-புருஷர்களெல்லோருடைய நற்கதியும் புருஷர்களுடைய வித்தியாப்பியாஸ ரீதியைப்பொறுத்து நிற்கின்றது. ஆதலால்தான், மேலேகண்ட வித்தியாசாலைகளையும் கலாசாலைகளையும் ஸரியானபடி ஏற்படுத்திக்கொடுப்பதே தாங்களிப்போது உடனே செய்யவேண்டிய காரியமென்று சொல்லவேண்டியதாயிற்று.

15. பெரியோர்களே, இதைச் செய்துகொடுத்துவிட்டால் மற்றுமுள்ள ஸகல நன்மையான காரியங்களும் பின் தொடர்ந்து நடந்தேறிவரும். ஸரியான வித்யையும் தொழில் முறைகளும் ஸதாசாரங்களும் நம் ஜனங்களிடத்திலிருந்து

விட்டால் நம் தேசத்திற்கும் நமக்கும் ஆகவேண்டியது வேறொன்றுமில்லை. எல்லோரும் தன்யர்களாகவே பவிப்பார்கள். பகவத்கிருபையும் மேன்மேலும் விருத்தியடைந்து விசேஷ ஸௌகரியங்களுடனும் ஸந்தோஷத்துடனும் உன்னத ஸ்திதியிலிருந்துவருவார்கள். ஈசுவரன்மீது பாரத்தை வைத்து முயற்சியுங்கள். தர்மம் தானாகவே ஓங்கி வளர்ந்து வரும். மஹனீயர்களும் ஞானவிருத்தர்களுமான தங்களுக்கு எல்லாவிஷயங்களையுமெடுத்துச் சொல்லவேண்டியதாக நான் எண்ணவில்லை. இதுவரையில் சொன்ன இரண்டொரு ஸங்கதிகளையும் தங்களுக்கு ஞாபகார்த்தமாய்த் தெரியப்படுத்தினேனே ஒழிய, தங்களுக்குத் தெரியாததைச் சொல்லிவிடவில்லை. காலகதியை உத்தேசித்து ஞாபகப்படுத்த வேண்டியதும் ஒரு அவசிய காரியமாக ஏற்பட்டதால் சொல்லும்படி நேரிட்டது, வேறொன்றுமில்லை. ஸர்வோத்கிருஷ்டமான மதத்தின் நன்மையை அடையும்படியாக புண்ணிய ஜன்மாக்களை எடுத்திருக்கும் ஜீவர்கள் எல்லோரும் இவ்வித ஜன்மாக்களை வீண்படுத்தாமலும் ஈசுவர-நிர்திஷ்டமான வர்ணாசிரம-தர்மமார்க்கங்களை அதிக்கிரமிக்காமலுமிருந்து பகவத் கடாக்ஷத்திற்குப் பாத்திரர்களாகி நி:ச்ரேயஸமென்ற பரம புருஷார்த்தத்தையுமடையும்படியான யோக்கியதையுள்ளவர்களாகும்படி பரிபூர்ணமாக அனுக்கிரஹஞ் செய்யுங்கள்.

ஶுபமஸ்து

(*Some opinions on Atma Vidya continued*)

10. *M. R. Narayanaswami Aiyar*, B.A., B.L., Sub-Judge:—The book contains much valuable matter which deserves to be carefully thought out and digested. To all thoughtful souls the book will, I think, serve as a key to the solution of many difficult problems in life.

11. *S. Subbiah Sastriar*, B.A., Sub-Judge:—I am sure the book will be of considerable use to thoughtful readers.

---

## SOME OPINIONS
ON

# THOUGHTS FROM THE VEDANTA

## A POPULAR PRESENTATION

BY

R. KRISHNASWAMI AIYAR, M.A., B.L.

1. *The Vedanta Kesari*, Madras:—The Vedantic system of thought is too vast a subject to be compressed within the short compass of a popular hand-book. The author has, we think, successfully attempted to bring out the basic principles of the Vedanta philosophy in simple language.

2. *The Prabuddha Bharata*, Almora:—This . . . is a philosophical consideration of metaphysical questions handled in an original way. It considers the problems in the light of Vedantic thought and displays much depth of thinking and originality of philosophical presentment.

3. *The Kalpaka*, Tinnevelly:—This is by far the most popular book of its kind that has ever been published. With this book one can acquaint oneself with the basic principles of the Sankara Vedanta and especially with the main principle of the absolute Oneness of the Reality and the means by which that truth can be realised. The book is written in a clear and easily understood manner that will appeal to the reader.

4. *Prof. K. Sundararama Aiyar*, M.A., Kumbhakonam:—It has been a delight to me to peruse your eloquent and instructive pages as they come on. It is admirable how you combine lucidity

of exposition with mastery of details. I feel sure that your little book will prove a boon to all who desire to learn the elements of the Vedanta, I mean, the elements of its higher teaching in its essentials explained without being bored by technicalities. Your book is admirably done and is sure to be eagerly welcomed by all who seek truth.

5. *Dr. Ram Narayana,* Editor, the "Practical Medicine", Delhi:—I find it the best book on Vedanta philosophy. It has been of the greatest help to me in my spiritual uplift. Your method of expression is admirable. It appeals directly to the heart.

6. *Sir J. G. Woodroffe, Kt.,* B.C.L., Oxford:—Your book, it seems to me, will serve well the purpose you had in mind of a popular presentation of some of the chief topics of that philosophy.

7. *Rao Bahadur P. T. Subrahmania Aiyar,* Salem:—It is an attempt not only to present the fundamentals of the Vedanta in a very popular style as it professes to do but also to bring out the true ethical value of Abhyasa on which our sages justly lay every stress. I think Mr. Krishnaswami Aiyar has succeeded in showing that Abhyasa need be no vain search for bliss nor the realisation of the Absolute a mere hallucination. This I consider to be the distinctive feature of the book and its value on this account is great in view of the very erroneous and fanciful views entertained of the Adwaita philosophy in this respect.

8. *Pramatha Nath Bose,* Ranchi:—It is a very lucid exposition, in the simplest possible language, of some of the most difficult problems which man has tried to tackle from remote antiquity.

9. *K. Natesa Aiyar,* M.A., Trichinopoly:—I am thankful for the effort you have put forth there to make the Vedantist's position appear a sane reasonable one even from the standpoint of a casual but intellectually-minded person.

10. *G. Gangadhara Somayajulu,* M.A., B.L., District Judge:—It is really a great work on Vedanta. . . . . The present work is inimitable.

11. *K. S. Ramaswami Sastrigal,* B.A., B.L., District Judge:—The book contains in a brief compass all the vital elements of our Vedanta.

---